தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை எண்—144

# முகலாயப் பேரரசு-II

## (THE MUGHAL EMPIRE)

ஆசிரியர்
ஏ. எல். ஸ்ரீவத்ஸவா

தமிழாக்கம்
எம். எக்ஸ். மிரண்டா, எம்.ஏ., பி.டி.,
விரிவுரையாளர், வரலாற்றுத்துறை,
லயோலாக் கல்லூரி, சென்னை

பா. மாணிக்கவேலு, எம்.ஏ.,
துணைப் பேராசிரியர், வரலாற்றுத்துறை,
அரசினர் கலைக் கல்லூரி, கோவை



தமிழ் வெளியீட்டுக் கழகம்
தமிழ்நாடு - அரசாங்கம்

தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை எண்—144

# முகலாயப் பேரரசு - II

## (THE MUGHAL EMPIRE)

ஆசிரியர்

**ஏ. எல். ஸ்ரீவத்ஸவா**

தமிழாக்கம்

**எம். எக்ஸ். மிராண்டா**, எம்.ஏ., பி.டி.,
விரிவுரையாளர், வரலாற்றுத்துறை,
லயோலாக் கல்லூரி, சென்னை

**பா. மாணிக்கவேலு**, எம்.ஏ.,
துணைப் பேராசிரியர், வரலாற்றுத்துறை,
அரசினர் கலைக் கல்லூரி, கோவை




**தமிழ் வெளியீட்டுக் கழகம்**

தமிழ்நாடு - அரசாங்கம்

# அணிந்துரை

(திரு. இரா. நெடுஞ்செழியன், தமிழகக் கல்வியமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கி ஆறு ஆண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ., வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வருகின்றனர். தொடக்கத்தில் இருந்த இடர்ப்பாடுகள் மெல்ல மெல்ல மறைந்து வருகின்றன. நாடு முழுதும் பரந்துள்ள மாணவர்களின் ஆர்வம், 'தமிழிலேயே கற்பிப்போம்' என முன்வந்துள்ள கல்வி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி, இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், தத்துவம் ஆகிய பல துறைகளில் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ் வெளியீட்டுக் கழகம் நூல்களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான 'முகலாயப் பேரரசு - II' என்ற இந் நூல் தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் 144 ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 179 நூல்கள் வெளிவந்துள்ளன.

கணக்கிலடங்காத் தடைகளை எல்லாம் அகற்றித் தமிழன்னை கல்லூரிக் கலை மண்டபத்தில் கொலுவீற்றிருக்கிறாள். எனவே, இவ் அன்னையை வாழ்த்துவோமாக! உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெற வேண்டும்; அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். சென்னைப் பல்கலைக் கழகத்தின் பலவகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரித்தாகுக.

இரா. நெடுஞ்செழியன்

## பொருளடக்கம்

# 7. ஷாஜஹான் (1627-1668)

## இளமைப் பருவம் (1592-1627)

ஷாஜஹான் 1592ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் 5ஆம் நாளில் லாகூரில் பிறந்தார். அவரது அன்னையார் மோட்டா ராஜா உதயசிங்கரின் மகளாகிய புகழ்பெற்ற ராஜபுத்திர இளவரசி 'ஜகத் குசேன்' ஆவார். ஷாஜஹானின் பிள்ளைத் திருப்பெயர் குர்ரம் என்பது. இளமைப் பருவத்தில் குர்ரத்தினிடம் அவரது பாட்டனுராகிய அக்பருக்கு அதிகப் பற்று இருந்தது. அக்பர் தனது பேரப் பிள்ளைகளில் யாரிடமும் அவ்வளவு அன்பு கொண்டிருக்கவில்லை. குர்ரம் சிறப்பான அறிவுக்கூர்மையும் சுறுசுறுப்பும் பெற்றிருந்தார். இளமையிலே அவரிடம் வருங்காலச் சிறப்பின் அடையாளங்கள் காணப்பட்டன. பேரரசர் அக்பர் குர்ரத்தின் கல்வி ஏற்பாடுகளைத் திட்டமிட்டுக் கண்காணித்துவந்தார். சீருடைய முகலாய அரசபரம்பரையின் தகுதி வாய்ந்த ஓர் உறுப்பினராகக் குர்ரத்தை உருவாக்குவதில் அக்பர் எல்லாவிதமான முயற்சிகளையும் செய்தார். பாரசீக மொழியையும் இலக்கியங்களையும் அறிந்து கொள்வதில் இளவரசர் குர்ரம் சிறப்பான முறையில் ஈடுபாடு கொண்டாரெனினும், துருக்கி மொழியில் அவர் அதிக முன்னேற்றம் காட்டவில்லை. இந்தி மொழியினைப் பேசுவதிலும் அவர் நல்ல பயிற்சி பெற்றிருக்கவேண்டும். அவர் தனது தந்தையார் செய்தது போன்று, தனது சொந்த வரலாற்றை எழுதிவைக்கவில்லை. ஆனல், பாரசீக மொழியிலும் இலக்கியத்திலும் அவர் சிறந்த புலமை பெற்றிருந்தார். மேலும், அவர் வரலாறு, அரசியல், நிலவியல், மறையியல், மருத்துவம் முதலியவற்றையும் கற்றுத் தேர்ந்தார். இளவரசரின் கல்வித் திட்டத்தில் படைப்பயிற்சி சிறப்பான இடம் வகித்தது. நாளடைவில் குர்ரம் சிறந்ததொரு போர்வீரராக விளங்கினர். பலவகையான படைக்கலன்களைப் பயன்படுத்தும் முறைகளையும், போரியலின் தத்துவங்களையும் நடைமுறைகளையும்

பற்றிய அறிவையும் சிறப்பாகப் பெற்று விளங்கினர். குமரப் பருவம் அடையா முன்னரே, குர்ரம் முகலாயப் பேரரசின் மிகச் சிறந்த படைத்தலைவர்களில் ஒருவராகப் புகழ்பெற்றார்.

தனது தந்தையார் ஆட்சியின் தொடக்கத்திலேயே குர்ரம் தான் அடுத்த அரசர் என்பது எதிர்பார்க்கப்பட்டது. அவரது மூத்த சகோதரராகிய குஸ்ரு, பிள்ளைக்குரிய பற்றுடன் நடந்து கொள்ளாத காரணத்தால், ஜஹாங்கீரின் அன்பைப் பெறவில்லை. அரசரின் ஆதரவைப் பெறுவதற்குக் குர்ரம் இந்த வாய்ப்பைப் பயன் படுத்திக்கொண்டார். 1607-ல் குர்ரம் 8,000 ஸாட், 5,000 ஸாவார் என்ற வரிசையில் சகல விருதுகளுடனும் மான்சுப்தார் தகுதியை அளிக்கப்பெற்றார். 1608-ல் ஹிஸ்ஸார் ஃபிரோஸா என்ற ஜாகீர் குர்ரத்திற்கு நிலமானியமாகக் கொடுக்கப்பெற்றது. இந்த ஜாகீர் வாரிசுரிமைபெற்ற இளவரசருக்குக்கொடுக்கப்படுவதுதான் வழக்கம். 1610-ல் அவர் முஸாபர் ஹுஸேன் ஸாஃபாவி என்பவரின் மகளைத் திருமணம் செய்துகொண்டார். அடுத்த ஆண்டில் அவருக்கு 10,000 ஸாட், 5,000 ஸாவார் என்ற தகுதி உயர்வு கிடைத்தது. 1612-ல் குர்ரத்திற்கு இருபது வயதானபோது, ஆசஃப்கானின் மகளாகிய ஆர்ஜுமான்ட் பானு பேகம் என்ற அம்மையாரைத் திருமணம் செய்தார். நூர்ஜஹானின் மூத்த சகோதரரான ஆசஃப்கானின் குடும்பத்துடன் இளவரசர் குர்ரம் மணவுறவு செய்துகொண்டதனுல், நூர்ஜஹான், இத்மத்-உத்-தௌலா, ஆசஃப்கான் கூட்டு உருவாக்குவதற்கு வழி ஏற்பட்டது. 'நூர்ஜஹான் குழு' என்று அழைக்கப்பட்ட இந்தச் சிறு குழுவாட்சியின் செல்வாக்கு பத்தாண்டுக் காலத்திற்குப் பேரரசில் நிலவியது. இதுபோது இளவரசர் குர்ரம் வருங்காலத்திய அரசராகக் கருதப்பட்டார்; மேலும், அவருக்கு இதுவரை யாருமே பெற்றிராத 30,000 ஸாட், 20,000 ஸாவார் என்ற உயர்ந்த தகுதி வழங்கப்பெற்றது.

குர்ரத்திற்குச் சில முக்கியமான படையெடுப்புகளின் பொறுப்பு கொடுக்கப்பெற்றது. இளவரசர் குர்ரம் பெற்ற அடுக்கடுக்கான பல பெருவெற்றிகள் ஜஹாங்கீருடைய ஆட்சியின் சிறப்பான அம்சங்களாகும். மீவார் நாட்டை குர்ரம் வென்றது அவரது தொடக்க கால வெற்றிகளில் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கதாகும். 1614ஆம் ஆண்டு குர்ரம் ராணுவிற்கு எதிராகப் பெரும்படையுடன் அனுப்பப் பட்டார். இந்தப் படையெடுப்பு மகத்தான வெற்றிபெற்றது. ராணு அமரசிம்மர் பணிந்தார். அவருக்கு கவுரவமான நிபந்தனைகளுடன் சமரச உடன்படிக்கை வழங்கப்பெற்றது. இந்த வெற்றி குர்ரத்தின் புகழை மேலும் உயர்த்தியது. பேரரசு வானில் பொலிவுடன் மிளிரும் உதயதாரகை என அவரை மக்கள் கருதினர்கள்.

இதனையடுத்து குர்ரம் தக்காணத்தின் கவர்னராக நியமிக்கப் பட்டார். அவருக்கு 'ஷா' என்ற பட்டம் வழங்கப்பெற்றது. இளவரசர் குர்ரத்தின் முயற்சிகளினால் மாலிக் ஆம்பர் பாலகாத் கோட்டையையும், ஆமதுநகர் போன்ற பல அரண்களையும் திருப்பிக்கொடுத்துவிட இசைந்தார். இந்த சாதனைகளின் காரண மாக, முகலாய அரசவையில் குர்ரத்தின் அரசியல் நுண்ணறிவின் வெற்றிகள் நிலைநாட்டப்பட்ட உண்மைகளெனப் புகழ்பெற்றன. ஜஹாங்கீர் பெருமகிழ்வுகொண்டு, ஷா குர்ரத்திற்குப் பல பரிசுகளை வாரி வழங்கினார். அவரது வெற்றிகளைப் பாராட்டுமுகத்தான் குர்ரம் குஜராத்திற்கும் தலைவராக நியமிக்கப்பெற்றார்.

இவ்வாறு நூர்ஜஹானின் கூட்டுறவுடன் பத்தாண்டுக் காலமாகப் பேரரசை ஆண்டபின், குர்ரத்தின் செல்வாக்கில் ஒரு திடீர்ச் சரிவு ஏற்பட்டது. ஏனென்றால், அரசியார் இப்பொழுது தனது மருமகனாகிய ஷாரியார் என்பவனின் பட்டத்து உரிமைகளுக் காகப் போராடத் துவங்கினார். இதனால் அரசி குர்ரத்தை வெறுக்க வேண்டியதாயிற்று. வெறுப்படைந்த இளவரசர் புரட்சிக்குத் தயாரானார். ஆனால், குர்ரத்தை வேட்டையாடத் துவங்கவே, அவர் இடம்விட்டு இடம் ஓடி ஒளியவேண்டியதாயிற்று. பல தொல்லைகளுக்கு அவர் ஆளானார். இறுதியில் 1626ஆம் ஆண்டு குர்ரம் தனது தந்தையாரிடம் சரண் புகுந்து, மீண்டும் அவரது அன்பைப் பெற்றார்.

## அரசுகட்டில் ஏறுதல், 1628

ஜஹாங்கீர் இறந்தவுடன், நூர்ஜஹான் எவ்வாறேனும் அதி காரத்தைக் கைப்பற்றிக்கொள்ளவேண்டுமென்று இறுதி முயற்சி செய்தார். தனது சகோதரனும், இளவரசர் குர்ரத்தின் மாமனும், வன்மையான ஆதரவாளருமான ஆசஃப்கானைச் சிறைப்பிடிக்க வேண்டுமென்று நூர்ஜஹான் முயன்றார். மேலும், தனது கட்சியை வலுப்படுத்தவும், படைகளை அதிகரித்துப் போராட்டத்திற்குத் தயாராக இருக்கவேண்டுமெனவும் தனது சொந்த மருமகனாகிய ஷாரியாருக்கு நூர்ஜஹான் கடிதம் எழுதினார். ஆனால், ஆசஃப் கான் நுண்ணறிவுள்ள அரசியல்வாதியாகையால், தன் சகோதரி யின் கருத்துகளைத் தெரிந்துகொண்டு, அவளைச் சென்று காண மறுத்துவிட்டார். இதற்கு மாறாக முக்கியமான பிரபுக்கள் சிலரின் செல்வாக்கைத் தன் மருமகன் குர்ரத்தின் சார்பில் ஆசஃப்கான் தேடிப் பெற்றார். குஸ்ருவின் மகனை இளவரசர் தாவார் பக்ஷ் என்பவரை அரசரென அறிக்கை செய்து, அரியணை காலியாக இராதபடி பார்த்துக்கொண்டார். மேலும், ஆசஃப்கான்

தக்காணத்தில் இருந்த ஷாஜஹானிடம் ஒரு தூதுவரை அனுப்பி டெல்லிக்கு விரைந்து வருமாறும் பணித்தார். இதற்கிடையில் குர்ரத்தின் எதிரியான இளவரசர் ஷாரியார் தன்னை அரசரென அறிக்கை செய்து, லாகூரில் இருந்த அரசகருவூலத்தைப் பற்றிக் கொண்டதோடு, அங்குள்ள பிரபுக்களின் உடைமைகளையும் வல்லந்தமாக எடுத்துக்கொண்டார். ஏராளமான பணத்தை வாரி வழங்கிப் பெரியதொரு படையையும் திரட்டினார். ஷாஜஹானின் சார்பில் எதிர்நடவடிக்கைகளை எடுத்துக்கொண்டிருந்த ஆசஃப்கான், லாகூருக்கு அருகில் ஷாரியாருடன் போர் தொடுத்தார். தோல்வியுற்ற ஷாரியார் சிறைப்பிடிக்கப்பட்டுத் தன் விழிகளை இழந்தார். இதற்கிடையில் ஷாஜஹான் வடக்கு நோக்கி வெகுவிரைவாக முன்னேறிக்கொண்டிருந்தார். வழியில் சில முக்கியமான தலைவர்களும் பிரபுக்களும் ஷாஜஹானை வாழ்த்தி வரவேற்றார்கள். இவர்களில் மீவார் ராணாவாகிய கரன் என்பவர் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவர். டெல்லியை வந்துசேருமுன்னரே எல்லா எதிரிகளையும், 'பலிஆடு போன்றிருந்த தார்வார் பக்ஷ் உள்ளிட்ட சகல இளவரசர்களையும் கொன்றுவிடுமாறு ஷாஜஹான் இரகசியமாகச் செய்தி அனுப்பினார். அதுபோலவே அவரது இரக்கமற்ற மாமனாகிய ஆசஃப்கானும் செய்து முடித்தார். ஷாஜஹான் 1628ஆம் ஆண்டு பெப்ரவரித் திங்களின் தொடக்கத்தில் ஆக்ராவை அடைந்தார். பெப்ரவரி 14ஆம் நாளன்று, நல்லதொரு நேரத்தில் அவர் நகரத்தின் உள்ளே நுழைந்தார். மிக ஆடம்பரத்துடனும் மகிழ்ச்சியாரவாரத்துடனும் ஷாஜஹானின் முடிசூட்டு விழா நடந்தேறியது. 'குதுப்பா' என்ற புனித வாசகம் அவருடைய பெயரால் படிக்கப்பட்டது. ஆசஃப்கான் 8,000 ஸாட், 8,000 ஸாவார் தகுதியுடைய மான்சுப்தாராக உயர்த்தப்பட்டதோடு, அரசரின் 'வாஸிர்' என்ற முதல் அமைச்சர் பதவியையும் பெற்றார். மாபத்கானுக்கு 7,000 ஸாட், 7,000 ஸாவார் தகுதிபெற்ற மான்சுப் அளிக்கப்பெற்று, 'கான்கான' என்ற பட்டமும் வழங்கப்பெற்றது. நூர்ஜஹானுக்குப் போதுமான ஓய்வூதியம் வழங்கப்பெற்றதோடு, அவர் லாகூரிலோ, அதற்கு அருகிலோ தனது எஞ்சிய நாட்களை அமைதியில் கழிக்கும்படியும் அனுமதி வழங்கப்பெற்றது. லாகூரில் நூர்ஜஹான் தனது கணவரின் சமாதியைக் கட்டினார். பல அறப்பணிகளையும் மேற்கொண்டு 1645ஆம் ஆண்டு இறந்தார்.

## கான்ஜஹான் லோடியின் புரட்சி, 1628-1631

ஷாஜஹான் ஆட்சியின் அமைதியைப் பல புரட்சிகள் குலைத்தன. இவற்றில் கான்ஜஹான் லோடியின் புரட்சியை முதலாவதாகக்

குறிப்பிடலாம். கான்ஜஹான் லோடி என்பவர் இளவரசர் பார்வெஸின் ஆலோசகராகத் தக்காணத்தின் பொறுப்பை மேற் பார்க்கும்படி நியமிக்கப்பட்ட ஒரு திறமையுள்ள, ஆனால், சிறிது கிளர்ச்சிப் பான்மை பெற்ற அதிகாரியாவார். கான்ஜஹான் உணர்ச்சி வேகமும், உற்சாகமும் கொண்ட போர்வீரர்; ஆனால், அவர் இந்துக்களை வன்மையாக வெறுத்துவந்தார். அவர் தக்காணத்தில் இருந்தபோது, நைசாம் ஷாவிடமிருந்து கைக்கூலி வாங்கிக்கொண்டு, பாலகாத் கோட்டையை அவருக்கு விட்டுக் கொடுத்திருந்தார். ஜஹாங்கீரின் மரணத்திற்குப் பின்னர், கான் ஜஹான் நூர்ஜஹானுடன் சேர்ந்துகொண்டு அவளை ஆதரித்தார். தனது தலைமை அரணாகிய பூரான்பூரில் ஒரு சிறு படையை விட்டு விட்டு, வடக்கே சென்று மாண்மு கோட்டையைக் கைப்பற்றிக் கொள்ள முயன்று தோல்வியுற்றார். இதற்கிடையில் ஷாஜஹான் வெற்றிவீரராக ஆஜ்மீரை அடைந்துவிட்டார். அவர்தான் அடுத்த அரசர் என்ற எண்ணம் உறுதிபெற்றுவந்தமையால், கான்ஜஹான் லோடியின் படைவீரர்களில் பலர், குறிப்பாக அவருடைய இந்து ஆதரவாளர்கள் அவரை விட்டு நழுவிவிட்டார்கள். எனவே, கான்ஜஹான் அடிபணிய வேண்டியதாயிற்று. ஷாஜஹானும் கான்ஜஹானின் பணிவை ஏற்றுக்கொண்டு அவரை மன்னித்த தோடு, அவர் தொடர்ந்து தக்காணத்தின் கவர்னராக இருக்கலா மென்றும், அவரது தலைமைப் பீடமாகிய பூரான்பூருக்குச் செல்லலா மென்றும் உத்தரவு பிறப்பித்தார். தக்காணத்தில் இருந்தபோது, அவர் மீண்டும் பாலகாத் கோட்டையைக் கைப்பற்றுமாறு பணிகளைப் பெற்றார். ஆனால், அவர் வெற்றி பெறாத காரணத்தால் டெல்லி அரசவைக்குத் திரும்பிவருமாறு அழைக்கப்பட்டார். அவருக்குப் பதிலாக மாபத்கான் தக்காணத்தின் கவர்னராக நியமனம் பெற்றார். ஆக்ராவில் இருந்தகாலை, கான்ஜஹான் மனவெறுப் புற்றார். சிறிது காலத்திற்குப் பின்னர் அவர் தினமும் அரசவைக்கு வருகை தருவதையும் நிறுத்திவிட்டார். அவருக்கு மீண்டும் மன்னிப்பு வழங்கப்பெற்றது. ஆனால், அவரோ மீளவும் மன வெறுப்புக் கொண்டிருந்ததோடு, தக்காணத்திற்குத் தப்பியோடி விடவும் முயன்றுகொண்டிருந்தார். சாம்பல் ஆற்றிற்கு அருகே தப்பியோடிய கான்ஜஹான் பிடிபட்டார். அரசரின் படை களும் கான்ஜஹானின் படைகளும் மோதின. கான்ஜஹான் தனது புதல்வர்களுடனும், சில ஆதரவாளர்களுடனும் ஆற்றைக் கடந்துவிட்டார். ஆனால், அவரது பெண்டிரும் செல்வங்களும் பின்னால் விடப்பட்டனர். பந்தல்கண்டையும் கொண்டுவானாப் பிரதேசத்தையும் கடந்து கான்ஜஹான் ஆமதுநகரை அடைந்தார். சுல்தான் நைசாம் ஷாஹி, கான்ஜஹானை வரவேற்றார். பீர் என்ற பிரதேசமும், வேறு சில பகுதிகளும் கான்ஜஹானின் பொறுப்பில்

விடப்பட்டன. இப் பகுதிகளெல்லாம் அதுகாலை முகலாயர்களின் உடைமைகளாக இருந்ததால், அவர் அவற்றை மீண்டும் கைப்பற்ற வேண்டுமென்று கேட்டுக்கொள்ளப்பட்டது. அவ்வாறே அவர் முகலாய மன்னரின் படைகளைத் தாக்கி அவர்களை முறியடித்தார். இந்த நிலைமை பெரிய தொல்லையாக வளர்ந்துவிட்டதால், 1629ஆம் ஆண்டு ஷாஜஹானே நேரில் தக்காணத்திற்கு வரவேண்டியதாயிற்று. புரட்சிக்காரர்களுக்கு எதிராக அரசர் ஒரு பெரிய செயல் திட்டத்தை உருவாக்கினுர். ஷாஜஹான் தக்காண அரசியல் நிலைகளைப்பற்றி நல்ல முறையில் அறிந்திருந்ததால், தமக்குள்ளே ஒன்றையொன்று பகைத்துக்கொண்டிருந்த ஆமதுநகர், கோல்கொண்டா, பீஜப்பூர்போன்ற முஸ்லீம் நாடுகள், முகலாயர்களை விரட்டியடிப்பதற்கு ஒன்றுசேரமாட்டார்கள் என்பதை நன்ருக உணர்ந்திருந்தார். மேலும், மராட்டியர்கள் தொல்லை தரக்கூடியவர்கள் என்றும், தாராளமான கொடைகளின்மூலம் அவர்களை முகலாயப் படையில் கவர்ந்து இழுக்கலாம் என்றும் ஷாஜஹான் நன்ருக அறிவார். இந்த உண்மைகளைக் கவனத்தில் கொண்டு, கிளர்ச்சியில் ஈடுபட்டிருந்த கான்ஜஹானுக்கு எதிராக முப்பெரும் படைகளை அனுப்பவேண்டுமென்பது ஷாஜஹானின் திட்டம். இப் படைகள் மூன்று திசைகளிலிருந்து சென்று, எதிரியைத் தாக்கித் திணறடிக்கவேண்டுமென்பதுதான் இத் திட்டத்தின் இரகசியம். இப் படைகளில் ஒன்று அப்துல் ஹாஸன் என்பவரின் தலைமையின் கீழ்த் தூலியா நோக்கி அனுப்பப்பட்டது. குஜராத் பகுதிகளிலிருந்து வரக்கூடிய உணவுப்பொருள்களை வாங்கும் சாலையை காவல் செய்யவேண்டுமென்பதும், வடமேற்கிலிருந்து ஆமதுநகரை அச்சுறுத்தவேண்டுமென்பதும் இதன் நோக்கமாகும்; இரண்டாவது படை பீராருக்குத் தெற்கில் இருந்த தேவல்கான் என்ற இடத்தில் நிறுத்தப்பட்டிருந்தது. வடகிழக்கிலிருந்து எதிரியைத் தாக்கவேண்டுமென்பது இதன் நோக்கமாகும்; மூன்ருவது படை தெலிங்கானுப் பகுதியிலிருந்து கான்ஜஹானைத் தாக்கும்படியாக அனுப்பப்பட்டது. இந்தத் திட்டம் நல்ல வெற்றி பெறவேண்டுமென்று அநேக மராட்டியர்கள் முகலாயப் படையில் இடம் பெற்றிருந்தார்கள். தக்காணத்திலும், அதனை அடுத்திருந்த குஜராத் பகுதியிலும் மழையின்மையின் காரணமாக உணவுப் பொருள் தட்டுப்பாடு ஏற்பட்டிருந்தபோதிலும், இந்தப் பயங்கரமான போர் மூண்டது. கான்ஜஹான் தோல்வியுற்ருர். தௌலதாபாத்தில் அடைக்கலம் புகலாம் என்ற எண்ணத்துடன் கான் ஜஹான் பீஜப்பூருக்குத் தப்பியோடினுர். ஆனுல், அவருக்கு அடைக்கலம் தருவார் யாரும் இல்லை. முகலாயப் படைகள் அவரைப் பின்தொடர்ந்தார்கள். இதனிடையில் ஆமதுநகர் படையை விட்டுவிட்டு, ஷாஜஹானின் படையில் புதிதாகச்

சேர்ந்திருந்த ஷாஜி பான்ஸ்லே என்ற சிவாஜி மன்னரின் தந்தை யாரும் முகலாயர்களுக்கு உதவினர். கான்ஜஹான் லோடியின் ஆதரவாளர்கள் முகலாயரின் பிரதேசங்களில் நுழைந்து சூறை யாடினர்கள். இதனுல் இருதரப்பினர்களுக்கும் பல இடங்களில் மோதல்கள் ஏற்பட்டன. இதுவரை கான்ஜஹான் லோடிக்கு ஆதரவளித்துவந்த ஆமதுநகர் அரசர் தன் தவற்றை உணர்ந்து, கிளர்ச்சிக்காரர்களைத் தன் நாட்டிலிருந்து வெளியேற்றினர். இதனுல் கான்ஜஹான் வடக்கு நோக்கி ஓடவேண்டியதாயிற்று. மாளவம் வழியாக அவர் சென்றபோது, பஞ்சாபை அடைந்து, வடமேற்கு இந்துஸ்தானத்தில் அதிருப்தியுற்றிருந்த ஆப்கானியர்களின் ஆதரவைத் தேடலாமென்று அவர் முயற்சி செய்தார். எனவே, புரட்சிக்காரனை எப்படியும் பிடித்துவிடவேண்டுமென, ஷாஜஹான் தன் படையில் ஒரு பகுதியைப் பிரித்துவிட வேண்டியதாயிற்று. பந்தல்கண்டு நாட்டின் தலைவரான ஜுஜார்சிங் என்பவரின் மைந்தனுன விக்ரமஜித், புரட்சியின் தொடக்கத்தில் எதிரிகளுக்கு உதவியளித்திருந்தபோதிலும், இப்போது புரட்சிக்காரர்களைத் தாக்கி, 1631ஆம் ஆண்டு ஜனவரித் திங்களின் தொடக்கத்தில் டாரியகானையும் அவனது ஆதரவாளர்களில் பலரையும் கொன்று குவித்தான். கான்ஜஹான் லோடி தப்பியோடினர். ஆனுல், கைப் பற்றப்பட்டுத் தற்கால உத்திரப் பிரதேசத்தில் உள்ள பண்டா மாவட்டத்தில் இருக்கும் சிஹோண்டா என்ற இடத்தில் நடந்த ஒரு கைகலப்பில் கொல்லப்பட்டார்.

## பந்தல்கண்டு புரட்சி, 1628-29

அடுத்த புரட்சிக்குக் காரணமாக இருந்தவர் பீர்சிங் தேவா புந்தலா என்பவரின் மைந்தரான ஜுஜார்சிங் என்பவராவார். பீர்சிங், ஜஹாங்கீரின் தூண்டுதலால் அபுஸ் பாஸலைக் கொன்றுர். அதுகாலை ஜஹாங்கீர் தனது தந்தையரான அக்பருக்கு எதிராகக் கிளர்ச்சி செய்துகொண்டிருந்தார். முகலாயப் பேரரசில் இருந்த முக்கியத் தலைவர்களில் ஒருவராக ஜுஜார்சிங் உயர்ந்த பதவிகளை வகித்துவந்தார். காரணமென்னவெனில், இறந்துபோன பேரரசர் ஜஹாங்கீர் ஜுஜாரின் தந்தைக்குப் பல சலுகைகளை வழங்கி யிருந்தார் ; தவிரவும், பந்தல்கண்டு நாட்டின் அமைவிடம் நிலவியல் முக்கியம் வாய்ந்திருந்ததோடு, அதன் மக்கள் சிறப்பான வளமுள்ள வர்களாகவும் திகழ்ந்தார்கள். ஷாஜஹான் முடிசூட்டிக்கொண்ட போது, ஜுஜார்சிங் தனது நாட்டின் நிர்வாகத்தைத் தன் மைந்தன் விக்ரமஜித்திடம் ஒப்படைத்துவிட்டு, அரசப்பணிக்காக ஆக்ரா விற்குச் சென்றிருந்தார். விக்ரமஜித் குடிமக்களைத் துன்புறுத்திய

தாலும், கொடுமையான வழிகளில் வரிப்பணத்தைத் தண்டல் செய்த காரணத்தாலும் மக்களின் வெறுப்பைச் சம்பாதித்தார். புதிய அரசராகிய ஷாஜஹான் இதற்கு முன்னர் தண்டல் செய்யப்பட்ட வரிப்பணத்தைப்பற்றிய ஒரு விசாரணை நடத்துமாறு உத்தர விட்டார். இதனால் ஜுஜார்சிங் கலவரமடைந்தார். அவர் உடனே தனது தலைநகரான ஓர்ச்சாவிற்குத் திரும்பித் தனது சுதந்திரத்தைப் பாதுகாத்துக்கொள்ளத் தயாரானார். ராஜா ஜுஜாருக்கு எதிராக ஷாஜஹான் சிறிது காலத்திற்கு எவ்வித நடவடிக்கைகளும் எடுக்க முடியாமல் போய்விட்டது. ஏனென்றால், ட்ரான்ஸ் ஆக்ஸியானா நாட்டின் தலைவரான ஜாமிட் என்பவர் எல்லைப்புற மாகாணமான காபூலைத் தாக்கியிருந்ததால், ஷாஜஹானின் கவனம் முழுவதையும் எல்லைப்புறத்திலே செலுத்த வேண்டியதாயிற்று. ஆனால், எல்லைத் தகராறு முடிவுற்றதும், பந்தல்கண்டின் புரட்சியை அடக்குமாறு மாபத்கான் அனுப்பப்பட்டார். இன்னும் இரு படைகள், அப்துல்லாகான் தலைமையில் கிழக்கிலிருந்து ஒன்றும், கான்ஜஹா னின் தலைமையில் தக்காணத்திலிருந்து ஒன்றுமாக மாபத்கானுக்கு பந்தல்கண்டு படையெடுப்பில் உதவுமாறு அனுப்பப்பட்டன. ஜுஜார்சிங்கின் உறவினனான ராஜா பாரத்சிங் என்பவர், பந்தல் கண்டு நாட்டைக் கைப்பற்றிக்கொள்ள வேண்டும் என்ற எண்ணத் தோடு இருந்ததால், முகலாயர்களுடன் ஜுஜாருக்கு எதிராகச் சேர்ந்துகொண்டான். பந்தல்கண்டு நாட்டின் வலிமையைப்பற்றி நன்றாக அறிந்திருந்த ஷாஜஹான், 1629ஆம் ஆண்டு ஜனவரித் திங்களில் தாமே குவாலியருக்கு வந்து தங்கினார். பந்தல்கண்டுக்கு அருகில் இருந்தால் எதிரியை ஒருவாறு அச்சுறுத்தலாம் என்பது அரசரின் நோக்கமாகும். தற்கால ஜான்சி மாவட்டத்தில் இருக்கும் ஏராச் பகுதியை அப்துல்லாகானின் தலைமையில் சென்ற படை கைப் பற்றியது. கான்ஜஹான் தெற்கிலிருந்து பந்தல்கண்டைத் தாக்கி நாசம் விளைவித்துக்கொண்டிருந்தார். இவ்வாறு ஜுஜார்சிங் பல பக்கங்களிலிருந்தும் தாக்கப்பட்டார். அவரது குடி மக்களில் பலரும் அவருக்கு எதிராகக் கிளம்பித் தொல்லை கொடுத் தார்கள். இந் நிலையில் மகத்தான முகலாயப் பேரரசின் செல்வத் தின் துணைகொண்டு நடத்தப்படும் வன்மைமிக்க எதிரிப் படையை வெற்றிகரமாக எதிர்த்துப் போராடுவது முடியாத காரியம் என்று முடிவுசெய்த ஜுஜார்சிங் அடிபணிந்துவிட்டார். அவரது ஜாகீர் களில் சிலவற்றைக் கொடுத்துவிட்டுத் தக்காணத்தில் பணிபுரியச் செல்லவேண்டுமென்ற நிபந்தனைகளின் பேரில், அவருக்கு மன்னிப்பு அளிக்கப்பட்டது (பெப்ரவரி 1629).

1635-36ஆம் ஆண்டில் மீண்டும் பந்தல்கண்டில் ஜுஜார் சிங்கின் கிளர்ச்சி ஏற்பட்டது. ஜுஜார் தக்காணத்தில் ஐந்தாண்டுக்

காலமாக நல்ல பணி செய்துவந்தார். அவரது திறமையினுல் தௌலதாபாத் கோட்டையும் கைப்பற்றப்பட்டிருந்தது. அவர் 1634-ல் தன் தலைநகரான ஆர்ச்சாவிற்குத் திரும்பியபோது, பந்தல் கண்டின் தெற்கில் இருந்த நாடும், இன்னும் முகலாயர்களின் அதிகாரத்தின்கீழ்க் கொண்டுவரப்படாத பகுதியுமான கொண்டு வாஞ நாட்டைக் கைப்பற்றவேண்டுமென்று பேராசைப்பட்டார். 1629-ல்தான் இழந்துவிட்ட பகுதிகளுக்கு ஈடுசெய்ய வேண்டுமென் பதே அவருடைய நோக்கம். 1635-ல் ஜுஜார்சிங் சௌரகார் கோட்டையைத் தாக்கிஞர். ஷாஜஹான் எச்சரிக்கை விடுத்தபோதி லும், அவர் கொண்டுவாஞவின் அரசரான ராஜா பிரேம்நாராயண் என்பவரைக் கொன்றுவிட்டார். கொல்லப்பட்ட அரசரின் குமாரன் ஷாஜஹானிடம் முறையிட்டு உதவி கோரிஞன். ஆஞல், சிக்கலில் இருந்த நாட்டை மீட்டு அதன் முறையான வாரிசுக்குக் கொடுத்து விடாமல், ஷாஜஹான் கொண்டுவாஞ நாட்டைத் தனக்குத் தந்து விடவேண்டுமென ஜுஜாருக்கு உத்தரவிட்டார்; அல்லது தனது சொந்த நாட்டை ஜுஜார் அதற்குப் பதிலாகக் கொடுக்கவேண்டு மென்றும், மேலும் ஐந்து லட்சம் ரூபாய்களையும் தண்டனைப் பண மாகத் தரவேண்டுமெனவும் பேரரசர் நிபந்தனைகள் விதித்தார். இவற்றில் எதையும் ஜுஜார் ஏற்றுக்கொள்ளவில்லை. மாருக, தக்காணத்தில் அரசப்பணியில் இருந்த தனது மகன் ஜாக்ராஜின் தலைமையில் இயங்கிவந்த படைகளையும் திரும்ப அழைத்துக் கொண்டான். ஷாஜஹான் கோபங்கொண்டு, இந்தப் புரட்சியை அடக்குமாறு தன் மகஞன அவுரங்கசீபை அனுப்பிவைத்தார். எவ்வளவோ தொல்லைகளையெல்லாம் கடந்து அவுரங்கசீப் ஆர்ச்சா கோட்டையைத் தாக்கி, ஜுஜார்சிங் ஒளிந்துகொண்டிருந்த தாமோனி என்ற இடத்தை நோக்கி விரைந்தார். இதனை அறிந்த ஜுஜார் சௌரகார் கோட்டைக்குத் தப்பியோடிவிட்டார். தாமோ னியைக் கைப்பற்றிய அவுரங்கசீப் சௌரகாரை நோக்கி முன்னேறவே, ஜுஜார்சிங் அங்கிருந்து தக்காணத்தை நோக்கி 6,000 ஆட்கள், 60 யானைகள், தனது குடும்பத்தார், மதிப்புள்ள உடைமைகள் முதலியவற்றுடன் புறப்பட்டுவிட்டார். முகலாயர்கள் மீண்டும் ஜுஜாரைப் பின்தொடரவே, அவர் தனது பெண்டிரில் சிலரைக் கொன்றுவிட்டு, முகலாயர்களை எதிர்க்கத் தொடங்கிஞர். ஆஞல், ஜுஜார் முறியடிக்கப்பட்டார். பந்தல்கண்டு நாட்டு மக்கள் நாலுதிசைகளிலும் சிதறியோடிஞர்கள்; ஜுஜாரும் அவரது மகன் விக்ரமஜித்தும் கோண்டுகளால் கொல்லப்பட்டனர். அவர்களுடைய தலைகள் தனியே அறுக்கப்பட்டு ஷாஜஹானுக்கு அனுப்பப்பட்டன (டிசம்பர், 1635). இந்தப் படையெடுப்பின் விளைவாக ஐம்பது லட்சம் ரூபாய்கள் அரசாங்கக் கருவூலத்தில் சேர்க்கப்பட்டன என்ற செய்தியை அறிய அரசர் மிகவும் மகிழ்ச்சிகொண்டார். பந்தல்

கண்டு நாட்டு மாதர்களுக்கு 'ஜாஹர்' என்ற தீக்குளிப்புச் சடங்கினை நிறைவேற்றிக்கொள்வதற்கு நேரம் கிடைக்கவில்லை. ஆனால், பீர்சிங் தேவாவின் விதவையான ராணி பார்வதிபோன்ற சில பெண்கள்மட்டும் அவரவர்களின் கணவன்மார்களால் குத்திக் கொல்லப்பட்டனர். எஞ்சி நின்றவர்களில் பெரும்பகுதியினர் கைதிகளாகச் சிறைப்பிடிக்கப்பட்டார்கள். பொற்கூண்டில் அடைபட்ட பறவைகளைப்போல இந்தப் பெண்மணிகள் முகலாயர்களின் அந்தப்புரக் கன்னிமாடங்களில் சேர்க்கப்பட்டுத் தங்களின் வாழ்நாட்களை வேதனையில் கழித்துக்கொண்டிருந்தார்கள். ஜுஜார்சிங்கின் குமாரர்களில் இருவர் இஸ்லாமியர்களாக மதமாற்றம் செய்யப்பட்டார்கள். ஒருவர் மதம் மாறுவதற்கு மறுத்தபடியால் கொடூரமாகக் கொலை செய்யப்பட்டார். ஆர்ச்சாவில் இருந்த அழகான அரசர் ஆலயம் அழிக்கப்பட்டு ஒரு மசூதியாக மாற்றப்பட்டது. பந்தல்கண்டில் இருந்த பிற கோவில்களும் திருத்தலங்களும் வேண்டுமென்றே புனிதபங்கம் செய்யப்பட்டு இழுத்தெறியப்பட்டன. ஜுஜார்சிங்கின் உறவினனான தேவிசிங் என்பவரிடம் ஆர்ச்சா ஒப்புவிக்கப்பட்டது. தேவிசிங்தான் நாட்டுத் துரோகியாக மாறி, முகலாயர்களுடன் சேர்ந்துகொண்டான்; ஆனால், பந்தல்கண்டு நாட்டு மக்கள் அவனைத் தங்களுடைய தலைவராக ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டார்கள். தேவிசிங்கின் இழிவான நடத்தையை முன்னிட்டு மஹோபா நாட்டுத் தலைவன் சம்பத்ரே என்பான் தேவிசிங்கினுக்குப் பணிவதற்கு மறுத்தான். சம்பத்ரேயின் மகனான சத்ரசால் என்பவன் முகலாயர்களுக்கு எதிராகவும், ஷாஜஹானின் சமயவெறிக் கொள்கையைக் கண்டித்தும், பந்தல்கண்டு அரச பரம்பரையினரை முகலாயர் நடத்திய விதத்தை எதிர்த்தும் பல காலமாக ஓர் உரிமைப் போராட்டம் நடத்திவந்தான்.

## தக்காணத்து விவகாரங்கள்

கான்ஜஹான் லோடியின் புரட்சியின்போது, தக்காணத்து நிர்வாகப்பொறுப்பு ஆசம்கான் என்பவரிடம் ஒப்படைக்கப்பட்டது. இவர் ஆமதுநகருக்கு எதிராகப் படையெடுப்பைத் தொடங்கி, தாரூர் கோட்டையைக் கைப்பற்றியதோடு பாராண்டா அரணையும் முற்றுகையிட்டார். ஆனால், தென் இந்தியாவில் நிலவிய சில தனித்தன்மையான சிக்கல்களின் காரணமாக, இந்தப் போரில் ஆசம்கான் அதிக முன்னேற்றம் அடையவில்லை. பீஜப்பூர், ஆமதுநகர் சுல்தான்களுக்கு இடையே இருந்த பகைமை முன்போல் மேலும் தொடர்ந்து வளர்ந்துகொண்டிருந்தது. முகலாயர்களைப் பொறுத்தவரையில் அனுசரிக்கக்கூடிய கொள்கைகளைப்பற்றி பீஜப்பூர் அதிகாரி

களிடையே ஒரு சர்ச்சை நடந்துகொண்டிருந்தது. அவர்களில் ஒரு சாரார் முகலாயர்களுடன் கூட்டுச் சேரவேண்டும் என்றனர். மற்றொரு கட்சி அவர்கள்மீது நம்பிக்கைகொள்ளாமல் முகலாயரை எதிரிகளாகக் கருதவேண்டும் என்றனர். மேலும், மழையின்மை காரணமாக உணவுப் பொருள்கள் கிடைக்கவில்லை. 50 மைல் சுற்று வட்டாரத்தில் குதிரைகளுக்கு உணவாகக்கூடிய புல்வகைகள்கூடக் கிடைக்கவில்லை. ஆனால், ஷாஜஹானே போர்முனையில் நேராகத் தோன்றியபோது, பாலகாத் கோட்டையின் கீழ்விளிம்பில் இருந்த காந்தார் அரணை முகலாயர்கள் கைப்பற்றிக்கொண்டார்கள். இதனால் பீரார் நாட்டிற்குள் எளிதாகப் புகுவதற்கு வழி ஏற்படவே, நாஸிக்கையும் சவ்காம்நர் என்ற இடத்தையும் முகலாயர்கள் அழித்தார்கள். இப்போதுதான், 1631ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் 17ஆம் நாளில் ஷாஜஹானின் அன்பு மனைவியாகிய மும்தாஜ் மஹால் காலமானார். இந்த இழப்பு பேரரசரைப் பேரிடியெனத் தாக்கியது. மும்தாஜின் சடலம் பூரான்பூருக்கு அண்மையில் இருந்த ஒரு தோட்டத்தில் அடக்கம் செய்யப்பட்டது. பின்னர் அதனை ஆக்ராவிற்குக்கொண்டுசென்று ஒரு தோட்டத்தில் புதைத்து, அதன்மேல் அழகான சமாதியாகிய தாஜ்மஹாலை எழுப்பினார் ஷாஜஹான்.

## மும்தாஜின் வரலாறு

ஆர்ஜுமான்ட் பானு பேகம் என இயற்பெயர்கொண்ட மும்தாஜ்மஹால், ஆசஃப்கானின் மகள். ஆசஃப் இத்மாத்-உத்-தௌலாவின் குமாரர்; நூர்ஜஹானின் சகோதரர். இவ்வாறு மும்தாஜ் நூர்ஜஹானின் மருமகளாவார். மும்தாஜ் 1594-ல் பிறந்து, குர்ரத்திற்கு 16 வயதானபோது, இளவரசருக்குத் திருமண நிச்சயம் செய்யப்பட்டாள். 1612ஆம் ஆண்டு ஏப்ரல் திங்களில் இவர்களின் திருமணம் நடந்தேறியது. பலதார முறை வழக்கத்தில் இருந்த எந்தக் குடும்பத்திலும் மும்தாஜ்-குர்ரத்தின் திருமணத்தைப்போன்ற மிக வெற்றிகரமான ஒரு திருமணத்தைக் காணுதல் அரிதாகும். நூர்ஜஹான் ஜஹாங்கீரைக் கவர்ந்ததைவிடப் பன்மடங்கு அதிகமாக மும்தாஜ், ஷாஜஹானின் இன்பதுன்பங்களில் முழு விதத்திலும் பங்குபெற்றார். ஷாஜஹான் தன் தந்தைக்கு எதிராகக் கிளர்ச்சியில் ஈடுபட்டபோது, அவர் தக்காணத்திலிருந்து ஒரிஸாவிற்கும், வங்காளத்திற்கும், பீஹாருக்கும் ஓடி ஒளியவேண்டியதாயிற்று. அக்காலங்களில் மும்தாஜ் கடமையுணர்ந்த மனைவிபோலக் கணவரைக் கைவிடாமல் அவருடனே சென்றார். ஷாஜஹானுக்குப் பிறந்த 18 பிள்ளைகளில் 14 குழந்தைகளை மும்தாஜ் பெற்றெடுத்தாள்.

மும்தாஜ் ஷாஜஹானின் நண்பனுகவும், அவர் இறக்கும்வரையிலும் அவரைப் பிரியாத தோழனுகவும் மிக விசுவாசத்துடன் பற்றுக் கொண்டிருந்தாள். ஷாஜஹானின் பிரதம பட்டத்து ராணி என்ற பதவிக்கு உயர்த்தப்பட்ட மும்தாஜ், மாலிக்கா-யி-ஸாயினி என்ற பட்டத்தையும், அரசமுத்திரையைப் பாதுகாக்கும் பொறுப்பையும் பெற்ருர். ஷாஜஹான் தக்காணப் படையெடுப்பில் ஈடுபட்டிருந்த போது, 1631ஆம் ஆண்டு மும்தாஜ் ஒரு பிரசவத்தின் காரணமாக இறந்துபோனுர்.

மும்தாஜ் மஹால் உயர்ந்த கல்வி மேம்பாடும், பிற தகுதிகளும் பெற்ற ஒரு மாதரசியாவார். அவளிடம் விளங்கிய மிக உயர்ந்த வகையான இயற்கை அழகைச் செயற்கை அழகு சாதனங்கள் பல மடங்கு உயர்த்தின. அவளிடம் இயற்கையான அறிவுக்கூர்மையும் இளகிய மனமும் விளங்கின. நாட்டில் இருந்த நல்ல மாதர்கள் பலரைப்போன்று மும்தாஜும் அறப்பணிகள் புரிவதிலும், ஆதர வற்ற விதவைகள், அனுதைகள், துன்புற்றவர்களுக்கு உதவுவதிலும் சிறந்த மகிழ்ச்சிகொண்டார். மும்தாஜின் உயிர்த்தோழியாக இருந்த சாதி-யுள்-நிஸாகானும் என்ற அம்மையார் அரசியாரிடம் மிக்க ஈடுபாடு கொண்டவர். மும்தாஜின் அறப்பணிகளிலும், மனிதாபிமான அன்பர் தொண்டுகளிலும் அவரை மிகவும் ஊக்குவித்தவர் இந்த அம்மையார்தான். மும்தாஜ் தெய்வபக்தி மிக்கவர். அவர் பிரார்த் தனைகள், நோன்புகள், இன்னேரன்ன இஸ்லாம் சமயத்தில் கூறப் பட்ட சடங்குகள் யாவற்றையும் முறையாகப் பின்பற்றிவந்தார். ஆனுல், அவரது சமயக் கொள்கைகளில் வைதீகம் தோய்ந்திருப் பதைக் காணலாம். ஷாஜஹான் கிறிஸ்துவர்களிடமும் இந்துக் களிடமும் கடினமான சமயக் கொள்கை கொண்டிருந்ததற்கு மும்தாஜ் காரணம் என்று கூறப்படுகிறது. தனது கணவனுல் இத்தனை அதிகமாக அன்பு செய்யப்பட்ட ஒரு முகலாய அரசியை இந்திய வரலாற்றில் காணமுடியாது. ஆக்ரா நகரில் மும்தாஜின் பூதவுடலை உள்ளடக்கி நிற்கும் தாஜ்மஹால் தாம்பத்திய அன்பிற்கும் விசுவாசத்திற்கும் ஓர் உன்னதமான நினைவுச் சின்னமாகும்.

## தக்காணத்து விவகாரங்கள் (தொடர்ச்சி)

இதற்கிடையில் மீண்டும் தக்காணத்தில் தொல்லைகள் ஏற் பட்டன. மாலிக் ஆம்பரின் மகனுன ஃபாதேகான் என்பவர் அரியணை அளிப்பவராக விளங்கினுர். இவர் ஆமதுநகர் சுல்தானைச் சிறைப்பிடித்தார். அரசரின் வாஸிராக இருந்த ஆசஃப்கானின் தூண்டுதலால் இவர் சுல்தானைக் கொலைசெய்துவிட்டு, அவருக்குப்

பதிலாக அரசபரம்பரையைச் சேர்ந்த பத்து வயது பாலகனை உசேன் என்பவரை அரியணையில் ஏற்றினர். மீண்டும் ஃபாதே கான் முகலாயர்களுக்குப் பணிவதா வேண்டாமா என்று தயங்கிக் கொண்டிருந்தார். ஆனால், ஷாஜஹான், ரஸ்டம்கானின் தலைமையில் ஒரு வன்மைமிக்க பெரும்படையை அனுப்பி, தௌலதாபாத்தை அழித்துவிடும்படி உத்தரவு கொடுத்திருந்ததை அறிந்த, ஃபாதே கான் கலவரமுற்றுச் சரணடைந்துவிட்டார். பீஜப்பூர்மட்டும் சிறிது காலம் முகலாயர்களுக்குப் பணிய மறுத்துவந்தது. எனவே, அந்த இராஜ்யத்தைத் தாக்குமாறு ஷாஜஹான் ஆசஃப்கானை அனுப்பவேண்டியதாயிற்று. முகலாயர்கள் குல்பர்கா நகரைக் கைப்பற்றிக்கொண்டு, பீஜப்பூரை முற்றுகை செய்தனர். ஆனால், பஞ்சத்தின் காரணமாக உணவுத் தட்டுப்பாடு ஏற்பட்டதால், ஆசஃப்கான் முற்றுகையைக் கைவிட்டு மீராஜ் என்ற இடத்திற்குப் பின்வாங்க வேண்டியதாயிற்று. இதனால் ஷாஜஹானுக்கு வெறுப்பு ஏற்பட்டது. அவர் ஆசஃப்கானைத் திரும்ப அழைத்துக் கொண்டு அவருக்குப் பதிலாகத் தக்காணத்துப் படைகளுக்குத் தலைமைதாங்கி பீஜப்பூரை வெல்லவேண்டுமென்று மாபத்கானை நியமித்தார்.

1630–31ஆம் ஆண்டுகளில் தக்காணத்திலும் குஜராத்திலும் கொடிய பஞ்சம் ஏற்பட்டது. அது காண்டேஷ் பகுதியையும் தாக்கியது. பல ஆயிரக்கணக்கான மக்கள் பட்டினியினால் இறந்தார்கள். அக் காலத்தில் வாழ்ந்திருந்த வரலாற்று அறிஞரான மிர்ஸா அமின் காஸ்வினி என்பவர் மக்கள் பட்ட தொல்லைகளை விவரிக்கிறார். அவர் கூறுகிறபடி பெற்றோர்கள் தாம் பெற்ற குழந்தைகளையே உணவாகச் சாப்பிட்டார்களாம். மனித எலும்புகளின் பொடியையும், நாய் மாமிசத்தையும் கலந்து மக்கள் உட்கொண்டதாக அவர் குறிப்பிடுகின்றார். பஞ்சத்தைத் தொடர்ந்து ஒரு தொற்றுநோய் உண்டாகி, ஊர்களையும் நகரங்களையும் அழித்தது. நகரங்களின் வீதிகளில் இறந்தவர்களின் சடலங்கள் மலைபோல் கிடந்து அழுகிக்கொண்டிருந்தன ; பலர் வட இந்தியாவிற்குத் தப்பியோடினார்கள். ஷாஜஹான் மக்கள் பட்ட துயர்களை நீக்குவதற்காகப் பல நடவடிக்கைகளை மேற்கொண்டார். பர்ஹாம்பூர், ஆமதுநகர், சூரத்போன்ற இடங்களின் மக்களுக்கு உணவு ஊட்டுவதற்காகப் பொதுச் சமயலறைகளை ஏற்பாடு செய்தார். பணமும் வழங்கப்பட்டது. எழுபது லட்சம் ரூபாய் மதிப்புள்ள வரிச்சலுகைகள் வழங்குவதற்கு மன்னர் உத்தரவு கொடுத்தார். பிரபுக்களும் தமது ஜாகீர்களில் மக்களுக்கு வரிச்சலுகைகளை வழங்கினார்கள். இவர்கள் மக்கள் பட்ட அவதிகளை நீக்க வேறு பல நடவடிக்கைகளையும் எடுத்தார்கள்.

## போர்த்துகீஸியர்களுடன் போர்

போர்த்துகீஸியர்கள் வங்காளத்தில் ஹூக்ளி பகுதியில் குடியேறியிருந்தார்கள். ஷாஜஹான் டில்லியின் அரியணை ஏறுவதற்கு நூறு ஆண்டுகளுக்கு முன்னரே போர்த்துகீஸியர்கள் அந்தப் பகுதியில் வேரூன்றியிருந்தார்கள். ஹூக்ளியைத் தளமாகக் கொண்டு அவர்கள் இந்தியா, சீனு, மொலுக்காஸ், மணிலா முதலிய இடங்களுடன் வாணிபம் செய்துவந்தனர். போர்த்துகீஸியரின் பற்றிடங்களில் புதிதாகக் கிறிஸ்துவ சமயத்தைத் தழுவிக்கொண்டவர்கள் ஏராளமாக இருந்தனர். நடைமுறையில் போர்த்துகீஸியர்கள் சுதந்திரமாகவே வாழ்ந்துவந்தனர். ஆனுல், சில போர்த்துகீஸியர்கள் கடற்கொள்ளையில் ஈடுபட்டதோடு, கீழ்வங்காளத்தில் செல்வச் சிறப்புடைய சில மாவட்டங்களை அழிக்கவும் முற்பட்டார்கள். முகலாயப் பகுதிகளில் வாழ்ந்துவந்த மக்களின் அமைதியான வாழ்க்கையில் இவ்வாறு போர்த்துகீஸியர்கள் தலையிட்டுவந்தபோதிலும், ஜஹாங்கீரின் ஆட்சிக் காலத்தில் அவர்கள் தண்டிக்கப்படவில்லை. ஆனுல், ஷாஜஹான் அரசரானதும், போர்த்துகீஸியர்கள் தங்களின் பற்றிடங்களைப் பாதுகாப்புச்செய்திருக்கிருர்களென்றும், கப்பல்களில் சுங்கவரி வாங்குகிருர்களென்றும், சாட்கான் பகுதியை அழித்துவிட்டார்களென்றும் வங்காளத்தின் புதிய கவர்னரான காஸிம்கான் முறையீடு சொன்னுர். மேலும், அவர்கள் கடற் கொள்ளையிலும் அடிமை வாணிபத்திலும் ஈடுபட்டுவந்தார்கள். ஷாஜஹான் தனது தந்தையாருக்கு எதிராகக் கிளர்ச்சி செய்தபோது போர்த்துகீஸியர்கள் அவருக்கு உதவிசெய்யாததால், ஷாஜஹான் ஏற்கெனவே அவர்கள்மீது கோபங்கொண்டிருந்தார். மேலும், புதிய அரசரின் பட்டமளிப்பு விழாவிற்கு வழக்கமான பரிசுகளையும் அவர்கள் அனுப்பவில்லை. அவர்களின் அட்டகாசத்திற்குச் சிகரம் வைத்ததுபோன்று, போர்த்துகீஸியர், அரசி மும்தாஜின் இரு அடிமைப் பெண்கள் சென்ற படகுகளைக் கவர்ந்து சென்றுவிட்டார்கள். இக் காரணங்களுக்காகச் செருக்குற்றுத் திரிந்த அந்நியர்களைத் தண்டிப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்யுமாறு ஷாஜஹான் காஸிம்கானுக்கு உத்தரவிட்டார். போர்த்துகீஸிய வணிகனுகிய அல்ஃபோன்ஸோ என்பவன் ஹூக்ளி பகுதியில் தனக்குச் சொந்தமான நிலம் ஒன்றை மீட்டுத்தரவேண்டுமென்று வங்காள கவர்னரிடம் கேட்டுக்கொண்டான். போர் மூளுவதற்கு உடனடிக் காரணம் இதுதான். காஸிம்கான் பெரியதொரு படை திரட்டி, ஏராளமான படகுகளையும் சேர்த்துக்கொண்டு, நிலத்திலிருந்தும் நீரிலிருந்தும் ஹூக்ளி மீது இருமுனைத் தாக்குதல் செய்தார். தாக்குதலுக்கு எதிர்த் தாக்குதல் ஏற்பட்டது. சமரச உடன்படிக்கை செய்துகொள்வதற்கான பேச்சுவார்த்தைகள் நடத்தப்பட்டன, போர்த்து

கீஸியர் அடிமைகளைத் திருப்பிக் கொடுத்துவிட இசைந்தார்கள். ஆனால், அதை நிறைவேற்றுவதில் சில சிக்கல்கள் ஏற்பட்டன. ஆகவே, முகலாயர் மீண்டுமொரு முறை அவர்களைத் தாக்கி, எதிரியின் பகுதியில் ஒரு தளத்தில் ஊன்றிக்கொண்டனர். முற்றுகை ஐந்து வாரங்களாகத் தொடர்ந்து நடந்தது. வெடிகுண்டுகளின் மூலம் தாக்குவதற்காக பீரங்கிகள் கொண்டுவரப்பட்டன. எனவே, போர்த்துகீஸியருக்கு மீண்டும் சமரசப் பேச்சுகளைத் தொடங்குவதைத் தவிர வேறு வழி இருப்பதாகத் தெரியவில்லை. அவர்கள் முகலாயர்களுக்கு இரண்டு லட்சம் ரூபாய்கள் இழப்பீடாகக் கொடுப்பதற்கு இசைந்தார்கள். ஆனால், உடன்படிக்கை எதுவும் உடனே ஏற்படாததால் முற்றுகையிடப்பட்டவர்கள் மேலும் நீடிக்க வழியில்லாதவர்களாய்த் தமது நகரத்தைக் காலி செய்துவிட்டுப் படகுகளில் தப்பியோடத் தொடங்கினார்கள். ஆனால். அவர்கள் படகுகளில் ஏறுவதற்கு முன்னரே, முகலாயர்கள் அவர்களைத் திரும்பவும் தாக்கினார்கள். இந் நிலையில் அவர்கள் ஓடிக்கொண்டே போர்புரியவேண்டியதாயிற்று. ஏறத்தாழ 3,000 போர்த்துகீஸியர்கள் தப்பித்துக்கொண்டனர். 400 பேர் கைதிகளாகப் பிடிக்கப்பட்டு ஆக்ராவுக்குக் கொண்டுசெல்லப்பட்டனர். அங்கே அவர்கள் இஸ்லாம் மதத்தைத் தழுவும்படி வற்புறுத்தப்பட்டார்கள். அவர்கள் மறுத்துவிடவே, சிறையில் அடைக்கப்பட்டார்கள். போர்த்துகீஸியருக்கு எதிராக ஷாஜஹான் எடுத்துக்கொண்ட நடவடிக்கைகள் அரசியல் காரணமானவை. ஏனெனில், அவர்கள் அரசர் கோபங்கொள்ளக்கூடிய அளவிற்குத் தவருக நடந்துகொண்டார்கள். ஆனால், கைதிகளை முஸ்லீம்களாக மாற்றுவதற்குச் செய்யப்பட்ட முயற்சி சமயச் சகிப்பின்மையினால் தூண்டப்பட்டதாகும். எனவே, அது கண்டனத்திற்குரிய ஒரு கொள்கையாகும்.

## தக்காணத்து விவகாரங்கள் (தொடர்ச்சி)

இதற்கிடையில் தக்காணத்தில் போர் நடவடிக்கைகள் அதிகத் துரிதமாக நடக்கவில்லை. சிவாஜியின் தந்தையாகிய ஷாஜி முகலாயர்களுக்குப் பணிந்தார். ஆமதுநகரின் மாலிக் ஆம்பருடைய மகனாகிய ஃபாதேகானுக்குச் சொந்தமாயிருந்த நிலங்களை ஷாஜிக்கு மானியமாக வழங்கினார்கள். ஆனால், ஃபாதேகான், ஆசஃப்கானின் தீயுரைகளைக் கேட்டு அவனுடைய அரசராகிய சுல்தான் நைஜாம் ஷாஜியைக் கொன்றவுடன், மேற்கூறப்பட்ட நிலக்கொடைகள் மீண்டும் ஃபாதேகானுக்கு வழங்கப்பட்டன. இதனால் ஷாஜி மிகக் கோபங்கொண்டு, பீஜப்பூர் சுல்தானுடன் சேர்ந்து, ஃபாதேகானிடமிருந்து தௌலதாபாத்தை மீட்டுத்தருவ

தாக உறுதி கூறினர். ஃபாதேகான் கலவரமடைந்து கோட்டையை முகலாயர்களின் படைத்தலைவனுகிய மாபத்கானுக்குக் கொடுத்து விட்டு, முகலாயரின் படையில் சேர்ந்துவிடுவதாக வாக்குறுதி அளித்தான். மாபத்கான் இதனை வரவேற்று, பீஜப்பூர் படையொன்றை முறியடித்தார். பீஜப்பூர் படைத்தலைவனுன ரான் தௌலாகான் என்பவர் போர் தோல்வியடைந்தபோதிலும், ஃபாதேகானைப் பின்தொடர்ந்து சென்று, அவன் முகலாயரை விட்டுத் தன்னுடன் சேர்ந்துகொள்ளும்படி பெரியதொரு தொகையை லஞ்சமாகக் கொடுத்தான். ஆகவே, தௌலதாபாத் அரணை முற்றுகையிடவேண்டுமென மாபத்கான் முடிவு செய்தான். இதே கோட்டையை 1633ஆம் ஆண்டு மாபத்கான் மூன்றரை மாதங்களாக முற்றுகையிட்டுக் கைப்பற்றியிருந்தான். ஃபாதேகான் கோட்டை அதனுள் இருந்த ஆயுதங்களுடனும், போருக்குத் தேவை யான வெடிமருந்துகளுடனும் கொடுத்துவிடவே, நைஜாம் ஷாஜி யின் குடும்பத்தினரும் பெண்டிரும் கோட்டையைக் காலிசெய்யும் படி மாபத் இசைவு கொடுத்தான். ஃபாதேகானும், இளமன்னனுன ஆமதுநகர் ஊசேன் நைஜாம் ஷாவும் மொகலாய அரசவைக்கு அனுப்பப்பட்டனர். அரசர் குவாலியர் கோட்டையில் ஆயுட்கைதியாக வைக்கப்பட்டார். ஃபாதேகானுக்கு ஓய்வூதியம் வழங்கப்பெற்று, லாகூரில் போய்த் தங்கும்படி உத்தரவு கொடுக்கப் பட்டது. ஆனல், தௌலதாபாத் கோட்டை கைப்பற்றப்பட்ட தென்ருலும், ஆமதுநகர் இராஜ்யத்தை முழுவதும் அழித்துவிட முடியவில்லை. பாலாகாத் பகுதியிலுள்ள சில இடங்களைப் போன்ற ஆமதுநகர் இராஜ்ஜியத்தின் சில வட்டாரங்கள் சுல்தானுக்கு விசுவாசமாக இருந்த சில ஆமதுநகர் அதிகாரிகளின் பொறுப்பில் தொடர்ந்து இருந்துவந்தன. மேற்கூறப்பட்ட சுல்தான், மராட்டியத் தலைவரான ஷாஜியினுல் ஊசேன் நைஜாம் ஷாவுக்குப் பதிலாக சுல்தானுக நியமிக்கப்பட்டிருந்தார். தற்காலத்திய பூனு மாவட்டத்தின் வடபாதியும், கொங்கணப் பகுதி முழுவதும் மராட்டியர்களின் வசம் இருந்தன. அவர்கள் ஷாஜியின் தலைமை யின்கீழ் முகலாயர்களுக்குத் தொல்லை கொடுத்துவந்தார்கள். பாராண்டா அரணைக் கைப்பற்றுவதற்காக மாபத்கான் மீண்டும் தயார்செய்துகொண்டிருந்தார். மேலும் ஷாஜியை ஜுன்னுருக்குச் செல்லும்படி வற்புறுத்தவும், மற்ரெரு படையை அனுப்பவும் ஏற்பாடு செய்தார். ஆனல், எவ்வளவோ முயன்றும் மாபத்கான் பாராண்டாவைக் கைப்பற்ற முடியாமல், தக்காணத்தில் முகலாயப் படைகளின் தலைவராக இருந்த இளவரசர் ஷூஜாவுடன் பீரான் பூருக்குப் பின்வாங்கவேண்டியதாயிற்று. மாபத்கானின் தோல்விகளுக்காக ஷாஜஹான் அவரைப் பெரிதும் கடிந்துகொண்டார். மாபத்கான் 1634ஆம் ஆண்டு அக்டோபர் திங்களில் காலமானுர்,

தக்காணத்திலிருந்த முகலாயப் படைகளை மீண்டும் திருப்பி அழைத்துக்கொண்டது, தக்காணப் பகுதியில் மறுபடியும் குழப்பத்தை உண்டாக்கியது. மராட்டியர்கள் தொல்லை தருவது நின்றபாடில்லை. பீஜப்பூர் அரசவையில் நடைபெற்றுவந்த சதிகளுக்கும் ஒரு முடிவு இருப்பதாகத் தெரியவில்லை. எனவே, 1636ஆம் ஆண்டின் தொடக்கத்தில் மீண்டும் போர்முயற்சிகளைத் தொடங்கவும், கூடுமானால் பீஜப்பூரையும் கோல்கொண்டாவையும் அழித்துவிடவும் ஷாஜஹான் நேரில் புறப்பட்டார். அரசர் தௌலதாபாத்தில் வந்திறங்கியதும், பீஜப்பூர் சுல்தான் முறையாகத் திறை செலுத்தவேண்டுமென்றும், பீஜப்பூரிலிருந்து மராட்டியர்களை விரட்டிவிடவேண்டுமென்றும், ஆமதுநகர் அரசபரம்பரையின் பிற ஆதரவாளர்களைக் கைவிட்டுவிடவேண்டுமெனவும் உத்தரவிட்டு, பீஜப்பூர் சுல்தானுக்கு ஒரு கடிதம் எழுதினார். இந்த நிபந்தனைகள் முழுவதும் நிறைவேற்றப்படாததால், ஷாஜஹான் பீஜப்பூரைத் தாக்க முடிவு செய்து, போர் நடவடிக்கைகளைத் தொடங்குமாறு தன் படையில் ஒரு பகுதியையும் அனுப்பிவைத்தார். பீதியடைந்த சுல்தான் மீண்டும் சமரசப் பேச்சுவார்த்தைகளைத் தொடங்கிப் புதியதொரு உடன்படிக்கை செய்துகொள்ள இணங்கினார். இதன் நிபந்தனைகளை ஷாஜஹானே முடிவு செய்யும்படியும் விட்டுவிட்டார். இதன்படி பீஜப்பூர் முகலாயர்களின் மேலாண்மையை ஒப்புக்கொண்டு ஆண்டுதோறும் இருபது லட்சம் ரூபாய்களைத் திறையாகச் செலுத்தவும் உடன்பட்டது. மேலும், கோல்கொண்டா இராஜ்ஜியத்துடன் நட்புடன் இருக்கவும், அதற்கு எதிரான சர்ச்சைகளில் முகலாயர் அரசரின் தீர்ப்பிற்கு உட்படுவதாகவும் பீஜப்பூர் சுல்தான் உறுதிமொழி அளித்தார். இந்த உடன்படிக்கையின் விளைவாகப் பழைய ஆமதுநகர் இராஜ்யத்தின் எல்லை வரையறுக்கப்பட்டது. பாராண்டா அரணும் கொங்கணமும் பீஜப்பூருக்கு உரியவை என்பது நிலைநாட்டப்பட்டது. ஷாஜிக்கு எதிராக முகலாயர்களுக்கு உதவுவது என பீஜப்பூர் வாக்குக் கொடுத்தது. அதற்குள் ஷாஜி ஜுன்னருக்கும், திரிம்பக் பகுதிக்கும் அருகேயுள்ள இடங்களைக் கொடுத்துவிட வேண்டும். இந்த உடன்படிக்கை 1636ஆம் ஆண்டு மே திங்களில் கையெழுத்தாகி, 1656ஆம் ஆண்டு நவம்பர் திங்கள்வரையிலும் அமுலில் இருந்தது.

ஷாஜஹான் இப்போது கோல்கொண்டா நாட்டின்மீது தனது கண்ணோட்டத்தைத் திருப்பினார். இந்த நாட்டுடன் அரசியல் ஏற்பாடுகளைச் செய்துகொள்வது சிரமமானதன்று; ஏனென்றால், பீஜப்பூர், ஆமதுநகர் சுல்தான்களைவிடக் கோல்கொண்டாவின் அரசர் அதிக நெகிழ்வுத் தன்மையுடையவராகக் காணப்பட்டார். மேலும், ஷாஜஹான் அவரது தந்தையாருக்கு எதிராகக் கிளர்ச்சி

செய்தபோது, கோல்கொண்டா அவருக்கு நட்புறவு காட்டியிருந்தது. 1631ஆம் ஆண்டு கான்ஜஹான் லோடியின் கிளர்ச்சியை அடக்கு வதற்காக ஷாஜஹான் தக்காணத்திற்கு வந்திருந்தபோது, கோல் கொண்டாவின் புதிய அரசராகிய அப்துல்லா குதுப்கான் என்பவர் பேரரசருக்குப் பல பரிசுகளை அனுப்பியிருந்தார். மேலும், மாபத் கான் பீஜப்பூரைத் தாக்கியபொழுது, கோல்கொண்டா சுல்தான் பீஜப்பூருக்கு உதவி செய்யாமல் விலகி நின்ருர். எனினும், ஷாஜஹானுக்கும் கோல்கொண்டா சுல்தானுக்கும் இடையே உண்மை நட்புறவு ஏற்படுவதற்கு ஒரு தடை இருந்தது. ஷாஜஹான் வைதீகமான ஸுன்னி வகுப்பைச் சேர்ந்தவர். ஆனல், கோல் கொண்டா சுல்தானே ஷியா முஸ்லீம். அந்த வகையில் அவர் பாரஸீகத்தின் ஷாவிற்குக் கீழ்ப்பட்டவராவார். எனவே, ஷாஜஹான் கோல்கொண்டாவில் ஷியா சமயத் தொழுகைகள் நிறுத்தப்படவேண்டுமென்றும், குத்பாவிலிருந்து பாரஸீக ஷாவின் பெயர் நீக்கப்படவேண்டுமென்றும் நிபந்தனைகளை விதித்தார். சுல்தான் முதலில் சிறிது தயங்கினுர்; எதிர்த்தும் பார்த்தார்; இறுதியில் ஷாஜஹானின் நிபந்தனைகளுக்குப் பணிய வேண்டிய தாயிற்று. குத்பாவில் ஷாஜஹான் பெயர் சேர்க்கப்பட்டது. கோல் கொண்டாவின் எல்லையிலிருந்து முகலாயப் படைகள் அகற்றப் பட்டதுடன், புதியதோர் உடன்படிக்கையும் கையெழுத்தாயிற்று. இதன்படி, குத்பாவில் இதுநாள்வரை இருந்துவந்த ஷியா சமய ரீதியான சூத்திரங்கள் நீக்கப்படவேண்டும்; நாணயங்களில் ஷாஜஹானின் பெயர் பொறிக்கப்படவேண்டும், குத்பா ஷாஜஹா னின் பெயரால் வாசிக்கப்படவேண்டும். சுல்தான் ஆறு லட்சம் ரூபாய்களுக்கு ஈடான இரண்டு லட்சம் ஹன் நாணயங்களை ஆண்டுத் திறையெனச் செலுத்துவதாக ஒப்புக்கொண்டார். மேலும், இதுவரை உள்ள சகல திறை பாக்கிகளையும் செலுத்தி, பீஜப்பூர் முகலாயர்களுக்கு எதிராகப் போர் தொடுக்குமானல் ஷாஜஹா னுக்கு உதவுவதாகவும் வாக்களித்தார். இந்த உடன்படிக்கை 1636ஆம் ஆண்டு மே திங்களில் செய்யப்பட்டது.

தக்காணத்தைப் பொறுத்தவரையிலும் மூன்ருவது சிக்கலாக இருந்தது மராட்டியர்களை அடிபணியச் செய்வது. இவர்கள் தமது தலைவரான ஷாஜியின்கீழ்ப் பெரும் அரசியல், ராணுவ முக்கியத்துவம் பெற்று விளங்கினுர்கள். தக்காணத்தை அடைந்ததும், கான் ஸாமன் என்பவரின் தலைமையில் ஷாஜஹான் ஒரு படையை ஷாஜியின் தாய்நாட்டைக் கைப்பற்றும்படி அனுப்பி வைத்தார். ஷாஜியின் நாடு ஆமது நகருக்குத் தெற்கேயும் தென்கிழக்கேயும் அமைந்திருந்தது. அதோடு கொங்கணத்திலிருந்த மராட்டியர் களையும் வெளியேற்றவேண்டுமென்றும் கான்ஸாமனுக்கு உத்தரவு

ஆகியிருந்தது. இதே நேரத்தில் ஆமது நகருக்கு வடக்கிலும், மேற்கிலுமிருந்த பகுதிகளைக் கைப்பற்றவேண்டுமென ஷெயிஸ்டகான் தலைமையில் மற்றொரு படை அனுப்பப்பட்டது. ஷெயிஸ்டகான் வெற்றிபெற்றார். ஆனால், ஷாஜிக்கு எதிராகப் போர் முயற்சியில் ஈடுபட்டிருந்த கான்ஸாமன் தோல்வியுற்றார். ஷாஜி பீஜப்பூர் படையுடன் சேர்ந்து பீமா ஆற்றைக் கடந்து, கான்ஸாமனை எதிர்க்கத் தயாராக இருந்தார். அதற்குள் ஷாஜியைப் பின்தொடர வேண்டாமென, கான்ஸாமனுக்கு உத்தரவு வந்தது. இதற்கிடையில் பீஜப்பூருக்கும் முகலாயர்களுக்கும் இடையே சமரசம் ஏற்பட்டது. கான்ஸாமன் ஷாஜியிடமிருந்து ஜுன்னுரை மீட்பதற்காகப் புறப்பட்டார். முகலாயர்களுக்கு ஜுன்னுரைக் கொடுத்துவிடும்படி பீஜப்பூர் சுல்தான் ஷாஜியை வற்புறுத்தினர். ஆனால், மராட்டியத் தலைவரான ஷாஜி அதற்கு உடன்படவில்லை. ஆகவே, முகலாயர்கள் ஜுன்னுரை முற்றுகையிட வேண்டியதாயிற்று ; ஷாஜியும் வன்மையாகப் போர்புரிந்து வெற்றிபெற முடியாமல் கோட்டையை முகலாயர்களுக்கு விட்டுவிட்டார். ஆமது நகரின் அரசராக ஷாஜி முடிசூட்டி வைத்த இளைஞனையும் அவர் முகலாயர்களின் வசம் ஒப்புவித்தார். இந்த முன்னாள் அரசர் சிறைக்காவலில் வைக்கப்படும்படியாகக் குவாலியருக்கு அனுப்பப்பட்டார். ஷாஜி பீஜப்பூர் அரசப்பணியில் சேர்ந்தார். இவ்வாறு சிறிது காலத்திற்கேனும், முகலாயர்கள் தக்காணத்தின் பிரச்சினைகளை ஓரளவு மனநிறைவோடு தீர்த்துக் கொள்ள முடிந்தது.

## காந்தஹார் ஷாஜஹானுக்குப் பணிதல், 1638

ஏறத்தாழ நூறாண்டுகளுக்கு மேலாக வன்மை மிக்க அரணாகிய காந்தஹார், இந்திய முகலாய அரசர்களுக்கும், பாரஸீகத்தின் ஷா மன்னர்களுக்கும் இடையே பலத்த விவகாரத்தின் காரணமாக இருந்தது. இந்தக் கோட்டையை ஜஹாங்கீர் ஆட்சியின் இறுதி ஆண்டுகளில் முகலாயர்கள் இழக்க நேர்ந்தது. எனவே, அதனை எவ்வளவு சீக்கிரம் மீட்க முடியுமோ அதற்குள் அதனைப் பெற ஷாஜஹான் ஆவல்கொண்டிருந்தது இயற்கையே. பாரஸீகத்தின் ஷா மன்னரின் தூதுவர்களை ஆடம்பரமாக வரவேற்றும், அவர்களுக்கு விலையுயர்ந்த பரிசுகளை வழங்கியும், ஷாஜஹான் தனது வலிமையையும், ஆற்றலையும் ஷா மன்னருக்குக் காட்ட விரும்பினர். தக்காணத்தின் சுல்தான்களின்மேல் தான் பெற்ற வெற்றிகளையும், கிளர்ச்சிக்காரர்களைத் தான் அடக்கிய விதத்தையும்பற்றி மிகைபடவும் ஷாஜஹான் கூறலானர். ஷாஜஹான் அரியணையேறிய முதலாண்டிலே காலமான பாரஸீகத்தின் மாமன்னரான ஷா

அப்பாஸுக்குப் பின்னர், அவரது வயது முதிராத மைந்தன் பட்டத்திற்கு வந்தார். இவர் துருக்கியர்களோடு நடந்துகொண்டிருந்த ஒரு போரில் தன் முழுக் கவனத்தையும் செலவிடலானூர். காந்தஹாரின் கவர்னரான அலிமர்தன் கான் பாரஸீக அரசவையுடன் பகைகொண்டிருந்தான். ஏனென்ருல், பாரஸீக அமைச்சரான சாருதாஜி என்பவர் அலிமர்தன் தனது கவர்னர் பதவியின் வரவு செலவுகளைப்பற்றி ஒரு கணக்குத் தாக்கல் செய்யவேண்டுமென்றும், பாரஸீகத்திற்கு ஓர் அடையாளப் படை அனுப்ப வேண்டுமென்றும் கோரிக்கை விடுத்திருந்தார். இதற்குத் தப்பித்துக் கொள்வதற்காக, அலிமர்தன் காபூலில் இருந்த முகலாயப் படைத் தலைவர்களுடன் சதிசெய்து, காந்தஹாரை ஷாஜஹானுக்குக் கொடுத்துவிடுவதாக முன் வந்தான். 1638ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் அலிமர்தன் கான் முகலாயரின் பணியில் சேர்ந்துகொண்டு, தனது கோட்டைக்குள் இந்தியப் படைகள் நுழைவதற்கு அனுமதி கொடுத்தான். இப்பொழுது காந்தஹாரின் நாணயங்களில் பொறிக்கப்பட்டிருந்த குத்பாவில் ஷாஜஹானுடைய பெயரும் இடம் பெற்றிருந்தது. காந்தஹார் மாவட்டத்தை அதிக சிரமமில்லாமல் முகலாயப்படைகள் கைப்பற்றிக் கொண்டன. அலிமர்தன் கானுக்கு ஏராளமான வெகுமதிகள் வழங்கப்பெற்றன. சீக்கிரமே அவர் காஷ்மீரத்தின் கவர்னராகவும் நியமனம் பெற்ருர்.

## சிறிய வெற்றிகளில் சில

ஏறத்தாழ நூருண்டு காலமாக முகலாயர்கள் மனிதர் வாழ முடியாத வறண்ட பகுதியாகிய திபெத் நாட்டை கைப்பற்றவேண்டுமென்று ஆசைகொண்டு, முயன்று, பல முறை தோல்வியும் கண்டார்கள். ஜஹாங்கீர் காலத்தில் அனுப்பப்பட்ட படை பெருத்த சேதத்துடன் திரும்பியது. தந்தையாரைப் பின்பற்றி ஷாஜஹானும் இந்த முயற்சியில் ஈடுபட்டார். 1634ஆம் ஆண்டில் பால்கிஸ்தான் அல்லது சிறிய திபெத்து என்றழைக்கப்பட்ட நாட்டின் அரசரான அப்தால் என்பவருக்கு எதிராக ஷாஜஹான் ஒரு படையை அனுப்பினூர். காஷ்மீரில் இருந்துவந்த சாக்ஸ் என்பவர்களுக்கு அப்தால் தஞ்சம் கொடுத்ததுதான், ஷாஜஹானின் படையெடுப்பின் உடனடியான காரணமாகும். அப்தால் சரணடைந்தார். ஆனுல், சில காலத்திற்குப் பின் அப்தால் மீண்டும் கிளர்ச்சி செய்யவே, ஷாஜஹான் மறுமுறையும் படை அனுப்பவேண்டியதாயிற்று. இதற்குப் பின்னர் அப்தால் போர் இழப்பீட்டுப் பணம் கொடுக்கவேண்டியதோடு சாக்ஸ்களின் தலைவரைக்கொண்டு சரணடையச் செய்யவேண்டிய நிலை ஏற்பட்டது. ஓராண்டின்

பின்னர், திபெத் நாடு முழுவதுமே முகலாயர்களுக்கு எதிராகப் பகை கொண்டிருக்கிறது என்ற செய்தி பரவவே மற்றுமொரு படையை அனுப்ப வேண்டியதாயிற்று. திபெத்தியர்கள் தோல்வியுறவே வடக்கு எல்லையில் அமைதி நிலைநாட்டப்பெற்றது.

இன்னும் சில சிறிய வெற்றிகளும் கிடைத்தன. 1637ஆம் ஆண்டின் இறுதியில் தற்காலத்திய ராஸிக் மாவட்டத்தில் இருக்கும், பாக்லான் என்ற பகுதி வெல்லப்பட்டது. போர்த்துகீஸியர்கள் டையூவிலும், டாமனிலும் முற்றுகை செய்யப்பட்டு சரணடைந்தார்கள். பஞ்சாப் நாட்டிலுள்ள கங்காரா என்ற பகுதியில் ஒரு புரட்சி ஏற்பட்டது. அதன் கவர்னராக இருந்த ஜகத்சிங் என்பவர் முகலாயர்களின் அதிகாரத்தை எதிர்த்துக் கிளர்ச்சி செய்தார். ஆனல், 1642ஆம் ஆண்டின் தொடக்கத்தில் அவர் அடிபணிய வேண்டியதாயிற்று. பந்தல்கண்டு நாட்டின் புதிய தலைவரான சம்பத்ரே என்பார் பந்தல்கண்டில் கிளர்ச்சி செய்தார். அவரை அடக்குவதற்காக அப்துல்லா கான் என்பார் அனுப்பப்பட்டார். ஆர்ச்சாவிற்கும், ஜான்ஸிக்கும் இடையில் பந்தல்கண்டுவின் தலைவரை முகலாயப்படை திடீரெனத் தாக்கியது. சம்பத்ரே தப்பியோடிவிட்டபோதிலும், அவரது வளர்ப்புக் குழந்தையாகிய பிரிதிவிராஜ் சிறைபிடிக்கப்பட்டு குவாலியர் கோட்டையில் காவலில் வைக்கப்பட்டார். 1642ஆம் ஆண்டு மே திங்களில் சம்பத்ரே அடிபணிந்து முகலாயப் படையில் சேர்ந்துகொள்ளுமாறு வற்புறுத்தப்பட்டார்.

கஸ்காவிற்குத்தெற்கிலும், பந்தல்கண்டிற்குக் கிழக்கிலும் இருந்த நாடும் முகலாயரின் அதிகாரத்தின்கீழ்க் கொண்டுவரப்பட்டது. பாகல்கண்ட் என்ற பகுதியின் தலைவரான லட்மான் சிங் என்பவரும் பணிந்தார். பீஹாரில் பாலமாவ் பகுதியில் வாழ்ந்து வந்த செரோஸ் என்ற ஆதிக்குடிகளும் முகலாயர்களின் மேலதிகாரத்தை ஏற்றுக்கொண்டார்கள். 1643ஆம் ஆண்டு ஏப்ரல் திங்களில் மாளவத்தில் உள்ள கோண்டுகளும் பீலர்களும் செய்த புரட்சியானது அடக்கப்பட்டது.

## ஷாஜஹானின் மைய ஆசியக் கொள்கை

மைய ஆசியாவில் இருந்த தங்கள் மூதாதையர்களின் நாடாகிய, டிரான்ஸ் ஆக்ஸியானுப் பகுதிகளை வெல்லவேண்டுமென்பது முகலாயப் பேரரசர்கள் கொண்டிருந்த பேரவா ஆகும். பாபரின் மாபெரும் முன்னேராகிய தைமூரின் தலைநகரமான சாமர்கண்டைக்

கைப்பற்றிக்கொள்ள அவர் நடத்திய மூன்று படையெடுப்பு களும் தோல்வியில் முடிந்தன. இதுபோலவே, ஹுமாயுன் எடுத்துக் கொண்ட முயற்சிகளும் பயன்தரவில்லை. அக்பரிடமும், ஜஹாங் கீரிடமும் இந்தப் பேரவா இருந்தபோதிலும், மேற்கூறிய மனிதர் வாழ முடியாத பகுதிகளில் முகலாயர்களின் ஆட்சியை நிலைநாட்ட அவர்கள் இருவரும் எவ்வித முயற்சியும் எடுத்துக்கொள்ளக்கூடிய நிலையில் இருக்கவில்லை. எனவே, சாமர்கண்டுவை வெல்வதற்கு ஒரு முயற்சி செய்யக்கூடிய வாய்ப்பு ஷாஜஹானுக்குத்தான் கிடைத்தது. அதுகாலை, சாமர்கண்டு அஸ்ட்ரக்கானைச் சேர்ந்த ஜானிடுகள் என்ற மலைநாட்டார்களின்வசம் இருந்தது. ஷாஜஹான் காலத்தில் சாமர்கண்டுவை இமாம்குலி என்ற அரசர் ஆண்டு வந்தார். இவர் எவ்வாறேனும் காபூலைக் கவர்ந்துகொள்ளவேண்டு மென்ற நோக்கமுடைய பேராசைக்காரர். ஷாஜஹான் அரியணை யேறியதைத் தொடர்ந்து இந்தியாவில் நிலவிய குழப்பச் சூழ்நிலை யைப் பயன்படுத்திக்கொண்டு, இமாம்குலியின் சகோதரரான நாஸிர் முகமது என்பவரின் தலைமையில் ஊஸ்பெக் குலத்தவர் காபூலைத் தாக்கினர். இந்தப் படையெடுப்பில் அவருக்கு முழு வெற்றி கிடைக்கவில்லை. ஆனால், கோடைகாலம் தொடங்கியதும் அவர் பின்வாங்க வேண்டியதாயிற்று. ஏனெனில், அவருடைய படை வீரர்கள் கொடூரமான கோடை நாட்களில் அவருடன் சென்று போராட விரும்பவில்லை. அடுத்த ஆண்டிலும் (மே திங்கள், 1629) நாஸிர் முகமது மீண்டும் காபூலைத் தாக்கிப் பாமியன் என்ற இடத் தைப் பிடித்துக்கொண்டார். ஆனால், அதற்குமேல் முன்னேற முடியாமல் பின்வாங்கினர். முகலாயரைச் சேர்ந்த பகுதிகளில் இவ்வாறு அடிக்கடி நடந்த படையெடுப்புகள் இந்தியாவில் மன வெறுப்பைத் தூண்டின. ஆனால், நாஸிர் முகமது மன்னிப்புக் கேட்டுக்கொள்ள, அண்டை நாட்டாருக்குள் நல்லுறவு ஏற்பட்டது.

1639-ல் ஷாஜஹான் இத்தகைய படையெடுப்புகளை எதிர்க்க வேண்டுமென்று முடிவுசெய்து, சாமர்கண்டு நாட்டின் ஊஸ்பெக்கு களுக்கு எதிராக ஒரு படையெடுப்பைத் திட்டம் செய்தார். டிரான்ஸ் ஆக்ஸியானுப் பகுதியில் எப்படியும் முகலாயர்களின் ஆட்சியை நிலைநாட்டவேண்டுமென்ற தனது முன்னோர்களின் ஆசை ஷாஜஹானின் மனத்தில் இருக்கத்தான் செய்தது. சாமர் கண்டு நாட்டு அரசியலில் சில குழப்பங்கள் ஏற்படவே, ஷாஜஹான் இந்த வாய்ப்பினைப் பயன்படுத்திக்கொண்டார். இதற்கிடையில் விழியிழந்திருந்த தன் சகோதரனாகிய இமாம்குலியைப் பதவியி லிருந்து நாஸிர் முகமது நீக்கியிருந்தார். ஆனால், நாஸிரை மக்கள் விரும்பவில்லை. மேலும், அவர் சமயத் தலைவர்களுடன் ஒரு பூசலையும் உண்டாக்கியிருந்தார். குவாரிஸம் அல்லது கீவா என்ற பகுதியில்

ஒரு புரட்சி உண்டானதால் நிலைமை இதைவிட சீர்கேடானது. 1645-ல் நாஸிர் முகமது தன் மகனை அப்துல் அஜீசை கலகத்தை அடக்குமாறு அனுப்பினர். ஆனால், அப்துல் அஜீசோ தன் தந்தைக்கு எதிராகக் கிளர்ச்சிசெய்து, புக்காரா நாட்டிற்குத் தன்னையே அரசன் என அறிக்கை செய்தான். எனவே, நாஸிர் முகமது பால்க் நாட்டில் தஞ்சம் புகவேண்டிய நிலைமை ஏற்பட்டது. இவ்வாறு டிரான்ஸ் ஆக்ஸியானப் பகுதிகளில் ஏற்பட்ட உள் நாட்டுக் குழப்பம் ஷாஜஹான் இப் பகுதியின் அரசியலில் தலையிட்டு, முகலாயர்களின் பழங்கால ஆவலை நிறைவேற்றிக்கொள்ள ஒரு வாய்ப்பை அளித்தது. ஊஸ்பெக்கு நாட்டில் ஏற்பட்டுள்ள குழப்பச் சூழ்நிலையைப் பயன்படுத்திக்கொள்ளுமாறு காபூல் கவர்னருக்கு உத்தரவு கொடுக்கப்பட்டது. அவர் உடனே ஒரு படையை அனுப்பி காமார்ட் கோட்டையைப் பிடித்துக்கொண்டார். ஆனால், சீக்கிரமே மீண்டும் அதனை இழக்க வேண்டியதாயிற்று. இதற்குள் மழைகாலமும் அண்மித்து வந்ததால் படையெடுப்பு ஏற்பாடுகள் யாவும் நிறுத்திவைக்கப்பட்டன. முகலாயர்கள் தலையிட்டதால், நாஸிர் முகமது தன் மகனுடன் சமரசம் செய்துகொண்டார். தான் பால்க் நாட்டை வைத்துக்கொள்வதென்றும், மகன் அப்துல் அஜீசுக்கு புக்காராவைக் கொடுத்துவிடுவதென்றும் அவர்கள் ஒப்புக் கொண்டார்கள். நாஸிர் முகமது ஷாஜஹானிடமே உதவி கோரினர். ஷாஜஹானும் தெளிவற்ற நிபந்தனைகளுடன் உறுதி யளித்தார். எனினும், சாமர்கண்டு, பால்க், புக்காரா ஆகிய பகுதிகளைத் தனது ஆதீக்கத்தின்கீழ்க் கொண்டுவர இதனை நல்லதொரு வாய்ப்பு என ஷாஜஹான் வரவேற்றார். உடனே அவர் காஷ்மீருக்குச் சென்று, ஒரு பெரும் படையைத் திரட்டி, ஊஸ்பெக்கு களுக்கு எதிராக ஒரு படையெடுப்பிற்கான திட்டங்களைத் தயாரித் தார். இப் படையெடுப்பிற்கு இளவரசர் முராத் தலைவராக நியமிக்கப் பட்டார். எனினும், ஜூன் திங்களின் இடைவரையும் படை புறப்பட வில்லை. ஆனால், இளவரசர் முராத் தனது பணிகளை மேற் கொண்டதும் நாரின், குண்டுஷ் என்ற இடங்களைக் கைப்பற்றினர். புக்காராவையும், சாமர்க்கண்டுவையும் மீட்பதற்கு முகலாயர்கள் நாஸிர் முகமதுவுக்கு உதவிசெய்யவேண்டுமென்பதும், பின்னர் நாஸிரிடமிருந்து இந்த இடங்களைக் கைப்பற்றிக்கொள்ளவேண்டும் என்பதும்தான் ஷாஜஹானின் திட்டமாகும். நாஸிர் முகமதுவும் ஷாஜஹானின் உண்மையான கருத்து என்னவென்பதைப் புரிந்து கொண்டார். எனவே, முகலாயப்படை முன்னேறி வருவதை நாஸிர் தடுக்க முயன்றார். முகலாயர்களுக்குத் தன் நாட்டை விட்டுக் கொடுத்துவிட்டு, மெக்காவிற்குப் புனித யாத்திரைபோகத் தான் தயாராக இருப்பதாகவும் நாஸிர் நடித்தார். இளவரசர் முராத் நாஸி ரின் நடிப்புகளை நன்றாகப் புரிந்துகொண்டு, 1646ஆம் ஆண்டு ஜூலை

யில் பால்க் நாட்டைத் தாக்கினர். அவர் வருகிறார் என்ற செய்தி அறிந்ததுமே நாஸிர் தப்பியோடிவிட்டார்; உடனே முகலாயப்படை பால்க்கைப் பிடித்துக்கொண்டது; நகரத்தைக் கொள்ளையடித்து, பெரியதொரு செல்வத்தைக் கவர்ந்துசென்றார்கள். இதனையடுத்து, ஆக்ஸஸ் ஆற்றின்மீதிருந்த திர்மிஸ் என்ற இடம் கைப்பற்றப் பட்டது. பின்னர், முகலாயப்படைகள் சிவார்கன் என்ற இடத்தில் நாஸிர் முகமதுவைத் தோற்கடித்தனர். நாஸிர் மார்வ் என்ற இடத்திற்குத் தப்பியோடி அங்கிருந்து பாரஸீகத்திற்குச் சென்றான். இந்த வெற்றியால் ஷாஜஹான் பேருவகைகொண்டார்; இந்த வெற்றிவிழாவின் நினைவாக பால்க் நாட்டில் புதிய நாணயங்களை வெளியிட்டார். ஆனால், ஆனந்தப்படுவதில் ஷாஜஹான் சிறிது அவசரப்பட்டுவிட்டார். ஏனெனில், சுகவாழ்வில் ஊறித்திளைத்து, பழக்கப்பட்டிருந்த இளவரசர் முராதிற்கு வறண்ட நாடும், மைய ஆசியாவின் கடுமையான கால நிலைகளும் ஒத்துவராததால் தாய் நாடு திரும்ப வேண்டுமென்று தந்தையாரிடம் கேட்டுக்கொண்டார். அரசருக்கு இது ஏமாற்றத்தை அளித்தது. என்றாலும், அவர் தந்திரத்தைக் கையாள நினைத்தார். தான் பால்க் நாட்டின்மீது படையெடுத்ததன் ஒரே காரணம் அங்குள்ள ஆபத்தான பேர் வழிகளை ஒழித்துக்கட்டி மீண்டும் நாட்டை நாஸிருக்கே தந்து விடுவதுதான் என்று ஒரு பொய்க் கடிதத்தை நாஸிர் முகமதுவுக்கு அனுப்பிவைத்தார். மேலும், இளவரசர் முராத் தனது ஆணைகளை மீறி அவனுடைய மனம்போல் நடந்துகொண்டானென்றும், அவன் இளைஞன் ஆகையால் அவனிடம் அரசியல் அனுபவம் இல்லை என்றும் இனிதான சொற்களை அக் கடிதத்தில் எழுதி யிருந்தார். பாரஸீகத்தின் ஷா மன்னராகிய இரண்டாவது அப்பாஸ் என்ற அரசருக்கு அவர் முடிசூட்டு வைபவத்தையொட்டி வாழ்த்துகள் கூறியும், தனது மைய ஆசியப் படையெடுப்புகளில் ஷா மன்னர் நடுநிலைமையோடு இருக்கவேண்டுமெனவும் கேட்டுக் கடிதம் அனுப்பினர். ஆனால், ஷாஜஹானின் அரசியல் தந்திரம் பலிக்கவில்லை. ஷாஜஹான் எதிர்பார்த்தபடி இரண்டாவது ஷா அப்பாஸ் மன்னர் நடுநிலைமை வகிக்கவில்லை; தவிரவும், ஷாஜ ஹானின் இனிய சொற்களால் நாஸிர் முகமது ஏமாந்துவிடவில்லை. இளவரசர் முராதிற்குப் பதில் அவுரங்கசீப் நியமிக்கப்பட்ட போதிலும், முகலாயப்படைகளின் முன்னேற்றத்திற்கு மலைக்குடிகள் முட்டுக்கட்டையாக இருந்தனர். அப்துல் அஸிஸ் அதற்குள் தன் நிலைமையை உறுதிப்படுத்திக்கொண்டு ஆக்ஸஸ் ஆற்றங்கரையில் பெரியதொரு படையைத் திரட்டிக்கொண்டிருந்தான். எனவே, அவுரங்கசீப் பால்க் நாட்டை வந்தடைந்ததும், அப்துல் அஸிஸ் போருக்குத் தயாராக இருந்தான். மற்றோர் உஸ்பெக் படை வேறொரு திசையிலிருந்து பால்க்கைத் தாக்கியது. எனவே, அப்துல் அஜீசுடன் அவுரங்கசீப் கடுமையான போர் செய்யவேண்டிய

தாயிற்று; இதில் அஸிஸ் தோல்வியுற்ருன். அவுரங்கசீபின் நிதானமான போக்கும், வீரமும் ஊஸ்பெக்குகளை பெரும் வியப்பில் ஆழ்த்தியது. அவுரங்கசீப் குதிரையை விட்டிறங்கி, போர்க்களத்தி லேயே தன் மாலைப் பிரார்த்தனையை நிறைவேற்றினுராம். இறுதி யாக, அப்துல் அஸிஸ் பின்வாங்கிச்சென்று, புக்காராவைத் தனது சகோதரனுடைய பொறுப்பில் விட்டுவிடத் தீர்மானித்தான். நாஸிர் முகமது தான் பட்டத்தைத் துறந்துவிடத் தயாராக இருப்பதாகப் பாரஸீகத்திலிருந்து தம்பிக்கு எழுதினுர். ஆனுல், முகலாயர்கள் பெற்ற வெற்றிகளும், வெறும் மாயா வெற்றிகளாக இருந்தனவே யன்றி உண்மை வெற்றிகளாகத் தென்படவில்லை. அவுரங்கசீப் ஆக்ஸஸ் ஆற்றிற்கு அப்பால் முன்னேற முடியவில்லை. டிரான்ஸ்-ஆக்ஸியானுப் பிரதேசத்தின் பயங்கரமான தட்பவெட்பங்களைத் தாங்கிக்கொண்டு இருக்கவும் போரிடவும் முடியாது என அவுரங்கசீப்பின் படையதிகாரிகள் தத்தளித்தனர். மைய ஆசிய நாடு மனித சஞ்சாரமின்றிப் பாழடைந்திருப்பதை அவர்கள் கண்டார்கள். அவுரங்கசீப்பும் இந்தியாவிற்குத் திரும்பவேண்டு மென்று விரும்பினுர். ஏனெனில், தனது தந்தையாருக்குப் பின்னர் தான் அரியணையேற வேண்டுமென்ற ஆவல் அவரைத் தூண்டிக் கொண்டே இருந்தது. இந்தச் சிக்கல்களையும், தொல்லைகளையும், முகலாயப் படைத் தளபதியின் உணர்ச்சிகளையும் பற்றித் தெரிந்து கொண்ட ஊஸ்பெக்குகள், முகலாயர்களிடம் தாங்கள் கொண்டிருந்த பகைமையுணர்ச்சியிலும் போரிலும் ஊன்றி நின்ருர்கள். பாரஸீகத்தி லிருந்து திரும்பிய நாஸிர் முகமது, ஆப்கானிஸ்தானத்திலிருந்த முகலாயக் காவல்நிலையங்களைத் தாக்கினுன். முகலாயர்களிட மிருந்து காந்தஹாரைக் கைப்பற்றவேண்டுமெனத் திட்ட மிட்டிருந்த பாரஸீக ஷா மன்னர், நாஸிர் முகமதுக்கு ஊக்கமும் உதவியும் அளித்து வந்தார். டிரான்ஸ் ஆக்ஸியானுப் பகுதிக்குள் முன்னேறுவதைத் தடுத்து நிறுத்திக்கொண்டு, அவுரங்கசீப் ஆப்கானிஸ்தானத்தின்மீது ஊஸ்பெக்குகள் தொடுத்திருந்த தாக்குதலை எதிர்த்து அடக்கப் புறப்பட்டார். நாஸிர் முகமது பணிந்து மன்னிப்புக் கோரினுர். அதனை ஏற்றுக்கொள்ளும்படி, ஷாஜஹான் இளவரசர் அவுரங்கசீப்புக்கு உத்தரவு கொடுத்திருந் தார். அதுபோன்றதொரு மன்னிப்பை நாஸிர் முகமது நேரில் தராமல், தனது பேரன் வழியாக அனுப்பியிருந்தார். நாஸிர் முகமதுவின் நாடு மீண்டும் அவருக்குத் திருப்பிக்கொடுக்கப்படும் என்ற தவருன நம்பிக்கையின் காரணமாக, காவல்நிலையங்களில் இருந்த முகலாய அணிகள் விழிப்பாக யிராமல், சற்றுத் தளர்ந்து இருந்தன. அவுரங்கசீப் காபூலுக்குத் திரும்பவேண்டியதாயிற்று. ஆனுல், வழியில் ஊஸ்பெக்குகள் அவருக்கு நிறையத் தொல்லை கொடுத்தார்கள்.

பாரஸீக மன்னரான இரண்டாம் ஷா அபாஸ் ஊஸ்பெக்கு களின் கட்சியை வெளிப்படையாக ஆதரிக்கத் தொடங்கினர். 1648 ஆம் ஆண்டு ஷாஜஹான் காந்தஹாரைத் திருப்பிக்கொடுத்து விடுமாறு ஷா கோரினர். மேலும், பால்க் நாட்டை நாஸிருக்குத் திருப்பிக்கொடுக்க வேண்டுமென்றும் ஷா வற்புறுத்தினர். இத் தகைய அரசியல் நுண்ணறிவுக்குத் துணையாக, பாரஸீக ஷா மன்னர் படை பலத்தையும் காட்டத் தொடங்கினர். அவ்வாறே குராஷான் பகுதியை நோக்கிப் படையுடன் சென்று அதனை முற்றுகையிட்டார். முகலாயர்கள் ஏற்கெனவே பால்க் பிர தேசத்தைவிட்டுவிட்டுச் சென்றிருந்தார்கள்.

## காந்தஹாரை இழத்தல், 1649

மைய ஆசியாவில் ஷாஜஹானின் படையெடுப்புத் தோல்வியுற்ற தைப்பற்றி, இரண்டாம் ஷா அப்பாஸ் மன்னருக்கு மிக்க மகிழ்ச்சி. ஏனென்றால், இதனால் இந்தியப் பேரரசின் வடமேற்கு எல்லையில் முகலாயர்களின் அதிகாரம் நலிவுற்றதனால், காந்தஹாரை மீண்டும் கைப்பற்றிக்கொள்வதற்கு இதனை யொரு வாய்ப்பாகப் பயன் படுத்தலாமென்று ஷா எண்ணினர். சரியான வயதை அடைந்து விட்ட ஷா, ஆட்சியின் முழுப் பொறுப்பையும் தாமே ஏற்றுக் கொண்டு, காந்தஹாரின்மீது படையெடுக்கத் தேவையான ஏற் பாடுகளைச் செய்யத்தொடங்கினர். குராஸான் என்ற இடத்தி லிருந்து புறப்பட்டு காந்தஹாருக்கு அண்மையில் பிஸ்ட் என்ற கோட்டையை ஷா முற்றுகையிட்டார். இச் செய்தியைக் கேட்ட ஷாஜஹான் உடனே வன்மைமிக்க ஒரு பெரும் படையைத் திரட்டி, அதனை அவுரங்கசீப்பின் தலைமையில் அனுப்பி, உடனே சென்று நகரத்தையும் கோட்டையையும் காப்பாற்றுமாறு பணித்தார். இதற்கிடையில் பாரஸீகப் படை சிறியதோர் முற்றுகையின் பின்னர் பிஸ்ட் கோட்டையைக் கைப்பற்றியதோடு, காந்தஹாரையும் சூழ்ந்துகொண்டார்கள். காந்தஹாரின் கவர்னராக இருந்த தௌலத்கானின் தலைமையில் இயங்கிய காவல் படைகள், குறித்த காலத்தில் டெல்லியிலிருந்து உதவி வரமுடியாது என்ற எண்ணத்தில், தைரியத்தை இழந்தார்கள். கோட்டைக்குள் இருந்த சில படைவீரர்களோ, தங்களையும், தங்களது குடும்பத் தாரையும் காப்பாற்ற எண்ணங்கொண்டு எதிரிகளுடன் கடிதப் போக்குவரவு செய்யத்தொடங்கினர்கள். இத்தகைய ஒழுங் கீனத்தை ஒழித்துக்கட்ட தௌலத்கானுக்கு ஆற்றல் இருக்கவில்லை. இறுதியில் தௌலத்கானும் வீரமிழந்திருந்த படையினருடன் சேர்ந்துகொண்டு 1649 ஆம் ஆண்டு பெப்ரவரித் திங்களில்

கோட்டையை பாரஸீகர்களுக்கு விட்டுவிட்டான். காபூல் வழியாக காந்தஹாரைச் சேர்வதற்கு அவுரங்கசீப்பிற்கு இன்னும் ஒரு மாத காலம் பிடித்தது. கோபங்கொண்ட ஷாஜஹான் துரிதமாகச் செல்லும்படி அவுரங்கசீப்பைத் தூண்டினார். ஏனெனில், பாரஸீகர் கைப்பற்றிக்கொண்ட கோட்டை எல்லைப்புறத்தில் மிக முக்கியமான தோர் அரணாகும். அரசரே காபூலுக்குப் புறப்பட்டுச்சென்று, போர்க்களத்திற்கு அண்மையில் தங்கியிருந்தார். தன்னைக் கண்டாவது படைவீரர்கள் எழுச்சிகொண்டு போராடவேண்டு மென்பது அவரது நோக்கமாகும்.

வஸிர் சாதுல்லாகானின் துணையோடு, 50,000 வீரர்களைக் கொண்ட பெரும் படையைத் தலைமைதாங்கிச்சென்ற இளவரசர், கஜினி வழியாகச் சென்று, 1649 ஆம் ஆண்டு மே திங்களில் காந்தஹாருக்கு அருகில் வந்திறங்கி, கோட்டையை முற்றுகை யிட்டார். கோடைகாலம் முழுவதும் போர் தொடர்ந்து நடந்தது. ஆனால், கோட்டைக்குள் அடைபட்டுக்கிடந்த எதிரிகளிடம் எந்த வீரமும் காட்டமுடியவில்லை. ஏனெனில், அவர்களுக்கு பாரஸீகத்தி லிருந்து படையுதவி வந்துகொண்டிருந்தது. போதுமான அமைப்பும், உணவுப்பொருள்களும், ஆயுத, வெடிமருந்து விநி யோகங்களும் இல்லாத காரணத்தால், முகலாயப் படைகள் பெரிதும் தொல்லைப்பட்டார்கள். மேலும், அவர்களிடம் பெரிய பீரங்கிகள் இல்லாததும் பெருங் குறையாக இருந்தது. மழைகாலம் நெருங்கிக் கொண்டிருந்ததால், இதற்கு மேலும் முற்றுகையைத் தொடர்வது பயனற்றது எனக் கருதப்பட்டது. எனவே, அரசர் படையெடுப்பை பின்வாங்குமாறு உத்திரவிட்டார். அவுரங்கசீப்பும் முற்றுகையை விட்டுவிட்டு 1649 ஆம் ஆண்டு செப்டம்பர் திங்களில் லாகூருக்குப் பயணமானார்.

1652-ல் ஷாஜஹான் மீண்டும் காந்தஹாரைக் கைப்பற்றிக் கொள்ள முயற்சி செய்ய வேண்டுமென்று முடிவு செய்தார். மீண்டும் இந்தச் சாதனையை அவுரங்கசீப்பிடமே ஒப்புவித்தார். இளவரசரும் 1649-ல் ஏற்பட்ட தோல்வியையும் களங்கத்தையும் நீக்கவேண்டுமென்று பெரிதும் விரும்பினார். இளவரசரின் பொறுப்பில் வன்மைமிக்கதொரு படையும், அநேக ஆயுதப்படைக் கருவிகளும், போர் யானைகளும், ஒட்டகங்களும், செலவிற்காக இரண்டு கோடி ரூபாய்களும் கொடுக்கப்பட்டன. 1652 ஆம் ஆண்டு மே திங்கள் 22 ஆம் நாளில் தொடங்கிய காந்தஹாரின் இரண்டாவது முற்றுகை, இரண்டு மாதங்கள், பத்து நாட்களாக நீடித்தது. பாரஸீகர்களின் மிகுபயனுள்ள ஆயுதப் படைக்கலங் களுக்கு முன்னால் முகலாயர்களின் வீரம் ஒன்றும் எடுபடவில்லை,

மேலும், காந்தஹாருக்கும், காபூலுக்கும் இடையேயுள்ள வழியில் இருந்த கஜினியையும் தாக்குவதாக ஊஸ்பெக்குகள் அச்சுறுத்தினர். ஒருவேளை பாரஸீகர்களும் ஊஸ்பெக்குகளும் ஒன்று சேர்ந்து விடுவார்களோவென்று அஞ்சிய ஷாஜஹான் முற்றுகையை விட்டுவிட்டு, அரசவை வந்து சேருமாறு அவுரங்கசீபிற்கு உத்தரவிட்டார். படையெடுப்பைத் தொடர வேண்டுமென்று இளவரசர் விடுத்த கோரிக்கைகள் மறுக்கப்பட்டன. அவுரங்கசீப் திருப்பி அழைக்கப்பட்டு, தக்காணத்தின் கவர்னராக நியமிக்கப்பட்டார்.

பேரரசர் ஷாஜஹான் காந்தஹாரை மீட்க வேண்டிய பொறுப்பை இப்பொழுது தாராவிற்குக் கொடுத்தார். அவுரங்கசீப்பின் இரட்டைத் தோல்வியைப்பற்றி மகிழ்ச்சிகொண்டிருந்த தாரா தான் காந்தஹார் கோட்டையை ஒரு வாரத்திற்குள் மீட்டுத் தருவதாக வீரம் பேசினன். 1653 ஆம் ஆண்டு பெப்ரவரித் திங்களில் பட்டத்து இளவரசராகிய தாரா, பிரமாண்டமான சேனை, ஆயுதப்படைக்கலன்கள், ஒரு கோடி ரூபாய் செலவுப்பணம் ஆகியவற்றுடன் புறப்பட்டு, காந்தஹாரின் அண்மையில் இருந்த பிரதேசங்களைக் கைப்பற்ற முயன்றான். இதன்மூலம் பாரஸீகப் படைவீரர்களுக்குச் சென்றுகொண்டிருந்த உணவுப் பொருள்களையும், படைக்கருவிகளையும் தடுத்துவிடலாமென்று தாரா நம்பினன். காந்தஹாருக்கு மேற்கே இருந்த பிஸ்ட், கிரிஷ்க் போன்ற கோட்டைகளைக் கைப்பற்றுவதில் தாரா வெற்றி பெற்றான். சுற்றியிருந்த பகுதிகளையெல்லாம் அழித்துவிட்டு, காந்தஹாரை வன்மையாக முற்றுகையிட்டு பயங்கரமான பீரங்கித் தாக்குதல் செய்ய ஆணையிட்டார். கோட்டைச் சுவரின் குறிப்பிட்ட பகுதிகளில் கவனமாகத் தாக்கிய காரணத்தால் சுவரின் சில பாகங்கள் சின்னபின்னப்பட்டன; ஆனல், முகலாயப் படைகள் கோட்டைக்குள் நுழைய முடியவில்லை; ஏனெனில், அதிகத் திறமையும், மிகுபயனுமுள்ள பாரஸீக பீரங்கிகள் பயங்கரமான அக்கினியைக் கக்கிக்கொண்டிருந்தன. எனினும், இதற்கு முந்திய இரு முற்றுகைகளிலும் அவுரங்கசீப்பின் சாதனைகளைவிட தாராவின் வெற்றிகள் பாராட்டிற்குரியவை; இதனல், பாரஸீகர்கள் சிறிது கலவரமடைந்தார்கள். ஆனல், அவப்பேறுபோல் மழைக்காலம் வந்துவிடவே, இதனல் முற்றுகையிடப்பட்டவர்களுக்கு சாதகம் விளைந்தது. மேலும், முகலாயர்களிடமிருந்த உணவுப்பொருள்களும், வெடிமருந்தும் தீர்ந்துவிட்டிருந்தன. 1653 ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் தொடக்கத்தில் படை பின்வாங்க உத்தரவாயிற்று.

காந்தஹாரின்மீது செலுத்தப்பட்ட மூன்று முற்றுகைகளும் (1649, 1652, 1653) பேரரசின் செல்வத்தை உறிஞ்சிக் குடித்துவிட்டன. மொத்தச் செலவு பன்னிருகோடி ரூபாய்களாகும். இவற்

றிற்குப் பதிலாகக் கிடைத்ததோ ஒன்றுமில்லை யென்றுதான் கூற வேண்டும். பேரரசில் ஓர் அங்குல அளவுள்ள பிரதேசம்கூட அதிகமாகச் சேர்க்கப்படவில்லை. உண்மையில் முகலாயப் பேரரசு தகர்த்தெறிய முடியாத காந்தஹார் கோட்டையையும், அதனைச் சுற்றியுள்ள பிரதேசங்களையும்தான் இழந்தது. இந்தப் போரில் மக்களும், மாக்களும் ஏராளமாகச் செத்து மடிந்தனர். பேரரசின் அரசியல், ராணுவப் புகழ் மிகவே நலிவுற்று, ஷாஜஹானின் படைக் கல அமைப்பு முறையின் திறமையின்மையை இத் தோல்வி வெளிப் படுத்தியது. பாரஸீக மன்னராகிய ஷா, டெல்லியின் மாமன்னரை வென்றுவிட்டோமென்று அளவில்லாத செருக்குக்கொண்டது இயற்கையே. வருங்காலத்தில் இந்துஸ்தானத்தின் செழிப்பான சமவெளிகளை வெல்வதற்கு பாரஸீகம் முயன்றது. இதனால் முகலாயர்கள் பெரும் பீதியடைந்திருந்தார்கள். ஷாஜஹானின் இறுதி நாட்களில் இரு நாடுகளுக்கும் இடையே இருந்த நட்புறவு மிகவும் நலிவுற்றிருந்தது.

## கோல்கொண்டா, பீஜப்பூருடன் போர்: அவுரங்கசீப் இரண்டாம் முறை வைஸ்ராய் ஆதல், 1652—1657

1652 ஆம் ஆண்டு நவம்பர் திங்களில் அவுரங்கசீப் முகலாய தக்காணத்தின் கவர்னராக இரண்டாவது முறை நியமிக்கப் பட்டார். இதற்கு முன்னர் 1641—1644 வரை அவர் தக்காணத்தின் தலைமைப்பொறுப்பை ஏற்றிருந்தார். ஆகவே, இது அவருக்கு தக்காணத்தின் இரண்டாவது வைஸ்ராய் பதவி காலமாகும். கடமையுணர்ச்சிகொண்ட இளவரசர் முதலில் தக்காண மாநிலத் தின் நிதிநிலைமையைச் சீராக்க முயன்றார். அவருடைய திவானும், நிதித்துறையில் நிபுணரும், சிறந்த நிர்வாகத் திறமையும் கொண்ட முர்ஷிட் குலிக்கான் என்பவரின் துணையோடு புதியதும், நீதியானது மானதொரு நிலவரித் திட்டத்தை வகுத்தார். முர்ஷிட் குலிக்கான், தோடர்மாலின் நிலவரித் திட்டத்தின் முக்கியக் கொள்கைகளை எடுத் துக்கொண்டார். நிலங்களை அளந்து அவற்றின் விளைச்சலுக்கு ஏற்ப நிலவரி நிர்ணயம் செய்யப்பட்டது. நாட்டிற்கு முழுவதும் பொதுவானவொரு நிலவரித்திட்டத்தை அமுல்நடத்துவது முடியாது: எனவே, அந்தந்த வட்டாரங்களின் மரபொழுக்கங் களுக்கும், பழக்கவழக்கங்களுக்கும் ஏற்றபடி திட்டங்களைத் தயாரிப்பதுதான் சிறந்ததென அவர் உணர்ந்தார். எனவே, ஸப்தி நிலவரி முறையுடன், பட்டேய், ராஸ்க் போன்ற நிலவரித் திட்டங் களும் தொடர்ந்து அமலில் இருக்குமாறு உத்தரவு கொடுக்கப் பட்டது. அரசாங்கத்திற்குச் சேரவேண்டிய பங்குத்தொ

பட்டேய் நிலவரித் திட்டம் உள்ள இடங்களில் $\frac{1}{2}$ பங்கிலிருந்து நிலங்களை அளக்கும் முறை இல்லாத இடங்களில் $\frac{1}{4}$ பங்கு வரை விகிதாசாரம் இருந்து வந்தது. இந்த நடவடிக்கைகளினால் உழவுப் பெருமக்களின் வாழ்க்கைத்தரம் உயர்ந்ததோடு, நாட்டின் நிதிநிலைமையும் வருமானமும் அதிகரித்தன. பேரரசரின் அனுமதியோடு, இளவரசர் அவுரங்கசீப் அதிகாரிகளுக்குக் கொடுக்கப்பட்டு வந்த நிலமான்யங்களை மறுபகிர்வு செய்துகொள்ளும் ஒரு திட்டத்தையும் அமல் செய்தார்.

தனது முன்னோர்களைப் பின்பற்றி, அவுரங்கசீப் கோல்கொண்டா, பீஜப்பூர் இராஜ்யங்களை அழித்துவிடவும் திட்டம் தீட்டினார். தென் தீபகற்பம் முழுவதிலும் ஆட்சியை நிலைநாட்ட வேண்டுமென்பது முகலாயர்களின் கொள்கையாக இருந்ததால், மேற்கூறிய இரு ஷியா இராஜ்யங்களையும் தாக்குவதற்கு ஒரு தனியான காரணம் தேவைப்படவில்லை. கோல்கொண்டா செல்வச் சிறப்புடைய இராஜ்ஜியம். ஷியா வழி நின்ற அந் நாட்டை அழிப்பது தங்களுடைய சமயரீதியான கடமையென அவுரங்கசீப்பும், அவருடைய தந்தையாரும் கருதினார்கள். மேலும், கோல்கொண்டா சுல்தான் அண்மையில்தான் கர்னாடக மாநிலத்தை வென்றிருந்தார். ஆனால், இந்த வெற்றியைப் பேரரசர் ஒப்புக்கொள்ள மறுத்துவிட்டார். இத்தகைய குற்றம் செய்ததற்காக அரசர், சுல்தானிடமிருந்து ஒரு பெருந்தொகையைத் தண்டனைப் பணமாகக் கோரினார். மேலும், 1636 ஆம் ஆண்டு உடன்படிக்கையின்படி ஆண்டுதோறும் செலுத்தவேண்டிய திறைப் பணத்தை கோல்கொண்டா செலுத்தத் தவறியிருந்தது. ஆனால், போரின் உடனடிக் காரணம் என்னவென்றால் மீர்ஜும்லாவின் மகனை முகமது அமின் என்பவரை சுல்தான் கைது செய்திருந்தார். இந்த முகமது அமின் அவுரங்கசீப்பினிடம் உதவி கோரியிருந்தார். மிர்முகமது சாயிட் என்ற இயற்பெயர் கொண்ட மீர்ஜும்லா ஆர்டிஸ்தான் என்ற நாட்டைச் சேர்ந்தவர். அவர் ஒரு நகை வணிகரின் பணியாளாகக் கோல்கொண்டாவிற்கு வந்து தங்கியிருந்தார். அந்த வணிகர் இறந்தபின் அவருடைய பெருஞ் செல்வம் முழுவதும் மீர்ஜும்லாவிற்குச் சேர்ந்துவிட்டது. மிர்முகமது சாயிட்டின் செல்வமும் திறமையும் கோல்கொண்டாவின் தலைவரான அப்துல்லா குதுப்ஷாவைக் கவர்ந்தன. ஷா, மிர்முகமதுவைத் தனது முதல் அமைச்சராக நியமனம்பண்ணி அவருக்கு மீர்ஜும்லா என்ற பட்டத்தையும் வழங்கினார். மீர்ஜும்லா அதிகப் பேராசைபடைத்த ஓர் அரசியல்வாதி. இந்துக் கோவில்களைக் கொள்ளையடித்தும், வைரச்சுரங்கங்களின் மூலமும் அவர் ஏராளமான செல்வத்தைக் குவித்தார். இவ்வாறு அவரிடம் சிறந்த படைக்கலன்களைத் தாங்கிய

ஒரு குதிரைப் படையையும், 20,000 காலாள்களையும், போர் யானைகளையும், பீரங்கி போன்ற ஆயுதங்களையும் கொண்ட ஒரு தனிப் படை இருந்தது. மீர்ஜும்லா கர்னாடகத்தை வென்றிருந்ததோடு, சந்திரகிரி ராஜாவையும் தோற்கடித்தார். இவ்வாறு மீர்ஜும்லா அவராகவே உருவாக்கிய ஒரு நாட்டை ஆண்டுவந்தார். இதனை அவர் 'பிற நாட்டில் தன் மிக்குயர் ஆட்சி நிலவும் பகுதியாக' அமைத்திருந்தார். ஆனால், மீர்ஜும்லாவின் பேராசையும், செல்வமும், செருக்கான நடத்தையும் கோல்கொண்டா சுல்தானை கலவரமடையச்செய்தன. எப்படியும் அவரைச் சிறைப்பிடித்து விழிகளைப் பிடுங்கிவிடவேண்டுமென்று சுல்தான் விரும்பினார். சுல்தானுடைய தீய திட்டம்களைப்பற்றிய செய்தியை அறிந்துகொண்ட மீர்ஜும்லா, அரசவைக்குச் செல்ல மறுத்துவிட்டதோடு, பீஜப்பூர், பாரஸீகம் போன்ற நாட்டு அரசர்களுடனும், தக்காணத்தில் அரசப் பிரதிநிதியாக இருந்த அவுரங்கசீப்புடனும் பேச்சுவார்த்தைகளைத் தொடங்கினார். இதற்கிடையில் அரச தர்பாரில் வெளிப்படையாக, மீர்ஜும்லாவின் மகன், முகமது அமின் என்பான், சுல்தானை நிந்தித்துவிட்டான். இதனால் அவனும், அவனுடைய குடும்பத்தாரும் சிறைக்காவலில் வைக்கப்பட்டிருந்தனர். அவனுடைய உடைமைகள் யாவும் அபகரிக்கப்பட்டன. இவை யாவும் 1635 ஆம் ஆண்டு டிசம்பர் திங்கள் முதல் நாளன்று நடைபெற்றன. அவுரங்கசீப் இந்த நிகழ்ச்சியைத் தனக்கு சாதகமாகப் பயன்படுத்திக்கொள்ள விரும்பினார். கோல்கொண்டாவின்மீது படையெடுக்கத் தந்தையாரின் இசைவைப் பெற்றுக்கொண்ட அவுரங்கசீப், சுல்தானிடம் முகமது அமீனையும், அவனுடைய குடும்பத்தாரையும் விடுதலை செய்ய வேண்டுமென்றும், அல்லது கோல்கொண்டாவின் மீது தாம் படையெடுப்பதாகவும் சுல்தானைப் பயமுறுத்தினார். சுல்தானிடமிருந்து பதிலை எதிர்பார்க்காமலே அவுரங்கசீப் போரைத் தொடங்கிவிட்டார். 1656 ஆம் ஆண்டு ஜனவரித் திங்களில் அவுரங்கசீப் தனது மகனான இளவரசர் முகமதுவின் தலைமையில் கோல்கொண்டாவைத் தாக்கும்படி ஒரு பெரும் படையை அனுப்பினார். இந்தப் படை கோல்கொண்டா எல்லைக்குள் நுழைந்ததும், சுல்தான் பணிந்துவிட்டதோடு, மீர்ஜும்லாவின் மகனையும், அன்னையாரையும் விடுதலை செய்தார். அவுரங்கசீப், மீர்ஜும்லாவின் உடைமைகளைத் திருப்பித் தருமாறு கோரிவிட்டு, ஹைதராபாத்தைத் தாக்கினார். சுல்தான் பீதியடைந்தார்; ஹைதராபாத்திற்கு அருகில் இருந்த வன்மை மிக்க அரணாகிய கோல்கொண்டாவிற்குத் தன் செல்வங்கள் யாவற்றையும் கடத்திவிட்டார். மேலும், இளவரசர் முகமதுவுக்குக் கைக்கூலி கொடுக்க முயன்றதோடு, தனது நாட்டைப் பாதுகாப்பதற்காகப் படைகளைத் திரட்டவும் தயாரானார். ஆனால், இளவரசர் கோல்கொண்டா

படைகளை முறியடித்துவிட்டு ஹைதராபாத்தை முற்றுகையிட்டார். சுல்தானிடமிருந்து லஞ்சப்பொருள்களாக அணிகலன்களையும் விலை மதிக்க முடியாத செல்வங்களையும் கொண்டுவந்திருந்த கையாள்களை இளவரசர் கொன்றுவிட்டு சிறிது கால முற்றுகைக்குப் பின்னர் ஹைதராபாத்தைக் கைப்பற்றினர். சுல்தான் வேறு வழியின்றி மீண்டும் இளவரசருக்கு அடிபணிந்ததோடு, அவருக்கு இன்னும் அதிகமான அணிகலன்களையும், விலையுயர்ந்த பொருள்களையும் அனுப்பிவைத்தார். இதுவுமன்றி மீர்ஜும்லாவின் உடைமைகளையும் திருப்பிக்கொடுத்தார். ஆனால், எதிரிகளிடமிருந்து தன் நாட்டைப் பாதுகாக்க உதவி செய்யவேண்டுமென்று பீஜப்பூர் சுல்தானின் துணையை அதே சமயத்தில் நாடினர்.

இதற்கிடையில் 1656 ஆம் ஆண்டு பெப்ரவரித் திங்களில் அவுரங்கசீப் கோல்கொண்டா கோட்டையை முற்றுகையிட்டார். இந்த முற்றுகை சிலகாலம் நீடித்தது. சுல்தான் அப்துல்லா குதுப் ஷா கலவரமடைந்து, அவுரங்கசீப்பிடம் மன்னிப்புக் கோருவதற்காக தனது அன்னையாரை இளவரசரிடம் அனுப்பிவைக்க அனுமதி கேட்டார். வயது முதிர்ந்த அந்த அம்மையார் மன்னிப்புக் கோரினர். அவுரங்கசீப் கோல்கொண்டா நாட்டை அவர்களுடைய மகனுக்கு மீண்டும் கொடுத்துவிடுவதாக வாக்களித்தார். ஆனால், சுல்தான் திறைப் பாக்கி சகலத்தையும் செலுத்தவேண்டும்; ஒரு கோடி ரூபாய்களை இழப்பீட்டுப் பணமாகச் செலுத்தவேண்டும்; அத்துடன் சுல்தானின் மகளை இளவரசர் முகமதுவுக்குத் திருமணம் செய்விக்க வேண்டும் என்ற நிபந்தனைகளையும் போட்டார். இவ்வாறு தக்காணத்தில் பேச்சுவார்த்தைகள் நடந்து கொண்டிருக்கும்போது, ஆக்ராவில் சுல்தானின் கையாட்கள் தாராவினுடையவும் ஜஹானாராவினுடையவும் முயற்சியினால் ஷாஜஹானைக் கண்டு பேசுவதற்கான ஏற்பாடுகளைச் செய்துகொண்டிருந்தார்கள். அவுரங்கசீப் கோல்கொண்டா முற்றுகைக்காகத் தயாராக இருந்த போது, முற்றுகையிடாமல் பின்வாங்க வேண்டுமெனவும், சுல்தானை மன்னிக்குமாறும் தந்தையாரிடமிருந்து உத்தரவு வந்தது. ஆனால், அவுரங்கசீப் தந்தையின் ஆணைகளை இரகசியமாக வைத்திருந்து, முற்றுகையைத் தொடர்ந்தார். சுல்தான் மீர்ஜும்லாவின் உடைமைகளைத் திருப்பிக்கொடுத்து, திறைப்பாக்கிகளைச் செலுத்தவும், இளவரசர் முகமதுவுக்குத் தன் மகளைத் திருமணம் செய்விக்கவும் வாக்குறுதிகள் கொடுத்த பின்னர்தான் முற்றுகையை விட்டார். மீர்ஜும்லா இளவரசரைப் பேட்டி கண்டார்; இளவரசரும் அவரை மிக்க மரியாதையுடன் வரவேற்றார். இளவரசர் முகமதுவுக்கும் சுல்தானின் மகளுக்கும் திருமணம் நடந்தேறியது. வரதட்சிணைத் தொகையாகப் பத்து இலட்சம் ரூபாய்கள் கொடுக்கப்பட்டன. கோல்

கொண்டாவுடன் புதியதோர் உடன்படிக்கை செய்துகொள்ளப் பட்டது. இனிமேல் முகலாயப் பேரரசரை எதிர்ப்பதில்லையென சுல்தான் புனிதக் குரானின்மேல் சத்தியமாகச் சொன்னார். அவருக்கு மன்னிப்பு அளிக்கப்பட்டது. சுல்தான் 15 இலட்சம் ரூபாய்களை இழப்பீட்டுப் பணமாகக் கொடுக்கவேண்டியதாயிற்று. இந்த உடன்படிக்கையின்மூலம் சுல்தான் முகலாயப் பேரரசரின் கீழாள் என ஆகிவிட்டார். தன் எசமானரின் இழிவிற்கு முக்கியக் காரண ராக இருந்த மீர்ஜும்லாவிற்கு முகலாய அரசரில் பெரும் பதவி கொடுக்கப்பட்டது. வஸீர் சாதுல்லாகான் காலமான பின்னர், மீர்ஜும்லா பேரரசின் தலைமை அமைச்சராகிவிட்டார்.

கோல்கொண்டாமீது வெற்றி பெற்றதும், அவுரங்கசீப் பீஜப்பூர் இராஜ்யத்தைச் சிறிது கவனிக்கலானார். பீஜப்பூரில் இருபது ஆண்டுகளாக அமைதி நிலவிவந்தது. ஓரளவில் அந் நாடு ஒரு சுதந்திர இராஜ்யமாகவே இயங்கிவந்தது. அதன் அரசரான முகமது அடில் ஷா திறமையுள்ளவர். முன்னறிவு நிரம்பிய அவர், டெல்லி அரசருடன் நட்புறவு கொண்டிருந்தார். கடல்முதல் கடல் வரை அவருடைய நாடு பரந்துகிடந்தது. தன் நாட்டின் நிர்வாகத்தைச் சீராக்கி வருமானத்தை அதிக அளவில் உயர்த்தி யிருந்தார். அவருடைய வெற்றிகள் ஷாஜஹானின் பொருமை உணர்ச்சிகளைத் தூண்டிவிடவே, அவ்வரசர் சுல்தானின் தான் தோன்றித்தனத்திற்காக அவரைக் கடிந்துகொண்டார். ஆனால், சுல்தான், ஷாஜஹானும் போரிட விரும்பாததால், அரசரிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு அவருடைய வெறுப்பிற்குக் காரணமா யிருந்த முகலாய முறையான அரசவை ஆடம்பரங்களை நிறுத்திக் கொண்டார். 1656ஆம் ஆண்டு டிசம்பரில் அடில் ஷா இறந்து போகவே, அவரது மைந்தனை இரண்டாம் அலி அடில் ஷா அரியணையேறினார். அவருக்கு அப்போது பதினெட்டு வயது.

பீஜப்பூரில் அரசாங்கம் மாறியதால், நாட்டில் குழப்பச் சூழ்நிலை ஏற்பட்டது. அரசவையில் பிளவுகள் உண்டாயின. இராஜ்யத் தின் கிழக்குப் பகுதியில் கிளர்ச்சியுண்டாயிற்று. இந்த நிகழ்ச்சி களைப் பயன்படுத்திக்கொண்டு, அவுரங்கசீப், பீஜப்பூர் பிரபுக்களில் அதிருப்தியுடன் இருந்த சிலரின் நட்பைப் பெற்றுக்கொள்வதற்காக சதிசெய்தார். இரண்டாம் அலி அடில் ஷா காலஞ்சென்ற சுல்தான் அலி அடில் ஷாவின் உண்மையான மகன் இல்லையென்றும், அவனது பிறப்பு ஐயப்பாட்டிற்குரியதென்றும் சாக்குப்போக்குச் சொல்லி, பீஜப்பூரைப் படையெடுப்பதற்காக, அவுரங்கசீப், ஷாஜஹானிடம் உத்தரவு பெற்றார். ஆனால், பீஜப்பூர் சுதந்திர நாடாகையால், முகலாய அரசருக்கு அதன் விவகாரங்களில் தலையிட ஓர் உரிமை

யும் கிடையாது. அந் நாட்டு மன்னரின் வாரிசுரிமைகளைப்பற்றி ஆட்சேபிக்கவும் அவருக்கு உரிமை இல்லை. எனவே, பீஜப்பூரில் அவுரங்கசீப் தலையிட்டது வேண்டுமென்றே செய்யப்பட்ட ஆக்கிரமிப்புச் செயலாகும். சுதந்திர நாடான பீஜப்பூரைப் பணியவைத்து அடிமை நாடாக்கிவிடவேண்டுமென்பதே அவரது நோக்கமாகும்.

அந்தப் பகுதிகளைப்பற்றிய தல அறிவு மிக்கவராகிய மீர்ஜும்லாவின் துணையுடன், அவுரங்கசீப் பீஜப்பூரைத் தாக்கி, பீடார் கோட்டையை முற்றுகையிட்டார். பீடார் கோட்டை கற்பாறையின்மீது கட்டப்பட்ட மலையரண் ஆனதால், அங்குப் போராயுதங்களும் வெடிமருந்தும் ஏராளமாகப் பதுக்கப்பட்டு இருந்தன. கோட்டைத் தலைவனை சிதிமார்ஜான் என்பவன் வீராவேசமாகப் போராடினான். ஆனால், முகலாயப் படைகள் அரணுக்கு வெளியே இருந்த அகழியை நிரப்பிவிட்டதோடு, பயங்கரமான தாக்குதல்களால் கோட்டைச் சுவரையும் தகர்த்துவிட்டார்கள். அதிர்ஷ்டவசமாக அரண்மீது எறியப்பட்ட ஓர் ஏவுகணை சுவரில் பெரியதொரு வெடிப்பை உண்டாக்கியது. இதன் விளைவாக சிதிமார்ஜான் படுகாயப்பட்டான். உடனே முகலாய வீரர்கள் கோட்டைக்குள் ஓடிச்சென்று சுவர்களின்மேல் தங்கள் கொடிகளை ஏற்றிப் பறக்கவிட்டார்கள். இறந்துகொண்டிருந்த கோட்டைத் தலைவன் இளவரசருக்கு அதன் திறவுகோல்களை அனுப்பிவைத்தான். இவ்வாறு 27 நாட்களாக நடந்த முற்றுகையின் பின்னர், பீடார் கோட்டை முகலாயர்களின் உடைமையாயிற்று.

இந்த வெற்றியின் பின்னர் அவுரங்கசீப் 15,000 குதிரை வீரர்களைக்கொண்ட படையொன்றின் தலைவனாக மாபாத்கானை அனுப்பி, குல்பர்க்காவில் கூடியிருந்த பீஜப்பூர் சேனைகளை முறியடிக்க உத்தரவிட்டார். பீஜப்பூர் படைகள் முறியடிக்கப்பட்டு அங்குமிங்கும் ஓடத்தொடங்கினார்கள். பீடாருக்கு மேற்கில் நாற்பது கல் தொலைவில் இருந்த சாளுக்கியர்களின் பண்டைத் தலைநகரான கல்யாணியை நோக்கி அவுரங்கசீப் முன்னேறிக்கொண்டிருந்தார். நகரம் முற்றுகையிடப்பட்டபோதிலும், முகலாயர்களுக்கு அதிக எதிர்ப்பு இருந்தது; மேலும், அவர்களுடைய வழிகள் யாவும் துண்டிக்கப்படும் பேரபாயமும் இருந்தது. இறுதியில் அவுரங்கசீப்பின் படைத்திறத்தாலும் பொறுமையினாலும் பீஜப்பூர் படைகள் சின்னாபின்னமாக்கப்படவே, 1657ஆம் ஆண்டு ஆகஸ்டு திங்களில் கல்யாணி நகரம் தாக்கிப் பிடிபட்டது. பீஜப்பூர் இராஜ்யத்தை அடியோடு அழித்துவிடும் நோக்கத்துடன் அவுரங்கசீப் வேறு பல திட்டங்களைத் தீட்டிக்கொண்டிருந்தபோது, உடனடியாக பீஜப்பூர் படையெடுப்பை நிறுத்தும்படி பேரரசர் ஷாஜஹானின் உத்தரவு வந்தது.

டெல்லி அரசவையில் இருந்த பீஜப்பூர் அரசரின் கையாட்களின் முயற்சியும், அவுரங்கசீப்பினிடம் தாரா கொண்ட பொருமையும், பேரரசரின் தளர்ந்துகொண்டுவந்த உடல்நிலையும் ஷாஜஹான் இத்தகையதொரு முடிவிற்கு வரக் காரணங்களாகும். அரசரின் ஆணைக்கிணங்க பேச்சுவார்த்தைகள் தொடங்கப்பட்டு, ஒப்பந்த ஏற்பாடுகள் செய்யப்பட்டன. சுல்தான் ஒன்றரைக் கோடி ரூபாய்கள் இழப்பீட்டுப் பணமாகத் தருவதாகவும், பீடார், கல்யாணி, பாரெண்டா போன்ற முக்கியக் கோட்டைகளையும், கொங்கணத் திலும். வெங்கியிலுமுள்ள சில அரண்களையும் முகலாயர்களுக்குக் கொடுத்துவிடுவதாகவும் ஒப்புக்கொண்டார். ஷாஜஹான் இந்த நிபந்தனைகளை ஏற்றுக்கொண்டு. இழப்பீட்டுப் பணத்தில் அரைக் கோடி ரூபாய்களைத் தள்ளுபடி செய்தார். அவுரங்கசீப் பீடாருக்குச் சென்று ஷாஜஹானின் உடல்நிலை காரணமாக சீக்கிரமே தொடங்க விருந்த வாரிசுரிமைப் போரில் கலந்துகொள்வதற்கான ஏற்பாடு களைச் செய்யத் தொடங்கினர். பீஜப்பூர் சுல்தானே அரசியல் நிலை மையில் ஏற்பட்ட மாற்றங்களைப் பயன்படுத்திக்கொண்டு, 1657ஆம் ஆண்டு உடன்படிக்கையின் நிபந்தனைகளை நிறைவேற்ற மறுத்து வந்தார்.

கோல்கொண்டாவிற்கும் பீஜப்பூருக்கும் எதிராக அவுரங்கசீப் படையெடுப்புகள் நடத்திக்கொண்டிருந்தபோது, இதுவரை முகலாயர்களுக்கு அபாயகரமாகத் தென்படாத மராட்டியர்கள் முக்கியத்துவம் பெற்று முன்னேறிக்கொண்டுவந்தனர். ஷாஜி பான்ஸ்லேயின் மகனுகிய சிவாஜி, மராட்டியர்களின் இளந்தலைவ ராக விளங்கினர். இதுகாலை சிவாஜி வெற்றிகள் பல பெறவேண்டும் என்றும், சுதந்திர மராட்டிய நாடு வேண்டுமென்றும் போராட்டத் தைத் தொடங்கிக்கொண்டிருந்தார். ஷாஜி பீஜப்பூர் இராஜ்யத்தில் பணிபுரிய வேண்டியதாயிற்று. சிவாஜியும், முகலாயர்கள் பீஜப் பூருக்கு எதிராகப் புரிந்துகொண்டிருந்த போருக்கு உதவி செய்வ தாக வாக்களித்தார். அதற்குப் பதிலாக பீஜப்பூரிடமிருந்து ஒரு பிரதேசத்தை சிவாஜி பெற்றுக்கொள்ள வேண்டும் என்பது நிபந்தனை. ஆனால். அப் பிரதேசத்தை வெல்வதற்கு முகலாயர்கள் அவருக்குத் துணைபுரியாததால், அவர் முகலாயர்களுடன் கூட்டுச் சேராமல் தனித்து நின்றார். மேலும். அவுரங்கசீப் தக்காணத்தின் இரு இராஜ்யங்களின் விவகாரங்களில் ஈடுபட்டுக்கொண்டிருந்த போது. சிவாஜி ஜுன்னுரைக் கைப்பற்றியதோடு, ஆமதுநகருக்கு மேற்கேயுள்ள முகலாயப் பிரதேசங்களின்மேலும் படையெடுத்தார். எனவே, மேற்கு முனையில் சிவாஜியின் தாக்குதல்களை முறியடிப் பதற்கான ஏற்பாடுகளை அவுரங்கசீப் எடுக்கவேண்டியதாயிற்று. முகலாயப் படையின் ஒரு பகுதி சிவாஜியைத் தோற்கடித்தது

அவுரங்கசீப் பீஜப்பூருடன் சமரசம் செய்துகொண்டு படைகளை வாபஸ் பெற்றபோது, சிவாஜியும் தனது படையெடுப்புகளைக் கைவிட்டுவிட்டு, முகலாயர்களுடன் சமரசம் செய்துகொண்டு, அவர்களுக்குப் பணிந்தார்.

## வாரிசுரிமைப் போர், 1657—1659

1657ஆம் ஆண்டு செப்டம்பர் திங்களில் ஷாஜஹான் பிணியுற்ருர்; அவர் இறந்துவிட்டார் என்ற வதந்தி எங்கும் பரவத் தொடங்கியது. தனது முடிவு நெருங்கிவருவதை உணர்ந்த ஷாஜஹான், தனது மூத்த குமாரன் தாராவைத் தனக்குப் பின்வாரிசாக நியமித்து, மரண சாசனத்தை எழுதிமுடித்தார். எனவே, அரசர் பிணியுற்றிருந்தபோது, தாரா அரசரின் பெயரால் நிர்வாகத்தை நடத்துகின்ற பொறுப்பை ஏற்று நடத்திவந்தார். அரசரின் பிணியைப்பற்றிக் கேள்விப்பட்ட மற்ற குமாரர்களும் வாரிசுரிமைக்காகப் போராடுவது என முடிவுசெய்தார்கள். தாரா, ஷுகோ, ஷா ஷுஜா, அவுரங்கசீப், முராத் பக்ஷ் என ஷாஜஹானுக்கு நான்கு குமாரர்கள் இருந்தனர். இவர்கள் யாவரும் வயது வந்த ஆடவர்களாக விளங்கியதோடு, நல்ல பொருள்நலமும் ஆட்பலமும் கொண்ட மாநிலங்களுக்கு கவர்னர்களாகவும் பதவி வகித்து வந்தார்கள். தந்தையார் பிணியுற்றிருந்தகாலை, தாரா பஞ்சாப்பிற்கும் டெல்லிக்கும் கவர்னராக இருந்தார். ஆனால், தாரா எப்பொழுதும் தனது தந்தையாருடனே இருந்தார். ஷாஜஹான் தற்சமயம் காலநிலை மாற்றத்திற்காக 1657ஆம் ஆண்டு ஆக்ராவிற்கு வந்து தங்கியிருந்தார். ஷுஜா வங்காளத்தின் கவர்னராவும், அவுரங்கசீப் தக்காணத்தின் கவர்னராகவும், முராத் பக்ஷ் குஜராத்தின் கவர்னராகவும் இருந்தனர். ஒரு தாய் வயிற்றுப் பிள்ளைகள் என்ருலும், இந்த நான்கு சகோதரர்களுக்குள்ளும் ஒற்றுமை நிலவவில்லை; ஒவ்வொருவரும் அரியணையைப் பெற ஆசைப்பட்டுக் கொண்டிருந்தார்கள். இளைய குமாரர்கள் மூவரும் தாராவின்மேல் பொருமைகொண்டிருந்தனர். ஏனென்ருல், தாராவை ஷாஜஹான் பட்டத்து இளவரசராகத் தேர்ந்தெடுத்துத் தனக்குப் பின்வாரிசாகவும் நியமித்திருந்தார். தாரா விரிநோக்கான சமயக் கொள்கைகளைப் பின்பற்றிவந்தார்; இந்துக்களுடன் நட்புறவு கொண்டிருந்தார். ராஜபுத்திர உயர்குடிமக்களிடம் அவருக்கு நிறைய செல்வாக்கு இருந்தது. ஷுஜாவுக்கு ஷியா சமயப் பிரிவின்பால் பற்று இருந்தது; அவுரங்கசீப் தீவிர சுன்னி வகுப்பைச் சேர்ந்தவராதலால், முஸ்லீம்கள் அல்லாதாரை அவர் முற்றிலும் வெறுத்தார். முராத், அவுரங்கசீபைப்போல் சுன்னி என்ருலும், சமயக் கொள்கைகளைப் பொறுத்தவரையில் அக்கறை இல்லாமல் இருந்தார்.

ஷாஜஹானின் பிணி முற்றி அவர் அபாயகரமான நிலையில் இருக்கிறார் என்ற செய்தியைக் கேள்விப்பட்டதும், ஷுஜா, அவுரங்கசீப், முராத் ஆகிய மூவரும் தாராவிற்கு எதிராகப் போரிடுவதற்கான ஏற்பாடுகளைத் தொடங்கினார்கள். அப்போது தாரா, பிணியுற்றிருந்த தன் தந்தையின் அருகில் இருந்தார். குஜராத்தில் இருந்த முராது தனது அமைச்சரான அலிநாகி என்பவரைக் கொன்றுவிட்டு, தன்னை அரசரென அறிக்கை செய்து, தனது பெயரால் நாணயங்களையும் வெளியிட்டார். பல ஆண்டுகளாக வெகு திறமையுடன் வங்காளத்தை ஆண்டுவந்த ஷுஜா, தாராவை எதிர்த்துப் போரிட்டு, அரியணையைக் கைப்பற்றிக்கொள்ளும் நோக்கத்துடன் பெரும் படையுடன் ஆக்ராவை நோக்கிப் புறப்பட்டார். இவர்களிருவரும் அவுரங்கசீப்புடன் கடிதப் போக்குவரவு வைத்துக்கொண்டிருந்தார்கள். ஆனால், அவுரங்கசீப் தனது திட்டங்களையும் கருத்துகளையும் வெளிக்காட்டாமல், மிகத் தந்திரத்துடன் மர்மமாகவே வைத்திருந்தார். இத் திட்டங்களால்தான் அவுரங்கசீப் பின்னர் தனது சகோதரர்களை வென்று, அரியணையைத் தனக்காகக் கைப்பற்றிக்கொண்டார். மிகத் திறமையான தந்திரத்துடன் அவுரங்கசீப் தனது சொந்த நலன்களின் முன்னேற்றத்திற்காக ஷுஜாவையும் முராதையும் பயன்படுத்திக்கொள்ள முயன்றார். ஆக்ராவின் அரசவையில் நிகழ்ந்துவந்த மாற்றங்களைப் பற்றி அவருடைய நம்பிக்கைமிக்க கையாட்களும், குறிப்பாக அவருடைய சகோதரியாகிய ரோஷனாராவும் அவுரங்கசீப்புக்குத் தெரியப்படுத்திவந்தனர். மேலும், நர்மதை ஆற்றின் படகுத் துறைகளில் தனது படைகளை நிறுத்தித் தான் செய்துவந்த ஏற்பாடுகளையும் முயற்சிகளையும்பற்றிய செய்திகள் வடஇந்தியாவிற்குப் போய்விடாதபடியும் தடை செய்துவந்தார். மீர்ஜும்லாவை ஆக்ராவிற்குச் செல்லவிடாமல் தடுத்து, அவருடைய துணையுடன், அவுரங்கசீப் படையதிகாரிகளையும் படைவீரர்களையும் தன் பக்கமாய்ச் சேர்த்துக்கொள்ளுதல், போருக்குத் தேவையான தளவாடங்களைச் சேகரித்தல் முதலிய ஏற்பாடுகளைச் செய்யத் தொடங்கினார். முராதைப்போல் அவுரங்கசீப் தன் தந்தையாரையோ, அல்லது மூத்த சகோதரரையோ வெளிப்படையாகப் பகைத்து, அவர்களுடன் உறவை அறுத்துக்கொள்ள விரும்பவில்லை. பிணியுற்றிருக்கும் தந்தையைக் காணத் தான் ஆக்கிராவுக்குச் செல்வதாக அவர் அறிவித்துக்கொண்டு, வழியில் கோல்கொண்டாவையும் பீஜப்பூரையும் சமரசம் செய்துகொண்டு, அவ்விரு இராஜ்யங்களைத் தன் பக்கம் சேர்த்துக்கொள்ளவும் முயன்றார்.

அவுரங்கசீப் முராதுடன் கடிதப் போக்குவரத்தைத் தொடங்கினார். மிகக் கவனமாக நடந்துகொள்ள வேண்டுமென்றும்,

வெளிப்படையான புரட்சியில் ஈடுபட வேண்டாமென்றும் அவனுக்கு அறிவுரை வழங்கினர். சூரத்தை முற்றுகையிட்டதற்காகவும், அரசன் என்ற பட்டத்தைச் சூடிக்கொண்டதற்காகவும் அவுரங்கசீப், முராதைக் கடிந்துகொண்டார். இஸ்லாமியத்தின் எதிரியாகிவிட்ட தாராவை ஒழித்துக்கட்டுவதில் ஒன்றுபட்டு உழைப்பதென்றும், தாங்கள் வெற்றிபெற்றபின் பேரரசைப் பகிர்ந்துகொள்வதென்றும் சகோதரர்கள் இருவரும் ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டார்கள்; இதன்படி பஞ்சாப், ஆப்கானிஸ்தான், காஷ்மீர், சிந்து ஆகிய பகுதிகள் முராதிற்குச் சேரவேண்டும். எஞ்சியிருந்த பகுதிகள் அவுரங்கசீப்பினிடம் ஒப்படைக்கப்படவேண்டும். தவிரவும், போரின் முடிவில் கிடைக்கக்கூடிய கொள்ளைப் பொருள்களில் மூன்றில் ஒரு பங்கு முராதையும், மூன்றில் இரு பங்கு அவுரங்கசீப்பையும் சேரவேண்டும். இரு சகோதரர்களும் தத்தமது மாநிலங்களிலிருந்து புறப்பட்டு, தங்களுடைய படைகளை இணைத்துக்கொண்டு, தாராவுக்கு எதிராகப் போரிடும்படி ஆக்ராவுக்குச் செல்லவேண்டும் என்பதும் ஒப்பந்தத்தில் குறிக்கப்பட்டிருந்தது.

இவ்வாறு தாராவுக்கு எதிராகப் போர் நடவடிக்கைகளைப்பற்றி முராதும் அவுரங்கசீப்பும் கலந்தாலோசித்துக்கொண்டிருக்கையில், வங்காளத்தில் ஷுஜா ராஜ்மஹாலில் தனது முடிசூட்டு விழாவை நடத்திக்கொண்டிருந்தான். இதற்குப் பின்னர் அவன் ஒரு பெரும் படையுடன் ஆக்ராவை நோக்கிப் புறப்பட்டு, 1658ஆம் ஆண்டு ஃபெப்ரவரியில் பனாரஸை அடைந்தான். முதலில் முராதையும் ஷுஜாவையும் முறியடித்துவிட்டு, பின்னர் அவுரங்கசீப்பிற்கு எதிராகக் கிளம்ப வேண்டுமென்று திட்டமிட்டிருந்த தாரா, ஷுஜாவை எதிர்க்கும்படி தன் மூத்த மகன் சுலைமான் ஷிக்கோவையும் ராஜா ஜெய்சிங்கையும் அனுப்பினர். 1658ஆம் ஆண்டு ஃபெப்ரவரித் திங்கள் 24ஆம் நாள் இரு படைகளும் பனாரஸுக்கு ஐந்து கல் வடகிழக்கில் உள்ள பகதூர்பூர் என்ற இடத்தில் சந்தித்தன. பின்னர் நடந்த கடுஞ்சமரில் ஷுஜா தோல்வியுற்றான்; ஏராளமான பேர்கள் படுகொலை செய்யப்பட்டனர். ஷுஜா போர்க்களத்தைவிட்டு வங்காளத்திற்குத் தப்பியோடினன். வங்கத்தின் எல்லைவரைக்கும் ஜெய்சிங் ஷுஜாவைப் பின்தொடர்ந்தான்.

இதற்கிடையில் அவுரங்கசீப் தனது திட்டங்கள் முழுவதையும் உருவாக்கிவிட்டார். கோல்கொண்டாவையும் பீஜப்பூரையும் தனது நண்பர்களாக்கிக்கொண்டும், தக்காணத்தில் சிவாஜிக்கு ஏராளமான நிலக்கொடைகளை வழங்கியும் அவுரங்கசீப் தனது நோக்கத்தை நிறைவேற்றிக்கொண்டார். அதுகாலை இந்தியப் பேரரசின் ஒரு மாநிலமாக இருந்த ஆப்கானிஸ்தானத்தை படை

யெடுக்கச் சொல்லி, பாரஸீக மன்னரைத் தூண்டிவிட்டு, தாராவின் நோக்கங்களைச் சிதறடிக்க முயன்றார். 1658ஆம் ஆண்டு ஃபெப்ரவரியில் ஐரோப்பியப் பீரங்கி வீரர்களையும் தன் படையில் சேர்த்துக் கொள்ளவேண்டுமென்ற அவுரங்கசீப்பின் ஏற்பாடுகள் முழுவதும் நிறைவெய்தின. அவுரங்காபாதிலிருந்து புறப்பட்ட அவுரங்கசீப், ஒரு மாதம் பூரான்பூரில் தங்கியபின்னர், நர்மதை ஆற்றைக் கடந்து, திபால்பூரைச் சென்றடைந்தார். இங்கு முராது அவருடன் சேர்ந்து கொண்டார். இரு இளவரசர்களும் உஜ்ஜயினுக்குத் தென்மேற்கில் 14 கல் தொலைவிலுள்ள டார்மத்தைச் சென்றடைந்தார்கள்.

தக்காணத்திலிருந்தும் குஜராத்திலிருந்தும் தன் சகோதரர்கள் முன்னேறிவருகின்றார்கள் என்ற செய்தியைக் கேள்விப்பட்டதும், தாரா, ஜோதிபுரியைச் சேர்ந்த மகாராஜா யஸ்வந்த் சிங்கையும் காஸிம் கானையும் எதிர்த்துவந்த சகோதரர்களைச் சந்திக்கும்படியும், கூடுமானால் அவர்கள் இருவரையும் வற்புறுத்தித் தங்கள் மாநிலங்களுக்குத் திரும்பச் செய்யுமாறும் அனுப்பிவைத்தார். முகலாயப் படை இரட்டைத் தலைமையின் காரணமாகவும், உளவறிதல் முறை சரியாக இல்லாமையாலும் கிளர்ச்சி செய்துகொண்டிருந்த இளவரசர்களை அடக்கும் முயற்சியில் வெற்றிபெறவில்லை. அவுரங்கசீப் யஸ்வந்த் சிங்கிற்குச் செய்தி அனுப்பி, அவரை உடனே திரும்பி வரும்படி பணித்தார். ஏனெனில், தான் பிணியுற்றிருந்த தந்தையாரைப் பார்ப்பதற்காகத்தான் ஆக்ராவிற்கு வருவதாக அவுரங்கசீப் மேலும் வற்புறுத்திச் சொன்னார். ஆனால், யஸ்வந்த் சிங்கே அவுரங்கசீப்பின் படையை நெருங்கிவந்தார். அப்பொழுதுதான் முராதும் அவுரங்கசீப்புடன் சேர்ந்துகொண்டிருக்கிறான் என்பதை யஸ்வந்த் சிங் அறியமுடிந்தது. சமரசம் செய்துகொள்வதற்கு நேரம் கடந்துவிட்டதாகையால், 1658ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 25ஆம் நாளன்று டார்மத் என்ற இடத்தில் போர் நடந்தது. யஸ்வந்த் சிங்கின் தலைமையில் ராஜபுத்திரப் படைகள் எதிரிகளை வீராவேசமாகத் தாக்கினார்கள்; எனினும், முகலாயப் படைகள் நல்ல முறையில் அமைக்கப்படாததாலும், முறையாக நடத்தப் படாத காரணத்தாலும் போரில் வெற்றியடைய முடியவில்லை. யஸ்வந்த் சிங்கின் படை அதிகாரிகளில் பலர் கொல்லப்பட்டனர். யஸ்வந்த் சிங் முதலில் படுகாயப்பட்டுப் போர்க்களத்திலிருந்து அவருக்கு மிகவும் உண்மையுள்ள அதிகாரிகளால் அப்புறப்படுத்தப்பட்டார். காஸிம் கான் தலைமை தாங்கி நடத்திய படையில் ஒரேயொரு பெரிய முஸ்லீம் அதிகாரிதான் உயிரிழந்தார். மற்றும் நால்வர் அடுத்த நாட் காலையில் அவுரங்கசீப்புடன் சேர்ந்துகொண்டார்கள். யஸ்வந்த் சிங் ஜோதிபுரிக்குத் திரும்பியபோது, வீர உணர்ச்சியுள்ள அவனது மனைவி, அவனைக் கோட்டைக்குள்ளே

அனுமதிக்க மறுத்துவிட்டாள் என்றொரு செய்தி உண்டு. ஏனெனில், ராத்தர்கள் என்ற ராஜபுத்திர வீரமரபின்வழிவந்த எந்த ஆண்மகனும் தன் உயிரைப்பாதுகாத்துக்கொள்ளப் போர்க்களத்தைவிட்டுத் தப்பி யோடினால் அது ராஜபுத்திர மரபிற்கு முரணான இழிவுச் செயலாகும்.

தார்மத்தில் அவுரங்கசீப் பெற்ற வெற்றி அவருடைய புகழை அதிகரித்தது. அதன் பின்னர் அவுரங்கசீப், போர் நடந்த இடத்தில் புதியதொரு நகரத்தை நிர்மாணிப்பதற்கு அடிக்கல் நாட்டி, அதற்கு ஃபாதேபாத் என்று பெயரிட்டார். பின்னர் குவாலியர் வழியாக ஆக்ராவிற்குப் பயணமானார். சம்பல் ஆற்றைக் கடந்து, சாமுகார் என்ற இடத்தில் பெரும்படையுடன் வந்திறங்கினார். ஆக்ரா கோட்டைக்கு எட்டுக் கல் தொலைவில் கிழக்கே இருந்த இந்தக்கிரா மத்திலிருந்து வெற்றிப் பெருமிதத்திலிருந்த தன் சகோதரர்களுடன் போர் தொடுக்கவேண்டுமென்பது அவுரங்கசீப்பின் நோக்கமாகும். பட்டத்து இளவரசராகிய தாரா, தார்மத்தில் ஏற்பட்ட தோல்வி யினாலும், அவுரங்கசீப் அவ்வளவு துரிதமாக ஆக்ராவை அண்மி வந்துவிட்டதைக் கேள்விப்பட்டும் மிகவும் மனங்குன்றியிருந்தார். எனவே, கிடைக்கக்கூடிய அத்தனை படைகளையும் திரட்டிக் கொண்டு, தாரா ஷாஜஹானின் உத்தரவுடன் தானே நேரில் சென்று போரிட்டு, எவ்விதத்திலும் வாரிசுப் போட்டியை வென்று விடுவது என முடிவு செய்தார். தாராவின் முன்னணிப் படை நம்பிக்கைக்குகந்த இராஜபுத்திர பிரபுக்கள் கையிலும், வலது அணி கலிலுல்லாகானிடமும், இடது அணி தாராவின் இளைய மகனாகிய ஸிபிர் ஷுக்கோவிடமும் விடப்பட்டிருந்தன. உயரமான யானைமீது அமர்ந்து, தாரா மைய அணிக்குத் தலைமை தாங்கி, படையின் நடுவே நின்றார். வழக்கம்போல் இளவரசர் தாராவின் படையின் பல பகுதியினரிடையே ஒற்றுமையில்லாத குறை இருந்தது; ஏனெனில், அப் படையின் முஸ்லீம் தலைவர்களை அவுரங்கசீப் தனது சதிவேலைகளால் கெடுத்துவைத்திருந்தார்.

அவுரங்கசீப்பின் படைகளை தாரா உடனடியாகத் தாக்கியிருக்க வேண்டும். ஆனால், அவர் அவ்வாறு செய்யாமல் விட்டது பெரிய தவறாகும். ஏனெனில், அவுரங்கசீப்பின் படைகள் நீண்ட தூரம் நடந்து வந்த காரணத்தால் களைத்துப்போயிருந்தன. போர் தொடுப்பதை அடுத்த நாளைக்கு ஒத்திப்போட்டதால், எதிரிப் படைகள் அன்றிரவு முழுவதும் நன்றாக இளைப்பாறிக்கொண்டு புத்துணர்ச்சி பெறுவதற்கு முடிந்தது. அடுத்த நாள் (ஜூன், 8ஆம் நாள், 1658) போர் தொடங்கியபோது, தாரா வெடிமருந்துகளை வீணாக்கும்படி தனது வீரர்களுக்கு ஆணையிட்டார். ஏனெனில், அவுரங்கசீப்பின் படைகள் இன்னும் போர் எல்லைக்குள் நுழைய

வில்லை. முகலாயப் படையின் இடப்புற அணி, அவுரங்கசீப் படையின் வலபுறத்தைத் தாக்கியது. ஆனால், அவுரங்கசீப்பின் வீரர்கள் வெடிமருந்தை வீணாக்காமல் வைத்திருந்ததால், அவர்கள் எதிரியின் தாக்குதலை முறியடித்தார்கள். அடுத்தபடியாக, முகலாயப் படை எதிரிப்படையின் மையப்பகுதியைத் தாக்கியது. மையப் பகுதியை அவுரங்கசீப்பின் அவசரப் படை தாங்கிக்கொண்டு எதிரியைத் தாக்கி முறியடித்து, இடப்புற அணியின் தலைவரான ரஷ்டம்கானையும் கொன்றது. கலிலுல்லா என்பவரின் தலைமையில் இயங்கிய தாராவின் வலப்புற அணி, முராதின்மீது அரைமனமான தாக்குதலைச் செய்தது. கலிலுல்லா எதிரியோடு இணக்கமாக இருப்பதாகத் தென்பட்டது. எனினும், அவர் தாக்கியவுடனே மையப் பகுதியிலிருந்து இராஜபுத்திரர்களும் தாக்கினார்கள். முராதின் அணியை அவர்கள் நெருக்கிக்கொண்டேபோய், மிக வன்மையாக அவனை எதிர்த்தார்கள். முராதின் முகத்தை மூன்று அம்புகள் தாக்கின. அவருடைய சாரதி முன்னால் செத்து விழுந்தான். முராது இறுதியாகப் பின்வாங்கவேண்டியதாயிற்று. இராஜபுத்திரர்கள் மேலும் முன்னேறிச் சென்று, அவுரங்கசீப்பின் தலைமையில் இயங்கிய படையணி ஒன்றைத் தாக்கினார்கள். இராஜபுத்திரர்கள் தோற்கடிக்கப்பட்டார்கள். எனினும், அவுரங்கசீப் அவர்களுடைய வீரத்தையும் கடமையுணர்ச்சியையும் கண்டு வியந்து, தன்னை வீரமுடன் எதிர்த்த அவர்களைப் பழிவாங்காமல் விட்டுவிட்டார். இவ்வாறு தனது படையில் வலப்புற அணி போர்க்களத்துக்கு வெளியே தள்ளப்பட்டதும், தாரா தனது இடப்புறத்து அணியை பலப்படுத்துமாறு முன்னேறிக்கொண்டிருந்தார். இடப்புற அணியின் தலைவரான ரஷ்டம்கான் இறந்துபட்டிருந்தான். தாரா மையப்பகுதியிலிருந்து தனது இடப்புறத்து அணியின் முன்பகுதியை நோக்கி நகர்ந்தார். இதன் விளைவாக, தாரா தனது சொந்த பீரங்கிப் படையின் முன்னரே வந்து நிற்கவேண்டியிருந்ததால், பீரங்கிகள் வெடிப்பது நிறுத்தப்பட்டது. மேலும், தாரா களத்தின் ஒரு மூலைக்குச் சென்றுவிட்டதால் மற்றப் பகுதிகளோடு அவர் தொடர்பு கொள்ள முடியவில்லை. இதுவரையிலும் வெடிமருந்துகளைப் பயன்படுத்தாமல் இருந்த அவுரங்கசீப், இப்போது அவற்றைக்கொண்டு தாராவைத் தாக்கும்படி தனது ஆயுதப் படைக்கு உத்தரவிட்டார். இவ்வாறு எதிரியின் பீரங்கிகள் தாராவைச் சூழ்ந்துகொள்ளும்படி முன்னே நகர்த்தப்பட்டபோது, கோடையின் சூட்டினால் தனது ஆயுதந் தாங்கிய படைகள் மிகக் களைத்துப்போயிருப்பதையும், உயரமான யானையின்மீது தான் அமர்ந்திருப்பது அவுரங்கசீப்பினால் எளிதாகத் தாக்கப்பட வாய்ப்பளிக்கும் என்பதையும் தாரா உணர்ந்தார். அவரது படையதிகாரிகளின் ஆலோசனையின்பேரில், தாரா யானையை விட்டிறங்கி, குதிரைமீது ஏறிக்கொண்டார்.

காலியாக இருந்த ஹௌடாவைக் கண்ட தாராவின் வீரர்கள், அவரை இறந்துவிட்டதாக எண்ணிக்கொண்டார்கள். போர் செய்ததனுலும் கொடிய வெப்பத்தினுலும் களைப்படைந்திருந்த அவர்கள், இப்போது குழப்பமடைந்து அங்கும் இங்கும் ஓடத்தொடங்கினுர்கள். பீதியடைந்த தாரா, குதிரைமீதேறித் தப்பியோடினுர். 10,000 வீரர்கள் போர்க்களத்தில் தலைவரில்லாமல் விடப்பட்டார்கள். இதைத் தவிர இன்னும் அநேகர் களைப்பினுலும் சூட்டினுலும் செத்து மடிந்தார்கள். ஆக்ராவை வந்தடைந்ததும் தாராவுக்குத் தாங்கமுடியாத அவமானம் ஏற்பட்டதால், தன் தந்தையாரைக்கூடச் சென்று காண அவர் வெட்கப்பட்டார். தனது குடும்பத்தையும் ஒருசில ஆதரவாளர்களையும் மட்டுமே சேர்த்துக்கொண்டு டெல்லிக்குச் சென்று, அங்கே படையொன்றைத் திரட்டி, வெற்றிகொண்டிருக்கும் தனது சகோதரர்களை மீண்டும் எதிர்த்துத் தாக்கவேண்டும் என்ற நோக்கத்தோடு புறப்பட்டார்.

தந்திரசாலியான அவுரங்கசீப், வெற்றி தன் சகோதரனை முராதினுல்தான் கிடைத்தது என்று அந்தப் பெருமையை அவனுக்கு வழங்கினுர். காயங்களுக்கு மருந்து போட்டதோடு, தம்பியே அரசன் என்றும், அவனது ஆட்சி உடனே தொடங்கவேண்டும் என்றும் அறிக்கை செய்தார். சகோதரர்கள் இருவரும் ஆக்ரா நோக்கிச் சென்று, நகரத்து அரணுக்கு வெளியே முகாமிட்டுத் தங்கினுர்கள். முகலாயப் பிரபுக்களும் அதிகாரிகளும் தோல்வியடைந்த தாராவைக் கைநெகிழ்ந்துவிட்டு, வெற்றிபெற்ற இளவரசர்களின் பக்கம் சேர்ந்துகொண்டார்கள். ஷாஜஹானும், அவுரங்கசீப் தன்னை வந்து காணவேண்டுமென்று கேட்டுக்கொண்டார். தந்தையாரைப் பேட்டி காண முதலில் அவுரங்கசீப் இசைவு கொடுத்தார். ஆனுல், இயல்பிலே சந்தேகங்கொள்ளும் குணமுடைய அவர், ஒருவேளை தன்னைச் சிறைப்பிடித்துவிடுவார்களோ என்று ஐயுற்று, தந்தையாரைக் காண மறுத்துவிட்டார். நகரத்தைக் கைப்பற்றிக்கொண்டு, அரணைச் சுற்றிலும் தன் படைவீரர்களைக் காவல் வைத்தார். உயிருக்குப் பயந்த ஷாஜஹான், கோட்டை வாயில்களைப் பூட்டிவிட்டு, அரணைப் பாதுகாப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்தார். அவுரங்கசீப் முற்றுகையிட்டு, அரண் சுவர்களைத் தகர்த்தெறிய உத்தரவிட்டார். ஆனுல், தாக்குதல்களால் தகர்த்தெறிய முடியாத அக் கோட்டைச் சுவர்களைப் பீரங்கி வெடிகளால் ஒன்றும் செய்ய முடியவில்லை. காலதாமதம் தனக்கே பேரபாயமாக முடியலாம் என்றுணர்ந்த அவுரங்கசீப், யமுனை ஆற்றிலிருந்து கோட்டைக்கு வந்துக்கொண்டிருந்த தண்ணீர் வசதியை வெட்டிவிட்டார். இதன் பின்னராவது தந்தை பணிந்துவிடுவாரென்று அவர் எண்ணினுர். கோட்டைக்குள்ளே இருந்த கிணற்றுத்

தண்ணீர் நல்ல நீர் அன்று. அதனால், அரச குடும்பத்தாரும் படை வீரர்களும் பெருந்தொல்லைக்குள்ளானார்கள். ஷாஜஹான் மீண்டும் அவுரங்கசீப்பின் பிள்ளைப் பாசத்திற்கு இறைஞ்சி, சச்சரவை சமரசம் செய்துகொள்ளத் தனக்குள்ள விருப்பத்தை வெளியிட்டார். அவுரங்கசீப்போ தான் என்றும்போல் தந்தையிடம் விசுவாசமாக இருப்பதாகப் பதில் கூறினார். எனவே, ஷாஜஹான் கோட்டை வாயில்களைத் திறந்துவிட்டு, அவுரங்கசீப்பின் மூத்த மகனை இளவரசர் முகமது கோட்டையின் பொறுப்பை எடுத்துக்கொள்ளவும், பேரரசரின் ஆதரவாளர்களை அங்கிருந்து அப்புறப்படுத்தவும் இணங்கினார். ஜஹானாராவின் முயற்சியால் ஷாஜஹானுக்கும் அவுரங்கசீப்புக்கும் ஒரு பேட்டி ஏற்பாடு செய்யப்பட்டது. பேரரசை நான்கு சகோதரர்களும் தமக்குமிடையே பகிர்ந்துகொள்ளவேண்டுமென ஷாஜஹான் தம் கருத்தை வெளியிட்டார். அவுரங்கசீப்பும் தந்தையைச் சந்திப்பதற்காகக் கோட்டைக்குள் நுழைந்தார். இதற்கிடையில் ஷாஜஹான் தாராவிற்கு அனுப்பிய கடிதமொன்றை அவுரங்கசீப்பின் அதிகாரிகள் கொண்டுவந்து காட்டியதும், அவுரங்கசீப் மனமாறித் திரும்பிவிட்டார். தன் தந்தை இன்னும் தாராவின் பக்கமே இருக்கிறார் என்றும், தன்னை வெறுக்கிறார் என்றும் அவர் உறுதியாக நம்பினார். இதற்குப் பின்னர் தந்தையும் மகனும் மீண்டும் சந்திக்கவேயில்லை. ஆடம்பரமான ஒரு தர்பாரை நடத்திவிட்டு, அவுரங்கசீப் ஆக்ராவை இளவரசர் முகமதுவின் பொறுப்பில் விட்டுவிட்டு, தான் தாராவைப் பின்தொடர்ந்து சென்றார்.

டெல்லியை நோக்கிச் செல்லுகின்றபோதே, அவுரங்கசீப்பிற்கும் முராதுக்கும் இடையே மனப்புழுக்கம் ஏற்பட்டது. அவுரங்கசீப் தன்னைக் கவனிப்பதில்லையென்று முராது குறைபட்டார். அவுரங்கசீப் தானே அரசர் என்ற முறையில் நடந்துகொண்டதோடு, தனது நிலைமையை வலுப்படுத்திக்கொள்ளப் புதிய படைகளைத் திரட்டத் தொடங்கினார். தந்திரங்களில் கைதேர்ந்தவரான அவுரங்கசீப் இரக்க சிந்தையுமில்லாதவராகையால், தாராவைப் பின்தொடர்வதில் தனக்கு உதவி செய்யுமாறு முராதுக்குப் பொருள் கொடுத்து, அவனை ஒரு விருந்துக்கு அழைத்தார். சில நாட்கள் தயங்கிய பின்னர், தனது அதிகாரிகளில் ஒருவரின் ஆலோசனையின்பேரில், முராது அண்ணனின் அழைப்பை ஏற்றுக்கொண்டார். இந்த அதிகாரிக்கு அவுரங்கசீப் பொன்னை இலஞ்சமாகக் கொடுத்து அவனை வாங்கியிருந்தார். விருந்தில் மது வழங்கப்பட்டது. விருந்து முடிந்ததும், வேட்டையாடியதன் காரணமாகத் தனக்குக் களைப்பாக இருப்பதாகவும், முராது அங்கிருந்து ஓய்வு எடுத்துக்கொள்ளலாமென்றும் அவுரங்கசீப் மிகத் தந்திரமாகச்

சொன்னார். முராது இளைப்பாறிக்கொண்டிருந்த கூடாரத்திற்கு ஒரு பணிப்பெண்ணையும் அனுப்பி, அவரது கால்களைப் பிடித்துவிடுவதற்கு ஏற்பாடு செய்தார். இதனால் முராது சீக்கிரம் உறங்கிவிடவே, அந்தப் பணிப்பெண் அவருடைய ஆயுதங்களை எடுத்துக் கொண்டாள். உடனே அவுரங்கசீப் முராதைச் சிறைப்பிடித்து டெல்லி கோட்டையில் காவலில் வைக்குமாறு அனுப்பிவிட்டார். முராதின் படைவீரர்களுக்கு இலஞ்சம் வழங்கப்படவே, அவர்கள் அவுரங்கசீப்புடன் சேர்ந்துகொண்டனர். இவை யாவும் மதுராவுக்கு அருகில் நடந்தன.

இந்த இடைக்காலத்தில், வெற்றிகொண்ட அவுரங்கசீப்பிற்கு எதிராக ஒரு பெரும் படையைத் திரட்டும் பணியை தாரா செய்யத் தவறிவிட்டார். டெல்லி தலைநகரை விட்டுவிட்டு, அவுரங்கசீப் முன்னேறுவதைத் தடுக்கலாம் என்றும், தன் நிலையைப் பலப்படுத்திக்கொள்ளலாம் என்ற நோக்கத்தோடும் தாரா லாகூருக்குச் சென்றார். தனது வீரர்களில் சிலரை சட்லெஜ் ஆற்றின் துறைகளில் நிறுத்தி, எதிரியின் நடவடிக்கைகளைப்பற்றித் தனக்குச் செய்தி அனுப்புமாறு ஏற்பாடு செய்திருந்தார். அவுரங்கசீப்பின் படைகளைப்புற்றிருக்குமென்றும், தன்னைத் தாக்குவதற்கு அப் படை சரியான காலத்தில் லாகூருக்கு வந்து சேராது என்றும் அவர் எண்ணினார். ஆனால், அவர் போட்டது தப்புக் கணக்காகிவிட்டது. முராதைப்பற்றிய கவலை நீங்கப்பெற்ற அவுரங்கசீப், நேராக டெல்லிக்குச் சென்று நகரைக் கைப்பற்றிக்கொண்டார். அங்கிருந்து அவர் இரண்டு படைகளை அனுப்பினார். ஒன்று தாராவைப் பின்தொடர்வதற்காக லாகூருக்கும், மற்றது தாராவின் மூத்த மகனாகிய சுலைமான் ஷிக்கோவையும் அவுரங்கசீப்பின் சகோதரன் ஷுஜாவையும் எதிர்க்கும்படி அலஹாபாத்திற்கும் அனுப்பப்பட்டன. டெல்லியின் பேரரசர் என்ற பட்டத்தை ஏற்றுக்கொண்டு, தனது முடிசூட்டு விழாவையும் அவுரங்கசீப் நடத்திக்கொண்டார். இவ்வாறு ஷாஜஹானின் ஆட்சி முடிவுற்றது. முடியிழந்த மன்னர் தனது வாழ்நாளின் எஞ்சிய நாட்களை ஆக்ரா கோட்டையில் ஒரு கைதியாகச் செலவிடவேண்டியதாயிற்று. அவர் தானே கட்டிய பொன் முலாம் பூசப்பட்ட பளிங்கு மாளிகையில் காவலில் வைக்கப்பட்டார். அங்கிருந்தவாறே அரசர், அதுகாலை உருவாகிக்கொண்டிருந்த தாஜ்மஹாலைக் காணமுடிந்தது.

அவுரங்கசீப் இதற்குள் ஓரளவு வாரிசுரிமைப் போரில் வெற்றி பெற்றுவிட்டார் என்று சொல்லலாம். தாரா லாகூரிலிருந்து தப்பியோடிக்கொண்டிருந்தார். ஏனெனில், அங்கும் அவர் வெற்றி வீரரான சகோதரருக்கு எதிராகப் படைகளைத் திரட்ட முடியவில்லை.

லாகூரிலிருந்து தாரா குஜராத்துக்குப் புறப்பட்டார். ஆமதாபாத்தின் கவர்னர் தாராவை நல்ல முறையில் வரவேற்றார். நட்புறவு நல்கிய கவர்னர் அளித்த பத்து இலட்சம் ரூபாய்களைக்கொண்டு தாரா புதியதொரு படையைத் திரட்டி, அவுரங்கசீப்புடன் இறுதிப் போராட்டம் நடத்துவதற்குத் தயாரானார். ஜோதிபுரியைச் சேர்ந்த யஸ்வந்த் சிங் தாராவை அழைக்கவே, அவரும் ஆஜ்மீரை நோக்கி விரைந்தார். ஆனால், இந்த இராஜபுத்திரத் தலைவரை ஏற்கெனவே ஆம்பர் நாட்டுத் தலைவரான ஜெய்சிங்கின் துணையோடு அவுரங்கசீப் தன் பக்கத்தில் சேர்த்துக்கொண்டார் என்பதை அறிய, தாரா மிகவும் ஏமாற்றமடைந்தார். தப்பியோடிக்கொண்டிருந்த தாராவைச் சிறைப்பிடிக்கும்படி, புதிய அரசராகிய அவுரங்கசீப் ஒரு படையை அனுப்பினார். ஆஜ்மீருக்கு அருகேயுள்ள தியோரேய் என்ற கணவாயில் தாரா போர்புரியவேண்டியதாயிற்று. இங்கே மீண்டும் தாரா, தோல்வியுற்றுத் தப்பியோடிக்கொண்டிருந்தார். அவர் திரும்பவும் ஆமதாபாத்திற்குச் சென்றார். ஆனால், இப்பொழுது அதன் கவர்னர் அவரைத் தன் நகரத்துக்குள் அனுமதிக்க மறுத்துவிட்டார். ஆப்கானிஸ்தானத்திற்கு ஓடுவதைத் தவிர தாராவுக்கு வேறு வழியில்லை. மாலிக் ஜுவான் என்ற பலுஸித் தலைவரிடம் தாரா டாதர் என்ற இடத்தில் தஞ்சம் புகுந்தார். இந்தத் தலைவரை ஒருசமயம் தாரா ஷாஜஹானின் கோபத்திற்கு இரையாகாமல் காப்பாற்றியிருந்தார். தாராவின் மனைவியான நாதிரா பேகம் தன் கணவரின் துன்பத்திலும் வெகு உண்மையாகப் பங்கு பெற்றாள். ஆகையால், அவர் மிகவும் பேரபாயம் சூழ்ந்த நிலையில் தப்பியோடிக்கொண்டிருந்த போதும் கணவனைப் பிரிந்தாளில்லை. இதன் பின்னர் நாதிரா பிணியுற்று டாதரில் இறந்தாள். அவள்மீது எல்லை கடந்த அன்பு கொண்டிருந்த இளவரசர் தாரா, மனைவியை இழந்த கவலை காரணமாக இறந்துவிடும் நிலையில் இருந்தார். மாலிக் ஜுவான், இளவரசர் தாராவை வஞ்சகமான முறையில் அவுரங்கசீப்பின் ஆட்களுக்குக் காட்டிக்கொடுத்துவிட்டான். தாராவையும் அவருடைய இரண்டாவது மகனாகிய ஸிப்பீர் ஷிகோவையும் சிறைப்பிடித்து, டெல்லிக்கு அனுப்பி, 1659ஆம் ஆண்டு செப்டம்பர் திங்கள் முதலாம் நாள் அவுரங்கசீப்பிடம் ஒப்படைத்தார்கள். அவுரங்கசீப் இதனால் பெருமகிழ்வு கொண்டார். அழுக்கடைந்த ஆடைகளை யுடுத்தி, தன் மூத்த சகோதரனை சுத்தமில்லாத ஒரு யானை மீதேற்றி, டெல்லியின் தெருக்களின் வழியாகப் பவனியாகக் கொண்டுபோய், இருட்டறையில் தள்ளினார். இளவரசர் தாராவுக்கு வழங்க வேண்டிய தண்டனையைப்பற்றி அவுரங்கசீப்பின் அரசவையில் கருத்து வேறுபாடு நிலவியது. தானிஷ்மாண்ட்கான் என்பவர் தாராவுக்கு உயிர்ப்பிச்சை அளிக்கவேண்டுமென்றார். ஷெயிஸ்டகானும் தாராவின் சகோதரியான ரோஷனாராவும், தாரா ஒரு காபிர் என்ற

காரணத்தால் அவருக்கு மரணதண்டனை விதிக்கவேண்டுமென்றார்கள். சமயத் துரோகக் குற்றத்திற்காக தாராவை விசாரிக்கும்படி ஒரு சிறப்பு விசாரணைக் குழு அமைக்கப்பட்டது. இதற்குப் பெரிய முஸ்லீம் சமயத் தலைவர்கள் தலைமை தாங்கினார்கள். தாரா குற்றஞ் சாட்டப்பட்டு சிரச்சேதம் செய்யப்பட்டார். கார்வாலில் தஞ்சம் புகுந்திருந்த தாராவின் மூத்த மகன் சுலைமான் ஷுக்கோ கைப்பற்றப் பட்டு, டெல்லிக்குக் கொண்டுவரப்பட்டு, குவாலியர் கோட்டையில் சிறையில் வைக்கப்பட்டான். சிறிது சிறிதாக நஞ்சை ஏற்றி சுலைமானைக் கொன்றார்கள். அவுரங்கசீப்பின் அடுத்த சகோதரராகிய ஷுஜா, பகதூர்பூர் போருக்குப்பின்னர் மாங்கீருக்குத்தப்பியோடினார். ஆனால், உத்தரப் பிரதேசத்தில் உள்ள காஜ்வா என்ற இடத்தில் அவுரங்கசீப் மீண்டும் ஷுஜாவைத் தோற்கடித்தார். ஷுஜா வங்காளத்திற்குத் தப்பியோடி அங்கிருந்த அரக்கானுக்குச்சென்றார். மெக்குகள் என்ற மலைக்குடிகள் ஷுஜாவைக் கொன்றனர். டெல்லிக் கோட்டையில் காவலில் வைக்கப்பட்டிருந்த அவுரங்கசீப்பின் இளைய சகோதரராகிய முராது கொல்லப்பட்டார். இவ்வாறு அவுரங்கசீப் நாட்டின் தனிப்பெரும் அரசராகிவிட்டார்.

## ஷாஜஹானின் இறுதி நாட்கள், 1666

ஷாஜஹான் ஆக்ரா கோட்டையில் ஷா பூர்ஜ் என்ற மாளிகையில் எட்டாண்டுக் காலம் கைதியாக வாழ்ந்தார். சிறையில் அவருக்கு சகல வசதிகளும் அனுமதிக்கப்பட்டிருந்தபோதிலும், அவருடைய அபிமானத்திற்குரிய மகளான ஜஹானாராவின் பணிவிடை இருந்த போதிலும், ஷாஜஹானின் நடவடிக்கைகள் இரகசியமாகக் கவனிக்கப்பட்டுவந்தன. வெளியார்களுடன் அவர் எவ்விதத் தொடர்பும் வைத்துக்கொள்வது தடைசெய்யப்பட்டது. யாருடனும் அரசர் கடிதப் போக்குவரவும் செய்யக்கூடாது. அவுரங்கசீப்பின் கையாட்களின் முன்னிலையில்தான் அவர் யாருடனும் பேசுவதற்கும் அனுமதிக்கப்பட்டார். ஷாஜஹானிடமிருந்த பொன் நகைகளையும் அபூர்வ செல்வங்களையும் அவுரங்கசீப் கவர்ந்துகொள்ள முயன்றார். ஆனால், ஷாஜஹான் அதற்கு இடங்கொடுக்கவில்லை. தந்தைக்கும் மகனுக்கும் இடையே மிகக் கசப்பான கடிதப் போக்குவரவு நடந்தது. அவுரங்கசீப் தந்தையைத் தனது மகன் தாராவுக்கு அதிக சலுகை காட்டியதாகக் குற்றம் சாட்டினார். கடவுளின் விருப்பத்திற்குப் பணிந்து போகும்படியும் மகன் தந்தைக்கு அறிவுரை கூறினார். சிறையில் வாடிய முன்னாள் பேரரசர், தந்தைப் பாசமற்ற தனது மகன் காட்டிய குற்றச்சாட்டுகளையும் நிந்தனைகளையும் கேட்டு மிகவும் புண்பட்டார். கோபங்கொண்ட அரசர், அவுரங்கசீப்பைத் திருடன் என்றும்,

அரியணையை வஞ்சகமாக அபகரித்துக்கொண்டவனென்றும் பழித்தார். அவனை வெள்ளை மனம் இல்லாத கபட நெஞ்சன் என்றும் கூறினர். தாராவையும், முராதையும், அத்துடன் இன்னும் அவப்பேறுபெற்ற ஷுஜாவையும் அவுரங்கசீப் கொலைசெய்ததைக் கேட்ட அரசருக்கு, வெந்த புண்ணில் வேலைப் பாய்ச்சியது போலிருந்தது. ஷாஜஹான் தனது எஞ்சிய காலத்தைப் பிரார்த்தனையிலும் தியானத்திலும் செலவிட்டார். 1666ஆம் ஆண்டு ஜனவரி திங்களில் அவர் பிணியுற்று, தனது கடைசி மரணசாசனத்தை எழுதி முடித்துவிட்டு, ஜனவரி 31ஆம் நாளன்று காலமானார். அப்போது அவருக்கு 74 வயது. அவர் தனது இறுதிக்கணம்வரையும் தாஜ்மஹாலைப் பார்த்துக்கொண்டே காலமானார் என்று சொல்லப்படுகிறது. ஓர் அரசருக்குரிய மரியாதைகளோடு ஷாஜஹானின் ஈமக்கிரியைகளை நடத்துவதற்கு அவுரங்கசீப் அனுமதிக்கவில்லை. அவருடைய சவப்பெட்டியை அலிகளும் கீழ்தரப் பணியாட்களும் சுமந்து சென்றார்கள். ஆக்ராவில் தாஜ்மஹாலில் மும்தாஜ்மஹாலின் சமாதிக்கு அருகே ஷாஜஹானின் உடலும் தகனம் செய்யப்பட்டது.

## ஷாஜஹானின் ஆளுமையும் குணநலன்களும். ஷாஜஹானின் ஆட்சி ஒரு பொற்காலமா?

ஷாஜஹானின் குணநலன்களையும் சாதனைகளையும் பற்றி வரலாற்றறிஞர்கள் முரண்பட்ட கருத்துகளைக் கூறுகின்றனர். ஷாஜஹான், அரசன் என்ற முறையிலும், மனிதன் என்ற முறையிலும் வெற்றிபெறவில்லை என்றும், அவரது அரசவையின் வியக்கத்தக்க படாடோபமும், அவர் எழுப்பிய தாஜ்மஹால்போன்ற கட்டடங்களின் குறிப்பிடத்தக்க அழகும் இந்தியாவின் இடைக்கால வரலாற்றில் ஷாஜஹானின் யுகத்தை ஒரு பொற்காலமெனத் தவருக எண்ணத் தூண்டின என்று காலஞ்சென்ற அறிஞர் வி. ஏ. ஸ்மித் என்பார் குறிப்பிட்டுள்ளார். ஷாஜஹான் காலத்திய இந்திய வரலாற்றறிஞர்களும் சில ஐரோப்பிய யாத்திரிகர்களும் அவரை வெற்றியுடன் ஆட்சிசெய்த மாமன்னராகக் கருதுகின்றனர். அவர் பொதுமக்களைத் தனது குழந்தைகளைப்போல் கருதித் தந்தைக்குரிய அன்புடன் ஆட்சி செய்தாரென்றும், அவர் காலத்தில் நாடு வளம் பெற்றிருந்ததென்றும், மக்கள் மகிழ்வோடு வாழ்ந்தார்களென்றும் அவர்கள் குறிப்பிடுகிறார்கள். இந்த இருவிதக் கருத்துகளுமே முற்றிலும் உண்மையானவை அல்ல.

ஷாஜஹானின் ஆளுமையையும் குணச்சிறப்புகளையும் இரு கோணங்களிலிருந்து காணமுடியும். அவர் ஓரளவு தாராளக் கொள்

கையும் முற்போக்கும் உடையவர். எனவே, அந்த முறையில் அவரை அவருடைய தந்தையாருக்கும் பாட்டனுருக்கும் உண்மை யான வாரிசு என்று கூறலாம். இதற்கு மாருக, சில அம்சங்களில் ஷாஜஹானுக்கும் அவருடைய மகனுகிய அவுரங்கசீப்பிற்கும் சில ஒற்றுமைகள் இருந்தன. இந்த முறையில் அவர் அவுரங்கசீப்பின் சில கொள்கைகளுக்கு முன்னேடி என்று கூறலாம். இவ்வகையில் அவர் ஒரு பிற்போக்குவாதி என்பதில் ஐயமில்லே. ஷாஜஹான் கடமையுணர்ந்த மகனல்லர் என்று ஸ்மித் கூறுவது மிகப் பொருத்த மானது. அவர் தனது தந்தைக்கு எதிராகக் கிளர்ச்சி செய்து பல ஆண்டுகளாக அதனைத் தொடர்ந்து நடத்திக்கொண்டிருந்தார். ஆனுல், இத்தகைய ஒரு செயலில் அவரைத் தூண்டி ஈடுபட வைத்தது ஷாஜஹானின் செவிலித்தாயாராகிய நூர்ஜஹான் என் பதை மறந்துவிடக்கூடாது. நூர்ஜஹான், நான் ஏற்கெனவே கூறிய படி, தனது மருமகனுகிய ஷாரியாருக்காக முகலாய அரியணையைக் காப்பாற்றித்தருவதில் கவனமும் உறுதியும் கொண்டிருந்தாள். மேலும், தங்களின் தந்தையார்களுக்கு எதிராக முகலாய இளவரசர் கள் புரட்சி செய்வது ஏறத்தாழ மரபொழுக்கம்போல் ஆகிவிட்டது. எனவே, இந்தக் குற்றத்திற்காக ஷாஜஹானைமட்டும் தனிப்பட்ட முறையில் குறைகூறுவது நீதியாகாது. ஷாஜஹான் பேராவலும் உற்சாகமும் உள்ள ஓர் இளவரசர். அவர் தனது தந்தைக்குப் பின்னர் அரியணையேறவேண்டுமென்று முடிவு செய்திருந்த காரணத் தால், அவருடைய நோக்கத்தை அடைய எந்த வழிவகைகளையும் பின்பற்றத் தயாராக இருந்தார். மேலும், ஷாஜஹான் உண்மை யான கணவர் என்ற முறையிலும் புகழ்ச்சிக்கு உரியவரல்லர் என்று ஸ்மித் கூறுவதும் சரியன்று. அவருடைய அபிமானத்திற்குரிய மனைவி மும்தாஜ்மஹால் இறந்தபின் ஷாஜஹான் தன்னை இழிவுபடுத்திக் கொண்டார் என்று ஸ்மித் குறிப்பிடுகிருர். ஆனுல், பொதுவாக முகலாய இளவரசர்களின் நடத்தையையும், பலதாரப் பழக்கம் அவர் களிடமிருந்த காரணத்தால் தாம்பத்திய அன்பில் அவர்களிடம் விசுவாசத்தை எதிர்பார்க்க முடியாது என்ற கருத்தையும் மேற் சொன்ன குற்றச்சாட்டைச் சுமத்துவோர் மறந்துவிடுகிருர்கள். எனினும், மும்தாஜ்மஹாலிடம் ஷாஜஹான் இருபது ஆண்டுகள் விசுவாசமாய் இருந்தார் என்பதை அவர் சார்பில் நற்பண்பாகக் குறிப்பிட வேண்டியது அவசியமாகும். தந்தை என்ற வகையில் ஷாஜஹான் தனது மூத்த மகனுகிய தாராவுக்கு அளவுகடந்தசலுகை களைச் செய்ததோடு, குடும்பத்தைக் கட்டுப்பாட்டுடன் அடக்கி யாளத் தவறிவிட்டார். தனி வாழ்வில் ஷாஜஹான் ஏழைகளுக்கும் துன்பப்படுவோர்களுக்கும் பொதுவாக அன்பும் இரக்கமும் காட் டினுர். ஆனுல், அவரது முன்னேர்களாகிய பாபர், அக்பர், ஜஹாங்கீர் ஆகியோரின் சிறப்பியல்புகளாக விளங்கிய

நட்பும் பரிவும் ஆகிய நற்பண்புகள் ஷாஜஹானிடம் துலங்க வில்லே. அவர்களெல்லாம் ஒரு நண்பனேயோ, உறவினரையோ இழந்துவிட்டால், கண்ணீர் வடித்து அழுவார்கள். பல நாட்களுக்கு உணவைக்கூடத் தொடமாட்டார்களாம். ஷாஜஹானின் முப்பாட்ட ஞராகிய ஹுமாயூன் நன்றிகெட்ட தமது சகோதரர்களைக்கூடத் தண்டிக்கத் தயங்கியபோது, ஷாஜஹானே, தமக்கு எவ்வித ஆபத்தும் இருக்கக்கூடாது என்பதற்காகத் தமது குடும்பத்திலுள்ள குற்றமற்ற ஆண் உறவினர்களையெல்லாம் கொலை செய்தார். தந் நலமான இந்தச் செயல்களையெல்லாம் நீக்கிவிட்டு நோக்குமிடத்து, ஷாஜஹானிடம் நன்ருகப் பண்பட்ட ஒரு சான்ருேனிடம் இருக்கக் கூடிய நற்பண்புகள் யாவும் இருந்தன. அவர் கல்விகேள்விகளில் சிறந்து, பல ஆற்றல்களைப் பெற்று விளங்கினுர். அவர் பிறரைப் புண்படுத்தாத முறையில் உரையாடுவார். பிறர் கூறும் கருத்து களைக் கேட்பார். இனிமையான போக்கும் இராஜ கம்பீரமும் அவரிடம் மிளிர்ந்தன. இசையிலும், ஓவியம் தீட்டுவதிலும், யாவற் றிற்கும் மேலாய்க் கட்டடக் கலையிலும், இன்னும் பல நுண்கலைகளி லும், இலக்கியத்திலும் அவருக்கு ஆர்வம் அதிகம். அவரது பாட்ட ஞரான அக்பரைப்போல, ஷாஜஹான் இலக்கிய மேதைகளையும் கலைஞர்களையும் ஆதரித்தார். அவரது அரசவையிலும் பாசறை யிலும் அவரை எப்போதும் கல்விமான்களும் அறிஞர்களும் சூழ்ந் திருப்பார்கள். அவர் பாரஸீக மொழியை மட்டும் அன்று; வட மொழியையும் இந்தியையும் ஆதரித்தார். 'ராஸ் கங்காதார்', 'கங்காலாஹ்ரி' என்ற நூல்களை எழுதிய ஜெகன்னுத பண்டிதர் என்பவர் ஷாஜஹானின் அவைக்களப் புலவராக இருந்ததாக, அரசவை வரலாற்று அறிஞராகிய அப்துல் ஹமீது லாஹெளரி என் பவர் கூறுகிருர். அரசர் இந்தப் புலவரின் கவிதைகளைக் கேட்டு மகிழ்வாரென்றும், அவருக்குப் பல பரிசுகளையும் சலுகைகளையும் வழங்குவாரென்றும் அவர் கூறுகிருர். இந்தியிலும் வடமொழியிலும் ஒத்த புலமை பெற்றிருந்த காசிநகர்ப் புலவரான கவீந்திர ஆச்சார்ய சரஸ்வதி என்பாரும், இன்னும் பல வடமொழி அறிஞர்களும் ஷாஜ ஹானின் அரசவையை அலங்கரித்தார்கள். அரசரின் ஆதரவினுல் அவர்கள் தகுதிவாய்ந்த அரும்பெரு நூல்களை எழுதினுர்கள். இந்திக் கவிதை புறக்கணிக்கப்படவில்லை. 'சுந்தர் ஸ்ரிங்கர்', 'சிங்காசம் பட்டிஸி', 'பாராம்ஸா' போன்ற நூல்களின் புகழ்பெற்ற ஆசிரியரும் மகாகவிராயர் என்ற சிறப்புப் பெயர் பெற்றவருமான சுந்தரதாஸ், ஷாஜஹானின் அந்தரங்க நண்பரும் ஆலோசகருமாக விளங்கினுர். அக் காலத்தின் தலைசிறந்த இந்திக் கவிஞரான சிந்தா மணி என்பவரும் அரசரால் ஆதரிக்கப்பட்டார். ஷாஜஹானுக்கு சோதிடத்தில் நம்பிக்கையுண்டு. எனவே, அரச குடும்பத்தினரின் ஜாதகங்களை எழுதவும், கலியாணங்கள், படையெடுப்புகள், மற்றும்

முக்கியமான நிகழ்ச்சிகளுக்கான சுபலக்னங்களைக் குறிப்பிடவும் பல இந்து சோதிடர்கள் நியமிக்கப்பட்டிருந்தார்கள். முகலாயர்கள் நீண்ட நாள் பின்பற்றிவந்த வழக்கமான இந்து திருவிழாக்களாகிய வசந்த விழாவையும் தசராப் பண்டிகையையும் ஷாஜஹான் கொண்டாடிவந்ததோடு, அரசரைப் பொன்னுக்குச் சம எடையாக நிறுக்கும் துலாதான வழக்கத்தையும் ஷாஜஹான் தொடர்ந்து நடத்திவந்தார். சில வேளைகளில் பொன்னுக்குப் பதிலாக வெள்ளி அல்லது பிற விலையுயர்ந்த பொருள்களும் பயன்படுத்தப்பட்டு, அவை அந்தணர்களுக்கும் முஸ்லீம் துறவிகளுக்கும், பிற சமயத் துறவிகளுக்கும் பகிர்ந்தளிக்கப்படும். இந்துக்களை உயர்ந்த பதவி களுக்கு நியமிக்கும் மரபையும் ஷாஜஹான் விட்டுவிடாமல் தொடர்ந்துவந்தார். இதில் ஷாஜஹான் தமது தந்தையும் பாட்டனாரும் வகுத்துச் சென்றிருந்த வழியைப் பின்பற்றினார்.

ஷாஜஹான் தமது தந்தையாரைவிடச் சிறந்த போர் வீரராகவும் படைத்தலைவராகவும் விளங்கினார். நல்ல உடலுரமும் மனவுறுதியும் கொண்ட ஷாஜஹான், தாமே படையெடுப்புகளைத் திட்டமிட்டு, தமது தளர்ந்த பருவம் வரைக்கும் படைகளை நடத்தியும் சென்றிருக்கிறார். அவர் முகலாயப் படையைத் திருத்தி அமைத்து, அதனை நல்ல முறையில் போரிடும் பேராற்றல் மிக்கதாக மாற்றினார். எனினும், அவர் பாரசீகத்தின் ஷா மன்னரிடமிருந்து காந்தாரைக் கைப்பற்ற முடியவில்லை. அந்த எல்லைப்புற அரணைக் கைப்பற்ற ஷாஜஹான் மூன்று தடவைகள் எடுத்துக் கொண்ட முயற்சிகளும் பெரு ஏமாற்றத்தையும், அபரிமிதமான மனிதர்களையும், பொருளையும், நற்பெயரையும், தியாகம் செய்த பேரிழப்பையுமே விளைவுகளாகத் தந்தன. அதுபோலவே அவரது மைய ஆசியப் படையெடுப்பும் இந்தக் கதியைத்தான் அடைந்தது.

எல்லாவிதப் படைக்கலன்களும் முறைகளும் இருந்தபோதிலும், ஷாஜஹானின் உற்சாகமும் பேரவாவும் துணை இருந்தும், முகலாயப் பேரரசின் படைத்திறம், ஷாஜஹான் காலத்தில், அக்பர் காலத்தில் இருந்ததைவிட நலிவுற்ற நிலையில் இருந்ததாகக் கூற வேண்டும்.

இந்தியாவில் இடைக்கால வரலாற்றில் ஷாஜஹானின் காலம் ஒரு பொன் யுகம் என்று கூறப்பட்டிருக்கின்றது. ஆனால், இந்தப் புகழ் ஒரே ஒரு துறையைப் பொறுத்த மட்டிலும்தான் உண்மையாகும். அதாவது, கலைத்துறை; அதிலும் குறிப்பாகக் கட்டடக் கலைத்துறை எனக் குறிப்பிட வேண்டும். ஷாஜஹானின் கட்டடங்கள் இந்தியாவில் முகலாயக் கட்டடக் கலை வளர்ச்சியின்

உச்ச நிலையைப் பிரதிபலிக்கின்றன. பளிங்குக்கல் மாளிகைகளைக் கொண்ட செங்கோட்டையும், டெல்லியிலுள்ள ஜும்மா மசூதியும், முத்து மசூதியும், திவானி ஆம், திவானிகாஸ் என்ற மண்டபங்களும், இன்னும் ஆக்ரா கோட்டையில் உள்ள அழகான கட்டடங்கள் சிலவும், புகழ்பெற்ற தாஜ்மஹாலும், இன்னும் பல இடங்களில் உள்ள பெருங் கட்டடங்களும் இந்தோ – முஸ்லீம் கலையின் சிறந்த எடுத்துக்காட்டுகளாகும். மனத்தைக் கவரும் அழகுள்ள மயிலாசனத்தையும் ஷாஜஹான் அமைத்தார். அதன்மேலிருந்த குடை, விலையுயர்ந்த கற்கள் பதிக்கப்பட்ட பன்னிரு தூண்களின் மேல் நிறுத்தப்பட்டிருந்தது. இதனைக் கட்டி முடிக்க ஏழாண்டுகளாயின. இதைத் தவிர, உலகப் புகழ்பெற்ற கோஹினூர் வைரமும் ஷாஜஹானிடம் இருந்தது. ஷாஜஹான் இசைக் கலையைப் பெரிதும் ஆதரித்தார். இதில் வாய்ப்பாட்டும், கருவிகளைக்கொண்டு மீட்டும் இசையும் இடம் பெற்றன. ஓவியக் கலையை வளர்ப்பதில் சிறந்த கவனம் செலுத்தப்பட்டது. ஆனால், கலைச்சுவையிலும் சித்திரங்களை வரைவதில் உள்ள தனித் தன்மையிலும் நலிவு காணப்பட்டதாகத் திறனாய்வாளர்கள் கூறுகிறார்கள். பாரஸீக, இந்தி இலக்கியங்களைப் படைப்பதில் பெரு முன்னேற்றம் காணப்பட்டது. ஆனால், பாரஸீக மொழியைப் பொறுத்த வரையில் அபுல் ஃபாஸலைப் போலவும், இந்தியில் சூர்தாஸ், துளசிதாஸரைப் போலவும் மிகச் சிறந்த இலக்கிய மேதைகள் ஷாஜஹானின் காலத்தில் இருக்கவில்லை. வடமொழியும் அரசரின் ஆதரவைப் பெற்று முன்னேற்றம் அடைந்தது. இவ்வாறு ஷாஜஹானின் ஆட்சி, இலக்கியத்துக்கும் கலைக்கும் குறிப்பிடத்தக்க வகையில் பெருந் தொண்டாற்றியது. ஆனால், கட்டடக் கலையைப் பொறுத்தவரையில், ஷாஜஹானின் ஆட்சி காலம், அதற்கு முந்திய காலங்களைவிடச் சிறப்பாக இருந்ததென்றாலும், ஓவியக் கலையைப் பொறுத்தவரையில் ஜஹாங்கீரின் காலத்தையும், பாரசீக, இந்தி, வடமொழி இலக்கியங்களையும், இசையையும், சிற்பத்தையும் பொறுத்தவரையில் அக்பரின் காலத்தையும் மிஞ்சிவிடவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

ஷாஜஹான் திறமையுள்ள நிர்வாகியும் அரசியல் நுண்ணறிவாளருமாக விளங்கினார். அவரிடம் புதியன புனையும் திறமை இல்லாவிடினும், பழையனவற்றைப் பேணிக் காக்கும் ஆற்றல் உண்டு. அவர் நிர்வாகத்தை, அதிலும் குறிப்பாக மான்சப்தாரி முறை என்று அழைக்கப்பெற்ற படை நிர்வாகத்தை ஒழுங்குமுறையாக அமைக்க முயன்றார். மான்சப்தார்களின் உயர்ந்த சம்பளங்களைக் குறைக்க முயன்று, அவரவர்களின் தகுதிக்கு ஏற்பக் குறிக்கப்பட்ட அளவு படையினர்களைத் தமது பணியில் வைத்திருக்குமாறு

வற்புறுத்தினர். இதில் ஷாஜஹான் பெரும் அளவிற்கு வெற்றி கண்டார். இந்தியாவில் ஜாகீர் உரிமையுள்ள ஒரு மான்சப்தார் அவருடைய தகுதிக்குக் குறிக்கப்பட்டுள்ள வீரர்களின் தொகையில் மூன்றில் ஒரு பங்காவது வைத்திருக்கவேண்டுமென ஒரு முக்கிய விதியை ஷாஜஹான் தமது ஆட்சியின் இருபதாம் ஆண்டில் வெளியிட்டார். இந்தியாவிற்கு வெளியில் ஜாகீர் உரிமையுள்ளவர், அவரது தகுதிக்கு என வகுக்கப்பட்ட வீரர்களின் தொகையில் நான்கில் ஒரு பாகம் வைத்திருக்கவேண்டும். பின்னர்க் குறிப்பிடப் பட்ட வகையினர்களைப் பொறுத்தவரையிலும், வீரர்களின் தொகை ஐந்தில் ஒரு பங்குக்கும் குறைக்கப்பட்டது. ஷாஜஹான் ஆட்சியின் கீழ் ஓர் அதிகாரிக்கு வகுக்கப்பட்டிருந்த மிக அதிக அளவு மான்சப் பின் தரவரிசை 9,000 ஸாட்டும் 9,000 ஸாவரும் ஆகும். அரசரின் மாமனாராகிய ஆஸப்கான் இந்த வரிசையைப் பெற்றிருந்தார். பிற இளவரசர்கள் இதற்கும் அதிகமான வரிசையைப் பெற்றிருந்தார்கள். எடுத்துக்காட்டாக, தாராவின் மான்சப் 40,000 ஸாட்டுகளும் 2,000 ஸாவர்களும் ஆகும். விளைச்சலில் மூன்றில் ஒரு பங்கை நில வரியாகப் பெற்றுவந்ததை இரண்டில் ஒரு பங்காக உயர்த்தியதன் விளைவாக, ஷாஜஹான் ஆண்டில் 400 மில்லியன் ரூபாய்களை நில வரியாகப் பெற்றார். அவர் அக்பரின் ஸப்தி நிலவரி முறையைக் கைவிட்டுவிட்டார். மேலும், பேரரசின் நிலவரியில் பத்தில் ஏழு பாகங்களைக் குத்தகைக்கு விட்டார். இதனால் அரசினரின் நேரடி அதிகாரத்திலிருந்த கால்ஸா என்ற அரசின் நிலத்தின் அளவு குறைக்கப்பட்டது. உழவர்களின் வரிப்பளு பெரிய அளவில் அதிகரித்தது. அவர்கள் தமது மொத்த விளைச்சலில் இரண்டில் ஒரு பங்கை நிலவரியாகக் கொடுக்கவேண்டியிருந்ததோடுமட்டு மல்லாமல், அவர்களுக்கு உரிமையான எல்லா நிலங்களுக்கும் வரி செலுத்த வேண்டிய கடமை இருந்தது. முன்பெல்லாம் பயிர் செய்யப்பட்ட நிலத்திற்கு மட்டுமே நிலவரி செலுத்திவருவது வழக்கம். எனவே, நிலத்தை உழுது பயிரிட்டுவந்த உழவர் பெரு மக்களின் நிலை, அக்பர் அல்லது ஜஹாங்கீர் காலத்தில் இருந்ததை விடத் தாழ்நிலையடைந்துவிட்டது. உழவர்கள் மொத்த மக்கள் தொகையில் நூற்றுக்கு எழுபத்தைந்து பேர் என்ற விகிதத்தில் இருந்தனர்.

தாமே நேரில் நீதி வழங்குதல் என்ற தமது முன்னோர்களின் மரபொழுக்கத்தை ஷாஜஹான் விட்டுவிடவில்லை. பிறரைத் துன்புறுத்தியவர்களைத் தண்டிப்பதிலும் சீரான நீதி வழங்குவதிலும் ஷாஜஹான் கண்டிப்பாக இருந்தார். சமயத்துறையில் ஷாஜஹான் சிறிதுவைதீகராக இருந்தபோதிலும், உழவர்கள்மேல் வரிப்பளுவைச் சுமத்தியபோதிலும், பொதுமக்களிடையே அவருக்குச் செல்வாக்கு

அதிகம் இருந்தது. கடின உழைப்பிற்கும், தமது நிர்வாகக் கடமைகளை நிறைவேற்றுவதில் அதிகக் கவனத்திற்கும், கடமையுணர்ச்சிக்கும் பெயர்பெற்ற ஷாஜஹான், அதிகாலையில் துயிலெழுந்து, சூரிய உதயத்தில் ஜரோக்கா தரிசனத்தின்மூலம் மக்களுக்குக் காட்சியளித்து, அரசின் காரியங்களை நிறைவேற்றுவதில் அக்பரைப் போன்று நாளின் பெரும் பகுதியைச் செலவிட்டார். 'முகலாய இந்தியாவைப்பற்றிய ஆராய்ச்சிகள்' என்ற நூலில், வரலாற்று அறிஞராகிய சர் ஜாதுநாத் சர்க்கார் அவர்கள், ஷாஜஹானின் அன்றாட அலுவல்களைத் தெளிவாக விவரிக்கிறார். இதனால் பேரரசர் படாடோபத்திலும் வாழ்வின் சுகங்களிலும் நாட்டமுடையவராக இருந்தபோதிலும், கடின உழைப்பிற்குச் சளைக்காதவர் என்பதையும் இந்த விவரங்கள் காட்டுகின்றன. எனினும், அவரது ஆட்சி காலத்தில் பிற்போக்கின் விதைகள் ஊன்றப்பட்டன. இவை பிற்காலத்தில் முகலாய அரச பரம்பரையின் நலிவிற்கும் பேரரசின் சிதைவிற்கும் காரணங்களாயின. ஷாஜஹானின் சமய வெறியும் சமயப் பொறையின்மையும் அவுரங்கஸீப்பின் பிற்போக்கான ஆட்சிக்கு வழிகோலின. இஸ்லாம் சமயத்தின் இணக்க மறுப்பாளர்களை அவர் துன்புறுத்தியதால், முகலாயர்களின் அரசவையில் தாம் விரும்பப்படவில்லை என ஷியாக்கள் கருதும்படி வழிசெய்தது. பொருளின்மேல் அவர் கொண்ட பேராசை மக்களின் சுமைகளை அதிகரித்து, மக்களிடையே துன்பத்தைப் பெருக்கியது. பரிசுகளைப் பெற்றுக்கொள்வதில் அரசருக்கு இருந்த ஆசை, மறைமுகமான இலஞ்ச ஊழல் என்னும் பெருந் தீங்கிற்கு வழிவகுத்தது. நாஸார்களையும் பரிசுகளையும் வழங்குதல் அரசவையிலும் முகாம்களிலும் மட்டுமன்றி, பேரரசின் பிரபுக்களின் வீடுகளிலும் அதிகாரிகளிடமும் சாதாரணமாகப் பழக்கமாகிவிட்டது. இது நிர்வாகத்தில் இலஞ்சம் மலிந்துவிடக் காரணமாக இருந்தது. ஆடம்பரத்திலும் வீண் வெளிப்புறக் கோலங்களிலும் அவருக்கு இருந்த பற்றின் காரணம், கொடுக்க மனமில்லாத பொதுமக்களிடமிருந்தும் பிரபுக்களிடமிருந்தும் அவர் பணத்தை வல்லந்த முறையில் வாங்கும்படி தூண்டியது. சிற்றின்பத்தில் ஷாஜஹானுக்கு இருந்த நாட்டங்கள் பொதுவாழ்விலும் தனிவாழ்விலும் மக்களுக்கு துர்மாதிரிகையாக விளங்கியது. இதனால் பொது அறவாழ்வின் தரம் இறங்கியது.

## Primary Sources


(a) *Persian*

1. ' Padshah-nama ' (Ms) by Mirza Aminai Qazisni.
2. ' Padshah-nama ' (Ms) by Jalal-ud-din Tabatabai.
3. ' Padshah-nama ' (Ms) by Muhammad Waris.
4. ' Padshah-nama ' (Ms) by Muhammad Sadiq.
5. ' Padshah-nama ' (Persian Text, Published by R. A. S. Bengal in Bibliotheca Indica Series 1867) by Abdul Hamid Lahauri.
6. ' Amal-i-Salih ' (Persian Text, published in Bibliotheca Indica Series, Calcutta) by Muhammad Salih Kambu.
7. ' Zafarnama-i-Alamgir ' (Ms) by Mirkhan.
8. ' Tuzuk-i-Jahangiri ' translated into English in 2 Vols. by Rogers and Beveridge.
9. ' Iqbal nama Jahangiri ' (Persian Text, published in Bibliotheca Indica Series, Calcutta) by Mutamid Khan.
10. ' Makhzan-in Afghana ' (Ms) by Niamat-ullah, translated into English by B. Dorn in History of the Afghans, 1829.

(b) *European languages*

1. ' English Factories in India, ' edited by W. Foster (Relevant Vols.).
2. ' The Travels of Peter Murdy, ' edited by Richard Temple.
3. ' The Travels of Sebastian Manrique, ' edited by C. E. Luard and H. Hosten, 1926-27.
4 ' Travels in the Mughul Empire ' by Francis Bernier translated into English by Constable.
5. ' Travels in India ' by Jean Baptiste Tavernier, translated into English by V. Ball.


## Modern Works


1. ' History of Shahjahan of Delhi ' by Banarsi Prasad Saxena, 1932.
2. ' From Akbar to Aurangazeb ' by W. H. Moreland, 1923.
3. Cambridge History of India, Vol. IV, Chapter VII.

# 8. அவுரங்கசீப் (1658—1707)

## இளமைப் பருவம்

முகையதீன் முகமது அவுரங்கசீப், 1618ஆம் ஆண்டு நவம்பர் 3ஆம் நாள், உஜ்ஜயினிக்கு அருகேயுள்ள டோஹாத் என்ற இடத்தில் பிறந்தார். அதுகாலை அவரது பாட்டனாராகிய ஜஹாங்கீர் தக்காணத்திலிருந்து ஆக்ராவிற்குத் திரும்பிக்கொண்டிருந்தார். அவுரங்கசீப்பின் தந்தையார் செய்த புரட்சியின்போது, அவர் பல இன்னல்களை அனுபவித்ததோடு, அவரது மூத்த சகோதரராகிய தாராவுடன் நூர்ஜஹானிடம் பணயமாக அனுப்பப்பட்டார். இதன் பின்னரே ஷாஜஹான் சரணடைந்து, மன்னிப்புப் பெற்றார். இத்தகைய தொல்லைகளின் காரணமாக, அவுரங்கசீப்பின் முறையான கல்வி அவரது பத்தாவது ஆண்டில் தான் தொடங்கியது. அவர் மிகத் திறமையுள்ள ஆசிரியர்களிடம் ஒப்படைக்கப்பட்டார். அவர் அதிக அறிவுக்கூர்மையும் ஆர்வமும் உள்ளவராக இருந்தார். இளவயதில் புனித குரானையும் ஹாதீஸையும் கற்றுத் தேர்ந்தார். அராபிய, பாரசீக மொழிகளில் அவர் புலமை பெற்றதோடு, துருக்கி, இந்தி ஆகிய மொழிகளையும் கற்றுக்கொண்டார். அவர் பெரும் ஆர்வத்துடன் மறைநூல் படிப்பில் ஆழ்ந்துவிட்டதால், ஓவியம், இசை முதலிய நுண்கலைகளில் ஈடுபடவில்லை. அவரது கல்வித் திட்டத்தில் இடம் பெற்றிருந்த படைப்பயிற்சியும் புறக்கணிக்கப்படவில்லை. எனவே, வெகு விரைவில் அவுரங்கசீப் சிறந்ததொரு போர்வீரரானார். 1634ஆம் ஆண்டின் இறுதியில் அவர் 10,000 ஸாட், 4,000 ஸாவர் தகுதி பெற்ற மான்சப்தாராக நியமிக்கப்பட்டார். இதன் பின்னர், அவர் ஆர்சா நாட்டு ஜுஜார்சிங் என்ற கிளர்ச்சிக்காரருக்கு எதிராகப் பந்தல்கண்டு நாட்டுப் படையெடுப்பின் தலைவராக நியமிக்கப்பட்டார். இதுவே அரசியல் வெல்திறத்திலும் போரிலும் அவுரங்கசீப்பின் முதல் பட்டறிவாகும். இதனை அடுத்து அவர்

தக்காணத்தின் கவர்னராக நியமிக்கப்பட்டு, 1636 முதல் 1644 வரை அந்தப் பதவியை வகித்துவந்தார். இங்கு அவுரங்கசீப் சிறந்த வீரர், ஆட்சியாளர், அரசியல் வல்லுநர் என்று புகழ் பெற்ருர். 1637ஆம் ஆண்டு மே திங்கள் 18ஆம் நாளில் அவுரங்கசீப் பாரசீக அரசக் குடியின் உறுப்பினரான ஷா நாவாஸ் என்பாரின் மகளான தில்ராஸ் பானு பேகம் என்ற அம்மையாரைத் திருமணம் செய்து கொண்டார். 1644ஆம் ஆண்டு மே திங்களில் அவுரங்கசீப், அவரது மூத்த சகோதரரான தாராவுடன் கொண்டிருந்த கருத்து வேறுபாடுகளின் காரணமாகத் தக்காணத்தின் கவர்னர் பதவியை ராஜினுமா செய்யுமாறு வற்புறுத்தப்பட்டார். 1645 பெப்ரவரியில் அவர் மன்னிப்புப் பெற்று, குஜராத்தின் கவர்னராக நியமிக்கப் பட்டார். 1647-ல் பால்க் நாட்டின்மீது படையெடுக்கும்படி அனுப்பப் பட்டதுவரையிலும், அவுரங்கசீப் குஜராத் கவர்னராக இருந்தார். சிறந்த படைத்தலைவராக இருப்பதற்குத் தேவையான பண்புகளைப் பெற்றிருந்தும், அவுரங்கசீப் டிரான்ஸ் ஆக்ஸியாளு பகுதிகளை வெல்ல முடியவில்லை. ஆகவே, அவர் திரும்பவும் அரசவைக்கு அழைக்கப்பட்டு, முல்தானின் கவர்னராக நியமனம் பெற்று, 1648 முதல் 1652 வரை அந்தப் பதவியை வகித்துவந்தார். இந்தக் காலத்தில்தான் அவர் காந்தஹாரை வெல்லும்படி அனுப்பப்பட்டார். ஆனல், 1649-லும் 1652 லும் அவர் காந்தஹார் கோட்டையை முற்றுகை செய்தும், அதனைப் பிடிக்க முடியவில்லை. இதனுல் ஷாஜஹான் பெரும் எரிச்சல்பட்டு 1652-ல் அவுரங்க சீப்பையைத் தக்காணத்திற்கு மாற்றிவிட்டார். இவ்வாறு இளவரசர் அவுரங்கசீப் 1652 முதல் 1658 வரை இரண்டாவது தடவையாகத் தென் இந்தியாவின் வைஸ்ராயாகப் பதவி வகித்தார்.

கவர்னராகப் பதவி வகித்த காலத்தில் அவுரங்கசீப் மிக உயர்ந்த தரமான ஆட்சிமுறைத் திறமையும் கடமையுணர்ச்சியும் காட்டினுர். அதே நேரத்தில், தம் தந்தையாரின் அரசப் பட்டத்தைத் தாம் பெற்றுக்கொள்ள ஒரு வன்மையான கட்சியை அமைத்தலிலும் அதிக அக்கறை எடுத்துக்கொன்டார். அவர் சுன்னி வெறியுள்ளவ ராதலால், இந்துக்களிடம் வெறுப்புணர்ச்சி கொண்டிருந்தார். குறிப்பாக இராஜபுத்திரர்களை அவர் வெறுத்ததனுல், சமயப் பொறையின்மையினுல் அவர்களை இழிவுபடுத்தினர். தக்காணத்தில் அவுரங்கசீப் பீஜப்பூரையும் கோல் கொண்டாவையும் வெல்வதற்குத் தயாராக இருந்தார். இந் நிலையில்தான் ஷாஜஹானின் பிணியையும் மரணத்தையும்பற்றிச் செய்தி அவருக்குக் கிடைக்கவே, வாரிசுரிமைப் போரில் ஈடுபடு வதற்கான ஏற்பாடுகளை அவர் செய்யவேண்டியதாயிற்று. அவர் எவ்வாறு இந்த வாரிசுப் போட்டியில் வென்ருர்

என்றும், எவ்வாறு தம் சகோதரர்களை ஒருவர் பின் ஒருவராகத் தீர்த்துக்கட்டினூர் என்றும் முந்திய இயலில் கண்டோம்.

## அரசுகட்டில் ஏறுதல்

ஆக்ராவைக் கைப்பற்றி, தம் தந்தையை ஆக்ரா கோட்டையில் சிறைப்பிடித்து, வாரிசுக்கு முராத் பக்ஷ் நிலைநாட்டிய உரிமைகளை உதறித்தள்ளிய பின்னர்தான், 1658 ஜூலை 31ஆம் நாள் அவுரங்கசீப் டெல்லியில் அவசர அவசரமாக முடிசூட்டிக் கொண்டார். அவர் அப்துல் முஸாபர் மூகையதீன் முகமது அவுரங்க சீப் பகதூர் ஆலம்கீர் பாதுஷா காஸி என்ற பட்டத்தைச் சூட்டிக் கொண்டார். ஆனல், தாராவைத் துரத்திச் செல்லவேண்டிய திருந்ததாலும், ஷூஜாவையும் ஒழித்துக்கட்ட வேண்டியதிருந்த தாலும், வழக்கமான கொண்டாட்டங்களையும் குதூகலத்தையும் அவுரங்கசீப் ஒத்திப்போட்டார். காஜுவாவிலும் ஆஜ்மீரிலும் வெற்றிகள் பெற்றபின், 1659 மே 15ஆம் நாள் புதிய பேரரசர் டெல்லி நகரில் கோலாகலப் பவனியாக நுழைந்தார். டெல்லியில் ஷாஜஹானின் மகத்தான மாளிகையில், அவரது முடிசூட்டு விழா பெரும் ஆடம்பரத்துடனும் கோலாகலத்துடனும் நடைபெற்றது. 1659ஆம் ஆண்டு, மே 15ஆம் நாளில் சோதிடர்கள் நிர்ணயித்த நல்ல நேரமாகிய, சூரிய உதயத்திற்குப் பின்னர் மூன்று மணி பதினைந்து நிமிடங்களில் மயிலாசனத்தில் அவுரங்கசீப் அமர்ந்தார். இதனைத் தொடர்ந்து பல கொண்டாட்டங்கள் நிகழ்ந்துகொண் டிருந்தன. அரசரும் எந்த முகலாய மன்னரும் இதுவரை கொண் டாடியிராத வகையில் இவ் விழா மகோன்னதப் பெருவிழாவாக வரலாற்றில் இடம்பெற வேண்டுமென்று ஏராளமான பொருளைச் செலவிட்டார். பெரிய விருந்துகளும் நாடெங்கும் தீபாலங்காரங் களும் நடத்தப்பட்டன. பிரபுக்கள் பலரும் அதிகாரிகளும் பதவி யுயர்வு பெற்றனர். புதிய நியமனங்கள் பல செய்யப்பட்டன.

## தொடக்க கால நடவடிக்கைகள்—சமயப் பொறையின்மை

ஆட்சித் துறையைக் குழப்பத்தில் ஆழ்த்தி, வட இந்தியா முழு வதிலும் துன்பத்தை விளைவித்திருந்த நீண்ட வாரிசுரிமைப் போரினல் ஏற்பட்ட அழிவுகளைச் சீர்திருத்தி, புத்தமைப்புச் செய் வதற்கான நடவடிக்கைகளை அவுரங்கசீப் எடுத்துக்கொண்டார். முதலில் கவர்னர்களையும் பிற முக்கிய அதிகாரிகளையும் முறையான

கட்டுப்பாட்டின்கீழ்க் கொண்டுவருவதன்மூலம், புதிய அரசர் ஒழுங்கை ஏற்படுத்தி அமைதியை நிலைநாட்டினர். அடுத்த படியாகச் சட்ட விரோதமான வரிகள் பலவற்றை நீக்கி, மக்களுக்கு மிகத் தேவையான நிவாரணம் அளித்தார். இந்த வரிகளில் மிக முக்கியமாகக் குறிப்பிடத்தக்கவை 'ரதாரி' என்ற உள்நாட்டுப் போக்குவரவு வரியும், 'பண்டாரி' என்ற உணவுப் பானப் பொருள்கள் நகரங்களில் விற்பனைக்காக வரும்போது விதிக்கப்படும் வரியுமாகும். அரசருக்குச் சொந்தமான நிலங்களில் மட்டும், மேற் கூறிய வரிவிலக்கினால் இருபத்தைந்து இலட்ச ரூபாய் பெறுமான நிலவரியை இழக்க வேண்டியதாயிற்று. நீக்கப்பட்ட மூன்றாவது வரிவகை 'அப்வாப்' வரி ஆகும். இது வழக்கமான நிலவரிக்கும் சுங்கவரிக்கும் மேல் விதிக்கப்படும் பலவகையான வரியாகும். இந்த வரிகளெல்லாம் முந்திய அரசர்களால் பலமுறை விலக்கப்பட்டிருந்த போதிலும், அவை மீண்டும் மீண்டும் தோன்றிக்கொண்டிருந்தன. 'அப்வாப்' வரிகளில் முக்கியமானவை நுகரப்படும் எல்லாப் பண்டங்களின் மேலும் விதிக்கப்படும் தல விற்பனைவரி, லைசன்ஸ் வரி, நன்கொடைகள் அல்லது சந்தாக்களின்மேல் அதிகாரிகள் போடும் வரி, அரசின் சார்பில் வாங்கப்படும் பிற கட்டணங்களும் தள்ளுபடித் தொகைகளும் ஆகும். இதைத் தவிர யாத்திரிகர் வரி, கங்கை நதியில் இந்துப் பிணங்களின் எலும்புகளைப் போடுவதற்கு வரி, ஆண்குழந்தை பிறந்தால் விதிக்கப்படும் வரி ஆகிய சில சிறப்பான வரிகள் இந்துக்களின் மேல் விதிக்கப்பட்டன. இவை யாவற்றையும் அவுரங்கசீப் ரத்து செய்தார். இந்த வரி விலக்குகளை நகரங்களில் கடைப்பிடித்துவந்தாலும், தூரத்து மாநிலங் களிலுள்ள மக்களிட மிருந்து, இவ் வரிகளில் பல தொடர்ந்து தண்டல் செய்யப்பட்டிருக்க வேண்டும் (காஃபிக்கான் இவ்வாறு கூறுகிறார்).

சுன்னி வைதீகக் கொள்கையின் காவலன் என்ற முறையில், முஸ்லீம்களைப் புனிதக் குரானில் கற்பிக்கப்படும் வைதீக அறவழியில் நடக்கச் செய்யவேண்டுமென்று அவுரங்கசீப் பல ஆணைகளை வெளியிட்டார். அவர் கலிமா என்ற புனித வாசகங்களை நாணயங் களில் பொறிக்கின்ற வழக்கத்தைக் கைவிட்டார். அடுத்தபடியாக, பாரசீகப் புத்தாண்டு தினத்தை அனுசரிப்பது இஸ்லாமுக்கு எதிரான முறையென்று அதை நிறுத்தினர். மேலும், பாங்க் என்ற செடியைப் பயிரிடுவதையும் நாடு முழுவதும் தடைசெய்தார். மேலும், முக்கிய நகரங்களில் அறநெறிக் காப்பாளர்களை (முதாசீபுகள்) ஏற்படுத்தி, புனிதக் குரானின் சட்டத்தை அமலாக்குவதையும், மதுவுண்ணல் சூதாட்டம், விபசாரம் முதலியவற்றைத் தடை செய் தலையும் கவனித்துக்கொள்ளும்படி அவர்களுக்குப் பணித்தார்.

முஸ்லீம்கள் தினமும் ஐந்து முறை பிரார்த்தனை செய்கிறார்களா வென்றும், ரம்ஸான் நோம்பு அனுஷ்டிக்கிறார்களாவென்றும் பார்த்துக்கொள்ள வேண்டியதும் முதாசீபுகளின் கடமையாகும். மேலும், அவர்கள் தெய்வ நிந்தை செய்பவர்களையும், இஸ்லாமின் தப்பறைக் கொள்கைகளைப் பரப்பும் சமயத் துரோகிகளையும் தண்டிக்க வேண்டும். நெகிழ்ச்சித் தன்மையுள்ள இயற்கை வழிபாட்டோடு தொடர்புடைய தாராள சமயக் கருத்துகளைக் கொண்டிருந்ததற்காக, அரசர் சூஃபிகளைத் தண்டித்தார். தாராவின் சகாவாகிய சார்மாத் என்பவன் தப்பறைக் கொள்கைகளுக்காகக் கொலைத்தண்டனை பெற்றான். முதல் மூன்று கலிபாக்களை நிந்தித்ததற்காகப் பல ஷியாக்கள் கொல்லப்பட்டார்கள். தவிரவும், இஸ்லாமியத்தைத் தழுவிக் கொண்ட பலர் மீண்டும் தங்களுடைய பழைய சமயத்துக்கு மாறியதால் சிரச்சேதம் செய்யப்பட்டார்கள். முஸ்லீம் மக்களில் இரத்தவெறி கொண்ட துன்புறுத்தலைப் புதிய அரசரின் கீழ் அனுபவித்த முக்கியமான பிரிவினர் குஜராத்திலுள்ள இஸ்மாலியா அல்லது போரா என்ற சமூகத்தினர் ஆவர்.

## அவுரங்கசீப்பின் வெற்றிகள்

மங்கோலிய அரச பரம்பரையினர் ஆண்ட அஸ்ஸாமை வென்றதுதான் அவுரங்கசீப்பின் முதல் வெற்றியாகும். வாரிசு உரிமைப் போர் நடந்துகொண்டிருந்தபோது, கூச் பீஹாரையும் அஸ்ஸாமையும் ஆண்டுவந்த அரசர்கள், அவர்களின் நாடுகளுக்கு இடையேயிருந்த மொகலாய மாவட்டமாகிய காமரூபத்தைப் பிடித்துக்கொண்டார்கள். அவுரங்கசீப் மிர்ஜும்லாவை வங்காள கவர்னராக நியமித்து, இழந்த முகலாயப் பிரதேசத்தை மீண்டும் கைப்பற்றிக்கொள்ள உத்தரவிட்டார். சிறியதொரு படையெடுப்பின் பின்னர் மிர்ஜும்லா, கூச் பீஹாரின் தலைநகரைக் கைப்பற்றி, முகலாய நாட்டுடன் சேர்த்துக்கொண்டார். பின்னர் அவர் அஸ்ஸாமைத் தாக்குவதற்காகப் புறப்பட்டார். அதுகாலை அஸ்ஸாம் ஷான் இனத்தில் ஒரு கிளையாகிய அஹோம் என்ற வம்சத்தின் ஆட்சியில் இருந்தது. இவர்கள் பதின்மூன்றும் நூற்றாண்டில் கிழக்கு மத்திய அஸ்ஸாமில் தங்கள் ஆதிக்கத்தை நிறுவியிருந்தார்கள். சிறிது போராடியபின் அஹோம்கள் பிரமபுத்ராவுக்குப் பின்வாங்கிச் சென்றபோது, 1662ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் 13ஆம் நாள் மிர்ஜும்லா, அவர்களை ஒரு கடற்போரில் தோற்கடித்து, அஹோம்களின் தலைநகரான கார்காணைக் கைப்பற்றி, விலையுயர்ந்த கொள்ளைப் பொருள்களைப் பெற்றார். அஹோம்

தலைநகரில் மீர்ஜும்லா ஓர் அரணையும் நிறுவினார். ஆனால், முகலாயர்கள் அஸ்ஸாமைக் கைப்பற்றியது அபாயகரமாக இருந்தது. ஏனென்றால், மழைகாலத்தில் நாட்டில் வெள்ளம் ஏற்படும்பொழுது போக்குவரவுகள் தடைப்பட்டதால், முகலாய எல்லைக் காவல் நிலையங்கள் தனிமையாக விடப்பட்டன. ஆயிரக் கணக்கான முகலாய வீரர்கள் உணவுப் பொருள்கள் கிடைக் காததால் பட்டினிச்சாவிற்குப் பலியானார்கள். அஹோம்கள் சில முகலாய எல்லைப்புறக் காவல் நிலையங்களைக் கைப்பற்றிக் கொண்டு, முகலாயத் தரைப்படைக்கும் கடற்படைக்கும் இடையே இருந்த போக்குவரவு வழிகளை வெட்டிவிட்டார்கள். அவர்கள் முகலாயர்களைத் தாக்கியபோதிலும் வெற்றி பெறவில்லை. எனினும், முகலாயர்களின் நிலை அநேகமாக நலிவுற்றது. களைப் பினாலும் குணமற்ற அஸ்ஸாமின் காலநிலையினாலும் பாதிக்கப்பட்டு, மீர்ஜும்லா 1663ஆம் ஆண்டு, ஏப்ரல் திங்கள், 10ஆம் நாளில் இறந்தார். அப்பொழுது ஷெயிஷ்டகான் அஸ்ஸாமின் கவர்னராக நியமிக்கப்பட்டார். 1663-ல் அவர் சத்காவைக் கைப்பற்றிக் கொண்டு, பிரமபுத்ரா ஆற்றின் கழிமுகத்திலிருந்து போர்த்து கீசியரை விரட்டியடித்தார். முகலாயர் இன்னும் நான்காண்டு காலத்திற்கு அஸ்ஸாமை ஆண்டனர். ஆனால், அஹோம் அரச ராகிய சக்ராத்துவட்ஜ் என்பவர் இழந்த பகுதிகளை மீண்டும் பெற்றார். அவர் கௌஹாத்தியைக்கூடக் கைப்பற்றிக்கொண்டார். இவ்வாறு முகலாயர்களின் எல்லை மோனஸ் ஆறு வரைக்கும் பின்னால் தள்ளப்பட்டது. 1679–ல் முகலாயர்கள் கௌஹாத்தியை மீண்டும் கைப்பற்றியபோதிலும், இரண்டாண்டுகளின் பின்னர் அதைத் திரும்பவும் இழந்தனர். இவ்வாறு காமரூபம் முகலாயப் பேரரசிலிருந்து பறித்துக்கொள்ளப்பட்டது. ஆனால், நீண்ட போராட்டத்தின் பின்னர் கூச் பீஹாரின் அரசர் இறுதியாக முகலாயர்களின் மேலதிகாரத்தை ஏற்றுக்கொண்டார்.

வங்காள கவர்னரின் கவனத்தைக் கவர்ந்த அடுத்த முக்கியப் பணி, கடற்கொள்ளைக்காரர்களை (போர்த்துகீசியரை) அழிப்ப தாகும். இவர்கள் இடைவிடாமல் வங்காளத்தைக் கொள்ளையடித்து, மக்களைத் தூக்கிச் சென்று, இந்தியத் துறைமுகங்களில் அடிமைக ளாக விற்றுவந்தனர். ஷெயிஷ்டகான் முந்நூறு கப்பல்களைக் கொண்ட 'பிளோட்டில்லா' என்ற கப்பற்படையை நிறுவி, சாந்த்விப் தீவுகளை வென்று, சாத்காவைக் கைப்பற்றி, அதனை முகலாயத் தளபதியின் தலைமைப் பீடமாக்கினார். போர்த்து கீசியரிடம் அடிமைகளாக இருந்த ஆயிரக்கணக்கான வங்காள உழவர்களை அவர் விடுவித்தார்.

அவுரங்கசீப் ஆட்சியின் முதல் பாதியில் பல சிறிய வெற்றிகள் நிகழ்ந்தன. 1661–ல் பாட்ன கவர்னரான தாவுத்கான் தென் பீஹாரிலுள்ள பாலமாவ் என்ற பகுதியை வென்று, முகலாயப் பேரரசில் சேர்த்துக்கொண்டார். சிறிய தீபாத் அல்லது லடாக் என்ற பகுதியின் அரசர் முகலாய மேலாண்மையை ஏற்றுக் கொண்டார். இங்கு முதல் மசூதி கட்டப்பட்டது.

அவுரங்கசீப் ஆட்சியின் முதல் பாதியில் சில கிளர்ச்சிகளும் ஏற்பட்டன. ஆனல், அவை எளிதாக அடக்கப்பட்டன. பந்தல்கண்டு நாட்டின் சம்பத்ரேய் என்பவன் தனக்கும் ஓர்ச்சாவில் இருந்த தனது முன்னேடிகளுக்கும் அநீதி இழைக்கப்பட்டதால், கிளர்ச்சி செய்யத் தொடங்கினன். ஆனல், 1661-ல் அவன் பணியவேண்டியதாயிற்று. 1663–ல் கத்தியவாரிலுள்ள நவநகரின் ரேய்சிங் செய்த கிளர்ச்சியும் அடக்கப்பட்டு, அவனும் பணியவேண்டியதாயிற்று. பிகானிரின் ராவ் கரன்சிங் வெளிப்படையாக அவுரங்கசீப்பின் அதிகாரத்தை எதிர்த்தான். ஆனல், பின்னர் அவன் மன்னிப்புக் கோரியதால் மன்னிக்கப்பட்டான். மதுரா, ஆக்ரா மாவட்டங்களில் இருந்த ஜாத்துகளும் வன்மையாகக் கலவரம் செய்தார்கள். பஞ்சாபில் சீக்கியர்களின் கலகம் நெடுநாள் நடந்தது. இவற்றைத் தவிர வட இந்தியாவில் அமைதி நிலவியது. அவுரங்கசீப் ஆட்சியின் முதல் இருபத்தைந்து ஆண்டுகளில் உள்நாட்டில் அமைதி இருந்தது.

## எல்லைக் குடிகளுடன் போர்

முஸ்லீம் வைதீகவாதத்தின் காவலராக அவுரங்கசீப் இருந்த போதிலும், அவர் வடமேற்கு எல்லைப் பகுதிகளில் இருந்த சமயவெறி உணர்ச்சிகொண்ட முஸ்லீம் மலைக்குடிகளுடன் போராடவேண்டியிருந்தது. இந்தப் பிரதேசங்களில் வாழ்ந்து வந்த ஆப்கானிய குலங்கள், வழிப்பறித் திருட்டைத் தொழிலாகப் பின்பற்றிவந்தார்கள். அவர்களின் நாடு வறண்டு விளைச்சல் இல்லாமல் இருந்ததால் சமவெளிகளில் வாழ்ந்த மக்களையும் எல்லைப்புறத்தின் கணவாய் களின் வழியாக ஆப்கானிஸ்தானத்திலிருந்து இந்தியாவிற்கு வந்த வணிகர்களையும் கொள்ளையடிப்பதை இலாபமெனக் கருதினர்கள். இந்த மலைக்குடிகளை வென்று பழக்குவது வன்முறையால் செய்ய முடியாதது என்பதை முகலாய அரசர்கள் கண்டுணர்ந்தனர். எனவே, அவர்களை அமைதியாக வைத்திருக்கவும், எல்லைப்புறத்திலுள்ள வணிக வழிகளின்மூலம் அமைதியான வர்த்தகம் நடைபெறவும் அவர்களுக்கு இலஞ்சம் கொடுத்து வந்தார்கள். இதற்காகவே அவுரங்கசீப் எல்லைப்புறத் தலைவர்

களுக்கு ஆண்டுதோறும் ஆறு இலட்ச ரூபாய்களைக் கொடுத்து வந்தார். ஆனால், எல்லைப்புறத் தலைவர்களுக்கு இலஞ்சம் வழங்கும் கொள்கை எப்பொழுதும் வெற்றி பெறவில்லை. ஏனெனில், மலைக் குடிகளின் இடையே புதிய தலைவர்கள் தோன்றி, முகலாயப் பகுதிகளை அடிக்கடி கொள்ளையடிப்பதுண்டு. 1667-ல் பெஷாவருக்கு வடக்கிலிருந்த சுவாத், பெஜார் மாவட்டங்களில் பலம் பெற்றிருந்த யூசுப்சேய் குலத்தின் தலைவனான பாஹு என்பவன் முகமது ஷா என்ற போலித் தலைவனை அக் குலத்தின் அரசனாக்கினான். மேலும், அவன் அட்டாக் என்ற இடத்திற்கருகில் சிந்து நதியைக் கடந்து முகலாய மாவட்டமாகிய ஹசாராவைத் தாக்கினான். பிற யூசுப்சேய் கூட்டங்கள் அட்டாக், பெஷாவர் மாவட்டங்களைக் கொள்ளையடித்து, ஹாரூம் என்ற இடத்தில் முகலாயப் படை எல்லைப்புறப் பகுதிக்குள் நுழையாதபடி சிந்து ஆற்றிலிருந்த வாராவதியையும் தடை செய்ய முயன்றன. 1667 ஏப்ரலில் அட்டாக்கிலிருந்த தளபதி கமில்கான், அவர்களைத் தோற்கடித்தான். மற்றொரு தளபதியாகிய ஷாம்ஷெர்கான், யூசுப்சேய் பிரதேசத்திற்குள் புகுந்து மலைக்குடிகளைத் தோற்கடித்தான். செப்டம்பரில் யூசுப்சேய்களைத் தண்டிக்கும்படி அரசர் முகம்மது அமின்கானை அனுப்பினார். கிளர்ச்சிக்காரர்கள்மீது அவர் நிகழ்த்திய தாக்குதல்களினால் அவர்கள் சில ஆண்டுகளுக்கு அமைதியாக இருக்கவேண்டியதாயிற்று.

1672-ல் எல்லைப்புறப் பிரதேசத்தில் மற்றொரு கிளர்ச்சி ஏற்பட்டது. அஃப்ரிடி குலத்தின் தலைவனான அக்மல்கான், தன்னை அரசனாக்கிக்கொண்டு முகலாயர்களுக்கு எதிராகப் புனிதப் போரை அறிவித்து, எல்லாப் பதானியர்களையும் தன்னுடன் சேர்ந்துகொள்ளுமாறு அழைத்தான். கிளர்ச்சிக்காரர்கள் அலிமஸ்ஜித் என்ற இடத்தில் ஆப்கானிஸ்தானத்தின் கவர்னரான முகம்மது அமின் கானைத் தாக்கினார்கள். முகலாயப் படை தோல்வியுற்றது. ஆனால், முகம்மது அமின், தனது முகாமையும், உடைமைகளையும், பெண்களையும் முதலில் விட்டுவிட்டு ஓட்டம் பிடித்தான். வெற்றி கொண்ட பதானியர் அவர்களை அடிமைகளாக்கினர். இந்த வெற்றி மலைக்குடிகளின் ஆவலைத் தூண்டிவிட்டதால், எல்லைப்புறப் பகுதி முழுவதிலும் கிளர்ச்சி பரவியது. அவர்களுடன் கத்தாக் குலத்தின் திறமையுள்ள தலைவனாகிய குஷால்கானும் சேர்ந்து கொண்டான். அவன் உள்ளத்தை எழுச்சிகொள்ளச் செய்யும் தனது கவிதைகளால் கிளர்ச்சிக்காரர்களைத் தூண்டிவிட்டான். அவுரங்கசீப் மாபாத்கானை ஆப்கானிஸ்தானத்தின் கவர்னராக்கி, கிளர்ச்சிக்காரப் பதானியர்களை அடக்கும்படி உத்தரவிட்டார். ஆனால், புதிய கவர்னர் கிளர்ச்சிக்காரர்களுடன் ஓர் இரகசிய உடன்

பாட்டைச் செய்துகொண்டதால், கைபர் கணவாயின் வழி அடைக்கப்பட்டது. இதனுல் வெறுப்புற்ற அரசர், கிளர்ச்சிக்காரர்களை அடக்க சுஜத்கானை அனுப்பினுர். ஆனுல். அவர் தோல்வியுற்று, 1674ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் மூன்ரும் நாளில் கொல்லப்பட்டார்.

இதற்குள் நிலைமை மிகவும் தொல்லை தருவதாயிருந்ததால், அவுரங்கசீபே நேரில் பெஷாவருக்கு அருகிலுள்ள ஹாசன் அப்துல் என்ற இடத்துக்குப் புறப்படவேண்டியதாயிற்று. அவர் போர் ஏற்பாடுகளைச் செய்வதற்காக அங்கே ஒன்றரை ஆண்டுகள் தங்கினுர். மாபாத்கான் கவர்னர் பதவியிலிருந்து நீக்கப்பட்டார். பதானியரை எதிர்த்துப் போராட ஒரு புதிய படை அனுப்பப்பட்டது. அரசர் அரசியல் சூழ்ச்சிகளிலும் ஈடுபட்டார். அவர் மலைக்குடித் தலைவர்களுக்கு உயர்ந்த பதவிகளைத் தருவதாக ஆசைகாட்டியதோடு, அவர்களுக்கு இலஞ்சமும் கொடுத்தார். இதன் விளைவு என்னவென்ருல், சில குலங்கள் முகலாயரின் பதவிகளை ஏற்று அமைதியாகப் பணிந்தார்கள். அதனை எதிர்த்த கோரை. நில்சேய், சிரானி, யூசூப்சேய்போன்ற குலங்கள் தோற்று அழிக்கப்பட்டன. கிளர்ச்சி செய்த ஆப்கானியரை அழிப்பதில் முகலாயத் தளபதியாகிய ஊகுர்க்கான் சிறந்த பங்கு எடுத்துக்கொண்டான். இவனது வீரம் எவ்வளவு புகழ்பெற்றது என்ருல், ஆப்கானியத் தாய்மார்கள் அவனது பயங்கரமான பெயரைச் சொல்லி அச்சுறுத்தித் தங்கள் குழந்தைகளை உறங்கச் செய்வார்களாம். 1675 டிசம்பருக்குள் எல்லைப்புறத்தில் அமைதி நிலவியதால், அரசர் ஹாசன் அப்துலை விட்டு டெல்லிக்குச் சென்ருர். அமிர்கானை காபூலின் கவர்னராக நியமித்தார். செயல் நயத்தாலும் அரசியல் வெல்திறத்தாலும் ஆப்கானியர்களுடன் நட்புறவு கொண்டும், புதிய கவர்னர் அவர்களைப் பணியச் செய்வதிலும் மலைவழிகளை வர்த்தகத்திற்காகத் திறந்துவைப்பதிலும் வெற்றி கண்டார். அலிமர்தன் கானின் மகளாகிய அவருடைய மனைவி சாகிப்ஜீயின் திறமையும் அறிவுரைகளும் அமிர்கானின் வெற்றிகளுக்கு முக்கியக் காரணங்களாகும். அவர் 1698–ல் தாம் இறக்கும்வரை காபூலின் கவர்னராக இருந்தார்.

மலைக்குடித் தலைவர்களுக்கு உதவித் தொகை வழங்கியும், அதனுல் அவர்களுக்குள் பிளவுகளை ஏற்படுத்தும் அமிர்கானின் கொள்கை வெற்றிகண்டது. இதனுல் அக்மல்கானின் தலைமையில் இயங்கிய ஆப்கானியக் கூட்டமைப்புச் சிதைந்தது. அக்மல் இறந்ததும், அஃபிரிட் குலத்தினர் பணிந்து அரசருடன் சமரசம் செய்துகொண்டனர். எனினும், குஷால் கான் கதாக் இன்னும்

சில ஆண்டுகளுக்குப் போராட்டத்தைத் தொடர்ந்தான். ஆனல், அவனுடைய மகனல் காட்டிக்கொடுக்கப்பட்டுச் சிறை புகுந்தான். இதன் பின்னர் எல்லைப்புறப் போர் முடிவுற்றது. இந்தப் போர்களால் அதிகப் பொருள் விரயமாயிற்று. மக்களையும் பணத்தையும் இழந்த தால், முகலாயச் செல்வ வளங்கள் நலிவுற்றதுமட்டுமன்றி, இப் போர்கள் மராட்டியர்களிடமிருந்து முகலாயர்களின் கவனத்தை வேறு திசையில் திருப்பின. மராட்டிய அரசனுகிய சிவாஜி, இந்த வாய்ப்பைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொண்டான்; முகலாயர்களின் எதிர்ப்பின்றிக் கர்னடகத்தை வென்ருன்.

## அவுரங்கசீபின் இறைமைக் கொள்கை

அவுரங்கசீப் இஸ்லாமிய இறைமைக் கொள்கையில் நம்பிக்கை உடையவர். அதன்படி அரசர் புனிதக் குரானின் சட்டத்தைத் தம் நாட்டின் ஆட்சித்துறையில் புகுத்தித் தமது நாட்டைப் புறச் சமய நாடாக இருக்கும் நிலையை மாற்றி இஸ்லாமிய நாடாக அமைக்கவேண்டும். குரான் சட்டத்தைப் புறக்கணிக்கும் பெருந் தவற்றை டெல்லியை ஆண்ட தமது முன்னேர்கள் செய்ததாகவும், ஆட்சி முறையைச் சமயச் சார்பற்ற வழியில் அவர்கள் நடத்த முயன்றதாகவும் அவுரங்கசீப் உறுதியாக நம்பினர். அக்பர் இஸ்லாமை நாட்டின் சமயம் என்ற நிலையிலிருந்து கீழிறக்கி, இஸ்லாமிய இறைமைக் கொள்கையையே புறக்கணித்துவிட்டு, அதற்குப் பதிலாக இறைமையைப்பற்றிய இந்துக் கொள்கையைக் கடைப்பிடித்தார். எனவே, அவுரங்கசீப் தமது பெருமுன்னேடி யாகிய அக்பர் புகுத்தியிருந்த புதிய கொள்கைகளை அழிக்க வேண்டுமென்பதையே தமது நோக்கமாகக் கொண்டார். ஆகவே, தமது ஆட்சித் தொடக்கத்திலிருந்தே அவர் வைதிக சுன்னிக் கொள்கையின் உயர்வுக்கான நடவடிக்கைகளை எடுத்தார். அவர் இஸ்லாமை நாட்டின் அதிகார பூர்வமான சமயம் என்ற நிலைக்கு உயர்த்தி, பேரரசின் செல்வ வளங்கள் யாவற்றையும் தமது சமயப் பிரசாரத்திற்காகப் பயன்படுத்தவேண்டுமென்று முடிவு செய்தார். நாட்டில் நிலவிய குஃபூர் (பல கடவுள் நம்பிக்கை) என்ற நிலையை அழித்து, இந்தியாவை மாற்றியமைக்க ஒரு ஜிஹாத் (புனிதப் போர்) நடத்த வேண்டுமென்பதைத் தம் வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டார். இந்தியா, அவரைப் பொறுத்தவரையில், புறச்சமய நாடு (தாருல்-ஹார்பு) என்ற நிலை மாறி, இஸ்லாமிய அரசாக (தாருல் இஸ்லாம்) வேண்டுமென்று விரும்பினர். இதன்படி, அவர் நாட்டு மக்களை முஸ்லீம்களாக்கி, நாட்டின் ஆட்சி முறையைக் கண்டிப்பான குரான் சட்டப்படி நடத்தவேண்டுமென்று முயன்ருர்.

நாடு முழுவதும் வெல்லப்பட்டு, மக்கள் யாவரும் இஸ்லாம் சமயத்தைத் தழுவாதவரையில் முஸ்லீம்கள் அல்லாதார்மேல், அரசியல், பொருளாதார, சமூக இடர்ப்பாடுகளை விதித்து, நாள்தோறும் அவர்களுக்குத் தங்களின் கீழ்நிலையை நினைவூட்டி, அதன்மூலம் தங்களுடைய முன்னோர்களின் சமயத்தைக் கைவிட்டு, இஸ்லாமியத்தைத் தழுவிக்கொள்ள வற்புறுத்தவேண்டுமென்பது அவருடைய திட்டம்.

முதன்முதலில் புதிய அரசர் இஸ்லாமை நாட்டிலும் அரசவையிலும் அதிகாரபூர்வமான சமயம் என்ற நிலைக்கு உயர்த்தினார். முஸ்லீம் சமயத்துக்குப் புறம்பான புதிய ஏற்பாடுகளை எல்லாம் தவிர்த்து, முஸ்லீம் சட்ட முறையை மீண்டும் அமைப்பது, அவுரங்கசீபின் அடுத்த திட்டமாகும். நாணயங்களில் அச்சிடப்பட்ட கலிமாவை நீக்கியும், பாரசீகப் புத்தாண்டு விழாக் கொண்டாடுவதை நிறுத்தியும், பாங்கு செடி பயிர் செய்வதைத் தடைசெய்தும், குரான் சட்டத்தை அமலாக்க முக்கிய நகரங்களில் முதாசீபுகளை (சமயத் தணிக்கையாளர்) நியமித்தும் பல ஏற்பாடுகளைச் செய்தார். அரசவையில் இசை தடைசெய்யப்பட்டது. அரசரின் பிறந்த நாளன்று அவரைப் பொன், வெள்ளி, விலையுயர்ந்த பொருள்கள் ஆகியவற்றிற்குச் சரி நிகராகத் துலாவில் இடைபோடுகின்ற சடங்கு (துலாதான்) நிறுத்தப்பட்டது. சூரிய உதயத்தின்போது அரசர் ஜரோக்கா தரிசனம் தரும் வழக்கமும் கைவிடப்பட்டது. அரசவையிலிருந்து இந்து சோதிடர்கள் நீக்கப்பட்டபோதிலும், முஸ்லீம் சோதிடர்கள் தொடர்ந்து தங்கியிருந்து அரசரால் ஆதரிக்கப்பட்டனர். பழைய கோவில்களைப் பழுதுபார்ப்பதை அரசர் தடைசெய்தார். சில காலத்திற்குப் பின்,' புற மதத்தாருக்குச் சொந்தமான கோவில்களையும் பள்ளிக்கூடங்களையும் அழித்துவிடவேண்டுமென்றும், அவர்களின் கல்வி முறையையும் சமயப் பழக்கங்களையும் நிறுத்திவிடவேண்டுமென்றும்,' மாநில கவர்னர்களுக்கு உத்தரவாகிற்று. முதாசீபுகள் தங்களுக்குட்பட்ட அதிகாரப் பகுதிகளில் சுற்றிவந்து, இந்துக் கோவில்களையும் திருத்தலங்களையும் அழிக்கவேண்டும். 'அதிகாரபூர்வமான கோவில்களை அழிப்போரின் தொகை அதிகரித்ததால், அவர்களின் நடவடிக்கைகளை ஒன்றுபடுத்தி வழிநடத்த ஒரு தரோகாவை (மேற்பார்வையாளர்) ஏற்படுத்தவேண்டியதாயிற்று.' அகில இந்தியப் புகழ்பெற்ற காசியிலுள்ள விஸ்வநாத ஆலயம், மதுராவிலுள்ள கேசவதேவ் ஆலயம், பட்டானிலுள்ள சோமநாத கோவில் ஆகியவைகள் இடித்துத் தரைமட்டமாக்கப்பட்டன. நட்புறவு கொண்டிருந்த ஜெய்ப்பூர் மன்னரைப்போன்ற இந்து அரசர்களின் நாட்டிலுள்ள கோவில்களும் தப்பவில்லை. கோவில்களையும்

சிலைகளையும் உடைத்தபின், 'அடிக்கடி கோவில்களில் புனிதமான இடத்தில் பசுக்களைக் கொன்று ஆலயத் தூய்மையைப் பாழ்படுத்துவதும், பொதுஇடங்களில் சிலைகளைப் போட்டு மிதிப்பதுமான நிந்தனைச் செயல்கள் நடந்தன'.

1679ஆம் ஆண்டு ஏப்ரல் 12ஆம் நாள் 'இஸ்லாமைப் பரப்பவும், புறச் சமயப் பழக்கவழக்கங்களை அழிக்கவும்,' இந்துக்கள்மீது ஜிஸ்யா வரியை மீண்டும் விதிக்கவும் அரசர் ஓர் ஆணையை வெளியிட்டார். இந்த வரி பேரரசிலும், முகலாயர்களுக்குச் சேர்ந்த குறுநிலப் பகுதிகளிலும், அரச சேவையிலும், தனியார் தொழில்களிலும் அல்லது உழவிலும் ஈடுபட்டவர்களிடமிருந்து இஸ்லாமைத் தழுவிக்கொள்ளாத குற்றத்திற்காக விதிக்கப்பட்ட தண்டனை வரியாகும். இதனை வரி செலுத்துவோர் மிக்க அடக்கத்துடன் நேரில்கொண்டு செலுத்த வேண்டும். இந்த வரியின் நிர்ணய வசதிக்காகவும் தண்டல் செய்யவும், முஸ்லீம் அல்லாத மக்கள்தொகை முழுவதும் மூன்று தரமாகப் பிரிக்கப்பட்டிருந்தார்கள். முதல் தரத்தினர் ஆண்டுக்கு நாற்பத்தெட்டு திர்ஹாம்களையும், இரண்டாம் தரத்தினர் 24 திர்ஹாம்களையும், மூன்றும் தரத்தினர் 12 திர்ஹாம்களையும் வரியாகச் செலுத்தினர். ஒரு திர்ஹாமின் மதிப்பு முக்கால் ரூபாய்க்குச் சற்று அதிகமாகும். பெண்கள், குழந்தைகள், இரவலர், அடிமைகள், ஒன்று மில்லாதவர்கள் வரிவிலக்குப் பெற்றிருந்தனர். செல்வமிக்க மடாலயங்களைச் சேராத துறவிகளுக்கும் வரிவிலக்கு உண்டு. இந்துக்களை இந்த வரி மிக வன்மையான முறையில் பாதித்தது. 'இழிந்துரைத்த வரித் தண்டுவோரிடமிருந்து தப்பித்துக்கொள்வதற்காக, ஜிஸ்யா வரி செலுத்த முடியாத பல இந்துக்கள் முகம்மதியராகினர்' என்று மனுச்சி குறிப்பிடுகிறார். இது அவுரங்கசீபுக்குப் பெரு மகிழ்ச்சியைக் கொடுத்தது. இந்துக்களின் எதிர்ப்பை அவர் புறக்கணித்தார். அவர் இந்துக்கள்மீது யாத்திரிகர் வரியையும் மீண்டும் விதித்தார். ஒவ்வோர் இந்து யாத்திரிகனும் பிரயாகையில், கங்கையாற்றில் குளிப்பதற்கு ஆறு ரூபாய் நான்கணாவும், பிற இடங்களில் குளிப்பதற்கு அதுபோன்ற ஒரு தொகையும் செலுத்தவேண்டும். முஸ்லீம் வணிகர்கள்மேல் விதிக்கப்பட்ட சுங்கவரியை அவுரங்கசீப் நீக்கினார். ஆனால், இந்துக்களைப் பொறுத்தவரையில் அந்த வரி பழைய விகிதமான 5% என்று தொடர்ந்து விதிக்கப்பட்டது. இது இந்துக்களை அச்சுறுத்துவதற்காக எடுத்துக்கொள்ளப்பட்ட நடவடிக்கையாகும். இஸ்லாமைத் தழுவிக்கொள்ளும் இந்துக்களுக்கு உதவித் தொகைகளும் இலவச நன்கொடைகளும் வழங்குவதாக அரசர் அறிக்கை இட்டார். மதமாறியவர்களுக்கு அரசர் அரசாங்கப் பணியில் பதவிகளும் தருவதாகச் சொன்னார். இந்துக் கைதிகள் மதமாறினால் அதற்குப் பரிசாக விடுதலை பெற்றார்கள். இந்து மதத்தைத் துறந்து

முஸ்லீம்கள் ஆகியதற்காக கனுங்கோ பதவிகளை அரசர்களிட மிருந்து நமது முன்னோர்கள் பெற்றுக்கொண்டதற்குச் சான்று பகரும் சில கடிதங்கள் இன்றும் பஞ்சாபிலுள்ள சில முகம்மதியக் குடும்பங் களிடம் இருக்கின்றன. இரண்டோ, இரண்டுக்கதிகமான பேரோ ஒரு சொத்தைப்பற்றித் தகராறு செய்தால், அவர்களில் முஸ்லீமாக மாறியவன் சார்பில் அரசர் வழக்கைத் தீர்த்தார். 1671-ல் அவுரங்க சீப் மாநிலங்களில் இருந்த எல்லா இந்து நிலவரி அதிகாரிகளையும் பதவியிலிருந்து நீக்கினார். ஆனால், நீக்கப்பட்டவர்களின் எண்ணிக் கைக்கு ஈடான அளவு முஸ்லீம் அதிகாரிகள் கிடைக்காததால், பேரரசின் சில பகுதிகளில் பதவி நீக்கப்பட்டவர்களை மீண்டும் அமர்த்தவேண்டியதாயிற்று. 1688-ல் இந்து சமய விழாக்களும் பொருட்காட்சிகளும் தடைசெய்யப்பட்டன. அதே ஆண்டில் இராஜபுத்திரர்களைத் தவிர, பிற இந்துக்கள் பல்லக்குகளிலும் யானை களிலும், உயர்தரமான குதிரைகளிலும் ஏறிச் செல்வது தடைசெய் யப்பட்டது. அவர்கள் ஆயுதங்களைத் தாங்கிச் செல்லவும் கூடாது. இவ்வாறு அவுரங்கசீப் இந்துக்களை இஸ்லாமியராக்க சகலவகை யான நிர்ப்பந்தங்களையும் அவர்கள்மீது செலுத்தினார். சில வேளை களில் மதமாற்றுவதற்காக அவர் வன்முறையையும் பயன்படுத்தினார் (S. R. Sharma, Religious Policy of Mughuls, பக். 162). அவர் அர சியல் விவேகத்தைக் காற்றிலே பறக்கவிட்டு, இஸ்லாம் சமயப் பரப்பு தலைமட்டும் தன்னுட்சியில் முக்கிய நோக்கமாகக் கொண்டார். உண்மையில் அவருடைய ஆட்சியின்கீழ் அரசு ஒரு பெரிய சமயப் பிரசார அமைப்பாக விளங்கியது.

## ஜாத்துகளின் கிளர்ச்சி, 1668–1689

அவுரங்கசீப் வேண்டுமென்றே இந்தியாவை ஒரு முஸ்லீம் நாடாக மாற்றும்படி செய்துவந்த கொள்கைகளை ராஜஸ்தான், மாளவம், பந்தல்கண்டு, காண்டேஷ் ஆகிய பகுதிகளிலுள்ள மக்கள் எதிர்த்தனர். இப் பகுதிகளில் அநேகர் மதமாற்றம் செய்யப்பட்ட னர். மக்கள் மசூதிகளை அழித்ததோடு, முஸ்லீம்கள் தொழுகைக்காக அழைக்கும் பிரார்த்தனைகளும் நிறுத்தப்பட்டன. சில இடங்களில் ஜிஸ்யா தண்டுவோர் தாக்கப்பட்டு, அவர்களுடைய தாடி கள் அறுக்கப்பட்டு விரட்டியடிக்கப்பட்டனர். ஆனால், அவுரங்க சீபின் சமய ஒறுத்தல் கொள்கைக்கு எதிரான, முறையான வகை யில் எழுந்த முதல் இந்து எதிர்ப்பு, மதுரா மாவட்டத்தில் தோன்றி யது. இங்கு வன்மைமிக்க ஜாத் உழவர்கள், தங்களுடைய தலைவ ரான கோகுல் என்பவரின் துணையுடன் 1669-ல் தலமாவட்ட அதி காரியான அப்துல் நபி என்றவனைக் கொன்றனர். இவர் கோவில்

களை அழித்தும், சிலைகளை உடைத்தும் தனது அரசராகிய அவுரங்க சீபின் கொள்கைகளை உண்மையான முறையில் நிறைவேற்றி வந்தார். இந்த அதிகாரி, புனித நகரமான மதுராவின் மையத்தில் அழிந்துகிடந்த இந்துக் கோவில்களின் மேல் மசூதி ஒன்றைக் கட்டினார். கேசவராய் கோவிலுக்குத் தாரா நன்கொடையாக வழங்கியிருந்த அழகான கல் கிராதியை இவர் உடைத்தெடுத்தார். மேலும், இவர் இந்துப் பெண்களைத் தூக்கிச் சென்றார். ஜாத்துகள் இவரைக் கொன்று, சாதாபாத் பர்கானாவைக் கொள்ளையடித்தார்கள். அரசர் அனுப்பிய பல படைகளுடன் நீண்ட நாள் போரிட்டபின், ஜாத்துகள் தில்பாத் என்ற இடத்துக்கருகில் நடந்த இரத்தக்களரி யான போரில் தோல்வியுற்றனர். கோகுல் தனது குடும்பத்துடன் கைப்பற்றப்பட்டு ஆக்ராவுக்குக் கொண்டுவரப்பட்டார். அங்கே காவல்நிலையத்தில் ஒரு மேடையின்மேல் அவருடைய உடல் துண்டு துண்டாக வெட்டப்பட்டது. கோகுலின் குடும்பத்தினர் வன்முறை யாக மதமாற்றம் செய்யப்பட்டனர். எனினும், ஜாத்துகள் தொடர்ந்து கிளர்ச்சிசெய்தனர். 1686-ல் சின்சானியின் இராஜாராமும், சோகாரின் ராம்ஜெராவும் அவர்களின் தலைவர்களாகினர். இவர்கள் தங்கள் குலத்தினரை நேரடிப்போரில் பழக்கி, புகமுடியாத காடுகளில் பலமிக்க மண் அரண்களைக் கட்டி, ஆக்ராவின் வாயில் வரைக்கும் கொள்ளையடித்தனர். புகழ்பெற்ற முகலாயத் தளபதியான யுகுர்க் கானை 1687-ல் தோற்கடித்துக் கொன்றும், மற்றொரு பிரபுவான மாபாத்கான் என்ற மிர் இப்ராஹிமைக் கொள்ளையடித்தும், இராஜா ராம் புகழ்பெற்றான். இவன் சிக்கந்தராவில் இருந்த அக்பரின் சமாதி யைக் கொள்ளையடித்து, கட்டடங்களுக்குப் பெரும் சேதம் விளைவித் தான். அவன் மாமன்னர் அக்பரின் எலும்புகளைத் தோண்டியெடுத்து எரித்துவிட்டதாக மனுச்சி கூறுகிறார். இதனால் கலவரம் அடைந்த அவுரங்கசீப் 1688-ல் தமது பேரனான பீடார் பக்த் என்பவனை, ஆம்பர் நாட்டு அரசரும், அதுகால மதுரா மாவட்டத்திற்குப் பொறுப்பாளருமாக இருந்த பிஷான்சிங்கின் துணையுடன், ஜாத்து களை அடக்குமாறு அனுப்பிவைத்தார். 1688 ஜூலையில் ராஜா ராம் தோற்கடிக்கப்பட்டுக் கொலையுண்டார். கடுமையான போராட் டத்தின் பின் சின்சானியும் கைப்பற்றப்பட்டது. இந்தப் போரில் முகலாயர்களில் 900 பேரும், ஜாத்துகளில் 1,500 பேரும் மாண்டனர். ராஜாராமுவுக்குப் பின் அவருடைய மருமகனாகிய சுராமன் தலைமை தாங்கி, அவுரங்கசீபின் மரணம் வரைக்கும் போராட்டத்தைத் தொடர்ந்து நடத்தினார்; வன்மைமிக்க ஒரு படையைத் திரட்டி, சுராமன் பாரத்பூரின் அரச மரபைத் தொடங்கிவைத்தார். ஜாத்து களின் கிளர்ச்சி முகலாயப் பேரரசு அழிவதற்கு முக்கியமான காரணங்களில் ஒன்றாகும்.

## சத்நாமி கிளர்ச்சி

அடுத்த வன்மையான கலவரம், நார்னல், மீவாட் மாவட்டங்களில் இருந்த சத்நாமியர்களால் தொடங்கப்பட்டது. சத்நாமியர்கள் ஒரே கடவுளை நம்பி, உழவுத் தொழிலில் ஈடுபட்டுவந்த ஓர் அமைதியான சமயச் சகோதரக் கூட்டமாகும். இவர்கள் தங்கள் தலையையும் முகத்தையும் கண் புருவங்களையும்கூட சிரைத்துவிடுவதால், முண்டியாக்கள் என்று அழைக்கப்பட்டனர். ஒரு சத்நாமி உழவனுக்கும் அந்த வட்டார நிலவரி அதிகாரியின் போர்வீரனுக்கும் இடையே ஏற்பட்ட ஒரு தனிப்பட்ட சண்டையினால் இந்தக் கலவரம் எழுந்தது. அந்த வீரனின் தகாத நடத்தை, சத்நாமியரின் கோபத்தைத் தூண்டவே, இந்தச் சண்டை முகலாயர்களுக்கு எதிராக ஒரு புனிதப் போராக உருவெடுத்தது. இந்த இயக்கம் வெகு துரிதமாகப் பரவியது. ஒரு வயோதிகத் தீர்க்கதரிசியின் சக்தியால் சத்நாமியர்களைத் துப்பாக்கிக் குண்டு துன்புறுத்துவதில்லை என்ற வதந்தி இந்தக் கலவரத்தை இன்னும் பரப்பியது. பல வட்டார அதிகாரியின் கீழ்ப் போரிட்ட முகலாயப் படைகளைத் தோற்கடித்து, பெற்ற வெற்றிகளால் சத்நாமியர்கள் அதிக நம்பிக்கை கொண்டார்கள். அவர்கள் நார்னல் நகரத்தையும் மாவட்டத்தையும் கொள்ளையடித்துக் கைப்பற்றிக்கொண்டார்கள். எனவே, அவுரங்கசீப், பீரங்கிகளுடன் ஒரு பெரும் படையை ரதந்தஸ்கான் என்பவன் தலைமையில் அனுப்பவேண்டியதாயிற்று. தாள்களில் மாயமந்திரங்களை எழுதி, படையினரின் கொடிகளில் அவற்றை இணைத்து, எதிரியின் மாய வேலைகளுக்கு எதிர் சக்தியாக அவுரங்கசீப் எழுதி அனுப்பினார். சத்நாமியர்கள் வீராவேசமாகப் போராடி இறுதியில் தோற்கடிக்கப்பட்டனர். போர்க்களத்தில் இரண்டாயிரம் சத்நாமியர் வீழ்ந்தனர்; எஞ்சியிருந்தவர்களை அச்சுறுத்திப் பணியவைத்தார்கள்.

## அவுரங்கசீபும் சீக்கியர்களும்

அவுரங்கசீபின் சமயத் துன்புறுத்துதல் சீக்கியர்களைத் தட்டி எழுப்பியது. சீக்கியர்கள் கிளர்ச்சி செய்தனர். இறுதியில் அவர்களின் எதிர்ப்பு, முகலாயப் பேரரசின் வீழ்ச்சிக்கு ஒரு காரணமாயிற்று. 16ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் குருநானக் என்பவரால் தோற்றுவிக்கப்பட்ட சீக்கியர், முற்றிலும் ஒரு சமய சகோதரத்துவக் கூட்டமாக விளங்கினர். அவர்கள் ஒரே கடவுளையும், பிரார்த்தனையினாலும், தன்னடக்கத்தாலும், நற்கிரியைகளாலும் ஆத்மீக விடுதலை பெறலாமென்றும் நம்பினர். நானக் சிலைவழிபாட்டை மறுத்து, ஜாதியையும், பிராமணர்கள், முல்லாக்களின்

ஆதிக்கத்தையும் கண்டித்தார். அவருக்குப் பின் வந்த மூன்று வழித் தோன்றல்களும், அவருடைய போதகங்களைப் பின்பற்றினர்கள். நான்காவதாக வந்த குரு ராமதாஸ், சீக்கியர்கள் உலகியல் ஆத்மீக மேலாண்மை பெறவேண்டுமென்று விரும்பினர். அவருக்குப்பின் 1881-ல் பதவியேற்ற குரு அர்ஜுனர், குரு கிரந்த சாஹிபைத் தொகுத்து, அமிர்தசரசில் பொன்னலயத்தை எழுப்பி, சீக்கியர்களைக் கட்டுக்கோப்பான சமூகமாக அமைத்துத் தமக்கு ஒழுங்கான முறையில் வருமானம் வருவதற்கு ஒரு வழியையும் வகுத்தார். இவர் மசாந்துகள் என்ற அதிகாரிகளை நியமித்து, சீக்கியர்கள் எங்கிருந்தாலும், அவர்களிடமிருந்து பத்தில் ஒரு பங்கு வரியையும், பிற நன்கொடைகளையும் தண்டல் செய்ய ஏற்பாடு செய்தார். அவர் கிளர்ச்சி செய்த குஸ்ருவுக்கு ஆசி வழங்கியதால், சிறைப்படுத்தப் பட்டு, சித்திரவதைக்குள்ளாகி 1606-ல் ஜஹாங்கீரால் கொல்லப் பட்டார். போர் முறையில் பயிற்சி பெற்றிருந்த அவருடைய மகனை ஹார்கோவிந்தர், அரசருக்குச் சொந்தமான வேட்டை நிலங்களை அபகரித்ததாலும், முகலாயப் படைகளைத் தோற்கடித்ததாலும், ஷாஜஹானுடன் மோதவேண்டியதாயிற்று. ஹார்கோவிந்தரின் உடைமைகளையும் வீட்டையும் கைப்பற்றுமாறு ஷாஜஹான் உத்தரவிட்டார். இதனைத் தொடர்ந்து குரு, கிரத்பூரில் தஞ்சம் புகுந்து 1665-ல் காலமானர். இவருக்குப்பின் ஹாரேயும், அவர் காலமானபின் ஹார்கிஷானும் குருக்களாகினர். அதன் பின்னர் டெஜ்பகதூர் குருவாகி, அனந்தபுரியில் தமது இருக்கையை அமைத்தார். இதற்கிடையில் அவுரங்கசீப் அரசராகி சமயத் துன்புறுத்துதலைத் தொடங்கியிருந்தார். அவர் சீக்கிய ஆலயங்களை அழிக்கவும், மசாந்துகளை நகரங்களில் இருந்து வெளியேற்றவும் ஆணையிட்டார். குரு டெஜ்பகதூர் வெளிப்படையாகக் கிளர்ச்சி செய்ததால் சிறைப்படுத்தப்பட்டு, டெல்லிக்குக் கொண்டுபோகப் பட்டார். அங்கே அவர் இஸ்லாமைத் தழுவும்படி பணிக்கப்பட்ட போது மறுத்ததால், ஐந்து நாட்கள்வரை துன்புறுத்தப்பட்டுக் கொலையுண்டார் (டிசம்பர் 1675).

அவுரங்கசீபின் சமயவெறியும், மக்களை முஸ்லீம்களாக்க அவர் பின்பற்றிய வன்முறைக்கொள்கையும் சீக்கியருக்கும் இஸ்லாமுக்கும் இடையே சமரசம் பண்ணமுடியாத அளவுக்கு ஒரு பெரும் பிளவை உண்டாக்கின. இதனல் டெஜ்பகதூரின் மகனை கோவிந்த்சிங், தன் தந்தையின் மரணத்திற்குப் பழிவாங்க உறுதிபூணவேண்டிய தாயிற்று. அவர் சீக்கியர்களை ஒரு படைதரித்த சமூகமாக மாற்றி, அதனைக் கால்சா என்று அழைத்தார். கால்சாவின் உறுப்பினர்கள் தனியான உடை தரித்துக்கொள்ளவேண்டும். அவர்கள் எப்போதும் 'க' என்ற எழுத்தில் தொடங்கும், பஞ்சகாரங்கள் என்ற ஐந்து

பொருள்களைத் தம்மீது கொண்டிருக்கவேண்டும். அவையாவன: கேசம், கிர்ப்பான் (வாள்), கச்சம் (கீழணி), கங்கம் (சீப்பு), கரம் (இரும்பு வளை) என்பவை. மேலும், அவர்கள் எல்லாவிதமான சாதி வேறுபாடுகளையும், உணவிலும் பானத்திலும் உள்ள கட்டுப்பாடு களையும் நீக்கிவிடவேண்டும். கால்சாவில் சேருவதற்கு ஒரு புதிய தொடக்கச் சடங்கு முறை குறிப்பிடப்பட்டது. அதனால் அதன் உறுப்பினர்கள் தம்மைத் தேர்ந்த திருக்குடி மக்களாக நம்பினர். இவ்வாறு குரு கோவிந்தரின் சீக்கிய மதம் அவுரங்கசீபின் இஸ்லாமியத்திற்கு நல்லதோர் எதிர்ப்பாகக் கிளம்பியது. அவருடைய தலைமையின்கீழ் கால்சா வெறியுணர்ச்சியை வெறியுணர்ச்சியால் தாக்குகின்ற கொள்கையைப் பின்பற்றியது.

வட பஞ்சாபில் குரு கோவிந்த்சிங், கிளர்ச்சி செய்த சீக்கியர்களை அடக்குவதற்காக முகலாயப் படைகளுடன் ஒத்துழைக்க அவுரங்கசீபால் அனுப்பப்பட்ட முஸ்லீம் அதிகாரிகளையும் இந்து இராஜாக்களையும் எதிர்த்துப் போராடவேண்டியிருந்தது. அவர்களை குரு பல தடவைகளில் தோற்கடித்தார். சீக்கியர்களின் எண் ணிக்கை அதிகரித்துக்கொண்டு வந்தது. அனந்தபூரில் இருந்த அவ ருடைய இருப்பிடம் ஐந்து முறை தாக்கப்படவே, அவர் அதை விட்டு விட்டு, சமவெளிகளில் இறுதியாகத் தஞ்சம் புகுந்தார். முகலாயர் அவரை விரட்டிச்சென்று இடத்திற்கிடம் வேட்டையாடியதால் அவர் பிகானீர் வழியாகத் தக்காணத்திற்குத் தப்பியோடினார். போராட்டத் தின்போது அவருடைய குமாரர்களில் இருவர் கொல்லப்பட்டனர். எஞ்சியிருந்த இரு புதல்வர்களை சர்ஹிந்தின் பௌஜ்தார் கொலை செய் தார் (1705). அவுரங்கசீப் காலமான செய்தியை அறிந்து, குரு, வட இந்தியாவுக்குத் திரும்பினார். பகதுர்ஷா தம்முடைய சகோதரர் களுடன் நடத்திய வாரிசுரிமைப் போரில் கலந்துகொண்டு, குரு கோவிந்த் அவருடன் தக்காணத்துக்குப் புறப்பட்டார். கோதாவரி ஆற்றங்கரையில் இருந்த நாதிர்முகாமில் அவர் தங்கியிருந்தபோது 1708-ல் அவருடைய ஆப்கானிய சீடர்களில் ஒருவன் அவரைக் குத்திக்கொன்றான்.

கோவிந்த்சிங் சீக்கியர்களில் பத்தாவது குருவும் கடைசிக் குருவு மாவார். அவர் இறப்பதற்குச் சற்று முன், குருபீடத்தைக் கலைத்துவிட்டு சீக்கியர்களைப் படைதரித்த ஒரு ஜனநாயக அமைப் பாக மாற்றும்படி தம் சீடர்களிடம் கேட்டுக்கொண்டார். 'எங் கெங்கு ஐந்து சீக்கியர்கள் கூடுவார்களோ, அங்கெல்லாம் நான் இருப்பேன்' என்று அவர் மொழிந்தார். குரு கோவிந்த் சிங்கின் மரணத்தின்போது சீக்கியர்கள் முகலாயக் கொடுங்கோன்மையை அழிக்க உறுதிபூண்ட ஒரு புரட்சி சமூகமாக விளங்கினர்.

## அவுரங்கசீபின் இராஜபுத்ரக் கொள்கை

முகலாயப் பேரரசில் இருந்த முக்கிய இந்துத் தலைவரும், தார் மத்தில் அவுரங்கசீபை எதிர்த்துப் போராடியவரும், கஜுவா முகா மில் அரசரைக் கொள்ளையடித்தவருமான ஜோதிபுரி மகாராஜா ஜஸ்வந்த்சிங் 1678ஆம் ஆண்டு, டிசம்பர் 20ஆம் நாளில் ஆப் கானிஸ்தானத்திலுள்ள ஜாம்ருத் என்ற இடத்தில் இறந்தார். முக லாய எல்லைப்புறக் காவல் நிலையங்களைப் பாதுகாப்பதற்காக இவர் அங்கு அனுப்பப்பட்டிருந்தார். அவுரங்கசீப் இராஜபுத்திரர்களை வெறுத்ததாலும், ஜெய் சிங் கச்சாவாஹா, ஜஸ்வந்த் சிங் போன்ற இந்து அரசர்கள் இருக்கும்வரை இந்து சமயத்தை அழிக்கின்ற தமது கொள்கையைச் சுதந்தரமாகச் செயலாக்க முடியாதென்று கண்டதாலும், அவுரங்கசீப் ஜஸ்வந்தின் மரணத்தை வரவேற்று, அவரின் நாடான மார்வாரைக் கைப்பற்றிக்கொள்ளும்படி உத்தர விட்டார். ஒருவேளை ஏற்படக்கூடிய ரதார் தேசீயக் கிளர்ச்சியை எதிர்க்கும் நோக்கத்துடன் அரசரே ஆஜ்மீருக்குப் புறப்பட்டார். நாட்டை ஓர் இஸ்லாமிய நாடாக்கவேண்டுமென்ற அரசரின் கொள்கை வெற்றிபெறவேண்டுமெனில், அதனை எதிர்த்து, அவ ருடைய நோக்கத்தைத் தோல்வியுறச் செய்யக்கூடிய முக்கிய இந்து நாடான மார்வாரை அழிக்கவேண்டியது அவசியமானதால், அவுரங்கசீப் எடுத்துக்கொண்ட நடவடிக்கை தகுந்தது என்று கூற வேண்டும். 1679 ஏப்ரல் 12ஆம் நாள் அவுரங்கசீப் மார்வாரைக் கைப்பற்றிவிட்டு, டெல்லிக்குத் திரும்பி, அதே நாளில், ஒரு நூற் றுண்டுக்கு மேலாக அக்பர் நீக்கியிருந்த ஜிஸ்யா வரியை இந்துக்கள் மீது மீண்டும் விதித்தார். இதற்கிடையில் ஜஸ்வந்த்சிங்கின் குடும் பத்தினர் ஜாம்ருத்திலிருந்து டெல்லிக்கு வந்துகொண்டிருக்கும் வழி யில், லாகூரில் ஜஸ்வந்தின் இரு அரசிகள் தந்தை மரணத்துக்குப் பின் இரண்டு குமாரர்களை 1679ஆம் ஆண்டு பெப்ரவரியில் பெற்றுர் கள். இவற்றில் ஒன்று பிறந்தவுடன் இறந்துவிட்டது. உயிர் பிழைத்த குழந்தை வாழ்ந்து, பிற்காலத்தில் மகாராஜா அஜித் சிங் ஆகியது. ஜூன் திங்களில் அஜித் சிங் அவருடைய அன்னையா ருடன் டெல்லியில் வந்து இறங்கினுர். அவர்கள் உடனே அரசரின் அரண்மனைக்குக் கொண்டுவரப்படவேண்டுமென்றும், இஸ்லாமைத் தழுவிக்கொண்டால், அஜித் சிங்கை ஜோதிபுரியின் அரசராக்குவ தாகவும், அவுரங்கசீப் ஆசை காட்டினுர். இதுபோலவே பின்னர் அவர் 1673-ல் மராட்டிய அரசனுகிய சாஹுக்கும் நிபந்தனை விதித் தார். வீரமிக்க ரதார் குலத்தினர் இதைக் கேட்டு வெகுண்டு, தங்க ளுடைய தலைவரான துர்க்காதாஸின் துணையோடு, குழந்தை அரச ரான அஜித்சிங்கைத் தந்திரமாக மீட்டனர். இராணிக்கும் இளவரச ருக்கும் பதிலாக ஒரு பணிப்பெண்ணையும் அவளுடைய குழந்தை

யையும் வைத்துவிட்டார்கள். இராணியையும் அஜித்சிங்கையும் கைப்பற்றிவருமாறு அனுப்பப்பட்ட முகலாயப் படைகளை, ரதார் வீரர்களின் ஒரு பகுதியினர் எதிர்த்துப் போரிட்டனர். முகலாயர்கள் டெல்லியிலிருந்த ஜஸ்வான்சிங்கின் அரண்மனையை முற்றுகையிட்டார்கள். இந்நிலையில் இன்னொரு ரதார் கூட்டத்தின் தலைவரான துர்க்காதாஸ் ஆண் வேடம் தரித்து, மாற்று உடையில் இருந்த இராணியுடனும், ரதார் அரசகுலத்தின் பிற உறுப்பினர்களுடனும் தப்பியோடி ஒன்பது மைல்களைக் கடந்துவிட்டார். துர்க்காதாஸை எதிர்த்து, இராணியையும் அவளது குழந்தையையும் டெல்லிக்குக் கொண்டுவருமாறு அவுரங்கசீப் ஒரு படையை அனுப்பினார். ரதார்கள் முகலாயர்களுடன் போராடி, அவர்களை மும்முறை முறியடித்து விரட்டினார்கள். இவ்வாறு அஜித்சிங் பத்திரமாக மார்வார் போய்ச் சேர்ந்தார். தன்னுடைய திட்டங்களில் தோல்விகண்ட அரசர் ஒரு பால்காரனின் குழந்தையை அஜித்சிங் என்று அறிக்கையிட்டு, அவனை முஸ்லீம் ஆக்கி முகம்மதுராஜ் என்று பெயரிட்டு, துர்க்காதாஸின் ஆதரவு பெற்றவன் போலி இளவரசன் என்றும் பறைசாற்றினார். அவர் நாகபுரியிலிருந்து இந்திரசிங்கை வெளியேற்றி, அவன் முகலாயருக்குத் துணைபுரிந்ததால், அவனுக்கு மார்வார் நாட்டைக் கொடுத்தார். அவுரங்கசீப் ஜோதிபுரி நாட்டைப் பெயரளவில் முகலாயப் பேரரசுடன் சேர்த்துக்கொண்டு, அதனை ஒரு முகலாயத் தளபதியின் பொறுப்பில் விட்டுவைத்தார். அரசர் மீண்டும் ஆஜ்மீருக்குச் சென்று, மார்வாரைத் திரும்பக் கைப்பற்றும்படி, தனது மகன் அக்பரைப் பெரும்படையுடன் அனுப்பிவைத்தார். ஏனெனில், முகலாய அடக்குமுறையாளர்களை எதிர்த்து மார்வார் மக்கள் கிளர்ச்சி செய்தனர். நீண்ட போராட்டத்தின் பின் முகலாயர்கள் மார்வாரைக் கைப்பற்றிக்கொண்டார்கள். அவர்கள் எல்லா நகரங்களையும் கொள்ளையடித்துக் கோவில்களை அழித்தார்கள். ஆனால், குன்றுகளிலும் பாலைவனங்களிலும் ஒளிந்துகொண்டிருந்த ரதார்கள் முகலாயர்களுக்குத் தொடர்ந்து தொல்லை கொடுத்துக்கொண்டிருந்தார்கள்.

அடுத்தபடியாக, அவுரங்கசீபின் கவனம் மீவார் நாட்டின் மீது திரும்பியது. அதன் அரசரான மகாராணா ரெய்சிங் தனது நாடு முழுவதற்கும் ஜிஸ்யா வரி கட்டவேண்டுமென்று அரசர் கோரினார். ஆனால், இராஜபுத்திர நாடுகளை அழிக்கவேண்டுமென்ற அவுரங்கசீபின் உண்மையான கருத்தை உணர்ந்துகொண்ட ரெய்சிங், அஜித்சிங்கை ஆதரித்து, முகலாயர்களை வன்மையாக எதிர்க்க முடிவுசெய்தார். ஆனால், அவுரங்கசீப், மகாராணாவின் திட்டங்களைத் தடைசெய்து, மீவாரைத் தாக்கும்படி 7,000 தேர்ந்தெடுக்கப்பட்ட வீரர்களை ஹாஸன் அலிகானின் தலைமையில் அனுப்பிவைத்தார்.

மகாராணு தன் தலைநகரான உதயபுரியை விட்டு குன்றுகளில் போய்த் தஞ்சம் புகுந்தார். ஹாஸன் அலிகான் சித்தூரையும் உதயபுரியையும் கைப்பற்றிக்கொண்டு, அங்கிருந்த கோவில்களை அழித்தார். அவர் ரெய்சிங்கைத் துரத்திச் சென்று, 1680ஆம் ஆண்டு பெப்ரவரி முதல் நாளில் அவரைத் தோற்கடித்தார். இளவரசர் அக்பரைச் சித்தூரின் பொறுப்பில் விட்டுவிட்டு, அவுரங்கசீப் ஆஜ்மீருக்குத் திரும்பினர். பின்னர் ரெய்சிங் முகலாயக் காவல்நிலையங்களைத் தாக்கி உணவுப் பொருள்கள் வருகின்ற வழிகளை வெட்டிவிட்டார். சில இராஜபுத்திரர்கள் சித்தூருக்கு அருகிலுள்ள அக்பரின் முகாமைத் திடீரென ஓர் இரவில் தாக்கி, பல முகலாயர்களைக் கொன்றனர். இந்த முதல் வெற்றிகளுக்குப் பின்னர் ரெய்சிங், பெட்நாருக்குச் சென்று பெருத்த சேதத்துடன் அக்பரைத் தோற்கடித்தார். அவுரங்கசீப் அக்பரை ஜோதிபுரிக்கு மாற்றி இளவரசர் ஆசமை சித்தூரின் பொறுப்பை ஏற்றுக்கொள்ளும்படிசெய்து மீவார் நாட்டை மீண்டும் படையெடுக்கத் திட்டமிட்டார். மூன்று படைகள், மூன்று வேறான திசைகளிலிருந்து ஒரே நேரத்தில் மீவார் குன்றுகளைத் தாக்கவேண்டுமென்பது திட்டம். முதல் படை ஆசமின் தலைமையில் கிழக்கிலிருந்து தியோபாரி கணவாய் வழியாக உதயபுரியைத் தாக்கும். இரண்டாம் படை மௌஸாமின் தலைமையில் வடக்கிலிருந்து இராஜசமுத்திர ஏரி வழியாகப் புறப்படவேண்டும். மூன்றும் படை அக்பரின் தலைமையில் மேற்கிலிருந்து தியோசூரிக் கணவாய் வழியாக மீவாரைத் தாக்கும். இந்த மூன்று படைகளில் முதல் இரண்டு தளபதிகளும், மீவாரின் மையகேந்திரத்துக்குள் புக முடியவில்லை. அக்பர் நாடோலை யடைந்து, இரண்டு மாதங்களின் பின், தியோசூரியை நோக்கிப் புறப்பட்டார். ஆனல், அவர் முன்னேறிச் செல்ல முடியாததால், அக்பரின் முஹாமிலிருந்து எட்டு மைல் தெற்கில் கும்பளகார் என்ற இடத்தில் பாசறை அமைத்திருந்த ரெய்சிங்கை விரட்ட முடியவில்லை. இளவரசர் வெற்றிபெறுவோமென்ற நம்பிக்கையை இழந்து தனது தந்தையின் பிற்போக்குக் கொள்கையின் பயனற்ற தன்மையையும் உணர்ந்து, 1681ஆம் ஆண்டு ஜனவரி 11ஆம் நாள் இராஜபுத்திரர்களுடன் சமரசம் செய்துகொண்டார். அவர் தம் தந்தைக்கு எதிராகக் கிளர்ச்சி செய்து, ரதார்கள், சிசோடியாக்கள் ஆகியோரின் துணையுடன் தம்மை இந்தியாவின் பேரரசரென அறிக்கையிட்டார்.

இளவரசர் அக்பர் செய்த மகத்தான முடிவு சில வாரங்களுக்கு முன்னர் இராஜபுத்திரர்கள் காட்டிய நல் இணக்க முனைப்பின் விளைவாகும். அவர்கள்தாம், தங்களது துணையுடன் அரியணையைப் பற்றிக்கொண்டு, அரசராக அறிக்கை செய்யுமாறு அக்பரைத் தூண்டியவர்கள். ரதார்களும் சிசோடியாக்களும், இளவரசருக்குத்

தமது படைகளைக் கொடுத்து உதவவேண்டுமென்றும், இளவரசர் முடிசூட்டிக்கொண்டபின் தனது தந்தைக்கு எதிராகக் கிளர்ச்சி செய்யவேண்டுமென்றும் உடன்பாடாயிற்று. தன் தந்தையின் சமய வெறிக் கொள்கையும், அவர் இராஜபுத்திரர்களை வேரோடு அழிக்கத் திட்டமிட்டிருப்பதும், நாட்டிற்கும் முகலாய அரச பரம்பரைக்கும் பாதகமானது என்பதைக் கண்டுணர்ந்த அக்பர், துர்க்காதாஸும் மகாராணு ரெய்சிங்கும் கூறும் அறிவுரைகளின்படி நடப்பதாக ஒப்புக்கொண்டார். ஆனல், 1680ஆம் ஆண்டு நவம்பர் முதல் நாள் ரெய்சிங் இறந்ததாலும், அவருடைய மகன் ஜெய்சிங்கின் முடி சூட்டு விழாவும் அவுரங்கசீபுக்கு எதிரான படையெடுப்புத் திட்டத்தைச் சிறிது தள்ளிப்போடக் காரணமாயிருந்தன. புதிய மீவார் அரசர் தனது படைகளை இளவரசருக்குக் கொடுக்கத் தயா ரானதும், அக்பர் நான்கு முஸ்லீம் உலிமாக்கள் கையெழுத்திட்ட ஒரு ஃபாட்லா அறிக்கையை வெளியிட்டார். அவுரங்கசீப் குரானின் நீதியை மீறிவிட்டதால், அவர் அரியணையை இழந்துவிட்டாரென்று இந்த அறிக்கையில் கண்டிருந்தது. 1681ஆம் ஆண்டு ஜனவரி 11-ல் இளவரசர் தம்மைப் பேரரசர் என முடிசூட்டிக்கொண்டார், ஜனவரி 12ஆம் நாள் சிசோடியா, ராதார் படைகளுடன் ஆஜ்மீரில் முகாமிட்டிருந்த தனது தந்தைக்கு எதிராக, அக்பர் அவல மானதொரு படையெடுப்பைத் தொடங்கினர். அக்பர்மேல் இளகிய மனம்கொண்ட அவுரங்கசீப்பை அக்பரின் படையெடுப்புப் பேரிடியெனத் தாக்கியது. ஆனல், அவர் சீக்கிரமே அதிர்ச்சியி லிருந்து மீண்டு தம்மிடம் சிறிய படையிருந்தபோதிலும், ஆஜ்மீரி லிருந்து புறப்பட்டு, தரோகா நகரிலிருந்து பத்து மைல் தெற்கே முகாமிட்டார். அக்பரின் ஆதரவாளர்களைத் தம் வயப்படுத்த அவுரங்கசீப் சூழ்ச்சிகளைச் செய்தார். இளவரசரின் பலமிக்க ஆதரவாளரான தகாவூர்கான் என்பவருக்கு, அவரது மாமனர் எழுதுவது போன்று ஒரு பொய்க் கடிதத்தை எழுதினர். முகலாயரின் பக்கம் சேர்ந்துகொண்டால் அவருக்கு மன்னிப்பு வழங்கப்படுமென்றும், சேர மறுத்தால் அதுகாலை முகலாய முகாமில் இருந்த அவருடைய குடும்பத்தினருக்கு ஆழிவு ஏற்படும் என்றும், அந்தக் கடிதச் செய்தி கூறியது. தமது மனைவியரையும் மக்களையும் காப்பாற்ற எண்ணங்கொண்ட தகாவூர் ஓர் இரவில் அக்பரிடமும், பிற இராஜபுத்திர தலைவர்களிடமும் சொல்லாமல் அவுரங்கசீப்பின் முகாமுக்குள் நுழையவே, அவருடைய காவலர்கள் தகாவூரைக் கொன்றுவிட்டார்கள். அடுத்தபடியாக முக்கிய இராஜபுத்திரர்களை அவுரங்கசீப்பிடம் கொண்டுவருகின்ற சூழ்ச்சியை அக்பர் வெற்றி கரமாகச் செய்துள்ளதைப் பாராட்டியும், அதனல் அவர்களை முகலாயப்படைகளையும் அக்பரின் படைகளையும் கொண்டு அழித்து விடலாமென்றும் கூறி, இரண்டாவது பொய்க் கடிதம் எழுதினர்.

இந்தக் கடிதம் வேண்டுமென்றே இராஜபுத்திரர்களின் முகாம் அருகில் போடப்பட்டது. இதனைப் படித்த துர்க்காதாஸ் வியப்புக் கொண்டு, நேராக அக்பரிடம் சென்று விளக்கம் கேட்டார். இளவரசரின் அலிகள் அவர் தூங்கிக்கொண்டிருப்பதாகச் சொன்னார்கள். பின்னர் துர்க்காதாஸ், தகாவூரைத் தேடிச்சென்றபோது, அவன் முந்திய நாள் இரவில் அவுரங்கசீப்புடன் இரகசியமாகச் சேர்ந்து கொண்டதாகவும் அறிந்தார். இப்பொழுது அக்பர் தம் தந்தையுடன் சேர்ந்து, தம்மை அழிப்பதற்கு சதித்திட்டம் வகுத்திருக்கிறார் என்பதை இராஜபுத்திரர்கள் நம்பாமல் இருக்கமுடியவில்லை. இதன் விளைவாக அவர்கள், அவருடைய உடைமைகளைக் கொள்ளையடித்து, அவரைக் கைநெகிழ்ந்துவிட்டு, மீவார் நோக்கிப் புறப்பட்டார்கள். அக்பரின் படைவீரரில் பலர் திகைப்படைந்திருந்த இளவரசரை விட்டு, அவுரங்கசீப்புடன் சேர்ந்துகொண்டார்கள். அக்பர் துயில் எழுந்தபோது, தம்முடன் 350 குதிரைகள் மட்டுமே இருப்பதையும், தமது பாதுகாப்பு இராஜபுத்திரர்களுடன் சேருவதில்தான் இருக்கிறதென்பதையும் உணர்ந்து, தமது மனைவியர் சிலருடனும், மக்களுடனும், செல்வத்தில் ஒரு பகுதியுடனும் மீவாருக்குப் புறப்பட்டார். அடுத்த நாள் அவுரங்கசீப் அக்பரின் முகாமைக் கைப்பற்றி, அவருடைய ஆதரவாளர்களையும், சிறப்பாக அவருக்கு எதிராக ஃபாட்லா அறிக்கையை வெளியிட்ட நான்கு முல்லாக்களையும் தண்டித்தார்.

துர்க்காதாஸ் தமது கூட்டணி சிதைந்துபோனதன் காரணம் அவுரங்கசீப்பின் சூழ்ச்சியேதானென்றும், அக்பரின் துரோகச் செயல் அல்லவென்றும் விரைவில் கண்டுபிடித்தார். உடனே அவர் இளவரசரைத் தமது பாதுகாப்பில் வைத்து, இராஜபுதனம் காண்டேஷ் வழியாக ஆபத்தான பயணம் செய்து சிவாஜியின் மகனான சாம்பாஜியின் அரசவைக்கு அவரைக் கொண்டுசேர்த்தார். அகதியாக வந்த இளவரசருக்கு அடைக்கலம் தரக்கூடிய வீரமுள்ள ஒரே இந்திய அரசர் சாம்பாஜி ஒருவரே.

இந்தியாவின் அரசுரிமைக்கு உரிமை கொண்டாடிய அக்பர், மராட்டிய அரசரின் துணையைப் பெற்று, பேரரசின் அமைதியைக் கலைத்துவிடுவதற்கு முன்னரே அவரை அடக்க, தக்காணத்துக்குச் செல்லவேண்டும் என்ற நோக்கத்துடன், அவுரங்கசீப் இப்பொழுது உதயபுரி மகாராணாவுடன் சமரசம் செய்துகொள்ள முடிவு செய்தார். முகலாயப் படைகளினால் அச்சுறுத்தப்பட்ட மகாராணா ஜெய் சிங்கும், பேரரசருடன் சமரசத்தை விரும்பினார். எனவே, 1681ஆம் ஆண்டு ஜூன் 24ஆம் நாள், இருவருக்குமிடையே ஓர் உடன்படிக்கை செய்யப்பட்டது. தம்மீது விதிக்கப்பட்ட ஜிஸ்யா

வரிக்குப் பதிலாக, மகாராணு மதல்பூர், பிட்நார் பர்காணுக்களை விட்டுக்கொடுத்தார். அரசர் மகாராணுவை 5,000 தகுதியுள்ள மான் சுப்தாராக நியமித்து, அவருடைய நாட்டுப் பகுதியைத் திருப்பிக் கொடுத்து, ராணு என்ற பட்டத்தையும் சூட்டிக்கொள்ளலாமென்றும் உறுதியளித்தார். ஆனால், மார்வார் நாடு சமரசம் செய்ய உடன் படாமல், இன்னும் இருபத்தேழு ஆண்டுகள்வரை முகலாயப் பேரரசர்களுடன் போராடிக்கொண்டிருந்தது. இதுவரை முகலாய மன்னருக்கு ரதார், சிசோதிய குலங்கள் காட்டிவந்த பரிவையும் பற்றுதலையும் இராஜபுத்திரப் போர் இழக்கச்செய்தது. இவர்களை ஹாரா, கார் என்ற குலங்களும் பின்பற்றியதால் வட இந்தியாவில் முகலாயர்களின் அதிகாரம் நலிவுற்றது. எனினும், ஒரு பெரும் படையுடன் அவுரங்கசீப் தக்காணத்துக்குப் புறப்பட்டு, நவம்பரில் புராம்பூருக்கும், 1682ஆம் ஆண்டு ஏப்ரல் முதல் நாளில் அவுரங்கா பாத்துக்கும் வந்து சேர்ந்தார்.

அவுரங்கசீப் தக்காணத்தில் இருந்தபோது மார்வார் தொடர்ந்து கிளர்ச்சி செய்தது. ரதார் நாட்டு பக்தர்கள் குன்றுகளிலும் பாலை வனங்களிலும் இருந்துகொண்டு, சமவெளிகளில் இறங்கி, அடிக்கடி முகலாயக் காவல்நிலையங்களைத் தாக்கி, அவர்களின் போக்குவரவு வழிகளையும் பாதுகாப்புடன் செல்லும் கூட்டங்களையும் தாக்கினர்கள். இவ்வாறு அவர்கள் ஜோதிபுரியின் முகலாய கவர்னருக்குத் தொல்லை கொடுத்து, ரதார் நாட்டின்மீது அவரது அதிகாரத்தை செலுத்த முடியாமல் தடுத்துவந்தார்கள். ரதார்களின் விடுதலைப் போராட்டம் மூன்று தெளிவான பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. (1) 1681-ல் இருந்து 1687 வரை அஜித்சிங் குழந்தையாக இருந்ததாலும், புகழ் மிக்க ரதார் வீரரான துர்க்காதாஸ் தக்காணத்தில் இருந்ததாலும் இந்த முதல் கட்டத்தை மக்களின் போர் என்று கூறலாம். ரதார் களிடையே ஒரு மைய அதிகாரம் இருக்கவில்லை. அவர்கள் தனித் தனியாகப் போராடி, கொரில்லாக் கூட்டங்களைக்கொண்டு ஒரே சமயத்தில் முகலாயர்களைப் பல இடங்களில் தாக்கி, அவர்கள் ஒரு முறையான ஆட்சித்துறையை அமைக்க ஓய்வையோ காலத்தையோ கொடுக்கவில்லை. *(2)* 1687 முதல் 1701 வ்ரை ரதார்களுக்கு துர்க்காதாஸ் தலைமை தாங்கினர். அவர் தக்காணத்திலிருந்து திரும்பியபின் புந்தியின் துர்ஜான் சால் ஹாரா என்பவரின் துணை யோடு, மார்வார் சமவெளியின் மூலமாக மீவாட் வரைக்கும் டெல்லியின் சுற்றுப்புறத்திலும் இருந்த முகலாயப் பகுதிகளைத் தாக்கினர். 1690-ல் அவர் ஆஜ்மீரின் கவர்னரைக்கூடத் தோற்கடித்த போதிலும் மார்வாரை மீட்க முடியவில்லை. ஏனென்ருல், அதன் புதிய முகலாய கவர்னரான சுஜாத்கான் மிக்க திறமையுள்ளவர். ரதார் தலைவர்களுடன் இரகசிய உடன்பாடு செய்துகொண்டு, சுங்க

வரிகளிலிருந்து கிடைக்கும் அரசாங்க வருமானத்தில் நாலில் ஒரு பகுதியென்ற சௌத் வரியை அவர்களுக்குக் கொடுக்கும் கொள்கையைப் பின்பற்றினர். ஆனால், துர்க்காதாஸ் அரசருடன் சமரசம் செய்துகொண்டார். இளவரசர் அக்பரின் மகளான சஃபியத் உனிசாவையும் (1694), மகனை புலந்த் அக்தாரையும் (1698) அரசரிடம் கொடுக்கும்படியாக வற்புறுத்தப்பட்டார். இதை நிறைவேற்றியதன் விளைவாக, அவுரங்கசீப் துர்க்காதாஸை 3,000 தகுதிபெற்ற மான்சுப்தாராகவும், குஜராத்திலுள்ள பதாந் அரணின் தளபதியாகவும் நியமித்தார். அஜித்சிங், ஜாலோர், சாஞ்ஜோத், சிவானா என்ற பர்க்கானாக்களை ஜாஹீராகவும் முகலாய அரசப் பணியில் பதவியும் பெற்றார். ஆனால், அவருடைய நாடு திருப்பிக் கொடுக்கப்படவில்லை. (3). மூன்றாவது கட்டம் 1701-லிருந்து 1707ஆம் ஆண்டுவரை நீடித்தது. இதன் இறுதியில் அஜித்சிங் மார்வாரைத் திரும்பப் பெற்று, டெல்லி ஆதிக்கத்தில் இருந்து தம்மை விடுவித்துக்கொண்டு சுதந்திர மன்னரானார். 1701-ல் ஆஸம்ஷா ஜோதிபுரியின் முகலாய கவர்னராக நியமிக்கப்பட்டார். அவர் ரதார்களுக்குக் கோபமூட்டியதால் எழுந்த கிளர்ச்சியில், பேரரசர் துர்க்காதாஸைச் சிறைப்பிடித்துக் கொல்ல முயன்றார். எனவே, அந்த ரதார் வீரர் மார்வாருக்குத் தப்பியோடி அஜித்சிங்குடன் சேர்ந்து கிளர்ச்சியைத் தொடங்கினர். அவுரங்கசீப் மீண்டும் அஜித்சிங்குடன் சமரசம் செய்து, மெர்த்தாவை ஜாஹீராகக் கொடுத்தார். துர்க்காதாஸும் சீக்கிரம் பணிந்துவிடவே, அவருடைய தகுதியும் குஜராத்தில் அவர் வகித்த பதவியும் மீண்டும் அவருக்குக் கொடுக்கப்பட்டன. ஆனால், 1706-ல் மராட்டியர்கள் குஜராத்தைத் தாக்கவே, அஜித்சிங்கும் துர்க்காதாஸும் மீண்டும் முகலாயர்களுக்கு எதிராக எழுந்தார்கள். கோபி நாட்டினுள் துர்க்காதாஸ் விரட்டப்பட்ட போதிலும், அஜித்சிங்கும் முகலாயப் பேரரசரின் உண்மையுள்ள கீழாளாகிய நாகாரின் முகம்சிங் என்பவரைத் தோற்கடித்து முதன்மை பெற்றார். இதற்குள் அவுரங்கசீப் இறந்த செய்தி இராஜபுதனத்தை எட்டியது. அஜித்சிங் முகலாய கவர்னரைத் தாக்கி, அவரை மார்வாரிலிருந்து வெளியேற்றினர். அவர் முகலாயர்களிடமிருந்து சோஜாத், பாலி, மெர்த்தா ஆகிய இடங்களையும் மீட்டு, 1707-ல் தம்மை மார்வாரின் மகாராஜாவென்று அறிக்கையிட்டார்.

## 1681-க்குப் பிறகு வட இந்தியாவின் பிற பகுதிகளின் நிலை

அவுரங்கசீப் வட இந்தியாவில் நீண்ட நாள் தங்கிவிட்டபடியாலும், முடிவில்லாத தக்காணப் போர்களை நடத்தி, நாட்டின் செல்வத்தையும் மனித சக்தியையும் வற்றச் செய்ததாலும், சிறு படை

களுடனும் குறைந்த செல்வ வளங்களுடனும், இரண்டாம் தர அதிகாரிகளின் பொறுப்பில் வட இந்திய மாநிலங்களை விட்டதாலும், நாட்டில் குழப்பமும் ஆட்சிக் குலைவும் ஏற்பட்டன. மார்வாரில் நடந்த ரதார் விடுதலைப் போராட்டத்தையும், மீவாரிலும் ராஜஸ்தானின் பல பகுதிகளிலும் முகலாய அதிகாரத்துக்கு எதிராகத் தோன்றிய மறைமுக எதிர்ப்புகளையும் தவிர மாளவத்திலும், பீஹாரிலும், பந்தல்கண்டிலும் வன்மையான இந்துக் கிளர்ச்சிகளும் எழுந்தன. 1686-ல் ஆங்கில வணிகர்கள் வங்காளத்தில் புரட்சி செய்தார்கள். பதினேழாம் நூற்றுண்டின் இறுதிக் கால்பாகத்தில் கோண்டுவானுவின் காட்டுப் பிரதேசங்களில் கிளர்ச்சிகள் தோன்றின. அவுரங்கசீப்பின் சமயத் துன்புறுத்துதலாலும் அவருடைய ஏகாதிபத்திய வெறியாலும், கோண்டுவானுவின் பிரிவுகளான தியோகார், சந்தா ஆகிய பகுதிகளை ஆண்ட அரச குலங்கள் முஸ்லீம்களாக மாறியபோதிலும் தங்களுடைய நாடுகளைக் காப்பாற்றிக்கொள்ள முடியவில்லை. பதினேழாம் நூற்றுண்டின் இறுதியிலிருந்து குஜராத்தும் மாளவமும் மராட்டியர்களின் ஊடுருவல்களால் தொல்லைப்பட்டன. 1699 நவம்பரில் கிருஷ்ண சவாந்த் என்பவன் தலைமையில் மராட்டியர்கள் மாளவத்தைத் தாக்கி, தாமோனியின் சுற்றுப்புறத்தைக் கொள்ளையடித்தார்கள். இதனைத் தொடர்ந்து, மராட்டியர் பீராரில் மீண்டும் பல முறை ஊடுருவி, அந்த வட்டார ஜமீந்தார்களின் துணையோடு கான்டேஷையும் மாளவத்தையும் அழித்தார்கள். 1706 மார்ச்சில் தாஞ்ஜி ஜாதாவ் குஜராத்துக்குள் புகுந்து, முகலாயப் படையின் இரு பகுதிகளைத் தோற்கடித்து, சாப்டர்க்கான்பாபி, நாசிர் அலிகான் என்ற இரு தளபதிகளையும் கைப்பற்றினுன். அடுத்து, குஜராத்தின் துணை கவர்னராக இருந்த அப்துல் ஹமீதுகான் என்பவனையும் அவருடைய முக்கிய அதிகாரிகளையும் தோற்கடித்துச் சிறைப்பிடித்ததோடு, அவர்களின் முகாம் முழுவதையும் கொள்ளையடித்தான். அவுரங்கசீப் குஜராத்தின் முக்கிய வணிகச் சமூகங்களான இஸ்மாலியா, டவுதி போராக்கள் ஆகியோரின் பகைமையைத் தேடிக்கொண்டார். இவர்கள் ஷியா வகுப்பைச் சேர்ந்தவர்களாதலால், அவர் அவர்களுடைய சமயப் பெரியார்களைச் சிறைப்பிடித்ததோடு, அவர்கள் மீது சுன்னிக் கொள்கைகளையும் பழக்கங்களையும் புகுத்தினுர். விவேகமற்ற இந்தக் கொள்கையினுல் குஜராத்தில் அமைதி குலைந்திருந்தது.

பந்தல்கண்டிலுள்ள ஓர்க்சா நாட்டின் சம்பத் ரே புந்தவாவின் மகனுன, சத்ரசால் என்பவனே, வடஇந்தியாவில் அவுரங்கசீப்புக்கு எதிராக மிக வன்மையும் வெற்றியும் பெற்றவனுக விளங்கினுன். 1661-ல் அவனுடைய தந்தையாகிய சம்பத் ரேய், வலுக்கட்டாய

மாக அவுரங்கசீப்புக்குப் பணிந்த பின், சத்ர சால் ஒரு சிறிய படைத் தலைவனாக முகலாயரிடம் பணியாற்றி, ராஜா ஜெய்சிங்கின் தலைமையில் தக்காணப் போரில் கலந்துகொண்டான். முகலாயர்களை சிவாஜி எதிர்த்ததால், தூண்டப்பட்டு, முகலாய ஏகாதிபத்தியத்தை அழிப்பதற்கு மராட்டிய வீரனுடன் சேர்ந்து போராட சத்ரசால் முன்வந்தான். ஆனால், தன்னுடைய நாட்டிலேயே கிளர்ச்சிகளைத் தூண்டி, எதிரியின் கவனத்தைச் சிதைக்கவேண்டுமென்று சிவாஜி கூறிய யோசனையின்படி சத்ரசால் பந்தல்கண்டுக்குத் திரும்பினான். அங்கே அவுரங்கசீப்பின் சமயப் பொறையற்ற கொள்கையால் அதிருப்தியுற்றிருந்த இந்து மக்கள் அவனை வரவேற்றனர். பலர் அவனை ஆதரித்து பந்தல்கண்டின் அரசனாகத் தேர்ந்தெடுத்தார்கள். அவன் முகலாயப் படையைத் தோற்கடித்து, தாமோனி, சிரோஞ்சு பகுதிகளைத் தாக்கி, முகலாயப் பேரரசுக்கு உட்பட்ட அண்டை மாவட்டங்களிலிருந்து சௌத் வசூலித்தான். சில ஆண்டுகளுக்குள் சத்ரசால் கலிஞ்சரையும் தாமோனியையும் கைப்பற்றிக்கொண்டு, மாளவம் முழுவதையும் அழித்தான். அவன் எத்தனை பெரிய வெற்றி பெற்றானென்றால், அவுரங்கசீப் 1705-ல் அவனுடன் சமரசம் செய்துகொண்டு, அவனை 4,000 வீரர் தகுதியுள்ள மான்சுப்தாராக நியமித்து, தக்காணப் படையில் ஒரு பதவியையும் அளித்தார். 1707-ல் அவுரங்கசீப் இறந்த பின் சத்ரசால் பந்தல்கண்டுக்குத் திரும்பித் தம்மைச் சுதந்திர அரசரென ஆக்கிக்கொண்டார்.

## அவுரங்கசீப்பின் தக்கணக் கொள்கை

தமது ஆட்சியின் முதல் பாதியில் அவுரங்கசீப் தக்காண விவகாரங்களை கவர்னர்களின் கைகளில் விட்டுவிட்டார். பீஜப்பூர், கோல்கொண்டா நாடுகள் நலிந்துகொண்டுவந்ததால், கவர்னர்களுக்கு அவற்றைக் கட்டுப்படுத்துவதில் அதிகத் தொல்லை இருக்கவில்லை. பீஜப்பூர், கோல்கொண்டாவைவிட அதிக வன்மையாக எதிர்த்ததால், அதற்கு எதிராகப் பலதடவைகளில் முகலாயப் படைகளைப் பயன்படுத்தவேண்டியதாயிற்று. கோல்கொண்டாவின் அரசரான அப்துல்லா குதுப் ஷா (1626–72) சோம்பலையும் சுகவாழ்வையும் விரும்பித் தமது காலத்தை மாதர்களோடு கழித்து, ஆட்சியை அவரது நண்பர்களின் கைகளில் விட்டுவிட்டார். அவருக்குப்பின் வந்த அபுல்ஹாசன் என்பவரும் அவ்வாறே அரசாங்கக் காரியங்களை மதனா, அக்கனா என்ற இரு பிராமண அமைச்சர்களின் கையில் விட்டுவிட்டார். மேலும், அவர் சிவாஜியுடன் ஒரு பாதுகாப்பு உடன்பாட்டைச் செய்துகொண்டு, அவருக்கு ஆண்டுதோறும் 5 இலட்சம் ரூபாய் உதவிப் பணம் தருவதாக வாக்களித்தார்.

வாரிசுரிமைப் போர் முடிந்ததும், 1665ஆம் ஆண்டு தொடக்கத்தில், அவுரங்கசீப் 1657 ஆகஸ்டு உடன்படிக்கையின் நிபந்தனைகளை நிறைவேற்ருத குற்றத்திற்காக, பீஜப்பூரைத் தண்டிக்கும்படி ஜெய புரியின் ஜெய்சிங்கை அனுப்பிவைத்தார். சிவாஜியை அடக்கும்படியும் ஜெய்சிங்குக்கு ஆணையிடப்பட்டது. முதலில் ராஜபுத்ர தளபதி திறமையான ஒரு படையெடுப்பினுல் சிவாஜியைப் பணிய வைத்தார். 1665 ஜூனில் புரந்தர் கோட்டையை சிவாஜி திருப்பிக் கொடுத்ததன்மூலம் இந்தப் போர் முடிவுற்றது. அடுத்தபடியாக சிவாஜியின் ஒத்துழைப்புடன் ஜெய்சிங் பீஜப்பூரைத் தாக்கினுர். சிவாஜி இப்பொழுது முகலாயருடன் நேச உறவுகொண்டிருந்தார். நீண்ட காலம் நடந்த பூர்வாங்கப் போரில் பீஜப்பூர் படைகளின் கொரில்லாத் தந்திரங்களால் முகலாயர் பெருந்தொல்லைக்குட்பட்டார்கள். எனினும், ஜெய்சிங் பீஜப்பூர் கோட்டைக்குப் பன்னிரண்டு மைல் தொலைவில் வந்துவிட்டார். சுல்தான் தமது தலைநகரைப் பெருமளவில் பாதுகாத்து ஆறு மைல் சுற்றளவில் முன்னேறிவரும் எதிரி வாழ்வதற்குத் தேவையான எந்தப் பொருளும் கிடைக்காதபடி சுற்று வட்டாரங்களை அழித்துவிட்டார். உட்புகமுடியாத அரணை, ஒரு திடீர்ப் புரட்சியால் கைப்பற்றவேண்டுமென்பது ஜெய்சிங்கின் திட்டம். ஆனுல், சுல்தானின் வீரர்கள் விழிப்பாக யிருந்ததால் இந்தத் திட்டம் நிறைவேறவில்லை. எனவே, இராஜபுத்திர தளபதி பின்வாங்க முடிவு செய்து, பீஜப்பூர் மக்கள் தாக்கியதால் பெரும் இழப்புகளை அடைந்து இறுதியில் அவர்களுக்கு எதிராக இரண்டு போர்களை நிகழ்த்தவேண்டியதாயிற்று. அதே நேரத்தில் முகலாயருக்கு ஆதரவாக சிவாஜி பன்ஹாலாஅரணைக் கைப்பற்ற முடியவில்லை. பெரும் சேதமடைந்து ஜெய்சிங் அவுரங்கதாபாத்துக்குத் திரும்பவேண்டியதாயிற்று. இந்த வெற்றிகளால் பீஜப்பூர் மகிழ்ச்சியுறவே கோல்கொண்டாவும் அதனுடன் சேர்ந்துகொண்டது. அவுரங்கசீப் ஜெய்சிங்கைக் கடிந்துகொண்டு அவரைத் திரும்பி வரும்படி உத்திரவிட்டார். மனமுடைந்த தளபதி வழியில் புரான்பூரில் இறந்து போனுர் (12 ஜூலை, 1666).

பத்தாண்டுக் காலத்துக்கு பீஜப்பூரை முகலாயர்கள் தாக்கவில்லை. இந்தக் காலத்தில் சுல்தான் இரண்டாம் அலி அடில் ஷா என்பவர் மதுவிலும் மங்கையரிடமும் காலத்தைப் போக்கி, ஆட்சியை அப்துல்முகம்மது என்ற திறமையுள்ள அமைச்சரிடம் விட்டுவிட்டார். அமைச்சர் நாட்டிற்கு அமைதியையும் வளத்தையும் கொடுத்தார். சுல்தான் இறந்ததும் 1672 டிசம்பரில் சிக்கந்தர் அடில் ஷா என்ற நான்கு வயது குழந்தையை அரசராக்கினுர். பிரபுக்களுக்குள் உள்நாட்டுப் போர் மூண்டு அவர்கள் ஒருபுறம் ஆப்கானியர்களையும், மறுபுறம் தக்காணத்தாரையும் அபிசீனியர்களையும் கொண்ட இரு

கட்சிகளாகப் பிரிந்தனர். இதைப் பயன்படுத்திக்கொண்டு 1676-ல் முகலாய கவர்னரான பகதூர் கான் பீஜப்பூரைத் தாக்கி தோல்வியுற்றார். கோபங்கொண்ட அவுரங்கசீப் பகதூர் கானை நீக்கிவிட்டு, திலீர் கானைத் தக்காண கவர்னராக நியமித்தார். இவர் பீஜப்பூர் அமைச்சரான சிதி மசூர் என்பவருடன் சூழ்ச்சி செய்ததால் பீஜப்பூர் முகலாயர்களின்கீழ் வந்தது. சுல்தானின் சகோதரி அவுரங்கசீப்பின் மகனை இளவரசர் ஆசாமை மணந்துகொள்ளும்படி டெல்லிக்கு அனுப்பப்பட்டாள். ஆனால், மசூத் சிவாஜியுடன் இரகசிய உடன்படிக்கை செய்துகொண்டதால், அவருக்கும் திலீர் கானுக்கும் இடையே பகை மூண்டது. மசூத் போரிடுவதற்குத் தயாரானார். ஆனால், மராட்டியர்களிடமிருந்து உதவி கிடைக்காததால், அவர் மீண்டும் திலீர் கானுடன் நேச உறவு கொண்டார். திலீர் கான், மராட்டியர்களிடமிருந்து பீஜப்பூர், பூபால்கார் ஆகியவற்றைக் கைப்பற்றும்படி ஒரு படையை அனுப்பினார். பிரபுக்களுக்குள் மூண்ட உள்நாட்டுப் போர்களின் விளைவாக இதற்குள் பீஜப்பூரில் குழப்பம் நிலவியது. இதைப் பயன்படுத்திக்கொண்டு, மசூத் அமைச்சர் பதவியைத் தமது கையாளின் சார்பில் விட்டுக்கொடுக்க வேண்டுமென்று திலீர் கான் கோரினார். மசூத் மறுக்கவே 1679 செப்டம்பரில் திலீர் கான் பீஜப்பூரைத் தாக்கி, மராட்டியர்கள் மசூத்துக்கு உதவியதாலும், புதிய தக்காண கவர்னரான ஷா ஆலத்தின் பகைமை காரணமாகவும் தோல்வியுற்றார். 1681-ல் அவுரங்கசீப் தக்காணத்துக்கு நேரில் வந்தபோது பீஜப்பூரில் இத்தகைய குழப்பச் சூழ்நிலை இருந்தது.

தக்காணத்தின் மூன்றாவது வல்லரசு புதிதாக சிவாஜி என்ற தலைவரின்கீழ் முக்கியம் பெற்றிருந்த மராட்டியர்களாவர். சிவாஜியின் தந்தையான ஷாஜி போன்சிலே என்பவர், ஆமதுநகர் சுல்தானின் சேவையில் ஒரு சிறு ஜாகீர்தாராக இருந்து, இறுதியில் அந்நாட்டின் அரியணை அளிப்பவராக ஆகியிருந்தார். எனினும், 1636-ல் ஷாஜஹானால் தோற்கடிக்கப்பட்ட ஷாஜி பீஜப்பூர் சுல்தானின் சேவையில் புகுந்து முக்கிய இந்துத் தளபதியானார். பூனா மாவட்டத்திலிருந்த அவருடைய ஜாஹிர், அவரது மகனாகிய சிவாஜிக்குக் கொடுக்கப்பட்டது. இரண்டாவது மகனாகிய லெங்காஜி ஆற்காடு மாவட்டத்திலிருந்த அவருடைய பகுதிகளைப் பெற்றார். தென்னிந்திய இந்துக்களின் விடுதலை வீரராகவும் பெருந் தலைவராகவும் பின்னர் விளங்கவேண்டிய சிவாஜி, தமது 20ஆம் வயதில் வீர வாழ்க்கையைத் தொடங்கி, பீஜப்பூரிடமிருந்து பல அரண்களைக் கைப்பற்றினார். அடுத்தபடியாக, அவர் ஜவாலி நாட்டை வென்று தமது நாட்டின் பரப்பை இரு மடங்காகப் பெருக்கினார். 1656-ல் அவர் முதன் முறையாக முகலாயர்களுடன் மோதி, ஆமதுநகரையும் ஜுன்னரையும் தாக்கினார். ஆனால், அப்பொழுது தக்காண கவர்னராயிருந்த

அவுரங்கசீப் பழிவாங்கி மராட்டிய ஊர்களை அழித்தார். 1657 ஆகஸ்டில் பீஜப்பூருக்கும் முகலாயர்களுக்கும் சமரசம் ஏற்பட்டபொழுது, சிவாஜியும் பணிந்து (ஓரளவு) வெளிப்படையாகவேனும் அவுரங்கசீப்பினால் மன்னிக்கப்பட்டார். வாரிசுரிமைப் போர் முடிந்ததும் சிவாஜியை நசுக்கவேண்டுமென்பதே அவுரங்கசீப்பின் உண்மையான நோக்கமாகும்.

அவுரங்கசீப் தக்காணத்தில் இருந்தபொழுது சிவாஜி கொங்கணப் படையெடுப்பைத் திட்டமிட்டு, கல்யான், பிவான் மண்டி, மாஹுலி ஆகிய இடங்களைப் பிடித்துக்கொண்டார். பீஜப்பூர் அரசாங்கம் சிவாஜியை அழிக்கப் பெருமளவில் திட்டமிட்டு அதனை நிறைவேற்ற அப்சல் கானை அனுப்பியது. ஆனால், தன்னை வஞ்சக முறையில் தாக்குவதற்கு அப்சல் கான் திட்டமிட்டிருப்பதை யறிந்து, சிவாஜி அவனைச் சந்தித்தபோது கொன்றுவிட்டு அவனுடைய படைகளையும் தாக்கி விரட்டியடித்தார் (நவம்பர் 20, 1659). கொங்கணத்தையும், கோலாப்பூர் மாவட்டத்தையும் கைப்பற்றி சிவாஜி தமது வெற்றிகளைத் தொடர்ந்தார். 1660-ல் சிவாஜியை ஒழித்துக்கட்ட பீஜப்பூர் மீண்டும் முயன்றது. அதன் தளபதியான சிதிஜாவ்ஹர், சிவாஜியை பன்ஹாலாக் கோட்டையில் முற்றுகையிட்டு அதனை விட்டு அவர் வெளியேறுமாறு செய்தார். இதே சமயத்தில் தக்காண வைசிராயான செயிஷ்டகான் பூனாவையும் சாகன் கோட்டையையும் கைப்பற்றிக்கொண்டான். வட கொங்கணத்தில் செயிஷ்டகானின் படையை சிவாஜி முறியடித்து, பலதரப்பட்ட வெற்றிகளுடன் மேலும் இரண்டாண்டுகளுக்கு முகலாயர்களுடன் போரிட்டார். 1663ஆம் ஆண்டு ஏப்ரல் 15ஆம் நாள் நள்ளிரவில் சிவாஜி திடீரென செயிஷ்டகானின் முகாமைத் தாக்கி, முகலாய வைசிராயைக் காயப்படுத்தி, அவனுடைய புதல்வர்களில் ஒருவனையும் நாற்பது காவலாளர்களையும், ஓர் அதிகாரியையும், ஆறு பெண்களையும் கொன்று, மேலும் பலரையும் செயிஷ்டகானின் இன்னும் இரண்டு குமாரர்களையும் காயப்படுத்தினார். செயிஷ்டகான் பீதியடைந்து, அவுரங்கசீப்பால் திருப்பி அழைக்கப்பட்டார். அடுத்து, சிவாஜி சூரத் நகரை அழித்து, ஒரு கோடி ரூபாய் மதிப்புள்ள பொருள்களைக் கொள்ளை கொண்டார். இப்பொழுது அவுரங்கசீப் சிவாஜியை அடக்குவதற்கு ஜெய்சிங்கை அனுப்பினார். இராஜபுத்திரப் பெருந் தளபதியும் அரசியல் தந்திரியுமான ஜெய்சிங், தமது தூதில் வெற்றி பெற்றார். அரசியல் சூழ்ச்சித் திறத்தால் அவர் பல முக்கிய தக்காண பிரபுக்களை சிவாஜிக்கு எதிராகத் தூண்டிவிட்டு, அவரைச் சுற்றிப் பல எதிரிகளை உருவாக்கினார். அடுத்து, ஜெய்சிங் புரந்தர் கோட்டையை முற்றுகையிட்டு, அதே நேரத்தில் மராட்டிய நாட்டின் உள்ளே புகுந்து, கிராமங்களைக் கொள்ளையடித்துத் தீக்கிரையாக்கவும் ஒரு படையை

அனுப்பினர். புரந்தர் வீழ்கின்ற நிலையில் சிவாஜி அதனை விட்டுக் கொடுத்து ஜெய்சிங்கைச் சந்தித்து 1964 ஜூன் 22ஆம் நாளில் அவருடன் ஓர் உடன்படிக்கை செய்துகொண்டார். இதன்படி சிவாஜி முகலாயர்களுக்குத் தமது பேரரசின் நான்கில் மூன்று பகுதி பிரதேசங்களையும், கோட்டைகளையும் கொடுத்துவிட்டு நான்கில் ஒரு பகுதியை மட்டும் தனக்கென வைத்துக்கொண்டார். சிவாஜி முகலாயப் பேரரசரின் மேலதிகாரத்தை ஏற்றுக்கொண்டு, முகலாயப் படையில் பணிபுரிய 5,000 குதிரைகளைக் கொண்ட படையை அனுப்புவதாக ஒப்புக்கொண்டார். முகலாயர் பீஜப்பூரைத் தாக்கியபோது சிவாஜி உண்மையாகவே ஜெய்சிங்குக்கு உதவினர். இந்தப் பெரு வெற்றியின்பின் ஜெய்சிங், மராட்டிய வீரருக்கு நல்ல வருங்காலம் இருப்பதாக ஆசை காட்டி, அவர் ஆக்ராவில் அரசரைப் பேட்டிகாண்பதற்கு சிவாஜியை ஒப்புக்கொள்ளச் செய்தார். 1666 மே 22ஆம் நாளில் சிவாஜி டிவானிக்காஸ் மன்றத்தில் அரசருக்கு அறிமுகம் செய்யப்பட்டு, 5,000 வீரர் தகுதியுள்ள மான்சுப்தார்களின் வரிசையில் நிறுத்திவைக்கப்பட்டார். இந்தக் கண்ணியக் குறைவான வரவேற்பினல் இழிவு செய்யப்பட்டதை உணர்ந்த சிவாஜி பகிரங்க தர்பாரில் கோபமாக அதை எதிர்த்து, வெளியேறினர். எனவே, அவர் கைதுசெய்யப்பட்டு ஆக்ராவிலுள்ள ஜெய்ப்பூர் மாளிகையில் காவலில் வைக்கப்பட்டு, அரசவைக்கு வரக்கூடாதெனத் தடைசெய்யப்பட்டார். மூன்று மாதச் சிறை வாழ்வின் பின்னர் சிவாஜியும் அவருடைய மகனுகிய சாம்பாஜியும் இரண்டு பெரிய மிட்டாய்க் கூடைகளில் ஒளிந்துகொண்டு தப்பியோடிப் பழக்கமில்லாத பாதைகளின் வழியாக இருபத்தைந்து நாள் பயணம் செய்து மராட்டிய நாட்டை அடைந்தனர். அவுரங்கசீப் அதிர்ச்சியடைந்து, அவரை மீண்டும் கைப்பற்றுவதற்கான ஏற்பாடுகளைச் செய்தும் ஒரு பலனும் ஏற்படவில்லை. சிவாஜி தப்பிவந்த பின் மூன்ருண்டுகள்வரை முகலாயப் பகுதிகளின்மீது படையெடுக்கவில்லை. அவர் அவுரங்கசீப்புடன் செய்துகொண்ட உடன்படிக்கையின்படி சிவாஜி சுதந்திரமான அரசரென ஏற்றுக்கொள்ளப்பட்டார். ஆனல், 1670 ஜனவரியில் அவருக்கும் முகலாயருக்கும் இடையே ஒரு புதிய போர் மூண்டது. இதன் விளைவாக 1665-ல் புரந்தர் உடன்படிக்கையின்படி, சிவாஜி இழந்திருந்த எல்லாப் பகுதிகளையும் கோட்டைகளையும் அவர் மீண்டும் பெற்ருர். 1670 அக்டோபரில் சிவாஜி சூரத்தை இரண்டாவது முறையாகக் கொள்ளையடித்தார். அடுத்து, அவுரங்கதாபாத்தையும் முகலாய மாநிலங்களான பக்லன், கான்டேஷ், பீரார் ஆகியவற்றின்மீதும் படையெடுத்து, அனுபவம் மிக்க தளபதிகளின்கீழ்ப் போராடிய முகலாயப்படைகள் பலவற்றைத் தோற்கடித்தார். அவுரங்கசீப் சிவாஜியின் துணிகரமான வெற்றிகளால் அதிகக் கலக்கமுற்று, கான்ஜஹான் என்று பின்னர்ச் சிறப்புப்

பட்டம் பெற்ற பகதூர்கானை தக்காண கவர்னராக நியமித்து, மராட்டிய முன்னேற்றத்தைத் தடுக்கவும், சிவாஜியை ஒரேயடியாக அழிக்கவும் திட்டமிட்டார். கான்ஜஹான் ஐந்து ஆண்டுகள் கவர்னராயிருந்தும், இந்த நோக்கத்தை நிறைவேற்ற முடியவில்லை. சிவாஜியோ வெற்றிமேல் வெற்றி பெற்றுத் தக்காணத்திலுள்ள முகலாயப் பகுதிகளில் சௌத் வசூலித்தார். அவர் ராம்நகரையும் ஜௌகாரையும் வென்றார். 1674 ஜூன் 16-ல் சிவாஜி சுதந்திர சத்ரபதியெனத் தம்மை ரெய்காரில் முடிசூட்டிக்கொண்டார். இதன் பின்னர், அவர் கர்னாடகத்தையும் மைசூரில் ஒரு பகுதியையும் வென்றார். சிவாஜி பீஜப்பூருக்கு உதவினார். பீஜப்பூரின் காப்பாளரான சிதி மசூத் 1678-ல் மராட்டிய அரசருடன் ஓர் உடன்படிக்கை செய்துகொண்டு, முகலாயப் பகுதிகளைத் தாக்கினார். ஆனால், அவர் ரான்மஸ்த் கானினால் சுற்றி வளைக்கப்பட்டு, 4,000 வீரர்களையும் கொள்ளைப் பொருள்களையும் இழந்துவிட்டு ஓடவேண்டியதாயிற்று. இந்தப் படையெடுப்பில் சிவாஜியின் உடல்நிலை குன்றி, அவர் பிணியுற்று 1680 ஏப்ரல் 14ஆம் நாள் இறந்தார். அவருக்குப்பின் அவருடைய மூத்த மகனான சாம்பாஜி எதிர்ப்பின்றி அரசரானார்.

தக்காணத்திலுள்ள முகலாயப் பகுதிகளைக் கொள்ளையடிக்கும் தம் தந்தையின் முறையைப் பின்பற்றிய சாம்பாஜி 1681 பெப்ரவரி தொடக்கத்தில் பூரான்பூரைத் தாக்கிக் கொள்ளையடித்தார். ஜூனில் இளவரசர் அக்பரும் துர்க்காதாஸ் ரதாரும் வந்திருப்பதைக் கேள்விப்பட்டு அவருக்குப் புகலிடம் தந்து அக்பர் டெல்லி அரியணையைக் கைப்பற்றிக்கொள்ள ஒரு மராட்டியப் படையையும் கொடுக்க உடன்பட்டார். இந்த நட்புறவைப்பற்றியும், படையெடுப்பைப் பற்றியும் எழுந்த பேச்சுவார்த்தைகளின் விவரங்களை முடிவு செய்வதற்கு முன்னே, மீவார் ஜெய்சிங்குடன் சமரசம் பண்ணிக்கொண்ட அவுரங்கசீப் அக்பரைத் தொடரும்படி தமது மகன் ஆசமின் தலைமையில் ஒரு பெரும் படையை அனுப்பிவிட்டுத் தாமும் தக்காணத்துக்கு விரைந்து 1681 நவம்பர் 23ஆம் நாளில் பூரான்பூரை அடைந்தார். அவுரங்கசீப் சாம்பாஜிக்கு எதிராகத் தீவிர எதிர்ப்பு நடவடிக்கைகளுக்கு ஏற்பாடு செய்து, ஒரே நேரத்தில் மராட்டிய நாட்டைத் தாக்குவதற்கு, நான்கு திசைகளில் இருந்து நான்கு படைகளை அனுப்பினார். சயத் ஹாஸன் அலிகான் வட கொங்கணத்துக்கும், சகாபூதின் கான் நாசிக்கிற்கும், ரூ உல்லாக் கானும் இளவரசர் ஷா ஆலமும் ஆமதுநகர் மாவட்டத்தை மராட்டிய படையெடுப்பிலிருந்து பாதுகாக்கவும், இளவரசர் ஆசம் மராட்டியத் தளவாடங்கள் வருவதைத் தடுக்கவும், பீஜப்பூர் சுல்தான் அனுப்பக்கூடிய உதவிகளைத் தடைசெய்யவும் பீஜப்பூருக்கு அனுப்பப்பட்டார்கள். ஆனால், 1682-ல் பேரரசருக்கு நல்ல முறையான பயனொன்றும் ஏற்படாத

தால், 1683 ஏப்ரலில் அவர் படைகளை வாபஸ் பெற்ருர். நல்ல கால மாக இப்பொழுது சாம்பாஜி போர்த்துகீசியப் பகுதிகளைப் படை யெடுத்ததால் முகலாயர்களுடன் அவர் சமரசம் செய்துகொண்டார். சாம்பாஜியிடம் இருந்து உண்மையான உதவியை எதிர்பார்த்து ஏமாந்த இளவரசர் அக்பர், தாம் தங்கியிருந்த பாலி நகரத்தை விட்டுப் போர்த்துகீசியப் பகுதிகளுக்குச் சென்று அங்கிருந்து பார சீகத்துக்குக் கப்பலேறி ஷா மன்னரிடம் தஞ்சம்புக முடிவு செய்தார். ஆனல், துர்க்காதாஸும் சாம்பாஜியின் முதலமைச்சரான கவிகுல ஷும் அவர் பாரசீகத்திற்குப் போவதற்காக ஒரு கப்பலை வாங்கி, புறப்படுகின்ற நேரத்தில், விங்குர்லாவில் இருந்து திரும்பும்படி கேட்டுக்கொண்டார்கள். அக்பர், சாம்பாஜியிடமிருந்து போதிய உதவி பெறமுடியாமல் மற்ருேர் ஆண்டை (1684) சோம்பலில் கழித்தார். சாம்பாஜியின் அரசாங்கம் அவருடைய முதலமைச் சருக்கு எதிராக உள்நாட்டுப் பிரபுக்கள் கொண்டிருந்த பொருமை யுணர்ச்சிகளால் குழப்பமுற்றிருந்தது. கவிகுலஷ் வட இந்தியாவில் இருந்து வந்த கன்னியாகுப்ஜ பிராமண வகுப்பைச் சேர்ந்தவராகை யால் மராட்டியத் தலைநகரில் அந்நியரென வெறுக்கப்பட்டார். ஆகவே, அக்பர் தம் தந்தைக்கு எதிராக எவ்வகை எதிர்ப்பு நடவடிக்கையும் எடுக்கமுடியவில்லை.

அதற்கு மாருக, அவுரங்கசீப் ரேய்கார் அரசவையில் இருந்த குழப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டு 1683 செப்டம்பரில் மற்ருெரு படையெடுப்புக்குத் திட்டமிட்டார். அக்பரின் நடவடிக்கைகளைக் கவனிக்கும்படி ஜான் ஜிராலின் சிதியை நியமித்துவிட்டு, மராட்டியப் பகுதியில் முக்கியத் தாக்குதலைச் செய்யும்படி, தென் கொங்கணத் திற்கு ஷா ஆலத்தின் தலைமையில் ஒரு பலமான படையை அனுப் பினர். அதே சமயத்தில் பூனவிலும், நாசிக்கிலும், அகால்கோட் டிலும், மக்களைப் பீதியுறச் செய்து அவர்கள் மராட்டிய அரசருக்கு உதவுவதைத் தடுக்க வன்மையான படைப்பகுதிகள் நிறுவப் பட்டன. ஷா ஆலம் சவாந்தவாடிக்குள் புகுந்து பிச்சோலிம்மைக் கைப்பற்றி, சூழ்ச்சியால் கோவாவையும் பிடிக்கத் திட்டமிட்டான். இதனல் பகைகொண்ட போர்த்துகீசியர் இளவரசருக்கு தானியங் களைக் கொடுப்பதை நிறுத்திவிட்டார்கள். இதற்குள் ஷா ஆலம் வடக்கே சென்று மராட்டிய நகரங்களையும் கிராமங்களையும் தீக் கிரையாக்கியபோதிலும், பஞ்சத்தின் காரணமாக கோவாவின் வட பகுதிக்குத் திரும்பவேண்டியதாயிற்று. ஷாஆலம் ராம்காத் கண வாய்க்குத் திரும்பியபோது, அங்கே அவருடைய படைவீரரில் மூன்றில் ஒரு பகுதியினரும் பெருந்தொகையான சுமை தூக்கும் மிருகங்களும் கொள்ளை நோயால் அழிந்தன. எனவே, மராட்டியர் களுக்கு எதிராக எந்த வெற்றியும் பெருமல், அவர் ஆமதுநகருக்குப்

பின்வாங்கினர். ஆனல், பிற பகுதிகளில் முகலாயர் பெரும் வெற்றிகளைப் பெற்றுர்கள்; மராட்டியப் படை பலமுறை தோற்றது. இளவரசர் அக்பர் சபலத்துடன் 1686 பெப்ரவரியில் பாரசீகம் செல்வதற்காக, ராஜாபூரிலிருந்து புறப்பட்டு 1688 ஜனவரியில் பாரசீக அரசரவையை அடைந்தார். மற்ருெரு முகலாயப் படை மக்காராப் கானின் தலைமையில் இரத்தனகிரியில் இருந்து 22 மைல் தொலைவிலுள்ள சங்க மகேஷ்வர் என்ற இடத்தில் சாம்பாஜியைத் திடீரெனத் தாக்கியது. அங்கே சரண்புகுந்திருந்த மராட்டிய அரசர், குடியிலும் கேளிக்கையிலும் ஆழ்ந்திருந்தார். 1689 பெப்ரவரி 11ஆம் நாள் சாம்பாஜி அவருடைய அமைச்சர் கவிகுலஷுடனும் 25 முக்கிய ஆதரவாளர்களுடனும் சிறைப்பிடிக்கப்பட்டார். இவர்களை பகதூர்க்காரில் இருந்த அவுரங்கசீப்பின் முகாமுக்குக் கோமாளிகளின் உடையில் நீண்ட ஊர்வலமாக, தப்பும் தாரையும் ஒலிக்கக் கொண்டு வந்தார்கள். சாம்பாஜி தமது கோட்டைகளையும் செல்வங்களையும் தந்துவிடுவதாய் இருந்தால், அவுரங்கசீப் அவருக்கு உயிர்ப்பிச்சையளிக்க முன்வந்தார்; ஆனல், மராட்டிய அரசர் அதற்கு உடன்படாமல் வெளியரங்கமாக அரசரையும் தீர்க்கதரிசி முகம்மதுவையும் நிந்தித்து, அரசரின் புதல்விகளில் ஒருத்தியைத் தமக்கு மணம் செய்து தரும்படி கேட்டார். ஆகவே, அவரை வதைத்து, 24 நாட்களில் அவருடைய உறுப்புகளை ஒன்றென்ருக அறுத்து 1689 மார்ச் 21ஆம் நாளில் இறுதியாக அவரின் உடலைத் துண்டாடினுர்கள். அவ்வாறே கவிகுலஷும் வதைக்கப்பட்டுத் துண்டந்துண்டமாக வெட்டப்பட்டார்.

## பீஜப்பூர் நாடு அழிக்கப்படுதல், 1686

அவுரங்கசீப் மராட்டியர்களுக்கு எதிரான போர் நடவடிக்கைகளில் ஈடுபட்டிருந்தபொழுது, முதலில் ஷியா நாடுகளான பீஜப்பூரையும், கோல்கொண்டாவையும் முற்றிலும் பணியச் செய்தாலன்றி, மராட்டியர்களை ஒழிப்பது, நடைமுறையில் சாத்தியமாகாது என்பதை உணர்ந்தார். இந்நாடுகள் நேரடியாகவும், மறைமுகமாகவும் மராட்டிய மன்னரான சாம்பாஜிக்கு உதவிகள் அனுப்பிக்கொண்டிருந்தன. இறுதியாக, சிறிது கால அமைதியின் பின்னர், பீஜப்பூருக்கு எதிராகப் பேரரசர் ஒரு படையை அனுப்பினுர். பீஜப்பூர் அரசாங்கம், அதன் அமைச்சரான ஷார்ஷாகானின் கீழ் பலங்குன்றியிருந்தது. 1685 ஏப்ரலில் தலைநகரான பீஜப்பூர் தாக்கப்பட்டது. இளவரசர் ஆஸம் போர் நடவடிக்கைகளைத் தொடங்கிவைத்தார். பதினைந்து மாதங்கள் முற்றுகையிட்டும் கோட்டையைத் தகர்க்க முடியவில்லை. கோட்டையில் போதுமான பாதுகாப்பு இல்லாத

தாலும், சாம்பாஜியிடமிருந்து தளவாடங்களும், படை உதவிகளும் வந்துகொண்டிருந்ததாலும், கோல்கொண்டா சுல்தானும், முன்னாள் பீஜப்பூர் அமைச்சரும், இப்போது அதோனியில் சுயேச்சையான அரசருமாக இருந்த மசூதும் உதவியதாலும் கோட்டையைக் கைப் பற்ற முடியவில்லை. இதற்கு மாறாக, முகலாயப் படைகள் போதிய தளவாடங்கள் இன்றித் தொல்லைப்பட்டன. எனினும், காஸியூதின் பிரோஷ் ஜங் விரைவில் தளவாடங்களை அனுப்பிவைத்தார். எனி னும், இன்னும் கோட்டையைப் பிடிப்பதில் வெற்றி காண முடிய வில்லை. ஆகவே, 1686, ஜூலை 13ஆம் நாள் அவுரங்கசீப் நேரில் பீஜப்பூருக்குப் புறப்படவே, அவருடைய நேரடியான மேற்பார்வை யின் கீழ் முற்றுகை அதி தீவிரமாகச் செய்யப்பட்டது. அரசர் தனிப் பட்ட முறையில் போர் நடவடிக்கைகளை மேற்பார்வையிட்டு, தமது பிரசன்னத்தால், போர் வீரர்களை ஊக்குவித்தார். தளவாடங்கள் இன்மையால் நீண்ட நாளாகத் தொல்லைப்பட்டுக்கொண்டிருந்த படைகள் அதைரியமடைந்து, 1686 செப்டம்பர் 22ஆம் நாளில் சரணடைந்தன. அடில் ஷா அரச பரம்பரையின் கடைசி சுல்தா னை சிக்கந்தர் அவுரங்கசீப்பைக் கண்டு, நல்ல முறையில் வரவேற் கப்பட்டார். அவர் தமது நாட்டை இழந்து, முகலாய சேவையில் மான்சுப்தாராகப் பணியேற்று, 'கான்' என்ற சிறப்புப் பட்டத்தைப் பெற்றார். அவருக்கு ஒரு லட்சம் ரூபாய்கள் ஆண்டு ஓய்வூதிய மாகக் கொடுக்கப்பட்டது. அவுரங்கசீப் 22ஆம் நாள் காலியா யிருந்த நகரத்துக்குள் புகுந்து, அடில்ஷாவின் அரண்மனைச் சுவர் களில் இருந்த ஷியா வாசகங்களையும் படங்களையும் அழித்து, முன் னாள் சுல்தானின் பணியாளர்களைத் தமது சேவையில் எடுத்துக் கொண்டு, பீஜப்பூரை முகலாயப் பேரரசுடன் சேர்த்துக்கொண் டார்.

## கோல்கொண்டாவின் வீழ்ச்சி, 1687

அடுத்து, அரசர் தமது கவனத்தைக் கோல்கொண்டா நாட்டின் பால் திருப்பினார். அதன் சுல்தான் ஒழுங்காகக் கப்பம் செலுத்தி வந்ததால், 30 ஆண்டுகளாக கோல்கொண்டா முகலாயப் படை யெடுப்புகளுக்குத் தப்பி வந்தது. குதுப்ஷாகி அரச மரபின் கடைசி சுல்தானை அபுல் ஹாசன் அரசர், பிராமண அமைச்சரான மதனாவின் கைகளில் ஆட்சியை விட்டுவைத்திருந்தார். அரசர் தமது நேரத்தை ஆடல் மகளிருடனும், அரசவையினருடனும் வீணில் செலவிட்டு வந்தார். கோல்கொண்டா அரசவையில் இந்துக்களின் செல்வாக்கு மேலோங்கி யிருந்ததையும், கோல் கொண்டா மராட்டிய மன்னரான சாம்பாஜியுடன் நட்புறவு கொண்

டிருந்ததையும் குறிப்பாக அவுரங்கசீப் விரும்பவில்லை. போர் மூள் வதற்கு உடனடிக் காரணமும் ஒன்றுண்டு. முகலாயப் பாசறையில் இருந்த சுல்தானின் வகையாளருக்கு, சுல்தான் எழுதியிருந்த கடிதத்தை வழிமறித்துக் கைப்பற்றிப் படித்தபோது, அதில் குதுப் ஷா அவுரங்கசீப்பை, 'சிக்கந்தர் அடில் ஷா போன்ற ஆதரவற்ற அனுதையைத் தாக்கியதால் அவுரங்கசீப் அற்பத்தனமுள்ள ஒரு கோழை' என்று இழித்துரைத்து, பீஜப்பூருக்கு உதவியாகத் தாம் ஒரு வன்மையான படையை அனுப்புவதாகவும் எழுதியிருந்தார். இதனுல் வெகுண்ட அரசர், 1685 ஜூலையில், ஹைதராபாத்தைக் கைப்பற்றும்படி, ஷா ஆலத்தை அனுப்பி வைத்தார். ஆனுல், மால்கெட் என்ற இடத்தில் இளவரசர் ஒரு கோல்கொண்டா படையினுல் தடுத்து நிறுத்தப்பட்டதால் அவர் வெற்றி பெறவில்லை. ஆனுல், அக்போரில் கோல்கொண்டா படையின் தலைமைத் தளபதியாகிய மிர் முகமது இப்ராஹீம் முகலாயர்களிடமிருந்து கைக்கூலி பெற்றுக் கொண்டு, அவுரங்கசீப்புடன் சேர்ந்துகொண்டான். எனவே, சுல்தான் ஹைதராபாத்தை விட்டுவிட்டு, கோல்கொண்டா கோட்டைக்குத் தப்பியோடினுர். ஷா ஆலம் ஹைதராபாத்தைப் பிடித்துக் கொண்டான். வேறு வழியின்றி சுல்தான் பணிந்து, கீழ்க்கண்ட நிபந்தனைகளின் பேரில் மன்னிப்புப் பெற்றுர். (1) இரண்டு லட்சம் ஹன் நாணயங்களை ஆண்டுத் திறையாகத் தருவதுடன், ஒரு கோடியே இருபது லட்சம் ரூபாய்களையும் கொடுப்பது; (2) மதனுவையும், அக்கனுவையும் விலக்கவேண்டும்; (3) மால்ஹெட்டையும் சேரத்தையும் அவுரங்கசீப்புக்குக் கொடுத்துவிடுவது. ஆனுல், சுல்தான் அபுல் ஹாசன் மதனுவை விலக்குவதற்குச் சிறிது தயங்கியதால், முஸ்லீம் பிரபுக்களும், கோல்கொண்டாவின் இரண்டு பெருங் கோப்பெண்டுகளும் மதனுவையும் அக்கனுவையும் நகரத்தின் வீதிகளில் கொன்று, அவர்களுடைய குடும்பத்தார்களையும், வீடுகளையும் கொள்ளையடித்து அழித்தார்கள். இதனைத் தொடர்ந்து, கோல்கொண்டாவின் இந்துக்கள் தாக்கப்பட்டனர். மனநிறைவுற்ற முகலாயர்கள் கோல்கொண்டாவை விட்டு வெளியேறினுர்கள்.

அவுரங்கசீப்பின் திட்டங்களில், சுதந்திர கோல்கொண்டா என்பது பெருங் குற்றமாகும். எனவே, பீஜப்பூரைச் சேர்த்துக்கொண்டபின், அவர் அபுல் ஹாசனுக்கு எதிராகப் போர் நடவடிக்கைகளை மீண்டும் தொடங்கினுர். 1687, பிப்ரவரி 7ஆம் நாளில் அவுரங்கசீப் நேரில் கோல்கொண்டாவின் அரண்களுக்கு அருகில் தோன்றி, சுவர்களுக்கு வெளியே அணிவகுத்து நின்ற சுல்தானின் படைகளை முறியடித்தார். அதன் பின் கோட்டை முற்றுகையிடப்பட்டது. இளவரசர் ஷா ஆலம், சுல்தானிடமிருந்து பரிசுப் பொருள்களைப்

பெற்றுக்கொண்டு, சுல்தானின் வேண்டுகோளின்படி, அவருக்காக மன்னிப்புப் பெற்றுத்தருவதாக உடன்பட்டார். இந்த இரகசிய பேச்சுவார்த்தைகளைப்பற்றி அறிய வந்த அவுரங்கசீப், ஷாஆலத்தையும் அவருடைய குடும்பத்தினரையும் காவலில் வைத்து, அவர்களுடைய உடைமைகளைப் பறிமுதல் செய்தார். அவுரங்கசீப், தமது பிரபுக்களுக்குள் குறிப்பாக ஷியா பிரபுக்களுக்குள் இருந்த கருத்து வேறுபாடுகளை, அதாவது, ஒரு முஸ்லீம் தமது சகோதரனுடன் போர் தொடுக்கக்கூடாது என்ற எதிர்ப்புகளைத் தள்ளிவைத்துவிட்டு, நல்ல முறையில் பீரங்கிகளும் வெடிமருந்துகளும் பொருத்தப்பட்டிருந்த கோட்டைக்குள் இருந்து வந்த குண்டுமாரிகளையும் பொருட்படுத்தாமல், அதிகத் தீவிரமாக முற்றுகையில் ஈடுபட்டார். ஆனால், முகலாயரின் போர் நடவடிக்கைகள், தளவாடப் பற்றாக் குறையினாலும், ஓயாது பெய்த மழையினாலும் தடைப்பட்டன. முகலாயர்களின் தொல்லைகளைப் பயன்படுத்திக்கொண்டு ஜூன் 15ஆம் நாள் இரவில் எதிரியின் முன்னணி பீரங்கிகளைத் திடீரெனத் தாக்கி, முகலாயர்களின் முக்கிய பீரங்கிப் படை இயக்குநராகிய கிராத்கானையும், பிற உயர் அதிகாரிகளையும் சிறைப்பிடித்தனர். எனினும், முகலாயர்கள் ஜூன் 29ஆம் நாளில் இழந்த பீரங்கிகளை மீண்டும் பெற்றார்கள். கோட்டைச் சுவர்களின்கீழ் மூன்று சுரங்கங்களைப் புதைக்குமாறு அவுரங்கசீப் உத்தரவிட்டார். அவற்றை வெடிமருந்தினால் நிரப்பி, முதல் சுரங்கத்தை ஜூன் 30ஆம் நாளில் வெடித்தார்கள். ஆனால், அது குறி தவறி 1,100 முகலாய வீரர்களைக் கொன்றது. இந்த நேரத்தில் உள்ளிருந்தவர்கள் திடீர்த் தாக்குதல் செய்து முகலாயர்களின் அகழிகளையும் காவல் நிலையங்களையும் கைப்பற்றிக்கொண்டனர். எனினும், அவர்கள் முறியடிக்கப்பட்டுக் கோட்டைக்குள் விரட்டப்பட்டார்கள். இரண்டாவது சுரங்கம் வெடிக்கப்பட்டபோதும் முன்போலவே நாசக்கேடான விளைவுகள் ஏற்பட்டதால், எதிரிகள் திடீரெனத் தாக்கியதால் ஏற்பட்ட போரில் முகலாயர்கள் பெருத்த சேதம் அடைந்தார்கள். நிலமெல்லாம் நீர் வெள்ளமாக ஓடியதால் முகலாயர்கள் பின்வாங்கி ஓடினார்கள். இவ்வாறு கோட்டையைப் பிடிப்பதில் முகலாயர்கள் தோற்றாலும், முற்றுகை தொடர்ந்தது. மீண்டும் மீண்டும் தோற்றதாலும், பிணியாலும், மழையாலும், பஞ்சத்தாலும் முகலாயப் படைகளின் மனவுறுதி தளர்ந்தது. நூற்றுக் கணக்கான வீரர்கள் பட்டினிக்குப் பலியாயினர். கோல்கொண்டா வீரர்கள் அவர்களுக்கு ஓய்வே கொடுக்கவில்லை. ஆனால், அவுரங்கசீப் தமக்கே இயல்பான வக்ர உறுதியோடு, முற்றுகையைத் தொடர்ந்து, கோல்கொண்டா நாட்டைக் கைப்பற்றிக்கொண்டதாக அறிக்கையிட்டார். கோட்டைக்குள் சிக்கியிருந்த தங்களின் முன்னாள் அரசருக்கு எந்த உதவியும் அனுப்பவேண்டாமென்று அவர் கோல்கொண்டா மக்களைக் கேட்டுக்கொண்டார்.

நேரடிப் போரில் அரசர் எவ்வித முன்னேற்றமான வெற்றியும் பெருதபோது, அவுரங்கசீப் சூழ்ச்சி செய்து, கோல்கொண்டா கோட்டையை, அப்துல்லா பானி என்ற பெயருடைய சுல்தானின் ஆப்கானியப் பணியாள் ஒருவனுக்குக் கைக்கூலி கொடுத்து, அவனின் துரோகச் செயலால் கைப்பற்றினர். 1687 அக்டோபர் 2ஆம் நாளில் அதிகாலே 3 மணிக்கு அப்துல்லா கோட்டையின் கிழக்கு வாயிலேத் திறந்து, ருல்லாகான் உள்ளே நுழைய வழிசெய்தான். கோட்டைக்குள் சரிந்துகொண்டிருந்த முகலாயப் படைகளே எதிர்த்துப் போராடிய ஒரேயொரு கோல்கொண்டா படை அதிகாரி, அப்துல் ரஸாக் வாரி என்பவர், தம் உடலில் 70 விழுப்புண்களேத் தாங்கிக்கொண்டிருந்தார். அவர் எதிரிகளால் சூழ்ந்துகொள்ளப் பட்டு, மிதித்துக் கொல்லப்பட்டார். ருல்லாகான் அபுல் ஹாசனின் அரண்மனேக்குள் புகுந்தபோது, சுல்தான் தமது முடிவை ஏற்றுக் கொள்ளக் காத்திருந்தார். தமது காலேயுணவை முடித்துக் கொண்டு, தமது குடும்பத்தினருக்கு ஆறுதல் கூறிவிட்டு, ஒரேயடியாகத் தமது அரண்மனேயை விட்டு நீங்கினர். அவரை இளவரசர் ஆஸம், அவுரங்கசீப்பிற்கு அறிமுகம் செய்து வைத்தார். 'பிராமணர்களே ஆதரித்ததாலும், தங்களின் சமயத்தையும் நாட்டையும் காட்டிக்கொடுக்கும் அளவிற்குப் புறக்கணித்ததாலும்' தாமாகவே இந்தத் தண்டனேயைத் தம்மீது தேடிக்கொண்டதாக, அபுல் ஹாசன்மீது குற்றம் சாட்டினர். அவர் தௌலதாபாத் கோட்டைக்குக் கைதியாக அனுப்பப்பட்டு, ஆண்டுக்கு 50,000 ரூபாய் ஓய்வூதியத் தொகையாகப் பெற்ருர். பேரரசர் கோல் கொண்டாவிலிருந்து ரொக்கப் பணமாக 7 கோடி ரூபாயும், அணிகலன்கள், நவரத்தினங்கள், பொன், வெள்ளி, பொன்னுலும் வெள்ளியாலும் ஆகிய தளவாடப் பொருள்கள் போன்ற விலேமதிப்புள்ள பொருள்களேயும் பெற்ருர். கோல்கொண்டா, பீஜப்பூர் நாடுகளேயும், அவற்றின் கோட்டைகளேயும் சேர்த்துக்கொள்ளவேண்டிய நடவடிக்கைகளே எடுத்ததோடு, சாகார், அதோனி, கர்னூல், ராய்ச்சூர், செரா, பெங்களூர், பங்காப்பூர், பெல்காம், வந்தவாசி, காஞ்சிவரம் ஆகியவற்றையும் அவுரங்கசீப் கைப்பற்றினர்.

## மராட்டிய விடுதலேப் போர், 1689–1707

ஏற்கெனவே கூறப்பட்டதுபோல், அவுரங்கசீப், பீஜப்பூர், கோல் கொண்டாவின் வீழ்ச்சிக்குப் பின்னர், மராட்டிய அரசரான சாம்பாஜிக்கு எதிராகத் தமது போர் நடவடிக்கைகளே இரு மடங்காகப் பெருக்கி, 1689 மார்ச்சில் அவரைக் கைப்பற்றி, கொன்றுவிட்டார். மராட்டியத் தலேநகரான ரேய்காரும் இதனேயடுத்து வீழ்ச்சி

யுற்றது. ஆனால், காலஞ்சென்ற சாம்பாஜியின் இளைய சகோதரனும் புதிய மராட்டிய அரசருமான ராஜாராம், ஏப்ரல் 15ஆம் நாள் துறவியின் மாற்றுடையில் தப்பிச் சென்று, நவம்பர் 11ஆம் நாளில் செஞ்சிக் கோட்டையை அடைந்தார். அக்டோபர் 29ஆம் நாளில் ரேய்கார் வீழ்ச்சியுறவே, சாம்பாஜியின் குடும்பத்தினர், அவனது ஏழு வயது மகனை சாஹு உட்படச் சிறைப்பிடிக்கப்பட்டார்கள். இதுகாலை அவுரங்கசீப் (1639ஆம் ஆண்டின் இறுதி) தக்காணம் உட்பட அகில இந்தியாவின் மீதும் ஆதிக்கம் செலுத்தினார். ஆனால், அவருடைய வெற்றிகள் அதிக நாள் நீடித்திருக்கவில்லை. சில ஆண்டுகளுக்குள் மராட்டியர்கள் அவருடைய மேலதிகாரத்தை எதிர்த்ததுமன்றி, அவுரங்கசீப்பின் நாடுகளையும் முகாமையும் பல முறைகள் தாக்கி, அவரின் நிலையை மிகத் தொல்லைக்குள்ளாக்கினார்கள். செஞ்சியில் ராஜாராமை முற்றுகையிட அரசர் ஒரு படையை அனுப்பியபோதிலும், 1698 ஜனவரி 18ஆம் நாள்வரையிலும் கோட்டையை முற்றுகையிட முடியவில்லை. இதைப்பற்றி தக்க காலத்தில் எச்சரிக்கப்பட்ட ராஜாராம் வேலூருக்குத் தப்பியோடினார். சாம்பாஜியின் மரணத்திற்குப் பின்னர், அவுரங்கசீப் மராட்டியர்களின் வளர்ச்சியைப்பற்றி அதிகக் கவலைப்படவில்லை 1690–1691-ல் பீஜப்பூரையும் கோல்கொண்டாவையும் கைப்பற்றுவதிலே தான் அவருடைய கவனம் இருந்தது. எனினும், விரைவில் அவர் நிலைமையின் உண்மை நிலையைப் புரிந்துகொண்டார். ஏனெனில், சீக்கிரமே மராட்டிய மக்களின் போரை எதிர்க்கவேண்டியதாயிற்று. தங்களது அரசரின் மரணத்திற்குப் பின்னர், மராட்டியத் தலைவர்களான ராம்சந்திர பாவ் தேகர், சங்காஜி மால்ஹார், பரசுராம் திரிம்பக், பிரஹலாத் நிராஜி ஆகியோர் முகலாயர்களுக்கு எதிராக ஒரே நேரத்தில் திறமையும் ஊக்கமுமுள்ள பல தளபதிகளின் தலைமையில் பல முனைகளிலிருந்து தாக்கிப் போரிடும் ஒரு விரிவான படையெடுப்பு ஏற்பாடுகளுக்குத் திட்டமிட்டார்கள். மராட்டிய நாட்டிலுள்ள எல்லாத் தளபதிகளுக்கும், அதிகாரிகளுக்கும் மேல் முழு அதிகாரம் பெற்ற ராம்சந்திர பாவ்தேகர் சர்வாதிகாரியாக விளங்கினார். முகலாயர்களுக்கு எதிரான போர் நடவடிக்கைகளை நடத்த அவர் தானாஜி ஜதாவ், சந்தாஜி கோர்பொரே என்ற இரு திறமையுள்ள தளபதிகளை நியமித்தார். இவர்கள் இருவரும் ஒரு போர் முனையிலிருந்து, மறுமுனைக்கு தக்காணத்தைக் கடந்துசென்று, கொரில்லாத் தந்திரங்களினால் பேரரசருக்குப் பெருந்த நாசத்தையும், முகலாயர்களுக்கு எல்லையற்ற குழப்பத்தையும் விளைவித்தார்கள். 'மராட்டியர்களிடையே பொதுவான தலைமையும் அரசாங்கமும் மறைந்து விட்டதால், அவுரங்கசீப்பின் தொல்லைகள் பன்மடங்காகப் பெருகின. ஏனெனில், ஒவ்வொரு சிறிய மராட்டியப் படைத் தலைவனும் தன்னிச்சையாகப் பல்வேறு பகுதிகளில் போரிட்டதோடு கொள்ளையும்

அடித்தான். இது முதல் மராட்டியர்கள் கொள்ளைக் கூட்டத்தின ராகவோ, உள்நாட்டுக் கிளர்ச்சி செய்யும் குடிகளாகவோ இராமல், தக்காண விவகாரங்களில் முதன்மை பெற்ற பேராற்றலாகவும், இந்தியத் தீபகற்பம் முழுவதும் விரிந்து பரவியிருந்த எதிரிகளாகவும், காற்றைப் போன்று கைப்பிடிக்குள் அகப்படாமலும், டெல்லிப் பேரரசின் எதிரிகள் யாவருடையவும் சர்வ சக்திகளும் நிலைகுத்திடும் மையமாகவும், தக்காணம் முழுவதிலும், மாளவம், கோண்டுவான, பந்தல்கண்டு ஆகிய பகுதிகளில் பொது அமைதியைக் குலைப்பவர்களாகவும் இருக்கிறார்கள். முகலாயர்கள் நாடு முழுவதும் முழு பலத்துடன் ஒரே நேரத்தில் பரவி இருக்க முடியாமையால், அவர்கள் பல இடங்களில் தோல்வியுற்றார்கள்' என்று சர். ஜாதுநாத் சர்க்கார் எழுதுகிறார்.

மராட்டிய மக்கள், சாம்பாஜியின் மரணத்தின் பின்னர் ஒரேயோர் ஆண்டில் மட்டும் நிலைகுலைந்திருந்தார்கள். அவர்களின் தலைநகர் முற்றுகையிடப்பட்டதும், புதிய அரசர் செஞ்சிக் கோட்டைக்குத் தப்பியோடியதும், அவர்களைத் தாக்கி அதிர்ச்சியுறச் செய்தனவென்றாலும், அவுரங்கசீப் வீழ்ச்சியுற்ற பீஜப்பூர், கோல்கொண்டா நாடுகளின் பகுதிகளைக் கைப்பற்றிக்கொள்வதில் முனைந்திருக்கிறார் என்பதைக் கண்டதும், அவர்கள் அதிர்ச்சியிலிருந்து தெளிந்து, முகலாயர்களுக்கு எதிராக இருமுனைப் போராட்டத்தைத் தொடங்கினார்கள். இதில் முதல் முனை ஏற்கெனவே கூறப்பட்டது போன்று, சர்வாதிகாரம் பெற்றிருந்த ராம்சந்திர பாவ்தேகரின் தலைமையில் மராட்டிய நாட்டிலேயே நடந்துவந்தது. அடுத்தது கிழக்கு முனையாகிய கர்னடகத்தில் பிரஹலாத் நிராஜி என்பவரின் தலைமையில் அத்தகைய அதிகாரங்களுடன் இயங்கியது. உண்மையான அதிகாரங்கள் யாவும் தானாஜி ஜாதவ், சந்தாஜி கோர்பெரே ஆகிய இருவரிடம் இருந்தன. 'இவர்கள் அடிக்கடி தக்காணப் பீடபூமியின் குறுக்கே ஒரு போர்முனையிலிருந்து மறு முனைக்குச் சென்று முகலாயர்களிடையே பெரும் நாசத்தையும் குழப்பத்தையும் விளைவித்தனர்.'

17ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் முஸ்லீம்களால் வெல்லப்பட்டிருந்த கிழக்குக் கர்நாடகம் ஹைதராபாத், பீஜப்பூர் என இரு பகுதிகளாகப் பிரிந்துகிடந்தது. 1677-ல் சிவாஜி செஞ்சியையும், அதன் சுற்றுப்புற மாவட்டங்களையும் வென்றிருந்தார். எனவே, இதுகாலை கர்நாடகம் மூன்று சுதந்திரப் பகுதிகளாகப் பிரிந்திருந்தது: கர்நாடகத்தின் முகலாயப் பகுதிகளின் பொறுப்பில் இருந்த சிவாஜியின் மருமகனான ஹிராஜி, பாலாற்றுக்கு வடக்கே இருந்த ஹைதராபாத் கர்நாடகத்தின் பெரும் பகுதியை வென்றிருந்

தார். 1689 செப்டம்பரில், ஹாராஜி மரணமானதும், ராஜாராம் செஞ்சிப் பகுதிகளைக் கைப்பற்றிக்கொண்டு, 1690 செப்டம்பரில் சுல்ஃபிகார் கான் என்பவரால் செஞ்சிக்கோட்டையில் முற்றுகை செய்யப்பட்டிருந்தார். இந்தக் கோட்டை எளிதில் உட்புக முடியாத வன்மை பெற்றிருந்ததால், முற்றுகை 1698 ஜனவரி 18ஆம் நாள் வரை நீடித்தது. அன்று கோட்டையைத் தாக்கவே ராஜாராம் விசால்காருக்குத் தப்பியோடினர். இந்தக் காலப் பகுதியில் முகலாயர் களுக்கும், மராட்டியர்களுக்கும் அதிக இழப்புகள் ஏற்பட்டன. முகலாயர்கள் மராட்டியர்களைவிட அதிக சேதங்களை அனுபவித் தனர் என்று கூறவேண்டும். ஒரு தடவைக்கு மேலாகவே, சுல்ஃபிகார் கான் முற்றுகையைத் தளர்த்தவேண்டியதிருந்தது. இறுதியில் அவர் ராஜாராமுடன் ஒரு இரகசிய உடன்பாட்டைச் செய்யவேண்டியதாயிற்று. செஞ்சிக் கோட்டையின் வீழ்ச்சிக்குப் பின்னர், மராட்டியப் பகுதியின் மேற்கத்திய முனைக்குப் போர் நடவடிக்கைகள் மாற்றம் செய்யப்பட்டன.

மராட்டியக் கேந்திரத்தில் போரானது எழுச்சியற்ற மந்த நிலையில் நடந்துகொண்டிருந்தது. ஷார்ஷாகானை முறியடித்தது தான் மராட்டியர்களின் முதல் வெற்றியாகும். 1690 ஜூன் 4ஆம் நாளில் ஷார்ஷா கான், தம்முடைய குடும்பத்துடனும் முகாமுடனும் சாதாராவுக்கு அருகில் சிறைப்பிடிக்கப்பட்டு, 1,500 படை வீரர்களை இழந்தார். சீக்கிரமே மராட்டியர்கள், பிரதாப்கர், ரோஹிரா, ரேய்கார், தோர்ணு ஆகிய கோட்டைகளை மீண்டும் கைப்பற்றிக் கொண்டார்கள். 1692ல் சந்தாஜியும் தானுஜியும் முகலாயர்களைத் திடீரெனத் தாக்கி அவர்களிடையே குழப்பத்தை விளைவித்து, தொல்லை கொடுத்ததன் காரணமாக, அவர்கள் பன்ஹாலா அரணைத் திரும்பப் பிடித்துக்கொண்டார்கள். முகலாயர்களைச் சேர்ந்த மால்க்ஹெட் பகுதியில் சௌத் வசூலிப்பதிலும் சாந்தாஜி வெற்றி கண்டார். 1695 டிசம்பரில், சாந்தாஜி துரிதத் தாக்குதலினுல் காஸிம்கானைத் திகைக்கச் செய்தார். சாந்தாஜியின் போக்கைத் தடுத்து நிறுத்துவதற்காக காஸிமை, அவுரங்கசீப் அனுப்பியிருந்தார். சாந்தாஜி அவரை முறியடித்து, முகலாயத் தளபதியின் முகாமைக் கொள்ளையடித்தார். காஸிம்கான் தற்கொலை செய்துகொள்ளவே, எஞ்சியிருந்த அவரது படைவீரர்கள் சாந்தாஜிக்கு 20 இலட்சம் ரூபாய்களைப் பிணையமாகத் தருவதாக வாக்களிக்கவேண்டிய திருந்தது. 1696 ஜனவரியில், சாந்தாஜி, ஹிம்மத்கான் என்ற மற்ரெரு முகலாயத் தளபதியைக் கொன்று, அவனுடைய உடைமை களைக் கொள்ளையடித்தார். கெட்ட காலமாகத் தானுஜி ஜாதவுக்கும் சாந்தாஜி கோர்பெரேவுக்கும் இடையில் ஒரு சர்ச்சை மூண்டது. அவர்கள் இருவரும் படைத்தலைமைத் தளபதிகளாகவேண்டு

மென்று போராடியதில், போர் மூண்டு சாந்தாஜி கொலையுண்டார். அசாதாரணமான திறமையும் ஊக்கமும் கொண்ட தளபதியாக இருந்தாலும், சாந்தாஜி முன்கோபமும் பணிவின்மையும் கொண்ட அதிகாரியாகையால், ராஜாராமுக்குக் கோபத்தை மூட்டினார். இவ்வாறு மராட்டியர்களுக்குள் மூண்ட உள்நாட்டுப் போரானது ஓராண்டுக்காலம் முகலாயர்களுக்கு ஓய்வு கொடுத்தது. 1697–1698-ல் போர் தொடர்ந்து நடந்தது. விசால்காருக்குத் தப்பிச் சென்ற ராஜா ராம் பாரண்டாவுக்கு அருகில் பிடிபடாமல் தப்பித்துக்கொண்டார். 1700 மார்ச்சு 12ஆம் நாளில் ராஜாராம் சிங்கார் என்ற இடத்தில் காலமானார். மூன்றும் சிவாஜிக்கும் இரண்டாம் சாம்பாஜிக்கும் இடையே நடந்த சிறு வாரிசுரிமைப் போரின் பின்னர், மூன்றும் சிவாஜி, தமது அன்னையாரான தாராபாயின் செல்வாக்காலும் திறமையாலும் மராட்டியர்களின் மன்னராக அரியணையேறினார். இவ்வாறு தம் எதிரிகளிடையே பிளவுகள் ஏற்பட்டிருந்தபோதிலும், முகலாயர்கள் மராட்டிய நாட்டில்கூடப் போதிய அளவு வெற்றிபெற முடியவில்லை. எனினும், அவர்கள் வடகொங்கணத்தில் கல்யாண் முதலிய பகுதிகளைப் பிடித்துக்கொண்டார்கள். இறுதியில் மராட்டியர்களை அழிக்க முடியாதென உணர்ந்துகொண்ட அவுரங்கசீப், 1695 மேயில், ஆப்கானிஸ்தானம், சிந்து, பஞ்சாபு ஆகிய பகுதிகளின் பொறுப்பை ஏற்றுக்கொள்ளவும், பின்னர் வட இந்திய விவகாரங்களைக் கவனித்துக்கொள்ளவும் இளவரசர் ஷா ஆலத்தை அனுப்பினார். அவர் தானே நேரில் சென்று, மராட்டிய நாட்டின் மையத்தில், பிரம்மபுரியில், தமது தலைமைப் பீடத்தை நிறுவிக் கொண்டு மராட்டியர்களுடன் போரைத் தொடர்ந்து நடத்தியும், அவர் வெற்றி பெறவில்லை. மராட்டியர்கள், இடைவிடாத கொரில்லாப் போர் நடவடிக்கைகளின்மூலம், மராட்டிய நாட்டிலும் கன்னடத்திலும் அவுரங்கசீப் தற்காப்பு நடவடிக்கைகளில் மட்டுமே ஈடுபட்டிருக்கும்படியாகச் செய்துவிட்டனர். முகலாய அதிகாரிகள் பீதியும் களைப்பும் கொண்டனர். அவர்களில் பலர் மராட்டியர்களுடன் தனிப்பட்ட உடன்பாடுகளைச் செய்துகொண்டு, முகலாயப் பகுதிகளிலிருந்து பெற்ற கொள்ளைப் பொருள்களைப் பகிர்ந்துகொண்டனர். ‘முகலாய ஆட்சிமுறை அநேகமாகச் சிதைந்துவிட்டது. அரசரின் பிரசன்னம் மட்டுமே அதனை ஓர் உயிரற்ற நிழல் ஆட்சிமுறையாக எங்கணும் இணைத்து நின்றது’ என சர் ஜாதுநாத் சர்க்கார் குறிப்பிடுவது முற்றிலும் உண்மையே. இந்தச் சூழ்நிலையில் அவுரங்கசீப், மராட்டிய அரண்களைத் தாமே நேரில் தாக்குகின்ற கொள்கையைப் பின்பற்றி வெற்றி கண்டாரில்லை. அவர் ஒரு கோட்டையைப் பிடிப்பதற்குள், பிறிதொன்று அவர் பிடியினின்று நழுவி விடும். இந்த நிலை அவர் இறக்கின்றவரையில் நீடித்தது. ‘அவுரங்கசீபின் வாழ்க்கையின் எஞ்சிய பகுதி அதே சுவையற்ற கதையின்

திருப்பமே. பெருமளவில் மக்களையும், காலத்தையும், பொருள் களையும் செலவிட்டு அவர் நேரில் சென்று ஒரு கோட்டையைப் பிடிப்பார். ஆனால், சில மாதங்களுக்குள் வலிமையற்ற முகலாயர் களிடம் இருந்த கோட்டையை மராட்டியர்கள் மீண்டும் கைப்பற்று வார்கள். ஓரிரண்டு ஆண்டுகளில் அதன் முற்றுகை மீண்டும் தொடங்கும். வெள்ளப் பெருக்குள்ள ஆறுகளையும், சகதி நிறைந்த சாலைகளையும், ஒழுங்கற்ற மலைவழிகளையும் கடந்து, அவருடைய படைவீரர்களும் ஆதரவாளர்களும் எல்லையற்ற தொல்லைப்பட் டார்கள். சுமை தூக்குவோர் மறைந்தனர். சுமை தூக்கும் விலங்கு களும் பட்டினியாலும் வேலைப்பளுவாலும் இறந்தன. தானியப் பற்றுக்குறை மராட்டிய முகாம்களில் என்றும் இருந்தது. பெரெட் கொள்ளைக்கூட்டத்தினர் (அவர்களுக்கு அவர் சூட்டிய அதிகார பூர்வமான பெயர்) அண்மையில் சுற்றிக்கொண்டிருந்தனர். அவரது தளபதிகளுக்குள் இருந்த பொறாமையுணர்ச்சிகள் அவரது நோக்கத்தைப் பாழாக்கி, அவரது வெற்றிகளைக் காலங்கடக்கச் செய்தன. சதாரா, பார்லி, பன்ஹாலா, கெல்னு (விசால்கார்), கொண்டாணு (சிங்கார்), ரேய்கார், தோர்ணு, வாஜின்ஜிரா ஆகிய எட்டு அரண்களும், முக்கியத்துவத்தில் குறைந்த இன்னும் ஐந்து இடங்களும் அவரை ஐந்தரை ஆண்டுப் போரில் ஈடுபடச் செய்தன (1699-1705). இதன்பின் நலங்குன்றிய, எண்பத்திரண்டு வயதான அரசர் ஓய்வு பெற்று இறந்தார்' என்று சர் ஜாதுநாத் எழுதுகிறார்.

ஓய்வில்லாத கடின உழைப்பினால் அவுரங்கசீப் உடல் நலங் குன்றினார். எனவே, வஞ்ஜின்ஜிராவைக் கைப்பற்றியதும் அவர் பிணியுற்றார். இதனால் மாற்றான் நாட்டில் தமது வருங்காலத்தைப் பற்றிய உறுதியில்லாத காரணத்தால் முகலாயப் படைவீரர்க ளிடையே பீதி உண்டாகியது. அதற்குள் அரசர் குணமுற்று, ஆமது நகருக்கு மெதுவாகப் புறப்பட்டு, 1706 ஜனவரி 31ஆம் நாளில் அங்குப் போய்ச் சேர்ந்தார். அவர் இருபத்தைந்து ஆண்டுகளாக தக்காணத்தில் நடத்திய போரினால் தென்னிந்தியா அழிவுற்று, பெருந்தொல்லைக்கு உள்ளாகியிருந்தது. தக்காணத்தில் அவர் பின் பற்றிய கொள்கை பயனற்றுவிட்டதால், அவருடைய தோல்வியின் காரணமாக மராட்டியர்கள் பெருக்கம் கொண்டனர். அவுரங்கசீப் ஆமதுநகர் நோக்கிச் சென்ற பயணத்தில் மராட்டிய படைத்தலைவர் களும் அவரைப் பின்சென்று, தளவாடங்களின் வருகையையும் போக்குவரவு வழிகளையும் வெட்டிவிட்டு, படை அணியிலிருந்து பிரிந்து சுற்றித்திரிவோரைத் தாக்கி, பேரரசரின் சொந்த முகாமையே தாக்குவதற்குத் தயாரானார்கள். 'பலம்கொண்டு முகலாயர்கள் தாக்கும்போது, அவர்கள் (மராட்டியர்) சிறிது பின்வாங்கிச் சென்று, துடுப்பினால் பிரிக்கப்பட்ட நீர் மீண்டும் கூடுவதைப்போன்று,

தாக்கியவர்கள் படையின் முக்கியப் பகுதிக்குத் திரும்பிச் சென்றதும், மீண்டும் இணைந்துவிடுவார்கள்.' அவர்களை இனிக் கொள்ளையடித்துத் திரியும் குதிரை வீரர்கள் என்று சொல்ல முடியாது. ஆனால், அவர்களிடம் பீரங்கிகளும், முறையான ஒரு படைக்கு வேண்டிய போர்த் தளவாடங்களும் இருந்தன. அரசர் ஆமதுநகரை அடைந்ததும், அவர்கள் அவுரங்கசீபின் முகாமை முற்றுகையிட்டார்கள். 1706 மேயில் நீண்ட வன்மையானவொரு போராட்டத்தின் பின்னர்தான் அவர்கள் பின்வாங்கினர். இதே நேரத்தில் அவர்கள் சுற்றுவட்டாரத்தில் இருந்த குஜராத், காண்டேஷ், மாளவம் ஆகிய முகலாயப் பகுதிகளுக்குள் புகுந்து தாக்கவும் தொடங்கினார்கள். தானுஜி ஜதாவ், காண்டேஜையும் பீராரையும் தாக்கினர். அவுரங்காபாத்திலிருந்து ஆமதுநகருக்குச் சென்றுகொண்டிருந்த, பாதுகாப்புடன் சென்றவொரு படையை மராட்டியர் கொள்ளையடித்தனர். இந்தத் தொல்லைகளின் நடுவே, 1707ஆம் ஆண்டு மார்ச்சு திங்கள் 3ஆம் நாளில் அவுரங்கசீப் காலமானர். அவருடைய சடலம், தௌலதாபாத்திலிருந்து நான்கு கல் தொலைவிலிருந்த ஷேய்க் ஜேயினுல் ஹக் என்பவரின் சமாதிக்கு அருகில் அடக்கம் செய்யப்பட்டது.

அவுரங்கசீபின் தக்கணக் கொள்கை கடுந்துன்பம் தரும் வகையில் தோல்வியுற்றது. மராட்டியர்களை அழிப்பதற்குப் பதிலாக, அவர்கள் தம்மை ஒரு நாட்டினராக அமைத்துக்கொண்டு, பேரரசுக்கு எதிராகக் கிளம்பும்படி செய்துவிட்டது. முகலாயப் பேரரசின் வருங்காலத்தையும், தனது அரசபரம்பரையின் கதியையும் பற்றிய அச்சத்தின் காரணமாக, அவுரங்கசீபின் இறுதி நாள்கள் இருள் சூழ்ந்திருந்தன. அவுரங்கசீப் தமது குமாரர்களுக்குள் ஏற்படக்கூடிய வாரிசுரிமைப் போரைத் தடுக்கவேண்டுமென்று ஆசை கொண்டிருந்தபோதிலும் இளவரசர் ஆஸம் தமது சகோதரனுகிய காம் பக்ஷை அழித்துவிட்டு, அரியணையைத் தனதாக்கிக்கொள்ளத் திட்டமிட்டான். தான் இறப்பதற்குச் சில நாட்களின் முன்னர்தான் அவுரங்கசீப், இளவரசர் ஆஸமை மாளவத்தின் கவர்னராக நியமித்திருந்தார். ஆனல், அவர் வழியிலேயே தன் தந்தையின் மரணச் செய்தியைக் கேள்விப்பட்டு, நாடு திரும்பி, தனது சகோதரர்களான ஷா ஆலத்தையும் காம் பக்ஷையும் எதிர்த்துத் தானே அரசனுக வேண்டுமென்று போர்நடவடிக்கைகளை எடுக்கத் தயாரானர். இதற்கு அவுரங்கசீபே ஒரு காலத்தில் வழிகாட்டியிருந்தார்.

## அவுரங்கசீபின் ஆட்சிமுறை

அவுரங்கசீபின் ஆட்சிமுறை மிக உயர்ந்த முறையில் அதிகாரக் குவிப்பைக்கொண்ட வல்லாட்சியாகும். எல்லா அதிகாரங்களும்

அரசரிடம் குவிந்திருந்தன. அவர் ஃபிரான்ஸ் நாட்டின் பதினான்காம் லூயியைப்போன்று தமக்குத்தாமே தலைமையமைச்சராக இருந்தார். மிகக் கடின உழைப்புக்குப் பெயர்பெற்ற அரசர், அரசாங்கத்தின் மிக நுட்பமான விவரங்களையும் கவனித்தார். அவரே விண்ணப் பங்களைப் படித்து, தமது கைப்படவே ஆணைகளை எழுதியும், அல்லது மற்றவர்களைக் கொண்டு எழுதச்செய்தும் வெளியிடுவார். அமைச் சர்கள் உட்பட அவருடைய அதிகாரிகள் யாவரும் கண்டிப்பான கட்டுப்பாட்டுக்குள் இருந்தனர். அரசர், அவர்களைத் தமது கொள்கைகளைத் தூண்டவும் உருவாக்கவும் விடுவதில்லை. ஏனெனில், நாட்டில் தமக்குப் போட்டியாக அதிகார்முள்ளவர் எவரும் இருப்பதை அவுரங்கசீப் அனுமதிக்கமாட்டார். அவருக்குரிய தனிச் சிறப்புரிமைகளைப்பற்றி அவர் தன்னுணர்ச்சி மிக்கவராக இருந் தார். அவர் தமது ஆணைகளை அமலாக்குவதில் மிகக் கண்டிப்பாக இருந்தார். வங்காள கவர்னரான இப்ராஹிம்கான், ஒரு சாய்விருக் கையில் அமர்ந்து காஸியை அருகில் இருக்கச்செய்து, பிற அதி காரிகள் தரையில் பணிவுடன் வீற்றிருக்க அரசவையைக் கூட்டி னான் என்று கேள்விப்பட்டதும், அவுரங்கசீப் தமது வஸீரை அழைத்து, 'கவர்னர் பிணி காரணமாகத் தரையில் உட்கார முடி யாத நிலையில் இருந்தால், அவர் குணம் பெறுகின்ற வரையில் அவருக்கு மன்னிப்பு வழங்கப்படும் என்றும், அவர் உடனே தனது மருத்துவர்களை அழைத்துக் குணம் பெறவேண்டும் என்றும்' பொருள் பொதிந்த நகைச்சுவையுடன் எழுதுமாறு கட்டளையிட்டார். அரசரின் தனிச் சிறப்புரிமையாக இருந்த கித்தான் திரைகளைப் போட்டுக் கொண்டு பிரார்த்தனை நடத்தியதற்காக, அவுரங்கசீப் இளவரசர் மாசமைக் கடிந்துரைத்தார். 'ஒரு தனிப்பட்ட விதி புறக்கணிக்கப் படுமானால், சகல ஒழுங்கு முறைகளும் அழிந்துவிடும்' என்று அவர் கூறுவது வழக்கம். ஆட்சி முறையின் அதிகாரக் குவிப்பினாலும், கடமையுணர்ச்சியைப்பற்றி அவுரங்கசீப் கொண்டிருந்த குறுகிய எண்ணத்தாலும், அவருடைய அமைச்சர்கள் வெறும் எழுத்தர்கள் என்ற நிலையையடைந்து, பொறுப்புகளை ஏற்றுக்கொள்வதில் இருக்க வேண்டிய ஊக்கமும், அச்சமின்மையும் இன்றி அவர்கள் இருந் தனர். இதனால் ஆட்சித்துறையில் சீர்கேடும் குலைவும் ஏற்பட்டன.

ஏற்கெனவே கூறப்பட்டதுபோன்று, அரசர் நாட்டைப்பற்றிய இஸ்லாமியக் கொள்கையில் நம்பிக்கையுடையவர். எனவே, அவர் அரசியலிலும், பொருளாதாரத்திலும், மற்றெல்லாவற்றிலும் 'ஷாரா வை'ப் பின்பற்றி, இந்தியாவை ஒரு முஸ்லீம் நாடாக மாற்ற முழுமூச் சுடன் உழைத்தார். இவ்வாறு அவருடைய ஆட்சிமுறையின் அமைப்பு, அவரது முன்னோர்கள் காலத்தில் இருந்ததுபோன்று தொடர்ந்து இருந்துவந்தாலும், ஆட்சித்துறை நிறுவனங்கள் செய

லாற்றிய முறையிலும், உளப்பாங்கிலும் பெரியதொரு மாற்றம் ஏற் பட்டிருந்தது.

1707-ல் அவுரங்கசீப் காலமானபோது, முகலாயப் பேரரசில் இருபத்தொரு மாநிலங்கள் அடங்கியிருந்தன. அவற்றில் பதி னுன்கு வட இந்தியாவிலும், ஆப்கானிஸ்தானம் இந்தியாவுக்கு வெளியிலும், எஞ்சியிருந்த ஆறும் தக்கணத்திலும் இருந்தன. அவையாவன: ஆக்ரா, ஆஜ்மீர், அலகாபாது, அவாது, வங்காளம், பீஹார், டெல்லி, குஜராத், காஷ்மீர், லாகூர், மாளவம், மூல்தான், ஒரிஸா, காட்டா (சிந்து), காபூல், அவுரங்காபாது, பீரார், பீடார் (தெலுங்கானு), பீஜப்பூர், ஹைதராபாது, காண்டேஷ். பேரரசு, இந்துகுஷ் மலைகளிலிருந்து, தஞ்சாவூருக்கு வடக்கேயிருந்த கொள்ளிடம் (கோக்ரூம்) ஆறுவரை பரவியிருந்தது. ஆனுல், மராட்டிய நாடு, கன்னடம், மைசூர், கீழ்க் கர்னுடகம் ஆகிய பகுதி களில் முகலாயர்களின் அதிகாரத்திற்கு எதிர்ப்பு இருந்தது. அக்பர் காலத்திலிருந்தது போலவே ஒவ்வொரு மாநிலத்திலும் ஒரு கவர் னர், திவான், இன்னும் பல அதிகாரிகளும் இருந்தனர். இவர்கள் அரசரால் நியமிக்கப்பட்டு, அவருக்கே பொறுப்புடையவர்களாக இருந்தனர். அரசர் என்ற வகையில் அவுரங்கசீப் திறமையும், கண்டிப்பும் கொண்டிருந்தாலும், வட இந்தியாவிலிருந்து அவர் இருபத்தைந்து ஆண்டுகளுக்குமேலாகவே வெளியேறி, தக்கணத் தில் தொடர்ந்து போர்களில் ஈடுபட்டிருந்ததன் காரணமாக, ஆட்சித்துறை பெருமளவில் நலியத் தொடங்கியது. அரசர் இடை விடாத போர்களில் ஈடுபட்டிருந்ததாலும், அவருடைய விவேகமற்ற சமயப் பொறையற்ற கொள்கையாலும், மைய அரசு பலங்குன்றிய தன் விளைவாக, வட்டாரத் தலைவர்களும் ஜமீன்தார்களும் சட்டத் தையும், ஒழுங்கையும் புறக்கணித்தார்கள்.

பேரரசின் ஆண்டு வருமானம், வரலாற்று அறிஞராகிய சர் ஜாதுநாத் சர்க்காரின் மதிப்பீட்டின்படி, முப்பத்துமூன்று கோடியே எண்பத்தைந்து இலட்சம் ரூபாய்கள் எனக் கணக்கிடப்பட்டிருக் கிறது. நிலவரியைத் தவிர, அரசினரின் பிற முக்கிய வருவாய்கள் 'ஸகாத்' (முஸ்லீம்கள் தந்த பத்தில் ஒரு பாக வரி), ஜிஸ்யா (இந்துக் களின் தலைவரி), உப்புவரி, சுங்கவரி, நாணயச்சாலை, போர்வரி முதலியனவுமாகும். அவுரங்கசீப் இஸ்லாமிய வரிக்கொள்கையைப் பின்பற்றியதால், இஸ்லாமியர் அல்லாதார்மீது வரியை விலக்கி இந் துக்கள்மேல் யாத்திரிகர் வரி, ஜிஸ்யா வரி போன்ற வரிகளை விதித்து, சட்டத்திற்கு முரணுன பல வரிகளையும், அப்வாபுகளையும் நீக்கியதால் ஏற்பட்ட இழப்பிற்கு ஈடுசெய்தார். அக்பர் காலத்தில் தோடர் மாலின் பெயரால் இருந்த ரயத்வாரி முறையின்படி நிறுவப்பட்டிருந்த

வரி நிர்ணயமும் வரி வசூலிக்கும் முறையும் கைவிடப்பட்டு, அதற்குப் பதில் குத்தகை முறை ஏற்படுத்தப்பட்டிருந்தது. இதன்படி, நிலத்தை உழுவோர்களிடமிருந்து நிலவரியைப் பெற்றுக்கொள்ளும் உரிமை ஒப்பந்தக்காரர்களுக்கு வழங்கப்பெற்றது. அரசின் நேர் மேற்பார்வையில் அதிகாரிகள் வரியைத் தண்டல் செய்ய அனுமதிக்கப் படவில்லை. இந்த மாறுதலின் காரணமாக, கோடானுகோடி உழவர்களின் நிலை, அக்பர் காலத்திலும், ஜஹாங்கீர் காலத்திலும் இருந்ததைவிட இரங்கத்தக்கதாக இருந்தது.

முகலாயர்களின் பொருளாதார அமைப்பில், வெளிநாட்டு வாணிபம் முக்கிய இடத்தை வகிக்கவில்லை. இந்தியாவிலிருந்து அவுரியும், பருத்தி ஆடைகளும் ஏற்றுமதியாயின. உழவுத் தொழிலுக்கு அடுத்தபடியாகப் பருத்தி நெசவுத் தொழில்தான் பெரும்பான்மையான மக்களுக்கு வாழ்க்கை வழியாக இருந்தது. கண்ணுடிப் பொருள்கள், மிளகு, ஈயம், உரோம ஆடைகள் ஆகியவை முக்கிய இறக்குமதிப் பொருள்களாகும். பாரசீகத்திலிருந்து குதிரைகளும், கிழக்கிந்தியத் தீவுகளிலிருந்து நறுமணப் பொருள்களும், ஐரோப்பாவிலிருந்து கண்ணுடிப் பொருள்கள், திராட்சை ரசம், விநோதப் பொருள்கள் முதலியனவும், அபிஸீனியாவிலிருந்து அடிமைகளும், அமெரிக்காவிலிருந்து உயர்ந்த வகைப் புகையிலையும் இறக்குமதி செய்யப்பட்டன. ஆனுல், வாணிபப் பெருக்கம் குறைவாக இருந்தது. இறக்குமதி வரிகளால் அரசாங்கத்திற்கு ஆண்டுக்கு முப்பது இலட்சம் ரூபாய்களே வருமானம் வந்தது.

அவுரங்கசீப் காலத்தில் முகலாயப் படை பெருமளவில் பெருகியிருந்தது. அவர் தம் வாழ்நாள் முழுவதும் போரில் ஈடுபட்டிருந்த காரணத்தால், அவரது முன்னேடிகளைவிட அவருக்கு மிகப் பெரிய படை தேவைப்பட்டது இயற்கையானதே. சர் ஜாதுநாதின் கணக்குப்படி, 1647-ல் அவுரங்கசீபிடம் இருந்த மொத்தப் படையின் விவரங்கள் வருமாறு: இரண்டு இலட்சம் குதிரை வீரர்கள், 8,000 மான்சப்தார்கள், 7,000 அகதிர் படையும் பக்கண்டாசுகளும், இளவரசர்கள், பிரபுக்கள், மான்சப்தார்களின்கீழ் ஓர் இலட்சத்து எண்பதினுயிரம் வீரர்கள், துப்பாக்கிகளையும் பீரங்கிகளையும் தரித்த 40,000 காலாட் படையினர். தக்கணப் போர்களின் காரணமாக, அவுரங்கசீப் ஆட்சியின் இறுதிக் காலத்தில் அவரது படை வீரர்களின் எண்ணிக்கை பல மடங்காகப் பெருகியது. அவுரங்கசீப் காலத்தின் படைச்செலவு, ஷாஜஹான் ஆட்சியில் இருந்ததைவிட இருமடங்காகும். ஆனுல், அரசர் கண்டிப்பும், விழிப்பும், படைத் தளபதிக்குரிய திறமையும்கொண்டு விளங்கியதால், முகலாயப் படையில் அமைப்பும் ஒழுக்கக் கட்டுப்பாடும், அக்பர் காலத்தில்

இருந்ததைவிடத் தரக்குறைவானது என்று கூறவேண்டும். முகலாயப் படைவீரர்களின் மனவுறுதியைப் பொறுத்தவரையிலும் இப்பொழுது நலிவு ஏற்பட்டது.

## அவுரங்கசீபின் ஆளுமையும் குணச்சிறப்பும்

அவுரங்கசீபின் ஆளுமை, குணச்சிறப்பு, சாதனைகள் ஆகியவை பற்றி அண்மைக் காலத்தில் பல சர்ச்சைக்குரிய கருத்து வேறுபாடுகள் உள்ளன. அவுரங்கசீபிடம் சமயவெறியுணர்ச்சி இருக்கவில்லையென்றும், இந்துக் கோவில்களுக்கும் துறவிகளுக்கும் அவர் நிலமானியம் வழங்கினாரென்றும், அவர் கோவில்களை அழிக்கவோ அல்லது இந்துக்கள் வன்முறையாகக் கைப்பற்றிக் கோவில்களாக இருந்த மசூதிகளை மீண்டும் பெற்றுக்கொள்ளவோ உத்தர விட்டிருந்தால், அவையெல்லாம் போர்க்கால நடவடிக்கைகள்தாம் என்றும் ஒரு கட்சியினர் மெய்ப்பிக்க முயன்றுகொண்டிருக்கிறார்கள். அவுரங்கசீப் ஒரு பெரும் இந்திய நாட்டுப் பக்தர் என்றும், அவர் நாடு முழுவதிலும் அரசியல் ஒற்றுமையை ஏற்படுத்த அரும்பாடு பட்டார் என்றும் இந்தியாவில் வரலாற்றைக் கற்பிக்கின்ற சில ஆசிரியர்கள், தங்கள் வகுப்பறையின் பாதுகாப்பான சூழலில் சொல்லுகின்ற அளவுக்குக்கூட வந்திருக்கிறார்கள். ஆனால், இவர்கள் தங்களுடைய வாதங்களையும் முடிவுகளையும் எழுத்து வடிவில் கொடுக்க இன்னும் வீரம் கொள்ளவில்லை. இந்தக் கருத்துகளெல்லாம் பகிரங்கமாக எவ்வளவு தவறானவை என்பதால், அவை மறுத்துரைக்கவும் தகுதியற்றவை. அவுரங்கசீப் சில கோவில்களுக்கும் துறவிகளுக்கும் நிலமானியம் வழங்கினார் என்பது உண்மை. அல்லாமலும், இத்தகைய மானியங்கள் அவற்றைப் பெற்றுக்கொண்டவர்களுக்கு ஏற்கெனவே இருந்த உரிமைகள் ஒன்றை உறுதிப்படுத்தவோ, அல்லது புதுப்பிக்கவோ செய்யப்பட்ட நடவடிக்கைகளே. சில சமயங்களில் இந்த மானியங்கள் அரசருக்கு எந்த வகையிலாவது பணிபுரிந்தவர்களுக்குப் பரிசளிக்கும் முறையில், அல்லது அவர்களைத் தம்வயப்படுத்தி, அரசியல் சூழ்ச்சித்திறமாகிய சூதாட்டத்தில் அவர்களைப் பிணையப் பொருள்களாகக் கொள்ளவோ செய்யப்பட்டவை. மேலும், அவுரங்கசீப் ஓர் இந்துக் கோவிலுக்கோ, துறவிக்கோ நிலமானியம் வழங்கிவிட்டு, ஆயிரக்கணக்கான கோவில்களை அழித்து, ஆயிரக்கணக்கான இந்துத் துறவிகளின் வாழ்க்கை வழிகளை அவர்களிடமிருந்து பறித்துக்கொண்டார். இந்தியாவை ஆண்ட பிரிட்டிஷார், நமது விடுதலைப் போராட்டத்தின்போது, ஒருசில இந்தியர்களுக்குச் சலுகைகளைத் தந்து அவர்களை ஆதரித்தார்களென்றால், அவர்கள் உண்மையாகவே நேர்மை

யான முறையில் இந்தியாவின் நலத்தை முன்னேற்ற ஆவல் கொண்டார்கள் என்று கூறுவது நியாயமாகுமா? தங்களுடைய ஏகாதிபத்திய நோக்கங்களை அபிவிருத்தி செய்வதில் மேற்கூறியவர்களைக் கருவிகளாகப் பயன்படுத்தத்தான் அவர்களுக்குச் சலுகைகளை வழங்கினார்கள் என்று கூறுவது அதிகப் பொருத்தமுடையதன்றோ? முகலாயப் பேரரசருக்கு வெளியே இருந்த இந்தியப் பகுதிகளை வெல்வதற்காக, அவுரங்கசீப் அரும்பாடுபட்டார் என்று கூறுவது சரியே. ஆனால், இந்தியாவின் அரசியல் ஒற்றுமைக்காக அவர் செய்த இந்த முயற்சியானது ஒரே ஒரு நோக்கத்தைப் பின்னணியாகக் கொண்டது; அதாவது, அகில இந்தியாவை ஒரு முஸ்லீம் நாடாக மாற்றுவதேயாகும். இந்தியாவின் ஒற்றுமையை, உண்மையாகவே இந்தியா ஒற்றுமை பெறவேண்டும் என்ற நோக்கத்தோடுதான் அவுரங்கசீப் விரும்பினார் என்று, தவறான வழியில் செல்லும் அறிவுதான் சொல்லக்கூடும். ஆலயங்களை அழித்தது போர்க்கால நடவடிக்கைதான் என்பது அவுரங்கசீபின் நவீன ஆதரவாளர்களுடைய புதிய கண்டுபிடிப்பாகும். இதற்குச் சமகாலத்திய சான்றுகளில் ஓர் ஆதாரமும் இல்லை. தற்கால முஸ்லீம் ஆசிரியர்கள் தமது இலட்சிய வீரபுருடனை நல்ல முறையில் சித்திரிக்க வேண்டும் என்று விரும்புகின்ற ஆவலை யாரும் எளிதில் புரிந்துகொள்ள முடியும். அவர் தமது சமயத்திற்காகச் செய்த பணிகளைப் பாராட்டி, இஸ்லாம், அமைதியின் சமயம் என்றும், அதில் வன்முறையான சமய மாற்றத்திற்கு இடமில்லையென்றும், அதன் பெயரால் சமய அட்டூழியங்களைச் செய்வது தவறு என்றும் அவர்கள் நம்மை நம்பும்படி செய்ய ஆசைப்படுவதையும் புரிந்துகொள்ளுவது எளிது. இது போலவே, இன்றைய இந்தியாவில் சமூக ஒற்றுமைக்காகவும், அமைதிக்காகவும், தங்களுடைய சமயத்திற்கும் கலாசாரத்திற்கும் இழைக்கப்பட்ட பெரும் அநீதியை ஒருசில இந்திய அறிஞர்கள் பொருட்படுத்தாமல் இருக்கின்ற ஆவலையும் பாராட்டத்தான் வேண்டும். ஆனால், வரலாற்று உண்மையைத் தவறென்று கூறி விடுவதால் இந்த உயர்ந்த குறிக்கோளைப் பெறமுடியுமாவென்பதும் கேள்வியே. மறைக்க முடியாத உண்மைகள், தருக்கவாதத்தைவிட அதிக வெளிப்படையானவை. அவுரங்கசீபின் கடிதங்களும் ஆணைகளும் உட்பட்ட சமகாலத்திய சான்றுகள், மேற்கூறிய கருத்திலிருந்து வேறுபட்ட நிலைகளை வெளிப்படுத்தி, முற்றும் வேறுபட்ட பல முடிவுகளுக்கு நம்மை இட்டுச் செல்கின்றன.

அவுரங்கசீபின் ஆளுமையையும் குணச்சிறப்புகளையும்பற்றிய சரியான படப்பிடிப்பை சர் ஜாதுநாத் சர்க்காரின், 'History of Aurangzeb' என்ற நூலில் ஆசிரியர் தருகிறார். 5 தொகுதிகளைக் கொண்ட இந்த மகத்தான நூலை இதற்கு மேலும் சிறப்புற எழுத

முடியாது. இனிமேலும், புதுப்புதுச் சான்றுகள் கண்டுபிடிக்கப் பட்டாலும், இந்த முகலாய அரசரைப்பற்றிய முக்கிய முடிவுகள் மாருதிருக்கும்.

அவுரங்கசீபின் தனி வாழ்க்கை அநேகமாக இலட்சியத் தன்மை பெற்றது. கடின உழைப்புக்குச் சிறப்புப் பெற்ற அவர், பழக்க வழக்கங்களிலும் சிந்தனையிலும் ஒழுங்கு முறையையும் கட்டுப் பாட்டையும் கடைப்பிடித்தார். அவர் உலைவில்லாமல் உழைக்கும் ஆற்றல் பெற்றவர். உணவிலும் உடையிலும் அவரிடம் எளிமை விளங்கியது. அவர் கொண்ட மனைவியர்களின் எண்ணிக்கை, ஒரே சமயத்தில் நான்கு மனைவியர் கொள்ளலாம் என்ற புனிதக் குரானின் சட்டத்திற்கு என்றுமே மீறிப் போகவில்லை. கணவன் மனைவிய ரிடம் இருக்கவேண்டிய அன்பில் அவர் விசுவாசமாக இருந்தார். மாதரை விரும்பும் முறை அவரிடம் இருக்கவில்லை. அவர் மது அருந்து வதை முற்றிலும் விலக்கினார். பிறப்பிலே உயர்குடி மக்களாக இருப் பவரிடம் காணப்படும் பொதுவான சில குறைபாடுகள் அவரிடம் இருக்கவில்லை. அறிவாக்கமான பொழுதுபோக்குகளில் ஈடுபாடு அவரிடம் இயல்பானவொரு சுவை இருந்ததால், அவர் அரபு மொழி யிலும் பாரசீக மொழியிலும் புலமை பெற்று, துருக்கியையும் இந்தி யையும் ஆற்றொழுக்காகப் பேசவும் ஆற்றல் பெற்றிருந்தார். நூல் களைப் படிப்பதை அவர் விரும்பினார். முறையாகக் கற்ற அறிஞர் அவர். அவர் தன்னடக்கத்தை விரதமாகக் கொண்டு பக்குவம் பெற்றவர். தன்னறிவும் தன்மரியாதையும் விளங்க, அவுரங்கசீப் தனது நாவையும் கோப உணர்ச்சிகளையும் அடக்கினார். பணிவும் பரிவும் கொண்டிருந்த தன் சமயத்தின்பால் ஆழ்ந்த பற்றுக்கொண் டிருந்தார். தினமும் ஐந்து முறை தொழுகை நடத்தி, ரம்ஸான் நோன்பிருந்து, இன்னும் புனிதக் குரானில் குறிக்கப்பட்ட விதிமுறை கள் யாவற்றையும் மிகக் கவனத்துடன் கடைப்பிடித்தார். அவரது தனி வாழ்க்கையில் குறையொன்று இருக்குமானால், பேராவல், பிடிவாதம், குறுகிய சமயவெறியுணர்ச்சி ஆகியவற்றைக் கூறலாம். மற்றவர்களெல்லாம் தவருன எண்ணமுள்ளவர்கள், தாம் மட்டுமே செய்வது சரியென்றும், இஸ்லாமைத் தவிர எல்லாச் சமயங்களும் தப்பறையானவை என்றும் அவர் நம்பும்படி மேற்கூறிய குறைபாடு கள் அவரைத் தூண்டின.

மற்றவர்களுடன் கொள்ளும் உறவில்தான் அவுரங்கசீப், பொது வாக நல்லவர்களுக்குத் தகுதியானதெனக் கருதப்படும் தகுதிகளைப் பெறவில்லை. வன்மையான குடும்ப உறவுகளையும் நன்றியுணர்ச்சி யையும் பெருத அவுரங்கசீப், நல்லதொரு மகனுக விளங்க முடிய வில்லை. அவர் தம் தந்தையைப் பட்டம் துறக்கச் செய்து, சிறைப்

படுத்தி, அவர் கருணை கோரி விடுத்த விண்ணப்பங்களை அலட்சிய மாகப் புறக்கணித்தார். அவருடைய அன்னையாரின் நினைவுகளை யும் அவர் போற்றிப் பேணினர் என்பதற்கு எவ்வித ஆதாரங்களும் இல்லை. சகோதரன் என்ற முறையில் அவர் எந்தத் தகுதியாலும் நல்லவர் என்று கூற முடியாது. தமது சகோதரர்களுடன் போராடி, அவர்களையும் இன்னும் சில ஆண் உறவினர்களையும் கொன்ருர். சில சந்தர்ப்பங்களில் அவர் வாக்குக் கொடுத்த உறுதி களை மீறிக்கூட அவர்களைக் கொன்ருர். தந்தையென்ற வகையில் அவர் ஐயத்திற்குப் பலியாகித் தனது மூன்று குமாரர்களைச் சிறைப் படுத்தினர். அவர்களில் மூத்தவன் சிறையில் மடிந்தான். இரண் டாவது மகன் எட்டாண்டுகள் சிறை வாழ்விற்கும் இழிவுக்கும் பலி யாகி மாண்டான். இதுபோலவே அவருடைய புதல்விகளில் ஒருத்தி யாகிய ஸெபுனிஸாவை சிறையில் தள்ளி, அவள் அங்கே அவல நிலையில் மாளவேண்டியதாயிற்று. திருமண வாழ்விற்கு உண்மை யுள்ளவராக இருந்தாலும், எந்த மனைவியிடத்திலும் அவர் என்றும் உண்மையான ஈடுபாடு கொள்ளவில்லை. நண்பர்களுடன் பழகும் முறையில் அவர் ஒதுங்கியும் அன்பின்றியும் நடந்துகொண்டார். தம்மைவிடப் பெரியவர்களிடம் உண்மையாகவே பரிவும் பணிவும் கொண்டிருந்தபோதிலும், அரசியலில் கருணை காட்டுவது என்பது அவரைப் பொறுத்தவரையில் அபத்தமாகும். எனவே, அவரைச் சுற்றியிருந்தவர்களைப்பற்றி அவர் ஐயங்கொண்டதிலும், ஆண்க ளிடமோ பெண்களிடமோ நம்பிக்கை கொள்வதில் எந்தப் பயனு மில்லை என்று அவர் எண்ணியதிலும் வியப்பில்லை.

வீரன் என்ற முறையிலும், தளபதி என்ற நிலையிலும் அவுரங்க சீப் அவருடைய அரச பரம்பரையினர் யாவரையும்விடச் சிறந்து விளங்கினர். பாபரும் அக்பருமே அவருக்கு இணையாக விளங்கக் கூடியவர்கள். அவரிடம் உடல் வன்மையும், தாளாண்மையும், நிதானமும் விளங்கின. போரின் உச்ச கட்டத்திலும் அவர் தமது உயிரையும் பொருட்படுத்தாமல் இறங்கிப் போரிடுவார். பால்க் நாட்டின் படையெடுப்பின்போது அவர் பெருமளவில் சமயோ சிதத் திறமும் அஞ்சா நெஞ்சமும் காட்டிப் போரிட்டார். போரின் நடுவில் அவர் குதிரையிலிருந்து இறங்கி வழக்கமான ‘சுஹார்’ தொழுகை செய்தார். அவர் படைச் சூழ்ச்சித் திறத்தில் வல்லவ ராதையால், மாற்ருருடைய தவறுகளையும், குறைகளையும் தமக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொண்டார். எதிரிகளை முறியடிக்க சூழ்ச்சிகளையும் படைத்தந்திரங்களையும் பயன்படுத்துவது அவ ருடைய வழக்கமாகும். சிசோதிய, ரதார் இராஜபுத்திரர்களுடன் போரிட்டபோது, அவர் இளவரசர் அக்பருக்குப் பொய்க் கடிதம் எழுதி, அதனை இராஜபுத்திரர்களின் கைகளில் கிடைக்குமாறு

செய்து. அதன்மூலம் அவர்களை ஏமாற்றினர். அரசியல் வெல் திறத்திலும் அரசியல் அறிவிலும் அவர் புலமை பெற்றவர். தீர்வு காணும் திறமும் உறுதி பூணும் ஆற்றலும் மிக அசாதாரணமான முறையில் அவரிடம் விளங்கின. அவர் ஒழுக்கக் கட்டுப்பாட்டை விரும்பி, அரசாங்க நடைமுறைகளைச் செயலிலும் கொள்கையள விலும் கடமையுணர்ச்சியோடு கடைப்பிடித்தார். ஆட்சித்துறை நிபுணர் என்ற வகையில் அவர், அரசாங்கத்தின் சகல நுட்பங்களை யும் மிகுந்த கவனத்துடன் ஆய்ந்தார். ஓர் அரசருக்கு முடிந்த வரையில் சகலவற்றையும் செய்ய அவர் முயன்று, தமக்கு ஓய்வென் பதையே அவர் கொடுக்கவில்லை.

அவுரங்கசீபிடம் அறிவாக்க ஆற்றலும், கடமையுணர்ச்சியும், மனித சக்திக்கு மேற்பட்ட கடின உழைப்பும் இருந்தபோதிலும், அவர் மக்களின் மகத்தான மன்னர் என்றோ, வெற்றியான அரசர் என்றோ கூறிவிட முடியாது. ஏனெனில், எல்லா அரசர்களுக்கும் மிகத் தேவையான ஒரு பண்பு அவரிடம் விளங்கவில்லை. அதாவது, தமது குடிமக்கள் யாவரின் நலத்திலும் பரிவு கொண்டிருக்க வேண்டுமென்பது. அவரிடம் குறுகிய கடமையுணர்வு இருந்தது. தாம் வைதீக சுன்னி முஸல்மான்களுக்கு மட்டுமே அரசர் என்று அவர் கருதினர். நாட்டிலுள்ள முஸ்லீம் அல்லாத மக்களை, அவர் கள் இஸ்லாமைத் தழுவுகின்றவரையிலும் கீழ்நிலையான மக்கள் என்றே அவர் கருதி நடத்தினர். சுருங்கச் சொன்னல், இந்தியா முழுவதையும் ஓர் இஸ்லாமிய நாடாக மாற்றவேண்டுமென்பதே அவுரங்கசீபினுடைய குறிக்கோள். இத்தகைய குறுகிய கடமையுணர்வினல் உந்தப்பட்டு, இந்த நோக்கத்தை அடைவதற் காக அவர் அல்லும் பகலும் வாழ்நாளெல்லாம் உழைத்தார். ஆனல், நாளடைவில் அவர் ஆக்கவன்று, அழிக்கவே உழைத்தார் என்ற நிலை ஏற்பட்டதால், இறுதியில் அவர் வெற்றி பெற முடியாமல் தோல்வியே கண்டார். மக்களின் பொருளாதார, சமூக முன்னேற் றங்களைப்பற்றி அவரிடம் விரிவான திட்டங்கள் எதுவும் இருக்க வில்லை. அவர், நிதிக்கொள்கையிலும் சமூக சீர்திருத்தங்களிலும் வேறுபாடு காட்டினர். அவரது குடிமக்களில் நான்கில் மூன்று பகுதியினரை அடக்கியாள்வதற்கும், அவர்களை மரம் வெட்டிகளாக வும் நீர் இறைப்போர்களாகவும் ஆக்கும் நிலைக்குக் கொண்டுசெல்ல வும் மேற்கூறிய விதிமுறைகள் பயன்பட்டன. நீதி வழங்குவதிலும் கூட, தமது சமயத்தின் நலத்தைப் பேணவேண்டும் என்ற ஒரு நோக்கத்தைத் தவிர, பிற அடிப்படைகளை அவர் கவனித்ததாகத் தெரியவில்லை. ஒரு வழக்கில் சம்பந்தப்பட்டவர்களில் எவனொருவன் தன்னை முஸ்லீம் ஆக்கிக்கொள்ளச் சம்மதித்து, அரசரின் விருப் பத்தை நிறைவேற்றுவானே அவனுக்கே ஜாகீரும் பிற தகுதிகளும்

வழங்கப்பட்டன. அவனுக்குக் குறிப்பிட்ட சலுகைத் தகுதி உள்ளதா என்பதைப்பற்றிய சிந்தனை எழவேயில்லை. தமது முன்னோர்களின் சமயத்தை ஒரு கைதி துறந்துவிட்டு இஸ்லாமியத்தைத் தழுவிக் கொண்டால், அவனுக்கு விடுதலை கிடைத்தது. அவுரங்கசீபிடம் விளங்கிய கலப்பில்லாத வல்லாட்சியும், பிறரை அவர் நம்பாத தன்மையும் அவர் ஆட்சித்துறையின் ஒவ்வொரு பிரிவையும் தாமே நேரில் பார்வையிடத் தூண்டின. இதனால் அவரது அமைச்சர் களும் பிற உயர் அதிகாரிகளும் எழுத்தர்கள் என்ற நிலையை அடைந்ததால், அவர்களைத் தமது நீண்ட ஆட்சிக் காலம் முழுவதும் தன்முனைப்பும் கடமையுணர்ச்சியும் அற்ற கைப்பாவைகளாக ஆக்கிவிட்டார். இதன் விளைவு ஆட்சித்துறையில் சீர்கேட்டைப் புகுத் தியது. நாட்டின் கலாசார மறுமலர்ச்சிக்கும், கட்டடக்கலை, இசை, ஓவியம் முதலிய கலைகளை முன்னேற்றவும் அவர் எதுவும் செய்ய வில்லை. கற்றறிந்தவர்களை ஊக்குவிக்கவும் அவர் ஒன்றும் சாதிக்க வில்லை. அவரது ஆட்சியின் கடைசி இருபதாண்டுகளில் அவர் முடி வில்லாத தக்கணப் போர்களில் ஈடுபட்டிருந்ததாலும், வட இந்தியா வின் பல பகுதிகளில் கிளர்ச்சிகள் தோன்றியதாலும், நாட்டில் அமைதியையும் ஒழுங்கையும்கூட அவரால் பாதுகாக்க முடிய வில்லை. இத்தகைய ஓர் அரசரை அரசியல் நுண்ணறிவாளர் என்று கூறமுடியாது என சர் ஜாதுநாத் சர்க்கார் கூறுவது முற்றிலும் உண்மையாகும். அரசர் என்ற முறையில் தீர்ப்புக் கூறும்போது, அவுரங்கசீப் தோல்வி கண்டவர் என்று கூறுவது பொருந்தும். நேர்மையான இறைமை என்ற முதல் விதியை, அதாவது, 'அரிய மக்களின்றி அரிய பேரரசு இல்லை' என்ற பேருண்மையை அவர் கற்றுக்கொள்ளவில்லை. இந்திய வரலாற்றில் எவரும், இந்த நூற் றுண்டின் முப்பதாம், நாற்பதாம் ஆண்டுகளில் வாழ்ந்த முகமதுஅலி ஜின்னாவைத் தவிர, இந்தியாவின் இருபெருஞ் சமூகங்களுக்குள் உள்ள பிளவை விரிவாக்க அவுரங்கசீப் செய்ததைவிட அதிக அளவில் செய்ததில்லை.

அவுரங்கசீபைத் தனிப்பட்ட மனிதர் என்றோ, அல்லது அரசர் என்றோ எடுத்துக்கொண்டு ஆராய்ந்தால், அவருடைய குணச்சிறப் பின் இரண்டு அடிப்படையான இயல்புகளைக் காணலாம். அவை உலகியல் பேராவலும் சமய வெறியுணர்ச்சியுமாகும். இந்தத் 'தூய்மைவாதியான' அரசர், இந்தியப் பேரரசிற்காக வானகப் பேரின்பத்தை விட்டுக் கொடுத்திருப்பாரா என்ற கேள்விக்கு விடை யளிப்பது எளிதன்று. ஒருவேளை அவர் வானக அரசைப் பெற்றுக் கொள்ளுவதற்காக முனைப்புடன் தன்னைத் தயாரித்துக்கொண்டு, விடாமுயற்சியுடன் போராடினார் போலும். அதன்மூலம் இந்தியாவில் 'அவருடைய' கடவுளின் அரசை நிறுவலாம் என்று எண்ணியும்

இருக்கலாம். அதாவது, வைதீக சுன்னி சட்டமேதையின் சிந்தனையில் எழுந்த இஸ்லாமிய அரசு என்பதாகும். இந்த நோக்கம் என்றும் நிறைவேறவில்லை.

## அவுரங்கசீப் தோல்வியுற்ற காரணங்கள்

அவுரங்கசீபின் ஆட்சிமுறை, சகல அதிகாரங்களையும் அரசரிடம் குவித்த வல்லாட்சி முறையாகும். இந்த வகையில் அரசரின் தனிப்பட்ட திறமைகளையும் ஊக்கத்தையும் பொறுத்துதான் அவருடைய அரசின் வெற்றி அமையமுடியும். அவுரங்கசீபிடம் உடல்நலம் நன்னிலையில் இருந்தவரையிலும், வெளிப்படையாகவாவது காரியங்கள் தக்க முறையில் நடந்தன. ஆனால், அவர் பொது தர்பாரில் தோன்றி, அரசியல் நடைமுறைகளை நடத்தவேண்டுமென்று முயன்றபோதிலும், அவரது தளர்ந்த பருவத்தில், தொலைவிலிருந்த மாநில கவர்னர்களின்மேல் அவர் கொண்டிருந்த பிடி தளர்ந்தது. எனவே, அரசரது கட்டுக்கு மீறி விவகாரங்கள் நடக்கின்றனவென்று எங்கும் மக்கள் உணரத் தொடங்கினார்கள். இது தவிர்க்க முடியாத ஒன்று. ஏனெனில், எல்லா வல்லாட்சி முறைகளுக்கும் ஏற்படும் இயல்பான கதி இதுதான். இரண்டாவதாக, அவுரங்கசீபின் திறமையில் அதற்கேயுரிய சில குறைபாடுகள் இருந்தன. அவர் கற்றறிந்த மேதையாகவும், அறிவுக்கூர்மை பெற்றும், தந்திரசாலியாகவும் இருந்தபோதிலும், நாட்டின் பிரச்சினைகளைப்பற்றி அவர் சரியான முறையில் அறிந்துகொண்டு, அவசரத் தேவைகளைச் சமாளிக்கத் தக்க வழிவகைகளை அவர் வகுக்க முடியவில்லை. அவரது வாழ்க்கை நோக்கு மிகக் குறுகியதாக இருந்ததால், காரியங்களைப்பற்றி நீண்ட கால விரிநோக்குடன், அதற்குத் தக்க நடைமுறைகளைச் செய்துகொள்ளவும் அவரால் முடியவில்லை. அரசியல் சிக்கல்களைப்பற்றிய அவருடைய அறிவு, தம் சமய விருப்பு வெறுப்புகளால் பாதிக்கப்பட்டது. எனவே, அவரது நடவடிக்கைகள் யாவும் பழுதுபட்டன. மூன்றாவதாக, அவுரங்கசீப் பொதுநோக்கு இல்லாமல் இருந்ததைத் தவிர, அவர் கடமையுணர்ச்சியைப்பற்றி ஒரு குறுகிய இலட்சியத்தைத் தமக்காக வகுத்துக்கொண்டார். அதாவது, வைதீக சுன்னி சிறுபான்மையினருக்காகமட்டுமே வாழ்வதும் உழைப்பதும் என்ற நோக்கமாகும். சுருக்கமாகச் சொன்னால், இஸ்லாமிய அரசின் தலைவர் என்ற முறையில் அவர் புனிதக் குரானின் விதிகளை அமலாக்கி, நாட்டிலுள்ள முஸ்லீம் அல்லாத மக்களை அடிமைகளின் நிலைக்குத் தாழ்த்தி, அவர்கள் இஸ்லாமியத்தைத் தழுவிக்கொள்ளுமாறு வற்புறுத்துவதாகும். முற்றிலும் முஸ்லீம் மயமான ஒரு நாட்டில் இத்தகைய ஒரு கொள்கை

எவ்வளவு விரும்பத்தக்கதாக இருந்தாலும், இந்தியாவைப் பொறுத்தவரையில் அதனை நிறைவேற்றுவது என்பது இயலாத தொன்று. ஏனெனில், இந்திய மக்களில் எண்பது சதவீதம், தங்கள் முன்னோர்களின் சமயத்திலும், கலாசாரத்திலும் ஆழ்ந்த உறுதி கொண்ட இந்துக்களாவர். இந்தச் சமயமும் பண்பாடும் எந்தச்சமயத்தைக் காட்டிலும் தொன்மையானவை; எந்தப் பண்பாட்டைக் காட்டிலும் மிக உன்னதமானவை. தமக்கு எதிராகக் கிளம்பக்கூடிய எதிர்ப்பைப்பற்றியும் அவுரங்கசீப் எண்ணியிருக்கமாட்டார். அவருடைய மாபெரும் முன்னோடியான அக்பர் வகுத்தபடி, நாட்டில் வழி வழியாக வந்த சமயப் பொறை என்ற கொள்கையை விட்டுவிடுவதால் ஏற்படக்கூடிய விளைவுகளையும் அவர் சிந்தித்திருக்கமாட்டார். அவர் ஷியாக்களை குறிப்பாக இஸ்லாமியர்களையும் தாவுதி போராக்களையும் துன்புறுத்தி, அவர்களுடைய சமயக் கொள்கைகளையும் பழக்க வழக்கங்களையும் அழிக்க முயன்றார். நிதித் துறையிலும் படைத்துறையிலும் பாரசீக ஷியாக்கள் காட்டிய அறிவுத்திறத்தைக் காட்டி அக்பர், ஷாஜஹான் ஆட்சிகளை மகோன்னதமாக்கியபோதிலும், அரச பணியில் பதவிகள் கொடுப்பதில் அவர்களுக்கு வேறுபாடு காட்டப்பட்டது. நான்காவதாகத் தமது குமாரர்களுக்கு அரசியலில் பயிற்சி தந்து, அவர்களுடன் பரந்த பேரரசை ஆளுகின்ற பொறுப்பைப் பகிர்ந்துகொள்ளத் தவறிவிட்டார். அவர் தமது சொந்தத் தந்தைக்கு இழைத்த அநீதி அத்தகைய ஒரு நடத்தையை அவருடைய மக்கள் தமக்குக் காட்டுவர் என்ற நிலைக்கு அவரை நினைக்கவைத்தது. எனவே,, அவுரங்கசீப் அவர்களைத் தம்மிடமிருந்து விலக்கிவைத்து, அவர் மட்டும் எப்பொழுதும் விழிப்பாக இருந்தார். அவுரங்கசீப் தமது குமாரர்கள், புதல்விகள் யாவரிடமும் பெரும் ஐயங்கொண்டார். அவர்களைச் சுற்றி நியமிக்கப்பட்டிருந்த ஒற்றர்கள், அவர்களுடைய நடவடிக்கைகளையும் ஆசைகளையும்பற்றி அரசருக்கு அறிவித்தார்கள். இதன் விளைவாக முகலாய இளவரசர்கள் தங்களின் தந்தைக்கு உதவி செய்யாமல் இருந்ததுமட்டுமன்றி, தன்முனைப்பும் கடமையுணர்ச்சியும் இல்லாமல் தந்தையின் திட்டங்களைப் பாழ்படுத்தி, சில சமயங்களில் அவர் உறுதிபூண்டிருந்த கொள்கைகளைக்கூட எதிர்த்தார்கள். உண்மையில் அரசர் அவர்கள்மீது கொண்டிருந்த ஐயங்களுக்குப் பதில் செய்வதுபோல் அவர்கள் தங்களுடைய பேராசைகளாலும் சூழ்ச்சிகளாலும் அவரை எதிர்த்தனர். ஐந்தாவதாக, அவுரங்கசீபின் தனிப்பட்ட திறமைகளும், கடின உழைப்பும், ஆட்சித்துறையில் அவருக்கிருந்த நீண்டகாலப் பட்டறிவும், அவரது பேராசையும், பொருமையும், தமது அமைச்சர்கள், பிற அதிகாரிகள்பால் ஆழ்ந்த நம்பிக்கையின்மை கொள்ளத் தூண்டின. அவர்கள் எவ்வளவு நல்ல முறையில் தங்களுடைய கடமைகளை

ஆற்றவேண்டுமோ, அவ்வளவு திறமையாக அவற்றைச் செய்ய வில்லையென்று அவர் எண்ணினர். இதனுல் அவுரங்கசீப் தம் ஆட்சித் துறையின் ஒவ்வொரு நுட்பமான விவரத்தையும் பார்வையிட வேண்டியதாயிற்று. எனவே, ஏற்கெனவே கூறப்பட்டது போன்று, அவர்கள் எழுத்தர்கள் என்ற நிலைக்குத் தாழ்த்தப்பட்டு, கைப் பாவைகளாகி, ஒரு கொள்கையில் தன்முனைப்பின்றியும், ஒரு நெருக்கடி கட்டத்தில் தக்க நடவடிக்கை எடுக்க ஆற்றலற்றவர்களாகவும் ஆகினர். இதன் விளைவு ஆட்சித்துறை முற்றிலும் சீர்குலைந்ததாகும். நெருக்கடி நிலைகளிலும் இக்கட்டான நேரங்களிலும் அரசாங்க அதிகாரிகள் அரசரின் ஆணைகளையும் அறிவுரைகளையும் எதிர்பார்த்திருந்தனர். இதனுல் அவர்கள் ஆட்சித்துறையைச் சீர்கேடாக நடத்தினர். ஆறுவதாக, அவுரங்கசீப் இராஜபுத்திரர்களின் நட்புறவை இழந்து, அவர்களைப் பகைவர்களாக்கிக்கொள்ளும் தவற்றைச் செய்தார். இது இராஜபுத்திரர்களின் துணையை முகலாயப் பேரரசு மிகவும் வேண்டிய நேரத்தில் செய்யப்பட்ட தவறு. நட்புறவாலும் சமயப் பொறையாலும் அக்பர் இராஜபுத்திரர்களைத் தமது அரச பரம்பரைக்கும் பேரரசிற்கும் வன்மையான ஆதரவாளர்களாகக் கொண்டிருந்தார். இவர்கள் அபாயகரமான நேரங்களிலும் தொல்லைகள் நேர்ந்தபோதும் முகலாயப் பேரரசிற்கு உறுதுணையாக இருந்தது மட்டுமன்றி, இந்தியாவின் எம் மருங்கிலும் நாட்டுக்கு வெளியிலும் முகலாய வெற்றிக் கொடியைக் கொண்டுசென்று, முகலாயப் பேரரசின் எல்லைகளை விரிவு செய்வதற்காகத் தங்களின் இனத்தவர்களையும் உறவினர்களையும்கூட எதிர்த்துப் போராடியிருக்கிருர்கள். 'இந்துக்கள் இஸ்லாமின் வாளை வீசுகிருர்கள்' என்று முல்லா சிரின் என்பார் கூறியதாக வரலாற்ருசிரியர் பதோனி மேற்கோள் காட்டுகின்ற கூற்றுக்கு உண்மையுள்ளவர்களாக நடந்துகாட்டியிருக்கிருர்கள். அவுரங்கசீபின் விவேகமற்ற கொள்கை இவர்களைப் பகைவர்களாக்கி, சிஸோடியாக்கள், ரதார்கள், இன்னும் பல இராஜபுத்திர குலங்களை அவருடைய மரணம்வரைக்கும் கிளர்ச்சி செய்துகொண்டிருக்கும் நிலைக்கு இட்டுச்சென்றது. ஏழாவது, இந்தப் பெருமக்களில் வீரமிக்க மறவர்களாகிய ஜாத்துகள், சீக்கியர், புந்தலர்கள், மராட்டியர் ஆகியவர்களின் கோபத்தை அவுரங்கசீப் தூண்டிவிட்டார். இவர்கள் பேரரசின் குருதியோட்டத்தைக் குடித்து, அரசர் நெருக்கடிகளில் சிக்கித் தவித்தபோது அவரது கவனத்தை வேறு திசைகளில் திருப்பினர். எட்டாவதாக, மராட்டியர்களை அழிக்கவும், தக்காணத்தின் ஷியா நாடுகளை ஒழித்துக்கட்டவும் அவர் வகுத்த தக்கணக் கொள்கை ஒரு பெரிய தவருகும். தக்கணத்தில் அவர் 26 ஆண்டுகளாக நடத்திய நீண்ட போர்கள் மைய அரசின் நிலைகுலைவிற்கு வழிவகுத்து, வட இந்தியாவில் அதிருப்தியுற்றிருந்தவர்கள் தங்கள் தலைகளைத் தூக்கிக் கிளர்ச்சி செய்யவும் தூண்டின.

இந்தக் கிளர்ச்சிகளை அவர் முற்றிலும் அடக்கமுடியவில்லை. ஒன்பதாவதாக, வெற்றியான அரசு என்றால் ஒரு நாட்டின் அரசியல், இராணுவ, சமய ஆட்சிமட்டும்தான்] என்று: அவர் தவருகக் கற்பனை செய்துகொண்டு, நாட்டின் பொருளாதார, கலாசார முன்னேற்றத்தையும், இசை, ஓவியம் போன்ற பிற கலைகளின் வளர்ச்சியையும் இரங்கத்தக்க முறையில் புறக்கணித்தார். கட்டடக் கலையை வளர்க்க அவர் ஒன்றும் செய்யவில்லை என்றே கூறவேண்டும். இதன் விளைவாக, அவுரங்கசீபின் நீண்ட அரையாண்டு ஆட்சியில் இந்திய நாகரிகம் பெருமளவில் நலிவுற்றது. பத்தாவதாக, அவருடைய ஆட்சியில் 24 ஆண்டுகளைத் தவிர நாட்டில் சட்டத்தையும் ஒழுங்கையும் நிலைநாட்டவும், இந்த நாட்டின் கோடானுகோடி மக்களின் உயிருக்கும் உடைமைகளுக்கும் உறுதி தரவும் அவர் தவறிவிட்டார். உண்மையில் அவர் அடுத்தடுத்து நிகழ்ந்த மராட்டியப் படையெடுப்புகளிலிருந்த தமது சொந்தப் பாசறையையும் தமது ஆதரவாளர்களையும்கூட அவரால் பாதுகாக்க முடியாமல்போய்விட்டது. இந்த அச்சங்களிலிருந்து, 1707ஆம் ஆண்டு மார்ச்சு திங்கள் 3ஆம் நாளில் இறந்தபோது அவர் விடுதலை பெற்றார்.

## Primary Sources

(*a*) *Persian*

1. Alamgir-nama (Persian Text—Bibliotheca Indica) by Mirza Muhammad Kazim.

2. Ma' sir-i Alamgiri (Persian Text—Bibliotheca Indica) by Muhammad Saqi Mustai'd Khan.

3. Zafar-nama (also Waqiat)-Alamgiri (Persian Ms.) by Aqil Khan Razi.

4. Nuskhai-Dilkusha (Persian Ms.) by Bhim Sain.

5. Fuluhat-i-Alamgiri (Persian Ms.) by Ishwar Das Nagar.

6. Mirat-i-Ahmadi (Persian Text—Gaekwad's Oriental Series) by Ali Muhammad Khan.

7. Ahkami-Alamgiri (Persian Text edited by Sir J. N. Sarkar) by Hamid-ud-din Khan, translated into English by Sir J. N. Sarkar in Anecdotes of Aurangzeb.

8. Zawabit-i-Alamgiri (Persian Ms.).

9. Muntakhab-ul-Lubab (Persian Text--Bibliotheca Indica) by Muhammad Mashim Khwafi Khan.

10. Akbar-i-Darbar-i-mu'alla (Persian Ms.) in Jaipur Archieves.

11. Abad-i-Alamgiri (Persian Ms.), letters from Aurangzeb.

12. Ankam-i-Alamgiri (Persian Ms.), letters from Aurangzeb written by his Secretary Inayat-ullah-Khan.

(*b*) *Marathi*

1. Shiva Chhatrapatichen Charitra by Krishnaji Anant Sabhasad, edited by K. N. Sane.

2. Fdheyanchi Shakavali, translated into English by Sir J. N. Sarkar in Shivaji's Souvenir, 1927.

3. Ninety-one Qalmi Bakhar, edited by V. S. Wakaskar, 1930.

(*c*) *Hindi*

1. Chhatra-Prakah by Lal Kavi.

(*d*) *European Languages*

1. 'English Factories in India', edited by W. Foster (Relevant Vols).

2. 'Diary and Consultation Books of Fort St. George,' Vols. 1-5, edited by A. T. Pringie.

# 9. மராத்தியர்களின் எழுச்சி

முகலாயப் பேரரசின் வீழ்ச்சியில் முக்கியப் பங்கேற்ற மாபெருந் தலைவர் சிவாஜியின் தலைமையிலும் அவரது வழிவந்தவர்களின் தலைமையிலும் எழுச்சியுற்ற மராத்தியர்களைப்பற்றிக் குறிப்பிடாது போனால் இந்தியாவில் வாழ்ந்த அப் பேரரசின் வரலாறு நிறைவுடையதாகாது. ஆதலின், இவ்வதிகாரத்தில் மராத்தியர்களின் எழுச்சிபற்றியும், தங்கள் பொறுப்பில் இருந்த மக்களை ஆளுவதற்காக அவர்கள் உருவாக்கிய அமைப்புகள்பற்றியும் கோவையான விளக்கம் தர முயலுவோம்.

## சிவாஜிக்கு முன் மராத்தியரின் நிலை

தக்கண மேட்டு நிலத்தின் மேற்குப் பகுதியாகிய மகாராஷ்டிரத்தை ஆதி அகமாகக் கொண்டிருந்த மராத்தியர், சிவாஜி தோன்றுவதற்கு முன் தென்னிந்தியாவில் அணுக்களைப் போலச் சிதறிக் கிடந்தனர். அவர்கள் முக்கியமாகப் பயிர்த் தொழிலில் ஈடுபட்டு, ஏழ்மையில் உழன்று, பிறருடைய கொடுமைகளுக்குட்பட்டிருந்தனர். அவர்களிற் சில முதன்மையான குடியினர் தக்கணத்திலிருந்த முஸ்லீம் அரசுகளில் பணியாற்றினர். அவர்களிற் சிலர் படைத்தலைவர்களாகவும் ஜாகீர்தாரர்களாகவும் விளங்கினர். அவர்களுக்கு ஜாகீர்கள் (Jagirs) அளிக்கப்பெற்றன. தக்கண நாடுகளின் அரசவைகளில் அவர்கள் இரண்டாம்தர, மூன்றாம்தர பிரபுக்களின் நிலையைப் பெற்றிருந்தனர். ஆயின், மராத்தியர் ஒற்றுமையுற்ற ஒரே சமுதாயத்தினராக வாழ்ந்துவந்தனர். அச் சமுதாயத்தில் பொதுச் சமயமும், பொதுவான பண்பாடும், வாழ்க்கையில் ஒரே விதக் குறிக்கோளும் காணப்பெற்றதோடு சமுதாய, பொருளாதார சமத்துவமும் தழைத்தோங்கியது. அவர்களிற் செல்வந்தர் அரிதாயினர். மராத்தி அவர்களுடைய பொது மொழியாகவும், இந்து சமயம் அவர்களது பொதுச் சமயமாகவும் விளங்கின. எளிமையும், உரமும்

கொண்ட அம் மக்கள் சமயத்தில் பற்றுர்வமும் விருந்தினரிடம் வேளாண்மைப் பண்பும் காட்டினர். தற்சார்புணர்ச்சியும், தீரமும், மனவுறுதியும், பெருமிதமும் மிகுந்திருந்தனர். முன்னூறு ஆண்டுகளாக இருந்த முஸ்லீம்களின் ஆதிக்கத்தின் விளைவாகச் சால்பும் சூழ்ச்சித் திறமும் மிக்கோராயினர். பதினாறுவது, பதினேழாவது நூற்றாண்டுகளில் சமய இயக்கம் ஒன்று மகாராஷ்டிரத்தில் தோன்றியது. அதில் சில கீழ் ஜாதியைச் சார்ந்தோர் உள்ளிட்ட பல சமய போதகர்கள் ஒன்றிணைந்தனர். அவர்கள் இந்திய நாட்டில் வாழ்ந்த தலைசிறந்த சமயக் குரவர்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தனர். இத்தகைய சமயச் சான்றோர்கள் பக்தி மார்க்கத்தைப் போதித்தனர். ஜாதி பொருளாதார நிலை ஆகியவற்றைக் கடந்த அடிப்படையிலான சமத்துவ நிலையை வலியுறுத்தினர். இந்துக்களின் ஒற்றுமை உணர்வை வளர்க்கப் பாடுபட்டனர். துக்காராம், ராம்தாஸ், வாமன் பண்டிட், ஏக்நாத் ஆகியோரும், அவர் போன்ற வேறு சிலரும் இன்றளவும் மராத்திய இல்லங்களில் போற்றப்படுகின்றனர். அவர்களுடைய போதனைகளிற் சில நூல் வடிவில் அமைந்துள்ளன. அப்போதனைகள் யாவும் மராத்திய மொழியை வளர்த்தன. சமயத்திலும் வாழ்க்கையிலும் ஒற்றுமையையும் மக்களாட்சி மனப்பான்மையையும் உருவாக்கின. இங்ஙனம் இந்தியத் துணைக்கண்டத்தின் வேறு எந்தப் பகுதியும் காணாத அளவிற்கு ஒருமைப்பாடு மகாராஷ்டிரத்தில் வளர்ச்சியுற்றது. அவர்கள் ஒரு தேசீய இனமாக மாறுவதற்கு அரசியல் அதிகாரமும், உரிமையும் மட்டுமே தேவைப்பட்டன. அவற்றையும் 17ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் சிவாஜி வழங்கினார். இங்ஙனம் 19ஆம் நூற்றாண்டில் கிராண்ட் டஃப் (Grant Duff) என்பார் கொண்டதைப்போல, மராத்தியர்களின் எழுச்சி ஏதோ திடீரென்று தொடர்பற்றநிலையில் தோன்றியதன்று. மக்களிடம் மறைந்துகிடந்த சக்தியை வெளிப்படுத்தி, அவர்களுக்குப் புது வாழ்வும், புதுத் தெம்பும் அளித்த சமய சமூக இயக்கத்தின் சக்தியினால் உருவான இருநூறு ஆண்டுகளுக்கான ஆயத்த நிலையின் விளைவே மராத்தியர்களின் எழுச்சியாகும்.

## சிவாஜியின் பிறப்பும் இளமைப் பருவமும்

சிவாஜியின் முன்னோர்கள் மராத்தா வகுப்பில் பான்ஸ்லே குடியினைச் சார்ந்தவர்கள். அக்காலத்தில் அகமது நகரின் நைஸாம் ஷாஹி சுல்தான் வசமிருந்த பூனா மாவட்டத்தில் அமைந்த ஹிங்கானி, பிராடி, திவால்கோன் ஆகிய கிராமங்களின் தலைவர்களாக விளங்கியவர்கள். பதினாறும் நூற்றாண்டின் இடைப்பகுதியில்

பாலாஜி என்பவர் இக் குடியின் தலைவராகத் திகழ்ந்தார். அவரது மைந்தர்களான மாலோஜியும் விட்டோஜியும் தௌலதாபாத் குன்றுகளின் கோடியிலிருந்த விரூல் (Virul) (எல்லோரா) எனும் ஊரில் குடியேறினர். அங்கே அவர்கள் அகமது நகர் சுல்தான் கீழிருந்த பிரபுவான சிந்த்கேரைச் சார்ந்த ஜாதவ்ராவிடம் சாதாரணப் படைவீரர்களாகப் பணியேற்றனர். மாலோஜியின் மகனான ஷாஜி எனும் சிறுவனுக்குத் தமது மகள் ஜீஜாபாய் பொருத்தமானவள் என்று ஜாதவ்ராவ் ஒருநாள் குறிப்பிட்டதாகவும், அதன் பேரில் ஜாதவின் மகளைத் தமது மகனுக்கு மணமுடித்து வைப்பதாக உறுதி செய்தார் எனக்கூறிய மாலோஜி அதற்குச் சாட்சிகளாக இருப்பதற்காகப் பலரை அழைத்ததாகவும் கூறப்படுகின்றது. அதைக்கண்டு சினமுற்ற ஜாதவ் மாலோஜியைத் தமது சேவகத்திலிருந்து விலக்கிவிட்டதாகவும் தெரிகின்றது. சொந்த ஊருக்குத் திரும்பிய மாலோஜி புதையல் ஒன்றைக் கண்டெடுத்ததாகவும், அதன் துணைகொண்டு அவரும் அவருடைய சகோதரரும் ஆயிரம் வீரர்கள் அடங்கிய படையைத்திரட்டி, பல்டானின் (Phaltan) நிம்பல்கரிடம் வேலைக்கமர்ந்ததாகவும் பேசப்படுகின்றது. அடுத்தபடியாக அகமது நகர் சுல்தானின் சேவகத்தில் அமர்ந்த மாலோஜி சிறப்புற்று விளங்கத் தொடங்கினர். அப்போது அவரது மகன் ஷாஜிக்குத் தமது மகள் ஜீஜாபாயை மணமுடித்துத் தருவதில் தவறேதும் இல்லையென சிந்த்கேரின் ஜாதவ்ராவ் உணர்ந்தார். அந்த ஷாஜிதான் அகமது நகரில் முக்கியப் படைத்தலைவராகவும், செல்வாக்கு மிகுந்த பிரபுவாகவும் விளங்கத் தலைப்பட்டார். மாலிக் ஆம்பரின் புதல்வரான பதேகான் அமைச்சராக இருந்த காலத்தில் முகலாயருக்குச் சொந்தமான கீழ் காண்டேஷைச் சூறையாட அனுப்பப்பெற்றபோது தான் மாலோஜி பலரது கவனத்தையும் ஈர்த்தார். அப்போது முகலாயப் பேரரசரான ஷாஜஹான் அகமது நகரை வெற்றி கொள்ள முயன்று வந்தார். ஷாஜி அந்த வாய்ப்பினைப் பயன்படுத்திக்கொண்டு ஜுன்னர் முதல் அகமது நகர் வரையிலுள்ள பகுதியை வென்றடக்க முயன்றார். ஓராண்டு காலத்திற்கு முகலாயருடன் இணைந்திருந்தார். அடுத்தபடியாக அவர் பீஜப்பூர் சுல்தானிடம் பதவியேற்றார். அப்போது பீஜப்பூரின் வஸீரான கவாஸ் கானின் (Khawas Khan) வலது கரமாக விளங்கிய முராரி ஜெகதேவர் எனும் புகழ்பெற்ற மராத்தியச் செல்வந்தரின் ஆதரவைப் பெற்றார். அகமது நகர அரசு சிதையும் தறுவாயில் இருந்தபோது பூனா, சக்கான் முதல் அகமது நகரம், நாஸிக் ஆகிய வரையிலிருந்த பகுதிகளை ஷாஜி கைப்பற்றினர். 1633ஆம் ஆண்டில் பீஜப்பூர் சுல்தானின் துணையோடு ஒரு சிறுவனை அகமது நகரின் அரியணையில் ஏற்றி வைத்தார். அச்சிறுவனின் பேரால் மூன்று ஆண்டுகளுக்கு அந்நாட்டு அரசாங்கத்தை நடத்திச் சென்றார்.

ஆயின், 1636ஆம் ஆண்டில் அரச பதவியேற்ற அச்சிறுவனை முகலாயரிடம் ஒப்படைக்கவேண்டிய கட்டாய மேற்பட்டது. இறுதியில் அவர் பீஜபூரின் சேவகத்தில் அமர்ந்து மைசூர் மேட்டு நிலத்திலும், கிழக்கு கர்நாடகத்திலும் பெரும் நிலப்பரப்பைத் தமதென ஆக்கிக்கொண்டு, பீஜபூர் சுல்தானின் தலையாய நில மானியக் குத்தகையாளராகத் திகழ்ந்தார்.

இந்த ஷாஜி பான்ஸ்லேயின் முதல் மனைவியாகிய ஜீஜா பாயின் பிள்ளையே சிவாஜி யாவார். பூனாவிற்கு வடக்கே ஜுன்னார் நகருக்கு அருகிலமைந்த ஷிவ்னர் மலைக்கோட்டையில் 1627ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 20ஆம் நாளன்று (1630ஆம் ஆண்டு மார்ச் மாதம் ஒன்பதாம் நாள் என்ற அதிகம் ஒவ்வாத கருத்துமுண்டு) சிவாஜி பிறந்தார். ஏறக்குறைய பத்து வயது நிரம்பியபோது அவரைப் பூனாவிற்கு அழைத்துச் சென்றனர். அப்போது துகாபாய் மொனஹட் என்ற பேரழகியை இரண்டாவது மனைவியாக மணந்து கொண்ட ஷாஜி, ஜீஜாபாயைப் புறக்கணித்தார். ஜீஜாபாயும் அவரது குழந்தையான சிவாஜியும் முதலில் ஷிங்னரிலும், பிறகு பூனா விலும் இருந்த பற்றுறுதிகொண்ட பண்ணை மேலாளரான தர்தாஜி கோண்டதேவ் என்பாரின் ஆதரவில் வாழ்ந்து வந்தனர். பல ஆண்டுகளுக்கு ஷாஜி அவர்களைச் சந்திக்காமலேயே இருந்து வந்தார். ஆயின், ஜீஜாபாய் மிகுந்த பற்றார்வமும் சமயப்பணியார் வமும் கொண்ட மாதரசியாகத் திகழ்ந்தார். ஷாஜியின் புறக்கணிப்பு காரணமாக ஜீஜாபாயும் சிவாஜியும் ஒருவரை ஒருவர் நெருக்கமாக நேசித்தனர். 'ஏறக்குறைய தெய்வத்தின்மீது கொண்ட பக்தியைப் போன்று சிவாஜி தமது தாயார்மீது அன்பு செலுத்தினார். மேலதி காரத்திற்குப் பணியாத, அச்சம் இன்னதென்றறியாத வீரச்சிறுவனாக சிவாஜி வளர்ந்தார். தமது தாயாரிடமும் காப்பாளரான தாதாஜி கோண்ட தேவிடமும் இந்து சமயத்தையும் சாத்திரங்களையும் அவர் கற்றறிந்தார். படைப்பயிற்சி பெற்ற அவர், ஓட்டப் பந்தயம், குதிரை யேற்றம் முதலான வீரவிளையாட்டுகளில் தேர்ச்சி பெற்றிருந்தார். ஆனால், அவருக்கு எழுதப் படிக்கத் தெரியாது. அவர் கல்வியறிவு இல்லாதவராயினும், கேள்வியினால் இராமாயணம், மகாபாரதம், சாத்திரங்கள் ஆகியவற்றில் மிகுந்த தேர்ச்சி பெற்றிருந்தார். சமயக் கீர்த்தனைகளில் பங்குகொள்ளப் பெரிதும் விரும்பினார். இந்து முஸ்லீம் சாதுக்களோடு பழகுவதையும் ஆர்வத்தோடு வரவேற்றார். நடை முறை சார்ந்த மனிதரான தாதாபாய் கோண்டதேவின் அறிவுரையும் முன்மாதிரியும் சிவாஜியின் ஆரம்பகால ஆட்சிமுறை சார்ந்த பயிற்சிக்கு ஆதாரமாக அமைந்தன. பூனா ஜாகீரைப் பன்னிரண் டாவது வயதில் அவர் தமது தந்தையிடமிருந்து பெற்றார். 1641ஆம் ஆண்டில் ஷாஜியின் தலைமைப் பீடமாக விளங்கிய பெங்களூரில்

சாயிபாய் நிம்பல்கார் எனும் மாதை மணந்துகொண்டார். சிவாஜி பிறந்து வளர்ந்த பகுதி மாவல்நாடு எனப் பெயர் பெற்றிருந்தது. அங்கே மலைகளும் பள்ளத்தாக்குகளும் நிறைந்திருந்தன. அடிக்கடி கைமாறிய கோட்டைகளும் மலிந்து கிடந்தன. இவையனைத்தும் சிவாஜியிடம் வீர உணர்ச்சியைத் தோற்றுவித்தன. அவ்வுணர்ச்சியே படிப்படியாக நாட்டுப் பற்றாக வளர்ந்தது. மாவல் நாட்டில் பெரும்பான்மையில் கோலிகளும் (Kolis) மராத்தியரும் வாழ்ந்து வந்தனர். உடலுரமும் கடுமையான உழைப்பும் கொண்டிருந்த அவர்கள் முதல்தரமான படையொன்று உருவாவதற்கு ஏற்றவர்களாக இருந்தனர். இம்மக்களிடையே யிருந்த ஏராளமான இளைஞர்களை சிவாஜி ஒன்றுதிரட்டினார். அவர்களின் துணைகொண்டு ஒவ்வொரு கோட்டையாகக் கைப்பற்றத் துவங்கினார். அகமதுநகர், பீஜபூர் அரசுகளின் சீர்குலைவும், நாட்டின் நிலையற்ற தன்மையும், மக்களிடையே ஒழுங்கும் பாதுகாப்பும் இல்லாததும் சிவாஜியைத் துணிகர வீரராக்கின. மேலும், தாம் ஓர் உரிமை பெற்ற அரசராக ஆகவேண்டுமென்ற ஆசை அவர் மனத்தில் எழுமாறு செய்தன. அப்போது அவர் முஸ்லீம்களின் ஆதிக்கத்திலிருந்து இந்துக்களை விடுவிக்கும் திட்டம் கொண்டிருந்தாரா என்பது ஐயத்திற்குரியதே. அவரது உண்மை நோக்கம் எதுவாயினும், அவர் பூனாவிற்கு அருகிலுள்ள கோட்டைகளை இளம் பருவத்திலேயே பிடிக்க முற்பட்டார் என்பது உண்மை. தாதாஜி கோண்டதேவ் தமது இளங்கணரின் துணிகர வீர வாழ்வைக் கண்டு துயருற்றார். முதல்தரமான பிரபுவின் புதல்வர் இத்தகைய செயல்களில் ஈடுபட்டு, மரபு வழியாக வந்த செல்வந்தரின் மென்மையான, வசதியான வாழ்க்கையை மேற்கொள்ளாது இருப்பது அவரது தகுதிக்கு இழுக்காகுமென்று நினைத்தார். 1647ஆம் ஆண்டு மார்ச் திங்களில் அப்படிப்பட்ட தாதாஜி மறைந்தார். அதன் பிறகு சிவாஜி தமது இருபதாவது வயதில் தமக்குத் தாமே தலைவரானார்.

## அவர்தம் ஆரம்பகால வெற்றிகள்: ஜாவ்லியைக் கைப் பற்றுதல்

1646ஆம் ஆண்டில் பீஜபூர் நாட்டைச் சார்ந்த காவற்படைத் தலைவரிடமிருந்து தோர்ணா எனும் மலைக்கோட்டையைக் கைப்பற்றியது சிவாஜியின் முதலாவது வெற்றியாகும். அக் கோட்டையில் கிடைத்த இரண்டு லட்சம் 'ஹூன்'களை (Huns) படை ஒன்றினை உருவாக்குவதற்கும் அக்கோட்டைக்கு ஐந்து கல் கிழக்கே ராஜ்கார் எனும் பெயர்பெற்ற கோட்டையைக் கட்டுதற்கும் புத்திசாலித்தனமாகச் செலவிட்டார். சிறிது காலத்திற்கு பீஜபூர் அரசாங்கம் அவர்

மீது எவ்வித நடவடிக்கையும் எடுக்காமலிருந்தது. அது வலிமை இழந்து நின்ற காரணத்தாலும், அதன் அமைச்சர்களுக்கு கையூட்டு அளித்து சுல்தானின் அரசவையில் பல நண்பர்களை சிவாஜி பெற்றிருந்ததாலும் அவர்மீது நடவடிக்கை யேதும் எடுக்கப்படவில்லை. இதற்கிடையில் சக்கான், கொண்டனு ஆகிய கோட்டைகளையும் சிவாஜி கைப்பற்றிக்கொண்டார். ஆயின், தமது தந்தையின்மீது ஐயங்கொண்டு அவரை பீஜபூர் சுல்தான் சிறையிலிட்டார் என்ற செய்தி கிடைத்ததால் 1648ஆம் ஆண்டின் இடைப் பகுதியில் சிவாஜியின் முன்னேற்றம் தடைப்பட்டது. அப்போது சிவாஜி வெல்திற வழியைப் பின்பற்றலானார். ஷாஜியை விடுவிக்குமாறு பீஜபூர் சுல்தானை வற்புறுத்த வேண்டுமென்று தக்காணத்தின் முகலாய அரசப் பகர ஆளாகவிருந்த இளவரசர் முராத் பக்ஷிற்கு அவர் கடிதமெழுதினார். ஆனால், இவ்விஷயத்தில் தலையிட ஷாஜஹான் மறுத்துவிட்டார். எவ்வாறெனினும் ஷாஜியின் மக்களான சிவாஜியும் வெங்கோஜியும் பெங்களூர் கோட்டையையும் கொண்டனு கோட்டையையும் பீஜபூர் சுல்தானின் ஆட்கள் வசம் ஒப்படைத்த பிறகு 1649ஆம் ஆண்டு மே மாதத் தொடக்கத்தில் ஷாஜி விடுதலையானார்.

பீஜபூரின் ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெற்று வாழ்ந்த நீலோஜி நீல்கந்திடமிருந்து வலிமை மிக்க புரந்தர் கோட்டையை 1648ஆம் ஆண்டில் சிவாஜி சூழ்ச்சியால் கைப்பற்றினார். அவர் 1656-ல் ஜாவ்லியைக் கைப்பற்றி, ரெய்கார் கோட்டையைக் கட்டினார். சத்தாரா மாவட்டத்தின் வடமேற்கு மூலையில் அமைந்த ஜாவ்லி பகுதியானது, மராத்தியச் செல்வந்தரான சந்திர ராவ் மோரேயிடம் (Chandra Rao More) இருந்து வந்தது. அப்பகுதியில் விளங்கிய பீஜபூரிலிருந்து வந்த அரசப் பகர ஆளுடன் சிவாஜி எதிர்ப்புக் கூட்டணி ஒன்றை சந்திர ராவ் உருவாக்கினார். இங்ஙனம் தெற்கிலும், தென்மேற்கிலும் சிவாஜியின் முன்னேற்றத்தைத் தடை செய்தார். அதனால் அவரை ஒழிப்பதற்காகச் சூழ்ச்சிசெய்த சிவாஜி, ஜாவ்லியைப் பிடித்துக்கொண்டார். சந்திரராவைக் கொல்லுமாறு செய்தார். அக்கொலையைத் தொடர்ந்து உடனடியாக (1656ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 25ஆம் தேதி) ஜாவ்லியைத் தாக்கி அதன் கோட்டையைக் கைப்பற்றினார். சந்திர ராவின் மக்களிருவரும் ஓடி ஒளிந்தனர். அவரது செயலாட்சியாளரான ஹனுமந்த்ராவ் மோர் குத்திக் கொல்லப்பட்டார். தங்களது தந்தை கொலையுண்டபின் ஓடி ஒளிந்த ரெய்ரி (Rairi)யையும் சந்திர ராவின் புதல்வர்கள் சிவாஜியிடம் ஒப்படைக்கவேண்டியதாயிற்று. இங்ஙனம் ஜாவ்லி முழுதும் சிவாஜியின் கைக்கு வந்தது. அதனால், மேலும் அவர் பல வெற்றிகளை எதிர்நோக்குவதற்கு அது ஒரு வாய்ப்பாக அமைந்தது.

வரலாற்று அறிஞரான சர் ஜாதுநாத் சர்க்கார் அவர்கள் பின் வருமாறு குறிப்பிட்டுள்ளார். "சிவாஜி வேண்டுமென்றே நடத்திய கொலையும், திட்டமிட்டுச் செய்த சூழ்ச்சியும் ஜாவ்லியை வெற்றி கொள்ளக் காரணமாயின. அப்போது அவரது அதிகாரம் வளரா நிலையில் இருந்தது. அதனால், அவர் தம்மை வலுப்படுத்திக்கொள் வதற்கான வழியினைத் தேர்ந்தெடுப்பதில் நேர்மையைக் கடைப் பிடிக்க முடியவில்லை. அவரது வாழ்க்கையில் நடைபெற்ற இந் நிகழ்ச்சியின் ஒரே ஒரு போற்றத்தக்க தன்மை யாதெனில் நயவஞ் சகம் அதனோடு சேரவில்லை. இந்து 'சுயராஜ்யத்தை' அமைக்கும் ஆர்வத் தூண்டுதலினால் அல்லது தமது பெருந்தன்மையோடு கூடிய தாராளத் தன்மையை மீண்டும் மீண்டும் தவறாகப் பயன் படுத்திய சூழ்ச்சி மிக்க பகைவரைத் தமது பாதையிலிருந்து விலக்கு தற்காக மூன்று மோரேக்களின் கொலைகள் நடைபெற்றன என்று எப்போதுமே சிவாஜி நடித்ததில்லை."

ஜாவ்லியை வெற்றி கொண்டது சிவாஜியின் வாழ்வில் திரும்பு கட்டமாக அமைந்தது. அவர் புதிதாக நிறுவிய அரசின் தெற்கி லும் மேற்கிலும் இருந்த புதிய பகுதிகளைப் பிடிப்பதற்கு அவ்வெற்றி வழி வகுத்தது. இரண்டாவதாக, மோரேக்களின் மாவ்லி நிலப் படையிலிருந்து பல்லாயிரக்கணக்கான வீரர்கள் சிவாஜியின் சேவையில் ஈடுபட்டதால் அவரது படை பலத்தை அது பெருக் கியது. தவிரவும், ஜாவ்லியை அவர் கொண்டதால் அவரது படைக் கான சிறந்த ஆள் திரட்டும் நிலமாகத் திகழ்ந்த மாவ்லி பகுதி அவர் கைக்கு வந்தது. மூன்றாவதாக, பல தலைமுறைகளாக மோரேக்கள் சேர்த்துவைத்திருந்த பெரும் பொருட் குவியல் அவ ரிடம் சிக்கியது. அவர் 1656ஆம் ஆண்டில் சந்திர ராவ் மோரேயிட மிருந்து கைப்பற்றிய வலிமை வாய்ந்த ரெய்கார் கோட்டையைத் தமது ஆட்சிப் பீடமாக அமைத்துக் கொண்டார். அக்டோபர் மாதத் தொடக்கத்தில் பூனாவிற்குத் தென்கிழக்கே முப்பது மைல் தூரத்திலிருந்த சுபா (Supa) மாவட்டத்தைத் தமது தாய் மாமனுக்கு எதிராகப் (மாற்றாந்தாயின் சகோதரன்) புரட்சி செய்து கைப்பற்றி னார். அதன் பொறுப்பேற்றிருந்த அவரது தாய் மாமன் தப்பி யோடி ஷாஜியிடம் தஞ்சம் புகுந்தார்.

## 1657ஆம் ஆண்டில் முகலாயருடனான முதல் மோதல்

முகலாயத் தக்காணத்தின் அரசப் பகர ஆளாக இருந்த அவுரங்கசீப், பீஜப்பூரைத் தாக்கியபோது 1657ஆம் ஆண்டின் ஆரம் பத்தில் முகலாயருடன் சிவாஜி முதன்முறையாக மோதினார்.

பீஜபூரைச் சார்ந்த மிக முக்கிய பிரபுக்களையும் அதிகாரிகளையும் முகலாய இளவரசர் தகாத முறையில் தம் பக்கம் இழுக்க முயன்ற சமயத்தில், சிவாஜியும் நிபந்தனையின் பேரில் முகலாயருடன் சேரத் தாம் தயாரென அறிவித்தார். அவரது நிபந்தனையில் பின் வருபவை அடங்கின. (அ) அவர் வெற்றி கொண்ட பீஜபூரைச் சார்ந்த கோட்டைகளுக்கும், பகுதிக்கும் அவரே முறையான தலைவர் என்பதை ஏற்க வேண்டும். (ஆ) அண்மையில் இணைத்துக் கொண்ட தபோல் (Dabhol) கோட்டைக்கும் அதைச் சார்ந்த பகுதிக்கும் அவரையே தலைவராக ஏற்கவேண்டும். சூழ்ச்சித் திற முடைய பதிலொன்றை அவுரங்கசீப் அனுப்பி வைத்தார். அதனால் பீஜபூருக்குச் சாதகமாக முகலாயரின் கவனத்தைத் திருப்புவதனால் தமக்கு நன்மை உண்டு என்பதை உணர்ந்த சிவாஜி, தக்காணத் தின் தென்கிழக்குக் கோடியிலிருந்த கல்யாணியை அவுரங்கசீப் முற்றுகையிட்டுக் கொண்டிருந்தபோது, முகலாய தக்காணத்தின் தென்மேற்கு முனையைத் தாக்கிக் கொள்ளையிட்டார். மேலும் அகமது நகர் வாயில் வரையிலான சமர்குண்டா, ரெய்சின் மாவட்டங்களையும் மராத்தியர் கொள்ளையடித்தனர். அதே சமயத் தில் ஜுன்னர் மீது நேரடியாகப் படையெடுத்துச் சென்ற சிவாஜி மூன்று லட்ச 'ஹூன்'களைப் பணமாகக் கொண்டு வந்தார். இவற்றின் விளைவாகக் கொள்ளையிட்ட மராத்தியரை வெளியேற்றி முகலாய தக்காணத்தின் தென்மேற்கு எல்லையைப் பாதுகாப்பதற் கென்று தமது படையின் ஒரு பகுதியைப் பிரித்து அனுப்ப வேண்டிய கட்டாயம் அவுரங்கசீப்பிற்கு ஏற்பட்டது. முகலாய ருடன் பீஜப்பூர் சமாதானம் செய்து கொண்ட பிறகு சிவாஜியும் பணிந்தார். ஆனால், உண்மையில் அவுரங்கசீப் அவரை மன்னிக்க வில்லை.

## 1657ஆம் ஆண்டில் கொங்கணத்தை வெல்லுதல்

அரியணைக்காகப் போரிட அவுரங்கசீப் வட இந்தியாவிற்குப் புறப்பட்டுச் சென்ற பின்னர், தமது பகுதிகளை விரிவு செய்வதற்கான வாய்ப்பு ஒன்று சிவாஜிக்குக் கிட்டியது. 1657ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதத்தில் ஜன்ஜீராவின் சித்தீக்களைத் தாக்குவதற்காக ஒரு படையினை சிவாஜி அனுப்பினார். ஆனால், அதில் அவர் வெற்றி பெறவில்லை. அந்த ஆண்டு முடிவில் தானா, கொலாபா மாவட்டங்களைக் கொண்ட வடகொங்கணத்தைத் தாக்கினார். கல்யாண், பிவந்தி ஆகியவற்றைக் கைப்பற்றி அவற்றினைக் கடற் படைத் தளங்களாக மாற்றியமைத்தார். வட கொங்கணத்தில் தமது ஆதிக்கத்தினை நிலைநாட்டியதோடு, அங்கே முறையான

ஆட்சியையும் நிலைநாட்டினார். அண்டையிலிருந்த போர்ச்சுகீசியப் பகுதியான டாமனை (Daman) அவரது படையினர் தாக்கிச் சூறை யாடினர். அதன் விளைவாக போர்ச்சுகீசியர் மராத்திய மன்னருக்கு ஆண்டுதோறும் திறை செலுத்த உடன்பட்டனர். கல்யாணில் தான் அம் மாவட்டத்தின் பீஜப்பூரின் அரசப் பகர ஆளான முல்லா அஹ்மத் நவாயத்தின் (Mulla Ahmed Nawayat) மருமகள் என்று சொல்லப் பெற்ற அழகிய முஸ்லிம் மங்கையை மராத்திய வீரர்கள் பிற கொள்ளைப் பொருள்களோடு கைப்பற்றி சிவாஜிக்குப் பரிசாக வழங்க முன்வந்தனர். ஆனால், மராத்திய அரசரோ அம் மங்கையின் மானத்தை அழிக்க மறுத்துவிட்டார். அவளைப் பரிவுடன் நடத்தி, ஆடைகளையும் அணிகலன்களையும் அளித்து பீஜப்பூரிலிருந்த சொந்தக்காரர்களிடமே அவளைத் திரும்ப அனுப்பிவைத்தார்.

## அப்சல்கானின் கதை, 1659

பீஜப்பூரிடமிருந்து பெரும் பகுதியையும் பல கோட்டைகளையும் சிவாஜி கைப்பற்றியிருந்தார். அந்நிலையில் பீஜப்பூர் அரசாங்கம் இறுதியாக மன உறுதி பூண்டு சிவாஜியை ஒடுக்குவதற்காக முதல் தரமான பிரபுவாகவும் படைத் தலைவராகவும் விளங்கிய அப்சல் கான் எனப் பட்டம்பெற்ற அம்துல்லா பட்டாரியை நியமித்தது. 'குதிரை மீது இருந்து ஒரு முறை கூடக் கீழே இறங்காது சிவாஜியைச் சங்கிலியால் பிணைத்துக் கைதியாகத் தாம் கொண்டுவரப்போவ தாக' அவர் அரசவையில் வீருப்புப் பேசினார். மாவ்லின் தேஷ்முக் களையும், சிவாஜியின் அதிகாரிகள், படை வீரர்கள் ஆகியோரையும் அவர் தீய நெறிப்படுத்தித் தம் பக்கம் இழுக்க முயன்றார். உண்மை யில் சில தேஷ்முக்கள் அவருடன் சேர்ந்துகொண்டனர். அப்சல் கான், 1659ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில் பீஜப்பூரிலிருந்து புறப்பட்டு புரந்தரைச் சென்றடைந்தார். அங்கே விட்டோபா கோயிற் சிலைகளை உடைத்தெறிந்தார். அங்கிருந்து வை (Wai) எனுமிடத்திற்குச் சென்று, சிவாஜியுடன் சேர்ந்துகொண்டதற்காக பஜாஜி நாயக் நிம்பல்கரிடமிருந்து ரூ. 2 லட்சம் தண்டப் பண மாகப் பெற்றார். அப்பகுதியில் இருந்த இந்துக் கோயில்களைக் கொள்ளையிட்டு அழிக்குமாறு தமது படைகளை ஏவினார். சிவாஜியின் பகைவர்களான ஜாவ்லியின் மோரேக்களின் துணைகொண்டு மாவல் பகுதிக்குள் புகுந்து சிவாஜியைப் பூனாவில் தாக்க அப்சல்கான் தீர்மானித்தார். ஆயின், காடுகள் நிறைந்த ஜாவ்லி மாவட்டத்தில் சிவாஜி நிலைகொண்டிருந்ததால் அவரை நேரடியாகத் தாக்கும் கொள்கையை அப்சல்கான் கைவிட்டார். சிவாஜியைத் தந்திர மாகத் தமது வலையில் சிக்க வைப்பதற்காக அவர் பிரதாப்கருக்குச்

சென்று அங்கே தமது பாசறையை அமைத்துக் கொண்டார். தம்மை வந்து காணுமாறு வேண்டி சிவாஜியிடம் கிருஷ்ணஜி பாஸ்கரைத் தூது அனுப்பினர். கொங்கணத்தின் ஆட்சியுரிமை யையும் ஏற்கெனவே சிவாஜியின் வசமிருந்த கோட்டைகளின் ஆட்சியுரிமையையும் சிவாஜிக்கு வாங்கித் தருவதாக வாக்குறுதி யளிக்குமாறும் செய்தார். அவர் அனுப்பிய செய்தியில் பின்வரு வனவும் இணைந்திருந்தன. 'எமது அரசாங்கத்திடமிருந்து மேலும் பதவிகளையும் படைக்கலன்களையும் உமக்குப் பெற்றுத் தருவேன். தாங்கள் அரசவைக்கு வர விரும்பினல் நல்ல வரவேற்புக் கிடைக்கும். அல்லது அதனைத் தவிர்க்க விரும்பினல் நேரடியாக இங்கே வர வேண்டும். அப்படிச் செய்தால் விலக்கு அளிக்கப்பெறும்.'

அப்சல்கானுக்கெதிராகக் கடைப்பிடிக்க வேண்டிய கொள்கை பற்றி மராத்தியத் தலைவர்கள் மாறுபட்ட கருத்துகளைக் கொண்டிருந்தனர். பணிந்துவிடுவது நல்லது என சிவாஜியின் அதிகாரிகள் ஆலோசனை கூறினர். ஆனால், அவர் அதிகாரி களுடைய ஆலோசனையைப் புறக்கணித்துவிட்டு படையெடுப்பாள ரைத் தீரத்துடன் எதிர்க்க உறுதி பூண்டார். கிருஷ்ணஜி பாஸ்க ரிடமிருந்து அப்சல்கானின் சூழ்ச்சித் திட்டத்தை சிவாஜி உணர்ந்துகொண்டார். இருப்பினும், தமக்குப் பாதுகாப்பு வழங்கு வதாக மனப்பூர்வமான வாக்குறுதி அளிப்பதாக இருந்தால் அப்சல்கானைச் சந்திப்பதற்கான அழைப்பைத் தாம் ஏற்பதாகக் கூறினர். அப்சல்கானும் அத்தகைய வாக்குறுதியை அளித்தார். அப்சல் கானின் நோக்கங்களை அறிந்து வருவதற்காகச் சென்ற பந்தாஜி கோபினுத் என்ற சிவாஜியின் தூதர், சந்திப்பின்போது சிவாஜியைச் சிறையிலிடுவதற்கான ஏற்பாடுகளை அப்சல்கான் செய்துகொண்டிருந்ததாக அறிவித்தார். சிவாஜியின் யோசனைப் படி பிரதாப்கருக்கு ஒரு மைல் தெற்கே அமைந்த பார் எனும் ஊரில் அப்சல்கானும் சிவாஜியும் சந்திப்பது என்று முடிவாகியது. திட்ட மிடப் பெற்ற சந்திப்பிற்காக என்று பாரில் இருந்த கோட்டைக்கு அண்மையில் அமைந்த காட்சி மண்டபத்தில் அப்சல்கான் சென்று தங்கினர். அச்சமயத்தில் சிவாஜியோவெனின், காட்சி மண்டபத் திற்குச் செல்லும் பாதையின் இரு புறங்களிலும் இருந்த காட்டில் தேர்ந்தெடுத்த படை வீரரை ஒளிந்திருக்குமாறு செய்துவிட்டு, தலைப்பாகையின் கீழ் இரும்புத் தொப்பியையும், ஆடைக்குள் சங்கிலியால் ஆன இரும்புக் கவசத்தையும் அணிந்து, அப்சல் கானைச் சந்திக்கச் சென்றர். பாக்நாக் எனும் இரும்பு நகங்களைத் தமது இடக் கையில் மறைத்து வைத்திருந்தார். பிச்சுவா (Bichhwa) அல்லது சூரி எனும் கூரிய குறுவாளைத் தமது வலப்புறச் சட்டைக் கைக்குள் ஒளித்து வைத்திருந்தார். ஜீவ் மஹாபா,

ஹாம்பூஜி கவ்ஜி எனும் இரு துணைவர்களைத் தம்முடன் அழைத்துச் சென்றார். அவர்கள் ஒவ்வொருவரும் இரு வாள்களையும் ஒரு கேடயத்தையும் தாங்கிச் சென்றனர்.

ஆயிரத்திற்கு மேற்பட்ட துப்பாக்கி வீரர்களுடன் அப்சல்கான் அவ்விடத்திற்கு வந்தார். அப்சல்கானின் படை போதுமான தூரத்திலேயே நிற்க வேண்டுமென்றும், இல்லாவிடில் அவரைச் சந்திக்க சிவாஜி மறுத்து விடுவார் என்றும் சிவாஜியின் தூதரான கோபினாத் அப்சல்கானிடம் அறிவித்தார். அதற்கிணங்க அப்சல் கானும் சிவாஜியைப் போலவே படைக்கலந் தாங்கிய இரு துணைவர் களுடன் காட்சி மண்டபத்திற்கு வந்து சேர்ந்தார். சையது பந்தா எனும் புகழ் மிக்க வாள்வீரரைத் தம்முடன் வைத்துக்கொள்ள அவர் விரும்பினார். ஆனால், அதனைச் சிவாஜி எதிர்க்கவே அவர் கூடாரத்திலிருந்து வெளியேற்றப்பட்டார். காட்சி மண்டபத்தின் ஓரத்தில் வந்ததும் வணக்கம் தெரிவிப்பதற்காக சிவாஜி குனிந்தார். அப்போது சில அடிகள் முன் வந்த அப்சல்கான் அவரைத் தழுவிக் கொண்டார். தமது தோள் வரையில் வந்த சிவாஜியை நெரித்துக் கொல்வதற்காகத் தமது பிடியினை இறுக்கச் சிறிது வளைந்ததோடு, தமது வாளை உருவி சிவாஜியின் இடப்புறம் குத்தினார். ஆனால், மராத்தியத் தலைவர் தமது மேற்சட்டையின் கீழ் இரும்புக் கவசம் அணிந்திருந்ததால் கத்திக்குத்து பயனளிக்கவில்லை. திடீர்த் தாக்குதலிலிருந்து விடுபட்ட சிவாஜி இரும்பு நகங்களைக்கொண்டு அப்சல்கானின் வயிற்றைக் கிழித்தார். அதனோடு உடனடியாகத் தமது பிச்சுவாவை அப்சல்கானின் விலாவில் சொருகினார். மோச மாகக் காயமுற்ற அப்சல்கான் சிவாஜிமீதான பிடியைத் தளர்த்தி னார். அப்போது சிவாஜி தம்மை விடுவித்துக்கொண்டு மேடைக்குக் கீழே நின்றிருந்த தமது துணைவரை நோக்கி விரைந் தார். அப்சல்கான் வலி பொறுக்க முடியாது அலறினார். அதைக் கேட்ட சையதுபந்தா, சிவாஜியின் தலையில் வாள்கொண்டு மோதினார். ஆனால், மறைந்திருந்த இரும்புத் தொப்பியினால் சிவாஜிக்கு ஊறு ஏற்படவில்லை. இதற்கிடையில் சையதின் வலக் கையை ஜீவ்மஹாலா வெட்டி அதன் பிறகு அவரைக் கொன்றார். 1659ஆம் ஆண்டு நவம்பர் மாதம் இரண்டாம் தேதியன்று இந் நிகழ்ச்சி நடைபெற்றது.

அப்போது காட்டில் ஒளிந்திருந்த மராத்தியப் படை வீரர்கள் தலைவரற்றிருந்த பீஜப்பூர் படையின்மீது பாய்ந்தனர். பீஜப்பூர் படையினர் கடுமையாக எதிர்த்தபோதிலும் மராத்தியர் அவர்களை முறியடித்து விரட்டினர். அவர்களில் முன்னூறு பேர் கொல்லப் பட்டனர். மற்றவர் தப்பிப் பிழைத்தனர். பீரங்கிகள், வெடி

மருந்து, நிதிக்குப்பை, யானைகள், குதிரைகள், ஒட்டகங்கள் போன்ற ஏராளமான பொருள்கள் சிவாஜியிடம் சிக்கின. மேலும், அப்சல்கானுடைய படையின் போர்த் தளவாடங்கள் அனைத்தும் அவர் கைக்கு வந்தன. அவருக்குக் கிடைத்த பொருள்களில் நாணயங்களாகவும், நகைகளாகவும் பத்து லட்சம் கிடைத்தது. இந்த வெற்றிக்குப் பிறகு பெரும் படையணிப் பார்வையீட்டிற்கு சிவாஜி ஏற்பாடு செய்தார். அந்த மறக்க முடியாத நிகழ்ச்சியில் முக்கியப் பங்கேற்ற அனைவருக்கும் பரிசுகள் வழங்கினார்.

சிவாஜி, இவ்வெற்றியைத் தொடர்ந்து கொங்கணத்திற்கும் கோலாப்பூர் மாவட்டத்திற்கும் தமது படைகளை அனுப்பினார். பான்ஹலா கோட்டையைக் கைப்பற்றிய பிறகு ருஸ்தம் ஸமான் (Rustam Zaman), அப்சல்கானின் மகனான பாஸல்கான் ஆகியோரின் தலைமையிலான மற்றொரு பீஜப்பூர் படையினை முறியடித்தார். அண்மையிலிருந்த வசந்த்கர், கெல்னா, பங்க்னா முதலான கோட்டைகளையும் பிடித்தார். 1660ஆம் ஆண்டு ஜனவரி மாதக் கடைசியில் பெரும் பொருளுடன் ரெய்காருக்குத் திரும்பினார்.

## 1660-ல் பான்ஹலாவையும் சக்கானையும் இழந்தல்.

பீதியுற்ற பீஜப்பூர் சுல்தான் கர்னூல் மாவட்டத்தின் ஆட்சிப் பொறுப்பினை ஏற்றிருந்த சித்தி ஜாஹர் என்பவரை சிவாஜியின் மீது படையெடுத்துச் செல்லுமாறு பணித்தார். ஜாஹருக்குத் துணையாக பாஜி கோர்படே, ருஸ்தம்-இ-ஸமான், பாஸல்கான் முதலான அதிகாரிகள் சென்றனர். சிவாஜி தங்கியிருந்த பான்ஹலா கோட்டையை சித்தி முற்றுகையிட்டார். அவர் அந்த முற்றுகையைத் தீவிரப்படுத்தியபோது சிவாஜி அவருடன் சமாதானம் செய்துகொள்ள உடன்பட்டார். ஆனால், அந்த மராத்தியத் தலைவரின் தீராத பகைவராக பாஸல்கான் அக்கோட்டையைக் கைப்பற்றத் தம்மால் இயன்றதனைத்தையும் செய்தார். எனவே, பான்ஹலாவிற்கு 27 மைல்கள் மேற்கே அமைந்த பிஷால்கருக்கு சிவாஜி தப்பிச் சென்றார். 1660ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 2ஆம் தேதி பான்ஹலா கோட்டை வீழ்ந்தது. பீஜப்பூரைச் சார்ந்தவர்கள் பான்ஹலாவை முற்றுகையிட்ட அதே சமயத்தில் சிவாஜிக்குச் சொந்தமான வட பகுதியை முகலாயர் தாக்கினர். பூனாவிற்கு 18 கல் தொலைவிலிருந்த சக்கான் கோட்டையைக் கைப்பற்றினர்.

## 1663ஆம் ஆண்டு ஏப்ரல் திங்களில் ஷெயிஷ்டகான் மீதான இராத் தாக்குதல்

அப்போது வாரிசுரிமைப் போரில் வெற்றி பெற்ற முகலாயப் பேரரசரான அவுரங்கசீப் தமது தாய் மாமனை ஷெயிஷ்டகானை தக்காணத்தின் அரசப்பகர ஆளாக நியமித்தார். புதிதாக முளைத்த மராத்தியரின் ஆதிக்கத்தை அடியோடு அழித்துவிட வேண்டுமென்று அறிவுரை தந்து அனுப்பினார். மராத்தியர்மீது படையெடுத்துச் செல்வதற்கு முன் அவர்களுடைய தெற்குப் பகுதியைத் தாக்குமாறு பீஜப்பூரைச் சார்ந்தவர்களை ஷெயிஷ்டகான் தூண்டினார். ஒரே சமயத்தில் எழும் இரு படையெடுப்புகட்கிடையே சிவாஜியை அழித்துவிட அவர் திட்டமிட்டார். 1660ஆம் ஆண்டு மார்ச் மாதத்தில் அகமத்நகரை விட்டுப் பூனாவிற்குப் புறப்பட்ட ஷெயிஷ்டகான் அந் நகரங்களுக்கிடையே இருந்த கோட்டைகளை மெதுவாகக் கைப்பற்றினார். பூனாவின் தென்கிழக்கில் பத்துக் கல் தொலைவிலிருந்த சஸ்வாத்வரை முறையான மராத்திய எதிர்ப்பு ஏதும் இல்லை. இந்நிலையில் மே மாதம் பத்தொன்பதாம் தேதியன்று ஷெயிஷ்டகான் பூனாவிற்குள் நுழைந்தார். மாரிக் காலத்தை அங்கேயே கழித்துவிட அவர் விரும்பினார். ஆனால், அண்மையிலிருந்த பகுதிகளையெல்லாம் மராத்தியர் சூறையாடி அழித்துவிட்டனர். அனுதல் அகமது நகரிலிருந்து தளவாடங்களைப் பெறுவதற்காக பூனாவின் வடக்கே பதினெட்டுக்கல் தொலைவிலிருந்த சக்கன் கோட்டையை ஷெயிஷ்டகான் முற்றுகையிட்டு, ஆகஸ்ட் மாதம் 25ஆம் தேதி அதனைப் கைப்பற்றினார். அப்போது ரெய்காரில் தங்கியிருந்த சிவாஜி பூனா மாவட்டத்தை இழந்ததற்கும், சக்கான், பான்ஹலா ஆகிய கோட்டைகளின் இழப்பிற்கும் ஈடுசெய்யக்கூடிய திட்டமொன்றை உருவாக்கினார். மராத்தியர் கையிலிருந்த கொங்கணப் பகுதிகளைக்கைப்பற்றுவதற்கென தலப்கானின் (Talabkhan) தலைமையில் வந்த ஷெயிஷ்டகானின் படைப்பிரிவு ஒன்றை சிவாஜி முறியடித்தார். அதன் பிறகு அவர், முகலாயருக்கு எதிராகப் போரிட நேத்தாஜியின் தலைமையில் ஒரு படையணியை அனுப்பிவிட்டு, பீஜப்பூருக்குச் சொந்தமான கொங்கணப் பகுதிகளை நேரில் சென்று தாக்கினார். ஒரே அடியாக தண்டாராஜபுரியிலிருந்து காரேபதான் வரையிலான நிலப்பரப்பு முழுவதையும் அவர் கைப்பற்றினார். அவருக்குச் சிறிதும் எதிர்ப்பு இல்லை. இரத்தினகிரி மாவட்டத்திலிருந்த பலநகரங்கள் கொள்ளையிலிருந்து விடுபடுவதற்காக சௌத் வரியை அவரிடம் அளித்தன. அதன் பிறகு அவர் பள்ளிவன நாட்டைக் கைப்பற்றி சீர்துர்கத்தை அரண்காப்புடையதாக்கினார். அதன் பின்னர், அவர் சிருங்கர்பூரைப் பிடித்துக்கொண்டார். அதனுடைய மன்னரான சூர்யராவ் என்பார் உயிருக்காக ஓடி ஒளிந்தார். எவ்வாறெனினும்

இத்தகைய சிறப்பு வாய்ந்த வெற்றிகளுக்குக் களங்கம் விளைவிப்பது போல கல்யாண் நகரை முகலாயர் மீண்டும் கைப்பற்றிக்கொண்டனர். இருப்பினும், இரண்டாண்டுகள் நடைபெற்ற போர்களின் விளைவாக கொலாபா மாவட்டத்தின் தென்கிழக்குக் கோடியையும் உள்ளிட்ட தென் கொங்கணத்தையும், அநேகமாக இரத்தினகிரி மாவட்டம் முழுவதையும் தம் ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டுவருவதில் சிவாஜி வெற்றி கண்டார்.

அதன் பிறகு, 1660ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதத்தில் பூனாவிற்குத் திரும்பி வந்த ஷெயிஷ்டகானை இரவில் தாக்குவது என சிவாஜி திட்டமிட்டார். அப்போது சக்கானைக் கைப்பற்றிய பின்பு ஷெயிஷ்டகான் சிவாஜி தமது இளமைப் பருவத்தில் வாழ்ந்திருந்த அதே வீட்டில் தங்கியிருந்தார். மராத்தியத் தலைவர், 400 தேர்ந்தெடுத்த படைவீரர் தொடர சிங்கரை விட்டு நீங்கி 1663ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 15ஆம் நாள் இரவில் பூனாவை அடைந்தார். அவர் ஷெயிஷ்டகான் பாசறையின் எல்லையை அடைந்ததும் முகலாயக் காவல் வீரர்கள் அவர்களை யார் என்று வினவியபோது, தாங்கள் பேரரசப் படையின் மராத்திய வீரர்கள் என்றும், அவரவர்களுக்கு என்று நிர்ணயிக்கப் பெற்ற இடங்களுக்குச் செல்வதாகவும் சிவாஜி மறுமொழி கூறினார். சிவாஜியும் அவரது வீரர்களும் நள்ளிரவின் போது ஷெயிஷ்டகான் தங்கியிருந்த வீட்டை அடைந்தனர். செங்கல்லும் மண்ணும் கொண்டு அடைக்கப் பெற்றிருந்த சிறிய வாயிலைத் திறந்துகொண்டு அவ் வீட்டில் நுழைந்தனர். முதலில் நுழைந்த சிவாஜியைத் தொடர்ந்து 200 மராத்திய வீரர்களும் உள்ளே சென்றனர். ஷெயிஷ்டகானின் அறையை அடைந்ததும் சிவாஜி அவர் மீது பாய்ந்து தாக்கினார். அப்போதுதான் விழித்தெழுந்த ஷெயிஷ்டகான் தாக்குதல் நடைபெறும்போது ஆயுதம் தாங்கி நின்றார். கட்டைவிரலை மட்டும் இழந்து, இருட்டில் தப்பிச் சென்றார். அவரது உவளகத்தில் இருந்த பல பெண்களை இருட்டில் இனம் தெரியாது மராத்தியர் கொன்றனர். இதற்கிடையில் 200 வீரர்களைக் கொண்ட சிவாஜியின் மற்றப் படைப்பிரிவு ஷெயிஷ்டகானின் உவளகத்திற்கு வெளியே இருந்த முக்கியக் காவற்படையினர்மீது பாய்ந்து தாக்கியது. முகலாயப் படையில் பெருங் குழப்பம் தோன்றியது. தமது தந்தைக்கு உதவி செய்வதற்காக ஷெயிஷ்டகானின் மகன் அப்துல் படா (Abdul Fatah) ஓடி வந்தார். ஆனால், அவர் கொல்லப்பட்டார். பல முகலாயத் தலைவர்களும் அதே கதி அடைந்தனர். இப்போது முகலாயப் படைகள் முழுவதும் விழித்தெழுந்தன. ஆயின் சிவாஜி தமது படை விரர்களை ஒன்று திரட்டிக்கொண்டு பாசறையை விட்டு வெளியேறினார். குழப்பத்தில் மூழ்கி இருந்த முகலாயர்கள் மராத்தியரைப் பின்தொடர்ந்து செல்ல

முடியவில்லை. இங்ஙனம் சிவாஜியின் இரவுத் தாக்குதல் முழு வெற்றியளித்தது. ஷெயிஷ்டகானுக்குப் பேரிழப்பு நேர்ந்தது. தமது புதல்வர்களில் ஒருவரையும், மனைவியர், அடிமைப் பெண்களில் அறுவரையும், 40 மெய்க்காவலர்களையும் அவர் பறிகொடுத்தார். தவிர, காயமுற்றோரில் அவரது மக்களில் இருவரும், எட்டு மங்கையரும் அடங்குவர். இத்துயர நிகழ்ச்சி 1663ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 15ஆம் தேதி நடைபெற்றது. ஷெயிஷ்டகான் அவமானத்தில் ஆழ்ந்தபோது, சிவாஜியின் பெருமை வெகுவாக உயர்ந்தது. சினங்கொண்ட அவுரங்கசீப் ஷெயிஷ்டகானை வங்காளத்திற்கு மாற்றினார்.

## 1664-ல் சூரத்தைக் கொள்ளையடித்தல்.

இத்தகைய துணிகர வீரச்செயலுக்குப்பின் அதைவிட மேலான வெற்றியை சிவாஜி பெற்றார். நாட்டிலேயே மிகுந்த செல்வ வளம் கொண்ட துறைமுகப்பட்டினமான சூரத்தின்மீது வேகமாகப் படையெடுத்துச் சென்று அதனைக் கொள்ளையிட்டது சிவாஜியின் அரும்பெரும் சாதனைகளில் ஒன்றாகும். அத்தகைய திட்டத்தைப் பரம இரகசியமாக வைத்திருந்த அவர், தெற்கு நோக்கிப் படையுடன் செல்வதாக அறிவித்துவிட்டு உண்மையில் வடக்கு நோக்கி முன்னேறினார். 1664ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 10ஆம் தேதி (வேறு சிலர் ஜனவரி முதல் தேதி என்பர்) நாஸிக்கைவிட்டு நீங்கி மின்னல் வேகத்தில் முன்னேறி சூரத்தைத் தாக்கினார். நகரில் பேரச்சம் குடிகொண்டது. பலர் தங்கள் உயிரைக் காத்துக்கொள்வதற்காகக் குடும்பங்களோடு நகரைவிட்டு வெளியேறினர். அரசப்பகர ஆளான இனயத்கானும் நகரைவிட்டு நீங்கிக் கோட்டையில் தஞ்சம் புகுந்தார். ஜனவரி மாதம் 16ஆம் தேதி காலையில் நகருக்குள் புகுந்து பர்ஹான்பூர் வாயிலுக்கு வெளியே இருந்த தோட்டத்தில் பாசறை அமைத்துக்கொண்ட சிவாஜியும் சமாதானம் செய்துகொள்வதற்காக அந்த ஆளுநர் பகர ஆள் ஒருவரைப் பகைவர் பாசறைக்கு அனுப்பினார். ஆயின், சிவாஜி, வந்த தூதுவரை சிறையிலடைத்துவிட்டு நான்கு நாட்களுக்கு சூரத் நகரினைச் சூறையாடினார். ஆயிரக்கணக்கான வீடுகள் தீக்கிரையாயின. நகரின் மூன்றில் இரண்டு பகுதிகள் அழிவுற்றன. கோழையான முகலாய கவர்னர் சிவாஜியைக் கொல்வதற்காக கொலைகாரன் ஒருவனை ஏவினார். ஆனால், சிவாஜியின் மெய்க்காவலரில் ஒருவன் அக் கொலைகாரனின் வலக்கரத்தை வெட்டி வீழ்த்தியதால் கொலை முயற்சி தோல்வியுற்றது. சூரத் மக்களைப் படுகொலை செய்யவேண்டுமென்று மராத்தியப் படையினர் விரும்

பினர். ஆனால், சிவாஜி அதற்குத் தடை விதித்தார். சிறைப்பட்ட சிலரது கைகளை மட்டும் அவர் வெட்டி வீழ்த்தினர். அந்நகரில் வாழ்ந்த ஆங்கில வணிகர்கள் தங்களது பண்டக சாலையைப் பாது காத்துக்கொண்டனர். மராத்தியத் தலைவர் சுமத்திய இரண்டு லட்ச ரூபாய் மீட்புப் பணத்தை அளிக்க மறுத்தனர். சிவாஜியிடம் ஏராளமான கொள்ளைப் பொருள்கள் சேர்ந்துவிட்டதால் அவர் ஆங்கிலேயருக்கு விடை யெழுதவோ அரண்கொண்ட அவர்களது பண்டக சாலையைத் தாக்கவோ ஆர்வம் கொள்ளவில்லை. அவர் ஒரு கோடி ரூபாய்க்கு மேல் சூரத்தில் கொள்ளையிட்டிருந்தார். ஆங்கிலேயர் எழுதியதைப் போலத் "தங்கம், வெள்ளி, முத்து, மாணிக்கம் போன்ற விலையுயர்ந்த பொருள்களைத் தவிர பிறவற்றைக் கொண்டுசெல்வதை சிவாஜி வெறுத்தார்." அந்த நகரை மீட்பதற்காக முகலாயப் படையொன்று வேகமாக வந்து கொண்டிருந்தது என்ற செய்தி 19ஆம் தேதி சிவாஜிக்குக் கிடைத்தது. அதனால் அவர் 1664ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 20ஆம் தேதியன்று திடீரென்று சூரத்தைவிட்டு வெளியேறினர். முகலாயர் தமது நாட்டைத் தாக்கியதைப் பழிவாங்கவே சூரத்தைக் கொள்ளை யிட்டதாக சிவாஜி வாதிட்டார். ஆயின், பணத்தின்மீது கொண்ட ஆசையும் மற்றொரு காரணமாக அமைந்தது.

1664ஆம் ஆண்டு முழுவதும் சிவாஜி முகலாயர் தாக்குதல் ஏதுமின்றி வாழ்ந்திருந்தார். தக்காணத்தின் முகலாய ஆளுநரான இளவரசர் மூஆஸம் (Muazzam) அவுரங்கபாத்தில் தங்கியிருந்தார். ஜெஸ்வந்த்சிங்கும் பூனவில் தங்கினர். அவர் கொண்டன கோட்டையை முற்றுகையிட்டபோதிலும் அதனைக் கைப்பற்றுவதில் தோல்வியே கண்டார். அநேகமாகத் தடை சிறிதும் இன்றிச் சுற்றித் திரிந்த சிவாஜி முகலாயர்களைத் துன்புறுத்தினர் ஆகஸ்ட் மாத முதலில் அவர் அகமத் நகரைக் கொள்ளையடித்தார். மாரிக் காலத்திற்குப்பின் கனரா மீது படையெடுத்துச் சென்றார்.

1664ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் இரண்டாம் தேதி ஷாஜி மடிந்தார். அவரது இரண்டாவது மகனை வெங்கோஜி மைசூரம், கிழக்கு கர்னடகத்திலும் அவருக்குச் சொந்தமான பகுதிகளுக்கு வாரிசானர்.

## மகாராஷ்டிரத்தை ஜெய்சிங் தாக்குதல்; புரந்தர் உடன்படிக்கை

ஷெயிஷ்டகானின் தோல்வியினலும் சூரத் சூறையாடப்பெற்றதாலும் சீற்றமுற்ற அவுரங்கசீப், தமது தீரமிக்க படைத்தலைவரான

ஆம்பரின் மிர்ஸா ராஜா ஜெய்சிங்கை சிவாஜியை அடக்குவதற்காக அனுப்பிவைத்தார். திறமை வாய்ந்த பல அதிகாரிகளை அவருடன் அனுப்பியதோடு, பணத்தையும் பொருள்களையும் அவரிடம் தாராள மாக வழங்கினார். இந்தியாவிலும் மத்திய ஆசியாவிலும் போர்க் களத்திலும் வெல்திறத்திலும் இடையறாத வெற்றிகளைப் பெற்றவர் ராஜா ஜெய்சிங். அவர் தீரமும் திறமையும் கொண்டவர். இவை தவிரவும், முன்னறிவு, அரசியல் சூழ்ச்சி, ஆழ்ந்தமைந்து திட்டமிடல் ஆகியவற்றிலும் சிறப்புற்று விளங்கினார். இத்தகைய குண இயல்பு களோடு அவரிடம் இருந்த கவர்ச்சியும் அவர் ஓர் இந்து என்ற உண்மையும் அவரை சிவாஜியுடன் போரிடுவதற்கேற்ற தகுந்த தலைவராக உருவாக்கின. 1665ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 19ஆம் தேதி நர்மதை ஆற்றைக் கடந்த அவர், கால தாமதம் இன்றி மார்ச் மாதம் 13ஆம் நாளன்று பூனாவிற்கு வந்து மார்வாரின் ஜெஸ் வந்த் சிங்கிடமிருந்து பொறுப்பை ஏற்றுக்கொண்டார். தமது பணியின் பேரளவினை அவர் உணர்ந்திருந்தார். அதனால் சிவாஜிக்கு எதிராக முழுநிறைவு கொண்ட திட்ட மொன்றை அவர் வகுத்தார். பீஜப்பூர் அரசர் மராத்தியருக்குத் துணைபுரிவதைத் தடுப் பதற்காக மராத்தியர் பகுதிக்கும் பீஜப்பூருக்கும் நடுவே தமது பாசறையை அமைத்துக்கொண்டார். உண்மையில் பல திசை களிலிருந்து தாக்குவதன் மூலமாக சிவாஜியின் கவனத்தைச் சிதற டிப்பதற்காக தக்காணத்தில் இருந்த சிவாஜிக்கு எதிரான சக்திகளை ஜெய்சிங் தூண்டத் தலைப்பட்டார். பேரரசரிடமிருந்து சலுகைகள் பெற்றுத் தருவதாகவும், செலுத்த வேண்டிய கப்பத்தைக் குறைப்ப தாகவும் ஆசை காட்டி பீஜப்பூர் சுல்தானின் உதவியை நாடினார். சிவாஜியின் நாட்டைத் தாக்குமாறு போர்ச்சுகீசியரையும் ஜன்ஜீரா வின் சித்திக்களையும் கேட்டுக்கொண்டார். தாராளச் சலுகைகள் வழங்குவதாக ஆசை காட்டி மகாராஷ்டிரத்திலும் கர்னாடகத்திலும் இருந்த பல ஜமீன்தார்களைத் தம் பக்கம் இழுத்துக்கொண்டார். இத்தகைய முயற்சியில் அவர் பெரு வெற்றி பெற்றார். சிவாஜியிடம் காழ்ப்புக் கொண்ட அனைவரும் ஜெய்சிங்குடன் சேர்ந்தனர். சான்றாக ஜாவ்லியிலிருந்து விரட்டப்பெற்ற மோரேக்கள், அப்சல்கானின் மகனான பாஸல்கான், கல்யாணுக்கு வடக்கே இருந்த கோலி நாட்டி லிருந்து துரத்தப் பெற்ற ராஜாக்கள் போன்றோரைக் குறிப்பிடலாம்.

ஜெய்சிங் தமது தளத்தை சஸ்வாதில் அமைத்துக்கொண்டார். அங்கிருந்து தென்மேற்கில் இருந்த பள்ளத்தாக்கில் அமைந்த மராத்திய ஊர்களைச் சூறையிடுவதற்காகத் தமது படையணி யொன்றை அனுப்பினார். அதன் பின்னர், அவர் புரந்தரில் இருந்த சிவாஜியை முற்றுகையிடப் புறப்பட்டுச் சென்றார். அப்போது புரந்தருக்குக் கிழக்கே பாலம் ஒன்றின்மீது அமைந்த வஜ்ரகர் எனும்

துணைக் கோட்டையைத் தாக்கினர். அதனை முற்றிலும் சூழ்ந்து கொண்டு, பீரங்கிகளைப் பொருத்தி குண்டுமாரி பொழியத் தொடங்கினர். ஏப்ரல் மாதம் 22ஆம் தேதி வஜ்ரகர் கோட்டை வீழ்ந்தது. எனினும், அங்கிருந்த காவற்படையை அழிக்காது வெளியேற அவர் அனுமதித்தார். இத்தகைய மதிநலத்துடன் அவர் நடந்துகொண்டதற்கு முக்கிய காரணம் புரந்தரில் இருந்த காவற்படையினரையும் போரிடாமலேயே சரணடையுமாறு செய்ய ஆசைகாட்ட வேண்டுமென்பதாகும். ராஜ்கர், சிங்கர் (கொண்டனு), ரோஹிரா போன்ற பகுதிகளில் இருந்த சிவாஜிக்குச் சொந்தமான ஊர்களைக் கொள்ளையிட்டு, அவற்றில் பயிர்களோ மக்களோ இல்லாது அழிப்பதற்காக அவர் ஏற்கெனவே குதிரைப் படைகளை ஏவியிருந்தார். ராஜா ஜெய்சிங்கிற்கு மனநிறைவு ஏற்படும் வகையில் அப் படைகள் தங்களது பணியை நிறைவேற்றின. அவை மராத்தியப் படைகளை முறியடித்தன. பல ஊர்களைக் கொள்ளையிட்டுக் கொளுத்தின. அந்த ஊர்களிற் சில பகைவரின் பாதம் படாத ஊர்கள் என்பது குறிப்பிடத்தக்கது. இதற்கிடையில் புரந்தர் முற்றுகை தொடர்ந்தது. அதனை அழிக்க மராத்தியர் செய்த முயற்சி வீணாகியது. வஜ்ரகரைக் கைப்பற்றிய பிறகு புரந்தரோடு இணைக்கும் இடைவரை மேட்டின் வழியாகத் தமது படைகளை அனுப்பி, புரந்தரின்கீழ்க் கோட்டையை (Machi) முற்றுகையிடுமாறு ஜெய்சிங் ஆணையிட்டார். அக் கோட்டையின் வடகிழக்கு மூலையில் குழி அரண்கள் அமைக்கப்பெற்றன. மராத்தியத் தாக்குதல்கள் முறியடிக்கப்பெற்றன. பெரும் மரத்துண்டுகளையும் பலகைகளையும் கொண்டு உயரமான மேடை ஒன்றை அமைத்து அதன்மீது சிறு பீரங்கிகளை ஜெய்சிங் பொருத்தினர். இவற்றின் துணைகொண்டு கோட்டையில் இருந்த மராத்தியரின் போர்ச் செயல்களை மட்டுப்படுத்தினர். மராத்தியக் காவற் படையினர் பல தடங்கல்களை ஏற்படுத்தியபோதிலும் மாமேடை உருவாகியது. இப்போது வெள்ளை அரணைத் தாக்கி அழிக்க முகலாயர் முற்பட்டனர். அவர்களுடைய குண்டுகளைச் சமாளிக்க முடியாத மராத்தியர் அதன் பின்னால் இருந்த கருப்பரணுக்குப் பின் வாங்கினர். அங்கேயும் அவர்களால் நிலைக்க முடியவில்லை. அதனால் அவ்வரணின் சுவரை அடுத்திருந்த கழியரணுக்குப் (stockade) பின்வாங்கினர். அதையும் அவர்கள் கைவிட்டுக் குழியரண்களில் ஒளியவேண்டியதாயிற்று. இங்ஙனம் இரண்டு மாதங்களாக நடைபெற்ற முற்றுகையாலும், சண்டையாலும் கீழ்க் கோட்டையின் ஐந்து காப்பரண்களையும், ஒரு கழியரணையும் ஜெய்சிங் கைப்பற்றினர். புரந்தரின் மூலக்கோட்டையும் நீண்ட காலம் அவரை எதிர்த்து நிற்காது என்பது தெளிவாகியது. இப்போது இராஜபுத்திரப் படைத்தலைவர் புரந்தரின் மூலக் கோட்டையைத் தாக்குவதில் தமது படையினரின் முழுக் கவனத்

தையும் திருப்பினர். அப்போது நடைபெற்ற பல மராத்தியத் தாக்குதல்கள் ஒன்றில் பெரு வீரரான முரார்பாஜி பிரபு எனும் படைத்தலைவர் தலைமை தாங்கி நடத்தினர். அவர் 500 பத்தான் களையும் பல நிலப்படை வீரர்களையும் கொன்று குவித்துவிட்டுத் தமது 300 வீரர்களுடன் போர்க்களத்தில் வீழ்ந்துபட்டார். புரந்தரின் காவற்படைக்கும் அங்கே வாழ்ந்திருந்த மராத்திய அதிகாரிகளின் குடும்பத்தாருக்கும் பேராபத்துச் சூழ்ந்தது.

புரந்தர் முற்றுகையில் தமது படைகள் அது வரையில் காணுத அளவிற்குப் பெருந்தோல்விகள் கண்டதாலும், தமது அரசின் உயிர்ப் பகுதிகளில் முகலாயர் கொள்ளையிட்டதாலும் பகைவருக்குப் பணிந்து அவர்களுடன் சமாதானம் செய்துகொள்ளவேண்டிய கட்டாயம் சிவாஜிக்கு ஏற்பட்டது. சிறிது காலமாகவே அவர் ஜெய்சிங்கிடம் தூதுவர்களை அனுப்பிவந்தார். அதன் பிறகு அவர் இராஜபுத்திரத் தலைவரை நேரடியாகவே சந்தித்து சமாதானம் பேச முடிவு செய்தார். ஆயின், அவரது சமாதானச் சலுகைகளை ஜெய்சிங் ஏற்க மறுப்பாராளுல் பீஜபூர் சுல்தானுடன் இணைந்து இறுதி வரை போரிடுவது என்றும் தீர்மானித்தார். சிவாஜி நேரடியாக வந்து நிபந்தனையற்ற சரணுகதி அடைந்தால்தான் உடன்படிக்கை யோசனையைத் தாம் ஏற்றுக்கொள்ளமுடியுமென்று ஜெய்சிங் வற்புறுத்திக் கூறினர். சிவாஜிக்கு ஆபத்து ஏதும் நேராதவாறு தாம் பார்த்துக்கொள்வதாக ஜெய்சிங் வாக்குறுதி தந்த பின்பே 1665ஆம் ஆண்டு ஜூன் மாதம் 24ஆம் தேதி யன்று அவரது பாசறைக்கு முன்னவர் சென்றுர். எவ்வாறெனினும் சிவாஜியிட மிருந்த கோட்டைகளை அவர் ஒப்படைக்க இசையவில்லையானுல் தம்மைச் சந்திக்க வரவேண்டாமென்று செய்தி அனுப்பினர். அதற்கு இசைந்த சிவாஜி ஜெய்சிங்கைக் காணச்சென்றுர். பின்னவருடைய கூடாரத்தின் வாயிலில் அவரது பக்ஷி சிவாஜியை வரவேற்றுர். ஜெய்சிங்கும் சில அடிகள் முன்னுல் வந்து சிவாஜியை அணைத்துக்கொண்டு, அவரைத் தம் பக்கத்தில் அமர்த்திக் கொண்டார். மராத்தியருடைய மோசமான நிலையை சிவாஜி உணருமாறு செய்வதற்காக அவர் தம்முடன் இருக்கும்போதே புரந்தரைத் தாக்குமாறு திலீர்கானுக்கும் கிராத்சிங்கிற்கும் ஜெய்சிங் கட்டளையிட்டார். தாக்குதல் நடைபெற்றது. மராத்தியர் நடத்திய எதிர்த் தாக்குதலில் எண்பது மராத்தியர் உயிரிழந்தனர். பலர் புண்பட்டனர். இராஜபுத்திரர்களின் பாசறையிலிருந்தே இதனைக் கண்ணுற்ற சிவாஜி, புரந்தரை ஒப்படைத்துவிடுவதாகக் கூறித் தமது மக்களைப் பயனற்ற படுகொலை செய்வதை நிறுத்துமாறு ஜெய்சிங்கை மன்றுடிக் கேட்டுக்கொண்டார். அதற்கிணங்கச் சண்டையை நிறுத்துமாறு தமது வீரர்களுக்கு ஜெய்சிங் ஆணை

யிட்டார். சிவாஜியும் தமது காவற்படையினரைச் சரண்புகுமாறு கூறுதற்குத் தமது அதிகாரிகளில் ஒருவரை அனுப்பிவைத்தார். இவ்விரு ஆணைகளும் நிறைவேறின.

இரண்டு அரசர்களும் நள்ளிரவு வரை உடன்படிக்கை வாசகக் கூறுகளை விவாதித்து இறுதியில் ஓர் உடன்பாட்டிற்கு வந்தனர். அதுவே 1665ஆம் ஆண்டின் புரந்தர் உடன்படிக்கையாகும். அதன்படி: (1) ஆண்டுதோறும் நான்கு இலட்ச 'ஹூன்' வருவாய் அளித்த 23 கோட்டைகளோடு, அவற்றைச் சார்ந்த பகுதிகளையும் சிவாஜி ஒப்படைத்தார். இவை முகலாயப் பேரரசுடன் இணைக்கப் பெற்றன; (2) ராஜ்கார் உட்பட சிவாஜியின் பன்னிரு கோட்டைகளும், ஓர் இலட்ச 'ஹூன்' வருவாயுடன் கூடிய கோட்டைகள் சார்ந்த நிலப்பரப்புகளும் 'முகலாயப் பேரரசுக்குப் பற்றுறுதியுடன் சேவை செய்யவேண்டுமென்ற நிபந்தனையோடு' சிவாஜியிடமே விடப்பெற்றன; (3) முகலாய அரசவைக்கு நேரடியாக வரவேண்டுமென்பதிலிருந்து சிவாஜி விலக்கம் பெற்றார். ஆனால், அவரது மகன் சாம்பாஜி 5,000 குதிரை வீரர்களுடன் முகலாயப் பேரரசருக்குச் சேவை செய்யவேண்டும். அதற்காக அவருக்கு ஜாகீர் ஒன்று வழங்கப்பெறுதல் வேண்டும். எவ்வாறெனினும், தக்காணத்தில் பேரரசுக்காகத் தாம் போராடுவதாக சிவாஜி வாக்களித்தார்.

சிறிது காலத்திற்குப் பிறகு புரந்தர் உடன்படிக்கையோடு மற்றோர் உரிமை வாசகமும் இணைக்கப்பெற்றது. அது சிவாஜியின் சொற்களில் பின்வருமாறு அமைந்தது. "கொங்கணத் தாழ்நிலங்களில் நான்கு இலட்ச 'ஹூன்' வருவாய் அளிக்கக்கூடிய பகுதியும், மேட்டு நிலத்தில் (பலகாத் பீஜபூரி) ஆண்டொன்றிற்கு ஐந்து இலட்ச 'ஹூன்' வருவாயுள்ள நிலங்களையும் பேரரசர் எமக்கு அளிப்பதோடு, எதிர்பார்க்கப்படும் பீஜபூர் வெற்றிக்குப் பிறகு அந்நிலப் பகுதிகளைப் பேரரச அறிவிப்பாணையின் மூலமாகத் தமக்கே அளித்துவிடுவதாக உறுதிமொழி அளித்தால் அப்போது பதின்மூன்று ஆண்டுத் தவணைகளில் நாற்பது இலட்ச 'ஹூன்'களைப் பேரரசருக்கு அளிக்க ஒப்புக்கொள்வேன்". இதற்கு அவுரங்கசீப் இசைவு தந்தார். மேலே கூறிய பீஜபூரின் பகுதிகளை முகலாயரின் உதவியின்றியே சிவாஜி வென்று அடக்கவேண்டுமென்று எதிர்பார்க்கப்பெற்றது. இவ்வுரிமை வாசகம் முகலாயருக்கு மிகவும் சாதகமாய் அமைந்தது. எவ்வாறெனில், பணமாக இரண்டு கோடி ரூபாய்கள் அவர்களுக்குக் கிடைப்பதோடு, இதனால் சிவாஜியும் பீஜபூர் சுல்தானும் தீராப் பகைவர்களாக ஆவது திண்ணம். மேலும், மலைப்பாங்கான பகுதிகளை வென்று அடக்குவதில் சிவாஜி தீவிரமாக ஈடுபட்டு விடுவார். ஆதலால், தக்காணத்தில் முகலாயர்களுக்குத் தொல்லை

தர அவருக்கு அவகாசம் இருக்காது. இவ்வுரிமை வாசகத்தில் குறித்துள்ள சலுகைகளைப் பெறுவதற்கு ஈடாகத் 'தமது மகன் சாம்பாஜியின் மான்சப்பிலிருந்து 2,000 குதிரை வீரர்களையும், தமது தலைமையிலிருந்த திறமை வாய்ந்த 7,000 நிலப்படையினரையும் பீஜபூர் தாக்குதலுக்கு முகலாயருக்குத் துணையாக அனுப்புவதாக' சிவாஜி ஒப்புக்கொண்டார் என்பது குறிப்பிடத்தக்கது. புரந்தர் உடன்படிக்கையையும், அதை அடுத்துவந்த ஒப்பந்தத்தையும் அவுரங்கசீப் ஏற்றுக்கொண்டார். அதனோடு பேரரச அறிவிப் பாணையையும், பதவிச் சின்னமாகிய அங்கியையும் சிவாஜிக்கு அனுப்பிவைத்தார்.

## முகலாயருக்கு சிவாஜியின் உதவி: பான்ஹலாவைக் கைப் பற்றுவதில் தோல்வி

இத்தகைய குறிப்பிடத்தகுந்த வெற்றிக்குப் பின்னர்த் திடீர்த் தாக்குதல் மூலமாக அமல் ஷாஹி அரசின் தலைநகரைக் கைப்பற்றும் நோக்கத்தோடு பீஜபூரின்மீது ஜெய்சிங் படையெடுத்துச் சென்றார். முன் செய்துகொண்ட ஒப்பந்தத்திற்கு இணங்க ஜெய்சிங்கிற்கு உதவிசெய்ய சிவாஜி பெரும்படையுடன் சென்றார். பீஜபூருக்கு 24 கல் தொலைவிலுள்ள மங்கல்பிராவை அடையும்வரை இராஜபுத்திரத் தலைவருக்கு எவ்வித எதிர்ப்பும் இல்லாதிருந்தது. ஆயின், தற்காப்பிற்கு வேண்டிய ஆயத்தங்கள் அனைத்தையும் பீஜப்பூர் மக்கள் செய்திருந்தனர். கோட்டைக்குள் பெருமளவில் உணவுப் பொருள் களையும், பிற அவசியப் பண்டங்களையும் சேகரித்து வைத்தனர். கோட்டையைச் சுற்றி ஏழு மைல் வட்டத்திற்குக் குடிநீர், தானியம், மரங்கள் இல்லாதவாறு யாவற்றையும் அழித்தனர். பீஜபூர் கோட்டைக்கு 10 மைல் வடக்கே இருந்த மக்னபூரில் ஜெய்சிங்கின் முன்னேற்றம் தடைப்பட்டது. அங்கே அவர் சில வாரங்களுக்குத் தங்கியிருந்த பிறகு படையெடுப்பைக் கைவிடவேண்டிய நிலையேற் பட்டது. 1666ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 15ஆம் தேதி அவர் பின்வாங்கத் தொடங்கினார். திடீர்த் தாக்குதல் மூலமாக எளிதாக பீஜப்பூரைக் கைப்பற்றிவிடமுடியுமென்ற நம்பிக்கையில் அவர் தரை பீரங்கிகளைக் கொண்டுவரவில்லை. அது தவறாகப் போய்விட்டது. இங்ஙனம் அவர் பின்வாங்கி பான்ஹலாவை முற்றுகையிட சிவாஜியை ஏவினார். திடீரென்று தாக்கும் எண்ணத்தோடு ஜனவரி மாதம் 26ஆம் தேதி பான்ஹலா கோட்டைக்கருகே சிவாஜி வந்து சேர்ந்தார். ஆனால், 'இரண்டாவது சிவாஜி' எனப் பெயர் பெற்றவரும் அவரது துணைவருமான நேத்தாஜி குறித்த காலத்தில் வரத் தவறியதால் சூரியன் தோன்றுவதற்கு மூன்று மணி முன்னதாகவே, சிவாஜி கோட்டையின் தாக்குதலைத் தொடங்கினார். அதற்

குள் கோட்டையிலிருந்த காவற்படையினர் விழித்துக்கொண்டு வீரத்துடன் சண்டையிட்டனர். அதன் விளைவாக அக் கோட்டையைக் கைப்பற்றுமலேயே சிவாஜி திரும்பவேண்டியதாயிற்று. அவர் நேத்தாஜியை தண்டிக்க முற்பட்டார். அதனுல் நேத்தாஜி பீஜபூர் சுல்தானுடன் இணைந்துகொண்டு முகலாயப் பகுதியைச் சூறையாடினுர். இருப்பினும், 5,000 படைவீரரை வைத்திருக்கும் மான்சுப் பதவியையும், நேர்த்தியான ஜாகீர் ஒன்றையும், ரொக்கமாக 50,000 ரூபாய்களையும் அளிப்பதாக வாக்களித்து ஜெய்சிங், நேத்தாஜியை மீண்டும் தம் பக்கம் இழுத்துக்கொண்டார்.

## சிவாஜியின் ஆக்ரா விஜயம், 1666

பீஜபூருக் கெதிராகத் தோல்வியுற்றதாலும், நேத்தாஜியின் கொள்கை மாற்றத்தாலும், எங்கே சிவாஜி பீஜபூர் சுல்தானுடன் இணைந்துகொண்டு முகலாயருக்கு எதிராக எழுவாரோ எனும் அச்சம் காரணமாகவும், ஆக்ராவிலிருந்த பேரரசரை மராத்தியத் தலைவர் சென்று காணவேண்டுமென்று ஜெய்சிங் வற்புறுத்திக் கூறினுர். தற்காலிகமாகத் தக்காணத்திலிருந்து சிவாஜியை வெளியேற்றவும், சிவாஜியிடம்பகைமைபூண்ட அதிகாரிகள் உட்படத்தமது அதிகாரிகளிடையே உருவாகிய சதிகளை ஒழிப்பதற்கும், எத்துணை வலிமை படைத்தவராயினும் முஸ்லிம் ஒருவர் முன் தலைவணங்குவதை வெறுத்த சிவாஜி போன்ற ஒருவரை முகலாய அரசவைக்கு அனுப்புவதற்குத் தாம் காரணமாக இருந்தவர் என்பதைக் காட்டிப் பேரரசரிடம் தமது மதிப்பை வளர்த்துக்கொள்வதற்காகவும் ஜெய்சிங் இவ்வாறு வற்புறுத்த முற்பட்டார். ஆக்ராவில் கிடைக்கக்கூடிய பெரும்பதவிகள், பட்டங்களைப்பற்றி சிவாஜி மனத்தில்கொள்ளுமாறும் செய்யப் பெரும்பாடுபட்டார். முகலாய தக்காணத்தின் அரசப்பகர ஆளாகக் கூட சிவாஜி திரும்பி வரமுடியுமென்ற வாக்குறுதியையும் அவர் அநேகமாக அளித்திருக்கலாம். சித்திக்களிடமிருந்து சிவாஜி கைப்பற்ற விரும்பிய ஜஞ்ஜிராவை அவருக்குப் பெற்றுத் தருவதாகவும் உறுதிமொழி அளித்திருக்கலாம். எவ்வாறெனினும், இத்தகைய யோசனையை நீண்டகாலத் தயக்கத்திற்குப் பின்பே சிவாஜி ஏற்க முன்வந்தார். அதிலும் ஜெய்சிங்கும், முகலாயப் பேரவையில் அவரது பிரதிநிதியாக இருந்தவரும், அவரது புதல்வருமான ராம்சிங்கும் சிவாஜியின் பாதுகப்பிற்கு ஆன முறையான வாக்குறுதி தந்த பிறகே மராத்தியத் தலைவர் ஆக்ரா செல்ல ஒப்புக்கொண்டார். அவர் புறப்படுவதற்கு முன் தமது தாயாரான ஜீஜா பாயைக் காப்பாளராக நியமித்தார். பீஷ்வாவான மாரோ பந்தும் (Moro Pant), மஜும்தார் நீவோஜி சோந்தேயும் காப்பாளருக்கு அடங்கி நடக்கவேண்டுமென்று ஆணையிட்டார். தமது அதிகாரி-

கோட்டைக் காவலர்களுக்கும் உற்ற கடமைகளை அறிவித்தார். வழக்கிலிருந்த விதிமுறைகளைப் பின்பற்றி நடக்கவேண்டுமென்றும், நெருக்கடி நேரங்களில் தங்களது முனைப்பார்வத்தைப் பயன்படுத்தி ஒழுகவேண்டுமென்றும் அறிவுரை பகன்றார். இங்ஙனம் 1666ஆம் ஆண்டு மார்ச் மாதம் 16ஆம் நாளன்று தமது மூத்த மகன் சாம்பாஜியுடனும், ஐந்து உயர்தர அதிகாரிகளுடனும், தேர்ந்தெடுத்த 350 வீரர் கொண்ட சிறு பாதுகாப்புப் படையுடனும் சிவாஜி தமது பயணத்தைத் தொடங்கினார்.

அவர் ஆக்ராவிற்குச் சில கல் தொலைவிலிருந்த சராய் மாணிக் சந்தை மே மாதம் 21ஆம் தேதி சென்றடைந்ததும், ராம்சிங்கின் முன்ஷியான கிர்தார்லால் அவரை வரவேற்றார். அடுத்த நாள் காலையில் (மே மாதம் 22ஆம் தேதி) அரண்மனையைக் காவல் செய்யும் பொறுப்பு ராம்சிங்கிற்கு இருந்ததால் அவரே நேரில் வந்து சிவாஜியை வரவேற்க முடியவில்லை. சிவாஜியை ஒரு வழியில் ஆக்ரா நகருக்குள் கிர்தார்லால் அழைத்துச் சென்ற அதே சமயத்தில், காவற்பணி முடித்த பிறகு ராம்சிங் சிவாஜியை முன்னதாக வரவேற்கவும், பேரரசரிடம் அழைத்துச்செல்லவும் மற்றொரு வழியாக வந்து சேர்ந்தார். இத்தகைய தவறுதல் காரணமாக அவர் சிவாஜியை நகருக்கு வெளியே காண்பதற்குப் பதிலாக மத்திய அங்காடிக்கு அருகில்தான் சந்திக்க முடிந்தது. பொழுது கழிந்துவிட்டதாலும், அவுரங்கசீப்பும் திவானி அம்மை விட்டு நீங்கி திவானி காஸிற்குச் சென்றுவிட்டபடியாலும் துணை மீர் பக்ஷியான அஸாத்கானே சிவாஜியைப் பேரரசருக்கு அறிமுகப் படுத்திவைத்தார். அப்போது ஓராயிரம் மொஹராக்களையும் இரண்டாயிரம் ரூபாய்களையும் நஸாராகவும் (Nazar), ஐயாயிரம் ரூபாய்களை நிஸாராகவும் சிவாஜி அவுரங்கசீப்பிடம் வழங்கினார். அவரை அவுரங்கசீப் ஏறெடுத்துப் பார்த்தாரே ஒழிய ஒன்றும் பேசவில்லை. நஸாரை வழங்கிய பிறகு சிவாஜியை அழைத்துச்சென்று பிரபுக்களில் மூன்றாவது வரிசையில் நின்றிருந்த 5,000 படைவீரர்களைக் கொள்ளத்தகுந்த மான்சுப்தார்களுடன் நிற்கவைத்தனர். மராத்தியத் தலைவர் களைப்புற்று இருந்ததோடு நகருக்கு வெளியில் பேரரசரின் ஆட்கள் எவரும் வந்து தம்மை வரவேற்காததால் மனநிறைவு அற்றுமிருந்தார். இப்போது அவர் மூன்றாவது வரிசையில் நிற்கவேண்டியதாயிற்று. தமக்கு முன்னால் மகாராஜா ஜெஸ்வந்த் சிங் நின்றுகொண்டிருப்பதை அறிந்த சிவாஜி கொதித்தெழுந்தார். 'எமது படைவீரர்கள் ஜெஸ்வந்த் சிங்கைப் புறங்கண்டனர். நாம் அவர் பின்னால் நிற்பதா? அதன் பொருள் என்ன?' என்று பொருமினார். அதன்பின் பதவிச் சின்னமாக அங்கிகள் வழங்கும் வேளை வந்தது. இளவரசர்கள், வஸீர்கள், ஜெஸ்வந்த் சிங் உள்ளிட்ட பல செல்

வந்தர்கள் ஆகியோர் பதவி அங்கி பெற்றனர். சிவாஜிக்கு மட்டும் அத்தகைய பெருமை அளிக்கப்படவில்லை. அப்போது மராத்தியத் தலைவர் கொதித்தெழுந்தார். சலசலப்பைக் கண்ட அவுரங்கசீப் சிவாஜிக்கு என்ன நேர்ந்தது என்று ராம்சிங்கைக் கேட்டார். ராம் சிங் சிவாஜியிடம் சென்றபோது அவர் ஆத்திரத்துடன், 'நீயும், உனது தந்தையும், உனது பாதுஷாவும் நான் எத்தகையவன் என்பதை அறிவீர்கள். இருந்தும் வேண்டுமென்றே நெடுநேரம் என்னை நிற்கவைத்தீர்கள். உங்களுடைய மான்சுப் பதவியை நான் உதறித்தள்ளுவேன்' என்று பேசினுர். இச் சொற்களைக் கூறிய அக்கணமே திரும்பி அரியணைப் பக்கம் முதுகைக் காட்டியவாறு விரைப்பாக நடந்து சென்ருர். ராம்சிங் அவரது கையைப் பிடித்து நிறுத்தியபோது அவர் பிடியை உதறித் தள்ளிவிட்டு ஒருபுறமாக வந்து தூண்களுக்குப் பின் உட்கார்ந்துகொண்டார். தர்பாருக்குத் திரும்பிவரவேண்டுமென்று ராம்சிங் அவரை வற்புறுத்தி அழைத்தார். அவருடைய வேண்டுகோள்களுக்கெல்லாம் ஒரே விடையாகத் தாம் இறக்கவும் தயார் என்றும், ஆனுல், பேரரசருக்குமுன் மறுமுறையும் வரமுடியாதென்றும் கூறினுர். இங்ஙனம் குழப்பமடைந்த ராம்சிங் செய்தியை அவுரங்கசீப்பிடம் அறிவித்தார். அவுரங்கசீப்பும் சிவாஜியை சாந்தப்படுத்தி, தம்முன் அவரைத் திரும்பவும் கொண்டு வருவதற்காக பதவிக்குரிய அங்கியுடன் மூன்று பிரபுக்களை அனுப்பினுர். ஆயின், அந்த அங்கியை அணிந்துகொள்ளவும், தர்பாருக்குத் திரும்பிச் செல்லவும் சிவாஜி மறுத்துவிட்டார். அவர்கள் தங்களது தோல்வியைப் பேரரசரிடம் தந்திரமாகத்திரித்துக் கூறினர். பழக்கமில்லாத தர்பாரின் வெப்பம் காரணமாக நாட்டுப் புறம் சார்ந்த மராத்தியத் தலைவர் நோய்வாய்ப்பட்டார் எனக் கூறினர். அதனுல் சிவாஜியை ராம்சிங்கின் வீட்டிற்குக் கொண்டு செல்லுமாறு பேரரசர் பணித்தார். அடுத்த நாளும் அரசவைக்குச் செல்ல சிவாஜி மறுத்தார். நீண்ட நேரம் ராம்சிங் வற்புறுத்தி யதன்பேரில் தமது மகன் சாம்பாஜியை அரசவைக்கு அனுப்பி வைத்தார். அதன் பிறகு அவர் முகலாய தர்பாரில் மறுமுறை அடி யெடுத்து வைக்கவேயில்லை.

இப்போது சிவாஜியை சிறையிலிட்டு ஏதோ ஒரு சாக்கில் அவரைக் கொன்றுவிட அவுரங்கசீப் முடிவு செய்தார். ஆயின், பொதுமக்களுடைய கருத்தைக் கிளருத வகையில் அல்லது இராஜ புத்திரர்களுடைய, குறிப்பாக, மராத்தியத் தலைவரின் பாதுகாப்பிற்கு உறுதியளித்திருந்த ஜெய்சிங், அவரது மகன் ராம்சிங் ஆகியோரின் பகைமையைத் தூண்டாவண்ணம் அக் கொலையைச் செய்துமுடிக்க விரும்பினுர். உள்ளகத்தில் எழுந்த சதிகளினுலும் அரசவையில் முன்னுரிமை பெறுவதற்காக நீண்ட காலமாக இருந்த கச்வஹா-

ரத்தோர் போட்டியினுலும் பேரரசருடைய தீர்மானம் வலுப் பெற்றது. அரசகுலத்தோடு உறவுகொண்டிருந்த ஷெய்ஷ்ட கானின் மனைவியும், வஸீர் ஜபார்கானின் மனைவியும், பேரரசரின் சகோதரியான ஜஹனராவும் சிவாஜியைக் கொல்லவேண்டு மென்றனர். ஜெஸ்வந்த் சிங்கின் தலைமையிலிருந்த ரத்தோர் பிரிவினர் ஜெய்சிங்கிற்கு அவமானம் விளைவிக்க விழைந்தனர். அதனுல் ஜெய்சிங்கின் ஆதரவைப் பெற்ற சிவாஜிக்கு எதிராக இருந்தனர், அதன் விளைவாக சிவாஜியைக் கொல்லுவது அல்லது கோட்டையொன்றில் சிறைவைப்பது என்று பேரரசர் முடிவு செய்தார். முதலில் சிவாஜியின் வீட்டைச்சுற்றிக் காவற்படையினர் நிறுத்தப்பெற்றனர். அடுத்தபடியாக ஆக்ராவிலிருந்த அரசாங்கச் சிறைச்சாலைகளின் பொறுப்பேற்றிருந்தவரும், கொடிய நடத் தைக்குப் பெயர்போனவருமான ரடான்டஸ்கானின் வீட்டிற்கு சிவாஜியைக் கொண்டுசெல்லுமாறு அவுரங்கசீப் ஆணையிட்டார். அதனை ராம்சிங் எதிர்த்ததால் ஜெய்ப்பூர் மாளிகையிலேயே சிவாஜி தங்குவதை அவுரங்கசீப் அனுமதித்தார். அதற்காக ஆக்ராவில் மராத்தியத் தலைவரின் நடத்தைக்கான உறுதிமொழிப் பத்திரத்தில் ராம்சிங் கையெழுத்திட்டார். ஆயினும், அதனுல் அவுரங்கசீப்பிற்கு உண்மையான மன நிறைவு ஏற்படவில்லை. எனவே, ஆப்கானிஸ் தானத்தில் யூசுப்ஸாயிக்களுடனும் அஃப்ரிடீஸ்களுடனும் போரிடு வதற்காக ரடான்டஸ்கானுடன் செல்லவேண்டுமென்று சிவாஜிக்குக் கட்டளையிட்டார். வழியில் சிவாஜியைக் கொன்றுவிடுமாறு செய்து, தற்செயலாக அவர் இறந்துவிட்டதாகக் கூறி உலகத்தின் கண்ணில் மண்ணைத் தூவுவது அவுரங்கசீப்பின் நோக்கமாகும். ஆனுல், சிவாஜிக்கு அளித்த உறுதிமொழிகள் யாவை என்பதைக் கேட்டு ஜெய்சிங்கிற்கு எழுதியிருந்தார். அதற்கான பதிலை எதிர்நோக்கி யிருந்ததால் சிவாஜியைக் கொல்லும் திட்டத்தை அவுரங்கசீப்பால் உடனே நிறைவேற்ற முடியவில்லை. இதற்கிடையில் பெருந் தொகைகளைக் கையூட்டாக அளித்து முகலாய வஸீரையும் மற்ற உயர்தர அதிகாரிகளையும் சிவாஜி தம்முடைய ஆதரவாளர்களாகச் செய்துகொண்டார். தமது கடந்தகால நடத்தையை மன்னிக்கு மாறு கோரி வஸீர் மூலமாகப் பேரரசருக்கு ஒரு விண்ணப்பம் விடுத் தார். அவரைப் பேரரசர் மன்னிக்கவில்லையெனினும், ஆப்கானிஸ் தானத்திற்கு அனுப்புவதற்கான ஆணையை ரத்து செய்தார். அடுத்தபடியாக, தமது நாட்டிற்குச் செல்ல அனுமதித்து, தமக்குச் சொந்தமாக இருந்த கோட்டைகள் அனைத்தையும் திருப்பித் தருவதாக இருந்தால், பேரரசருக்கு இரண்டு கோடி ரூபாய்கள் அளிப்பதாக சிவாஜி தம் விருப்பார்வத்தைத் தெரிவித்தார். பீஜப்பூருக்கு எதிராகப் போரிடுவதாகவும் வாக்களித்தார். இவ் விண்ணப்பத்தை அவுரங்கசீப் புறக்கணித்தார். சிவாஜியின்

வீட்டிற்கு வெளியே ஆக்ராவின் காவற்படைக் கொத்தவாலான சீதி பலாதின் தலைமையில் பீரங்கிகளுடன் பெரும்படை யொன்றை நிறுத்தினர். இப்போது சிவாஜி சிறைக் கைதியானர். ஆயினும், தமது அறிவாற்றலின் துணைகொண்டே ஆக்ராவிலிருந்து வெளியேறு வதற்கான திட்டமொன்றை சிவாஜி வகுத்தார். முதலில் பேரரச ருக்கு ராம்சிங் அளித்திருந்த உறுதிமொழிப் பத்திரத்தைத் திரும்பப் பெற்றுக்கொள்ளுமாறு செய்தார். அதன் பிறகு, தமது படையினர் அனைவரையும் தக்காணத்திற்கு அனுப்பிவிட்டார் தாம் ஒரு சன்னியாசியாக மாறப்போவதாக அறிவித்து, தமது வாழ் நாளைக் கழிப்பதற்காக அலகாபாத்திற்குச் செல்லப் பேரரசரிடம் அனுமதி கோரினர். அலகாபாத் கோட்டையில் அவரை வைப்ப தாகவும், அங்கே முகலாய ஆளுநர் அவரை 'நன்கு கவனித்துக்கொள்வார்' என்றும் அவுரங்கசீப் விடையளித்தார். இப்போது சிவாஜி தமக்கு உடல்நிலை சரியில்லையென்று நடித்து, பிராமணர்களுக்கும் மற்றச் சமயம் சார்ந்த மக்களுக்கும் கூடை கூடையாக இனிப்புப் பண்டங்களைத் தமது வீட்டிற்கு வெளியே அனுப்பிவந்தார். ஆகஸ்டு மாதம் 29ஆம் தேதி (19ஆம் தேதி யென்றும் கருதுவர்). பிற்பகலில் சிவாஜியும் சாம்பாஜியும் இரு கூடைகளில் ஒளிந்துகொண்டனர். அவற்றினை இருவர் கழிகளில் மாட்டித் தொங்கவிட்டு வெளியே கொண்டுசென்றனர். இனிப்புப் பண்டக் கூடைகளைக் கொண்டுசெல்லும் சாக்கில் அவ்வாறு செய்தனர். உருவத்தில் சிவாஜியை ஒத்திருந்த அவரது ஒன்று விட்ட சகோதரரான ஹிரோஜி பர்ஸாந்த் என்பவர் சிவாஜியின் படுக்கையில் படுத்துக்கொண்டார். அவர் மராத்தியத் தலைவரின் தங்கக் காப்பை வலது கையில் அணிந்து அதனை நீட்டிப் படுத்துக் கொண்டிருந்தார். ஆக்ராவிற்கு வெளியே தனியான ஓரிடத்தில் சிவாஜியும் சாம்பாஜியும் மறைந்திருந்த கூடைகள் வந்திறங்கின. அவர்களிருவரும் ஆக்ராவிற்கு ஆறு கல் தொலைவிலிருந்த ஊருக்கு நடந்து சென்றனர். அங்கே குதிரைகளுடன் நிராஜி ராவ்ஜீ வந்து சேர்ந்தார். சிவாஜியும் அவருடன் சென்றவர்களும் சன்யாசிபோல் வேடமணிந்து மதுராவை அடைந்தனர். மதுராவில் வாழ்ந்திருந்த மராத்தியக் குடும்பத்திடம் சாம்பாஜியை ஒப்படைத்துவிட்டு சிவாஜி, கிழக்குத் திசையில் பயணமாகி அலகாபாத்தை அடைந்தார். அங்கிருந்து பந்தேல்கண்டிற்குச் சென்றார். அதன் பிறகு காண்டுவனு, கோல்கொண்டா போன்றவற்றின் வழியாக ராஜ் கருக்குத் திரும்பினர். ஆக்ராவிலிருந்து தப்பிய இருபத்தைந்தாம் நாளில் அதாவது 1666ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 22ஆம் தேதி ராஜ்கரை அடைந்தார்.

ஆக்ராவில் ஆகஸ்டு மாதம் 30ஆம் தேதி காலை பத்து மணிக்குத்தான் சிவாஜி மறைந்த செய்தி தெரியவந்தது. சிவாஜி வெளியேறியபின் இரண்டு மணிகள் கழித்து சந்தடியின்றி வெளியே வந்த ஷிரோஜி சிவாஜி நோயுற்று இருப்பதால் சப்தம் செய்யாமல் இருக்குமாறு காவலரைக் கேட்டுக்கொண்டே வீட்டைவிட்டு வெளியேறினர்.

சிவாஜி தப்பியோடிய செய்தியைப் பேரரசருக்கு அறிவிக்க வந்த பாலத் கான் 'மக்களின் பார்வையிலிருந்து சிவாஜி திடீரென்று மறைந்துவிட்டதாகவும், மந்திர சூழ்ச்சியால் வானத்தில் பறந்து சென்றோ பூமியில் மறைந்தோ இருக்கவேண்டு'மென்றும் கூறினர். அதனை அவுரங்கசீப் நம்பவில்லை. தக்காணத்திற்குச் செல்லும் வழியில் அமைந்த சாலைகளைக் கண்காணித்துத் தப்பியோடியவர்களை எங்கிருந்தாலும் சிறைப்பிடித்துக்கொண்டுவருவதற்காக ஆட்கள் பலரை அனுப்பினர். ஆயின், அவ்வாறு முயன்று தேடியதில் பயனொன்றும் ஏற்படவில்லை. ராம்சிங்கினுடைய மறைமுக ஆதரவுடன் மராத்தியத் தலைவர் தப்பியிருக்கவேண்டுமென அவுரங்கசீப் நம்பினர். அதனல் ராம்சிங்கைத் தமது அவைக்கு வரவேண்டா வென்று தடுத்தார். அதன் பிறகு அவரைப் பதவியிலிருந்தே விலக்கி விட்டார். தக்காணத்திலிருந்த ஜெய்சிங் பெருங் கலக்கத்திற் குள்ளானர். தமது பணி முழுவதும் வீணாகியதையும், தமது புகழ் மங்கியதையும் அவர் உணர்ந்தார். சிவாஜி சிறையிலிருக்கும்போது அவரது பாதுகாப்பிற்கு உறுதிமொழி அளித்திருந்த காரணத்தால் அவர் மராத்தியத் தலைவரின் பாதுகாப்புப்பற்றிய கவலை கொண்டிருந் தார். இப்போது அவர் தமது எதிர்காலத்தைப்பற்றியும், தமது மகனின் எதிர்காலத்தைப்பற்றியுமே கவலைகொள்ளத் தொடங்கினர். சந்திப்பதற்காக சிவாஜியைத் தந்திரமாக அழைத்து அவரைக் கொன்றுவிடுவதாக அவுரங்கசீப்பிற்குக் கடிதம் எழுதினர். ஆனல், சிவாஜி தப்பியதால் வாழ்நாள் முழுவதும் வருந்தவேண்டியிருந்த அவுரங்கசீப் அதனல் மனநிறைவு பெறவில்லை. ஜெய்சிங்கைத் தக்காணத்திலிருந்து நீக்கினர். இளவரசர் மூஆஸத்திடம் பொறுப்பை ஒப்படைத்துவிட்டு வந்த ஜெய்சிங் ஆக்ராவிற்குத் திரும்பும் வழியில் 1667ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் ஏழாம் தேதி யன்று பர்ஹன்பூரில் உயிர்நீத்தார்.

## முகலாயருடன் சமாதானம், 1667-69

சிறையில் வாடியதாலும், கடுமையான பிரயாணத்திலுைம் சிவாஜியின் உடல் நலம் குன்றியது. திரும்பி வந்த பின்னர் அவர் இருமுறை நோய்வாய்ப்பட்டார். அப்போது நீண்ட கால ஓய்வு

தேவைப்பட்டது. மேலும், புதிய அரசப் பகர ஆளான் இளவரசர் மூ ஆஸம் இன்பமான, எளிமைகொண்ட வாழ்க்கையை மேற் கொண்டார். அவரது வலக்கரமாகத் திகழ்ந்த ஜெஸ்வந்த் சிங் சிவாஜியுடன் நட்புக்கொண்டிருந்தார். தக்காணத்தில் பயனற்ற வலுத்தாக்குதலை அவர்கள் வெறுத்தனர். பாரசீகப் படையெடுப்பி ஞலும், வடமேற்கு எல்லைப்புறத்தில் யூசுப்ஸாயிகளும் பிற மலை நாட்டவரும் செய்த பயங்கரப் புரட்சிக் கலகம் காரணமாகவும் அவுரங்கசீப்பும் தக்காணத்தில் அதிகக் கவனம் செலுத்தவில்லை. புரட்சியிலீடுபட்ட மலைநாட்டு மக்களை ஒடுக்குவதற்கென அவுரங்கசீப் பல படைப் பிரிவுகளை அனுப்பவேண்டியிருந்தது. இக் காரணங் களினுல் ஏறக்குறைய மூன்ருண்டுகளுக்கு சிவாஜி அமைதியாக வாழ்ந்தார். திரும்பிவந்த சில மாதங்கள் சென்ற பின்னர், பேரரசுக் காகச் சண்டையிடத் தாம் தயார் என்று சிவாஜி அவுரங்கசீப்பிற்கு எழுதினுர். அவர் ஜெஸ்வந்த் சிங்குடனும் தொடர்புகொண்டார். சாம்பாஜியைப் பேரரசர் மன்னிப்பாராஞல் இளவரசர் மூ ஆஸத் திற்கு உதவியாக அவரை அனுப்புவதாக உறுதிமொழியளித்தார். இளவரசர் மூ ஆஸம் சிபாரிசு செய்த சமாதானத்தை அவுரங்கசீப் ஏற்றுக்கொண்டார். 'ராஜா' எனும் சிவாஜியின் பட்டப் பெயரை யும் ஏற்றுக்கொண்டார்.

உள்நாட்டுச் சீர்திருத்தங்கள் செய்வதன் மூலமாகத் தமது அரசினை உறுதி செய்வதற்கு இவ்வாண்டுகளை (1667–69) சிவாஜி பயன்படுத்திஞர். ஆட்சிமுறையைத் திருத்தியமைத்து, அரசாங் கத்தை வலுப்படுத்துவதோடு தமது மக்களின் நலன்களை நல்ல முறையில் பேணுவதற்கான அறிவார்ந்த விதிமுறைகளையும் வகுத்தார். அவற்றினை இவ்வியலின் இறுதியில் விளக்குவாம்.

## மீண்டும் முகலாயருடன் போர், 1670

முகலாயருடனுன சமாதானம் தற்காலிகப் போர் நிறுத்த உடன்படிக்கையே யாகும். காலம் கடத்துவதும், முகலாயர், பீஜப்பூர் சுல்தான், கோல்கொண்டா மன்னர் ஆகியோர் ஒன்ருக இணைந்து தம்மைத் தாக்காதிருக்கச் செய்வதும், சிவாஜி சமாதானம் செய்து கொண்டதன் நோக்கங்களாகும். அவுரங்கசீப்பும் அச் சமா தானத்தில் உண்மையான ஆர்வம் கொள்ளவில்லை. மூஆஸத் திற்கும் சிவாஜிக்கும் இடையேயான நட்புறவினை அவர் ஐயக் கண் கொண்டு நோக்கினுர். அதனுல் இரண்டாவது முறையும் சிவாஜியைச் சூழ்ச்சியால் மடக்க முயற்சிசெய்தார். அதில் அவர் தோல்வியுற்ருல் சாம்பாஜியை சிறைப்பிடித்து அவரைப் பிணையமாக நிறுத்திக்கொள்ளமுடியும். நிதி சார்ந்த காரணங்களுக்காக

தக்காணத்தின் முகலாய ஆளுநர் கலைத்த மராத்தியப் படைப் பிரிவுகளை சிவாஜி தமது சேவகத்தில் அமர்த்திக்கொண்டதாலும், 1666ஆம் ஆண்டில் சிவாஜி ஆக்ராவிற்கு வருவதற்காக முன்பணமாக அளித்த ஒரு லட்ச ரூபாயைத் திரும்பப் பெறுவதற்காக சிவாஜியின் புதிய ஜாகீரான பேராரின் ஒரு பகுதியைக் கைப்பற்றிக்கொள்ள அவுரங்கசீப் முனைந்ததாலும் முகலாயருக்கும் மராத்தியருக்குமிடையே இருந்த நட்புறவு முறிந்தது. இங்ஙனம் முகலாய சேவையிலிருந்த தமது படைவீரர்களை சிவாஜி திரும்ப அழைத்துக்கொண்டார். முகலாயப் பகுதிகளைத் தாக்கவும் ஆயத்தமானார். புரந்தர் உடன்படிக்கையினால் இழந்த பல கோட்டைகளை மீட்டார். இவற்றில் கொண்டனா கோட்டை மிக முக்கியமானது. தானாஜி மாலுசரே (Tanaji Malusare) என்பார் தமது படைவீரருடன் அதன் மதில்களின்மீது ஏறி அதனைக் கைப்பற்றினார். புகழ்மிக்க வெற்றியைத் தேடித்தந்த பிறகு தானாஜி உயிர் துறந்தார். அவரது நினைவாக அக் கோட்டைக்கு சிங்கர் (1670ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம்) என்று சிவாஜி பெயர் வைத்தார். அடுத்தபடியாக புரந்தர் சிக்கியது. அதன் பிறகு கல்யாண், பிவந்தி, மஹுலி முதலானவை வீழ்ந்தன. முகலாயருக்குச் சொந்தமான பல பகுதிகளைக் கொள்ளையடிப்பதற்காகத் தமது படையிலிருந்து சிறு சிறு பிரிவுகளை சிவாஜி அனுப்பினார். அவரே அகமதுநகர், ஜுன்னர், பாரெண்டா (Parenda) ஆகியவற்றிற்கருகே பல ஊர்களைக் கொள்ளையடித்தார். சிவாஜியின் துணிச்சலும், மிகத் திறமை வாய்ந்த படையும், மூ ஆஸத்திற்கும் திலீர்கானுக்குமிடையேயான வேற்றுமைப் பூசல்களும் மராத்திய வெற்றிக்குக் காரணங்களாயின. இளவரசருக்கும், திலீர்கானுக்குமிடையேயான வேற்றுமை உள்நாட்டுப் போராக உருவெடுத்தது. அதனைப்பயன்படுத்திக்கொண்ட சிவாஜி, விரைவாக முன்னேறி 1670ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 13ஆம் தேதி சூரத்தை இரண்டாவது முறையாகக் கொள்ளையடித்தார். மூன்று நாட்கள் நீடித்த சூறையாடலின் விளைவாக 66 லட்ச ரூபாய் பெறுமானமுள்ள கொள்ளைப் பொருள்களுடன் சிவாஜி ஊர் திரும்பினார். நாட்டிலேயே மிக முக்கியத் துறைமுகப் பட்டினமான சூரத் பேரழிவிற்கு உள்ளாகியது. அதனுடைய வாணிபம் அநேகமாக அழிக்கப்பட்டது. சூரத்திலிருந்து திரும்பி வந்துகொண்டிருந்த சிவாஜியை இடைமறிக்க தாவூத்கான் குரேஷி முயன்றார். ஆனால், கொள்ளையிட்டு வந்த பொருள்களைத் தந்திரமாகத் தம் நாட்டிற்கு அனுப்பிவிட்ட சிவாஜி, தாவூத்கானைத் தோற்கடித்தார்.

இந்த வெற்றியைத் தொடர்ந்து பாரார், பக்லான். காண்டேஷ் ஆகிய பகுதிகளின்மீது சிவாஜி திடீரென்று பாய்ந்தார், அவர் 1670 ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் காண்டேஷின்மீது படை

யெடுத்துச் சென்று பக்லான் மாவட்டத்திலிருந்த சில கோட்டைகளைக் கைப்பற்றினர். அவரது படையின் தலைவராக இருந்த பிரதாப்ராவ் குஜார், பகதூர்பூரைக் கொள்ளையடித்தார். பாராருக்குள் படையுடன் புகுந்து கரஞ்சா நகரைச் சூறையாடினர். அப்போதிருந்து தாம் சென்ற வழியில் இருந்த முகலாயப் பகுதிகளிலிருந்து 'சௌத்' வரியை சிவாஜி கொள்ளத் தொடங்கினர். மகாராஷ்டிரம் தமக்குரியதேயன்றி முகலாயருக்கு உரியது அன்று என அவர் அறிவித்தார். பீஷ்வா மாரோபந்த் பிங்லேயை பக்லானுக்கு அனுப்பினர். பிங்லேயும் திரிம்பக்கையும் வேறு சில கோட்டைகளையும் கைப்பற்றியதோடு, காண்டேஷ், குஜராத் ஆகியவற்றின் எல்லையில் அமைந்த சால்ஹர் கோட்டையையும் முற்றுகையிட்டார். இம் முற்றுகையில் அவருடன் சிவாஜியும் வந்து சேர்ந்து கொண்டார். 1671ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 15ஆம் தேதி சல்ஹர் அவர்கள் கையில் சிக்கியது.

சிவாஜியின் சூறையாடும் செயல்களினால் அவுரங்கசீப் கொதித்தெழுந்தார். அதனால் மகபத்கானை தக்காணத்திற்கு அனுப்பினர். குஜராத்தின் பகதூர்கானை மகபத்கானுடன் சேர்ந்துகொள்ளுமாறு ஆணையிட்டார். ஆயின் மராத்தியத் தலைவரை அழிக்க இந்த முகலாயப்படைத் தலைவராலும் முடியவில்லை. எனவே, பேரரசர் அவரைத் திரும்ப அழைத்துக்கொண்டு தக்காணப் படையெடுப்பின் பொறுப்பை பகதூர்கானிடமும் திலீர்கானிடமும் ஒப்படைத்தார். அவர்கள் சால்ஹரை முற்றுகையிட்டனர். முற்றுகையைத் தொடர்வதற்காகச் சிறு படையை நிறுத்திவிட்டு அவர்கள் இருவரும் பூனாவையும் சுபாவையும் (Supa) நோக்கி விரைந்து சென்றனர். பூனாவைக் கொள்ளையிட்டனர். ஆனால், அதைக் கண்டு சிவாஜி சிறிதும் கலங்கவில்லை. காண்டேஷிலிருந்த முகலாயப் படைகளை அவர் பெருந்துன்பத்திற்கும் அழிவிற்கும் உள்ளாக்கினர். அதனால் சால்ஹர் கோட்டை முற்றுகையைத் தொடர்ந்து செய்து பெருந்துன்பங்களுக்கு ஆட்பட்ட இக்லாஸ்கானுக்கு உதவி செய்வதற்காக பகதூர்கானும் திலீர்கானும் பூனாவிலிருந்து விரைவாகத் திரும்பிச் செல்லவேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. சால்ஹார் கோட்டைக்கு முன்னால் நடைபெற்ற குருதிக்களரியான சண்டையில் முகலாயர் அடியோடு அழிக்கப்பட்டனர் (1672ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம்), சால்ஹரையுல் முல்ஹரையும் மராட்டியர் மீண்டும் கைப்பற்றினர். சால்ஹரில் முகலாயர் தோல்வியடைந்ததைக் கேள்வியுற்ற அவுரங்கசீப் பெரும் துயரம்கொண்டார். பகதூர்கானையும் திலீர்கானையும் அவர் கண்டித்தார்.

சால்ஹறரையும் முல்ஹறரையும் கைப்பற்றிய பின்பு பீஷ்வா மாரோ பந்த் வட கொங்கணத்தின்மீது படையெடுத்துச் சென்ருர். 1672ஆம் ஆண்டு ஜூன் மாதத்தில் ஜவாஹறரையும் ராம் நகரையும் வெற்றி கொண்டார். சிவாஜியின் பிறப்பிடமான ஷிங்கர் நீங்கலாக பக்லானிலிருந்த கோட்டைகள் மராத்தியரிடம் சிக்கின. மராத்திய அரசின் விரிவாக்கத்தைத் தடை செய்யத் தங்களால் ஆன அனைத்தையும் பகதூர்கானும் திலீர்கானும் செய்தனர். அவுரங்க பாத்தில் இருந்த தங்களது தலைமைப் பீடத்தை பூனுவிற்குக் கிழக்கே பீமா ஆற்றின்மீது அமைந்த பெட்கோனுக்கு மாற்றினர். அந்த வாய்ப்பான இடத்திலிருந்து சிவாஜியை அச்சுறுத்துவதற்கென அங்கே பகதூர்கர் எனும் பெரிய கோட்டையையும் கட்டினர். ஆனால், அவர்களது திட்டங்கள் தோல்வியுற்றன.

1672ஆம் ஆண்டின் இறுதியில் சிவாஜிக்கும் பீஜப்பூருக்கு மிடையே மீண்டும் போர் மூண்டது தமது நாட்டின் தென் பகுதியின் பாதுகாப்பிற்கு இன்றியமையாததாகவிருந்த பான்ஹலா கோட்டைமீது சிவாஜியின் நாட்டம் சென்றது. அதனைக் கைப் பற்ற அனுஜி தத்தோ என்பவரை அவர் அனுப்பிவைத்தார். 1673ஆம் ஆண்டு மார்ச் மாதம் 16ஆம் நாளிரவில் அனுஜி கோண்டாஜி பங்லேகருடன் இணைந்து, பான்ஹலாவைத் தாக்கினர். நூலேணியின் துணைகொண்டு மதில்மீது ஏறிய மராத்தியர் கோட்டை வாயிலைத் திறந்துவிட்டனர். அதன்பிறகு அவர்கள் காவல்படையினரைத் தாக்கி, கோட்டைத் தலைவரான பாபுகானைக் கொன்றனர். புதைக்கப்பெற்றிருந்த பெரும் பொருளோடு கோட்டையையும் கைப்பற்றினர். அதைத் தொடர்ந்து சத்தா ராவும், பார்லியும் வீழ்ந்தன. பான்ஹலாவை மீட்க பீஜப்பூர் சுல்தான் பெரு முயற்சி செய்தார் அதற்காக வலிமைவாய்ந்த படை யொன்றை பலால்கானின் தலைமையில் அனுப்பினர். ஆனால், பலால்கானுக்கு வந்த தளவாடங்களைத் தடுத்து நிறுத்திய மராத்தியப் படைத் தலைவரான பிரதாப்ராவ் குஜார் அவரைச் சூழ்ந்துகொண்டார். தோற்கடிக்கப்பெற்ற பலால்கான் தங்க இடம் தருமாறு பிரதாப்ராவிடமே வேண்டினர். ஆனால், அவர் வெளியேறிய பின்பு தாம் அளித்த வாக்குறுதியை மறந்து மீண்டும் மராத்தியரைத் தாக்க முற்பட்டார். பலால்கானை சேதமின்றித் தப்பிச் செல்லவிட்ட தகாத பெருந்தன்மைக்காக பிரதாப்ராவை சிவாஜி கண்டித்தார். அதனல் மனம் புண்பட்ட பிரதாப்ராவ் பலால்கானைப் போருக்கிழுத்தார். வலிமையாக நிலைகொண்டிருந்த இடத்திலிருந்து பலால்கானை வெளிக்கொணர்வதற்காக ஹூப்ளி நகரை பிரதாப்ராவ் கொள்ளையிட்டார். அதனல் பீஜப்பூர் பகுதி யைக் காக்க பலால்கானும் சார்ஸாகானும் முன்னேறிச் சென்றபோது

1674ஆம் ஆண்டு மார்ச் மாதம் 5ஆம் தேதியன்று காதபிரபா ஆற்றிற்கு வடக்கே ஒரு கல் தொலேவில் கார்ஹிங்லாஜிக்கு அருகே அமைந்த குறுகிய கணவாயில் ஆறு படைவீரர்கள் மட்டும் பின் தொடர வந்த பிரதாப்ராவ், அவர்களைத் தாக்கினர். ஆனல், மிகப் பெரிய பகைப்படையை எதிர்த்த பிரதாப்ராவ் வெட்டி வீழ்த்தப் பெற்ருர். ஆயின், வீழ்ந்துபட்ட அப் படைத் தலேவரின் துணைவரான ஆனந்தராவ் என்பார் பிரதாப்ராவின் மரணத்திற்குப் பழிவாங்க வேண்டுமென்று பலாலின் முக்கிய ஜாகீரான ஸாம்ப்கோனேச் சூறையாடினர். ஒன்றரை லட்சம் 'ஹூன்' பெறுமானமுள்ள பொருள்களைக் கொள்ளேயிட்டார். ஆயினும், பலால்கான் மராத்தியரிடம் சிக்காது தடையின்றி உலவிவந்தார். பிரதாப்ராவ் குஜாருக்குப் பதிலாக ஹன்சாஜி மொஹைட் என்பாரை சிவாஜி படைத்தலேவராக நியமித்தார்.

## 1674ஆம் ஆண்டில் சிவாஜி முடிசூட்டிக்கொள்ளல்

தமக்கென ஒரு பரந்த அரசை உருவாக்கிக்கொண்டு அதனே உரிமை பெற்ற மன்னரைப்போல் சிவாஜி ஆண்டுவந்தபோதிலும் அவரைக் கலகக்காரராகவே பீஜப்பூர் சுல்தான் கொண்டார். வெற்றிகரமாக ஆட்சியை அபகரித்தவர் என முகலாயப் பேரரசர் கருதினர். ஆரம்பத்தில் சாதாரணக் குடியானவராக இருந்த ஒருவர் பேரரசனுகி புதுப் பெருமை கொண்டவர் என மரபு வழியாக வந்த முக்கிய மராத்தியக் குடும்பத்தினர் எண்ணினர். அதனுல் முறையான முடிசூட்டுவிழாவில் அரசர் எனும் பட்டத்தைத் தாம் பெறுவது அவசியம்என்று சிவாஜி கருதினர். அவரது அமைச்சரும் அவ்வாறே கருதினர். அக்காலத்திலிருந்த அரசுகளோடு சமநிலேயில் தொடர்பு கொள்ளும் உரிமை அவருக்கு உண்டு என்பதை வலியுறுத்தவும், அவரது ஆணைகட்கும், செய்து கொள்ளும் உடன்படிக்கைகளுக்கும் சட்டமுறையான நேர்மைத் தகவு அளிப்பதற்கும், குடி மக்களின் குன்ருத பற்றுறுதியைப் பெறுவதற்கும் ஒருகாலத்தில் சமுதாயநிலேயில் சமமாகவோ உயர்வாகவோ இருந்த மராத்தியக் குடும்பங்கள் அவரது நிலேபற்றிக் கொண்டிருந்த கருத்தை மாற்றவும், முறையாக முடிசூடிக்கொள்வது இன்றியமையாததாயிற்று. மேலும், இந்து சுயராஜ்யத்தை விரும்பிய மகாராஷ்டிர அறிஞர்கள், அக் கனவு இந்து சக்கரவர்த்தியின் மூலமாக நிறைவேறவேண்டுமென்று கவலேகொண்டிருந்தனர். அதனுல் சிவாஜியின் முறையான முடிசூட்டுவிழா பெருமளவில் ஆடம்பரமாகக் கொண்டாடப்பெறுதல்வேண்டுமெனத் தீர்மானமாயிற்று.

எவ்வாறெனினும், ஒரு சிறு தடை இருந்தது. சிவாஜி க்ஷத்திரியர் அல்லர். அதனல் பண்டைக்கால இந்து வழக்குப்படி அவர் முடிசூட்டிக்கொள்ளத் தகுதியற்றவரானுர். பழமைப் பண்பு கொண்ட பிராமணர்கள் அவரை க்ஷத்திரியராக ஏற்றுக்கொள்ள மறுத்தனர். அதனுல், திட்டமிடப்பெற்ற முடிசூட்டு விழாச் சடங்கினை நடத்தி வைப்பதற்காக பனரஸில் பேரறிவும் பெரும் புகழும் பெற்று விளங்கிய விஸ்வேஸ்வர் என்ற காகபட்டரை சிவாஜி அணுகினர். நான்கு வேதங்கள், ஆறு இந்து சமய தத்துவ முறைகள், அனைத்து இந்து சமய நூல்கள் ஆகியவற்றைக் கற்றுத் தேர்ந்து 'தற்கால பிரம்மதேவர் என்றும், வியாசர் என்றும் புகழ்ந்து பாராட்டப்பெற்ற' காகபட்டர் சிவாஜியின் வேண்டுகோளை ஏற்றுக் கொண்டார். அவர் சிவாஜியை க்ஷத்திரியராக ஏற்று அவருக்கு முடிசூட்டி வைப்பதற்காக ரெய்காருக்கு வரவும் இசைந்தார். முடி சூட்டு விழாவிற்கான ஆயத்தங்கள் தொடங்கின. அச் சடங்கு பற்றிய விளக்கங்களை சாஸ்திரங்களில் இருந்து கண்டெடுப்பதற்காக ஏராளமான பிராமணர்கள் வேலை செய்தனர். உதயபுரியிலும் ஆம்பரிலும் க்ஷத்திரிய அரசர்களின் முடிசூட்டு விழாக்களின்போது பின்பற்றப்படும் பழக்கங்களை விரிவாக அறிந்து வருவதற்கென்று அந் நாடுகளுக்குப் பல அறிஞர்கள் அனுப்பப்பெற்றனர். இந்தியாவின் பல பாகங்களிலும் வாழ்ந்த கற்றறிந்த பிராமணர்களுக்கு அழைப்போலைகள் சென்றன. அழைக்காமலேயே ஏராளமான பிராமணர்கள் வந்து குவிந்தனர். 11,000 பிராமணர்கள் மனைவி மக்களோடு ரெய்காருக்கு வந்தனர். 50,000 எண்ணிக்கை கொண்ட அவர்கள் நான்கு மாதங்களுக்கு இனிப்புப்பண்டங்கள் பெற்று இன்புற்றிருந்தனர். இந்தியாவிலிருந்த பல நாட்டு மன்னர்களின் பகர ஆட்களும் தூதுவர்களும், ஆங்கிலேயரிடமிருந்தும் பிற ஐரோப்பிய வணிக சமுதாயத்தினரிடமிருந்தும் வந்த பிரதிநிதிகளும் குடும்பங்களோடு வந்த பிராமணர்கள் உள்பட பலதரப்பட்ட பார்வையாளர்களும் வந்து குவிந்தனர். அவர்கள் ஆண்களும், பெண்களும், குழந்தைகளுமாக ஏறக்குறைய ஒரு லட்சம் பேர் இருந்தனர். காகபட்டர் வந்தபோது பல மைல்களுக்கு முன்னுலேயே சிவாஜி நேரில் சென்று அவரை வரவேற்றுர்.

1674ஆம் ஆண்டு மே மாத நடுவில் மகாராஷ்டிரத்திலிருந்த புகழ்படைத்த கோயில்களுக்கு சிவாஜி சென்றுவந்ததோடு முடி சூட்டு விழாச் சடங்குகள் ஆரம்பமாயின. சிப்பனில் உள்ள பரசுராம் கோயிலுக்கும், பிரதாப்கரிலுள்ள பவானி கோயிலுக்கும், வேறு பல கோயில்களுக்கும் சென்று விலையுயர்ந்த பரிசுகளை சிவாஜி வழங்கினர். அதுவரையில் க்ஷத்திரியருக்குரிய சமயச் சடங்குகளைச் செய்யத் தவறியதற்காக ஜூன் மாதம் ஏழாம்

நாளன்று அவர் தவமிருந்தார். அதன் பின்னர் காகபட்டர் அவருக்குப் பூணூல் அணிவித்தார். உயிருடன் இருந்த தமது இரு மனைவியரையும் க்ஷத்திரிய சடங்குமுறைப்படி சிவாஜி ஜூன் மாதம் எட்டாம் நாளன்று மறுமணம் செய்துகொண்டார். இருபிறப்புப் (Dwij) பெற்ற க்ஷத்திரியராக சிவாஜியை ஆக்கும்போது, அவரது குருவும் பிற பிராமணர்களும் வேத மந்திரங்களை ஓதினர். ஆனால், தற்காலத்தில் பிராமணரைத் தவிர, வேறு எந்த இருபிறப்பாளரும் வேத மந்திரங்களை ஓதக் கூடாது என பிராமணர்கள் வற்புறுத்தியதால், சிவாஜியும் அவற்றைத் திருப்பிக்கூற அனுமதி தரப்படவில்லை. அடுத்த நாளில் சிவாஜி 'துலாதானம்' செய்தார். அப்போது முதலில் தமது வாழ்நாளில் செய்த பாபங்களுக்காகத் தைல முழுக்காடினார். அதன் பின்னர், தங்கம், வெள்ளி, செம்பு, துத்துநாகம், தகரம், ஈயம், இரும்பு ஆகிய ஏழு உலோகங்களிலும், நேர்த்தியான ஆடைகள், மற்றப் பொருள்களைக் கொண்டும் பலமுறை தம்மைத் தராசில் வைத்து நிறுத்து, அப்பொருருள்களுடன் ஓர் இலட்சம் 'ஹூன்'களை பிராமணர்களுக்குப் பகிர்ந்தளித்தார். சிவாஜி கொள்ளையிட்டபோது அந்தணர், பசுக்கள், பெண்கள், பாலகர் ஆகியோரைக் கொன்றதற்குக் கழிவாக 8,000 ரூபாய்களை வழங்க வேண்டுமென்று பிராமணர்கள் வேண்டியபோது, அவ்வாறே செய்தார்.

முடிசூட்டு விழாவிற்கு முன்தினமான 1674ஆம் ஆண்டு ஜூன் மாதம் 15ஆம் தேதியன்று தற்புலனடக்கத்திலும் உடலை வருத்துவதிலும் சிவாஜி காலத்தைச் செலவிட்டார். அன்று காகபட்டர் 5,000 'ஹூன்' களைப் பெற்றார். மற்ற பிராமண அறிஞர்கள் ஒவ்வொருவரும் நூறு பொற்காசுகளைப் பெற்றனர். முடிசூட்டு விழா நாளன்று (ஜூன் 16) சிவாஜி அதிகாலையிலேயே எழுந்து, குலதெய்வங்களை வணங்கினார்; 'தமது குலகுருவான பாலம்பட்டர், காகபட்டர் முதலான தலைசிறந்த பிராமணர்களின் பாதங்களைத் தொழுது, அவர்களுக்கு ஆடையும் அணிகலன்களும் வழங்கினார்'; அடுத்து, தூய வெண்ணிற ஆடை உடுத்தி, அணிகலன்களால் அழகுபடுத்திக்கொண்டு, பொன் தகடு வேய்ந்த இருக்கையில் அமர்ந்தார். அவரது பட்டத்தரசி அவர் பக்கத்தில் அமர்ந்திருந்தார். அன்னாரது ஆடையின் நுனியும் சிவாஜியின் ஆடையின் நுனியும் முடியப்பெற்றிருந்தன. அவர்களுக்குச் சற்றுப் பின்னால் நெருக்கமாகப் பட்டத்து இளவரசரான சாம்பாஜி வீற்றிருந்தார். எட்டு அமைச்சர்களும். புண்ணிய ஆறுகளிலிருந்து வந்த நீர்கொண்ட தங்கக் குடங்களுடன் நின்றனர். அரசர், அரசியார், பட்டத்து இளவரசர் ஆகியோர் தலையில் அந்தக் குடங்களில் இருந்த நீரை

வார்த்தனர். அவர்கள் அவ்வாறு செய்யும்போது வேத மந்திரங்களும் இசையும் முழங்கின. அடுத்தபடியாக, தங்கத் தாம்பாளங்களில் ஐந்து விளக்குகளை ஏந்திவந்த பதினாறு பிராமண மங்கையர், அவ் விளக்குகளை இந்து வழக்கப்படி மன்னரின் தலையைச் சுற்றி ஆரத்தி எடுத்தனர். அது முடிந்ததும், சிவாஜி தமது உடையை மாற்றி, ஒண்சிவப்பு வண்ண ஆடையையும் விலையுயர்ந்த அணிகலன்களையும் அணிந்துகொண்டார். அதன் பிறகு, அவர் படைக்கலன்களை வணங்கிவிட்டு, மூத்தோரையும் பிராமணர்களையும் வணங்கி, நன்கு அலங்கரிக்கப்பெற்றிருந்த அரியணை அறைக்குள் நுழைந்தார். மந்திரங்கள் ஒலிக்கவும், இசைக் கருவிகள் முழங்கவும் அவர் அரியணையில்அமர்ந்தார். மணமான பதினாறு பிராமண மங்கையர் அவருக்குத் தீப ஆராதனை செய்தனர். பிராமண அறிஞர்கள் மந்திரங்கள் ஓதி சிவாஜியை வாழ்த்தினர். தவிசேறிய மன்னரின் தலைக்கு மேலே வெண்கொற்றக் குடையைப் பிடித்து நின்ற காக பட்டர் அவரை, 'சிவாஜி சக்கரவர்த்தி' எனப் போற்றினார். நாட்டிலிருந்த கோட்டைகள் அனைத்திலும் குறித்த நேரத்தில் பீரங்கிகள் முழங்கின. அதன் பின்னர் பிராமணர்களுக்கும், பிற மக்களுக்கும், பிச்சைக்காரர்களுக்கும் பெரும்பொருளை சிவாஜி தானமாகவழங்கினார்.

சடங்குகள் முடிந்த பிறகு, சிவாஜி ஆணைகளைப் பிறப்பித்தார்; தம்மைக் காண வந்தோரை வரவேற்றார்; அவர்கள் கொண்டு வந்த பரிசுப் பொருள்களை ஏற்றுக்கொண்டு, அவர்களுக்கு அரச மரியாதை செய்து அனுப்பினார். அதன் பிறகு, மிகச் சிறந்த குதிரைமேலேறி, கோட்டையிலிருந்து இறங்கிவந்து, யானைமேல் அமர்ந்து, அமைச்சரும் படைத்தலைவர்களும் உடன்வர, படை சார்ந்த ஊர்வலமாகத் தெருக்களின் வழியாகச் சென்றார். ஊர்வலமாகச் சென்ற அவருக்கு முன்னால் அவரது கொடிகள் இரு யானைகளின்மீது உயரப் பறந்தன.

ஆயின் 1674ஆம் ஆண்டு, அக்டோபர் மாதம் 4ஆம் தேதியன்று சிவாஜிக்கு இரண்டாவது முடிசூட்டு விழா செய்யவேண்டிய நிலை ஏற்பட்டது. எவ்வாறெனில், தீக்குறியான வேளையில் காகபட்டர் முடிசூட்டு விழாவை நடத்தினார் என்றும், தந்த்ரா நெறியில் போற்றப் பெறும் ஆவி உருவங்களை அவர் புறக்கணித்தார் என்றும் புகழ் வாய்ந்த தந்திரிக் குருவான நிஷ்சால் பூரி கோஸ்வாமி என்பவர் குறிப்பிட்டார். அதன் விளைவாகத்தான் முடிசூட்டும் சடங்கு நடைபெற்ற பன்னிரண்டு நாட்களுக்குள் அரசமாதாவான ஜீஜாபாய் இறந்தார் என்றும், வேறு சில துன்பங்களும் சிவாஜிக்கு நேர்ந்தன வென்றும் அவர் கூறினார். நடைமுறை சார்ந்தவரான சிவாஜி தந்திரிச் சடங்கு முறைப்படியே இரண்டாவது முறையாக

அக்டோபர் மாதம் நான்காம் தேதியன்று ஆடம்பரத்துடன் முடி சூட்டிக்கொண்டார். ஏராளமான பரிசுகளை வழங்கி, நிஷால் பூரியையும் அவரது நண்பர்களையும் திருப்தி செய்தார். இங்ஙனம் இரு முடிசூட்டு விழாக்களுக்கும் 50 இலட்ச ரூபாய்கள் செலவழிந்தன.

## மீண்டும் முகலாயருடன் போர்

சிவாஜியின் முடிசூட்டு விழாவினால் அவரது கருவூலம் அநேகமாகக் காலியாகியது. அவருக்குப் பணம் மிகுதியாகத் தேவைப்பட்டது. அதனால் முகலாயப் படைத்தலைவரான பகதூர்கானை அவர் தம் தலைமைப் பீடமான பெட்கோனுக்கு வெளியே இருப்பதற்கென ஜூலை மாதத்தில் அவர் ஒரு படையினை அனுப்பிவைத்தார். அதன் பின்னர் மற்றொரு படை அன்னாருடைய பாசறையைத் தாக்கியது. சிவாஜியின் இச் சூழ்ச்சித் திட்டம் வெற்றியளித்தது. இதனால் இருநூறு குதிரைகளும், பணமாக ஒரு கோடி ரூபாயும் மராத்தியருக்குக் கிடைத்தன. இங்ஙனம் தமது படைவீரர்களுக்கு ஊதியம் வழங்குதற்கான வழி சிவாஜிக்குக் கிடைத்தது.

பீஜப்பூருடன் சமாதானம் நிலைக்கவில்லை. அதனால் மாரி காலத்தின்போது கோலி நாட்டின் பக்கமாக இருந்த பீஜப்பூரின் பகுதியைக் கொள்ளையடிப்பதற்காக மராத்தியப் படைகள் சென்றன. சூரத்திற்கு அருகில் மராத்தியப் படைகள் குவிந்ததைக் கண்டு, அந் நகரத்தார் அச்சமுற்றனர். ஆயின், அவுரங்கபாத்திலிருந்த சிவாஜியுடன் சேர்ந்துகொள்வதற்காக அங்கிருந்த மராத்தியப் படை பின்வாங்கிச் சென்றது. அடுத்து, அவர் பக்லான், காண்டேஷ் இவற்றில் புகுந்து, பல நகரங்களைச் சூறையாடி, குத்புதின்கான் கேஷ்கி என்னும் முகலாய அதிகாரியை முறியடித்தார். 1675ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத் தொடக்கத்தில் கோலாப்பூரை மராத்தியர் தாக்கினர். அதன் மக்கள் அழிவிலிருந்து தப்புவதற்காக 1,500 ஹூன்களை ஈட்டுப்பணமாகத் தந்தனர்.

1675ஆம் ஆண்டு, மார்ச்சு முதல் மே மாதத்திற்குள் பகதூர் கானுடன் சமாதானத்திற்காக சிவாஜி பேச்சுத் தொடங்கினார். ஆனால், அது பயனளிக்கவில்லை. பகதூர்கானுடன் உடன்படிக்கை செய்துகொள்வது அவரது விருப்பமன்று. கானை ஏமாற்றவே அவர் எண்ணினார். அதனால் மதிநுட்பம் கொண்ட பகதூர்கான் பீஜப்பூருடன் சேர்ந்து, மராத்தியரைத் தாக்குவதற்காக அந் நாட்டுடன் கூட்டுச் சேர்ந்தார். இத்தகைய நடவடிக்கையை அவுரங்கசீப் மனமார வரவேற்றார்; பீஜப்பூரிடமிருந்து வரவேண்டிய திறையை ஓராண்டிற்கு நிறுத்தி வைப்பதாகக்கூட அறிவித்தார்.

ஆயின், பீஜப்பூர் அரசவையில் தோன்றிய பூசல்களினாலும், அந் நாட்டின் வஸீரான கவாஸ்கான் வீழ்ச்சியுற்றதாலும், திட்டமிட்ட அந்தக் கூட்டு நடவடிக்கை நிறைவேறவில்லை. எவ்வாறெனினும் தமது வலுத்தாக்குதல்களை சிவாஜி தொடர்ந்து நடத்தினார். அவர் கோலாப்பூரையும் கைப்பற்றினார். அவரது படையின் மற்றொரு பிரிவினர் ஐதராபாத் நகரம் வரையிலான பீஜப்பூர், கோல்கொண்டா பகுதிகளைச் சூறையாடிப் பெரும் பொருளைக் கொள்ளையிட்டுவந்தனர். மராத்தியப் படையினரில் சிலர், வெரோடாவையும் போர்ச்சுகீசியருக்குச் சொந்தமான மற்றப் பகுதிகளையும் கொள்ளையிட்டனர். அப்போது பகதூர்கான் கையைக் கட்டிக்கொண்டு சும்மா இருந்துவிடவில்லை. 1676ஆம் ஆண்டின் முதற் பகுதியில் அவர் கல்யாணைத் தாக்கினார். ஆயின், சிவாஜி, தீவிர நோயுற்றிருந்தபோதிலும் பகதூர்கான் தோல்வியே கண்டார். சிவாஜியின் உடல் நலமடைந்ததும், அவர் பீஜப்பூருடன் சமாதானம் செய்துகொள்ள முன்வந்தார். அப்போது பகதூர்கானும் பீஜப்பூரைத் தாக்கவே, அந் நாடும் நட்பு கொள்ளும் மனநிலை கொண்டிருந்தது. முகலாயருக்கு எதிராகப் பாதுகாப்பு அளிப்பதற்காக மூன்று கோடி ரூபாய்கள் திறையாகவும், ஆண்டுதோறும் ஓர் இலட்சம் ஹூன்களை உதவித் தொகையாகவும் சிவாஜிக்கு அளிப்பதாக அந் நாட்டு அரசர் வாக்களித்தார்; தவிரவும், கிருஷ்ணா ஆற்றிற்குக் கிழக்கே, கோலாப்பூர் மாவட்டம் உள்ளிட்ட பகுதியை சிவாஜியிடமே விட்டுவிடுவதாகவும் உறுதிமொழியளித்தார். ஆயினும், பீஜப்பூர் அழிந்துகொண்டிருந்ததாலும், நிரந்தரமான கொள்கையை அது கடைப்பிடிக்க முடியாதபடி இருந்ததாலும், அதற்கும் சிவாஜிக்குமிடையேயான கூட்டு நீண்ட காலம் நிலைத்தில்லை.

## சிவாஜியின் கர்நாடகப் படையெடுப்பு, 1677-78

சிவாஜியின் வாழ்விலேயே மிகுந்த ஆரவாரமான படையெடுப்பான கீழ்க் கர்நாடகத்தின்மீதான படையெடுப்பு 1677ஆம் ஆண்டு ஜனவரி மாதம் நேர்ந்தது. வடக்கே விரிவடைவதற்கான வழியை முகலாயர் அடைத்துவிட்டதால், அவர் தெற்கில்தான் தமது நாட்டு எல்லையை எளிதாக வளர்த்துக்கொள்ள முடியும். கர்நாடகச் சமவெளி அல்லது சென்னைக் கடற்கரை வளமான பகுதி என்பதோடு, புதைந்த செல்வங்களுக்கும் பெயர்போனது. அநேகமாக கோல்கொண்டா சுல்தானும் பீஜப்பூர் சுல்தானும் அதனைக் கூறு போட்டுக்கொண்டிருந்தனர். பாலாறு வரையிலான கடப்பை, வட ஆர்க்காட்டு மாவட்டங்களையும், சிக்காகோல் முதல் சாட்ராஸ் (Sadras) வரையிலான கடற்கரைப் பகுதி முழுவதையும் கோல்கொண்டா சுல்தான் வைத்திருந்தார். கர்னூல் மாவட்டத்தையும்,

பெங்களூருக்கு வடக்கேயமைந்த மைசூர் மேட்டுநிலம் முழுவதை யும், வேலூரிலிருந்து தஞ்சாவூருக்கு அருகிலிருந்த பகுதி வரை யிலான நாட்டையும் பீஜப்பூர் சுல்தான் ஆண்டுவந்தார். இந்த கர்நாடகத்தைத் தாம் எளிதாகக் கைப்பற்றி, செல்வங் கொழிக்கும் நகரங்களான வேலூர், செஞ்சி, தஞ்சாவூர் ஆகியவற்ருேடு கூடிய அந் நிலப்பரப்பினைத் தம் நாட்டோடு இணைத்துக்கொள்ளலாம் என சிவாஜி உணர்ந்தார். படையெடுப்பிற்கான காரணம் எளிதாகக் கிடைத்தது. பீஜப்பூரின் ஆதிக்கத்திற்கு உட்பட்டிருந்த சிற்றரசான தஞ்சாவூரை 1675ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் சிவாஜியின் தம்பி யாகிய வெங்கோஜி கைப்பற்றினர். சிவாஜியின் வெற்றிகளைக் கண்டு பொருமையுற்றிருந்த வெங்கோஜி, தமது தனித்த தன்மையை, உரிமையோடு வாழும் வாழ்க்கையை விட்டுக்கொடுக்க விரும்ப வில்லை. அவர் தமது வலிமை மிக்க அமைச்சரான ரகுநாத் பந்த் ஹனுமந்துடன் சண்டையிட்டு, அவரைப் பதவியிலிருந்து நீக்கினர். கோல்கொண்டாவின் கீர்த்திவாய்ந்த முதலமைச்சரான மாடண்ணு விடம் சென்ற ரகுநாத் பந்த், சிவாஜியும் கோல்கொண்டா சுல்தா னும் சேர்ந்து, கர்நாடகத்தின்மீது படையெடுப்பதற்கு ஏற்பாடு செய்தார். அதனல் படையெடுப்பிற்கான ஆயத்தங்களை சிவாஜி செய்தார். தமது ஒன்றுவிட்ட சகோதரரிடம் இருந்த தமது தந்தை யின் சொத்தில் பங்கு கேட்கப்போவதாக அவர் அறிவித்தார்.

படையெடுப்பினைத் தொடங்குவதற்கு முன்னல் தக்கணத்தின் முகலாய ஆளுநரான பகதூர் கானுடன் சிவாஜி சமாதானம் செய்து கொண்டார். அதன்மூலமாகத் தமது நாட்டின் பின்புறத்தையும் பக்கங்களையும் மதிநுட்பத்தோடு பாதுகாப்புடையதாகச் செய்து கொண்டார். அவுரங்கசீப்பினல் பலவந்தமாக இஸ்லாம் சமயத்தில் சேர்க்கப்பெற்று, முகம்மது குலி என்னும் பெயரோடு அந்தப் பேரரசருக்குப் பத்தாண்டுகள் பணிபுரிந்த நேத்தாஜி பல்கரையும் சிவாஜி தம் பக்கம் இழுத்துக்கொண்டார். அவரை 1676ஆம் ஆண்டு, ஜூன் மாதத்தில் திரும்பவும் இந்து சமயத்திற்குக் கொண்டுவந்தார். ஆயத்தங்கள் முடிந்ததும், 1677ஆம் ஆண்டு ஜனவரியில் ரெய்காரை விட்டுப் புறப்பட்ட சிவாஜி, ஐதராபாத் திற்குச் சென்றுர். நகருக்குப் பல மைல்களுக்கு முன்னுலேயே முதல் மந்திரியான மாடண்ணு சிவாஜியை வரவேற்று, ஊர்வலமாக அழைத்துச் சென்றுர். சுல்தானும் எழுந்துவந்து சிவாஜியை மார்புற அணைத்துக்கொண்டார்; அரியணையின்மீது தம் பக்கத்தி லேயே அவரை அமர்த்திக்கொண்டார். கிழக்குக்கரைப் பகுதி களின்மீதான கூட்டுத் தாக்குதலுக்கு ஆன உடன்படிக்கை ஒன்றை அவர்கள் இருவரும் செய்துகொண்டனர். அதன் உரிமை வாசகங்கள் பின்வருமாறு :

(அ) மராத்தியரது படைச் செலவிற்காக மாதம் ஒன்றிற்கு நாலரை இலட்ச ரூபாய்களை சுல்தான் அளிக்கவேண்டும்.

(ஆ) படையெடுப்பில் கலந்துகொள்வதற்காக அவர் மீர்ஸா முகம்மது அமீனின் தலைமையில் 5,000 படைவீரர்களை அனுப்ப வேண்டும்.

(இ) வென்ற பகுதியை இரு சாராரும் சமமாகப் பகிர்ந்து கொள்ள வேண்டும்.

(ஈ) இரு சாராரில் எவர்மீதாவது முகலாயர் தாக்குதல் செய்தால், இருவரும் கூட்டாக எதிர்த்து நிற்கவேண்டும்.

(உ) ஐதராபாத்தில் நிரந்தரமாகத் தங்குவதற்கு ஒரு பகர ஆளை சிவாஜி அனுப்பிவைக்கவேண்டும்.

(ஊ) ஆண்டுதோறும் ஓர் இலட்சம் 'ஹூன்'களை சிவாஜி சுல்தானுக்குத் திறையாகச் செலுத்தவேண்டும்.

பீஜப்பூருக்குச் சொந்தமான கர்நாடகப் பகுதியைக் கைப்பற்றுவதற்காக ஐதராபாத்திலிருந்து மார்ச்சு மாத இறுதியில் சிவாஜி புறப்பட்டார். அவரது படைகள் ஏற்கெனவே அப் பகுதியை நோக்கி முன்னேறியிருந்தன. வழியில் அவர் பல புகழ்பெற்ற கோயில்களுக்குச் சென்று வழிபட்டார்; கர்னூலிலிருந்து 'சௌத்' வரி கொண்டார்; பீஜப்பூருக்குச் சொந்தமான செஞ்சிக் கோட்டையைக் கைப்பற்றுவதற்காக 5,000 வீரர்களடங்கிய படை ஒன்றை அனுப்பினார். அக் கோட்டையின் காவலராக இருந்த நிஸார் முகம்மது கான் ஆண்டொன்றிற்கு 50,000 வருவாய் அளிக்கக்கூடிய ஜாகீர் ஒன்றைப் பெற்றுக்கொண்டு, அக் கோட்டையை சிவாஜியிடம் ஒப்படைத்தார். அங்கே சென்ற சிவாஜி, அதனைத் தமது கர்நாடக அரசின் தலைமைப் பீடமாக அமைத்தார்; அதனுடைய நிதித்துறை ஆட்சியையும் சீர்திருத்தினார். அடுத்து, அவர் வேலூரை முற்றுகையிட்டார். நீண்ட கால முற்றுகைக்குப் பிறகே வேலூர்க் கோட்டையைப் பிடிக்க முடியுமென்று உணர்ந்த சிவாஜி, அதனைக் கைப்பற்றும் பொறுப்பினைத் தமது படைத்தலைவர்களிடம் ஒப்படைத்துவிட்டு, தென் கர்நாடகத்தின் தலைவராகத் திகழ்ந்த ஷெர்கான் லோடிக்கு எதிராகப் படைகொண்டு சென்றார்; பாண்டிச்சேரியில் இருந்த ஃபிரெஞ்சுக்காரர்களின் துணையைப்பெற்றார். அதன் பின்னர், அவர் ஷெர்கானை வீழ்த்தித் தமக்குப் பணியுமாறு செய்தார். 1677ஆம் ஆண்டு ஜுலை மாதம் 15ஆம் தேதி ஷெர்கான் அவரைப் பேட்டி

கண்டார்; இழப்பீட்டுப் பணமாக 20,000 'ஹூன்'களை சிவாஜிக்கு அளித்தார்; தமக்குச் சொந்தமான பகுதிகள் அனைத்தையும் அவரிடம் ஒப்படைத்து, மீதி மீட்புப் பணத்திற்குத் தமது மகனைப் பணயமாக வைத்தார்; 1678ஆம் ஆண்டு, பிப்ரவரி மாதத்தில் மீத மிருந்த மீட்புப் பணத்தை அளித்துத் தமது மகனை மீட்டுக்கொண் டார். சிவாஜியின் ஆள்கள் தொடர்ந்து முற்றுகையிட்டுவந்த வேலூர் கோட்டையும் அந்த ஆண்டு ஜூலை மாதக் கடைசியில் சரணடைந்தது. மதுரை நாயக்கரும் ஆறு இலட்ச 'ஹூன்'கள் திறை செலுத்த ஒப்புக்கொண்டார். இங்ஙனம் துங்கபத்ராவிலிருந்து காவேரிவரையிலான கர்னாடகப் பகுதி சிவாஜியின் கைவசம் வந்தது. புதிதாக வெற்றிகொண்ட நாட்டில் பொது ஆட்சித்துறை, படைத்துறை சார்ந்த முறையான அரசாங்கத் திட்டமொன்றை மராத்திய மன்னர் விரைவில் உருவாக்கினார்; பல இடங்களில் காவற்படைகளையும் அமைத்தார். இங்ஙனம், அவர் வெற்றி வாகை சூடிக்கொண்டு தம் நாடு திரும்பினார்.

## வெங்கோஜியுடனான ஒப்பந்தம்

அப்போதுதான் மைசூரிலும் கிழக்குக் கர்நாடகத்திலும் ஆதிக்கம் செலுத்திய வெங்கோஜி, ஒன்றுவிட்ட சகோதரரான சிவாஜியைச் சந்திக்க வந்தார் (1678ஆம் ஆண்டு ஜூலை மாதம்). சகோதரர்கள் இருவரும் ஒரு வாரத்தை ஒன்றாகக் கழித்தனர். ஆயினும், ஐயமுற்ற வெங்கோஜி தஞ்சாவூருக்கு ஓடிவிட்டார். அவரது முன்னாள் அமைச்சரான ரகுநாத் பந்த் ஹநுமந்தின் தூண்டுதலினால் ஷாஜியிடமிருந்து வெங்கோஜி மரபுரிமையால் பெற்ற சொத்தில் தமக்குப் பங்கு தரவேண்டுமென்று சிவாஜி வற்புறுத்தினார். ரகுநாதின் தூண்டுதல் இல்லையானால், ஒருவேளை தமக்குப் பங்கு வேண்டுமென்று சிவாஜி வற்புறுத்தியிருக்க மாட்டார். சிவாஜியின் கோரிக்கையைத் தட்டிக்கழிப்பதற்காக, தாம் பீஜப்பூர் சுல்தானின் பற்றுறுதி கொண்ட குடியாள் என்றும், அதனால் அவரது ஆணைப்படியே தாம் நடக்கவேண்டியிருக்கிறது என்றும் வெங்கோஜி பதிலளித்தார். அதன் விளைவாக வெளிப்படையான பூசல் தோன்றியது. மதுரை, மைசூர் ஆகியவற்றின் தலைவர்களுடைய உதவியை வெங்கோஜி நாடினார்; பிஜப்பூரிடமிருந்தும் உதவி வேண்டினார். ஆனால், அந்த நாடு அழிவுப் பாதையில் சென்று கொண்டிருந்ததாலும் சிவாஜியுடன் வலுச்சண்டையை விலைக்கு வாங்க விரும்பாததாலும், அவரது வேண்டுகோளைப் புறக்கணித்தது. இங்ஙனம் ஆரணி, கோலார், ஹோஸ்கோட், பெங்களூர், பலாபூர், ஷீரா ஆகிய மாவட்டங்கள் உட்படக் காவிரியாற்றிற்கு வடக்கிலிருந்த வெங்கோஜியின் பகுதிகளைக் கைப்பற்றி, அவற்றை

ஆளுவதற்கென்று பகர ஆள் ஒருவரை நியமிப்பதைத் தவிர சிவாஜிக்கு வேறு வழியில்லை. சிவாஜி மகாராஷ்டிரத்திற்குத் திரும்பியதும், அவரது பகர ஆளாக இருந்த ஹம்பிர் ராவ் மொஹைட் என்பவரை வெங்கோஜி தாக்கினர். ஆனல், அவர் தோல்வியே கண்டார். கண்டனக் கடிதம் ஒன்று அவருக்கு சிவாஜி அனுப்பினர். அதில், பீஜப்பூர், முஸ்லீம்களின் கையில் சிக்கிவிடவேண்டா மென்று எச்சரிக்கை செய்தார். இறுதியாக ரகுநாத் பந்தின் நற்பணி காரணமாகச் சகோதரர்களுக்கிடையே சமாதான ஒப் பந்தம் ஒன்று ஏற்பட்டது. அதனல் வெங்கோஜியிடமிருந்து கைப் பற்றிய பகுதிகள் அனைத்தும் அவரிடமே திரும்பிவந்தன. ஆயின், அவர் சிவாஜியின் உரிமை மானியதாரராக இருக்கவேண்டு மென்பதையும், பீஜப்பூர் சுல்தானுடனுன நட்புறவினைக் கைவிட வேண்டுமென்பதையும் ஏற்றுக்கொள்ள வேண்டியிருந்தது. ஓர் இலட்சம் 'ஹுன்'கள் பெறுமானமுள்ள மரபுவழியாக வரும் ஜாகீர் ஒன்றை ரகுநாத் பந்த் வெகுமகுதியாகப் பெற்றார். தாம் உரிமை இழந்ததை வெங்கோஜி மிகுதியாக உணர்ந்தபோதிலும், அவர் தஞ்சாவூரை நடுநிலையோடும் வெற்றிகரமாகவும் ஆண்டு வந்தார்.

கர்நாடகத்தில் சிவாஜியின் கவனம் சென்றிருந்தபோது, முகலாயப் படைத்தலைவரான பகதூர்கான் பீஜப்பூரைத் தாக்கினர். ஆனல், அவர் முறியடிக்கப்பெற்றுப் பின்வாங்க நேர்ந்தது. அதற்காக அவுரங்கசீப் அவரைக் கண்டித்து, அப் பதவியிலிருந்து நீக்கினர்; அவருக்குப் பதிலாக 1677ஆம் ஆண்டு, ஆகஸ்டு மாதத்தில் தக்கணத்தின் தனிப்பெருந் தலைமைப் பதவியை திலீர் கானுக்கு அளித்தார். அந்த திலீர்கான், சிவாஜியுடன் நட்புக் கொண்டதற்காக கோல்கொண்டா சுல்தானைத் தண்டிப்பதற்காக அந் நாட்டின்மீது படையெடுத்துச் சென்றார். இச் செய்தியைக் கேள்வியுற்றதும், எங்கே முகலாயர் தம் நாட்டின்மீது படை யெடுத்து வந்துவிடுவார்களோ என அஞ்சிய சிவாஜி, கர்நாடகத்தில் தமது பணியை முடிப்பதற்கு ஆள்களை அமர்த்திவிட்டு, அங்கிருந்து திரும்பிவந்தார். அவர் பான்ஹலாவிலிருந்து தஞ்சாவூர்வரையில் வலிமை வாய்ந்த காவல் நிலையங்களை நிறுவினர். அவர் திரும்பிவரும் வழியில் பெல்கோனுக்குத் தென்கிழக்கே இருந்த பெல்வாடியென்னும் சிற்றூரின் தேசெய்னன (Desain) சாவித்ரிபாயிட மிருந்து ஓரளவு எதிர்ப்புத் தோன்றியது. அதனல் அப் பகுதியை சிவாஜி கைப்பற்றினர்.

சிவாஜி கர்நாடகத்தில் இருந்தபோது, அன்னஜிதத்தாவும் மாரோபந்த் பிங்லேயும் மேற்குக் கரையில் தெற்கிலும் வடக்கிலும்

மராத்திய அரசின் எல்லையை விரிவு செய்தனர். அவர்கள் பரோச்சையும் கொள்ளையிட்டனர்,

## சிவாஜியும் ஜஞ்சிராயின் சித்திகளும்

தமது நாட்டின் மேற்கு எல்லையைக் கடல் வரையில் கொண்டு செல்லவேண்டுமென்றும், பாதுகாப்பிற்காகவும் வெளிநாடுகளுடன் வாணிபத்தொடர்பு கொள்வதற்காகவும் வலிமையானகடற்படையை வைத்திருக்கவேண்டுமென்றும் சிவாஜி தீவிர ஆசை கொண்டார். மேற்குக் கடற்கரையில் பம்பாய்க்குத் தெற்கே தாணமுதல் இரத்தினகிரிவரையிலான கொங்கணத்துடன் அவர் ஆரம்ப காலம் முதலே தொடர்புகொண்டிருந்தார். 1675ஆம் ஆண்டில் பீஜப்பூரிட மிருந்து கோவாவிற்குத் தெற்கே அமைந்த போண்டா (Ponda), கார்வார் என்னும் இரு கடற்படைத்தளங்களை வெற்றிகொண்டதோடு, அண்டை நாடான சோந்தாவையும் தம் நாட்டுடன் இணைத்துக் கொண்டார். கொலாபா, சுவர்ணதுர்க், விஜயதுர்க், சிந்துதுர்க் போன்ற அரண்கொண்ட தளங்களோடு கூடிய கொலாபாவிலிருந்து மான்வான் வரையிலான மேற்குக் கரைப் பகுதி ஏற்கெனவே அவரிடம் இருந்தது. இப்போது அவர் தமக்குச் சொந்தமான கடற்கரைப் பகுதியை இரு மாநிலங்களாகப் பிரித்தார்; ராஜ்பூரிலிருந்து மால்வான்வரையில் இருந்த பகுதிக்கு ஓர் அதிகாரியையும், மால்வானிலிருந்து தார்வரையில் இருந்த பகுதிக்கு மற்றோர் அதிகாரியையும் நியமித்தார். ஆயினும், இவற்றிற்கிடையே இந்த சாலும் ஜஞ்சீராவும் அன்னியர் கையிலேயே இருந்துவந்தன. போர்ச்சுகீசியரிடமிருந்து கோவாவையும் அவரால் பெற முடியவில்லை.

பம்பாய்க்கு 45 மைல் தெற்கே அமைந்த, பாறைகள் நிறைந்த ஜஞ்சிரா தீவு ராஜ்புரி கழிமுகத்தின் வாயிலில் அமைந்திருந்தது. அதனை சித்திகள் என்ற அபிசீனியக் குடியினர் ஆண்டுவந்தனர். முதலில் அவர்கள் அகமது நகரின் சுல்தான் கீழும், 1636ஆம் ஆண்டைய பிரிவினைக்குப்பின் பீஜப்பூர் சுல்தானின் மேலாதிக்கத்தின் கீழும் ஆண்டு வந்தனர். தண்டா ராஜ்பூரியைத் தலைநகரமாகக் கொண்டு, தற்கால கொலாபா மாவட்டத்தின் பெரும் பகுதியை வென்று, வலிமை வாய்ந்தகடற்படையை வைத்திருந்தஅவர்களுடன் கொங்கணத்தின் பெரும் பகுதியை வென்றடக்கிய சிவாஜி மோத லுற்றார். இத்தகைய மோதல் தவிர்க்கமுடியாத ஒன்றாகும். எவ்வாறெனில், ஜஞ்சிரா தீவு உட்பட மேற்குக் கடற்கரையைக் கைப்பற்றாது கொங்கண அரசர் எவரும் பாதுகாப்புடன் வாழமுடியாது. அதே சமயத்தில் அண்மையிலுள்ள உள்நாட்டுப் பகுதியிலிருந்து பொருள்

களையும் வருவாயையும் பெற்ற சித்திகளுக்கு அப் பகுதியின்மீது ஆதிக்கம்கொள்வது என்பது உயிர்ப் பிரச்சினையாக இருந்தது. சித்திகள் கடலில் வலிமை பெற்று விளங்கினர். அதேபோல சிவாஜி நிலத்தில் தோற்கடிக்க முடியாதவராக வாழ்ந்தார். அவர் சித்திகளை முறியடித்துத் தண்டா ராஜ்புரியைக் கைப்பற்றிக்கொண்டார். ஜஞ்சிராவின் சிறப்பினை அவர் நன்கு உணர்ந்திருந்தார்; அதனால் அதனைத் தாக்குதற்கான ஆயத்தங்கள் செய்யத் தொடங்கினார்; வலிமை மிக்க நாவாய்ப் படையொன்றை உருவாக்கினார். அது உச்ச நிலையை எய்தியபோது பலவகையான எழுநூறு கப்பல்களைக் கொண்டிருந்தது. அவற்றில் நானூறு சண்டைக் கப்பல்களாக இருந்தன. அவை இரு கடற்படைத் தளபதிகளின் (Dariya Sarang) தலைமையில் இரு பிரிவுகளாகப் பிரிந்திருந்தன. ஜஞ்சிராவின்மீது 1669ஆம் ஆண்டு சிவாஜி கடுமையாகத் தாக்குதல் நடத்தினார். அதன் விளைவாக, அத் தீவின் தலைவரான படேகான் மனம் தளர்ந்து, சமாதானம் செய்துகொள்ளத் தீர்மானித்தார். ஜஞ்சிராவை சிவாஜியிடம் ஒப்படைப்பது என்றும், அதற்கு ஈடாக உள்நாட்டில் ஜாகீர் ஒன்றைப் பெறுவது என்றும் முடிவு செய்தார். ஆனால், 1671ஆம் ஆண்டில் முகலாயப் பேரரசருடன் சேர்ந்துகொண்ட அவரது துணைவர்கள் அவரை எதிர்த்தனர். சீதி சம்பாலை கடற்படைத் தலைவராக நியமித்த அவுரங்கசீப், அவருக்கு மூன்று இலட்ச ரூபாய் வருமானமுள்ள ஜாகீரையும் அளித்தார்; ஜஞ்சிராவை சீதி காஸிமிடம் ஒப்படைத்தார். 1671ஆம் ஆண்டு, பிப்ரவரி மாதம் காஸிம் தண்டாவைத் திடீரென்று தாக்கிக் கைப்பற்றிக்கொண்டார்; கொலாபா மாவட்டத்தில் வேறு சில கோட்டைகளையும் கைக்கொண்டார். தண்டாவை மீட்கப் பலமுறை முயன்ற சிவாஜி தோல்வியே கண்டார். 1675ஆம் ஆண்டில், அவர் தென் கொங்கணக் கரை முழுவதும் பயனுள்ள கட்டுப்பாடு கொண்டிருந்தபோதும் ஜஞ்சிராவை அவரால் கைப்பற்ற முடியவில்லை. எஞ்சியிருந்த அவரது ஆட்சி காலம் முழுவதிலும், சாம்பாஜியின் காலம் முழுவதிலும் சித்திகளுக்கும் மராத்தியருக்கும் இடையே சண்டை நடந்தவண்ணமிருந்தது.

### சாம்பாஜி கடமை தவறுதல்

சிவாஜியின் மூத்த குமாரரான சாம்பாஜி கவனமாக வளர்க்கப் பெற்று, நல்ல படைவீரராகப் பயிற்சி பெற்றிருந்தபோதிலும், காமக் களியாட்டங்களில் மூழ்கலானார். அவ்விளவரசரைப் பெற்றோரின் கண்டிப்பினால் திருத்த முடியாதுபோயிற்று. அதனால் சிவாஜி அவரை 1676ஆம் ஆண்டில் சிறைப்படுத்தி, சிருங்கர்பூரில் காவலில் வைத்திருந்தார். அங்கே அவருக்கு நல்லறிவு புகட்டும் முயற்சி

எடுக்கப்பெற்றது. பெருமை மிக்க சமயத் தலைவரான ராமதாஸ் அவருடன் தொடர்புகொண்டு நன்னெறிப்படுத்த முற்பட்டார். ஆயின், இவை அனைத்தும் விழலுக்கிறைத்த நீராயின. அதனால், 1678ஆம் ஆண்டில் அவரை சிவாஜி பான்ஹலா கோட்டையில் கொண்டுவைத்தார். அங்கே முகலாயப் படைத்தலைவரான திலீர் கானின் ஒற்றர்கள் அவரை இரகசியமாகச் சந்தித்தனர். அவர்கள் அவருக்கு ஆசை காட்டி, முகலாயருடன் சேர்ந்துகொள்ளுமாறு செய்வதில் வெற்றி பெற்றனர். 1678ஆம் ஆண்டு, டிசம்பர் மாதம் 23ஆம் தேதியன்று நள்ளிரவில் சாம்பாஜியும் அவரது மனைவி யேசு பாயும் பான்ஹலாவிலிருந்து தப்பி, பகதூர்கரிலிருந்த முகலாயப் பாசறையை நோக்கி விரைந்தனர். பெருமகிழ்வுற்ற திலீர்கானும் அவரை வழியிலேயே கார்கம் எனுமிடத்தில் வரவேற்றார். சாம்பாஜியின் கடமை துறப்பினால் அவுரங்கசீப் மகிழ்வுற்ற போதிலும், அது சிவாஜியின் சூழ்ச்சியாக இருக்குமோவென அஞ்சினார். அதனால் விழிப்புடன் இருக்குமாறு திலீர்கானுக்கு யோசனை கூறினார். திலீர்கானுடன் சாம்பாஜி சேர்ந்த பிறகு, அவர்கள் இருவரும் பீஜப்பூரின்மீது படையெடுத்துச் செல்லத் திட்டமிட்டனர்; புபால்கரைத் தாக்கினர். அங்கே பிரங்கோஜி நார்சலா என்பவரின் பொறுப்பில் இருந்த பெரு நிதிக்குப்பையை சாம்பாஜி காட்டிக்கொடுத்தார். 1679ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 12ஆம் தேதி புபால்கரை திலீர்கான் கைப்பற்றி, அங்கு வாழ்ந்திருந்த பலரைக் கொன்றார். அதன் பிறகு அவர்கள் இருவரும் பீஜப்பூருக்கு எதிராகப் படையுடன் சென்றனர். அப்போது அங்கிருந்த பேராளான சீத்தி மசூத் என்பார் சிவாஜியின் உதவியை வேண்டினார். சிவாஜியும் அதற்கிணங்கி, பீஜப்பூரை முற்றுகையிட்டிருந்த முகலாயரைத் தாக்கினார். பீஜப்பூர் மக்களுக்கு வேண்டிய பொருள்களையும் போர்த் தளவாடங்களையும் அவர் அளித்த காரணத்தால், திலீர்கான் முற்றுகையைக் கைவிட வேண்டியதாயிற்று (நவம்பர் 24ஆம் தேதி). அங்கிருந்து பான்ஹலாவைக் கைப்பற்றுவதற்காக திலீர்கான் விரைந்து சென்றார். ஆனால், வழியில் இருந்த மக்களை திலீர்கான் கொடுமைப்படுத்தினார். குறிப்பாக திகோடாவில் வாழ்ந்த இந்துக்களைப் பெரிதும் துன்புறுத்தினார். அவர்கள் தங்களுக்குப் பாதுகாப்பு அளிக்குமாறு சாம்பாஜியை வேண்டினர். அவரும் திலீர்கானுடன் அவர்களுக்காகப் பரிந்து பேசினார். அதற்குத் தாமே தமக்குத் தலைவர் என்றும், நன்னடத்தை பற்றித் தமக்கு அறிவுரை சொல்லத் தேவையில்லை என்றும் திலீர்கான் மறுதலித்துப் பேசினார். சாம்பாஜியால் ஒன்றும் செய்ய முடியவில்லை. தம்மைக் கைதுசெய்து டில்லிக்கு அனுப்புமாறு திலீர் கானுக்கு அவுரங்கசீப் ஆணை பிறப்பித்த செய்தியைக் கேட்டதும், சாம்பாஜி தமது உயிருக்கு ஆபத்து வரும் என அஞ்சினார். அதனால்

அவரும் அவரது மனைவியும் மாறுவேடம் பூண்டு, 1679ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 30ஆம் தேதியன்று அதனியில் இருந்த திலீர்கானின் பாசறையிலிருந்து பத்து ஆதரவாளர்களுடன் வெளியேறினர். பீஜப்பூருக்கு ஓடிய அவர் மசூத்கானிடம் தஞ்சம் புகுந்தார். ஆயின், மராட்டிய இளவரசரைத் தம்மிடம் ஒப்படைக்க வேண்டுமென்றும், அதற்காகப் பெரும் பொருள் தருவதாகவும் கூறி, மசூத்கானிடம் திலீர்கான் தமது ஆட்களை அனுப்பினர். அதனல் சாம்பாஜி பீஜப்பூரைவிட்டு நீங்கி, பான்ஹலாவிற்கு ஓடவேண்டியதாயிற்று ஓராண்டு காலம் கழிந்து, இளவரசர் திரும்பியதைப் பற்றி சிவாஜி மகிழ்வுற்ருர்; பான்ஹலாவிற்குச் சென்று, தமது மைந்தருடன் ஒரு மாத காலம் ஒன்ருகத் தங்கியிருந்தார்; நல்ல அறிவுரைகளாலும், இளவரசரின் கடமை, பொறுப்பு ஆகியவற்றைப் பற்றி எடுத்துரைப்பதன் மூலமாகவும் சாம்பாஜியை மீட்க முயன்ருர்; ஆனல், தமது கடந்தகால வாழ்வைப்பற்றி சாம்பாஜி சிறிதும் வருந்தவில்லை. அவர் தமது நடத்தையை மாற்றிக்கொள்ளவுமில்லை. இருந்தபோதிலும், சிவாஜி அவருக்கெதிராக எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை. மாருக, அவரை அன்புடனும் கருணையுடனும் நடத்திவந்தார். ஆயினும், இளவரசரிடம் எவ்வித மாற்றமும் ஏற்படவில்லையென்பதை அவர் கண்டபோது, அன்னரை பான்ஹலாவிலேயே அடைத்துவைத்துவிட்டு, அருள்தொண்டரான ராமதாஸின் அருகிலிருந்து மனவமைதி பெறுவதற்காக சஜ்ஜன் காருக்குச் சென்ருர்.

## 1680ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் சிவாஜியின் மறைவு

சிவாஜியின் கடைசி நாட்கள் துன்பம் நிறைந்தவையாக இருந்தன. சாம்பாஜி கடமை துறந்தது சிவாஜிக்குப் பேரிடி போன்றிருந்தது. தமது பேரரசின் எதிர்காலம்பற்றி அவர் பெரிதும் கவலையுற்ருர். பட்டத்து இளவரசர் பண்பு கெட்டவராக இருந்தார். மன்னரின் இரண்டாவது மகனை இராசாராமோவெனில், பத்து வயது நிரம்பிய பாலகனுக இருந்தார். அவரது பட்டத்தரசி சோய்ராபாய் சாம்பாஜியை அழுத்திவிட்டுத் தமது மகன் இராசா ராமையே வாரிசாக ஏற்றுக்கொள்ளச் செய்யவேண்டுமென்று விரும்பினர். மாரோபந்த் பிங்லே, அன்னுஜி தத்தோ ஆகிய இரு மராத்திய அமைச்சரும் ஒருவருக்கொருவர் மோதிக்கொண்டனர். இச் சூழ்நிலையில் மராத்திய அரசின் எதிர்காலத்தைப்பற்றி சிவாஜிக்கு மிகுந்த ஐயப்பாடு தோன்றியது. அவ் விஷயம்பற்றி ராமதாஸிடம் விவாதித்தார். ஆனல், தீர்வு ஏதும் கிடைக்கவில்லை. அதன் பிறகு அவர், 1680ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 14ஆம் தேதி ரெய்காருக்குப் புறப்பட்டுச் சென்ருர், அங்கே இராசாராமுக்குப்

பூணூல் கலியாணத்தையும் திருமணத்தையும் முடித்துவைத்தார். 1680ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் இரண்டாம் தேதி நோய்வாய்ப் பட்டு, அம் மாதம் பதின்மூன்றும் தேதி இவ்வுலக வாழ்வை நீத்தார்.

## அவரது நாட்டின் பரப்பு

சிவாஜி இறந்தபோது போர்ச்சுகீசியர் வசமிருந்த இடங்கள் நீங்கலாக, வடக்கில் ராம்நகரிலிருந்து (தற்கால தரம்பூர்) தெற்கில் கார்வார்வரையிலிருந்த பகுதிகள் அனைத்தும் அவரது நாட்டில் அடங்கியிருந்தன. கிழக்கில் பக்லான், நாசிக், பூனா மாவட்டங் களில் பாதி, சாதாரா, கோலாபூர் மாவட்டத்தின் பெரும்பகுதி ஆகியவை அதனோடு இணைந்திருந்தன. இப் பகுதிகளே சிவாஜி யின் 'சுயராஜ்ய' (Swaraj) மாயின. இவைகளே அன்றி, பெல்கோனி லிருந்து பெல்லாரி மாவட்டத்திற்கு எதிரே துங்கபத்திரை ஆற்றங் கரைவரையில் பரவி நின்ற மேல்கர்நாடகப் பகுதியையும் அவர் வென்றடக்கினர். இப் பகுதிகளையெல்லாம் மூன்று மாநிலங்களாகப் பிரித்து, ஒவ்வொன்றையும் ஓர் ஆளுநரின் பொறுப்பில் ஒப்படைத் திருந்தார். இவை தவிர, கொப்பாலுக்கு எதிரே துங்கபத்திரை ஆற்றங்கரையிலிருந்து வேலூர், செஞ்சிவரையிலுள்ள பகுதிகளையும் அவர் வென்று தம் நாட்டுடன் இணைத்துக்கொண்டார். இவற்றில் பிற்கால மைசூர் இராச்சியத்தின் வடக்கு, கிழக்கு, மத்தியப் பகுதி களும், சென்னை மாநிலத்தில் பெல்லாரி, சித்தூர், ஆர்க்காடு ஆகிய மாவட்டங்களும் அடங்கும். இவையெல்லாம் தவிர, சுந்தா, பெட்னர் அரசுகளையும், தார்வாரின் தென்பகுதியையும் உள்ளடக்கிய கனரா பகுதியையும் சிவாஜி அரைகுறையாக வெற்றிகொண் டிருந்தார்.

மேலே குறித்த பகுதிகளுக்கு வெளியேயிருந்த தக்கணத்தின் மீது சிவாஜி செல்வாக்குச் செலுத்தினர். அப் பகுதியின்மீது அவரது மேலாதிக்கம் ஏற்படவில்லையாயினும், செல்வாக்குப் பரவியிருந்தது. அதில் முகலாயருக்குச் சொந்தமான தக்கணத்தின் பெரும்பகுதி அடங்கியிருந்தது. அங்கிருந்து 'சௌத்' அல்லது நிலத்தின் நிலையான வருவாயில் நான்கில் ஒரு பங்கினை வரியாக விதித்தார்.

சிவாஜியின் அரசில் இருநூற்று நாற்பது கோட்டைகள் இருந்தன. ஏழு கோடி ரூபாய் நிதி திரண்டது. ஆனால், உண்மையில் கிடைத்த நிதி மிகக் குறைவாகும். அநேகமாக ஒரு கோடி ரூபாய் மட்டுமே கிடைத்திருக்கவேண்டும்,

## ஆட்சிமுறை

இடைக்கால வழக்கில் இருந்ததைப்போல அதிகாரங்கள் அனைத்தையும் கொண்ட வல்லரசராக சிவாஜி விளங்கினர். ஆனால், அவர் குடிமக்களின் நலனைப் பேணியதால் அவரை 'உணர்வு ஒளிர் வல்லரசர்' என்று அழைக்கலாம். ஆட்சி செய்யும் பணியில் தமக்கு உதவி செய்வதற்கென எட்டு அமைச்சர்களை அவர் பெற்றிருந்தார். ஆயின், அவ்வமைச்சர்கள் தற்காலப் பொருளில் அமைச்சர் அவையாக உருவெடுக்கவில்லை. ஏனெனில், அவர்கள் சிவாஜிக்கு மட்டுமே பொறுப்பானவர்கள். அவர்களை அவர் தம் விருப்பம்போல் பதவியில் நியமிக்கவும் நீக்கவும் செய்தார்; எனினும், பல வேலைகளை அவர்களிடம் ஒப்படைத்தார். கொள்கை வகுக்கும் விஷயத்தைத் தவிரப் பிறவற்றில் அவர்களது பணியில் அவர் தலையிடுவது இல்லை. இருப்பினும், ஆலோசனை கூறுவதே அமைச்சர்களின் பொறுப்பாக இருந்தது. அமைச்சர்களில் உயர்ந்த இடத்தையும் மன்னரின் நம்பிக்கையையும் பெற்றவர் பீஷ்வா என்ற போதிலும், அவர் தமது சகாக்களின்மேல் மேலாண்மை கொண்டவரல்லர். அஷ்டபிரதான் என்று பெயர்பெற்ற அமைச்சர்கள் பின்வருமாறு :

(1) பீஷ்வா அல்லது முதல் அமைச்சர் 'முக்ய பிரதான்' என்று வழங்கப்பெற்ருர். பொது ஆட்சிக்கும் நாட்டின் நலனுக்கும் இவர் பொறுப்பானவர். அதனால், மற்ற அதிகாரிகளின்மீது கட்டுப்பாடு கொள்வதும், ஆட்சித்துறையில் ஒத்திசைவை வளர்ப்பதும் இவரது முக்கியக் கடமைகளாயின. மன்னர் இல்லாதபோது அவருக்குப் பிரதிநிதியாகப் பணிபுரிந்தார். அரசாங்கக் கடிதங்கள், செய்திமடல்கள் ஆகியவற்றில் மன்னருடைய முத்திரையில் பீஷ்வா தமது முத்திரையைப் பொறித்தார்.

(2) தணிக்கையாளர் அல்லது 'மஜூம்தார்' அல்லது 'அமாத்தியர்'. வரவுசெலவுக் கணக்குகளைச் சரிபார்த்து, நாடு முழுவதையும் சார்ந்த அல்லது குறிப்பிட்ட மாவட்டங்களைச் சார்ந்த கணக்கு விவரப் பட்டியலின் மேல் கையெழுத்து இடுவது இவரது கடமையாகும்.

(3) நிகழ்ச்சித் தொகுப்பாளர் (Chronicler) அல்லது 'வாக்கிய நவிஸ்' (Waqia Nawis) அல்லது 'மந்திரி'. அரசருடைய அன்ருட அலுவல்களைச் சேகரித்துக் குறித்துவைத்தல் இவரது முக்கியப் பொறுப்பாகும். அதனுடன் மன்னருக்கெதிராகச் சதிகள் எழாதவாறு தடுப்பதற்காக அவரது அழைப்பிதழ்கள், உணவுப் பொருள்கள் முதலானவற்றை இவர் கண்காணித்தார்.

4. கண்காணிப்பாளர் அல்லது 'ஷுருநவஸ்' அல்லது 'சச்சிவா'. அரசரின் கடிதங்களும், செய்தி மடல்களும் சரியான நடையில் எழுதப்பெற்றிருக்கின்றனவா என்பதை இவர் கண் காணித்தார்; அவற்றினைத் திருத்தியும் அமைத்தார். பர்காணுக் களின் கணக்குகளைச் சரிபார்ப்பதும் இவரது பொறுப்புகளில் ஒன்ருகும்.

(5) அயல் நாட்டுச் செயலர் அல்லது 'தபீர்' அல்லது 'சுமந்த்.' அயல் நாடுகளுடனன உறவு, போர், சமாதானம் ஆகிய பிரச்சினைகள், இவற்றில் மன்னருக்கு ஆலோசனை வழங்குதல் இவரது கடமையாகும். அயல்நாட்டுத் தூதர்களையும் பிரதிநிதிகளையும் வரவேற்று, பிற நாடுகளோடு தொடர்புகொள்வதும் இவர்தம் பொறுப்புகளாகும்.

(6) உயர் படைத்தலைவர் அல்லது 'சாரி நௌபத்' அல்லது 'சேனுபதி'. படையினைத் திரட்டி, அதனை முறையாக அமைத்து, கட்டுப்பாட்டுடன் வைத்திருத்தல் இவரது முக்கியப் பொறுப்பாகும். இவர் போர்க் களங்களில் படைகளின் நிலையை ஒழுங்குபடுத்தியும் வந்தார்.

(7) தலைமைக் குரு அல்லது 'சாதரும் முஹதாஸிபும்' (Muhatasib) அல்லது 'பண்டிட்ராவ்' அல்லது 'தானுதியக்ஷா.' சமயச் சடங்குகளுக்கு நாள் குறித்தல், புறச்சமயத்தை ஒறுத்தல், அறக் கொடைக்காக அரசர் ஒதுக்கிய பெருந்தொகைகளைப் பிராமணர் களுக்குப் பகிர்ந்தளித்தல் ஆகியவை இவரது முக்கியக் கடமைகளாக இருந்தன. இவர் சமயச் சட்ட நடுவராகவும், அரசரின் பஞ்சாங்க மாகவும், பொது ஒழுக்கப் பாதுகாவலராகவும் விளங்கினுர்.

(8) தலைமை நீதிபதி அல்லது 'நியாயாதீசர்'. இவர் நாட்டின் உயர் நீதிபதியாவார். பொது ஆட்சித்துறை, படைத்துறை சார்ந்த நீதி இவர் பொறுப்பாகும். நிலங்கள்பற்றிய உரிமைகள், ஊர்த் தலைவர் பதவி முதலானவற்றில் சட்ட முறையான தீர்ப்புகளுக்கு ஏற்பிசைவு அளிப்பதும் இவரது பொறுப்பாக இருந்தது.

பண்டிட் ராவையும் நியாயாதீசரையும் தவிர, மற்றெல்லா அமைச்சர்களும் படைகளுக்குத் தலைமை தாங்கவும், படை யெழுச்சிகளை நடத்திச் செல்லவும் கடமைப்பட்டவர்கள். 'அரசர் தம் கடிதங்கள், உரிமைப் பத்திரங்கள், உடன்படிக்கைகள் அனைத்தும் அரசருடைய முத்திரையையும் பீஷ்வாவின் முத்திரையையும் தாங்கிச் சென்றன. அதனேடு அவை உயர் படைத் தலைவர், தலைமைக் குரு, தலைமை நீதிபதி ஆகியோர்

நீங்கலாக உள்ள அடுத்த நான்கு அமைச்சர்களின் புறக்குறிப்பு களையும் கொண்டிருந்தன.'

## உள்நாட்டு அரசாங்கம் அல்லது தல ஆட்சிமுறை

சிவாஜியின் அரசில் நான்கு மாநிலங்கள் இருந்தன. ஒவ்வொன்றும் ஓர் அரசப் பகர ஆளின் பொறுப்பில் இருந்தது. வடக்கு மாநிலத்தில் தாங், பக்லான், சூரத்திற்குத் தெற்கிலிருந்த கோலி நாட்டின் பகுதி, பம்பாய்க்கு வடக்கேயுள்ள கொங்கணம், பூனாவிற்குத் தெற்கிலுள்ள தக்கண மேட்டு நிலம் (தேஷ்) ஆகியவை அடங்கியிருந்தன. மரோ திரிம்பக் பிங்லே அதன் தலைவரானார். அடுத்த மாநிலமான தென்பகுதியில் பம்பாய்க்குத் தெற்கிலுள்ள கொங்கணம், சவாந்த்வாடி, வட கனரா கடற்கரை ஆகியவை அடங்கின. அன்னாஜி தத்தோ அதனை ஆட்சி புரிந்தார். தென்கிழக்குப் பகுதி மூன்றாவது மாநிலமாகும். அது தக்கண மேட்டு நிலத்தில் அமைந்த சத்தாரா, கோலாபூர் மாவட்டங்களையும் கர்நாடகத்தில் துங்கபத்திரைக்கு மேற்கே கொப்பால்வரையிலான தார்வார், பெல்கோன் மாவட்டங்களையும் தன்னகத்தே கொண்டிருந்தது. அது தத்தாஜியின் கீழிருந்தது. அண்மையில் கொப்பாலுக்கெதிராக துங்கபத்திரையிலிருந்து வேலூர், செஞ்சி வரையில் வென்றடக்கிய பகுதியே நான்காவது மாநிலமாகும். அதாவது, பிற்கால மைசூர் இராச்சியத்தின் வடக்கு, கிழக்கு, மத்தியப் பகுதிகளும், சென்னை மாநிலத்தின் பெல்லாரி, சித்தூர், ஆர்க்காடு மாவட்டங்களின் பகுதிகளும் அம் மாநிலத்தில் அடங்கியிருந்தன. அதனை ஒழுங்கமையாத மாநிலமென்றே அழைக்கலாம். அதில் அடங்கிய பகுதிகளை அண்மையில் வென்று அடக்கிய காரணத்தால் வெற்றிகொண்ட படையின் பொறுப்பில் அவை இருந்தன.

இந்த மாநிலங்களைத் தவிர, தென்தார்வார் மாவட்டத்தையும், சுந்தா, பெட்னர் அரசுகளையும் உள்ளடக்கிய கனரா மேட்டு நிலத்தையும் சிவாஜி அநேகமாக வென்றடக்கினார். அவர் இறக்கும் போது இப் பகுதி அவரது ஆட்சிக்கு உட்பட்டில்லை. ஆனால், அது அவரது செல்வாக்கிற்கு உட்பட்டுத் திறையும் செலுத்திவந்தது.

மாநிலங்கள் பர்காணாக்களாகப் பிரிக்கப்பட்டிருந்தன. ஒவ்வொரு பர்காணாவிலும் படைப்பிரிவு ஒன்றுடன் மாவட்ட முதல்வர் பணியாற்றியிருக்கவேண்டும். ஆனால், இத்தகைய உட்பிரிவுகளின் ஆட்சிபற்றிய விளக்கங்களை அறியக்கூடவில்லை.

## படைத் துறை

நன்கு அமைந்த, கட்டுப்பாடு மிகுந்த படையொன்று சிவாஜியிடம் இருந்தது. அவர் இறக்கும்போது 45,000 பாகா (Paga) குதிரை வீரர்களும், 60,000 சிலாதார் (Silahdar) குதிரை வீரர்களும், ஓர் இலட்சம் மாவ்லி காலாட்படையினரும் அதில் அடங்கியிருந்தனர். பார்கீர்களுக்கு அளித்த 5,000 குதிரைகள் நீங்கலாக 32,000 பரிகளைத் தமது கொட்டில்களில் சிவாஜி வைத்திருந்தார். அவரிடம் இருந்த யானைகளின் எண்ணிக்கை 1,260 என்றும், 125 என்றும், 300 என்றும் பலவாறுகக் குறிப்பிடப்பெறுகின்றது. இறுதியில் கண்ட எண்ணிக்கையே அதிகப் பொருத்தமுடையதாகும்.

பாகா அல்லது அரச குதிரைப் படைதான் சிவாஜியின் படையில் மிகச் சிறந்த பகுதியாகும். ஹவல்தாரின் (Havaldar) கீழிருந்த பிரிவில் 25 படைவீரர்கள் (பார்கீர்கள்) இருந்தனர். ஐந்து ஹவல்தார்களுக்குமேல் ஒரு ஜம்லாதாரும் (Jumladar), பத்து ஜம்லாதாரர்களுக்குமேல் ஒரு ஹஸாரியும் இருந்தனர். அதாவது, 1,250 வீரரைக் கொண்ட பெரும் படைப்பிரிவிற்கு ஹஸாரி தலைவராவார். பாகாவில் 'பாஞ்ச் ஹஸாரி'யே மிக உயர்ந்த பதவியாகும். அரச குதிரைப் படை முழுவதற்கும் உயர்படைத்தலைவர் அல்லது குதிரைப் படையின் 'சாரி நௌபத்' ஒருவர் இருந்தார். 25 வீரர்கள் அடங்கிய படைப்பிரிவில் நீர் கொண்டு செல்பவர் ஒருவரும், குதிரை மருத்துவர் ஒருவரும் இருந்தனர்.

'சிலாதார்' என்ற மற்றெரு வகையான குதிரைப் படையினரும் பணிபுரிந்தனர். அவர்கள் சொந்தக் குதிரைகளையும் படைக்கலன்களையும் வைத்திருந்த போர்வீரர்கள். அவர்கள் 'பாகா' குதிரை வீரர்களுக்குத் தாழ்ந்த நிலையில் இருந்தபோதிலும் குதிரைப் படையின் சாரி நௌபத்தின் தலைமையிலேயே இருந்தனர்.

படைத்துறையில் அடுத்த முக்கியப் பிரிவு காலாட்படையேயாகும். இது ஒன்பது படைவீரர்கள் அல்லது தனிப்பட்ட வீரர்கள், 'பைக்கள்' (Paiks) அடங்கிய சிறு படைப்பிரிவுகளாகப் பிரிந்திருந்தது. ஒவ்வொரு பிரிவிற்கும் ஒரு சிறு படைத்தலைவர் அல்லது 'நாயக்' (Naik) தலைவராக விளங்கினர். ஐந்து 'நாயக்'களுக்கு மேல் ஒரு ஹவல்தாரும் இரண்டு அல்லது மூன்று ஹவல்தார்களுக்கு மேல் ஒரு ஜம்லாதாரும், பத்து ஜம்லாதார்களுக்குமேல் ஒரு ஹஸாரியும் இருந்தனர். 'சாத் ஹஸாரி' (Seven-Hazari) என்பது அதைவிட உயர்ந்த பதவியாகும். 'சாத் ஹஸாரி'களுக்குமேல் தலைவராகக் காலாட்படையின் 'சாரி நௌபாத்' விளங்கினர்.

20,000 மாவ்லி படைவீரர்களைக் கொண்ட சிவாஜியின் காவற்படைப் பிரிவு (Guard Brigade) பெரும் பொருட் செலவில் மிகச் சிறந்த முறையில் உடை, படைக்கலன்கள், பிற சாதனங்களைப் பெற்றுத் திகழ்ந்தது.

அன்னியருக்குச் சொந்தமான பகுதிகளைத் தாக்குதற்குத் தமது படைகளை எட்டு மாதங்களுக்கு ஏவி, வேண்டிய பொருள்களைக் கொண்டுவருவது என்பது சிவாஜியின் பழக்கமாகும். நான்கு மாத மழைக்காலத்தைப் படையினர் பாளையங்களில் கழித்தனர். தஸரா விற்குப்பின் மன்னர் தேர்ந்தெடுத்த பகுதியின்மீது படைகொண்டு சென்றனர். அவர்கள் புறப்படும்போது ஒவ்வோர் அதிகாரி யிடமும், படைவீரரிடமும் இருந்த பொருள்களின் பட்டியல் தயாரிக்கப்பெற்றது. அவர்கள் திரும்பிவந்தபோது அவர்களை ஆராய்ந்து அவர்களிடம் அதிகமாக இருந்த பொருள்களை அரசாங்கம் எடுத்துக்கொண்டது. சிவாஜியினுடைய படை எளிதில் இடம் விட்டு இடம் பெயரக்கூடியதாகவும், கட்டுப்பாடு மிகுந்ததாகவும் இருந்தது. குறைந்த அளவு படைத் தளவாடங்களையே கொண்டு சென்றது. படையுடன் பெண்கள் வர அனுமதிக்கப்பெறவில்லை. அரசரும் எவ்வளவுக்கெவ்வளவு குறைந்த படைத்தளவாடங்களைக் கொண்டுசெல்ல முடியுமோ அவ்வளவுக்கவ்வளவு குறைவான வற்றையே கொண்டு சென்றார். ஒழுங்கான அமைப்பு, தீவிரக் கட்டுப்பாடு, கடுமையான எளிமை ஆகியவற்றினால் சிவாஜியின் படை பதினேழாம் நூற்றாண்டில் எதிர்த்து நிற்கமுடியாத படை யாகத் திகழ்ந்தது.

## நிதித்துறை ஆட்சி

சிவாஜியின் காலத்தில் மராத்திய நிதி சார்ந்த ஏற்பாடு ஒரு குறிப்பிட்ட அளவு முறை கொண்டு நிலத்தை அளப்பதை அடிப் படையாகக்கொண்டது. ஒவ்வோர் ஊரிலும் இருந்த நிலத்தின் பரப்புபற்றி விவரமாக அறிந்துகொண்ட பிறகு ஒவ்வொரு 'பிகா' (Bigha) நிலத்திலிருந்தும் எதிர்பார்க்கக்கூடிய உற்பத்திப் பொருளின் அளவை மதிப்பிட்டனர். உற்பத்தியான பொருளில் ஐந்தில் இரண்டு பகுதியை அரசாங்கம் எடுத்துக்கொண்டது. மீதியை குடியானவர்களிடமே விட்டது. புதிதாக வந்த விவசாயிகளுக்கு விதையையும் மாடுகளையும் அரசாங்கம் கொடுத்துதவியது; அவற்றின் மதிப்பைப் பல தவணைகளில் பெற்றது. பணமாகவோ, பொருளாகவோ அளித்த வரியை அரசாங்க அதிகாரிகள் நேரடியாக வசூலித்தனர்.

ரயத்துவாரி வரிக் கொள்கையை சிவாஜி கடைப்பிடித்தார். வரி கொள்ளும் பண்ணைக் குடியானவர்களையும் ஜமீன்தார்களையும் அவர் வெறுத்தார். ஜமீன்தார்கள், தேஷ்முக்குகள், தேசாய்கள் ஆகியோர் குடியானவர்மீது அரசியல் அதிகாரம் செலுத்த அவர் அனுமதிக்கவில்லை. தமது அதிகாரிகளுக்குச் சம்பளத்திற்கு ஈடாக ஜாகீர்கள் வழங்குவதைக் கூடுமானவரை தவிர்த்தார். ஆயின், நிலங்களை மான்யமாக வழங்கியபோது அவற்றினைப் பெற்றவர்கள் தங்களது ஜாகீர்களில் அரசியல் அதிகாரம் கொள்ளாதவாறு பார்த்துக்கொண்டார்.

நிலவரியைத் தவிர மற்றத் தீர்வைகளின் பெயர்களையும், வீதங்களையும் அறிந்துகொள்ள வழியில்லை. ஆயினும், ஏற்றுமதி இறக்குமதி வரிகளும், உள்நாட்டுச் சுங்கவரிகளும் இருந்திருக்க வேண்டும்.

சிவாஜியின் முக்கிய வருவாய் இனமாக இருந்தது 'சௌத்' வரியாகும். திறை செலுத்துமாறு செய்வதற்காக சிவாஜி தாக்கிய அண்டை நாடுகளுக்குச் சொந்தமான பகுதிகளின் நிலையான வருவாயில் நான்கில் ஒரு பங்கினைக் கொள்வது வழக்கமாகும். ஒவ்வோர் ஆண்டும் சௌத் வரியினைக் கொள்வது வழக்கம். சார்தேஷ்முகி அல்லது இத்தகைய நாடுகளின் நிலையான வருவாயில் பத்தில் ஒரு பங்கு கொள்வதும் மற்றொரு முக்கிய வருவாய் மூலமாக இருந்தது.

## சமயக் கொள்கை

சிவாஜி ஒரு பழைமைப் பண்பு கொண்ட இந்துவாக இருந்த போதிலும் அவர் எல்லாச் சமயங்களையும் மதித்து அவற்றிற்கு இடங் கொடுத்தார். முஸ்லீம்களுக்கு அவர் வழிபாட்டு உரிமையும், சமயச் சுதந்தரமும் வழங்கினர். அவர்களுடைய அருட்டொண்டர்களையும், புண்ணியத் தலங்களையும் மதித்து நடந்தார். இந்துக் கோயில் களுக்கு மானியங்கள் வழங்கியதைப்போலவே முஸ்லீம் அருட் டொண்டர்களின் ஆசிரமங்களுக்கு அறக் கொடைகள் அளித்தார். கெலோஷியைச் சார்ந்த பாபா யாகுத் (Baba Yaqut) என்பாருக்கு ஆசிரமம் கட்டித் தந்தார். அவர் குரானிடம் பெருமதிப்பு கொண்டிருந்தார். கொள்ளையிடும்போது அவரது ஆட்களின் கையில் சிக்கிய குரானின் படிகளை முஸ்லீம்களிடம் ஒப்படைக்கவேண்டுமென்று ஆணையிட்டிருந்தார். முஸ்லீம் மாதர்களுக்கு மிகுந்த மரியாதை காட்டினர். தமது வீரர்கள் முஸ்லீம் மாதர்களை அவமதிக்க எப்போதும் அவர் அனுமதித்ததில்லை. முஸ்லீம் சமயத்திடம் சிவாஜி காட்டிய சகிப்புத் தன்மைக்காகவும், அவர் தமது தாக்குதல்

களின்போது முஸ்லீம் மாதர்களையும், குழந்தைகளையும் நடத்திய பெருந்தன்மையான முறைபற்றியும், அவரிடம் நேசம் கொள்ளாத வரலாற்று அறிஞரான காஃபி கானும் (Khafi Khan) புகழ்ந்து பேசினர். அரசாங்க அலுவல் துறைகளிலும், நிலப்படையிலும், நாவாய்ப் படையிலும் அவர் முஸ்லீம்களுக்கு ஓர வஞ்சனை காட்டவில்லை. மிகுந்த நம்பிக்கை வாய்ந்த பதவிகளிலும் அவர்களை நியமித்தார்.

இந்து சமயத்தில் பற்றுர்வம் மிகுந்த சிவாஜி, வேதங்களில் வல்லமை பெறுவதை ஆதரித்தார். கற்றறிந்த பிராமணர்களை ஊக்குவிப்பதற்காகப் பெரும் தொகையை ஒதுக்கினர். புகழ்பெற்ற ராமதாஸ் அவரது குருவாக இருந்தார். அவரிடமிருந்துதான் சமயத்தில் ஊக்கம்கொண்டார். ஆனால், சிவாஜியின் அரசாங்கக் கொள்கையின்மீதோ, ஆட்சி முறையிலோ அவ்வருட்டொண்டர் செல்வாக்கு செலுத்தவில்லை. தினந்தோறும் பிச்சையெடுக்க ராமதாஸ் வெளியே சென்றதைக் கண்ட சிவாஜி, தமது நாட்டை அவருக்கு நன்கொடையாக அளித்ததாகக் கூறப்படுகின்றது. அக் கொடையினை ராமதாஸ் ஏற்றுக்கொண்டார் என்றும், ஆனால், நாட்டை சிவாஜியிடமே திருப்பித்தந்து, அதனைப் பகர ஆளாக இருந்து ஆளுமாறு கேட்டுக்கொண்டார் என்றும், செய்யும் செயல்களுக்கெல்லாம் மேலான சக்திக்குப் பொறுப்புடையவராக இருக்குமாறு அறிவுரை பகன்றுர் என்றும் கூறப்படுகின்றது. அவ்வாறே செய்ய சிவாஜியும் இசைந்தார். 'துறவியாம் தனிப் பெரும் தலைவரின் பணிச்சின்னமணிந்த ஊழியராகத் தாம் போரிட்டு ஆட்சி செய்வதைக் குறிக்கும் வகையிலும், கடவுளின் கண்களுக்கு முன் எப்போதும் ஒழுங்காக நடந்துகொள்வதைக் குறிக்கும் வகையிலும்' ராமதாஸின் காவி உடையை அரசரின் கொடியாக (Bhāgwa Jhanda) சிவாஜி கொண்டிருந்தார்.

## சிவாஜியின் குண இயல்பு

மதிப்பு காட்டும் மைந்தராக, கருத்துள்ள கணவராக, அன்புள்ள தந்தையாக, அருள் நிறைந்த நண்பராக சிவாஜி விளங்கினர். தமது தாயாரைப் பெரிதும் போற்றினர். தந்தையை மதித்து நடந்தார். மனைவியரையும் மைந்தர்களையும் மிகவும் நேசித்தார். ஏழை எளியவர்கட்கு உற்ற நண்பராகத் திகழ்ந்தார். சாதாரண வழக்கில் அவர் கல்வி கற்றவர் அல்லர் எனினும், உயர்ந்த அறிவும் புலமையும் பெற்றிருந்தார். வழக்குமீறிய மதி நுட்பமும், மேம்பட்ட பொது அறிவும், பகுத்தாயும் திறமும் அவரிடம் இருந்தன. அவர் தீவிர சமயப் பற்றுக்கொண்டவர். புலன் நுகர்ச்சியில்

அளவோடு இருந்தார். தீய ஒழுக்கம் கொள்ளாதிருந்தார். அவர் பழைமைப் பண்புகொண்ட இந்துவாக இருந்தபோதிலும் சமகால அரசரான அவுரங்கசீபைப்போன்று சமயவெறி பிடித்தவரல்லர். எல்லாச் சமயங்களிலும் உண்மை இருப்பதை உணர்ந்தார். இந்து, முஸ்லீம் அருட்டொண்டர்களைப் போற்றிவந்தார்.

அவர் படைத்துறை சார்ந்த மேதையாகத் திகழ்ந்தார். 'தமது படைவீரர்களின் இனப் பண்பு, நாட்டின் தன்மை, அக் காலப் படைக்கலன்கள், பகைவர் நாடுகளில் இருந்த உள்நாட்டு நிலை ஆகியவற்றிற்கு' மிகவும் பொருத்தமாக இருந்த கொரில்லாப் போர் முறையை இயலறிவுத் திறத்தால் ஏற்றுக்கொண்டார். அவரது படை நல்ல முறையில் திரட்டப்பெற்றதாகவும், ஒழுங்காக அமைக்கப்பெற்றதாகவும், நல்ல பயிற்சியும் கட்டுப்பாடும் கொண்டதாகவும் இருந்ததால், 17ஆம் நூற்றுண்டில் அது வெல்லமுடியாத படையாகத் திகழ்ந்தது. சிவாஜி பேரமைப்பாளராக இருந்ததால் படையெடுத்துச் செல்வதற்கு வேண்டிய அத்தனையும் முன்கூட்டியே வைத்திருந்தார். தமது படைவீரர்களின் உழைப்பையும் போர்க்களத் தெழும் களைப்பையும் பகிர்ந்துகொண்ட சிவாஜி, அவர்களுடைய பேரன்பிற்குப் பாத்திரரானுர். இடைக்கால இந்தியாவில் கடற் படையை உருவாக்குவதன் அவசியத்தை உணர்ந்த முதல் இந்திய அரசர் அவரே. வாணிபத்திற்காகவும் பாதுகாப்பிற்காகவும் அவர் துறைமுகங்களையும் கப்பல்களையும் கட்டினுர்.

அரசராகவும், ஆட்சி வினைஞராகவும் சிவாஜி சிறந்த முறையில் வெற்றிபெற்ருர். வலிமை வாய்ந்த அரசு ஒன்றை நிறுவினுர். நல்லதோர் ஆட்சிமுறையை அதற்களித்தார். குடிமக்களுடைய பொருளாதார நலன்களையும், ஒழுக்க நெறிசார்ந்த நலன்களையும் வளர்ப்பதற்கென்று அக் கால சூழ்நிலையில் தம்மால் இயன்ற அனைத் தையும் செய்தார். பொது ஆட்சித்துறை, படைத்துறை சார்ந்த தமது அதிகாரிகளின்மீது கடுமையான கட்டுப்பாடு கொண்டிருந்தார். நடைமுறையாக வருவனவற்றைத் தமக்குக் கீழ் இருந்தோர்வசம் ஒப்படைத்து, அவர்களுடைய அன்ருடக் கடமைகளோடு தொடர்பு கொண்டு அவற்றில் அவர்களுக்குத் தன் விருப்புரிமை அளித்தபோதி லும் அவர் ஆட்சித்துறையில் சிறு செய்திகளிலும் கவனம் செலுத்தினுர். மத்திய அரசையும் தல அரசையும் மிகச் சிறந்த முறையில் அமைத்ததால், அவர் இல்லாதபோது அவை திறம்படப் பணியாற்றின. அவர் ஒரு தலைசிறந்த ஆட்சி வினைஞர் என்பதற்கு இது ஒரு சான்ருகும். வரலாற்று அறிஞர் சர் ஜாதுநாத் சர்க்கார் குறிப்பிடுவதைப்போல, கிழக்கு நாடுகளில் தோன்றிய முடியாட்சி களுக்கு இது ஒரு புதுமையாகும். மன்னரென்ற முறையில் அவர்

மக்கள் அனைவர்க்கும் அமைதியையும் சமயப் பொறையையும் அளித்தார். அது மட்டுமல்லாது, ஜாதி மத வேற்றுமையின்றி சமமான வாய்ப்புகளைத் தந்தார். தகுதியுடையோருக்கு அரசாங்கப் பதவிகளை அளித்தார். அவரது ஆட்சி, முறையானதாகவும் நன்மை பயப்பதாகவும் இருந்ததோடு ஊழலும் கட்சிப் பூசலும் அற்றிருந்தது. பாரசீக மொழிக்குப் பதிலாக மராத்திய மொழியை அரசாங்க மொழியாகச் செய்ததாலும், சிவாஜியின் தூண்டுதலினால் எழுதப் பெற்ற 'ராஜ் விவஹார் கோஷ்' என்னும் சமஸ்கிருதப் பொருள் குறிப்பு நூலினாலும் மராத்தியர் தங்கள் மொழியை வளர்த்துக்கொள்ள முடிந்தது. இங்ஙனம், சிவாஜி அரசர் என்ற வகையில் ஓர் உயர்ந்த அரசியல் குறிக்கோளை மனத்தில் கொண்டிருந்ததோடு, அதனைப் பொது நன்மைக்காகப் பயன்படுத்த முயன்று வெற்றியும் பெற்றார்.

சிவாஜி ஒரு தலைசிறந்த அரசியல் அறிஞர். அவர் தமது காலத்தின் கூறுநிலைகளையெல்லாம் இயலறிவுத் திறத்தால் உணர்ந்து, மகாராஷ்டிரத்தில் இந்து 'சுயராஜ்யத்தை' நிறுவவேண்டுமென்ற தனது வாழ்க்கைக் கனவை நிறைவேற்றுவதற்கு நாட்டிலுள்ள தலை சிறந்தவர்களைத் தம்முடன் சேர்த்துக்கொண்டார். மராத்தியருக்குப் புதிய வாழ்வைக் காட்டி அவர்களை ஒரு நாட்டினமாக ஒன்று படுத்தினார். அவர் தமது பணியைத் தொடங்கியபோது முகலாயப் பேரரசு, புகழின் உச்சியில் இருந்தது. பீஜப்பூர், கோல்கொண்டா ஆகியவற்றின் சுல்தான்களும், ஜஞ்ஜிராவின் சித்திகளும், மேற்குக் கரையில் வாழ்ந்த போர்ச்சுகீசியரும் அவருக்குப் பெரும் பகைவர் களாக எழுந்தனர். இருப்பினும் இத்தகைய சக்திகளின் கடுமை யான எதிர்ப்பிற்கு இடையே அவர் வெற்றிபெற்றார். இங்ஙனம் மராத்திய இனத்தை உயிர்ப்பூட்டியதுதான் அவர் அரசியல் அறிஞ ராக இருந்து ஆற்றிய அரும்பெரும் பணி எனலாம். அவர் மேம்பட்ட ஆக்கத்துறை சார்ந்த மேதையாவார். சமகாலத்தவருக்கும், வருங் காலச் சந்ததியார்களுக்கும் உள்ளுயிர்ப்பு ஊட்டும் உண்மையான 'காவியத் தலைவனும்' காவலனாகத் திகழ்ந்தார். அவரைப்பற்றி சர் ஜாதுநாத் சர்க்கார் பின்வருமாறு எழுதினார்: 'வளர்ச்சியின் உச்ச எல்லையை அடையும் வழியினைத் தற்கால இந்துக்களுக்கு அறிவுறுத்தினார். இந்து சமயம் எனும் மரம் உண்மையில் செத்துவிட வில்லையென்றும், பல நூற்றாண்டுகளாக வந்த அரசியல் அடிமைத் தனம் என்னும் தாங்கமுடியாதது எனத் தோற்றமளித்த சுமையின் கீழிருந்து அது எழமுடியும் என்றும் சிவாஜி எடுத்துக்காட்டினார். புதிய கிளைகளும் இலைகளும் கொண்டு வானில் வளர்ந்தோங்க முடியுமென்றும் உணர்த்தினார்.'

## இந்தியா முழுவதற்குமான ஓர் இந்துப் பேரரசை நிறுவ சிவாஜி விரும்பினரா ?

மகாராஷ்டிரத்தோடு சிவாஜி தமது கனவை நிறுத்திக் கொள்ளாது, இந்தியத் துணைக்கண்டம் முழுவதிலும் வாழ்ந்த இந்துக்களுக்குச் சுதந்தரம் பெற்றுத்தரவேண்டுமென்றும் விரும்பினர் என்பது வரலாற்றறிஞர் சர்தேசாயின் (Sardesai) கருத்து. தமது கருத்தை வலியுறுத்தும் வகையில் அவர் பின்வரும் விளக்கங்களைத் தந்துள்ளார்: (1) சமயச் சுதந்தரம் பெறுவதுதான் சிவாஜியின் முக்கிய நோக்கமே யொழிய நாடு பிடிப்பதன்று. 1645ஆம் ஆண்டிலேயே அவர் ‘ஹிந்தாவி ஸ்வராஜ்யா’ (Hindavi Swarajya) என்னும் தமது திட்டம்பற்றி தாதாஜி நரஸ் பிரபு என்பாருக்கு எழுதினர். இந்தியா முழுவதற்கும் சமயச் சுதந்தரம் பெற்றுத்தர முயலவேண்டுமென்ற தமது விருப்பத்தை இங்ஙனம் வெளியிட்டார். சிவாஜியின் குறிக்கோளையும் ஆர்வ எழுச்சியையும், அவருக்குப் பின் வந்த மராத்திய அறிஞரும் செயல் வீரர்களும் இப் பொருளிலேயே விளக்கினர். (2) அகில இந்தியா முழுவதும் விரிவடைதல் என்னும் உணர்வில்தான் சிவாஜியின் ‘சௌத்’ வரியும் சார்தேஷ்முகியும் உருவாயின. (3) டில்லிப் பேரரசின் அரியணையில் அமரவேண்டுமென்று சிவாஜி எண்ணியதாக நம்பிய சமகாலத்தில் வாழ்ந்த ஜெய்ப்பூரின் கவிஞர் ஒருவர், பேராசைகொண்ட மராத்திய மன்னரை அடக்கியதற்காக ஜெய்சிங்கைப் புகழ்ந்து பாடினர். (4) வட இந்தியாவைப்பற்றி நேரடியாக அறிந்துகொள்வதற்காகவும், அது முகலாயருடைய ஆதிக்கத்தை அழிக்க ஆயத்தமாக உள்ளதா என்பதைக் கண்டறிவதற்காகவும் சிவாஜி ஆக்ராவுக்குப் பயணமானர். (5) இந்து சமுதாயம் முழுவதும் அரசியல், அறநெறி சார்ந்த புத்துயிர்ப்புப் பெறவேண்டுமென்னும் உயர்ந்த குறிக்கோளை சிவாஜி கொண்டிருந்தார் என்பதை நிலப்படையும் கடற்படையும் கொண்டு தமது அரசினை அவர் காத்தவிதமும், கடற்பயணத்திற்கு எதிராக இருந்த குறுகிய மனமாச்சரியத்தை அவர் களைந்தெறிந்ததும், இஸ்லாம் சமயத்திற்கு மாறிய இந்துக்களை மீண்டும் இந்து சமுதாயத்தில் சேர்த்துக்கொண்ட அவரது செயலும் காட்டுகின்றன. (6) முகலாயர்களுடனும் தக்கண சுல்தான்களுடனும் போரிட்ட காலத்தில் அவர் இராஜபுத்திரத் தலைவர்களுடன் போர் தொடுக்கவில்லை. அவர்களுடன் ஒருவித உடன்பாட்டைச் செய்துகொள்ளவே முயன்று வந்தார்.

மேலே தந்த விளக்கங்கள் திடமானதாக இல்லை. அவை நம்பத் தகுந்தவையாகவுமில்லை. முகலாயப் பேரரசில் இந்து சமயச்

சுதந்தரம் என்பது இருக்க முடியாத ஒன்று என்பதை உணர்ந்து கொள்ள நீண்ட விளக்கம் தேவையில்லை. எவ்வாறெனில், அது நடைமுறையில் வல்லாட்சிக்குள் வல்லாட்சியொன்றை ஏற்படுத்துவதாக அமையும் என்பதால் எந்த அரசரும் அதனை அனுமதித்து இருக்கமாட்டார். அவுரங்கசீபைப்பற்றிச் சொல்லத் தேவையில்லை. இறுதியில் இந்தியா முழுவதையும் உள்ளடக்கும் வகையில் சிவாஜியின் 'சுயராஜ்யம்' அகன்ற அடிப்படையில் அமைந்தது என வைத்துக்கொண்டாலும் அத்தகைய ஓர் ஆசைக் கனவை சிவாஜி கண்டாரா என்பது ஐயத்திற்கு உரிய ஒன்றாகும். சிவாஜி செயல்முறைக் கோட்பாட்டாளர்; கனவுலகில் வாழ்பவரானவர். அவர் இந்து சமயச் சுதந்தரத்தை நிலைநாட்டவேண்டுமென்ற ஆவல் கொண்டவர் என்பதை வலியுறுத்துவதற்கான உறுதியான தடயம் ஏதும் இல்லை. ஆக்ராவிலிருந்து ரெய்கார் வருவதற்குள் அவர் இருபத்தைந்து நாட்களை வட இந்தியாவில் கழித்திருக்கிறார். அப்போது வட இந்தியாவின் நிலைபற்றி அறிந்துகொள்வதற்கான காலமோ, வாய்ப்போ அவருக்கு இல்லை என்பது இப்போது ஐயத்திற்கு இடமின்றி நிறுவப்பெற்றுள்ளது. அத்தகைய நோக்கத்தோடு அவர் ஆக்ராவிற்குச் செல்லவில்லை. மேலும், முகலாயப் பேரரசர்களுக்காக வராது, சொந்த முறையில் தலைவர்களாக வந்த இராஜபுத்திரர்களுடன் போரிடவில்லை என்று கொண்டாலொழிய இராஜபுத்திரருடன் சிவாஜி போரிடவில்லை என்று கூறுவது தவறாகும். சிவாஜியைப் பொறுத்தவரையில் அத்தகைய போருக்கு வாய்ப்பே இல்லை.

முகலாயருக்கெதிராக நாட்டினரைத் தட்டி எழுப்பும் வழிமுறை எதையும் சிவாஜி மேற்கொள்ளவில்லை. ஜெஸியா வரியை மீண்டும் விதித்ததைத்தான் அவர் எதிர்த்தார். வட இந்தியாவில் இருந்த ஜாத்துகள், சத்னமிகள், சீக்கியர் போன்ற சக்திவாய்ந்த இந்துப் புரட்சியாளர்களுடன் அவர் எவ்விதத் தொடர்பும் கொள்ளவில்லை. மதிநுட்பம் வாய்ந்த படைத்தலைவராக இருந்த சிவாஜி ஜெஸ்வந்த் சிங், ஜெய்சிங் ஆகியோரின் இந்து சமய ஆர்வத்தைப் பயன்படுத்திக் கொண்டாரே ஒழிய, முகலாயர் ஆதிக்கத்தை அழிப்பதற்காக உருவான முறையில் அவர்களுடனோ, வேறு இராஜபுத்திரத் தலைவர்களுடனோ கூட்டுச் சேரவில்லை. ஆர்வத்துடன் வந்த சத்ரசால் பந்தேலாவின் சேவையை அவர் பயன்படுத்திக்கொள்ளவில்லை. சத்ரசால் பந்தேலாவிற்கு உதவியொன்றும் அளிக்காது அவரைத் திரும்பிச் சென்று அங்கே அவுரங்கசீபிற்கு எதிராகப் புரட்சி செய்யுமாறு யோசனை கூறினார். இந்த உண்மைகள் அனைத்தும் அகில இந்திய இந்து சாம்ராஜ்யக் கொள்கைக்கு மாறானவையே.

## நிரந்தரமான அரசினை நிறுவுவதில் சிவாஜி தோல்வியுறக் காரணங்கள்

நிரந்தரமான அரசினை சிவாஜியால் நிறுவ முடியாது போனதற்குப் பல காரணங்கள் இருந்தன. முதலாவதாக, அவரது ஆட்சி மிகக் குறுகியதாகும். பத்தாண்டுகளுக்கே இருந்த ஆட்சியில் அவர் பல பகைவர்களுடன் போராடியவண்ணம் இருந்தார். அதனால் வெற்றிபெற்ற பகுதிகளை ஒன்றுபடுத்தி முறையான ஆட்சியை அமைப்பதற்குப் போதிய காலம் கிடைக்கவில்லை. இரண்டாவதாக, 17ஆம் நூற்றாண்டில் இருந்த மராத்திய சமுதாயத்தைப் பல தலைமுறைகளில் வரும் தன்னலமற்ற ஊழியர்களுடைய பொறுமையான, சலியாத உழைப்பினால்தான் திருத்த முடியும். நிலையற்றிருந்த அக்காலத்தில் ஒவ்வொருவரும் தமது 'வாடன்' அல்லது மரபு வழியாக வந்த நிலத்தை உறுதியாகப் பற்றி நின்றனர். குடும்பம் பெருகியதாலும், 'வாடனை'க் குடும்பத்தில் வந்தவர்கள் பிரித்துக்கொண்டதாலும் அல்லது தல ஆளுநர்களோ, சுல்தான்களோ நில உரிமையை மாற்றியமைத்ததாலும் ஒரு குறிப்பிட்ட நிலத்திற்குப் பலர் போட்டியிடும் நிலை இருந்தது. அதன் காரணமாக மகாராஷ்டிரத்து மக்களிடையே ஓயாத பூசல்கள் எழுந்தன. சிவாஜியின் ஆதிக்கம் ஏற்பட்டபோது வாடன்கள் பற்றிய தகராறுகளில் அவர் தீர்ப்பு அளிக்கவேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. அதன் விளைவாக ஏமாற்றமுற்றவர்கள் சிவாஜிக்கு எதிராக எழுந்து பீஜப்பூர், கோல்கொண்டா சுல்தான்கள், முகலாயர்போன்ற பகைவர்களுடன் இணைந்துகொண்டனர். அதனால் அவர் தமது வாழ்நாள் முழுவதும் பகைவர்களுடன் போராடியதோடு தமது குடிமக்களுடனும் போராடவேண்டி இருந்தது. மூன்றாவதாக, 17ஆம் நூற்றாண்டில் இந்தியாவின், பிற பகுதிகளைப்போலவே மகாராஷ்டிரத்திலும் ஒன்றிற்கொன்று எதிரான பல பிரிவுகள் அல்லது ஜாதிகள் இருந்தன. பிராமணர்கள் பிராமணரல்லாதாரை வெறுத்தனர். பிராமணர்களும் தேஷ் பிராமணர்கள், கொங்கண பிராமணர்கள், சித்பவன்கள், காரதேக்கள் எனப் பிரிந்திருந்தனர். அவர்கள் ஒருவருக்கொருவர் வெறுப்புக் கொண்டிருந்தனர். தங்களை வாழ்விக்க வந்த சிவாஜியிடம் கூட அவர்கள் இரக்கமற்ற முறையில் நடந்துகொண்டனர். அன்னாரது முடிசூட்டு விழாவின்போது வேத மந்திரங்களை ஓதுதற்கு அவருக்கு அனுமதி தர மறுத்தனர். அவர்கள் மாறாத காழ்ப்புக் கொண்டிருந்ததால் ஒன்றுபட்டுப் பணியாற்றுவது கடினமாகியது. உண்மையான நிலைபெற்ற தேசிய ஒற்றுமை பெறமுடியாத ஒன்றாகி விட்டது. நான்காவதாக, சிவாஜியின் வெற்றிகளால் இந்துப் பழைமைப் பண்பிற்குச் சாதகமான எதிர்வினை உருவாகியது. மராத்திய

அரசில் முக்கியத்துவம் அடைந்த மேல்வகுப்பினர், ஏழை மக்களின் எளிய, ஒரே தன்மைத்தான வாழ்க்கைக்கு முரண்பட்ட சடங்கு சார்ந்த தூய வாழ்க்கையை மேற்கொண்டனர். இதன் விளைவாக மராத்திய சமுதாயத்தில் இருந்த இரு பிரிவினரிடையே பெருத்த பிளவு ஏற்பட்டது. ' இங்ஙனம் சிவாஜியின் வெற்றியினால் அவர் வெற்றியின் அடிப்படையே தகர்ந்தது. எந்த அளவிற்கு சிவாஜியின் இந்து சுயராஜ்யக் கோட்பாடு பழைமைப் பண்பை அடிப்படையாகக் கொண்டிருந்ததோ, அந்த அளவிற்கு அது மடிவதற்கான வித்துகளைத் தன்னகத்தே கொண்டிருந்தது' என சர் ஜாதுநாத் சர்க்கார் குறிப்பிடுவார். ஐந்தாவதாக, சிவாஜியின் தலைமையில் மகாராஷ்டிரம் முழுவதற்கும் அரசியல் சுதந்தரம் கிடைத்தபோதிலும் மக்களுக்குக் கல்வி புகட்டி அவர்களுடைய அறிவாற்றலையும் ஒழுக்கத்தையும் பேணி வளர்ப்பதற்கான நன்கு திட்டமிடப்பெற்ற முயற்சி எழவில்லை. எப்போதும்போலவே பாமர மக்கள் அறியாமையில் உழன்றனர். அவர்கள் தங்கள் இனத்தின் மேம்பாட்டில் சிறிதும் அக்கறை கொள்ளவில்லை. இத்தகைய அடிப்படைக் கோளாறு காரணமாக சிவாஜியின் மேதைமையினாலும் அவரது சலியாத உழைப்பினாலும் உருவாகிய மராத்தியப் பேரரசு அவர் மறைந்த பத்தாண்டுகளுக்குள் வீழ்ச்சியுற்றது.

## சாம்பாஜி, 1680--1689

சிவாஜி இறந்ததும் 1680ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் அவரது பத்து வயது கொண்ட இரண்டாவது மகன் இராசாராமிற்கு சோய்ராபாய் ரெய்காரில் முடிசூட்டி வைத்தார். ஆனால், பான்ஹலா கோட்டையில் அடைப்பட்டிருந்த சாம்பாஜி, அக் கோட்டைக் காவலனைக் கொன்று அதனைக் கைப்பற்றிக்கொண்டார். அதன் பின்னர், மராத்திய உயர் படைத் தலைவரான ஹம்பிர் ராவ் மொஹைட் என்பாரைத் தம் வசப்படுத்திக்கொண்டு ரெய்கார்மீது படையெடுத்துச் சென்றார். அதனைக் கைப்பற்றி இராசாராமையும் அவரது தாயாரான சோய்ராபாயையும் சிறையில் தள்ளினார். ஜூலை மாதம் 30ஆம் தேதி அரியணையேறினார். மாரோபந்த் பிங்லேயின் மைந்தரான நீலோபந்தை பீஷ்வாவாக நியமித்து, மற்ற ஆதரவாளர்களுக்கும் தகுந்த வெகுமதிகளை வழங்கினார். 1681ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 20ஆம் தேதி சடங்குடன் கூடிய முடிசூட்டு விழா நடைபெற்றது. ஆயின், தமது தீய நடத்தையால் அவர் பலரது வெறுப்பிற்கு உள்ளானார். அவரைக் கவிழ்க்க ஒரு சதியும் உருவாகியது. அதை அறிந்து தமது மாற்றாந்தாயாராகிய சோய்ராபாய் உள்படப் பல முக்கிய தலைவர்களைக் கொல்லுமாறு

ஆணையிட்டார். அதன் விளைவாகச் செல்வந்தர்களும் அதிகாரிகளும் அவரைப் பகைத்தனர். அவர்கள்மீது அவர் கடுமையான நடவடிக்கைகள் எடுக்கவேண்டியதாயிற்று. தமது தந்தையின் பற்றுறுதிகொண்ட ஊழியர்கள்மீது அவர் அவநம்பிக்கை கொண்டார். அதனால் கவி கலாஷ் என்பவரை பீஷ்வாவிற்கு மேலாக நியமித்தார். கவிகலாஷ் காஷ்மீரத்தைச் சார்ந்த பிராமணர். வடமொழியிலும் ஹிந்தியிலும் நல்ல தேர்ச்சிபெற்று சிறந்த கவியாகவும் சாம்பாஜியின் ஆலோசகராகவும் விளங்கினர். அவர் அன்னியர் என்ற காரணத்தால் மராத்தியப் பிரபுக்களும் அதிகாரிகளும் அவரைத் தீவிரமாக வெறுத்தனர். அவரை ஒற்றர் என்றும் தூற்றினர். கலூஷா (Kalusha) என்னும் நையாண்டிப் பெயரை நல்கினர். சாம்பாஜியைத் தீய வழிக்குக் கொண்டுசென்று அவரது அழிவிற்குக் காரணமானவர் என்றும் அநியாயமாக அவர்மீது பழி சுமத்தினர். இத்தகைய சூழ்நிலைகளினல் சாம்பாஜியின் ஆட்சிக் காலத்தில் பூசல்களும் புரட்சிக் கலகங்களும் மிகுந்திருந்தன. மராத்தியருடைய பெருமையும் குலைந்தது. ஆயின் சிவாஜியின் ஒப்பற்ற ஆட்சி அளித்த வேகத்தினல் மராத்திய அரசாங்கம் ஒருவாறு ஓடிக்கொண்டிருந்தது.

சாம்பாஜி, தமது நாட்டின்மீது தம் பிடியை உறுதியாக நிலை நாட்டுவதற்கு முன், அவுரங்கசீபின் நான்காவது மகனை இளவரசர் அக்பர் தக்கணத்திற்கு வருவதாகக் கேள்வியுற்றார். முகலாய இளவரசர் தம்மிடம் அடைக்கலம் புக வருவதாகவும், அவுரங்கசீபிடமிருந்து இந்துஸ்தானத்து அரியணையைக் கைப் பற்றுவதற்குத் தமது உதவியை நாடுவதாகவும் கேள்வியுற்றார். அவுரங்கசீபிற்கு எதிராக அக்பர் புரட்சி செய்ததைப்பற்றி சென்ற இயலிலேயே விளக்கியதால் அதனைத் திரும்ப இங்கே கூற வேண்டுவதில்லை. 1681ஆம் ஆண்டு மே மாதம் 10ஆம் தேதி நர்மதையைக் கடந்த அக்பர், மராத்திய மன்னரின் உதவியுடன் அவுரங்கசீபைப் பதவியிலிருந்து நீக்கத் தாம் தீர்மானித்ததுபற்றி சாம்பாஜிக்குச் செய்தி அனுப்பினர். மேலும், சாம்பாஜியின் கூட்டுறவை நாடுவதாகவும் அறிவித்தார். நாசிக், திரிம்பக் ஆகிய வற்றின் வழியாகக் காண்டேஷையும் பக்லானையும் கடந்த இளவரசர், கொங்கணத்தில் நுழைந்து 1681ஆம் ஆண்டு ஜூன் மாதம் 1'ஆம் தேதி ரெய்காருக்கு வடக்கே இருபத்தைந்து மைல் தூரத்திலிருந்த நெகோத்னவை (Negothna) அடைந்தார். அங்கே அவர் வசதியாகத் தங்குவதற்கான ஏற்பாடுகள் செய்யப்பெற்றன. வடஇந்தியாவில் பத்தாண்டுக் காலம் வாழ்ந்திருந்து பேரரசவையின் வாழ்க்கைபற்றி அறிந்திருந்த நேத்தாஜியை, இளவரசரைக் கவனித்துக் கொள்வதற்காக சாம்பாஜி நியமித்தார். நவம்பர் மாதம்

23ஆம் தேதி அவர் முகலாய இளவரசரைச் சந்தித்தார். ஆனால், அவர்களுக்கிடையே எவ்வித உடன்படிக்கையும் ஏற்படவில்லை. இளவரசருடைய உண்மையான நிலையை சாம்பாஜியால் திடமாக அறிந்துகொள்ள இயலவில்லை. இளவரசரின் விஜயம் அவுரங்கசீபின் சூழ்ச்சியாக இருக்குமோ என ஐயுற்றார். மேலும், தம் இயல்பு காரணமாகவும் தமது குடும்பத்தில் இருந்த தகராறுகள் காரண மாகவும் டில்லிக்கு எதிரான படையெடுப்பிற்கான பணமோ, காலமோ மராத்தியத் தலைவரிடம் இல்லை. ஓடிவந்த இளவரசரின் வசதிக்காக அவர் தம்மால் இயன்றதனைத்தையும் செய்தபோதிலும், பாலியில் ஆடம்பரமற்ற கூரைவேய்ந்த கட்டடத்தில் தங்கியிருந்த இளவரசர் அக்பர் மகிழ்ச்சியற்றிருந்தார். வட இந்தியாவில் முகலாய அரசர்கள் அனுபவித்த ஆடம்பர வாழ்க்கைபற்றி அறியாத சாம்பாஜி அளித்த எளிய உணவு முதலானவைகளாலும் அவர் மன நிறைவற்று இருந்தார். இத்தகைய சூழ்நிலையில் அக்பர் ஆறு ஆண்டுகளுக்கு மகாராஷ்டிரத்தில் தங்கியதால் பலன் ஒன்றும் ஏற்படவில்லை. அவுரங்கசீபை அரியணையிலிருந்து இறக்கு வதற்கான ஆடம்பரமான திட்டம் காகிதத் திட்டமாகவே நின்று விட்டது.

இதற்கிடையில், தமது மகனைப் பின்தொடர்ந்து தக்கணத்திற்கு வந்த அவுரங்கசீபு அவுரங்கபாத்தில் தங்கினார். அதன் அருகிலே தான் அவர் தமது வாழ்வில் 26 ஆண்டுகளைக் கழித்தார். கையூட்டு வழங்கியும், பரிசுப் பொருள்களை அளித்தும் சாம்பாஜி, அக்பர் ஆகியோருடைய ஆதரவாளர்களிடையே வேற்றுமை விதைகளைத் தூவி, அவர்களில் பலரைத் தம் பக்கம் இழுத்துக்கொண்டார். அவர் ஷஹாபுதீன்கானை அனுப்பி நாசிக்கிற்கு அருகில் அமைந்த முக்கிய மராத்தியக் கோட்டைகளைக் கைப்பற்றிக்கொள்ளுமாறு செய்து, அக்பர் வட இந்தியாவிற்குச் செல்லும் வழியை அடைத்து விட்டார். அதன் பிறகு, நாசிக்கிற்கு ஏழு மைல் வடக்கே அமைந்த ராம்சேஜ் கோட்டையை ஷஹாபுதீன்கான் முற்றுகை இட்டார். ஆனால், மராத்தியப் படை சரியான நேரத்தில் வந்து விட்டபடியால் அவர் முற்றுகையைக் கைவிடவேண்டியதாயிற்று. அவுரங்கசீபின் தலைமைப்பீடத்தின்மீது தாக்குதல் நடத்தலாம் என்றும், அல்லது குஜராத்தின் வழியாக விரைந்துசென்று இராஜ புதனத்தைக் கூட்டாகத் தாக்கலாம் என்றும் அக்பர் சாம்பாஜிக்கு யோசனை கூறினார். ஆனால், அத்தகைய துணிகரத் தாக்குதல் செய்ய சாம்பாஜியின் நிலை இடந்தரவில்லை. இங்ஙனம், இவ்விரு கூட்டாளிகளும் தயங்கியதால் பீஜப்பூர், கோல்கொண்டா ஆகிய வற்றின்மீது படையெடுத்துச் சென்று அவற்றைத் தமது பேரரசுடன் இணைத்துக்கொள்வதற்கான வாய்ப்பு அவுரங்கசீபிற்குக்

கிடைத்தது. 1686ஆம் ஆண்டில் பீஜப்பூர் வீழ்ச்சியுற்றது. கோல்கொண்டா 1687ஆம் ஆண்டில் கைப்பற்றப்பட்டது. அதன் பிறகு பேரரசர் மராத்தியர்மீது தமது முழு கவனத்தையும் செலுத்தினர். இப்போது சாம்பாஜியின் உதவியில் அக்பர் நம்பிக்கை இழந்தார். இங்ஙனம் மனமொடிந்த நிலையில் அக்பர், 1687ஆம் ஆண்டில் ராஜபூரிலிருந்த பிரிட்டிஷ் வணிகக் கப்பலில் ஏறிப் பயணமானர்; ஈரானுக்குச் சென்று அங்கே தஞ்சம் புகுந்தார்.

## ஜஞ்ஜீராவையும் சாலேயும் சாம்பாஜி தாக்குதல், 1681–83

தக்கணத்திற்கு அவுரங்கசீபு புறப்பட்டுவந்தபோது ஜஞ்ஜீராவின் சித்திகளுக்கெதிராகவும், சாலில் இருந்த போர்ச்சுகீசியர்களுக்கெதிராகவும் சாம்பாஜி படையெடுத்துச் சென்ருர். மராத்திய மன்னரைத் தாக்குமாறு அவுரங்கசீபு ஏற்கெனவே அவர்களைத் தூண்டியிருந்தார். 1681ஆம் ஆண்டு இறுதியில் சித்திகள் ரெய்கார் கோட்டையின் அடிவாரம்வரையில் மராத்தியப் பகுதிகளைக் கொள்ளேயிட்டனர். அதற்குப் பதிலாக ஜஞ்ஜீராவை சாம்பாஜி நில வழியாகவும் நீர் வழியாகவும் முற்றுகையிட்டார். அவர் சித்திகளுக்குப் பெருத்த சேதம் விளைவித்தார். ஆனல், அத் தருணத்தில் தான் அவுரங்கசீபு தக்கணத்தை அடைந்தார். அதனல் தமது முற்றுகையை சாம்பாஜி கைவிடவேண்டியதாயிற்று. போர்ச்சுகீசியருக்குச் சொந்தமான சாலேயும் கோவாவையும் அவர் 1683ஆம் ஆண்டில் தாக்கி அவைகளைப் பெரும் துன்பத்திற்குள்ளாக்கினர். மராத்தியர் போன்டாவில் போர்ச்சுகீசியரைத் தோற்கடித்து அதன் கோட்டையையும் கைப்பற்றினர். கோவாவும் சரணடையும் நிலையில் இருந்தது. ஆயின், தம் பின்னலிருந்து அச்சுறுத்திய ஷா ஆலத்தின் தலைமையிலிருந்த முகலாயர் படையினைச் சமாளிப்பதற்காக கோவா முற்றுகையை சாம்பாஜி கைவிட்டார் (1683ஆம் ஆண்டு நவம்பர் மாதம்).

## சாம்பாஜியின் தோல்வியும், சிறை வாழ்வும், 1689

1684ஆம் ஆண்டின் தொடக்கத்திலிருந்தே சாம்பாஜி தற்காப்புப் போரில் ஈடுபட்டார். அவரைச் சிறைப்பிடிப்பதற்காக அவுரங்கசீபு தமது படைகளை ஏவினர். வட கொங்கணத்தையும் பக்லானையும் வெல்லுதற்காக ஷஹாபுதீன் பிரோஸ்ஜங்கும், பிற்காலத்தில் நைஸாம் உல் முல்க் என்று அழைக்கப்பெற்ற சின் குலிக்கானும் சென்றனர். அதன் விளைவாக முகலாயருக்கும் மராத்தியருக்கும்

கொடூரமான போர் நிகழ்ந்தது. அவுரங்கபாத்திலிருந்து பர்ஹான்பூர் வரையிலிருந்த முகலாயப் பகுதிகளை மராத்தியர் அழித்தனர். ஆயின், பீஜப்பூரையும் கோல்கொண்டாவையும் இணைத்துக்கொண்டு மராத்தியர்மீது அவுரங்கசீப் தமது முழு கவனத்தையும் செலுத்தமுற்பட்டதனால், நிலைமை மாறியது. பீஜப்பூரின் முன்னாள் படைத்தலைவரான சார்ஸாகானை சத்தாரா மாவட்டத்தைத் தாக்குமாறு அவுரங்கசீபு பணித்தார். அப்போது நடைபெற்ற போரில் சாம்பாஜியின் உயர் படைத் தலைவரான ஹம்பிர்ராவ் மொஹைட் உயிரிழந்தார். அதன் பிறகு, முகலாயர்கள் வளைவு வடிவில் முன்னேறத் தொடங்கினர். சாம்பாஜியைப் பல ஆதரவாளர்கள் கைவிட்டனர். அவர் பான்ஹலாவிற்கும் ரெய்காருக்குமிடையே தங்க முற்பட்டார். சாம்பாஜிக்குப் பகைவராக இருந்த ஷிர்குகள் (Shirkes) முகலாயருடன் சேர்ந்துகொண்டு 1688ஆம் ஆண்டு நவம்பரில் கவி கலாஷை முறியடித்தனர். அவர் விஷால்கருக்குத் தப்பி ஓடினார். அதன் பிறகு, ஷிர்குகளைத் தோற்கடித்துவிட்டு விஷால்கரிலிருந்த கவி கலாஷுடன் சாம்பாஜி ஒன்றாக வாழத் தலைப்பட்டார். மராத்திய மன்னர் தங்கியிருந்த இடத்தினை ஷிர்குகள் அவுரங்கசீபின் பேராட்களிடம் வெளிப்படுத்தினர். சாம்பாஜியின் இருப்பிடத்தை அறிந்த முகலாயப் படைத்தலைவர்களில் ஒருவரான முக்காரப்கான் சங்கமேஸ்வரில் சாம்பாஜி தங்கியிருந்தபோது அவரைத் திடீரென்று தாக்கினார். சிறு சண்டைக்குப் பிறகு, சாம்பாஜியும் கவி கலாஷும் சிறைப்பட்டனர். அவர்கள் அவுரங்கசீபின் பாசறைக்குக் கொண்டுசெல்லப்பெற்றனர் (1689ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம்).

பகதூர்காரில் தங்கியிருந்த பேரரசரிடம் கைதான இருவரையும் கொண்டு சென்றனர். மணிகள் தொங்கும் முட்டாள்களின் நீண்ட குல்லாய்களுடன் கோமாளிகள்போன்று வேடமிட்டு மராத்திய மன்னரையும் கவி கலாஷையும் ஒட்டகங்களின்மேல் ஏற்றிப் பேரரசரின் பாசறைக்கு அழைத்துச் சென்றனர். அப்போது மேளங்கள் முழங்கின. தாரைகள் ஒலித்தன. கைதிகள் கிட்டே நெருங்கியதும் அரியணையின்மீதிருந்து இறங்கிவந்த அவுரங்கசீபு, தமக்குக் கிடைத்த வெற்றிக்காக எல்லாம்வல்ல இறைவனை மண்டியிட்டுத் தொழுதார். கைதிகளைப் பேரரசர் ஒருமுறை ஏறெடுத்துப் பார்த்ததும் அவர்களைச் சிறையிலடைத்தனர். அடுத்த நாளன்று, சாம்பாஜிக்கு அவுரங்கசீபு ஓலை ஒன்று அனுப்பினார். அதில் மராத்திய மன்னர் (1) அவரிடம் இருந்த கோட்டைகளையெல்லாம் தம்மிடம் ஒப்படைத்து, (2) மறைத்து வைத்திருந்த பொருள்களை வெளிக்கொணர்ந்து, (3) அவருடன் சேர்ந்திருந்த முகலாய அதிகாரிகளின் பெயர்களை வெளியிடுவதாக

இருந்தால் அவரைக் கொல்லாது விடுவதாக அறிவித்தார். இத்தகைய சலுகையை சாம்பாஜி வெறுப்புடன் மறுத்துவிட்டார். அவுரங்கசீபு தமக்கிழைத்த அவமானங்களைக் கண்டு மனம் நொந்த சாம்பாஜி, முகலாய மன்னரையும் நபிகள் நாயகத்தையும் பழித்துப் பேசினர். தம்முடன் நட்புறவு கொள்வதற்கு விலையாக அவுரங்க சீபின் புதல்வியருள் ஒருவரைத் தமக்கு மணமுடித்துவைக்க வேண்டுமென்று கோரினர். பேரரசரின் சலுகையை சாம்பாஜியிடம் தெரிவிக்கச் சென்ற ருஹுல்லாகான் மராத்திய மன்னர் அளித்த பதில் முழுவதையும் அவுரங்கசீபிடம் அறிவிக்கவில்லை. அது அற்பமானது என்பதைமட்டும் குறிப்பாக உணர்த்தினர். பெருந் தன்மையோ, மன்னித்தருளும் பண்போ சிறிதுமற்ற அவுரங்கசீபு, சாம்பாஜியையும் அவரது அமைச்சரான கவி கலாஷையும் சித்திரவதைசெய்து கொல்லுமாறு ஆணையிட்டார். அன்றிரவே அவரது ஆட்கள் சாம்பாஜியின் கண்களைப் பறித்தனர். அடுத்த நாள், கவி கலாஷின் நாவைத் துண்டித்தனர். இங்ஙனம் இரு வாரங்களுக்குச் சித்திரவதை ஒவ்வொரு நாளும் தொடர்ந்தது. அதன் பிறகு, கைதிகள் இருவரையும் கோரிகோனுக்குக் கொண்டு சென்று 1689ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 21ஆம் தேதி தாங்க முடியாத கொடுமைகளை இழைத்துக் கொன்றனர். அவர்களுடைய அங்கங்களைக் கண்டதுண்டங்களாக வெட்டி நாய்களுக்கிட்டனர். அவர்களுடைய தலைகளில் வைக்கோலைத் திணித்து தக்கணத்தின் முக்கிய நகரங்களில் பறைகளின் முழக்கத்தோடு காட்சிப் பொருள்களாக வைத்தனர்.

## சாம்பாஜியின் குறை இயல்பு

இங்ஙனம் ஒன்பது ஆண்டுகட்குச் சிறிது குறைவாக ஆட்சி புரிந்த இரண்டாவது மராத்திய மன்னர் அழிவுற்றார். தீரமிக்க போர் வீரரான சாம்பாஜி நல்ல ஆட்சியாளரோ, அரசியல் அறிஞரோ அல்லர். ஒழுங்கமைப்பதிலும் வாய்ப்புகளைப் பயன் படுத்திக்கொள்வதிலும் தமது தந்தையின் மேதைமையை அவர் பெற்றிருக்கவில்லை. பகைவரை வலு இழக்கச் செய்தல், பிறரிடம் உள்ள தகுதியை உணர்ந்து போற்றுதல், கூட்டாளிகளுடன் நன்கு பழகுதல்போன்ற பண்புகளும் அவரிடம் இல்லை. தமது தந்தையின் அமைச்சர்களோடும் அதிகாரிகளோடும் சண்டையிட்டார். அவரது கெட்ட நடத்தையினால் பகைவர்களின் எண்ணிக்கை பெருகியது. அதனால் தமது தந்தையின் ஆட்சிக்காலப் பெருமைக்குக் காரணமாக இருந்தவர்களையும் அவர் ஐயுற்றார். அவுரங்கசீபின் புதல்வரான அக்பர் தக்கணத்தில் வந்து தங்கியதை

சாம்பாஜி வகையாகப் பயன்படுத்திக்கொள்ளத் தவறினர். அவுரங்கசீபின்மீதோ அவரது தலைநகரத்தின்மீதோ கூட்டுத் தாக்குதல் நடத்த அவரால் முடியவில்லை. வீரமும், பகட்டும் கொண்டபோதிலும் அவர் இறுதியில் தோல்வியே கண்டார். ஆனால், அவர் மடிந்த விதமும், அவருக்கு இழைத்த சித்திர வதையான கொடுமைகளைத் தன்னடக்கத்துடன் தாங்கிக்கொண்ட தன்மையும், சாம்பாஜியின் செய்ததனாலும் செய்யாததனாலும் வந்த குற்றங்களுக்கு ஈடுசெய்தன. அவர் வாழ்ந்து செய்யமுடியாததைச் செத்து சாதித்தார். அவரைச் சிறையில் அடைத்துவைத்ததாலும், கொன்றதாலும் மராத்தியர் ஒன்றுபட்டனர். முகலாயப் பேரரசரை வெல்லுவதற்கு இறுதிவரை போராடுவது என்று உறுதிபூண்டனர்.

## இராசாராம், 1689-1700

சாம்பாஜியை முகலாயர் சிறைப்பிடித்துச் சென்றபோது சிவாஜியின் இரண்டாவது மகனும் பத்தொன்பது வயது நிரம்பிய வாலிபருமான இராசாராமை 1689ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 19ஆம் தேதி மராத்திய மன்னர் என அறிவித்தனர். சாம்பாஜியினல் அநியாயமாக அடைத்துவைக்கப்பெற்றிருந்த நிராஜி பிரஹலாதையும் பிற உயர் அதிகாரிகளையும் அவர் விடுதலை செய்தார். சுல்பிகார்கானின் முற்றுகைக்குட்பட்டிருந்த தமது தலைநகரைப் பாதுகாப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்தார். தற்காப்பிற்காக இராசாராமை விஷால்கருக்குச் சென்றுவிடுமாறு சாம்பாஜியின் விதவையான யேசுபாய் ஆலோசனை கூறினர். அவரே ரெய்கார் கோட்டையை தீரத்துடன் காக்க முற்பட்டார். அந்த மாதரசியால் ஊக்குவிக்கப்பெற்ற பிரஹலாத் நிராஜியும், சங்கர்ஜி மல்ஹரும் முகலாயருக்குச் சொந்தமான பகுதிகளைக் கொள்ளையிட்டுக் கொளுத்த முற்பட்டனர். பகைவருடைய இயக்கம்பற்றிய செய்தியை அறிந்துகொள்வதற்காக முகலாய தக்கணத்தில் பல பகுதிகளுக்கும் ஒற்றர்களை அனுப்பினர். ரெய்காரிலிருந்த சுல்பிகார்கானுக்கு உதவிப் படைகள் வருவதைத் தடை செய்யவும் முயன்றனர். ஆனால், மராத்திய அதிகாரிகளுள் ஒருவருடைய துரோகம் காரணமாக அவர்களது தலைநகரம் பகைவர் கையில் சிக்கியது. நீண்ட காலமாக நாட்டங்கொண்டிருந்த வை எனும் வாடனின் தேஷ்முக் பதவியை வழங்குவதாக ஆசை காட்டியதன்பேரில் துரோகியான சூர்யாஜிபிசால், 1689ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 13ஆம் தேதி கோட்டை வாயிலைத் திறந்து, சுல்பிகார்கானை உள்ளேவிட்டான். பல முக்கிய மராத்தியத் தலைவர்களுடன் யேசுபாயும் அவரது இளம் மைந்தரான ஷாஹுவும்

முகலாயர் கையில் பிடிபட்டனர். சுல்பிகார்கான் அவர்களை முகலாயப் பாசறைக்குக் கொண்டுசென்றார். அதன் பிறகு, அவுரங்கசீபு பல கோட்டைகளைக் கைப்பற்றினார். ஆனால், இப்போது மராத்திய சுதந்திரப் போரானது மக்களின் போராக மாறியதால் அவுரங்கசீப்பின் வெற்றி நிலைத்து நிற்கவில்லை.

தேசம் முழுவதற்கும் உரிய பேரழிவு ஏற்பட்டதால் மராத்தியர் எழுச்சியுற்றனர். தங்களது நாட்டையும் வீட்டையும் காப்பதற்குத் தங்களிடம் இருந்த சக்திகள் அனைத்தையும் ஒன்று திரட்டிப் போரிட ஆயத்தமாயினர். சிவாஜியைப்போன்று ஒழுங்கு அமைப்புத் திறம், அத்துணை அளவிற்குப் பெருகியிருந்த அவரது மைந்தரான இராசாராமின் தலைமையில் பல புகழ்மிக்க மராத்தியத் தலைவர்கள் ஒன்று திரண்டனர். அக் காலத்தில் வாழ்ந்தவர்களில் தலைசிறந்த அறிஞர் எனப் புகழ்பெற்ற பிரஹலாத் நிராஜியும் அவர்களில் ஒருவர். அவர் முகலாயப் படையெடுப்பை முறியடிக்கவேண்டுமென்பதற்காகக் கடுமையாக உழைத்தார். ராம் சந்திர நில்கநாத் என்பவர் இராசாராமின் மற்றொரு முக்கிய ஆலோசகராவார். தகுதியானவர்களைத் தேர்ந்தெடுத்து நாட்டுப் பாதுகாப்பிற்காக அவர்களை ஒன்று திரட்டும் தனித் திறமை கொண்டிருந்தார். விஷால்கரில் தங்கியிருந்த அவர் பர்ஹான்பூரிலிருந்து தெற்கே செஞ்சி வரையில் பரவிக்கிடந்த போர் நடக்கும் நிலப் பகுதியை விழிப்புடன் கண்காணித்து வந்தார். இவ்விரு தலைவர்களின்கீழ் பரஸ்ராம் திரிம்பக், சங்கர்ஜி நாராயண் சச்சிவா, சாந்தாஜி கோர்படே, தானாஜி ஜாதவ் ஆகிய தனித் திறமை கொண்ட துணைவர் நால்வர், வியக்கத்தகு விந்தைகளைச் செய்து அவுரங்கசீபின் திட்டங்களைத் தவிடுபொடியாக்கினர். சாம்பாஜி சிறைப்பட்டதாலும், தலைநகரமான ரெய்கார் வீழ்ச்சியுற்றதாலும் இழந்திருந்த மராத்திய சுதந்தரத்தை அவர்கள் மீட்டுத் தந்தனர்.

தமது குடும்பத்துடன் இராசாராம் செஞ்சிக்கு ஓடினார். வெகு விரைவில் அதுவே மராத்தியரின் தலைநகரமாக மாறியது. மகாராஷ்டிரத்தில் இருந்த முகலாயரைத் தாக்குவதற்கும், எல்லா வழிகளிலும் அவர்களைத் துன்புறுத்தவும், தங்களது நிலையை அவர்கள் உறுதி செய்துகொள்ளாதவாறு தடுப்பதற்கும் ஆர்வமும், வீரத் துணிபும் கொண்ட வீரர்களடங்கிய படைக் கும்பல்கள் பல செஞ்சியிலிருந்து அனுப்பப்பெற்றன. இதற்கிடையில் சுல்பிகார்கான் தலைமையில் வந்த அவுரங்கசீபின் ஆட்கள் செஞ்சியை முற்றுகையிட்டனர். அம் முற்றுகை எட்டு ஆண்டுகளுக்குத் தொடர்ந்தது. அதற்குள் இராசாராம் மகாராஷ்டிரத்திற்குத் தப்பிச் சென்றுவிட்டார். மராத்தியருக்கும் முகலாயருக்கும் இடையேயான போராட்டம் தொடர்ந்தது. சாந்தாஜி கோர்படேயும், தானாஜி ஜாதவும் பேரரசப்

படையினருக்குச் சொல்லொணுத் துன்பமளித்தனர். அவுரங்கசீபின் பாசறையையே பலமுறை தாக்கிக் கொள்ளையிட்டனர். இதன் விளைவாக மகாராஷ்டிரத்தை வென்று அடக்கச் சென்ற அவுரங்கசீபே மராத்தியரின் முற்றுகைக்கு உள்ளானுர். ஆயினும், பிடிவாதம் கொண்ட வயோதிகப் பேரரசர் தளராது போரிட்டுவந்தார். விட்டுக் கொடுத்து சமாதானம் செய்துகொள்ளும் எண்ணத்தை அறவே வெறுத்த அவர், அளவுக்குமீறிக் கடுமையாக உழைத்தார். ஆனுலும், இறுதியில் துயர்மிக்க தோல்வியே கண்டார்.

வழியிலிருந்த முகலாயப் படைகளை எல்லாம் ஏமாற்றிக் கடந்து, 1698ஆம் ஆண்டு மார்ச்சு மாத முதலில் இராசாராம் விஷால் கரை வந்தடைந்தார். சத்தாராவில் தமது அரசவையை அமைத்துக் கொண்டார். குறுகிய காலத்திலேயே அந் நகரை அவர் இழந்த போதிலும் 1704ஆம் ஆண்டிலேயே அதனை மராட்டியர் மீட்டனர். தமது நாட்டில் பயணம் செய்து பல கோட்டைகளில் இருந்த அதிகாரிகளை அவர் மகிழ்வித்துத் தூண்டினுர். காண்டேஷையும் பேராரையும் சூறையிடுவதற்காகப் படைகளை ஏவினுர். அப் பகுதி களில் 'சௌத்' வரி கொண்டார். 1699ஆம் ஆண்டில் சூரத்தைக் கொள்ளையிடப்போவதாகக் கூறிவிட்டு சிங்கருக்குச் சென்றுர். ஆயின், முகலாயப் படையொன்று அவரைத் திரும்புமாறு செய்தது. அச் சமயத்தில் மராத்தியரின் உணர்ச்சி மேலோங்கத் தலைப்பட்டது. முகலாயப் படையெடுப்பினைத் தடுத்து நிறுத்தி அவர்களைத் திருப்பித் தாக்க முடியும் என்ற மனவுறுதி மராத்தியரிடம் வளரத் தொடங்கியது. ஆனுல், குறுகிய காலத்திற்குள்ளாகவே இராசாராம் நோயுற்றுர். முகலாயர் சத்தாராவை முற்றுகையிட்டபோது இராசாராமைப் பல்லக்கில் வைத்து, சிங்கருக்குக் கொண்டு செல்லவேண்டியதாயிற்று. அங்கே 1700ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 12ஆம் தேதி அவர் இறைவனடி சேர்ந்தார். அப்போது அவருக்கு வயது முப்பது.

தந்தையிடம் இருந்த முனைப்பார்வம், படைத்திறம், பகட்டு ஆகியவை இராசாராமிடம் இல்லை. சிவாஜி இறக்கும்போது அவர் பத்து வயதுப் பாலகனுக இருந்ததாலும், அதன் பிறகு, சாம்பாஜி யால் சிறையில் வைக்கப்பெற்றிருந்தமையாலும் அவருக்கு முறையான கல்வி அளிக்கப்படவில்லை. எவ்வாறெனினும், சாம்பாஜி சிறைப்பட்டுக் கொல்லப்பெற்றதால் அவருக்கு அரியணை கிடைத்தது. அருந்திறன் வாய்ந்த ராம் சந்திர பந்த், பிரஹலாத் நிராஜி ஆகிய ஆலோசகர் இருவரையும், ஆற்றல் மறவராம் சாந்தாஜி, தானுஜி ஆகிய இரு வீரர்களையும் அவர் பெற்றிருந்தது நல்வாய்ப்பின் பயனே ஆகும். அவரது கொள்கையையும், திட்டங்களையும்

கொண்டு செலுத்துவதற்கு அவர்கள் பேருதவியாக இருந்தனர். அதனால்தான் மராத்திய நலன்களைப் பொறுத்தவரையில் இக்கட்டான நிலையினைக் கடந்த காலம் என இராசாராமின் ஆட்சிக்காலம் பெருமைகொள்ள முடிந்தது. எவ்வாறெனினும், அபின் உண்டு, சிற்றின்பத்தில் ஆழ்ந்த ஆற்றலற்ற அரசர் இராசாராம் என்பதை ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும். அமைச்சர்களையும் ஆதரவாளர்களையும் நம்பி அவர்களுடைய பணியில் தலையிடாது இருந்தது அவரது வெற்றிக்குச் சிறப்பியல்பாகும். அவரது வெற்றிக்கு இதுவே மூல காரணமாகும்.

## தாராபாயின் எழுச்சி, 1700–1707

இராசாராம் இறந்ததும் அவரது அரசியாரான தாராபாய் நடைமுறையில் அரசாங்கத்தின் தலைவரானார். அவர் நான்கு வயதே நிரம்பிய தமது மகன் ஷாஜிக்கு முடிசூட்டி அப் பாலகனுக்குக் காப்பாளராகத் திகழ்ந்தார். வீர உணர்வுகொண்ட அம் மாதரசி, இராசாராம் இறந்து ஒரு மாத காலத்திற்குள் முகலாயரிடம் வீழ்ச்சியுற்ற தலைநகரமான சத்தாராவிற்காகக் கண்ணீரையோ, காலத்தையோ வீணாக்கவில்லை. மாறாக, மராத்திய மக்களுக்கு உணர்வு ஊட்டி அவுரங்கசீபிற்கு வலிமை வாய்ந்த எதிர்ப்பினை உருவாக்கினார். வியக்கத்தக்க அளவிற்கு அமைப்பாண்மை பெற்றிருந்த தாராபாய் தமது மக்களிடம் தேசியப் பற்றை வளர்த்தார். அதனால் மராத்திய அவையினரின் இருபெரும் தளங்களாகத் திகழ்ந்த பான்ஹலாவையும் விஷால்கரையும் கைப்பற்றுமாறு அவுரங்கசீபு தமது படைகளை ஏவினார். ஆயின், மராத்தியர்கள் முகலாயப் பாசறையை அவ்வப்போது தாக்கி, கிடைத்த பொருள்களைக் கொள்ளையிட்டுவந்தனர். பல மராத்தியக் கோட்டைகளைப் பேரரசர் கைப்பற்றியபோதிலும், அவர் அவைகளை ஒவ்வொன்றாக இழந்தார். தாராபாயின் தலைமையில் மராத்தியர் மேன்மேலும் வலிமை பெற்றனர். அதனால் அவுரங்கசீபு தற்காப்புப் போரிலே ஈடுபட வேண்டிய கட்டாயமேற்பட்டது. வயோதிகப் பேரரசரின் இறுதி ஆட்சி ஆண்டில், மராத்திய வீரர்கள் மகாராஷ்டிரத்திற்கும் வெளியே சென்று தொலைவிலிருந்த மாளவத்தையும் குஜராத்தையும் தாக்க முற்பட்டனர். அவர்கள் பர்ஹான்பூர், சூரத், புரோச் ஆகியவற்றையும், மேற்குக் கரையில் அமைந்த வளமான நகரங்களையும் சூறையாடினர். தென் கர்நாடகத்தின்மீது தங்களது ஆதிக்கத்தினை ஏற்படுத்தினர். இத்தகைய இடர்ப்பாடுகளுக்கு இடையே 1707ஆம் ஆண்டு மார்ச்சு திங்கள் இரண்டாம் நாளன்று அவுரங்கசீபு இவ்வுலக வாழ்வை நீத்தார்.

மகாராஷ்டிரத்தின் அரசாங்கத்தைத் தமது மைந்தன் பேரால் தாராபாய் நன்கு நடத்தினர். ஆயின், ஷாஹு பட்டத்திற்கு வருவதை ஆதரித்த ராம் சந்திர பந்த், வீருப்புடைய அரசியாரை எதிர்த்தார். அதனுல் அவர் அரசவையின் ஆதரவை இழந்தார். ஆயின், பரஸ்ராம் திரிம்பக், தானுஜி ஜாதவ், சங்கர்ஜி நாராயண் ஆகியோர் தாராபாயை முற்றிலும் ஆதரித்தனர். அவர்களது துணை யுடன் தாராபாய் முகலாயருடன் தீவிரமாகப் போரிட்டு வெற்றி பெற்ருர். அவர் போர் நடவடிக்கைகளை நெறிப்படுத்தவும், தம் குடிமக்களை ஊக்குவிக்கவும் ஒரு கோட்டையிலிருந்து மற்ரொரு கோட்டைக்குச் சென்றவண்ணமிருந்தார். இம் மாதரசியின் தளர்வுருத ஆளுமை, மராத்திய சுதந்தரப் போரில் வெற்றி பெறப் பெருமளவில் காரணமாக இருந்தது.

## மூல நூல்கள்

(a) மராத்திய மொழி நூல்கள்

1. Krishnaji Anant Subhasah எழுதி, K. N. Sane தொகுத்தளித்த 'Shiva Chhatrapati-Chen Charitra'.
2. V. S. Wakaskar தொகுத்தளித்த 'Ninety–one Qalmi Bakhar'.
3. 'Shiva-Kalin Patra-Sar Sangraha', 3 Vols. (Poona).
4. 'The Jedha Shakavali'.

(*b*) பாரசீக மொழி நூல்கள்

1. Mirza Muhammad Kazim எழுதிய 'Alamgirnama'.
2. Khafi Khan எழுதிய 'Muntakhab–ul–Lubah'.
3. Bhim Sain Burhanpuri எழுதிய 'Nuskha-i-Dilkusha'.
4. Muhammad Zahur எழுதிய 'Muhammad Nama' (முகம்மது அலிஷாவின் வரலாறு).
5. Sayyid Nurullah எழுதிய 'Tarih–i–Ali Adil Shah II'.

6. ‘Khatut–i–Shivaji’ (கைப்பிரதி) R.A.S.
7. ‘Parasnis’ (கைப்பிரதி).

(c) ஐரோப்பிய மொழி நூல்கள்

1. ‘Records of Fort St. George: Diary and Consultation Book for 1672–78 and 1678–79’. சென்னையில் அச்சானது.
2. ‘Factory Records of Rajapur, Surat, Bombay, Fort St. George, Madras, etc.’ (கைப்பிரதி).
3. Yule தொகுத்தளித்த ‘Diary of W. Hedges’.
4. B. C. Paranjpe தொகுத்தளித்த ‘English Records on Shivaji (1659–1682)’.
5. லண்டன் நகரில் அமைந்த ‘இந்திய அலுவலகத்தில்’ வைக்கப்பெற்றிருக்கும் ‘Dutch Factory Records’. இவற்றில் பல ஆங்கில மொழிபெயர்ப்புகளாகக் கிடைக்கின்றன.
6. Manucci எழுதிய ‘Storia do Mogor’, W. Irwin மொழிபெயர்த்தது.
7. ‘Travels of Bernier’, Constable தொகுத்தது.
8. Ball தொகுத்தளித்த ‘Travels of Tanervier’, 2 Vols.
9. W. Crooks தொகுத்தளித்த ‘J. Fyer's New Account of East India’, 3 Vols.

## தற்கால நூல்கள்

1. Grant Duff எழுதிய ‘History of Marathas’, 3 தொகுதிகள்.
2. S. N. Sen எழுதிய ‘Shiva Chhatrapati’.
3. Sir Jadunath Sarkar எழுதிய ‘Shivaji and his times’.

4. Sir Jadunath Sarkar எழுதிய 'The House of Shivaji'.

5. Kincaid and Parasnis எழுதிய 'History of the Marathas', 3 தொகுதிகள்.

6. G. S. Sardesai எழுதிய 'The New History of the Marathas', 3 தொகுதிகள்.

7. Balkrishna எழுதிய 'Shivaji the Great'.

8. C. V. Vaidya எழுதிய 'Shivaji, the Founder of Hindu Swaraj'.

# 10. பிற்கால முகலாயர்

## பகதூர் ஷா, 1707-1712

அறுபத்து மூன்று வயதிற்கும் மேற்பட்ட முஅஸாம் (ஷா ஆலம்) (Muazzam) என்ற அவுரங்கசீபின் இரண்டாவது மகனே அவுரங்கசீபை அடுத்து அரசரானுர். அவர் லாகூருக்கு வடக்கே இருபத்தைந்து கல் தொலேவிலுள்ள ஷாதாலா பாலத்தின்மீது 1707ஆம் ஆண்டு மே திங்களில் பகதூர்ஷா எனும் விருதுப் பெயரோடு பேரரசராக முடிசூட்டிக்கொண்டார். ஆப்கானிஸ் தானத்தில் ஜாம்ருத் என்னுமிடத்தில் இருந்தபோதுதான் தமது தந்தை மறைந்த செய்தியை அவர் அறிந்தார். மார்ச் மாதம் இருபத்திரண்டாம் தேதியன்று அத் துயரச் செய்தியை அறிந்ததும் அரசுரிமைப் போட்டியில் கலந்துகொள்வதற்காக டில்லியை நோக்கி விரைந்தார். அவரது துணேவரான முனிம் கான் அவருக்குப் பேருதவியாக இருந்தார். தக்கணத்திற்குச் செல்லும் வழியில் இருந்த கோராவில் தங்கியிருந்த அஸீம் உஸ்ஷான் என்னும் அவரது இரண்டாவது மகன், ஆக்ராவை நோக்கி முன்னேறி, அந் நகரத்தைக் கைப்பற்றியதோடு தமது தந்தைக்காக அங்கிருந்த கோட்டையையும் முற்றுகையிட்டான். ஜூன் மாதம் பன்னிரண்டாம் தேதி பகதூர்ஷாவே ஆக்ராவிற்கு நேரில் வந்திறங்கினுர். ஆக்ரா கோட்டையையும் அங்கிருந்ததாக மதிப்பிடப்பெற்ற இருபத்து நான்கு கோடி ரூபாய்களேயும் கைப்பற்றினுர். அவுரங்கசீபு இறந்த போது அவர்தம் மற்றெருரு புதல்வரும், பகதூர்ஷாவின் இளவலுமான ஆஸம் ஷா என்பவர், ஆமதுநகருக்கு அருகில் ஜூன் மாதம் பதினுன்காம் தேதியன்று முடிசூட்டிக்கொண்டார். அவர் அவ்விடத்தில் சில நாட்கள் தங்கியபின் ஆக்ராவை நோக்கி முன்னேறினுர். ஆனுல், அவர் தமது மகனுன பீடார் பக்தை (Bidar Bakht) ஆக்ராவைத் தாக்க அனுமதிக்கவில்லே. அவர் மட்டும் அனுமதியளித்திருந்தால் அஸீம் உஸ்ஷான் ஆக்ராவை

அடைவதற்கு முன்பே கோட்டையும் கோடிக்கணக்கான ரூபாய்களும் பீடார் பக்த்வசம் வந்திருக்கக்கூடும். ஆனால், திறமையோ, பண்பாட்டு உறுதியோ அற்ற ஆஸாம் தமது மகன் மீதே அவநம்பிக்கையும் பொருமையும் கொண்டிருந்தார். அதனால் பொன்னான நாட்கள் பலவற்றைப் பாழ்படுத்தினார். அவர் ஆக்ராவின் அருகில் வந்தபோது, ஏற்கெனவே அத் தலைநகரம் பகதூர்ஷாவின் பிடியிலிருந்ததைக் கண்டார். பேரரசினைப் பகிர்ந்துகொள்ளலாம் என்ற பகதூர் ஷாவின் யோசனையையும் ஆராயாது புறக்கணித்துவிட்டு, அவருடன் போரிடத் துணிந்தார். 1707ஆம் ஆண்டு ஜூன் மாதம் 18ஆம் தேதி சமோகாருக்கு அருகில் ஜாஜாவ் (Jajau) என்னுமிடத்தில் நடந்த போரில் தோல்வியுற்று மடிந்தார்.

பகதூர் ஷா, டில்லி அரியணையில் நிலையாக அமர்வதற்கு முன்னால், கடைசித் தம்பியும் பீஜப்பூரின் அரசப்பகர ஆளுமான காம்பக்ஷ் என்பவரை ஒடுக்கவேண்டியது அவசியமாகியது. தமது தந்தையின் மரணச் செய்தியைக் கேள்வியுற்றதும், கர்வங்கொண்ட அறிவிலியான காம்பக்ஷ், அரசராக முடிசூட்டிக்கொண்டு இந்துஸ்தானப் பேரரசிற்குப் போட்டியிட்டார். அதனால், பகதூர் ஷா, 1708ஆம் ஆண்டு மே மாதம் 17ஆம் தேதி நர்மதையாற்றைக் கடந்துசென்று தங்களுக்கிடையேயுள்ள தகராறுகளை அமைதியாகத் தீர்த்துக்கொள்ளலாம் என காம்பக்ஷிடம் யோசனை கூறினார். ஆனால், காம்பக்ஷோ அந்த யோசனையை மறுத்துவிட்டு, 1709ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 13ஆம் தேதி ஐதராபாத்திற்கருகில் பகதூர் ஷாவுடன் போரிட்டார். அப் போரில் செம்மையாக அடிபட்டு அன்றிரவே மரணமடைந்தார். இங்ஙனம் எதிர்ப்பவர் யாருமற்ற பேரரசராக பகதூர் ஷா திகழ்ந்தார்.

ஆஸமை வென்ற பிறகு பகதூர் ஷா, ராஜபுதனத்தின்மீது படையெடுத்துச் செல்லவேண்டிய கட்டாயமேற்பட்டது. அங்கே ஜோதிபுரியில் வாழ்ந்த அஜித்சிங், தம்மை உரிமை பெற்ற அரசராக அறிவித்ததோடு முகலாயருக்குச் சொந்தமான ஆஜ்மீர் பகுதியைத் தாக்கிக் கொள்ளையிட்டார். 1708ஆம் ஆண்டு ஜனவரியில் பேரரசர் ஆம்பரை அடைந்து, அங்கே எழுந்த அரசுரிமைப் போட்டியைத் தீர்த்துவைத்து, பிஜய்சிங் என்பவரை கச்வஹாவின் (Kachhwaha) ஆட்சியாளராக நியமித்தார். அடுத்தபடியாக, ஜோதிபுரிக்குச் சென்று, மெர்டாவில் தோல்வியுற்ற அஜித்சிங்கை மன்னித்து, அவருக்கு மகாராஜா என்னும் பட்டப் பெயருடன் 3,500 மதிப்புள்ள பதவியையும் நல்கினார். அதன் பின்னர், காம்பக்ஷுடன் போரிடுவதற்காகத் தக்கணத்தின் வழியிலுள்ள ஆஜ்மீருக்குத்

திரும்பினர். அவர் தக்கணத்தை நோக்கி முன்னேறிக் கொண்டிருந்த சமயத்தில் அஜித்சிங், துர்கதாஸ், ராஜா ஜெய்சிங் கச்வஹா ஆகிய ராஜபுத்திரத் தலைவர்கள், 1708ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 30ஆம் தேதியன்று பகதூர்ஷாவின் பாசறையிலிருந்து தப்பியோடி மேவாரின் மகாராஜா அமர்சிங்குடன் சேர்ந்து கொண்டனர். முகலாயரைக் கூட்டாக எதிர்ப்பது என்றும், ஜோதிபுரியிலிருந்த முகலாயப் படைத்தலைவரை வெளியேற்றுவது என்றும் உறுதி பூண்டு, முறையான உடன்படிக்கையொன்றும் அவர்கட்குள் நிறைவேறியது. அவர்கள் ஹிண்டான், பயானு ஆகிய வற்றின் ஃபாஜ்தாரை (Faujdar) முறியடித்தனர். ராஜா ஜெய்சிங் கச்வஹா ஆம்பரைக் கைப்பற்றினர். ராஜபுத்திரத் தலைவர்கள் 1708ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில் மேவாரில் இருந்த முகலாயப் படைத்தலைவரான சையத் உசெய்ன் கான் பராவையும் தாக்கிக் கொன்றனர். அதனுல் 1710ஆம் ஆண்டு மே மாதத்தில் பகதூர் ஷா ராஜபுதனத்திற்குத் திரும்பவேண்டியதாயிற்று. அதற்கு மேலும், ஆற்றலின்மையாலும், பஞ்சாபில் எழுந்த சீக்கியர் கிளர்ச்சியினுலும் ராஜபுத்திரத் தலைவர்களுடன் சமாதானம் செய்துகொண்டார். அவர்களை மன்னித்துப் 'பரிசுகள் வழங்கி', அவரவர் நாட்டிற்குத் திருப்பி அனுப்பினர். அது 1710ஆம் ஆண்டு ஜூன் மாதம் 21ஆம் தேதி நடைபெற்ற நிகழ்ச்சியாகும்.

மார்வாரின் ராஜபுத்திரர்களைப்போலவே பஞ்சாபில் வாழ்ந்த சீக்கியரும் அவுரங்கசீபின் மரணத்தைப் பயன்படுத்திக்கொண்டு, புரட்சிக் கலகம் செய்தனர். 1708ஆம் ஆண்டு நவம்பர் மாதத்தில் குரு கோவிந்த் சிங் இறந்ததும், தக்கணத்தில் வாழ்ந்துவந்த அவரது ஆதரவாளர்கள் அவரைப்போலவே இருந்த ஒருவரைத் தேடிப்பிடித்து பஞ்சாபிற்கு அனுப்பினர். முஸ்லீம்களிடமிருந்து சீக்கியருக்கு விடுதலை அளிப்பதற்காக குரு கோவிந்த் சிங்கே உயிருடன் திரும்பிவந்துள்ளார் எனவும் அறிவித்தனர். பண்டா (Banda) என்று அழைக்கப்பெற்ற அந்த மனிதர் திடீரென்று டில்லிக்கு வடமேற்கிலுள்ள பகுதியில் தோன்றி 'சாச்சா பாதிஷா' என்ற பட்டப் பெயரைச் சூட்டிக்கொண்டார். முகலாயருக்கு எதிரான புனிதப் போருக்காகத் தம்முடன் சேருமாறு சீக்கியரை அழைத்தார். சோனிபட்டின் ஃபாஜ்தாரை முறியடித்து அம்பாலா விற்குக் கிழக்கே இருபத்தாறு கல் தொலைவிலுள்ள சதௌரா (Sadhaura) நகரத்தைக் கைப்பற்றினர். 1710ஆம் ஆண்டு மே மாதம் 22ஆம் தேதியன்று சர்ஹிண்டின் ஃபாஜ்தாரான வாஸிர்கானை முறியடித்துக் கொன்றுர். சர்ஹிண்ட் நகரைக் கைப்பற்றி நான்கு நாட்களுக்கு அதனைச் சூறையாடினர். அங்கிருந்த முஸ்லீம் மக்களைக் கொன்று குவித்து, மசூதிகளை அழித்தார். இத்தகைய

தாக்குதல்களின் விளைவாக ரொக்கமாக இரண்டு கோடி ரூபாய்கள் உள்படப் பெரும்பொருள் அவருக்குக் கிடைத்தது. அதனோடு அவரது படைக்கலந் தாங்கிய ஆதரவாளர்களின் எண்ணிக்கை 40,000-க்கும் மேலாகப் பெருகியது. சர்ஹிண்டை அவர் தமது தலைநகரமாக்கிக் கொண்டார். அங்கிருந்துகொண்டு பஞ்சாபிலும், தற்கால உத்தரப் பிரதேசத்திலுமுள்ள முகலாயப் பகுதிகளைத் தாக்கிக் கொள்ளையிட்டு வந்தார். சில சீக்கியர்கள் அமிர்தசரசில் கூடி லாகூரைத் தாக்கினர். ஆனால், அவர்கள் தோல்வியுற்றனர் எனினும், அவர்கள் டில்லிக்கும் லாகூருக்குமிடையே இருந்த பகுதியில் தங்களது ஆதிக்கத்தை ஏற்படுத்திக்கொண்டு அவ்விரு நகரங்களுக்குமிடையே அமைதியான போக்குவரவு இல்லாமற் செய்தனர்.

சீக்கியரைத் தண்டிப்பதற்காக, ராஜபுத்திரருடன் சமாதானம் செய்துகொண்ட பகதூர் ஷா, 1710ஆம் ஆண்டு ஜூன் மாதம் 17ஆம் தேதியன்று ஆஜ்மீரிலிருந்து புறப்பட்டு டிசம்பர் மாதம் முதல் வாரத்தில் சதௌராவை அடைந்தார். ஆனால், பண்டாவோ வெனின், பகதூர் ஷாவின் வருகைக்கு முன்பே சதௌராவைவிட்டு வெளியேறி, அந் நகரின் வடகிழக்கில் பன்னிரண்டு மைல் தூரத்தி லிருந்த முக்லிஸ்பூரில் இருந்த லோகார் என்னும் கோட்டையைத் தமது தலைமைப்பீடமாகச் செய்துகொண்டார். அங்கே அரசரைப் போலவே அதிகாரம் செலுத்தினர். நாணயங்களைத் தமது பெயரிலேயே வெளியிட்டார். லோகாரைப் பேரரசர் முற்றுகையிட்ட போதிலும், சீக்கியர்கள் விடாப்பிடியுடன் போரிட்டு வீரார்ந்த மன உரத்துடன் கோட்டையைக் காத்து நின்றனர். பெரும்பான்மையில், அதிகமான மழை, கடுங்குளிர், பொருள்களின் பற்றுக்குறை ஆகியவை காரணமாகவே பேரரசுப் படை அவதியுற்றது. இறுதி யில் லோகார் அவர்கள் கையில் சிக்கியது. ஆயினும், அக் கோட்டை வீழ்வதற்குமுன்பே பண்டா தப்பிவிட்டார். ஏராளமான போர்க்கைதிகளையும் இரண்டு கோடி ரூபாய் உள்ளிட்ட பெரும் கொள்ளைப் பொருளையும் முகலாயர் கொண்டுசென்றனர்.

1711ஆம் ஆண்டு ஜனவரியில் சர்ஹிண்டை முகலாயர் மீண்டும் கைப்பற்றினர். ஆயினும், பேரரசுப் பகுதிகளை சீக்கியர் தொடர்ந்து தாக்கி வந்தனர். அவர்கள் குன்றுகளில் இருந்து இறங்கிவந்து வட பஞ்சாபில் புதிதாகக் கிளர்ச்சிகள் செய்தனர். முக்கியமாக பாரி, ரெச்னு இடை நிலங்களின் அமைதியைக் குலைத்து, அவற்றினை அடியோடு அழித்தனர். முகமது அமீன் கானும், ருஸ்தம் கானும் பண்டாவைத் தோற்கடித்து, பஸ்ரூருக்கருகே ஜம்மு மலைப் பகுதி களில் ஓடி ஒளியுமாறு செய்தனர். ஆயினும், 1712ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 27ஆம் தேதியன்று பகதூர் ஷா இறந்ததால் பண்டா

வின்மீது மேற்கொண்டு எந்தவித நடவடிக்கையும் எடுக்கவில்லை. சதௌராவையும் லோகாரையும் மீட்டுக்கொண்ட அக் குரு, தமது அழிவு வேலைகளை முன்போலவே தொடர்ந்து செய்தார்.

பகதூர் ஷா, தமது அறுபத்தொன்பதாவது வயதில் இறந்தார். டில்லிக்கு வெளியே இருந்த குத்புதீன் காகி (Qutub-ud-din Kaki) யின் கல்லறைக்கு அருகே இருந்த அவுரங்கசீபின் மசூதியின் முற்றத்தில் பகதூர் ஷாவின் உடலை அடக்கம் செய்தனர். மென்மைத் தன்மையும், பெருந்தன்மையும் கொண்டிருந்த பகதூர் ஷாவானவர் கௌரவமான நடத்தையுடையவர் என்றபோதிலும், வலிமையற்ற வேந்தராகவே வாழ்ந்தார். யாருக்கும் 'இல்லை' யென்று கூறும் துணிபு அவரிடம் இல்லை. காரியங்களை அவைகள் செல்லும் போக்கிலேயே விட்டுவிடும் கொள்கை கொண்டவராக இருந்த அவர், தமது அரசவையில் யாருக்காவது வருத்தம் வந்துவிடுமோ என்பதற்காக முடிவெடுப்பதைத் தள்ளிப்போட்டு வந்தார். அரசியல், ஆட்சித்துறை சார்ந்த முக்கியச் செய்திகளிலும் சமரச இணக்கம் செய்துகொள்வதில் விருப்பம் கொண்டிருந்தார். மிகுந்த பற்றுறுதி யும், திறமையும்கொண்ட துணைவரான முனிம்கானை முதலமைச்சராக நியமிப்பதாக அவர் வாக்குறுதி அளித்திருந்தார். ஆனால், அவரது தந்தையின் பிரதம அமைச்சராகவிருந்த ஆசாத்கான் என்பவர் அப் பதவிக்கு உரிமை கொண்டாடினர். அந் நிலையில் இருவரையும் திருப்தி செய்ய எண்ணிய பகதூர் ஷா, முனிம்கானை வஸிர் (wazir) அல்லது நிதி அமைச்சராக நியமித்து, அதே சமயத்தில் முதலமைச்சர் பதவியை ஆசாத்கானிடமே விட்டு வைத்தார். இத்தகைய அதிகாரப் பிரிவினையினால் ஆட்சியியல் சார்ந்த சிக்கல்கள் தோன்றியதோடு மேலே குறித்த இரு செல்வந்தர் களுக்கும் மன நிறைவும் ஏற்படவில்லை. பட்டங்களையும் பரிசு களையும் பகதூர் ஷா வாரி வழங்கினர். அரசாங்கத்தின்மீது அவரது பிடி தளர்ந்திருந்தது. அதனால், அவரை (ஷா–பி-கபார்) தேவை யில்லாத அரசர் என அழைத்தனர். தமது தந்தையைப்போலவே அவரும் சமய ஒறுப்புக் கொள்கையைக் கடைப்பிடித்தார். ஜெசியா வரியை விதித்தார்; உயர் பதவியில் இந்துக்களை நியமிக்க மறுத்தார். நல்ல காலமாக மன்னரிடம் மரபாக வந்த மரியாதை காரணமாக ஆட்சியானது ஓரளவு வெற்றிகரமாக நடைபெற்றது. தமது தந்தையின் காலத்தில் பணிபுரிந்த அனுபவமிக்க அதிகாரிகளை அவரவர் வகித்த பதவிகளில் தொடர்ந்து இருக்குமாறு செய்து, அவர்களின் வேலையில் தலையிடாது இருக்கும் நல்லறிவு அவரிடம் இருந்தது. எனவே, மொத்தத்தில் அவரது குறுகிய கால ஆட்சி வெற்றியானதே எனலாம்.

## ஜகந்தர் ஷா, 1712-1713

பகதூர் ஷா இறந்ததும் அவருடைய புதல்வர்களான ஜகந்தர் ஷா, அஸிம் உஸ்ஷான், ராஃபி உஷான், ஜாஹன் ஷா ஆகியோரிடையே மூன்று அரசுரிமைப் போர்கள் நிகழ்ந்தன. அவர்களனைவரும் லாகூரிலேயே தங்கியிருந்தனர். முதலமைச்சரான ஆசாத்கானின் மகனான சுல்ஃபிகார் கான் என்பவன் அஸிம் உஷானுக்கு எதிராகச் சூழ்ச்சி செய்தான். அஸிமிற்கு எதிராக அவருடைய சகோதரர்களையே ஒன்றிணைந்து எதிர்க்குமாறு செய்தான். அவர்கள் அஸிம் உஷானைத் தோற்கடித்துக் கொன்றனர். அவரது பெருநிதியும், விலைமதிப்பில்லாப் பிற பொருள்களும் வெற்றி கொண்டவர் கையில் சிக்கின. அடுத்தபடியாக, மூன்று சகோதரர்களும் தங்களுக்குள்ளேயே சண்டையிட்டுக்கொண்டனர். சுல்ஃபிகார்கானின் உதவியைப் பெற்ற மூத்த சகோதரரான ஜகந்தர் ஷா ராஃபி உஷானையும் ஜாஹன்ஷாவையும் தீர்த்துக்கட்டினார். அவர்கள் இருவரும் போரிட்டு மடிந்தனர். ஐம்பத்தோரு வயதை எட்டிய ஜகந்தர் ஷாவே 1712ஆம் ஆண்டு மார்ச் மாதம் இருபத்தொன்பதாம் நாளில் பேரரசராக முடிசூட்டிக்கொண்டார். சுல்ஃபிகார் கானைத் தமது முதலமைச்சராகவும் நியமித்தார்.

1712ஆம் ஆண்டு ஜூன் மாதம் 22ஆம் தேதி புதிய பேரரசர் டில்லியை அடைந்தார். அங்கே அரசாங்கச் செயல்களையெல்லாம் புறக்கணித்துவிட்டு சிற்றின்பங்களில் மூழ்கினார். அரசு எய்திய போது அவர் ஐம்பது வயதைக் கடந்து, பிள்ளைகளையும் பேரப் பிள்ளைகளையும் பெற்றிருந்தபோதிலும் லால் குமாரி என்னும் கணிகையுடன் காலத்தைக் கழித்தார். அவளைத் தமது அரசிகளுக்கும் மேலாக உயர்த்தி ஆண்டொன்றிற்கு இரண்டு கோடி ரூபாய் செலவுப் பணமாக அவளுக்கு அளித்தார். அதைத் தவிர, ஆடை அணிகலன்களையும் அவளுக்கு அளித்து வந்தார். அவளுடைய உறவினர்கள் பேரரசில் பெரும் பதவிகளைப் பெற்றனர். பகல் வேளைகளைக் கேளிக்கூத்துகளில் செலவிட்ட ஜகந்தர் ஷா, இரவு நேரத்தில் குடித்துவிட்டுக் கும்மாளமடித்தார். உயர்குடிப் பிறந்த செல்வந்தர்களை அவமதித்து நடக்கவும், அரசாங்க காரியங்களை மோசமாக நடத்தவும், இழிமக்களை முக்கியமாக லால் குமாரியின் சுற்றத்தாரை அனுமதித்தார். வஸீரான சுல்ஃபிகார் கானின் ஆட்சிப் பொறுப்புகளை யெல்லாம், பேரரசரின் உடன் பிறவாச் சகோதரனும் அமீர் உல் அம்ரா எனும் பட்டம் பெற்றவனுமான அலி முராத் பறித்துக்கொண்டான். இங்ஙனம் ஜகந்தர் ஷாவின் பத்து மாதக் குறுகிய கால ஆட்சியில் அரசாங்கம் முழுவதிலும் மிகுந்த குழப்பம் தோன்றியது.

அஸிம் உஷானின் இரண்டாவது மகனுன பரூக்ஷியார் என்பவன் ஜகந்தர் ஷாவின் ஆட்சியுரிமைக்கு எதிராகக் கிளம்பினுன். தனது தந்தையின் காலத்தில் வங்காளத்தின் அரசப் பகர ஆளாக இருந்த பரூக்ஷியார், தந்தை இறந்ததும் 1712ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் பேரரசராக முடிசூடிக்கொண்டான். பாட்னுவின் துணை கவர்னரான சையது உசேன் அலிகானின் உதவியும், அவரது தமையனுரும், அலகாபாத்தின் துணை ஆளுநருமான அப்துல்லா கானின் உதவியும் புதிய பேரரசருக்குக் கிடைத்தன. சையது சகோதரர் எனப் பெயர்பெற்ற அச் சகோதரர்கள், பிற்காலத்தில் இத்திய வரலாற்றில் 'மன்னரைப் படைப்போர்' எனப் புகழ் பெற்றனர். 1712ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் 18ஆம் தேதி 25,000 வீரரின் தலைவராக கஜுஹாவை நோக்கி பரூக்ஷியார் புறப்பட்டுச் சென்ருர். அங்கே அவருடன் போரிடுவதற்காக ஜகந்தர் ஷா தமது மகனுகிய அஸ்உதீனை அனுப்பி வைத்தார். ஆனுல், அஸ் உதீன் தோற்று ஆக்ராவிற்குப் பின்வாங்கினுன். அப்போது தனது செல்வங்களையும், பாசறையையும் பரூக்ஷியாரின் பிடியில் சிக்குமாறு விட்டான். தமது மகன் தோல்வியுற்றதனுல் ஜகந்தர் ஷாவே படையுடன் ஆக்ராவிற்கு வரவேண்டியதாயிற்று. அவரது அரசாங்கத்தில் மிகுந்த குழப்பம் ஏற்பட்டது. பாபர் காலத்திலிருந்து யார் கையும் படாதிருந்த பண்டசாலைகளில் இருந்த பொருள்களையும், பணத்தையும் எடுத்துத்தான் தமது படை வீரர்களை ஜகந்தர் ஷா சமாதானப்படுத்த முடிந்தது. 1712ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 29ஆம் தேதியன்று அவர் ஆக்ராவை அடைந்தார். 1713ஆம் ஆண்டு ஜனவரி மாதம் பத்தாம் தேதியன்று பரூக்ஷியாரிடம் படுதோல்வி அடைந்தார். தமது தாடியையும், மீசையையும் மழித்து, ஓர் ஏழை கிராமத்தான்போல வேடம் புனைந்துகொண்டு மாட்டு வண்டியில் லால் குமாரியுடன் டில்லிக்கு ஓடினுர். வழியில் பல கொடுந் துன்பங்களுக்கு உள்ளாகி, இரவோடு இரவாக டில்லி நகருக்குள் கள்ளத்தனமாகப் புகுந்தார். நேராக ஆசாத்கானிடம் சென்று அவரது பாதுகாப்பை நாடினுர். சூழ்ச்சி மிகுந்த வயோதிக அமைச்சரும் பரூக்ஷியாரிடம் ஒப்படைப்பதற்காக முன்னுள் பேரரசனைச்சிறைப்பிடித்தார். அதன் மூலமாகத் தம்மையும், தமது மகனுகிய சுல்ஃபிகார் கானையும் பரூக்ஷியாரின் வஞ்சினத்தினின்றும் காத்துக்கொண்டார். 1713ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 11ஆம் தேதியன்று அதாவது புதிய பேரரசர் டில்லியில் புகுவதற்கு ஒரு நாளைக்கு முன்னதாகவே பரூக்ஷியாரின் ஆணைப்படி ஜகந்தர் ஷா கொலையுண்டார்.

பேரரசின் அரசாங்க அலுவல்களை ஏற்று நடத்தும் தகுதி சிறிதும் அற்ற முதல் முகலாய மன்னர் ஜகந்தர் ஷா எனக் கூறலாம்.

அவர் தமது இளமைக் காலத்தில் ஓரளவு செயலார்வமிக்க வீரராகத் திகழ்ந்தார். எனினும், ஆடவராக வளர்ந்துவிட்ட பிறகு சோம்பல் மிகுதியாகி காமக் களியாட்டங்களில் மூழ்கினர். அவர் மன்னராக முடிசூடிக்கொண்ட நிலையில் ஏதோ வாழ்க்கையில் தோன்றிய திடீர்த் திருப்பத்தினுல் கெட்டுவிட்ட அறிவற்ற புதுப் பெருமையரைப்போல நடந்துகொண்டார். கல்வியோ, பயிற்சியோ அல்லது திறமையோ அற்ற இழி குணம் படைத்த அற்பர்தம் கையில் ஆட்சிப் பொறுப்பை விட்டார். பட்டத்திற்கு வந்த பத்து மாத காலத்திற்குள் முறைகேடான நடத்தைக்கு ஏற்ருற்போல பழியெதிர்ச் செயலினுல் இடருற்ருர்.

## பருக்ஷியார், 1713 - 1719

1713ஆம் ஆண்டு ஜனவரி மாதம் பதினோராம் நாள் பட்டத்திற்கு வந்தபோது பருக்ஷியார், முப்பது வயதுகொண்ட வனப்பு மிகுந்த வாலிபராகத் திகழ்ந்தார். ஆனுல், முற்றிலும் வலிமையற்றவராகவும், சிந்தனையற்றவராகவும், மனத்திடமும் உடலுறுதியும் அறவே அற்றவராகவும் காணப்பெற்ருர். உறுதியற்ற மனிதரைப்போல இறுதியாக வந்த ஆலோசகரின் எண்ணப்படியே அவர் ஆடத் தொடங்கினர். ஒன்றினைச் செய்வதற்கான முடிவெடுத்த பிறகு அதனைப் பற்றி நிற்காது மனத் தளர்ச்சியுற்று கொடுத்த வாக்கை மீறினர். தாமாகவே ஆட்சிப் பெறுப்பினை ஏற்று நடத்தும் தகுதியும், பிறரை அடக்கியாளுகின்ற திறனும் அவரிடம் இல்லை. அதே சமயத்தில் திறமை வாய்ந்த பதிலாள் எவரையும் அவர் நம்புவது மில்லை. மாருகத் தமது அமைச்சரிடமே சிறு பிள்ளைத்தனமான ஐயப்பாடு கொண்டு அவர்களைக் கவிழ்க்கும் சூழ்ச்சியில் ஈடுபட்டார். அவர் அரியணை ஏறுதற்கு முக்கிய காரணமாக இருந்த சையது சகோதரர்களான வஸிர் அப்துல்லாகானையும், மிர்பக்ஷி உசேன் கானையும் ஒழிப்பதற்கான முறைகேடான சூழ்ச்சியில் தமது ஆட்சிக் காலம் முழுவதிலும் ஈடுபட்டிருந்தார். 1713ஆம் ஆண்டு மார்ச்சு மாத அளவிலேயே பேரரசருக்கும் அவர் தம் அமைச்சர்களுக்கு மிடையேயான போராட்டம் துவங்கியது. அதன் விளைவாக வஸீரான அப்துல்லாகான் அரசவைக்கு வர மறுத்துவிட்டார். அதனுல் முதுகெலும்பில்லாத மன்னரும் அமைச்சருடன் சமாதானம் செய்துகொள்வதற்காக அவரது வீட்டிற்குச் சென்ருர். ஆயின், அடிமைகளின் மேற்பார்வையாளரான மீர்ஜம்லா, வழக்கு மண்டபத் தலைமை அதிகாரியும் கான் தௌரான் சம்சாம் உத்தௌலா என்ற பட்டம் பெற்றவருமான குவாஜா அஸிம் ஆகிய இரு ஆதரவாளர் களின் துணைகொண்டு, பருக்ஷியார் பல சூழ்ச்சிகளை ஒவ்வொரு

மாதமும் செய்துவந்தார். புதிதாக உயர்வு பெற்ற அவ்விரு செல்வந்தரும் ஆற்றலோ அல்லது சையது சகோதரர்களைப் பகைத்துக்கொள்ளும் நெஞ்சுரமோ அற்ற அடுக்களை வீரர்களாக இருந்த காரணத்தினால் சூழ்ச்சித் திட்டங்களேதும் நிறைவேற வில்லை. இத்தகைய சூழ்ச்சிகள் மலிந்த சூழ்நிலை காரணமாக அரசருக்கும் அமைச்சருக்குமிடையே நீங்காத பகைமை நிலவியது, பேரரசில் குழப்பமும் அமைதியின்மையும் தோன்றின.

பரூக்ஷியார் பட்டத்திற்கு வந்ததும் ஜகந்தர் ஷாவின் வஸீராக இருந்த சுல்ஃபிகார்கானை, 1713ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 13ஆம் தேதி கொல்லுமாறு செய்தார். சுல்ஃபிகார்கானின் தந்தையாகிய ஆசாத்கானைச் சிறையிலிட்டதோடு அவர்களின் சொத்துகளையும் பறிமுதல் செய்தார். அவர் பலருக்கு உயர் பதவிகளை வழங்கினார். அவர்களில் நிஜாம் உல் முல்க் என்னும் பட்டம் பெற்ற சின்குலிச் கானும் ஒருவர். தக்கணத்தின் ஆறு மாநிலங்களின் அரசப் பகர ஆளாகப் பதவியேற்ற அவர் துரானி கட்சியினர் தலைவர்களில் ஒருவர். பரூக்ஷியாரின் ஆட்சிக் காலத்தில் மார்வாரின் மன்னரான அஜித்சிங்கிற்கெதிராகப் படையெடுப்பொன்று நிகழ்ந்தது. பகதூர் ஷா இறந்ததும் அஜித்சிங், ஜோதிபுரியில் இருந்த முகலாய அதிகாரிகளையெல்லாம் விரட்டினார். தம்மாட்சியிலிருந்த பகுதியில் பசுக்களைக் கொல்வதையும், பொதுத் தொழுகைக்காக முஸ்லீம்கள் குரலெழுப்பி அழைப்பதையும் தடை செய்தார். அவர் ஆஜ்மீரையும் கைப்பற்றிக்கொண்டார். அதனால் ரதோர் அரசரான அஜித் சிங்கைத் தண்டிப்பதற்காக உசேன் அலிகான் படையெடுத்து வந்தான். அதுபோது அஜித்சிங் அவனிடம் சரணடைந்தார். முகலாய அரசவையில் சேவகம் செய்வதற்காகத் தமது மகன் அபய்சிங்கை அனுப்பிவைக்கவும், புதல்வியரில் ஒருவரைப் பேரரசருக்கு மணமுடித்துவைக்கவும் ஒப்புக்கொண்டார் (1714ஆம் ஆண்டு மே மாதம்). இதற்கிடையில் உசேன் அலிகான் தலைநகரில் இல்லாதபோது கோழையான பேரரசர் அப்துல்லாகானுக்கெதிராகச் சதி செய்தார். அதனால் உசேன்கானும் தலைநகருக்கு விரைவாகத் திரும்பவேண்டியதாயிற்று. தாம் அலைக்கழிக்கப்படுவதாக உணர்ந்த அவ்வமைச்சர், பதவியிலிருந்து நீங்கிவிடப்போவதாக அறிவித்தார். அதைக் கேட்டு பரூக்ஷியார் அச்சத்திற்குள்ளானார். சையது சகோதரர்களைச் சாந்தப்படுத்துவதற்காகத் தமது முக்கிய ஆலோசகரான மீர்ஜம்லாவை பீகாரின் அரசப் பகர ஆளாக நியமித்து அரசவையிலிருந்து வெளியேறுமாறு செய்தார். அதற்கு ஈடாகத் தக்கணத்தின் கவர்னர் பதவியை ஏற்றுக்கொள்ள உசேன் அலிகான் ஒப்பினார். அதற்கிணங்க அப் பகுதியின் ஆட்சிப் பொறுப்பினை நேரடியாக ஏற்றுக்கொள்வதற்காக 1716ஆம் ஆண்டு

ஏப்ரல் மாதத்தில் தலைநகரிலிருந்து உசேன் அலிகானும் புறப் பட்டார்.

அடுத்த படையெடுப்பு சீக்கிய குருவான பண்டாவிற்கு எதிராக எழுந்தது. அவர் சதௌராவில் பெரிய கோட்டை ஒன்றைக் கட்டிக் கொண்டு அப் பகுதியை ஆண்டுவந்தார். லாகூரின் அரசப் பகர ஆளான அப்துஸ் சமத்கான் என்பவர் சதௌரா கோட்டையை முற்றுகையிட்டார்; ஆனால், சீக்கியர் விடாப்பிடியுடன் போரிட்டனர். இருந்தபோதிலும் அவர்கள் அக் கோட்டையை விட்டு வெளியேறி பண்டா வாழ்ந்துவந்த லோகார் கோட்டையில் தஞ்சம் புகுந்தனர். பிந்திய கோட்டையையும் அப்துஸ் சமத் முற்றுகையிடவே 1713ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் பண்டா அங்கிருந்து வெளியேறி மலைப்பகுதிக்கு ஓடிவிட்டார். அதன் பின்னர் அங்கிருந்து பஞ்சாப் பகுதிகளைப் பல முறை தாக்கிக் கொள்ளையிட்டார். 1715ஆம் ஆண்டு ஏப்ரலில் குர்தாஸ்பூரில் இருந்த பண்டா மற்றுமொருமுறை முற்று கைக்குள்ளானார். நீண்ட கடுமையான போருக்குப் பிறகு 1715ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் பதினேழாம் தேதியன்று அவர் சரணடைய வேண்டியதாயிற்று. அவரும், அவரைச் சார்ந்த 740 பேரும் சிறைப் பட்டனர். டில்லிக்கு அழைத்துவரப்பெற்ற அவர்கள் கொடூர மரணம் அடைந்தனர். சீக்கியர்கள் போற்றத்தகுந்த நிதானத்தை யும் மன உறுதியையும் காட்டினர். மரணத்தை விடுதலையாக வரவேற்றனர். உயிரைக் காத்துக்கொள்வதற்காக இஸ்லாம் சமயத்தைத் தழுவ மறுத்தனர். பண்டாவும் அவரது மூன்று வயது மகனும் 1716ஆம் ஆண்டு ஜூன் மாதம் பத்தொன்பதாம் நாளன்று கொடூரமாக வெட்டி வீழ்த்தப்பெற்றனர்.

ஒரு காலத்தில் முகலாய அரசாங்கத்தில் பதவி பெற்று பகதூர் ஷாவிற்கு அடங்கியிருந்தவனும், பிற்காலத்தில் ஆக்ராவிற்கு அண்மையிலுள்ள பகுதிகளில் வழிப்பறிக் கொள்ளை செய்து வந்தவனுமான சுரமான் ஜாட் (Churaman Jat) என்பவனை அடக்குதற்கான முயற்சிகள் நடைபெற்றன. துன் (Thun) என்ற கோட்டையில் தங்கியிருந்த சுரமானை, ஆம்பரின் ராஜா ஜெய்சிங் முற்றுகையிட்டார். பேரரசப் படை துணைக்கு வந்தபோதிலும் அக் கோட்டையை அவரால் கைப்பற்ற முடியவில்லை. இருபது மாதங்களுக்கு முற்றுகை தொடர்ந்தது. சையது சகோதரர்களின் தலையீடு காரணமாக சுரமான் பேரரசருக்குப் பணியவேண்டு மென்றும், அதற்கு ஈடாக துன் கோட்டை அவனிடமே இருக்க வேண்டுமென்றும் ஏற்பாடாகியது. முற்றுகையைக் கைவிடுமாறு ஜெய்சிங்கிற்கு ஆணை வந்தது. சுரமானும் 1718ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் டில்லிக்குச் சென்றான்.

இதற்கிடையில், பருக்ஷியார், சையது சகோதரர்களுக்கெதிராகச் சதிசெய்த வண்ணமிருந்தார். அதற்கென்று சையது உசேன் அலியினுல் தக்கணத்தின் அரசப் பகர ஆள் என்னும் பதவியிலிருந்து வெளியேற்றப்பெற்ற நிஜாம் உல் முல்கைப் பயன்படுத்திக் கொள்ளப் பேரரசர் விரும்பினுர். ஆனுல், பேரரசரின் நிலையற்ற தன்மையினுல் வெறுப்புற்ற நிஜாம் உல் முல்க், இரண்டு ஆண்டுகட்குப் பின்னர் அரசவையை விட்டுச் சென்ருர். அடுத்தபடியாக இனயதுல்லா காஷ்மீரி என்பவரை 4,000 பெறுமானமுள்ள பதவிக்கு உயர்த்தியதோடு, நிதியமைச்சராகவும் பேரரசர் நியமித்தார். புதிய நிதியமைச்சர் ஆட்சித்துறையைச் சீர்திருத்தவும், இந்துக்களின்மீது ஜெஸியா வரியை மீண்டும் விதிக்கவும் முயன்ருர். ஆனுல், சையது சகோதரர்களைப் பதவியிலிருந்து விலக்குவதில் தோல்வியே கண்டார். அடுத்தபடியாக, 7,000 பெறுமானமுள்ள பதவியை வகித்த மற்ருெரு காஷ்மீரச் செல்வந்தரான முகமது முராத் என்பவரை, சையது சகோதரர்களைக் கவிழ்ப்பதற்கென பருக்ஷியார் ஆணையிட்டார். முகமது முராதும் தோல்வியுற்ருர். அடுத்து, 7,000 பெறுமானமுள்ள பதவிக்கு உயர்த்தப்பெற்ற சர்புலாந்த் கானும் (Sarbuland Khan) சதியிலிருந்து பின்வாங்கினுர். அதன் பிறகு, ஈத் வழிபாட்டின்போது (Id Prayer) அப்துல்லாகானைச் சூழ்ந்து கொண்டு வெட்டி வீழ்த்துவதென்ற சதி உருவாகியது. ஆனுல் அதனையும் கைவிடவேண்டியதாயிற்று. அச் சமயத்தில் மீர்ஜம்லா, சம்சாம் உத் தௌலா போன்ற பேரரசருடைய நண்பர்களே சையது சகோதரர்களின் பக்கம் சேர்ந்துகொண்டனர். இருப்பினும் மூடரான பருக்ஷியார், தமது கோழைத்தனமான செயல்முறைகளைக் கைவிடவில்லை. வஸிரான அப்துல்லா கானைத் தொடர்ந்து துன்புறுத்திவந்தார். அதன் காரணமாக அப்துல்லா கானும் தக்கணத்தில் இருந்த தமது சகோதரர் உசேன் அலிகானைத் தலைநகருக்குத் திரும்பிவருமாறு எழுதவேண்டியதாயிற்று. சாஹுவுடன் (Sahu) ஒப்பந்தம் செய்துகொண்ட உசேன் அலிகான், மராட்டியரின் உதவியைப் பெற்ருர். தக்கணத்தின் நிதி வருவாயில் நான்கில் ஒரு பங்கான ‘ சவுத் ’ (Chauth) வரியையும், வருவாயில் பத்தில் ஒரு பங்கான ‘ சார்தேஷ்முகி ’ (Sardeshmukhi)யையும் மராத்தியருக்குக் கொடுப்பதாக வாக்களித்தார். அதனுேடு மரபாக வந்த சிவாஜியின் பகுதிகளை மராட்டியருக்கே சொந்தமானது என்பதை உறுதி செய்வதாகவும், டில்லியில் சிறைப்பட்டிருந்த சாஹுவின் தாயாரையும், மாற்ருந்தாய் வயிற்றில் பிறந்த சகோதரரையும் விடுதலை செய்வதாகவும் வாக்களித்தார். மேலும், மராத்தியப் படையினருக்கு ஊதியம் அளிப்பதாகவும் ஒப்புக்கொண்டார். அதன்பேரில் பீஷ்வாவான பாலாஜி விஸ்வநாத்தின் தலைமையில் ஏறக்குறைய 11,000 மராத்திய வீரர்கள் உசேன் அலிகானுடன் சேர்ந்து

கொண்டனர். இங்ஙனம் 1718ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 14ஆம் தேதி பர்ஹான்பூரிலிருந்து புறப்பட்ட மீர் பக்ஷியான உசேன் கான், 1719ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 16ஆம் தேதி டில்லியை அடைந்தார். அவுரங்கசீபின் நான்காவது புதல்வரான அக்பரின் மகனென்று கூறிக்கொண்ட இளவரசரைப் பாதுகாத்து அழைத்து வரும் சாக்கில் டில்லி நகருக்குள் புகுந்தார். இதற்கிடையில் சையது அப்துல்லா கானிடம் பரூக்ஷியார் மன்னிப்புக் கேட்டுக்கொண்டார். அப்துல்லா கானுக்கும் அவரது சகோதரருக்கும் ஏராளமான அனுகூலங்களைச் செய்தார். அவர்கள் கட்சியைச் சார்ந்த பிற செல்வந்தர்களையும் தம் வயப்படுத்திக்கொண்டார். இருந்தும், பரூக்ஷியாரின் நயவஞ்சகமான திட்டங்களை முடிவிற்குக் கொண்டு வருவதற்காக அவரை அரியணையிலிருந்து இறக்குவது என உசேன் அலிகான் தீர்மானித்துவிட்டார். பிப்ரவரி மாதம் 23ஆம் தேதியன்று அவர் பேரரசரைச் சந்தித்தார். அப்போது அவரிடம் மன்னிப்புக் கோரியும், தமது தலைப்பாகையை அவர் தலையில் வைத்தும், பேரரசர் தம்மை மிகவும் தாழ்த்திக்கொண்டார். ஆயின், சையது சகோதரர்கள் தங்களது ஆள்களைக்கொண்டு அரசவையை நிரப்பினர். 1719ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 27ஆம் தேதியன்று அஜீத்சிங்குடனும் ஆதரவாளர்களுடனும் அரண்மனைக்குள் புகுந்து, கோட்டை வாயில்களையும், அலுவலகங்களையும், பள்ளியறைகளையும் பிடித்துக்கொண்டனர். உசேன் அலிகான் நகருக்குள் தமது படையினரையும், மதிலுக்கு வெளியில் மராத்தியப் படையினரையும் கொண்டு நிறுத்தினர். அரண்மனைக்குள்ளே பேரரசருக்கும் அவரது அமைச்சருக்குமிடையே கடுமையான வாக்குவாதம் நடைபெற்றது. பீதியுற்ற பேரரசர் பெண்களுக்கான பகுதியில் ஒளிந்துகொண்டார். நகரத்தில் குழப்பமும் கொந்தளிப்பும் தோன்றின. அதனால், பரூக்ஷியாரை உடனடியாகப் பதவியிலிருந்து நீக்குவது எனத் தீர்மானிக்கப்பெற்றது. ரஃபி உஷான் (Rafi-us-shan) என்பான் புதல்வரான ரஃபி உத் தராஜத் (Rafi-ud-darajat) என்னும் இளவரசரை 1719ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் இருபத்தெட்டாம் நாளில் மயில் சிம்மாசனத்தில் அமர்த்திப் பேரரசரென அறிவித்தனர். பரூக்ஷியாரைக் கொண்டுவருவதற்காகச் சில ஆப்கானிய வீரர்களை உவளகத்திற்கு அனுப்பினர். கொண்டுவரப்பெற்ற பக்ரூஷியாரைப் பதவியிலிருந்து நீக்கியதோடு, அவரைக் குருடாக்கிச் சிறையிலிட்டனர். 1719ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 27-28 தேதிகளில் அவர் கழுத்தை நெரித்துக் கொன்று, ஹுமாயூனின் (Humayun) கல்லறையில் வைத்துப் புதைத்தனர். அதுவரையில் டில்லி அரியணையில் அமர்ந்த பாபரின் வழிவந்தவர்களில் பரூக்ஷியாரே ஆற்றல் மிகக் குறைவானவர்.

## ரஃபி உத் தராஜத்; 1719ஆம் ஆண்டு பிப்ரவரி 28 முதல் ஜூன் 4 வரை

ரஃபி உத் தராஜத், ரஃபி உஷானின் புதல்வர். அவர் பட்டத்திற்கு வந்தபோது இருபது வயது நிரம்பிய இளைஞரா யிருந்தார். அவர் மிகுந்த மதிநுட்பம் வாய்ந்தவராக இருந்த போதிலும் எலும்புருக்கி நோயினால் துன்புற்றார். சையது சகோதரர்களின் கைப்பாவையாக வாழ்ந்தார். அவரது பெயரில் அவர்களே ஆட்சிசெய்தனர். அப்போது அக்பரின் மகனான நிகுசியார் (Niku-Siyar) என்பவர் புரட்சி செய்து ஆக்ரா கோட்டையில் பேரரசரென முடிசூட்டிக்கொண்டார். நாகாரைச் சார்ந்த பிராமணரான மித்ரா சென் என்பவரை வஸீராக நியமித்துக் கொண்டார். இதற்கிடையில் நோய் காரணமாக அணையும் தறுவாயிலிருந்த ரஃபி உத் தராஜத்தை, 1719ஆம் ஆண்டு ஜூன் மாதம் நாலாம் தேதி அரச பதவியிலிருந்து நீக்கினர். பதவியிலிருந்து விலகிய ஒரு வாரத்திற்குள் ரஃபி உத் தராஜத் இறந்தார்.

## இரண்டாம் ஷாஜஹான் எனப் பெயர்பெற்ற ரஃபி உத் தௌலா: 1719 ஜூன் 6 முதல் செப்டம்பர் 17 வரை

பதவியிலிருந்து நீக்கப்பெற்ற மன்னரின் மூத்த சகோதரரான ரஃபி உத் தௌலா என்பவர் 1719ஆம் ஆண்டு ஜூன் மாதம் ஆறும் தேதியன்று, இரண்டாம் ஷாஜஹான் என்னும் பட்டப் பெயரோடு அரியணையேறினார். அவரும் எலும்புருக்கி நோய் கொண்டவர். சையது சகோதரர்களின் சூத்திரப் பாவையாக வாழ்ந்தவர். அவரது ஆட்சியில் உசேன் அலிகான் ஆக்ராவின்மீது படை யெடுத்துச் சென்று நிகுசியாரின் கலகத்தை ஒடுக்கினார். நிகுசியார் கைது செய்யப்பெற்றுச் சிறையில் தள்ளப்பெற்றார். அவர்தம் அமைச்சரான மித்ரா சென் தற்கொலை செய்துகொண்டார். நோயினால் நொந்த வாலிபரான ரஃபி உத் தௌலா, 1719ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 17ஆம் தேதியில் இவ்வுலக வாழ்வை நீத்தார்.

## முகம்மது ஷா, 1719–1748

1719ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 28ஆம் தேதியன்று ஜான் ஷாவின் (Jhan Shah) மகனான இளவரசர் ராஷான் அக்தார்

(Raushan Akhtar) என்பாருக்கு சையது சகோதரர்கள், முகம்மது ஷா என்னும் விருதுப் பெயரோடு முடிசூட்டிவைத்தனர். அவர் திறமையும் அனுபவமும் இல்லாதவர். அதனால் எல்லா அதிகாரங்களையும் சையது சகோதரர்களே வைத்துக்கொண்டனர்.

மாளவத்தின் அரசப் பகர ஆளாக நியமனம்பெற்ற நைஸாம் உல் முல்க் 1719ஆம் ஆண்டு மார்ச்சு திங்கள் மூன்றும் நாளன்று அம் மாநிலத்திற்குப் புறப்பட்டார். சபேலாராமிற்குப் பிறகு (Chhabela Ram) அவரது மைத்துனரே அலகாபாத்தின் அரசப் பகர ஆளானார். அவர் சமாதானம் செய்துகொண்டு 1720ஆம் ஆண்டில் அலகாபாத் கோட்டையைக் காலிசெய்துவிட்டு அவாதின் ஆட்சிப் பொறுப்பை ஏற்பதற்காக அங்குச் சென்றார். சையது சகோதரர்களுக்கும் நிஜாம் உல் முல்கிற்குமிடையே வெறுப்பு வளர்ந்தது. சையது உசேன் அலியின் ஆட்சிப் பொறுப்பிலிருந்த காண்டேஷ் பகுதியை, 1720ஆம் ஆண்டு மே மாதத்தில் நிஜாம் உல் முல்க் தாக்கினார். அதனால் நிஜாமைத் துரத்திச் சென்று தண்டனை அளிப்பதற்காக சையது சகோதரர்களின் மைத்துனரான திலாவர் அலிகான் (Dilawar Alikhan) ஏவப்பெற்றார். இதற்கிடையில் அசிர்காரைக் கைப்பற்றிய நிஜாம் அதன் பிறகு, பர்ஹான்பூரையும் கைக்கொண்டார். அங்கே வாழ்ந்திருந்த சையது சகோதரர்களின் தாயாரை நல்ல முறையில் நடத்தினார். அடுத்தபடியாக, காண்ட்வா (Khandwa) என்னுமிடத்தில் திலாவர் அலிகானை முறியடித்துக் கொன்றார். உசேன் அலிகானின் மைத்துனரும் துணைவருமான ஆலம் அலிகானையும் (Alam Alikhan) ஆகஸ்ட் மாதம் பத்தாம் நாளில் தோற்கடித்துக் கொன்றார். இச் செய்திகளினால் மிகுந்த கலக்கமுற்ற சையது சகோதரர்கள், நீண்ட விவாதத்திற்குப் பிறகு, நிஜாம் உல் முல்கை அடக்குவதற்காகப் பேரரசரோடு உசேன் அலி தக்கணத்திற்குச் செல்லவேண்டுமென்றும், அதே சமயத்தில் அப்துல்லா கான் டில்லியில் இருந்துகொண்டே ஆட்சியைக் கவனிக்கவேண்டுமென்றும் முடிவு செய்தனர். தக்கணத்தை நோக்கிப் பேரரசர் சென்றுகொண்டிருந்தபோது, உசேன் அலிகானுக்கெதிராகச் சதி ஒன்று உருவாகியது. துரானியர் கட்சியின் தலைவரான முகமது அமீன்கான்தாம் அச் சதியில் முக்கியப் பங்கு பெற்றவர். பாரசீகத்திலிருந்து வந்த வீரரான மிர் முகமது அமீன், அரசாங்க பீரங்கிப் படையின் கண்காணிப்பாளரான ஹைதர் அலிகான் (Hyder Alikhan) போன்றோர் உள்ளிட்ட பல அதிகாரிகள் அவருக்குத் துணையாக நின்றனர். 1720ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் ஒன்பதாம் தேதியன்று காலையில் தோடா பீமிற்கு (Toda Bhim) அருகில் அமைந்த பாசறையில் வந்திறங்கிய பேரரசரைக் கண்டு

வணக்கம் செலுத்திவிட்டுத் தமது கூடாரத்தை நோக்கி அடியெடுத்துவைத்துத் திரும்பிய உசேன்கானிடம், முகமது அமீன்கானின் ஆள்களில் ஒருவனுன ஹெதர் பெக் என்பவன் அவரிடம் விண்ணப்பம் ஒன்றினை நீட்டினுன். அதனை அவர் படித்துக்கொண்டிருந்தபோது அவரது பக்கத்தில் குறுவாளால் குத்திக் கொன்ருன். அதன் பிறகு, படைக்குத் தலைமை தாங்கு வதற்காகப் பேரரசரை வெளிக்கொணர்ந்தனர். கொலையுண்ட சையதின் சொத்தும், அவருக்குச் சொந்தமான மூட்டைகளும் சூறையாடப்பெற்றன. முகமது அமீன்கான் வஸீராக நியமனம் பெற்று, இதிமாத் உத் தௌலா என்னும் பட்டத்தோடு (Itimad-ud-daula) 8,000 பெறுமானமுள்ள பதவிக்கு உயர்ந்தார். டில்லிக்குத் திரும்பிவந்துகொண்டிருந்த பேரரசர் பிலோச்பூர் (Bilochpur) என்னுமிடத்தில் சையது அப்துல்லாகானுடன் நவம்பர் மாதம் 15ஆம் தேதியன்று போரிட்டார். அவரை முறியடித்துச் சிறைப் பிடித்தார். உசேன் அலிகானின் கொலைபற்றிய செய்தி வந்ததும், சையது அப்துல்லாவினுல் அரியணையில் அமர்த்தப்பெற்ற இளவரசர் இப்ரஹீமை (Ibrahim) முகமது ஷாவின் முன்னுல் நிறுத்தினர். முகமது ஷாவும் அவரை மன்னித்தபோதிலும் டில்லி சிறைக்கே மீண்டும் அனுப்பிவைத்தார்.

1720ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 23ஆம் தேதியன்று முகமது ஷா வெற்றிப் பெருமிதத்தோடு டில்லி நகரத்தில் நுழைந்தார். புதிய வஸீரான முகமது அமீன்கான் 1721ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 30ஆம் தேதி இறந்துவிடவே, அவரது பதவியை நைஸாம் உல் முல்கிற்கு அளிக்க முகமது ஷா முன்வந்தார். ஆயின், அவர் தலைநகருக்கு வரும்வரையில் அவருக்குப் பதிலாக இனயதுல்லா காஷ்மீரி (Inayatulla-Kashmiri) என்பவர் அப் பதவிக்கு நியமன மானுர். 1722ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 29ஆம் தேதி டில்லியை அடைந்த நைஸாம் உல் முல்க், பிப்ரவரி மாதம் 21ஆம் தேதியன்று தான் வஸீர் பதவியை முறையாக ஏற்றுக்கொண்டார். ஆனுல், பேரரசருடன் அவரால் ஒத்துப்போக முடியவில்லை. அதே போன்று அவுரங்கசீபு காலத்தைச் சார்ந்த கண்டிப்பு நிறைந்த அவர், டில்லி அரசவையில் நிலைநிறுத்த முயன்ற கட்டுப் பாடுகளுக்கு உட்பட்டு நடக்க இளமை வாய்ந்த செல்வந்தர்கள் விரும்பவில்லை. அவரது உடையையும், பழக்கவழக்க நடை முறைகளையும் அவர்கள் ஏளனம் செய்தனர். மேலும், அவர் மிகுந்த பேராசை கொண்டவராதலால், ஆறு மாநிலங்களைக் கொண்ட தக்கணத்தோடு மாளவத்தையும் தமது ஆட்சி எல்லைக்குள் இருக்குமாறு செய்யவேண்டுமென்று விழைந்தார். அரசாங்க அலுவல்களில் அதிகக் கவனம் செலுத்தவேண்டுமென்றும்,

கலிசா நிலங்களை (Khalisa) வரி வாடகைக் கட்டணக் குத்தகைக்கு விடக்கூடாதென்றும், இந்துக்களின்மீது ஜெஸியா வரியைச் சுமத்த வேண்டுமென்றும் இளமை ததும்பும் பேரரசருக்கு அவர் யோசனை கூறினார். அவரது ஆலோசனை புறக்கணிக்கப்பெற்றது. அதன் காரணமாக அவர் வேட்டைக்குச் செல்லும் சாக்கில் டில்லியை விட்டு வெளியேறி, 1723ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் பதினெட்டாம் தேதி தக்கணத்திற்கே திரும்பிவிட்டார். அதன் காரணமாக முகமது அமீன்கானின் புதல்வரான கமாருதீன்கான் (Qamar-ud-dinkhan) வஸீராக நியமிக்கப்பெற்றார்.

அதன் பிறகு, தம்மை எதிர்த்து நிற்குமாறு டில்லி அரச அவையினரால் தூண்டப்பெற்ற ஹைதராபாத்தின் அரசப் பகர ஆளான முபாரிஸ்கானை ஒழித்த பிறகு, தக்கணத்தில் இருந்த ஆறு சுபாக்களில் உரிமைபெற்ற அரசரைப்போல நைஸாம் உல் முல்க் திகழ்ந்தார். 1724ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 11ஆம் தேதி ஷகார் கெல்டா (Shakar Khelda) எனுமிடத்தில் நடந்த போரில் அவர் முபாரிஸ்கானைத் (Mubariz Khan) முறியடித்துக் கொன்றார். ஐதராபாத்தைத் தமது தலைநகரமாக அமைத்துக்கொண்டார். ஆற்றல் குன்றிய பேரரசரும் அசஃப் ஜா (Asaf Jah) எனும் பட்டத்தை அவருக்களித்து, அவரைத் தம்வயப்படுத்திக்கொள்ள முயன்றார். எவ்வாறெனினும், தம் தக்கணத்துடன் அவர் கூடுதலாக வைத்திருந்த குஜராத் மாநிலத்தை அவரிடமிருந்து பறிப்பதில் அரச அவையினர் வெற்றிபெற்றனர். மராத்தியரின் ஊடுருவல்கள் காரணமாக நைஸாம் தமது ஆட்சிக்குட்பட்ட பகுதியிலேயே இடருற்றார். அவர் பல முறை பாஜிராவிடம் தோற்றார். ஆயின், தமது பகுதிகளைக் காத்துக்கொள்வதற்காகத் தமது பேரரசரின் ஆட்சிக்குட்பட்ட வட இந்தியாவில் மராத்திய ஆட்சியை விரிவடையச் செய்யலாம் என்று தந்திரமாக பீஷ்வாவிற்கு யோசனை கூறினார்.

அந்த யோசனையை வரவேற்ற பாஜிராவும், 1731ஆம் ஆண்டிலிருந்து வட இந்தியாவிலுள்ள முகலாயப் பகுதிகளை ஆண்டு தோறும் கொள்ளையிடத் துவங்கினார். 1734ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில் ஆக்ராவிற்குத் தெற்கே எழுபது கல் தொலைவிலுள்ள ஹிண்டான் (Hindaun) எனுமிடத்தை மராத்தியர் கைப்பற்றினர். மார்ச்சு மாதத்தில் அங்கிருந்து அவர்கள் விரட்டப்பெற்றபோதிலும், அடுத்த ஆண்டில் அவர்கள் சாம்பரை (Sambhar) அழித்தனர். பாஜிராவை சமாதானப்படுத்துதற்காக அவரை மாளவத்தின் அரசப் பகர ஆளாக ஏற்றுக்கொள்வதெனப் பேரரசர் உறுதி மொழி தந்தார். அதனால் பீஷ்வா மனநிறைவடையவில்லை. அவர்

மாளவம் முழுவதையும், சாம்பல் ஆற்றிற்குத் தெற்கேயுள்ள பகுதிகளையும், அலகாபாத், பனாரஸ் (காசி), கயா, மதுரா போன்ற இந்துக்களின் புனித நகரங்களையும் தமக்கே தந்துவிடவேண்டுமென்று கோரினார். மேலும், தக்கணத்தில் இருந்த ஆறு சுபாக்களில் 'சவுத்', 'சார்தேஷ் முகி' ஆகியவற்றைக் கொள்ளும் மராத்தியரின் உரிமையை ஒப்புக்கொள்ள வேண்டுமென்றும், ஆண்டொன்றிற்கு ஐம்பது இலட்ச ரூபாய் வருமானமுள்ள ஜாகீர் (Jagir) ஒன்றை அளிக்கவேண்டுமென்றும் வற்புறுத்தினார். மட்டுமீறிய இவ்விதக் கோரிக்கைகளுக்கு இணங்குவதென்பது நடக்காத ஒன்று. ஆகையினால், முன்னேறிக்கொண்டிருந்த பீஷ்வாவை எதிர்ப்பதற்காகப் பேரரசப் படைகள் சென்றன. ஆனால், பரான் உல் முல்கையும் (Burhan-ul-Mulk) கான் தௌரானையும் (Khan Dauran) பாஜிராவ் சந்திக்காமலேயே நழுவிச் சென்று, 1737ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் டில்லியின் புறநகர்ப் பகுதிகளைத் தீயிட்டுக் கொளுத்தினார். அடுத்து மராத்தியரை ஒடுக்குவதற்குப் பேரரசர் அனுப்பிய நைஸாம் உல் முல்குடன் போரிடுவதற்காகச் சென்றார். நடைபெற்ற போரில் நிஜாம் தோல்வியுற்றார். அவர் 1738ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 17ஆம் தேதியன்று சிரோஞ் (Sironj) எனுமிடத்தில் பாஜிராவுடன் தற்காலிக உடன்படிக்கை யொன்றினை செய்துகொண்டார். 'மாளவம் முழுவதையும், நர்மதைக்கும் சாம்பல் ஆற்றிற்குமிடையேயுள்ள பகுதியில் முழு ஆட்சியுரிமையையும், உதவித்தொகையாக ஐந்து மில்லியன் ரூபாய்களையும் பாஜிராவிற்கு பெற்றுத்தருவதாக வாக்களித்தார்'.

முகமது ஷாவின் ஆட்சிக் காலத்தில் அவாத், வங்காளம் ஆகிய முகலாயப் பேரரசின் வேறு இரு மாநிலங்களும் நடைமுறையில் உரிமை பெற்றுத் திகழ்ந்தன. சாதத் கான் பரான் உல் முல்க் (Saadat Khan Burhan-ul-Mulk) என்று அழைக்கப்பெற்ற பாரசீகத்து துணிகர வீரர் 1722ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் ஒன்பதாம் நாளில் அவாதின் அரசப் பகர ஆளானார். அவர் அந்த மாநிலத்தை உரிமை பெற்ற அரசாக மாற்றுவதில் வெற்றி கண்டார். பெயரளவில் தான் தம்மை அரசப் பகர ஆளென்று அழைத்துக்கொண்டார். பகதூர் ஷாவின் ஆட்சிக் காலத்தில் (1707–12) வங்காளம், பீகார், ஒரிஸ்ஸா ஆகியவை ஒரே மாகாணமாக இணைந்திருந்தன. அவரது இரண்டாவது புதல்வரான அஸீம் அஸ்ஷான் என்பவர் அதனை ஆண்டு வந்தார். அரியணையைக் கைப்பற்றுதற்காக 1712ஆம் ஆண்டில் ஆக்ராவை நோக்கிப் பருக்ஷியார் சென்றபோது, வங்காளத்தில் அஸிம் அஸ்ஷானின் துணைவராக இருந்து ஆட்சிப் பொறுப்பினை மேற்கொண்ட ஜபார்கானே மேலே குறித்த மூன்று மாநிலங்களின் ஆட்சிப் பொறுப்பையும் ஏற்றுக்கொண்டார்,

1726ஆம் ஆண்டு இறக்கும்வரையில் அவர் அப் பதவியைத் தொடர்ந்து வகித்துவந்தார். அதற்குப் பிறகு, கான் தௌரான் (Khan Dauran) என்பாரே பெயரளவில் அரசப் பகர ஆளாக இருந்தபோதிலும், பரூக்ஷியாரின் மருமகரான ஷுஜா உதீன் முகமது கான் (Shuja-ud-din-Muhammad Khan) என்பவரிடமே அம் மாநிலங்கள் இருந்தன. 1739ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 24ஆம் தேதி அவர் இறந்ததும் அவரது புதல்வரான சர்பிராஸ்கான் வாரிசானர். ஆயின் அவர், பீகாரின் துணை அரசப் பகர ஆளாக இருந்த அலிவர்திகானல் (Ali Vardi Khan) 1740ஆம் ஆண்டு மே மாதம் 12ஆம் நாளில் முறியடித்துக் கொல்லப்பெற்றார். இங்ஙனம் அலிவர்தி கான் வங்காளம், பீகார், ஒரிஸ்ஸா ஆகியவற்றின் அரசப் பகர ஆளானர். அதனை முகமது ஷாவும் ஏற்றுக்கொண்டார். அந் நாளிலிருந்து வங்காளம், பீகார், ஒரிஸ்ஸா ஆகியவை நடைமுறையில் டில்லியின் ஆதிக்கத்திற்குட்படாத உரிமை பெற்ற பகுதிகளாகத் திகழ்ந்தன.

அச்சமயத்தில் மத்திய அரசாங்கத்தின் வலிமை மிகுதியாகக் குறைந்துவிட்டது. நாதிர் ஷா (Nadir Shah) எனும் பாரசீகத்தைச் சார்ந்த துணிச்சல் வீரர் 1739ஆம் ஆண்டில் இந்தியாவின்மீது படையெடுத்து வருமளவிற்கு முகலாயப் பேரரசின் வலிமை குன்றியிருந்தது. துருக்கியப் பணி வேட்பரான நாதர் ஷா, படையெடுத்துவந்த ஆப்கானியரிடமிருந்து தமது நாட்டைக் காத்துக் கொண்ட பிறகு, அவர்களைத் தண்டிப்பதற்காக இந்தியாவிற்கு ஓடிவந்தவரைத் துரத்திக்கொண்டு ஆப்கானிஸ்தானத்திற்குச் சென்றார். ஒருவர்பின் ஒருவராக இரண்டு தூதுவர்களை டில்லிக்கு அனுப்பினர். அவர்கள் மூலமாக, முகலாயப் பேரரசிற்குள் ஆப்கானிஸ்தானத்திலிருந்து வந்த அகதிகளை அனுமதிக்க வேண்டாமென்று முகமது ஷாவைக் கேட்டுக்கொண்டார். அதன் பிறகு, 1738ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 24ஆம் தேதி காண்டகாரைக் கைப்பற்றினர். ஜூன் மாதம் 11ஆம் தேதி கஜினி நகருக்குள் நுழைந்தார். நாதிர் ஷா அனுப்பிய மூன்ருவது தூதுவரை முகமது ஷா ஓராண்டிற்குத் தடுத்து நிறுத்திக்கொண்டதோடு, நாதிர் ஷாவிடமிருந்து வந்த பல வேண்டுதல்களுக்கு ஒரு பதிலும் எழுதாதிருந்தார். அதன் விளைவாக ஜூன் மாதம் 29ஆம் நாளன்று நாதிர் ஷா காபூலை முற்றுகையிட்டுக் கைப்பற்றினர். அதன்பின் ஜம்ரூதிலும் (Jamrud) பெஷாவரிலும் நிலைகொண்டிருந்த முகலாயப் படைகளைப் புறக்கணித்துவிட்டுப் பஞ்சாபைத் தாக்குவதற்காகப் புறப்பட்டார். டிசம்பர் மாதம் 27ஆம் தேதியில் அட்டாக் என்னும் இடத்தில் சிந்துவைக் கடந்து லாகூரின் அரசப் பகர ஆளினை முறியடித்தார். தம்முடன் எதிர்த்துப் போரிடுவதற்காக முகமது ஷா படையுடன்

முன்னேறி வந்துகொண்டிருந்தார் என்பதை அறிந்த நாதிர் ஷா, மேலும் தெற்கே சென்று கார்னுலில் (Karnal) பாசறையை அமைத்துக்கொண்டார். இதற்கிடையில் நாதிர் ஷாவின் படையெடுப்புபற்றிய வதந்தியைக் கேலிசெய்த முகலாய அரசவையினர் பாரசீகப் படையெடுப்பாளர் காபூலைக் கைப்பற்றி லாகூரை நோக்கிச் சென்றுகொண்டிருந்தார் என்பதை அறிந்தபோது, நாட்டிற்கு வரக்கூடிய ஆபத்து எத்தகையது என்பதை உணரத் தலைப்பட்டனர். அதனுல் படை கொண்டுவந்த பகைவரை விரட்டுவதற்கெனப் பேரரசர் நேரடியாகச் செல்லவேண்டுமென்று தீர்மானித்தனர். பெரும் படையுடன் சென்ற பேரரசர் கார்னுலை அடைந்து, அங்கே அலிமர்தன்கான் கால்வாய் அருகில் தமது படை நிலைகொள்ளுமாறு செய்தார். சில நாள்கள் கழிந்தே அந் நகரின் அருகில் வந்த நாதிர் ஷா அந் நகருக்கு மேற்கே ஆறு கல் தொலைவில் தமது பாசறையை அமைத்துக்கொண்டார். கார்னுலில் இருந்த பேரரசருடன் சேர்ந்துகொள்வதற்காக அவாதின் அரசப் பகர ஆளான சாதத்கான் பரான் உல் முல்க் பிப்ரவரி மாதம் 24ஆம் தேதி வந்து சேர்ந்தார். ஆனுல், அவருக்குப் பின்னுல் வந்துகொண்டிருந்த பரிவாரங்களை பாரசீகர்கள் தாக்கினர். அவற்றினை மீட்பதற்காக அவர் படை கொண்டுசெல்ல வேண்டியதாயிற்று. அதன் விளைவாக 1739ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 24ஆம் தேதி கார்னுல் சண்டை நடைபெற்றது. கான் தௌரான் (Khan Dauran) பரான் உல் முல்கிற்குத் துணையாக நின்ருர். ஆனுல், நைஸாம் உல்முல்க்கும் பேரரசரும் படையணிக்குச் சற்றுப் பின்னே நின்றனர். அதனுல் அவர்கள் பகைப் படையுடன் பொருதவில்லை. பரான் உல் முல்க் போரில் காயமுற்றுப் பகைவரிடம் சிக்கினுர். கான் தௌரானும் படுகாயமுற்ருர். மறுநாளே அவர் பாசறையில் மரணமடைந்தார். அன்றைய போரில் நாதிர் ஷாவிற்கு வெற்றி கிட்டியது. மாலையில் இருதரத்துப் படைகளும் தங்கள் தங்கள் பாசறைகட்குத் திரும்பின.

பரான் உல் முல்க் நாதிர் ஷாவைக் கண்டபோது பேரரசின் வலிமையை மிகைப்படுத்திக் கூறியதோடு, பேரரசரிடமிருந்து இரண்டு கோடி ரூபாய்களை இழப்பீடாகப் பெற்றுக்கொண்டு பாரசீகத்திற்குத் திரும்பிவிடுமாறு யோசனை கூறினுர். அந்த யோசனையை நாதிர் ஷாவும் ஏற்றுக்கொண்டார். பேச்சுவார்த்தை நடத்துவதற்காக அவரிடம் இருமுறை சென்ற நைஸாம் உல்முல்க்கின் மூலமாக அத்தகைய ஏற்பாட்டினை முகமது ஷாவும் உறுதிசெய்தார். ஆயின், கான் தௌரான் இறந்த பிறகு, வெற்றிகரமாகப் பேச்சுவார்த்தை நடத்தியதற்குப் பரிசாக நைஸாம் உல் முல்க்கிற்கு மீர் பக்ஷி பதவியைப் பேரரசர் அளித்துவிட்டார் என்பதை அறிந்த

போது, பரான் உல் முல்க் ஆத்திரம் காரணமாக ஆளே மாறிவிட்டார். அந்தப் பதவியின்மீது அவர் மோகம் கொண்டிருந்தார். அந் நிலையில் சூழ்ச்சித்திறம்மிக்க நைஸாம் அதனைத் தட்டிப் பறித்துக் கொண்டதால், இருபது கோடி ரூபாய்கள் இழப்பீட்டுப் பணம் கேட்குமாறு நாதிர் ஷாவிற்கு பரான் ஆலோசனை கூறினர். அதன் பேரில் பாரசீகத் தலைவரின் பேராசைத் தீ கொழுந்துவிட்டு எரிய ஆரம்பித்தது. அவர் நைஸாமைத் தம்மிடம் வருமாறு அழைத்துச் சிறைப்படுத்திவிட்டு முகமது ஷாவின் பாசறையைச் சுற்றிலும் தமது படைவீரரை வளைத்துக்கொள்ளுமாறு செய்தார். முகமது ஷாவும் இருமுறை நாதர் ஷாவின் பாசறைக்குச் சென்றுவந்தார். படையெடுப்பாளர் இழப்பீட்டுப் பணத்தைப் பெறுவதற்காக டில்லிக்குச் செல்வதெனத் தீர்மானமாகியது.

முகமது ஷா உடன்வர, நாதிர் ஷா டில்லியை நோக்கிப் புறப்பட்டார். அந் நகருக்கு ஆறு கல் தொலைவிலுள்ள ஷாலமார் பூங்காவில் அவர் தங்கினர். தம்மை வரவேற்பதற்கான ஏற்பாடுகளைச் செய்வதற்காக முகலாயப் பேரரசரை முன்னதாக அனுப்பிவைத்தார். மார்ச் மாதம் 20ஆம் தேதியன்று நாதிர் ஷா டில்லியில் ஊர்வலமாக வந்து நுழைந்தார். ஈத் உஸ் ஸுஹா (Id-uz-zuha) நாளும் பாரசீகப் புத்தாண்டு தினமுமான மறுநாளில் டில்லியில் இருந்த மசூதிகளிலெல்லாம் நாதிர் ஷாவின் பெயரிலேயே குத்பா (Khutba) வாசிக்கப் பெற்றது. 22ஆம் தேதி நகரில் கலகம் தோன்றியது. அதில் சில பாரசீகப் படையினர் தாக்குண்டு இறந்தனர். நாதிர் ஷா இறந்து விட்டதாகவும் வதந்திகள் பரவின. அதன்பேரில் அவமதித்த நகர மாந்தரை மறுநாளில் கொன்று குவிக்குமாறு நாதிர் ஷா ஆணையிட்டார். எட்டு மணிநேரத்திற்குப் படுகொலை தொடர்ந்து நடைபெற்றது. அதன் விளைவாக வெட்டி வீழ்த்தப்பெற்றவரின் எண்ணிக்கை முப்பதாயிரத்தை எட்டியது. முகமது ஷாவின் வேண்டுகோளுக்கிணங்கி அன்று மாலையில்தான் படுகொலையை நிறுத்துமாறு நாதிர் ஷா தமது வீரர்களுக்கு உத்தரவிட்டார்.

மே மாதம் 15ஆம் தேதிவரையில் நாதிர் ஷா டில்லியில் தங்கினர். முத்துகள், ஒளிமணிக் கற்கள், அணிகலன்கள், புகழ்பெற்ற மயில் அரியாசனம் ஆகியவை உட்படப் பேரரசின் பெருநிதிக் குப்பைகளை அவர் கைப்பற்றினர். எல்லாச் செல்வந்தர்களும் நன்கொடை வழங்கவேண்டுமென்று வற்புறுத்தினர். ஏற்கெனவே வாக்களித்த இருபது கோடியைப் பணமாகத் தராவிட்டால் உடல் ஒறுப்புத் தண்டனை அளிக்கப்போவதாக பரான் உல் முல்க்கை பயமுறுத்தினர். அதனால், பிந்தையவர் நஞ்சுண்டு இறந்தார். நன்கொடையில் பரான் உல் முல்க்கின் பங்கான இரண்டு கோடி

ரூபாய்களை அவரது வாரிசான சஃப்தார்ஜங் பணமாகவும் பொருளாகவும் வழங்கினுர். முகமது ஷாவை மீண்டும் அரியணையில் அமர்த்திவிட்டு, மே மாதம் 16ஆம் தேதியன்று நாதிர் ஷா டில்லியை விட்டுப் புறப்பட்டார். புறப்படுவதற்கு முன்ஞல் நைஸாம் உல்முல்க்கின் நம்பிக்கைத் துரோகமான நடத்தைபற்றி முகமது ஷாவிற்கு எச்சரிக்கை செய்தார். சூழ்ச்சி மிகுந்தவர் என்றும், தந்நல மிக்கவர் என்றும், குடிமகனுக்குத் தகாத பேராசை கொண்டவர் என்றும் நைஸாமைப்பற்றிக் குறிப்பிட்டார். அவர் முப்பது கோடிக்குமேல் பணமாகக் கொள்ளையிட்டுச் சென்ருர். அதைத் தவிர அணிகலன்களும்; பொன், வெள்ளிப் பாத்திரங்களும்; தட்டு முட்டுச் சாமான்களும்; விலை மதிப்பில்லாத பிற பொருள்களும் அவரிடம் சிக்கின. ஆயிரம் யானைகளையும், ஏழாயிரம் குதிரைகளையும், பத்தாயிரம் ஒட்டகங்களையும், நூறு அலிகளையும் (eunuchs), நூற்றுமுப்பது கணக்கர்களையும், இருநூறு கட்டடக் கலைஞர்களையும், நூறு கொத்தர்களையும், இருநூறு தச்சர்களையும் தம்முடன் கொண்டு சென்ருர். அதைத் தவிர, காபூல் மாகாணத்தை முகலாயப் பேரரசிலிருந்து பறித்துப் பாரசீகத்துடன் இணைத்துக்கொண்டார்.

முகமது ஷாவும் அவர்தம் அரசவையினரும் நாதிர் ஷாவின் படையெடுப்பினுல் செயலிழந்து நின்றனர். அதனுல் அவருக்கும் நாட்டிற்கும் பேரவமானம் ஏற்பட்டது. ஆயினும், அதிலிருந்து படிப்பினையை உணரப் பேரரசர் தவறிவிட்டார். நைஸாம் உல் முல்க்கின மீது அவர் சந்தேகம் கொண்டபோதிலும், வஸீர் பதவியிலிருந்து கமாருதீனை நீக்குவதற்கான நெஞ்சுறுதி கொள்ளவில்லை. ஆட்சித் துறையை ஒழுங்குபடுத்தியமைக்க எவ்வித நடவடிக்கையும் மேற்கொண்டாரில்லை. அதனுல் எப்போதும்போலவே நிலைமை மோசமாக இருந்தது. முன்ஞல் இருந்ததைப்போலவே மாளவம், குஜராத், பந்தல்கண்டு (Bundelkhand) போன்ற பகுதிகளில் மட்டுமல்லாது அவற்றிற்கு வடக்கிலிருந்த பகுதிகளிலும் மராாத்தியரின் கொள்ளைத் தாக்குதல்கள் தொடர்ந்து நடைபெற்றன. சவுத் வரியைப் பெறுவதற்காக வங்காளம், பீகார், ஒரிஸ்ஸா ஆகியவற்றின்மீது ரகுஜிபான்ஸ்லே (Raghuji Bhonsle) படையெடுத்துச் சென்ருர். ரகுஜி பான்ஸ்லேயை ஒடுக்குமாறு பீஷ்வாவின் மைத்துனரான பாலாஜி பாஜிராவை (Balaji Baji Rao) வேண்டிக்கொள்வதைத் தவிர, முகமது ஷாவினுல் வேருென்றும் செய்ய முடியவில்லை. அதுபோது மாளவத்தின் ஆட்சிப் பொறுப்பை ஏற்பதற்கு பீஷ்வாவை முறையாக நியமித்தார். கடேஹர் (Katehr) என்ற மானியமும் அலி முஹமது கான் ருஹிலா (Ali Muhammed Khan Ruhela) எனும் துணிச்சல் வீரன் கையில் சிக்கியது. அது ருஹில்கண்டு

எனும் பெயரையும் பெற்றது. படானுக்கு வடகிழக்காகப் பதினுன்கு கல் தொலேவிலுள்ள பங்கார் (Bangarh) எனும் ருஹிலாவின் காவல் மிகுந்த நகரத்தின்மீது முகமது ஷா படையெடுத்துச் சென்ருர். தோல்வியுற்ற அலி முகமதுகான் சிறைப்பட்டார். ஆனுல், கமாரு தீனின் தலேயீட்டினுல் பின்னுல் அவர் விடுதலே பெற்ருர். ருஹில் கண்டிற்குத் திரும்பிச் சென்று அதனே மீண்டும் கைப்பற்றினுர்.

1748ஆம் ஆண்டு தொடக்கத்தில் அஹ்மத் ஷா அப்தாலி (Ahmed Shah Abdali) பஞ்சாபின்மீது படையெடுத்து வந்தார். அவர் அப்தாலி அல்லது துரானி கூட்டத்தில் சடோஸாய் (Sadozai) பிரிவினேச் சார்ந்த ஆப்கானியர் ஆவார். 1747ஆம் ஆண்டு இறுதியில் கொலேகாரன் ஒருவனின் குறுவாளுக்கு இரையாகி நாதிர் ஷா வீழ்ந்ததும், அகமது ஷா ஆப்கானிஸ்தானத்தின் அரச ரானுர். பஞ்சாபின் கவர்னர் பதவியைப் பறித்துக்கொண்ட ஷாநவாஸ் கான் (Shahnawaz Khan) என்பவர் இந்தியாவின்மீது படையெடுத்துவருமாறு அகமது ஷாவிற்கு அழைப்பு விடுத்தார். படையெடுத்துவந்த அகமத் ஷா லாகூரை அழித்துவிட்டுப் பஞ்சாபை நோக்கி முன்னேறினுர். ஆயின், பேரரசர் முகமது ஷாவின் புதல்வரான இளவரசர் அஹ்மத், மாச்சிவாராவிற்கு (Machiwara) அருகிலுள்ள மனுபூரில் ஆப்கானியருடன் போரிட்டு அகமது ஷாவைத் தோற்கடித்துக் காபூலுக்குப் பின்வாங்குமாறு செய்தார்(மார்ச் 1748).

1748ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 26ஆம் தேதி முகமது ஷா இவ்வுலக வாழ்வை நீத்தார். அவருக்குப்பின் அவரது புதல்வரான அஹ்மத் என்பவர் பேரரசர் அஹ்மத் ஷா எனும் விருதுப் பெயரோடு பட்டமெய்தினுர். இன்றுவரையிலும் முகமது ஷா ரங்கிலா என அறிப்படும் முகமது ஷாவானவர் திறமையற்றவர். சிற்றின்பங்களில் காலத்தைச் செலவிட்டு ஆட்சிப் பொறுப்பினே அமைச்சர்களிடம் விட்டுவைத்தார். அவரது ஆட்சிக் காலத்தில் மத்திய அரசு மதிப் பிழந்தது; படைக்கட்டுப்பாட்டையும் ஒழுங்குணர்வையும் இழந்தது; பேரரசும் அளவில் வெகுவாகச் சுருங்கியது. தக்கணத்தின் ஆறு சுபாக்களும் அவாத், வங்காளம், பீகார், ஒரிஸ்ஸா ஆகிய மாநிலங் களும் நடைமுறையில் உரிமை பெற்று விளங்கின. மாளவம், பண் டல்கண்டு, குஜராத் ஆகியவை உண்மையில் மராத்தியருக்குச் சொந்தமாயின. ராஜபுதனமும் பேரரசின் பிடியிலிருந்து முழு விடுதலேபெற்றது. தென்னிந்தியாவில் இருந்த ஐரோப்பிய வணிகர் களும் முதல் முறையாகப் பகுதிகளேக் கைப்பற்றி ஆட்சியுரிமை யைப் பெறும் பேராவல் மிகுந்த திட்டங்களே மனத்தில் கொள்ளத் தொடங்கினர்.

## அஹ்மத் ஷா 1748-1754

1748ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 28ஆம் தேதியன்று டில்லிக்கு வடக்கேயிருந்த ஷாலமார் பூங்காவில் இளவரசர் அஹ்மத் பேரரசராக முடிசூட்டிக்கொண்டார்; அஹ்மத் ஷா எனும் பட்டப் பெயரையும் கொண்டார். அப்போது அவர் இருபது வயது நிரம்பிய இளைஞர். ஆட்சித்துறையில் அனுபவமோ, தலைவருக்கான பண்புகளோ அற்றவர். 'கெடுமதி படைத்த, ஒழுக்கக் கேடான, நயவஞ்சகமான, அற்பத்தனமான, ஒன்றிற்கும் உதவாத' மனிதர். அவர் பரான் உல் முல்க்கின் மைத்துனரும் மருமகனும் ஆகி, அவாதின் அரசப் பகர ஆளாக இருந்த ஸஃப்தார் ஜங்கை (Safdar Jang) தமது வஸீராக நியமித்தார். கமாருத்தீன்கானின் மகனை முயின் உல்முல்க் (Muin-u'-Mulk) என்பாரைப் பஞ்சாபின் அரசப் பகர ஆளாக நியமித்தார். சாதத்கான் ஸுல்ஃபிகார் (Saadat Khan Zulfigar) மீர் பக்ஷியாகப் பதவியேற்றார். ஜாவித் கான் (Javid Khan) எனும் தலைமை அலிக்கு நவாப், பகதூர் போன்ற பட்டங்கள் நிறைய வழங்கப்பெற்றன. அவர் அரசவைக் கட்சியின் தலைவராகவும் விளங்கினர். 'பெண்களும் அலிகளும் நிறைந்த இரகசியக் குழுவான' அக் கட்சியினர் அரசாங்கத்தின்மீது ஆதிக்கம் செலுத்தினர். பேரரசில் பணியாற்றிய பெருஞ்செல் வந்தர்களுக்கும் பேரதிகாரிகளுக்கும் எதிராக இருந்தனர்.

தமது ஆட்சியின் ஆரம்பத்திலிருந்தே அஹ்மத் ஷா, நவாப் பகதூரின் தலைமையிலிருந்த அரசவைக் கட்சியின் கைப்பாவையாக இருந்துவந்தார். நவாப் பகதூரும் ஸஃப்தார் ஜங்கிற்கு எதிராகச் சதிசெய்தார். 1748ஆம் ஆண்டு நவம்பர் மாதக் கடைசியில் வஸீரைக் கொலைசெய்வதற்காக எழுந்த வெற்றிபெறாத சதியின் காரணமாக அவருக்கும் பேரரசருக்குமிடையே பகைமை தோன்றியது. சிறிது காலத்திற்கு வஸீர் அரசவைக்கு வராமலேயே இருந்தார். ஆனால், விரைவிலேயே சமாதானம் ஏற்பட்டது. அடுத்த ஆண்டுத் தொடக்கத்திலும் வஸீரை நீக்குவதற்கான சதி ஒன்று உருவாகியது. பேரரசருக்கு உதவிபுரிவதற்காக நைஸாம் உல்முல்க்கின் இரண்டாவது மகனை நாஸிர் ஜங்கை (Nazir Jang) தக்கணத்திலிருந்து வரவழைத்தனர். இம்முறையும் சூழ்ச்சி பலிக்கவில்லை. ஆயின், அதன் விளைவாக ஸஃப்தார் ஜங்கிற்கும் அலியான நவாப் பகதூர், அரச மாதாவான மல்காயி ஸமானி (Malka-i-Zamani) ஆகியோரின் தலைமையிலான அரசக் கட்சிக்குமிடையே பிளவு தோன்றியது; அதனோடு ஆட்சியில் மிகுந்த குழப்பமும் ஏற்பட்டது.

ருஹில்கண்டின் எல்லையில்தான் ஸஃப்தார் ஜங்கின் மாகாணமாகிய அவாத் அமைந்திருந்தது. ஆப்கானியக் கூட்டத்தினர் ருஹில்

கண்டை ஆட்சி செய்தனர். உண்மையான ருஹில்கண்டின் தலைவர்களாகத் திகழ்ந்தவர்கள் ருஹில்லர்கள். ஃபருக்காபாத்தையும் கன்னோஜையும் ஆண்டவர்கள் பங்காஷ் பத்தான்கள் (Bangash Pathans). ஃபருக்காபாத்தை ஆண்ட முகம்மது கான் பங்காஷ் 1743ஆம் ஆண்டில் இறந்ததும், அவரது புதல்வரான கைம் கான் (Quaim Khan) என்பவரே வாரிசாக வந்தார். தமது மாகாணத்தின் அண்மையிலிருந்த ஆப்கானியரின் வலிமையைக் குறைக்க எண்ணிய ஸஃப்தார் ஜங், ருஹில்லர்களைத் தாக்குமாறு கைம் கானைத் தூண்டினார். அவரது திட்டம் வெற்றி பெற்றது. படானிலிருந்த ருஹில்லர்களைக் கைம்கான் முற்றுகையிட்டார். ஆனால், அலி முகம்மதுகான் ருஹிலாவின் மூத்த மகனான சாதுல்லா கான், கைம் கானை வீழ்த்தினார். இதனைத் தமக்குச் சாதகமாகச் செய்து கொண்ட ஸஃப்தார் ஜங், 1748ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் பேரரசருடன் ஃபருக்காபாத்தை நோக்கிப் புறப்பட்டார். பங்காஷ் பகுதியைக் கைப்பற்றியதோடு, அறுபது இலட்ச ரூபாய்களையும் கைப்பற்றிக்கொண்டு அலகாபாத் கோட்டையில் கைம் கானின் சகோதரர்களில் ஐவரைச் சிறைப்பிடித்தார். ஆரம்ப காலத்தில் முகம்மது கானுக்கு அளிக்கப்பெற்ற மாவட்டங்களை மட்டுமே பங்காஷ் குடியினர் கையில் விட்டுவைத்தார். பங்காஷ் குடியினரிடமிருந்து கைப்பற்றிய மாவட்டங்களை ஆட்சி செய்வதற்காக ராஜா நவால் ராய் என்பவரை நியமித்துவிட்டு டில்லி திரும்பினார். அவர் இல்லாத சமயத்தில் ஆப்கானியர் கலகம் செய்தனர். அவர்களை 1750ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 13ஆம் தேதி நவால் ராயைத் திடீரெனத் தாக்கிக் கொன்றனர். நவால் ராய்க்கு உதவி செய்வதற்காக விரைந்து வந்த அமைச்சரே தோல்வியுற்றார். 1750ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 23ஆம் தேதியன்று ஸஹாவருக்கும் பாடியாலிக்குமிடையே இருந்த ராம்சடொனி எனுமிடத்தில் அஹ்மத் கான் பங்காஷிடம் தோற்றுக் காயமுற்றார். அவர் டில்லிக்குத் திரும்பிவந்ததும், நவாப் பகதூர், இன்டிஸாமுத் தௌலா (Intizam-ud-daula) பேரரசர், அவர்தம் தாயார் ஆகியோர் தம்மைக் கவிழ்க்கச் சூழ்ச்சி செய்தனர் என்பதைக் கண்டார். எவ்வாறெனினும், தக்க சமயத்தில் அவர் திரும்பியதால் சதிகாரர்கள் அச்சமுற்றுத் தங்களது திட்டத்தைக் கைவிட்டனர். ஆனால், அவாதின் பெரும் பகுதியையும், அலகாபாத் மாநிலத்தின் ஒரு பகுதியையும் அஹ்மத் கான் பங்காஷ் பிடித்துக்கொண்டதால், மற்றொரு வகையில் வஸீருக்குப் பேரிடர் தோன்றியது. நல்ல காலமாக ராஜேந்திர கிரி கோசெய்ன் (Rajendra Giri Gosain) என்பவர் தலைமையில் இருந்த எதற்கும் துணிந்த நாக சன்யாசிகள் (Naga Sanyasis) அலகாபாத் கோட்டை மதிலுக்கு முன்னால் பங்காஷ் தலைவருடன் கடுமையாகப் போரிட்டு அவரைத் தடுத்து நிறுத்தினர். மேலும், அவர்கள் ஸஃப்தார்

ஜங்கிற்கு உதவி செய்ய எண்ணிப் படையெடுத்துவந்த பத்தானியர்களை விரட்டியடித்தனர். அதற்குள் தமது ஆயத்தங்களை முடித்துக் கொண்ட ஸஃப்தார் ஜங், 1751ஆம் ஆண்டு மார்ச் மாதக் கடைசி வாரத்தில் கைம்கஞ்ச் (Qaimganj) எனுமிடத்தில் மராத்தியரின் உதவிகொண்டு அஹ்மத் கான் பங்காஷை முறியடித்தார். அதன் பின்னர் அவர் ஃபடேகாரை முற்றுகையிட்டு, 1751ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 28ஆம் தேதியன்று அக் கோட்டையைக் கைப்பற்றினார். அஹ்மத்கானும் அவருடைய கூட்டாளியான சாதுல்லாகான் ருஹிலாவும் குன்றுகளுக்கு ஓடிவிட்டனர். ஆயின், கார்வாலில் காஸிபூருக்கு வடகிழக்கே இருபத்திரண்டு கல் தொலைவிலிருந்த சால்கியா (Chalkiya) எனுமிடத்தில் தங்கியிருந்த அவர்களை ஸஃப்தார் ஜங்கின் படையினர் சூழ்ந்துகொண்டனர். பத்தானியர் முறியடிக்கப்பெற்ற பிறகு அவர்களை அழிக்க மராத்தியர் விரும்பவில்லை. அதனால் மேற்கொண்டு படையெடுப்பில் அவர்கள் அசட்டையாக இருந்தனர். அதனால் பத்தானியருடன் சமாதானம் செய்துகொள்ள வஸீரும் இசைந்தார். முப்பது இலட்ச ரூபாய்கள் (மற்றொரு சான்றுபடி 80 இலட்சம்) தருவதாக ஒப்புக்கொண்ட அஹ்மத் கான் பங்காஷை அவர் மன்னித்தார். ஆயின், வாக்களித்த தொகை முழுவதும் தம்மிடம் வந்து சேரும்வரையில் அஹ்மத் கானின் ஆளுகைக்குட்பட்ட பகுதியில் பாதியைப் பிணையமாகத் தம்மிடம் அளிக்கவேண்டுமென்ற நிபந்தனை விதித்தார். பங்காஷ் நாட்டில் பாதியை அஹ்மத் கானுக்கே திரும்ப அளித்த வஸீர், மறு பாதியை, அதாவது, $16\frac{1}{2}$ பர்கானாக்களை மராத்தியரிடம் ஒப்படைத்தார். மராத்தியர் தமக்களித்த உதவிக்காக அவர் 30 இலட்ச ரூபாய் தரவேண்டியிருந்தது. அதற்கு ஈடாகவே $16\frac{1}{2}$ பர்கானாக்களை அவர்களுக்களித்தார். இங்ஙனம் வடக்கில் கோல் (Kol) அல்லது அலிகாரிலிருந்து தென்கிழக்கே கோரா ஜஹானாபாத் (Jahanabad) வரையிலுள்ள பகுதிகள் மராத்தியரிடம் ஒப்படைக்கப்பெற்றன. ருஹிலர்களும் தங்கள் வீடுகளுக்குத் திரும்பினர். இத்தகைய சமாதான ஏற்பாடு 1752ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத் தொடக்கத்தில் ஏற்பட்டது.

தலைநகரில் வஸீர் இல்லாத சமயத்தில் அஹ்மத் ஷா அப்தாலி பஞ்சாபைத் தாக்கினார். அது அவரது மூன்றாவது படையெடுப்பாகும். முகமது ஷாவின் ஆட்சியின் இறுதியில் (1748ஆம் ஆண்டு ஜனவரி-மார்ச் மாதங்களில்) முதல் படையெடுப்பு நேர்ந்தது. 1749ஆம் ஆண்டில் இரண்டாவது படையெடுப்பு நிகழ்ந்தது. இரண்டாவது படையெடுப்பின்போது பஞ்சாபின் அரசப் பகர ஆளான முயின் உல் முல்க் என்பாரை அஹ்மத் ஷா முறியடித்தார். ஆண்டுதோறும் பதினான்காயிரம் ரூபாய்கள்

வழங்குவதற்கான ஒப்பந்தம் ஒன்றில் முயின் உல் முல்க்கின் கையெழுத்தினை அவர் வற்புறுத்திப் பெற்றார். வாக்குறுதியளித்தபடி கப்பத்தைச் சீராகச் செலுத்த முயின் உல் முல்க் தவறியதால், அஹ்மத் ஷா மூன்றாவது முறையாக சிந்துவைக் கடந்துவந்தார். லாகூருக்கு அருகில் முயின் உல் முல்க்கை முற்றுகையிட்டுத் தமது மேலாதிக்கத்தை ஏற்குமாறு செய்தார். அச்சமயத்தில் இந்தியப் பத்தானியரை வெற்றி கொண்ட ஸஃப்தார் ஜங், காசி அரசர் ராஜா பல்வந்த் சிங்கை ஒடுக்குதற்காகப் படையெடுத்துச் சென்றார். ஆப்கானியப் படையெடுப்பினால் அரண்டிருந்த பேரரசர், மராத்தியருடன் விரைந்து வருமாறு வஸீருக்கு அவசர ஓலைகளை அனுப்பினார். ஸஃப்தார் ஜங்கும் 1752ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் இரண்டாம் நாளில் மல்ஹர் ராவ் ஹோல்கர் (Malhar Rao Holkar), ஜெயப்ப சிந்தியா (Jayappa Sindia) ஆகிய மராத்தியத் தலைவர்களுடன் ஒப்பந்தம் ஒன்று செய்துகொண்டார். அஹ்மத் ஷா அப்தாலி உட்படப் படையெடுப்பாளர்களிடமிருந்து தேய்ந்துகொண்டு வந்த முகலாயப் பேரரசினைக் காக்கக் கடமைப்பட்ட பீஷ்வாவிற்காக அவ்விரு மராத்தியத் தலைவர்களும் இத்தகைய ஒப்பந்தத்திற்கு இணங்கினர். ஏற்கெனவே ஏற்பட்ட உடன்படிக்கையின்படி, பேரரசைப் பகைவரிடமிருந்து காப்பதற்காக பீஷ்வாவிற்கு ஐம்பது இலட்சம் தருவதாகவும், பஞ்சாப், சிந்து ஆகியவற்றில் சவுத் வரி வழங்குவதாகவும், நாகார், மதுரா, ஃபாஜ்தாரிகள் (Faujdari) உட்பட ஆஜ்மீர், ஆக்ரா ஆகியவற்றிற்குப் பீஷ்வாவை ஆளுநராக நியமிப்பதாகவும் முகலாயப் பேரரசர் உறுதிமொழி அளித்திருந்தார். இங்ஙனம் 50,000 மராத்தியப் படையினர் உடன்வர, 1752ஆம் ஆண்டு மே மாதம் ஐந்தாம் தேதியன்று வஸீர் டில்லியை அடைந்தார். ஆனால், அவர் வருவதற்கு முன்பே பேரரசர், பஞ்சாப், முல்டான் ஆகிய மாநிலங்களை அஹ்மத் ஷாவிற்கு அளித்துவிட்டார். அஹ்மத் ஷாவும் காபூலுக்குச் சென்றுவிட்டார். வஸீர் இதனால் வெறுப்படைந்தார். அவருடன் வந்த மராத்தியப் படையினர் டில்லிக்கு அருகாமையிலுள்ள ஊர்களைக் கொள்ளையிடத் தொடங்கியதால், சில இலட்ச ரூபாய்களை மல்ஹர் ராவிடம் அளித்து, அண்மையில் தக்கணத்தின் ஆறு மாநிலங்களுக்கு அரசப் பிரதிநிதியாக நியமனம் பெற்றிருந்தவரும் நைஸாம் உல் முல்க்கின் மூத்த புதல்வருமான காஸி உத்தீன் கான் புதிய பதவியை ஏற்பதில் உதவி செய்வதற்காகத் தக்கணத்திற்குச் செல்லுமாறு வேண்டிக் கொண்டார். இங்ஙனம் மராத்தியர் வெளியேறிவிட்டபோதிலும் பேரரசில் உண்மையான அதிகாரத்தைப் பறித்துக்கொண்டு ஸஃப்தார் ஜங்கை ஒன்றிற்கும் உதவாதவராகச் செய்த நவாப் பகதூர் ஜாவித் கானுக்கும் வஸீருக்குமிடையே இருந்த உறவு முறிந்தது. முந்தியவர், நவாப் பகதூரை 1752ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் ஆறும்

தேதியன்று விருந்திற்கழைத்துக் கொலை செய்தார். அதன் காரணமாகப் பேரரசருக்கும் வஸீருக்கும் இடையேயான உறவும் அடியோடு அறுந்தது. மேலும், அவர்களிருவருக்குமிடையே உள்நாட்டுப் போரும் மூண்டது. மே மாதம் நான்காம் தேதி தொடக்கம்; நவம்பர் மாதம் ஆறும் தேதி வரையிலான ஆறு மாத காலத்திற்கு டில்லி நகர வீதிகளில் கடுமையான சண்டை நடைபெற்றது. அச் சண்டையில் கியாஸ் உத்தீன் கானின் புதல்வரும், அமீர் உல் அம்ரா பதவியை வகித்தவருமான இமாத் உல் முல்க் முக்கியப் பங்கு பெற்றார். அவர் ஸஃப்தார் ஜங்கின் படையிலிருந்த ஸுன்னியப் பிரிவினைச் சார்ந்த பல வீரர்களைப் பேரரசுப் பக்கம் இழுத்துக்கொண்டார். ஆனால், வஸீரும் தமது கூட்டாளியான பரத்பூரை ஜிண்டஜாத் (Jat) அரசர் சுராஜ் மாலை (Suraj Mal) உதவிக்கு அழைத்துக் கொண்டார். இறுதியில் ஸஃப்தார் ஜங் தோல்வியுற்றார். அவாத், அலகாபாத் ஆகியவற்றின் அரசப் பேராளாக அமர்த்தப்பெற்றார். 1753ஆம் ஆண்டு நவம்பர் மாதம் ஏழாம் தேதியன்று ஸஃப்தார் ஜங் டில்லியிலிருந்து ஃபைஸாபாத்திற்குக் (Faizabad) கிளம்பினார். கமர் உத்தீனின் புதல்வரும் இமாத் உல் முல்க்கின் மாமனுமான இன்டிஸாம் உத்தௌலா பிரதம அமைச்சர் பதவியில் நிலையானார்.

ஸஃப்தார் ஜங்குடன் சண்டையிட்டபோது இமாத் உல் முல்க்கின் அழைப்பிற்கிணங்க மராத்தியர் டில்லிக்கு வந்தனர். ஆனால், அவர்கள் வருவதற்குள் சண்டை முடிந்து சமாதானம் ஏற்பட்டிருந்தது. முன்னாள் வஸீரும் ஓய்வு பெற்றிருந்தார். ஆயின், ஸஃப்தார் ஜங்குடன் நட்புறவுகொண்ட சுராஜ்மாலைத் தண்டிப்பதற்காக டில்லி வந்த மராத்தியப் படையினரைப் பேராசை மிக்க மீர் பக்ஷி பயன்படுத்திக்கொண்டார் ஜாட் கோட்டைகளான டீக் (Deeg), கும்பர் (Kumbher) ஆகியவற்றை முற்றுகையிடுவதற்காக மல்ஹர்ராவுடன் இமாத் உல் முல்க்கும் நேரில் சென்றார். மதில்களைத் தகர்க்கும் பீரங்கிகள் இல்லாது அக் கோட்டைகளைக் கைப்பற்ற முடியாது எனக் கண்டு அவற்றைக் கடனாக அளிக்குமாறு பேரரசரை வற்புறுத்தினார். ஆனால், பேராவல் மிகுந்த இமாத் உல் முல்க்கின் பேராசைத் திட்டங்களைப் பேரரசர் ஐயக் கண் கொண்டு நோக்கினார். புதிய வஸீரின் ஆலோசனையின் பேரில் இமாத் உல் முல்க்கின் வேண்டுகோளுக்கு இணங்கமறுத்தார். அதனால் சீற்றமுற்ற மீர் பக்ஷியான இமாத் உல் முல்க் வஸீரின் மாளிகையைத் தாக்கத் தூண்டினார். ஆனால், அவரால் வஸீரைக் கவிழ்க்க முடியவில்லை. இருந்தபோதிலும், அச்சங்கொண்ட பேரரசரும் அவரது பிரதம அமைச்சரும் சுராஜ்மாலுடன் பேச்சு வார்த்தை தொடர்ந்தனர். சுராஜ்மாலும் அவாதிலிருந்த ஸஃப்தார் ஜங்கைத் திரும்ப அழைத்துக்கொள்ளுமாறு பேரரசருக்கு யோசனை

கூறினர். இமாத்உல் முல்க்கின் நடமாட்டங்களைக் கவனிப்பதற்காக அரசரும் அமைச்சரும் பெரும் படையுடன் டில்லியைவிட்டு நீங்கி சிகந்தராபாத்தை வந்தடைந்தனர். அதுசமயம், அவர்களைத் திடீரென்று தாக்குமாறு மல்ஹர் ராவ் ஹோல்காரை இமாத் உல் முல்க் தூண்டினர். மல்ஹர் ராவ் அண்மையில் வந்துவிட்டார் என்பதை அறிந்ததும் பேரரசரும், அவர்தம் தாயாரும், அமைச்சரும் டில்லிக்கு ஓடினர். மறுநாள் காலையில் அவர்களது படைகளை மராத்தியர் சூறையாடினர். அதன் பின்னர், டீக் முற்றுகையை மராத்தியர் கைவிட்டனர். இமாத் உல் முல்க்கும் மல்ஹர் ராவும் டில்லிக்குச் சென்று இன்டிஸாம் உத் தௌலாவைப் பதவியிலிருந்து நீக்கிவிட்டு இமாத் உல் முல்க்கையே வஸீராக நியமிக்கவேண்டுமென்று மன்னரை வற்புறுத்தினர். புதிதாகப் பதவியேற்ற வஸீரான இமாத் உல் முல்க் 1754ஆம் ஆண்டு ஜூன் மாதம் இரண்டாம் தேதியன்று அஹமத் ஷாவை அரியணையிலிருந்து நீக்கிச் சிறையிலிட்டார். அவருக்குப் பதிலாக ஜகந்தர் ஷாவின் இரண்டாவது புதல்வரான அஸீஸ் உத்தீனை இரண்டாம் ஆலம்கீர் எனும் பட்டப்பெயரோடு அரியணையில் அமர்த்தினர். ஒரு வாரம் கழித்து முன்னாள் மன்னரையும் அவரது தாயாரையும் குருடாக்கினர்.

## இரண்டாம் ஆலம்கீர், 1754–1759

ஐம்பத்தைந்து வயதில் அரசுரிமையெய்திய இரண்டாம் ஆலம்கீர் வாழ்நாள் முழுவதையும் சிறையில் கழித்த காரணத்தால் போரிலோ அல்லது பொது ஆட்சித்துறையிலோ அனுபவம் சிறிதும் அற்றவராயிருந்தார். எனினும், வரலாற்று நூல்களைப் படிப்பதில் அவர் மிகுந்த ஆர்வம் காட்டினர். சிற்றின்பங்களை வெறுத்து முறையாகத் துதி செய்துவந்தார். ஆனால், அதே சமயத்தில் ஆற்றலற்றவராகவும், மனவுறுதியும், தலைமைப் பண்பும் சிறிதும் இல்லாதவராகவும் காணப்பெற்றார். ஐந்தாண்டுகளுக்கு நீடித்த அவரது குறுகிய ஆட்சிக் காலம் முழுவதிலும் வஸீரான இமாத் உல் முல்க்கின் கைப்பாவையாக வாழ்ந்துவந்தார். கொள்கையற்ற, தன்னலம் மிகுந்த இமாத் உல் முல்க், அரசாங்கப் பணத்தைக் கையாடியவர். அரச குடியினரை தவிக்கவிட்டதோடு, பேரரசரின் மூத்த புதல்வரும் ஷா ஆலம் என்ற விருதுப் பெயர் பெற்றவருமான அலி காஹரை (Ali Gauhar) டில்லியிலிருந்து விரட்டி, கிழக்கு மாநிலங்களில் தஞ்சம் புகுமாறு செய்தவர். வட இந்தியாவினின்றும் மராத்தியரை வெளியேற்றுவதற்காக மராத்திய எதிர்க்கூட்டணி ஒன்றை உருவாக்கவேண்டுமென்ற மூடக்கனவு கண்டவர். ஆனால், அக் கனவு பலிக்கவில்லை. உண்மையில் மராத்தியர் எப்போதை

யும்விட அதிக வலிமை பெற்று விளங்கினர். 1759ஆம் ஆண்டு ஏப்ரல்—ஜூன் மாதங்களில் லாகூரில் அவர்களது நேரடி ஆட்சி ஏற்பட்டது. மேல் தோவாப் (Doab) பகுதியை அவர்கள் கொள்ளையிட்டனர். பிரதம மந்திரியாக இருந்த காலத்தின் பெரும் பகுதியில் இமாத் உல் முல்க் மராத்தியரின் படை பலத்தை நம்பி இருந்தார்.

அப்தாலியின் ஆதிக்கத்திலிருந்த பஞ்சாபை மீட்கவேண்டு மென்று முயன்றதே வஸீரின் செயல்களில் முதலாவதாகும். காபூலின் அஹ்மத் ஷா அப்தாலியின் அரசப் பகர ஆளாக இருந்து பஞ்சாபை ஆண்டுவந்த முயின் உல் முல்க் (Muin-ul-Mulk) என்பவர் 1753ஆம் ஆண்டு நவம்பர் மாதம் மரணமெய்தினர். சிறுவனுக இருந்த அவரது மகனை அவர் வகித்த பதவியை வகிப்ப தற்கும், அச் சிறுவனின் தாயாராகிய முக்லானி பேகம் (Mughlani Begam) காப்பாளராகப் பணிபுரிவதற்கும் அஹ்மத் ஷா அனுமதி வழங்கினர். சிறிது காலத்திற்குள் அரசப் பிரதிநிதியாக இருந்த சிறுவன் இறந்ததும் அப் பதவியை முக்லானி பேகமே வகித்தார் அவரது ஆட்சியில் பஞ்சாபின் நிலை மோசமாகியது. அந்த மாநிலம் முழுவதிலும் அமைதியின்மை தாண்டவமாடியது. பஞ்சாபை மீட்பதற்கு இவ்வாய்ப்பினை வஸீரான இமாத் உல் முல்க் பயன்படுத் திக்கொண்டார். பேரரசரையும் தம்முடன் அழைத்துக்கொண்டு டில்லியை விட்டுப் புறப்பட்டார். ஆனால், படையில் தோன்றிய பயங்கரக் கலகம் காரணமாக பானிப்பட்டிலிருந்து அவர் திரும்ப வேண்டியதாயிற்று. சில மாதங்களுக்குள் அவர் மீண்டும் புறப்பட்டுச் சென்றார். முக்லானி பேகத்தைச் சிறைப்பிடித்து வருவதற்காகத் தமது படையின் ஒரு பகுதியை லூதியானவிலிருந்து லாகூருக்கு அனுப்பினர். மேற்கொண்ட செயலில் வெற்றிபெற்ற பிறகு பஞ்சாபில் தோன்றிய தொல்லைகளுக்கெல்லாம் காரணமாய் இருந்த துரோகியான அதின பெக் கான் (Adina Beg Khan) என்பவனை பஞ்சாபின் கவர்னராக நியமித்தார். அப் பதவியை வழங்குவதற்கு ஈடாக அவனிடமிருந்து 30 இலட்ச ரூபாய்களைப் பெற்றுக்கொண் டார். ஆயின், பஞ்சாபின் விவகாரங்களில் வஸீர் தலையிட்டதனல் அம் மாநிலத்தைத் தமக்குச் சொந்தமானது எனக் கொண்டாடிய அஹ்மத் ஷா அப்தாலி இந்தியாவின்மீது நான்காவது முறையாகப் படையெடுத்து வந்தார். ஆப்கானிய மன்னர் லாகூரின்மீது படையெடுத்து வந்தபோது அச்சங்கொண்ட அதின பெக் கான் ஹிஸ்ஸாருக்கு ஓடினன். அதன் பிறகு, அப்தாலி விடாப்பிடியாக டில்லியை நோக்கி முன்னேறிச் சென்றார். அதைக் கண்டு பீதியடைந்த இமாத் உல் முல்க், தமது மாமியாரான முக்லானி பேகத்தைத் தமக்காகப் பரிந்து பேசுமாறு செய்து, அதன் பின்னர்

ஷாவிடம் சரணமடைந்தார். அப்தாலியும் அவரை மன்னித்து வஸீராகத் தொடர்ந்து இருக்க அனுமதித்தார்.

1757ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 28ஆம் தேதியன்று டில்லி நகரை அடைந்த அஹ்மத் ஷா இரண்டாம் ஆலம்கீரைச் சந்தித்தார். தலைநகரைச் சூறையாடுமாறு ஆணையிட்டதோடு செல்வந்தர்கள், அதிகாரிகள், குடிமக்கள் ஆகியோரிடமிருந்து கட்டாய நன்கொடைகளைப் பெற்றார். பலர் தலைநகரைவிட்டு ஓடினர். சிலர் தங்கள் மானத்தைக் காத்துக்கொள்வதற்காகத் தற்கொலை செய்துகொண்டனர். படையெடுத்து வந்த அப்தாலி ஒரு மாத காலம் தலைநகரில் தங்கினார். ஆலம்கீரின் மகளைத் தமது மகன் தைமூருக்கு மணமுடித்து வைத்தார். ஸஃப்தார் ஜங்கிற்கு உதவிய காரணத்தால் ஜாத் அரசரான சுராஜ்மாலைத் தண்டிப்பதற்காகப் படை ஒன்றினை அனுப்பினார். சில நாட்களுக்குப் பின் அவரே ஆக்ராவிற்குப் புறப்பட்டுச் சென்றார். இமாத் உல் முல்கின் ஆலோசனையின் பேரில் அவத்தின் ஷுஜா உத்தௌலாவிடமிருந்தும் பிற பிரமுகர்களிடமிருந்தும் திறை கொள்வதற்காகத் தோவாப் பகுதிக்கு ஒரு படைப் பிரிவினை அனுப்பிவைத்தார். அவ்வாறு படையெடுத்து வந்தவர்களை ஷுஜா உத் தௌலா, பில்கிராமுக்கருகேயுள்ள சண்டி (Sandi) எனுமிடத்தில் சந்தித்தார். சிறிது காலத்திற்கு முன்னர்தான் அவருடன் நட்புக்கொண்ட சாதுல்லாகான் ருஷிலாவின் மூலமாக இருதரப்பாருக்குமிடையே சண்டையின்றியே சமாதானம் தோன்றியது. சாதுல்லாகான் ஐந்து லட்ச ரூபாய்கள் அளித்தார். மேலும், தருவதாகத் தெளிவற்ற வாக்குறுதிகளையும் அளித்தார். அதன் பிறகு படையெடுத்து வந்த அன்னியர் இமாத் உல் முல்க்குடன் ஃபரூக்காபாத்திற்குத் திரும்பினர். அங்கிருந்து அப்தாலி அவர்களைத் திரும்ப அழைத்துக்கொண்டார். ஆயின், சுராஜ்மாலுக்கு எதிராகச் சென்ற படைப் பிரிவு ஏமாற்றத்துடன் திரும்பியது. பேச்சுவார்த்தைகளை நீட்டிச் சென்ற ஜாத் மன்னர் இறுதியில் பணம் ஏதும் தராமலே தப்பித்தார்.

அப்தாலி மதுராவிற்கும் ஒரு படையை அனுப்பிவைத்தார். அப் படை அந் நகரத்தைச் சூறையாடி அழித்துவிட்டுப் படைக்கலந் தாங்காத புனிதச் செலவினரைக் கொன்று குவித்தது. நல்ல வேளையாக ஆப்கானியப் படையில் கொள்ளைநோய் பரவியதால் பெருவாரியானவர் மடிந்தனர். அதனால் அஹ்மத் ஷா திரும்பிச் செல்ல வேண்டியதாயிற்று. திரும்பிச் செல்லும் வழியில் இரண்டாம் ஆலம்கீர் டில்லிக்கு அருகில் அவரைச் சந்தித்து வஸீரான இமாத் உல் முல்க் முறைகேடாகத் தம்மை நடத்துவதாகப் புகார் செய்தார். அதன் விளைவாக, அப்தாலி நாஜிப்கான் ருஷிலாவை மீர்பக்ஷியாக நியமித்

தார். நாஜிப் உத் தௌலா எனும் விருதுப் பெயரை அவருக் களித்து, பேரரசரைக் காக்கும் பொறுப்பையும் அவரிடம் ஒப்படைத் துச் சென்றார். முகம்மது ஷாவின் மணமாகாத மகளை அப்துல்லா மணந்துகொண்டார். முகம்மது ஷாவின் விதவைகள் இருவரோடு அரச குடும்பத்தைச் சார்ந்த வேறு சில பெண்களையும் தம்முடன் கூட்டிச்சென்றார். பல கோடிக்கணக்கான ரூபாய்கள் பெறுமான முள்ள கொள்ளைப் பொருள்களையும் சுமந்து சென்றார்.

1757ஆம் ஆண்டில் அப்துல்லா திரும்பிச்சென்ற பிறகு, தலைநகரைச் சுற்றியிருந்த மாவட்டங்கள் அனைத்தையும் பேரரசர் நாஜிப் உத் தௌலாவிடம் ஒப்படைத்தார். ஆனால், நாஜிப் உத் தௌலாவோ அவற்றிலிருந்துவந்த அரசருக்கான வருவாயில் பெரும் பகுதியைத் தாமே எடுத்துக்கொண்டு, அரச குடும்பத் தினரைப் பட்டினி போட்டார். இமாத் உல் முல்க்கைக் காட்டிலும் நாஜிப் மோசமானவர் என்பதை ஆலம்கீர் உணர்ந்தார். திடீர்ப் பணக்காரரான நாஜிப் 'பெருங்குடிப் பிறந்த வஸீர் அறியாத முரட் டுத்தனத்தோடு' பேரரசரிடம் நடந்துகொண்டார். அச்சமயத்தில் தான் இமாத் உல் முல்க் மராத்தியருடன் சமாதான ஒப்பந்தம் செய்துகொண்டு, அவர்களது துணையுடன் 1757ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 11ஆம் தேதியன்று நாஜிபை முற்றுகையிட்டார். பிந்தியவரை அரசவையிலிருந்து வெளியேற்றி, அவருக்குப் பதிலாகத் தமது ஆளான அஹ்மத்கான் பங்காஷ் என்பவரை (Ahmed Khan Bangash) மீர் பக்ஷியாக அமர்த்தவேண்டுமென்பதே இமாத் உத் முல்கின் நோக்கமாகும். நாற்பத்தைந்து நாட்கள் முற்றுகைக்குப் பின் சரணடைந்த நாஜிப், ஷஹரான்பூரிலும் நாஜிபாபாத்திலும் இருந்த சொந்த நிலங்களுக்கு ஓய்வு பெற்றுச் சென்றார். இமாத் உல் முல்க்கே ஆட்சிப் பொறுப்பினை ஏற்றார். தலைநகரில் மராத்திய ருடைய செல்வாக்கு மீண்டும் வலுவடைந்தது. மராத்தியத் தலை வரான ரகுநாதராவ் 1758ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் அஹ்மத் ஷா அப்தாலியின் புதல்வரும் பகர ஆளுமான இளவரசர் தைமூரைத் (Timur) துரத்துவதற்காக பஞ்சாபின்மீது படையெடுத்துச் சென்றார். அதினா பெக் கானை அம் மாநிலத்தின் அரசப் பகர ஆளாக நியமித்துவிட்டு தக்காணத்திற்குச் செல்லும் வழியில் டில்லியை அடைந்தார். தலைநகரில் தமது பகர ஆள் ஒருவரையும், சிறு படை ஒன்றையும் வைத்துவிட்டு தக்காணத்திற்குத் திரும்பினார். அதினா பெக் இறந்ததும் சபாஜி சிந்தியா பஞ்சாபின் கவர்னரானார்.

மராத்தியருடைய உதவியால் மீண்டும் வஸீரான இமாத் உல் முல்க், பேரரசரைத் தமது கட்டுப்பாட்டில் வைத்திருப்பதற்கான வழிகளை மேற்கொண்டார். இச் சுயநல மிக்க வஸீரை எதிர்ப்பதற்

கான படையினைத் திரட்டுவதற்கு இரண்டாம் ஆலம்கீர் தமது மூத்த புதல்வரான அலி காஹரை ரோடக், ஹிஸ்ஸார் மாநிலங்கள் அடங்கிய ஜாகீருக்கு அனுப்பியிருந்தார். அவரைத் திரும்ப அழைக்குமாறு இமாத் உல் முல்க் பேரரசரை வற்புறுத்தினர். இளவரசர் திரும்பும் வழியில் வஸீர் அவரை முற்றுகையிட்டார். ஆனால், இளவரசரோவெனின் பகைப் படையைக் கடந்து யமுனை யின் மறுகரையில் இருந்த விட்டல் ராவ் மராத்தாவின் (Vittal Rao Maratha) பாசறையைச் சென்றடைந்தார். விட்டல் ராவ் அவரை ஃபருக்காபாத்திற்குப் பத்திரமாக அழைத்துச் சென்றார். அங்கே அஹ்மத் கான் பங்காஷின் ஆட்கள் இளவரசரை நல்ல முறையில் வரவேற்று அவருக்குத் தேவையானவற்றை யெல்லாம் அளித்தனர். அடுத்தபடியாக, ஷஹரான்பூரிலிருந்த நாஜிப் உத் தௌலாவிடம் இளவரசர் அடைக்கலம் புகுந்தார். எட்டு மாத காலத்திற்கு அவரை ஆதரித்துக் காத்த நாஜிப் வங்காளம், பீஹார் ஒரிஸ்ஸா ஆகிய பகுதிகளை மீண்டும் கைப்பற்றுமாறு ஆலோசனை கூறினர். அதற்கிணங்க அவத்தின்மீது படையெடுத்துச் சென்ற இளவரசரை 1758ஆம் ஆண்டு ஜனவரி மாதத்தில் லக்னோவிற்கு அருகில் ஷுஜா உத் தௌலா அன்புடன் வரவேற்று உபசரித்தார். அங்கிருந்து சென்ற இளவரசர் அலகாபாத்தை அடைந்தார். அந்த மாநிலத்தின் துணை ஆளுநரான முகம்மது குலி கான் (Muhammad Quli Khan) பாட்னா படையெடுப்பில் இளவரசருடன் இணைந்து கொண்டார்.

இரகுநாத ராவ் பஞ்சாப் மாநிலத்தை வென்று, 1758ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் லாகூரில் ஒரு காவற்படையை அமர்த்திய பின்னர், மராத்தியருடைய ஆதிக்கம் உச்ச நிலையை எட்டியது. முன்னாள் மீர் பக்ஷியான நாஜிப் உத் தௌலாதான் வட இந்தியாவில் அவர்களுக்குப் பகைவராக வரக்கூடியவர் என்பதால், அவரை அழிப் பதற்காகத் தத்தாஜி சிந்தியா (Dattaji Sindhia) ஒரு படையுடன் சென்றார். அதை அறிந்த நாஜிப் முஸஃபர் நகருக்குப் பதினெட்டுக் கல் தொலைவில் இருந்த ஷகர்தாலில் (Shakartal) தஞ்சம் புகுந்தார். தத்தாஜி அவரை அங்கேயே முற்றுகையிட்டார். 1759ஆம் ஆண்டு மாரிக்காலம் முழுவதும் முற்றுகை தொடர்ந்தது. அழிவி லிருந்து தம்மைக் காப்பாற்றுமாறு ருஹில்கண்டிலிருந்த தமது உறவி னர்களுக்கும், அவத்தின் ஷுஜா உத் தௌலாவிற்கும், காபூலின் அஹ்மத் ஷா அப்தாலிக்கும் அவசர வேண்டுகோள்களை நாஜிப் விடுத்தார். நாஜிபைக் காப்பதற்காக ருஹிலர் வருவார்களென்பதை நன்கு அறிந்ததனல், கோவிந்த் பந்தின் (Govind Pant) தலைமையில் மராத்தியப் படையொன்று கங்கையைக் கடந்து ருஹில்கண்டிற்குள் புகுந்து, ருஹிலர்களை மலைப் பகுதிக்கு விரட்டியது. அதனல்

ருஹில்கண்டிலிருந்து உதவி கிடைக்கும் என எண்ணிய நாஜிபின் நம்பிக்கை நாசமாகியது. ஆனால், மாரிக்காலத்தின் இறுதியில் கோவிந்த் பந்த்தை ஷுஜா உத் தௌலா முறியடித்தார். நாஜிப் உத் தௌலாவிற்கு உதவி செய்வதற்காகக் காபூலிலிருந்து அஹ்மத் ஷா அப்தாலி வந்துகொண்டிருந்தார் என்ற செய்தியைக் கேள்வி யுற்றதும், தாமும் நாஜிபிற்கு உதவி செய்யவேண்டுமென்று கருதி ஷகர்தாலுக்குச் செல்வதற்கான ஏற்பாடுகளைச் செய்தார். இங்ஙனம் ஷுஜா உத் தௌலா அவத்திற்குத் திரும்பிவந்தார். தத்தாஜியும் ஷகரதால் முற்றுகையைக் கைவிட்டு, யமுனை ஆற்றை மீண்டும் கடந்து, படையெடுத்து வந்த அந்நியரை எதிர்ப்பதற்காக வடக்கில் முன்னேறினர்.

இதற்கிடையில், இரண்டாம் ஆலம்கீருக்கும் அவரது வஸீரான இமாத் உல் முல்க்கிற்கும் இடையேயான பூசல் உச்சநிலைக்கு வந்தது. பேரரசர், ஷகர்தலாவில் நாஜிப் உத் தௌலாவிற்கு உதவி அனுப்பியதோடு படையெடுத்து வந்த அப்தாலியுடனும் செய்தித் தொடர்பு கொண்டிருந்தார். அதனால் சாது ஒருவரைக் காண்பதற் காக அழைத்துச்செல்லும் சாக்கில் அரண்மனைக்கு வெளியிலுள்ள கோடிலா ஃபிரோஸ் ஷாவிற்குச் (Kotila Firoz Shah) செல்லுமாறு அவரை அமைச்சர் தூண்டினர். வெளியே வந்த பேரரசரை 1759ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 29ஆம் தேதி கொலைசெய்தார். அடுத்த நாளில் முன்னாள் வஸீரான இன்டிஸாம் உத் தௌலாவும் கொல்லப்பட்டார். அதன் பிறகு காம்பக்ஷின் பேரப்பிள்ளையாகிய முஹி உல் மில்லாத் (Muhi-ul-Millat) என்பவரை மூன்றும் ஷாஜஹான் எனும் பட்டப்பெயருடன் பேரரசர் என வஸீர் அறி வித்தார். அதற்குப் பிறகு தத்தாஜி சிந்தியாவிற்கு உதவி செய்வதற் காக ஷகர்தலாவை நோக்கிச் சென்ருர். ஆனல், மராத்தியத் தலைவர் முற்றுகையைக் கைவிட்டு அப்தாலி படையெடுப்பாளருடன் போரிடுவதற்காக லாகூரை நோக்கி முன்னேறிச் சென்ருர் என் பதை செல்லும் வழியில்தான் அறிந்துகொண்டார்.

## இரண்டாம் ஷா ஆலம், 1759 - 1806 (Shah Alam II)

இரண்டாம் ஆலம்கீர் தமது மூத்த புதல்வரான அலி காஹரை (Ali Gauhar) வளமான வாழ்வு பெறுவதற்காக வெளியே அனுப்பி யிருந்தார். அவர் இறந்தபோது அலி காஹர் பீகாரில் இருந்தார். அலி காஹரின் பீகாரின்மீதான முதல் படையெடுப்பு வெற்றியின்றி முடிவடைந்தது. மழைக்காலத்தைக் கழிப்பதற்காக அவர் ரேவா விற்குச் சென்ருர். 1759ஆம் ஆண்டு அக்டோபர் மாத இறுதியில்

ரேவாவைவிட்டுப் பீகாருக்கு வந்த அவர், தற்கால சோன் ஈஸ்ட்-பாங்க் ரயில் நிலையத்திற்கு (Sone East - Bank Railway Station) வடக்கே ஐந்து கல் தொலைவிலிருந்த கொதௌலி (Gothauli) எனுமிடத்தில் தங்கியிருந்தபோது, 1759ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 20ஆம் தேதியன்று தமது தந்தையாரின் மரணச் செய்தியைப் பெற்றார். அன்றே இரண்டாம் ஷா ஆலம் என்ற பட்டப் பெயருடன் தம்மைப் பேரரசர் எனப் பிரகடனம் செய்தார். ஷுஜா உத் தௌலாவைத் தமது வஸீராக நியமித்தார். ஆயினும், தமது கடும் எதிரியான இமாத் உல் முல்க்கின் கையில் டில்லி பிடிபட்டிருந்ததாலும், மராத்தியருக்கும் ஆப்கானியப் படையெடுப்பாளரான அஹ்மத் ஷா அப்தாலிக்குமிடையே நீண்ட போராட்டம் நடைபெற இருந்ததாலும் பேரரசின் தலைநகருக்குச் சென்று தமது முன்னோர்களின் அரியணையில் அமர ஷா ஆலம் துணியவில்லை. பன்னிரண்டு ஆண்டுகளுக்குமேல் அவர் கீழ் மாநிலங்களிலேயே தங்கிவிட்டார். அக்காலத்தின் பெரும் பகுதியில் டில்லி அரியணை காலியாகக் கிடந்தது.

ஏற்கெனவே குறிப்பிட்டதைப்போல நாஜிபிடமிருந்து உதவி கோரி விண்ணப்பம் வந்ததும் அஹ்மத் ஷா அப்தாலி 1759ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில் சிந்து ஆற்றைக் கடந்து பஞ்சாபிற்குள் நுழைந்தார். அம் மாநிலத்தின் மராத்திய ஆளுநரான சபாஜி சிந்தியாவை அங்கிருந்து துரத்தினார். லாகூரிலிருந்து டில்லியை நோக்கிப் புறப்பட்டார். யமுனை ஆற்றின் மேற்கே அமைந்த பகுதியில் மராத்தியருடைய செயல்கள் காரணமாகத் தேவையான பொருள்கள் கிடைக்காது என அறிந்த காரணத்தால், அவர் அந்த ஆற்றினைக் கடந்து வடக்கு தோவாப் பகுதியில் புகுந்தார். அதே சமயத்தில் ஷுகர்தால் முற்றுகையைக் கைவிட்டு சர்ஹிந்தை நோக்கி முன்னேறிய தத்தாஜி சிந்தியாவுடன் போரிடுவதற்கெனத் தமது படையின் பிரிவொன்றை மேற்கு வழியில் அனுப்பினார். நாஜிப் உத் தௌலா, அஹ்மத் கான் பங்காஷ், சாதுல்லா கான், ருஹில் கண்டில் வாழ்ந்த மற்றெல்லா ருஹிலா தலைவர்களும் படையெடுப்பாளருடன் சேர்ந்துகொண்டனர். அஹ்மத் ஷாவும் டில்லிக்கு வடக்கே பத்துக் கல் தொலைவிலுள்ள பராரிகாட் (Bararighat) எனுமிடத்தில் தத்தாஜியைக் கடந்துசென்று, பக்கவாட்டிலிருந்து அவரது படையைத் தாக்கினார். வீரமிக்க அந்த மராத்தியத் தலைவரும் தக்காணத்தில் படை திரட்டுவதற்காகத் தமது மைத்துனரான ஜங்கோஜியை (Jankoji) அனுப்பிவிட்டு, குதிரையைவிட்டுக் கீழிறங்கி வீரத்துடன் போரிட்டு மடிந்தார் (1760ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 9ஆம் தேதி). இவ் வெற்றிக்குப் பிறகு ஜனவரி மாதம் 14ஆம் தேதியன்று தலைநகருக்குத் தெற்கே இருந்த கிஸ்ராபாத்தை

(Khizrabad) அடைந்த அப்தாலி சுராஜ்மால் ஜாத்திற்கும் ராஜ புதனத்து அரசர் அனைவர்க்கும் கடிதங்கள் எழுதினர். அவற்றில் அவர்கள் திறை செலுத்தவேண்டுமென்றும், மராத்தியரை முறியடிப் பதற்காகத் தமது படையில் சேரவேண்டுமென்றும் வற்புறுத்தினர்.

இதற்கிடையில் ஆப்கானியருக்குத் தொல்லை தருவதற்காகப் படையெடுத்துச் செல்லத் திட்டமிட்டிருந்த மல்ஹர் ராவ் ஹோல்கார் தோவாபைக் கடந்து சென்று அப்தாலிக்காக அஹ்மத் கான் பங்காஷ் அனுப்பிய தளவாடங்களையும் பிற செல்வங்களையும் சூறை யாடினர். ஆனால், சிக்கந்தராபாத்தில் பகைப் படை ஒன்றினால் அவர் முறியடிக்கப்பட்டார். அப்தாலி, டில்லியைக் கைப்பற்றிக் கொண்ட பிறகு, தோவாப்பிலும், ருஹில்கண்டிலும் இருந்தஆப் கானியருடன் எளிதாகத் தொடர்பு கொள்வதற்காக மழைக் காலத்திற்கு சிக்கந்தராபாத்தில் தங்கினர்.

அப்தாலியின் படையெடுப்புப்பற்றியும், பராரிகாட்டில் நேர்ந்த படுதோல்விபற்றியும் பீஷ்வா கேள்வியுற்றார். படையெடுப்பா ளரைத் துரத்துவதற்காகவும், வட இந்தியாவில் மராத்தியர் ஆதிக் கத்தை மீண்டும் நிலைநாட்டுவதற்காகவும் தமது உறவினரான சதாசிவ ராவ் பாவேயின் தலைமையில் வலிமைவாய்ந்த படை யொன்றை அனுப்பினர். சாம்பல் ஆற்றைக் கடந்த சதாசிவ ராய ருடன் பரத்பூர் மன்னரான சுராஜ்மால் 30,000 வீரர்களுடன் வந்து சேர்ந்துகொண்டார். ஆனால், ராஜபுதனத்தைச் சேர்ந்த ராஜ புத்திரத் தலைவர்கள் அவ்வாறு செய்ய மறுத்தனர். எப் பக்கமும் சேராமல் மதில்மேல் பூனைபோல இருந்தனர். அவத்தின் ஷுஜா உத் தௌலாவைத் தம் பக்கம் சேர்த்துக்கொள்வதற்கான முயற்சி களை மராத்தியர் செய்தனர். ஆனால், இஸ்லாமின் வளர்ச்சிக்காக அப்தாலி போரிட்டார் என்று வாதாடி, அதன் காரணமாக அவர் பக்கம்தான் சேர வேண்டுமென்று நாஜிப் உத் தௌலா அறி வுறுத்தி இணங்கவைத்த காரணத்தால் ஷுஜா உத் தௌலா மராத்தியருடன் சேரவில்லை. அதனால் பாவே மனம் தளர்ந்தா ரில்லை. அவர் டில்லியை நோக்கி முன்னேறி அத் தலைநகரத்தைக் கைப்பற்றிக்கொண்டதோடு, அங்கிருந்த அப்தாலியின் பகர ஆளையும் விரட்டினர். பொதுக்கொள்கையிலும், போரில் கடைப் பிடிக்கவேண்டிய வழிமுறை பற்றியும் சுராஜ்மாலும் இமாத் உல் முல்க்கும் மராத்தியருடன் கருத்துவேற்றுமை கொண்ட காரணத் தால், அவர்கள் மராத்தியரைக் கைவிட்டு ஜாத் கோட்டையான பல்லாப்காருக்குச் (Ballabhgark) சென்றுவிட்டனர். ஆயின் பாவே, மூன்றும் ஷாஜஹானைத் தவிசிலிருந்து அகற்றிவிட்டு ஷா ஆலத்தை பேரரசரென அறிவித்தார். ஷா ஆலம் தலைநகரில் இல்லாதபோது அவரது புதல்வரான இளவரசர் ஜவான் பக்த் (Javan Bakth) என்

பவரைத் தந்தைக்குப் பதிலாளாக இருக்குமாறு நியமித்தார். ஷுஜா உத் தௌலாவை வஸீராக நியமித்தார். மழைக்காலத்தின் இறுதியில் பஞ்சாபைக் கைப்பற்றுவதற்காகவும் பின்வாங்கிச் சென்ற அப்தாலியை மடக்குவதற்காகவும் மராத்தியர் தனியாகவே டில்லியிலிருந்து சர்ஹிண்டை நோக்கிச் சென்றனர். கார்னுலுக்கு வடகிழக்கே ஆறு கல் தொலைவிலுள்ள குஞ்ச்புரா (Kunjpura) கோட்டையை அக்டோபர் மாதம் 17ஆம் தேதி கைப்பற்றிய பின்பு பாவே, சர்ஹிண்டை நோக்கிச் சென்றார்.

1760ஆம் ஆண்டைய மழைக்காலத்தை சிக்கந்தராபாத்தில் கழித்த அப்தாலியப் படையெடுப்பாளர், மராத்தியர் பஞ்சாபை நோக்கி முன்னேறினர் என்பதை அறிந்து, டில்லிக்கு 25 மைல் வடக்கேயுள்ள பகாத்திற்கு (Bhagat) அருகே யமுனையைக் கடந்து பாவேயைப் பின் தொடர்வதற்கு முன்னேறிச் சென்றார். அதன் காரணமாக பாவே பின்னேக்கி வந்து பானிப்பட்டில் மையம் கொண்டார். மூன்று நாட்கள் கழிந்த பின்னர் அப்தாலி அவ்விடத்தை அடைந்தார். தங்களது பாசறைகளை அரண் செய்து கொண்ட மராத்தியர் நிலையாக நின்று போரிட முடிவுசெய்தனர்.

இருதரத்துப் படைகளும் இரண்டு மாத காலத்திற்கு எதிரெதிராக நின்றன. திரிகாவலர் மட்டும் தினந்தோறும் சிறுசிறு சண்டைகளில் ஈடுபட்டனர். 1760ஆம் ஆண்டு நவம்பர் மாதம் முதல் நாளன்று முதலாவது மோதல் ஏற்பட்டது. அதைத் தொடர்ந்து மூன்று முறை பெருந் தாக்குதல்கள் நடைபெற்றன. 1761ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 14ஆம் தேதியன்றுதான் இறுதிச் சண்டை தொடர்ந்தது. இரண்டு மாதங்களாய்ப் பட்டினியாலும், போதுமான போர்த் தளவாடங்கள் இன்மையாலும் இன்னலுற்றிருந்த மராத்தியர் படுதோல்வி அடைந்தனர். அவர்களது தலைவரான சதாசிவ ராவ் பாவேயும் இறுதிவரை தீரத்துடன் போரிட்டு மடிந்தார். படைத்தலைவரும் பீஷ்வாவின் புதல்வருமான விஸ்வேஸ் ராவும் (Vishwes Rao) பெரும்பான்மையான பிரமுகர்கள், அதிகாரிகள், தலைவர்கள் ஆகியோருடன் போர்க்களத்தில் கொல்லப்பட்டனர். முக்கியமானவர்களில் மகதாஜி சிந்தியாவும் (Mahadaji Sindhia) மல்ஹார் ராவ் ஹோல்காரும் மட்டுமே போர்க்களத்திலிருந்து தப்பிச் சென்றனர். தளவாடங்கள் உள்பட மராத்தியர் பாசறை முழுவதும் பகைவர் கையில் சிக்கியது. ஏராளமான மராத்தியர் பகைவரிடம் பிடிபட்டனர்.

இந்தியா முழுவதற்குமான ஒரு . மராத்தியப் பேரரசை அமைக்கவேண்டுமென்ற கனவை மூன்றுவது பானிப்பட்டுச்

சண்டை சிதைத்தது. அதனால் மராத்தியக் கூட்டமைப்புச் சின்ன பின்னமாகியது. குவாலியரில் இருந்த மகதாஜி சிந்தியா; நாக்பூர், பேரார் ஆகியவற்றின் ரகுஜி பான்ஸ்லே; மாளவத்தின் ஹோல்கார்; குஜராத்தின் தமாஜி கெய்க்வார் (Damaji Gaikwar) போன்ற மராத்தியத் தலைவர்கள் மராத்தியப் பேரரசின் பகுதிகளை மீட்டபோதிலும், 'பீஷ்வாவின் ஆதிக்கம் அழிந்ததோடு மராத்திய ஒற்றுமையும் குலைந்தது. மராத்திய ஆதிக்கத்திற்குப் பேரிடி தந்த இச் சண்டை, வட இந்தியாவில் பிரிட்டிஷாரின் ஆதிக்கம் ஏற்பட வழி வகுத்தது.

அஹ்மத் ஷா அப்தாலி, தமது வெற்றியைத் தொடர்ந்து நாட்டைக் கைப்பற்றி ஆள அக்கறை காட்டவில்லை. அவரது படைவீரர்கள் ஊதிய நிலுவைகளைத் தருமாறு கோரியதோடு, காபூலுக்குத் திரும்புமாறும் வற்புறுத்தினர். அப்தாலியும் ஷா ஆலத்தைப் பேரரசாகவும், இமாத் உல் முல்க்கை வஸீராகவும் நியமித்தார், டில்லியை நாஜிப் உத் தௌலாவின் பொறுப்பில் ஒப்படைத்து, அவருக்கு அமீர் உல் அம்ரா பட்டத்தையும், பதவியையும் அளித்தார். பீஷ்வாவுடனும், சுராஜ்மாலுடனும் சமாதானம் செய்துகொள்ளவேண்டுமென்ற அவரது முயற்சி தோல்வியுற்றது. இங்ஙனம் 1761ஆம் ஆண்டு மார்ச் மாதம் 20ஆம் தேதி அப்தாலி டில்லியைவிட்டு காபூலுக்குப் பயணமானார்.

பேரரசர் ஷா ஆலம் பீகாரில் இருந்ததால் 1760 முதல் 1771 வரையில் டில்லி அரியணை காலியாகக் கிடந்தது. இக்காலத்தின் பெரும் பகுதியில் தலைநகரத்தின் நிர்வாகமும் பரப்புக் குன்றிய பேரரசின் ஆட்சிப் பொறுப்பும் நாஜிப் உத் தௌ லாவிடமிருந்தன. உண்மையில் வல்லாட்சியாளர் போன்று நடந்துகொண்ட அவர், ஜாத்துகளுடனும் சீக்கியருடனும் ஓயாது போரிட்டு வந்தார். ஆனால், அவர்களை நிரந்தரமாக அழிக்க அவரால் இயலவில்லை. 1767ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் அஹ்மத் ஷா அப்தாலி இறுதி முறையாகப் பஞ்சாபின் மீது படையெடுத்துவந்து தம்மைக் காணுமாறு நாஜிப் உத் தௌலாவை அழைத்தார். ஆனால், சீக்கியர்கள் வலிமை பெற்று விளங்கியதால் அவரால் அவர்களை ஒடுக்கமுடியவில்லை. அதனால், படை கொண்டுவந்த அஹ்மத் ஷா அப்தாலி 1767ஆம் ஆண்டு ஜூலை மாதம் 30ஆம் தேதி ஆப்கனிஸ்தானம் திரும்பவேண்டியதாயிற்று. நாஜிபும் டில்லி திரும்பினர் வயோதிகமடைந்து தள்ளாமையுற்ற நாஜிப் 1768ஆம் ஆண்டு மார்ச் மாதத்தில் டில்லியின் ஆட்சிப் பொறுப்பினைத் தமது புதல்வரான ஸபீதாகானிடம் (Sabidta Khan) ஒப்படைத்துவிட்டு

நாஜீபாபாத்தில் ஓய்வெடுத்துக்கொண்டார். ஆயின் பானிப் பட்டுச் சண்டையில் தோல்வியுற்றதற்குப் பிறகு 1770ஆம் ஆண்டு தொடக்கத்தில் முதன்முறையாக வடஇந்தியாவிற்கு வந்த மராத்தியர் அவருக்கு மிகுந்த தொல்லை தந்தனர். இந்துஸ்தானத் தில் மராத்தியப் பேரரசை அமைக்கும் தங்களது திட்டம் தவிடு பொடியாவதற்கு நாஜீப் பொறுப்பானவர் என்ற உண்மையை உணர்ந்திருந்த மராத்தியர் அந்த ருஹிலாத் தலைவரையே தமது உண்மை எதிரியாகக் கருதினர். அவரை அடியோடு அழிக்கவும் முடிவு செய்தனர். ஆனால், அவருக்கு எதிராக எழும் போர் பற்றிய கொள்கை, திட்டம் ஆகியவற்றில் மராத்தியத் தலைவர் களுக்குள்ளேயே கருத்து வேற்றுமை நிலவியது. மராத்தியருடன் ஒத்துழைப்பதாக விருப்பம் தெரிவித்த நாஜிபின் கோரிக்கையை ஏற்றுக்கொள்ளவேண்டுமென்பதை மராத்தியரின் படைத்தலை வராக இருந்த ராம் சந்திர கணேஷ் ஆதரித்தார். நாஜிபின் பரம்பரை நண்பரான துகோஜி ஹோல்காரும் ராம் சந்திர கணேஷை ஆதரித்தார். ஆனல், அந்த ருஹிலாத் தலைவர் மராத்தியரிடம் முழு சரணுகதி அடையவேண்டு மென்று மகதாஜி சிந்தியா வற்புறுத்தினர். இப் பிரச்சினைபற்றி பீஷ்வாவிடம் அறிவித்தபோது அவர் அரசியல் சூழ்நிலைக்கு ஏற்றதாக இருந்த ராம் சந்திர கணேஷின் நிலையினை ஏற்றுக் கொண்டார். மராத்தியரிடையே வேற்றுமைகள் இருந்த காரணத்தால் ஒரு பிரிவினரை மற்றொருவருக்கு எதிராகத் தூண்டி விட்டு அழிவிலிருந்து தம்மைக் காத்துக்கொள்வது நாஜிபிற்கு எளிதாக இருந்தது. தமது வாழ்நாளின் இறுதிக்கட்டத்தை அடைந்த அவர், இந்துஸ்தானத்தில் மராத்தியருடைய ஆதிக்கம் மீண்டும் தலையெடுக்கும் நிலையிலிருந்தது என்பதை மதிநுட்பத்துடன் உணர்ந்துகொண்டார். அதனுல், நாஜிப் துகோஜியின் கரங்களில் ஸபீதாகானின் கையை வைத்து, தந்தை யிடம் மல்ஹர் ராவ் எவ்வாறு அன்புடன் இருந்தாரோ அதேபோன்று மகனிடம் அவர் (துகோஜி) பரிவுகாட்டவேண்டுமென்று வேண்டிக் கொண்டு மராத்திய சர்தார்களை அனுப்பிவிட்டு, ஸபீதாவின் துணையுடன், மரணத்தை எதிர்நோக்கித் தம் வீடு திரும்பினர். அவ்வாறு திரும்பிய அவர் 1770ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 31ஆம் நாளில் இவ்வுலக வாழ்வை நீத்தார்.

டில்லியில் நாஜிபின் வல்லாட்சி விளங்கிய காலத்தில் நாடு கடத்தப்பெற்ற பேரரசரான ஷா ஆலம் பீகாரில் வாழ்ந்துவந்தார். அங்கிருந்துகொண்டே வங்காளம், பீகார், ஒரிஸ்ஸா ஆகியவற்றின் நவாபாக மீர் ஜாபர் (Mir Jafar) என்பவரை நியமித்து ஆங்கிலேய ரிடமிருந்து பீகார் மாநிலத்தைக் கைப்பற்றுவதற்காக மூன்று முறை முயன்று தோல்வியுற்ருர். பட்டத்து இளவரசராக இருந்தபோது.

1759ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தோடு முடிவடைந்த பாட்னு முற்றுகையை அவர் மேற்கொண்டார். அவர் பேரரசராக முடி சூட்டிக்கொண்ட பிறகு பீகார்மீதான அவரது இரண்டாவது படையெடுப்பு 1760-ல் எழுந்தது. பாட்னுவின் உதவி ஆளுநராக விருந்த ராஜாராம் நாராயணே அவர் முற்றுகையிட்டார். ஆனுல், நாக்ஸின் (Knox) தலைமையில் முன்னேறிவந்த ஆங்கிலப் படை யொன்று 1760ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 30ஆம் தேதியன்று பேரரசர் முற்றுகையைக் கைவிடுமாறு செய்தது. அதனேடு, அவரை யமுனையாற்றின் மறுபுறத்திற்குப் பின்வாங்குமாறும் செய்தது. மழைக்காலம் முடிந்ததும் பிரஞ்ச் தளபதியான ஜீன் லா (Jean Law) உடன்வர, பேரரசர் மூன்ருவது முறையாகப் பீகாரைத் தாக்கினுர். அதுவே அவரது இறுதித் தாக்குதலாகவும் அமைந்தது. ஆனுல், 1761ஷிம் ஆண்டு ஜனவரி மாதம் 15ஆம் தேதியில் கார்னுக் (Carnac) அவரை முறியடித்தார். அவரைச் சாந்தப்படுத்துவதற்கும் கடந்தகாலத்தில் அவருக்கெதிராக மேற்கொண்ட முறையற்ற நடவடிக்கைகளின் கறையினைத் துடைக்கவும் ஆங்கிலேயர் ஆர்வங் கொண்டிருந்த காரணத்தால், அவரைச் சென்று கண்டு, சிறப்புடன் பாட்னுவிற்கு அவரை அழைத்துச் சென்றனர். மீர் ஜாபருக்குப் பதிலாக நவாபாக நியமனம்பெற்றிருந்த மீர் காஸிம் (Mir Qusim) அங்கே அவரைக்கண்டு பணிந்தார். வணக்கமுறை செய்து திறையும் செலுத்தினுர். பேரரசரும் மீர்காஸிமை நவாபென நிலை நிறுத்தினுர். அதற்குப்பதிலாக அன்ருடச் செலவுகளுக்காக நாளொன்றிற்கு 1800 ரூபாய்களை ஆங்கிலேயர் பேரரசருக்களித் தனர். தலைநகரில் இருந்த தமது முன்னேர்களுள் அரியணையில் முறையாக அமர்வதற்காக ஷா ஆலம், டில்லிக்குச்செல்வதற்கென பாட்னுவிலிருந்து புறப்பட்டார். அவ்வாறு புறப்பட்டுச்சென்ற அவரை வஸீரான ஷுஜா உத் தௌலா ஜூன் மாதம் 19ஆம் தேதி சாரை சய்யத் ரஸி யில் (Sarai Syyid Razi)சந்தித்தார். பேரரசரும் மாரிக்காலத்தைக் கழிப்பதற்காக ஜாஜ்மா (Jajmau) பாளையத்திற்குச் சென்ருர்.

எவ்வாறெனினும், டில்லியில் வல்லாட்சியாளரைப் போன்று ஆட்சி புரிந்துவந்த நஜிப் உத் தௌலாவிடமிருந்து ஆட்சியைக் கைப்பற்றும் வலிமை தம்மிடம் இல்லையென்பதைக் கண்டு கொண்ட தால் மழைக்காலத்திற்குப் பின்னும் ஷா ஆலம் டில்லியை நோக்கிச் செல்ல முடியவில்லை ஷுஜா உத் தௌலாவும் பேரரசருக்கு உதவி செய்வதில் ஆர்வம் காட்டவில்லை. சத்ர சால் பந்தேலா (Chhatra Sal Bundela) கொள்ளுப்பேரனுன ராஜா ஹிந்து பதியின் (Raja Hindu Pati) கையிலிருந்த பந்தேல்கண்டு மாநிலத்தை மீட்பதற்காக ஷா ஆலத்தை அங்கே அழைத்துச்சென்ருர். ஆனுல்,

1762ஆம் ஆண்டு நேர்ந்த அப் படையெடுப்பு தோல்வியுற்றது. மற்றுமோர் ஆண்டையும் பேரரசர் வீணுக்கினுர். அதன் பிறகு வங்காளம், பீகார் ஆகியவற்றிலிருந்து மீர் காஸிமைத் துரத்திய ஆங்கிலயருக்கு எதிரான போரில் ஷுஜா உத் தௌலாவுடன் அவர் சேரவேண்டிய கட்டாயமேற்பட்டது. 1764ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 23ஆம் தேதி நடைபெற்ற பக்ஸார் சண்டையில் (Baksar) கூட்டணியினர் தோல்வியுற்றனர். அப்போது வஸீரினுல் அவமதிக்கப்பெற்ற காரணத்தால் வெற்றி பெற்றவருடன் சமாதானம் செய்துகொள்ளப் பேரரசர் விருப்பங்கொண்டார். ஆங்கிலேயரும் அவருடன் பேச்சுவார்த்தை தொடர்ந்தனர். ஷுஜா உத் தௌலா ஓடிவிட்ட பிறகு, 1765ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 16ஆம் நாளன்று ஷா ஆலத்தை ஆங்கிலேயர் அலகாபாத்தின் அரியணையில் அமர்த்தினர். அதற்கு ஈடாக வங்காளம், பீகார் ஒரிஸா ஆகியவற்றில் திவானி உரிமையை ஆங்கிலக் கிழக்கிந்தியக் (English East India Company) கம்பனிக்கு ஷா ஆலம் வழங்கினுர். அவர் 1760 முதல் 17/1 வரையில் ஆங்கிலேயருடைய பாதுகாப்பில் இருந்தார். ஆனுல், அவர் எப்போதும் டில்லி செல்லத் துடித்துக்கொண்டிருந்தார். வங்காளத்திலிருந்து ஆண்டுதோறும் திறையாக இருபத்தாறு இலட்ச ரூபாய்கள் வந்ததால், நிலையான வருவாயை அவர் பெற்றிருந்தபோதிலும் அந்நியருடைய ஆதிக்கத்தின்கீழ்த் தொடர்ந்து வாழ்ந்துவருவது அவமானமாகும் என அவர் எண்ணியதே அதற்குக் காரணம். அலகாபாத்தில் இருந்த ஆங்கிலேயப் படைத் தலைவர் பேரரசரை அடிக்கடி அவமதித்து வந்தார். மேலும், நாஜீப் உத் தௌலா இறந்த பிறகு நிர்வாகத்தை ஏற்ற அவரது மகன் ஸபீதாகான் தனது உரிமை எல்லையைக் கடந்து டில்லிக் கோட்டையிலிருந்த பெண்கள் வாழும் பகுதிகளுக்குச் சென்று, ஷா ஆலத்தின் சகோதரி கெய்ர் உன்னிஸா உள்படச் சில உவளகத்துப் பெண்டிரைக் கற்பழித்தான். அரச குடும்பத்தினரின் மானத்தைக் காப்பதற்காக டில்லிக்கு வருமாறு அழைத்து ஷா ஆலத்திற்குப் பல கடிதங்களை அரச மாதா அனுப்பியிருந்தார். ஆதலால், 1770ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் வட இந்தியாவிற்கு திரும்பிவந்த மராத்தியருடன் ஷா ஆலம் பேச்சுவார்த்தை துவங்கினுர். அவர்களுடைய துணையுடன் டில்லி நோக்கிச் சென்று 1772ஆம் ஆண்டு ஜனவரி மாதம் ஆரும் நாளன்று அந் நகரை அடைந்தார்.

ஷா ஆலம் எடுத்துக்கொண்ட பணி எளிதானதன்று. டில்லிக் கருவூலம் காலியாகக் கிடந்தது. அரச குடும்பத்தினர் பஞ்சத்திலும் பசியிலும் வாடினர். தமதாட்சியின் மீட்சிக்கு உதவியதற்காக மராத்தியருக்கு நாற்பது இலட்ச ரூபாய்களும், கோரா ஜஹனுபாத்

காராமணிக்பூர் ஆகிய மாவட்டங்களையும், மீரட்டையும் அது போன்ற வேறு ஏழு பர்கானுக்களையும் அளிப்பதாக ஷா ஆலம் வாக்களித்திருந்தார். பல மாதங்களாகப் படைவீரர்களுக்குக் கொடுக்காது இருந்த ஊதியத்தை அவர் அளிக்கவேண்டியிருந்தது. இத்தகைய கடமைப் பொறுப்புகளை நிறைவேற்றுவதற்கான பொருளைப் பெறுவதற்காக ஸபீதாகானுக்கு எதிராகப் படையெடுக்கத் திட்டமிட்டார். அதற்கிணங்கவே பதார்காரில் (Pathargar) ஸபீதாகானை முற்றுகையிட்டார். ஆயினும், ஸபீதாகானிடமிருந்தும் மற்ற ருஹிலர்களிடமிருந்தும் பெற்ற பணம் மராத்தியர் கடனை அடைக்கப் போதுமானதாக இல்லை. அதனால் மராத்தியர் டில்லியைத் தாக்கினர். இங்ஙனம் மராத்தியருக்கும் மிர்ஸா நஜாஃப் கானின் (Mirza Najaf khan) தலைமையிலான பேரரசரின் படைகளுக்குமிடையே 1773ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 17ஆம் தேதி சண்டை மூண்டது. அதில் பேரரசரின் படைகள் தோல்வியுற்றன. பேரரசர் பகைவருக்குப் பணியவேண்டியதாயிற்று. மராத்தியருடைய ஆதரவைப் பெற்றிருந்த ஸபீதாகானை மீர் பக்ஷியாக நியமித்தார். நஜாஃப்கானைப் பதவியிலிருந்து நீக்கினர். கோராவையும் அலகாபாத்தையும் மராத்தியருக்களித்தார். ஆனால், அரச நிலங்களையும், தமது தனிப்பட்ட செலவிற்கான மானியத்தையும் மீட்பதற்காகப் பேரரசர் செய்த முயற்சி தோல்வியுற்றது. அரசவையில் வறுமை தாண்டவமாடியது. அமைச்சர்கள், மராத்தியர் ஆகியோரின் கையில் சிக்கிய செயலற்ற பொம்மையாக ஷா ஆலம் வாழ்ந்துவந்தார். 1779ஆம் ஆண்டு நவம்பர் மாதம் முதல் 1782ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் ஆறும் தேதி தாம் இறக்கும்வரையில் அமைச்சராகப் பணிபுரிந்த மிர்ஸா நஜாஃப் கான் ஜாத்துகளை வீழ்த்தினர். ஆயினும், வீழ்ச்சியுற்ற பேரரசிற்கு வலிமையூட்டி அதனுடைய நிதி நிலைமையைச் சீர்செய்வதில் அவர் தோல்வியே கண்டார். அவருக்குப் பின் 1782 முதல் 1784 வரையில் அமைச்சர்களாக வந்த மிர்ஸா ஷாஃபியும் (Mirza Shafi) அஃப்ரா சியாபும் (Afra-Siyab) திறமையற்றவர்கள். அவர்களும் படுதோல்வியடைந்தனர். 1784ஆம் ஆண்டு நவம்பர் மாதத்தில் மகதாஜி சிந்தியாவே வகீல்-முட்லாக் (Vakil Mutlaq) என்னும் காப்பாளராகப் பதவி, ஏற்றார். அவர் ஜாத்துக்களிடமிருந்து டீக், ஆக்ரா ஆகியனவற்றையும், அஃப்ரா சியாபிடமிருந்து அலிகாரையும் கைப்பற்றினர். தோவாபில் கோசெய்ன்களுடனும் (Gosains) டில்லியின் வடமேற்கில் சீக்கியருடனும் அவர் போரிடவேண்டியிருந்தது. அதன் பிறகு ராஜஸ்தானத்தில் திறைகொள்ள முயன்று அப் பகுதியிலும் போரிட்டார். ஆயின், அவர் தலைநகரில் இல்லாதபோது அவருக்கு எதிராகச் சதிகள் நடைபெற்றன. அரசவையிலிருந்து அவர் விரட்டப்பெற்றார். 1787ஆம் ஆண்டு செப்டம்பரில் ஸபீதாகானின்

மகனும், நாஜிப் உத் தௌலாவின் பேரனுமாகிய குலாம் காதர் ருஹிலா, மீர் பக்ஷி பதவியைக் கைப்பற்றுவதில் வெற்றி பெற்ருன். பேரரசருக்கு எதிராக எழுந்து அரண்மனையைக் கைப்பற்றிக் கொண்டான். 1788ஆம் ஆண்டு ஜூலை மாதம் 30ஆம் தேதி ஷா ஆலத்தை தவசிலிருந்து இறக்கினுன். ஆகஸ்ட் மாதம் 10ஆம் தேதியன்று மன்னரின் கண்களைத் தமது கட்டாரியாலேயே குத்தி, அவரைக் குருடராக்கினுன். அரசரையும் அவர்தம் உவளகத்துப் பெண்டிரையும் அவமதித்தான். அரண்மனைக் கிடங்குகளையெல்லாம் தோண்டிப் பார்த்துக் கிடைத்த பணத்தைத் தனதாக்கிக்கொண் டான். 1788ஆம் ஆண்டு ஜூலை, ஆகஸ்டு மாதங்களில் இந்த ருஹிலாக் கொடியோன் முகலாய அரச குடும்பத்தை இழிவு செய்ததைப்போல இந்திய வரலாற்றிலேயே முன்னெப்போதும் ஏற்பட்டதில்லை. குருடரான வயோதிக மன்னர், மகதாஜி சிந்தியாவை டில்லிக்கு வருமாறு அழைத்து அவசரக் கடிதங்களைப் பதட்டத்துடன் எழுதி அனுப்பினுர். குலாம் காதரை வந்து தண்டிக்குமாறு வேண்டிக்கொண்டார். சிந்தியாவும் அக்டோபர் மாதத் தொடக்கத்தில் டில்லி நகரத்தையும் கோட்டையையும் மீட்டார். குலாம் காதர் பயந்து ஓடினுன். ஆனுல், 1788 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 31ஆம் தேதி அவனை வேட்டையாடிப் பிடித்தனர். சிறைப்பட்ட அவனைக் கொன்றுவிட வேண்டு மென்றும், அப்படிச் செய்யாவிட்டால் தாம் அரச பதவியைத் துறந்து மெக்காவிற்குச் சென்றுவிடப் போவதாகவும் மகதாஜி சிந்தியா விற்கு மன்னர் எழுதினுர். அதனுல் மகதாஜி சிந்தியாவின் ஆணைக்கிணங்க குலாம் காதரும், அவர் அரண்மனையில் நுழைவதற்கு உதவிபுரிந்த அலியான மன்ஸூர் அலி (Manzur Ali) என்னும் துரோகியும் 1789ஆம் ஆண்டு மார்ச் மாதம் 2-4ஆம் தேதிகளில் கொல்லப்பட்டனர்.

பூனுவிலிருந்த பீஷ்வாவைச் சென்று காண்பதற்காக 1792ஆம் ஆண்டின் தொடக்கத்தில் மகதாஜி சிந்தியா வட இந்தியாவை விட்டுச் சென்ருர். 1794ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 12ஆம் தேதி பூனுவிலேயே அவர் மடிந்தார். அதனுல் மீண்டும் டில்லி அரசவை யில் சூழ்ச்சியும், செயலற்ற நிலையும் தோன்றின. மகதாஜி சிந்தியா வின் வாரிசான தௌலத்ராவ் சிந்தியாவிடமிருந்து (Daulat Rao Sindhia) 1803 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில் தலைநகரத்தை லேக் பிரபு (Lord Lake) கைப்பற்றினுர். இப்போது ஷா ஆலம் பிரிட்டிஷாரின் கைதியானுர். அதேநிலையில் அவர் 1806ஆம் ஆண்டில் மரணமடைந்தார்.

ஷா ஆலத்திற்குப் பின் அவரது புதல்வரான இரண்டாம் அக்பர் என்பார் டில்லியிலிருந்த செங்கோட்டையில் வாழ்ந்த அரச குடும்பத்

தினரின் தலைவராக வந்ததும் பேரரசர் பட்டத்தைப் பெற்றதும் பிரிட்டிஷாரின் தயவினால்தான். தமது தந்தையைப்போலவே அவரும் பிரிட்டிஷாரிடமிருந்து உபகாரச் சம்பளம் பெற்று வந்தார். 1837ஆம் ஆண்டில் அவர் இவ்வுலக வாழ்வை நீத்தார். அவரது புதல்வரான இரண்டாம் பகதூர் ஷாவும் பெயரளவிலான பேரரசுப் பட்டத்தைக் கொண்டிருந்தார். 1857ஆம் ஆண்டைய படையினர் கலகத்தில் அவர் கலந்துகொண்டதற்காக பிரிட்டிஷாரால் விசாரிக்கப்பெற்று ரங்கூனுக்கு நாடுகடத்தப்பெற்றார். சில ஆண்டு கட்குப் பிறகு அவர் அங்கேயே உயிர்நீத்தார்.

## மேலும் படித்து அறிவதற்கான நூல்கள்

### மூலச் சான்றுகள்

(a) பாரசீகம்:


1. தனிஷ்மாந்த் கான் எழுதிய 'பகதூர் ஷா நாமா' (Bahadur Shah Nama) (கைப்பிரதி).
2. முகம்மது காஸிம் லஹாரி எழுதிய 'இப்ரத் நாமா' (Ibrat Nama) (கைப்பிரதி).
3. முகம்மது ஹாதி கம்வார் கான் எழுதிய 'தஸ்கிராத் உஸ் சலாடினி சாக்தயா' (Tazkirat-us-Salatin-i-Chaghtaia).
4. அப்துல் கரீம் காஷ்மீரி எழுதிய 'பயானி வாக்யா' (Bayan-i-Waquia) (கைப்பிரதி).
5. முஸ்தாஜப் கான் எழுதிய 'குலிஸ்தானி ரஹ்மாத்' (Gulistan-i- Rahmat) (கைப்பிரதி).
6. எழுதியவர் பெயர் தெரியாத 'தரிகி-இ-அஹ்மத் ஷா' (Tarikhi-i-Ahmad Shah) (கைப்பிரதி).
7. எழுதியவர் பெயர் தெரியாத 'தரிகி அலாம் கீரி சானி' (Tarikhi Alamgir-i-Sani) (கைப்பிரதி).
8. சய்யது குலாம் ஹுசெயின் எழுதிய 'சியார் உல் முதா கெரின்' (Siyar-ul-Muta-Kherin).
9. முகமது அலி அன்சாரி எழுதிய 'தரிகி முஸாஃபரி' (Tarikh-i-Muzaffari) (கைப்பிரதி).

10. மிர்ஸா முகம்மது மஹ்தி எழுதிய 'தரிகி ஃபஹான்-குஷாய்-நாதிரி' (Tarikhi Fahan Kushai Nadiri).

11. எழுதியவர் பெயர் தெரியாத நாட்குறிப்பான 'வாக்யா ஷா ஆலம் சானி' (Waqia Shah Alam Sani) (கைப்பிரதி).

12. 'பர்ஸியன் அக்ஹாரத்' (Persian Akhharat) (கைப்பிரதி)

(b) ஹிந்தி :

1. சுதன் எழுதிய 'சுஜன் சரித்ரா' (Sujan Charitra).
2. கவிராஜ் ஷைமல் தாஸ் எழுதிய 'வீர் விநோத்' (Vir Vinod).
3. சுர் ஜமால் சரன் எழுதிய 'வான்ஷ் பாஸ்கர்' (Vansh Bhaskar)

## தற்கால நூல்கள்

1. H. G. Keene எழுதிய 'The Fall of the Mughal Empire'.
2. W. Irwine எழுதிய 'The Later Mughals' Vols. 1–2.
3. Sir Jadunath Sankar எழுதிய 'Fall of the Mughal Empire' Vols. 1–4.
4. A. L. Srivastava எழுதிய 'The First Two Nawabs of Aveadh'.
5. A. L. Srivastava எழுதிய 'Shuja-ud-daula' Vols. 1–2.
6. Dr. K. R. Qa-nungo எழுதிய 'History of the Jats'.
7. 'Cambridge History of India,' Vol. IV.

# 11. மராத்திய ஆதிக்கம் (1707-1761)

## ஷாகு, 1707–1748

1689ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 13ஆம் தேதியன்று ரெய்கர் கோட்டை (Reigarh) வீழ்ந்த பின்னர், ஷாகு என்ற செல்லப் பெயர் கொண்ட சிவாஜியையும், அவரது தாயாராகிய யேசுபாயுடன் மராத்திய அரச குடும்பத்தைச் சேர்ந்த வேறு பலரையும், சிறையிலடைப்பதற்காக அவுரங்கசீபின் பாசறைக்குக் கொண்டு சென்றனர். அப்போது ஷாகுவிற்கு ஏழு வயதுதான். அடுத்த பதினேழரை ஆண்டுகளை அவர் சிறையில் கழித்தார். அவுரங்கசீபின் புதல்வியருள் ஒருவரான ஸினத் உன்னிஸா (Zinat-un-Nisa) அன்புக் கண்காணிப்பில் அவர் சாதாரண வாழ்க்கை வசதிகளையும் கல்வியையும் பெற்றபோதிலும், விடுதலை பெறும் நம்பிக்கை சிறிதும் அற்றிருந்தார். உண்மையில் இனந் தெரியா ஊழொன்று அவரை எதிர்நோக்கியிருந்ததாகத் தெரிந்தது. இஸ்லாமிய சமயத்திற்கு மாற்றப்பெறுவார் அல்லது கொல்லப்பெறுவார் என்னும் அச்சம் இருந்துவந்தது. ஷாகுவை முஸ்லீமாக மாற்ற வேண்டுமென்று ஒரு சமயம் அவுரங்கசீப் தீவிரமாக இருந்தார். ஆயின், ஸினத் உன்னிஸாவின் பரிந்துரை காரணமாக அதிலும் ஷாகுவின் உறவினர் இருவரை இஸ்லாமிய சமயத்திற்கு மாற்றிய பின்னர்தான், அந்த எண்ணத்தை அவர் கைவிட்டார். இராசாராமிடம் பகைமை கொண்டிருப்பதாக நடித்ததன்மூலமாகவும், தாமும் தமது மகனும் பேரரசரின் பாதுகாப்பில் பத்திரமாக இருப்பதாக அறிவிப்பதன் மூலமாகவும் அவுரங்கசீபின் ஐயத்தினை ஷாகுவின் கைத்திறம் மிகுந்த தாயாரான யேசுபாய் போக்கினார். பேரரசருக்கு அளிக்க வேண்டிய மரியாதையை வெளிப்படுத்துவதற்காக அவ்வப்போது ஷாகுவை அவுரங்கசீபின் முன்னால் கொண்டு நிறுத்தினர். அவரும் ஷாகுவின் நடத்தையிலும் பற்றுறுதியிலும் மனநிறைவு கொண்டார்.

முகலாயப் பாசறையில் மராத்திய மொழியைப் படிக்கவும் எழுதவும் அறிந்துகொண்ட ஷாகு, ஹிந்தி மொழியில் பேசவும் கற்றுக் கொண்டார். பாசறை எல்லைக்குள்ளேயே குதிரையேற்றம், வாட் போர் செய்தல், வேட்டையாடுதல் ஆகியவற்றையும் கற்றுக் கொண்டார். முகலாய அரச அவையினரோடு நெருங்கிய தொடர்பு கொண்டதால், இஸ்லாமிய சமயத்தைப்பற்றி ஓரளவு அறிந்து கொண்டதோடு அதன்மீது அவர் ஓரளவு மதிப்பும் கொள்ளத் தொடங்கினர். 1703ஆம் ஆண்டு அவர் இருவரை மணந்து கொண்டார். அவுரங்கசீபின் வாழ்வுக்கால இறுதியில் முகலாயர் பல துன்பங்களுக்குள்ளாயினர். ஷாகுவும் அவரது தாயாரும் பிற ஆதர வாளர்களும் முகலாயருடைய துன்பங்களைப் பகிர்ந்துகொள்ள வேண்டியதாயிற்று. அன்றாடச் செலவிற்காகக் கடன் வாங்க வேண்டியிருந்தது.

அவுரங்கசீப் இறந்து அவர் மகன் ஆஸம் ஷா (Azam Shah) அரசு எய்தியபோது அவர் முன்னிலையில் ஷாகுவைக் கொண்டு நிறுத்திய சுல்ஃபிகார் கான் (Zulfigar Khan) சில நிபந்தனைகளின் பேரில் மராத்திய இளவரசரை விடுதலைசெய்து அவரது நாட்டிற்கே திரும்ப அனுப்பிவிடலாம் என்று மன்றாடிக் கேட்டுக்கொண்டார். முகலாய அரசிடம் பற்றுறுதி கொண்டிருக்கவேண்டுமென்றும், பேரரசர் வேண்டும்போது படை தந்து உதவவேண்டுமென்றும் ஷாகு விடம் நிபந்தனைகள் கோரலாம் எனக் கூறினர். ஷாகுவை விடுதலை செய்வதனல் மராத்தியரிடையே பிளவு தோன்றிவிடுமாகையால் அவர்களால் கேடு செய்ய இயலாது எனவும் வாதாடினர். ஆனல், தமது சகோதரரான பகதூர் ஷாவுடன் போட்டியிடுவதற்கு ஆயத்தம் செய்துகொண்டிருந்த காரணத்தால் ஆஸம் ஷா தீர்மான முடிவேதும் எடுக்காமல் ஷாகுவையும் அவரது குடும்பத்தாரையும் தம்முடன் அழைத்துக்கொண்டு நர்மதை ஆற்றைக் கடந்து சென்றார். பொறுமை இழந்த ஷாகுவும் முகலாய நண்பர்களின் யோசனைப்படி போபாலுக்கு வடமேற்கே இருபது கல் தொலைவிலிருந்த தொராஹா என்னுமிடத்தில் 1707ஆம் ஆண்டு மே மாதம் 18ஆம் தேதி பாசறையி லிருந்து தப்பிச் சென்றார். பகதூர் ஷாவுடன் வாழ்வா, சாவா என்பதை நிர்ணயிக்கும் போரில் ஈடுபட இருந்த காரணத்தால், ஆஸம் ஷாகுவின்மீது நடவடிக்கை ஏதும் எடுக்கவில்லை. 1707ஆம் ஆண்டு ஜூன் மாதத்தில் ஆஸமே ஆக்ராவிற்கு அருகிலமைந்த ஜஜாவ் (Jajau) என்னுமிடத்தில் முறியடிக்கப்பெற்றுக் கொல்லப் பட்டார். அதனல் ஷாகுவும் மன அமைதியோடு தமது பயணத் தைத் தொடர்ந்தார்.

ஒருசில ஆதரவாளர்களுடன் நர்மதை ஆற்றைக் கடந்த ஷாகு, பிஜாகர் (Bijagarh), சுல்தான்பூர் (Sultanpur) ஆகியவற்றின் வழி

யாக மேலைக் காண்டேஷிற்குள் புகுந்தார். பிஜாகரில் மோகன் சிங் ரவால் (Mohan Singh Rawal) அவருடன் சேர்ந்துகொண்டார். அதேபோன்று வேறுசில மராத்தியத் தலைவர்களும் சுல்தான்பூரில் அவருடன் இணைந்துகொண்டனர். மகாராஷ்டிரத்தில் அவருக்கு அன்பான வரவேற்புக் கிடைத்தது. முதலில் அவரது கட்சியை ஆதரித்தவர்களில் பிற்கால நாகபுரி அரசர்களின் முன்னோரான பர்ஸோஜி பான்ஸ்லேயும் (Parsoji Bhonsle) பிற்காலப் பீஷ்வா வான பாலாஜி விஸ்வநாத்தும், நிமாஜி சிந்தியாவும் (Nemaji Sindhia) மிக முக்கியமானவர்கள். ஜூன், ஜூலை மாதங்களை காண்டேஷிலேயே ஷாகு கழித்தார். ஆகஸ்டு மாதத்தில் அஹமத் நகரை அடைந்தார். அங்கிருந்து முன்னேறிச்சென்று மராத்திய அரசின் தலைநகரமாகிய சத்தாராவைக் கைப்பற்றத் திட்டமிட்டார். ஆயின் ஷாகு, மோசக்காரர் என்றும், அவரது தந்தை சாம்பாஜி இழந்த நாட்டின்மீது அவருக்கு எவ்வித உரிமையும் கிடையாது என்றும் தாராபாய் அறிவித்தார். தமது கணவரான இராசாராமே (Raja Ram) அப்போதிருந்த மராத்திய அரசை உருவாக்கியவர் என மொழிந்து, அதனால் தமது இளைய மகனாகிய இரண்டாம் சிவாஜியே முறையான அரசரென்றும் வற்புறுத்திக் கூறினார். அதனோடு ஷாகுவின் முன்னேற்றத்தை வன்முறையாகத் தடை செய்வதற்கும் தானாஜி ஜாதவ் (Dhanaji Jadhav) என்பவரின் தலைமையில் ஒரு படையை அனுப்பினார். அதனால் தமது சிற்றன்னை யாகிய தாராபாயுடன் போட்டியிடுவதற்கு ஷாகு ஆயத்தமாக வேண்டியதாயிற்று. 1707ஆம் ஆண்டு நவம்பர் மாதத்தில் பீமா ஆற்றங்கரையில் அமைந்த கெட் (Khed) என்னுமிடத்தில் இரு படை களுக்குமிடையே போர் மூண்டது. அப் போரில் தாராபாயின் பிரதி நிதியான பரஸ்ராம் பந்த் தோற்று ஓடினார். அவரது படைத் தலை வரான தானாஜியும் சண்டைக்கு முன்னால் பகைவர் பக்கம் சாய்ந்த தால் போரில் பங்குகொள்ளவில்லை. ஷாகுவுடன் சேர்ந்துகொண்ட தானாஜி சேனாபதியாக நியமனம்பெற்றார். காண்டோ பலால்(Khando Balal) என்பவர் சிட்னிஸ் (Chitnis) பதவிக்கு உயர்த்தப்பெற்றார். தாராபாயிடம் இருந்த வேறு பல முக்கிய அதிகாரிகளும் அவரை விட்டு நீங்கி ஷாகுவுடன் சேர்ந்துகொண்டனர். வெற்றிவாகை சூடி, சத்தாராவிற்கு வந்த ஷாகு, 1708ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 22ஆம் தேதி முடிசூட்டிக்கொண்டார். தாராபாயும் அவரது புதல் வரும் ஏற்கெனவே சத்தாராவைவிட்டு நீங்கி பன்ஹலாவில் (Panhala) தஞ்சம் புகுந்தனர். ஆனால், அக் கோட்டையையும் ஷாகு கைப்பற்றியதால், தாராபாய் ரங்னாவிற்கும் (Rangna) மேற்குக் கரையிலமைந்த மால்வானுக்கும் (Malwan) ஓடவேண்டியதாயிற்று. ஆனால், அவர் விரைவிலேயே திரும்பிவந்து, இறுதியாகப் பன்ஹலா விலேயே தமது அதிகாரத்தை நிலைநிறுத்தினார். ஷாகுவின் சேனா

பதியான சந்திர சென் என்பாரும், வேறு பல மராத்தியத் தலைவர்களும் அவருடன் இணைந்தனர். முகலாயத் தக்கணத்திலிருந்து 'சௌத்', சார் தேஷ்முகி ஆகியவற்றைத் தாராபாய் தண்டினார். அவரது வெல்திறம் காரணமாகவும், நடவடிக்கைகள் காரணமாகவும் 1711, 1712ஆம் ஆண்டுகளில் ஷாகுவின் நிலை ஆட்டங் கண்டது. ஆனால், ஷாகுவின் நல்வாய்ப்பாக அரண்மனைச் சதி ஒன்றின் விளைவாக 1714ஆம் ஆண்டில் தாராபாயின் அதிகாரம் வீழ்ச்சியுற்றது. இராசாராமின் மற்றொரு விதவையான ராஜாஸ் பாய் (Rajas Bai) என்பவர் தாராபாயையும், அவரது மகனை இரண்டாம் சிவாஜியையும் சிறையிலடைத்துவிட்டுத் தமது மகன் சாம்பாஜியை அரியணையில் அமர்த்தினார். அவரே சாம்பாஜியின் காப்பாளராகவும் விளங்கினார். கோலாப்பூரில் (Kolhapur) தம்மை நிலைநிறுத்திக்கொண்ட சாம்பாஜி, நைஸாம் உல் முல்க்குடன் உறவாடியதோடு ஷாகுவிற்கு எதிராகப் பல சூழ்ச்சிகளைத் தொடர்ந்து செய்து வந்தார். ஷாகுவிடம் தோற்ற அவர் 1731ஆம் ஆண்டில் வார்னு (Warna) உடன்படிக்கையை ஏற்றுக்கொள்ள வேண்டியதாயிற்று. அதன்படி வார்னுவிற்குத் தெற்கிலுள்ள பகுதி சாம்பாஜிக்குச் சொந்தமானது என்றும், வடக்கிலுள்ள பகுதி ஷாகுவைச் சார்ந்தது என்றும் ஏற்பாடாகியது.

## 1713ஆம் ஆண்டில் பாலாஜி விஸ்வநாத் பீஷ்வாவாதல்

தாராபாயுடன் போரிட்டு வந்த அதேசமயத்தில் தமது தந்தை வழிவரும் நாட்டின் மையமெனத் திகழ்ந்த வட மகாராஷ்டிரத்தைக் கைப்பற்றி, அதனைத் தமது திடமான ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டுவரவேண்டுமென்பதை ஷாகு மறந்துவிடவில்லை. இங்ஙனம் பக்லானையும் (Baglan) காண்டேஷையும் தமது ஆதிக்கத்தின்கீழ்க் கொண்டுவருவதற்கென அவர் படைகளை ஏவினார். அவரது சேனாபதியான தானாஜி ஜாதவ் 1708ஆம் ஆண்டு ஜூன் மாதத்தில் இறந்ததும், அவரது மகன் சந்திரசென்னை அப் பதவிக்கு நியமித்தார். ஆனால், சந்திர சென், தாராபாயின் கட்சியில் சார்பு நாட்டம் கொண்டிருந்த காரணத்தால் எழக்கூடிய சதிக்கு மாற்றாக பாலாஜி விஸ்வநாத்தை சேனாகர்தே (Sanakarte) என்னும் படைகளை உருவாக்கும் அதிகாரியாக ஷாகு நியமித்தார். சேனாதிபதிக்கு ஒரு தடையாக இருக்கவேண்டுமென்பதற்காகவே அப் புதிய பதவியை அவர் தோற்றுவித்தார். ஷாகுவின் நம்பிக்கைக்கு உகந்த பணியாளான பாலாஜி விஸ்வநாத் திறமைசாலியாகவும், பற்றுறுதி கொண்டவராகவும் விளங்கினார். அவர் 1713ஆம் ஆண்டில் முதலமைச்சர் அல்லது பீஷ்வாவெனும் பதவிக்கு உயர்ந்தார்.

ஜஞ்ஜிராவின் (Janjira) சித்திக்களிடமிருந்த (Sidis) மேற்குக் கரையில் அமைந்த ஸ்ரீவர்தன் என்னும் ஊரின் தேஷ்முக்குகளாக (Deshmukhs) விளங்கியவர்களே பாலாஜியின் மூதாதையர்கள். முதலில் சிப்லனில் (Chiplen) இருந்த உப்பளத்தில் பாலாஜி கணக்கராகப் பணிபுரிந்தார். அங்கிருந்து பதினேழாம் நூற்றுண்டின் எண்பதுகளில் மேற்குத் தொடர்ச்சி மலையின் வடபகுதிக்குக் குடியேறினர். 1689ஆம் ஆண்டில் அவர் ராம்சந்திர அமாத்தியரிடம் (Ram Chandra Amatya) நிதிக்கணக்கராகப் பணிபுரிந்தார். அதன் பிறகு பூனு, தௌலதாபாத் ஆகிய மாவட்டங்களுக்கான சர்-சுபாவாகப் (Sar--Subah) பணியாற்றினர். 1705ஆம் ஆண்டில் அந்தப் பகுதியில்தான் அவுரங்கசீப் பாசறை அமைத்துக்கொண்டிருந்தார். மராத்திய மன்னரின் சேவகத்திலிருந்த பாலாஜி விஸ்வநாத், அம் மாவட்டங்களில் பணியாற்றியபோது முகலாய அதிகாரிகளுடன் நெருங்கிய தொடர்புகொண்டிருக்க வேண்டும். அவுரங்கசீபின் அதிகாரிகள் சிலருடன் நட்புக்கொண்டு, முகலாயப் பாசறையில் வசித்து வந்த ஷாகுவுடன் தொடர்புகொண்டிருப்பார் என்பது திண்ணம். அவரது திறமை, பண்பு, பற்றுறுதி ஆகியவை பற்றி ஷாகுவிற்கு நல்லெண்ணம் தோன்றியதாகத் தெரிகின்றது. ஷாகு விடுதலையாகி வெளிவந்ததும் அவருடன் இணைந்த முக்கியமானவர்களில் பாலாஜிதான் முதன்மையானவர். ஷாகுவிற்கு இருந்த எதிர்ப்புகளைக் களைந்து, மராத்தியரில் முக்கியமானவரை அவர் பக்கம் சேருமாறு செய்தவரும் பாலாஜியே. அதனுல் நாம் ஏற்கெனவே கண்டவாறு அவர் சேனுகர்தேவாக நியமனம் பெற்றுர். ஷாகுவின் சேனுபதியான சந்திர சென் பாலாஜியுடன் சண்டையிட்டுக்கொண்டு சீற்றத்துடன் தமது பதவியைத் துறந்துவிட்டு இழந்த பகுதிகளை மீட்க முயன்றுகொண்டிருந்த தாராபாயுடன் சேர்ந்துகொண்டபோது, பாலாஜியின் திறமையும், கடமைப் பற்றும்தான் நிலைமையைச் சமாளிக்க உதவின. தாராபாயின் திடமான ஆதரவாளரும், ஷாகுவின் மாருப் பகைவரும், மேற்குக்கரைப் பகுதியின் காவலரும், மராத்தியக் கடற்படையின் தலைவருமான காஞேஜி ஆங்ரேயை (Kanhoji Angre) பாலாஜி, தந்திரமாகத் தம் பக்கம் இழுத்துக்கொண்டார். ஷாகுவிற்கு உதவி புரியவும், அவருடன் மேற்கொண்ட ஓயாத போரினை முடிவிற்குக் கொண்டு வரவும் ஆங்ரேயை ஒப்புமாறு செய்தார். இத்தகைய அரிய சேவைகளைப் பாராட்டும்வகையில் பாலாஜி விஸ்வநாத்தை 1713ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 27ஆம் தேதியன்று பீஷ்வாவாக (முதலமைச்சராக) ஷாகு நியமித்தார்.

## 1719ஆம் ஆண்டில் முகலாயப் பேரரசருடன் ஷாகு செய்துகொண்ட உடன்படிக்கை

ஷாகு முகலாயப் பேரரசரிடம் உண்மையான பற்றுறுதி கொண்டிருந்தார். தம்மை வந்து காணவேண்டுமென்று பகதூர் ஷா விடுத்த வேண்டுகோளை அவர் புறக்கணித்தபோதிலும், பல பரிசுகளை அவருக்கு அனுப்பிவைத்ததோடு, 'சௌத்,' சர்தேஷ்முகி ஆகியவற்றைக் கொள்வதற்குத் தமக்கு அதிகாரம் வழங்கும் ஆணைகளை (Sanads) வழங்குமாறு வேண்டினார். பகதூர் ஷாவின் மரணம், அவரது புதல்வர்களுக்கிடையே தோன்றிய உள்நாட்டுப் போர், பல இளவரசர்கள் இறப்பதற்குக் காரணமான டில்லியில் நடைபெற்ற பெரும் புரட்சி ஆகியவை ஷாகுவிடம் எவ்வித மாற்றத்தையும் தோற்றுவிக்கவில்லை. டில்லியில் அரசரை உண்டாக்குவோராக இருந்த சையது சகோதரர்களைப் பேரரசர் பருக்ஷியார் வெறுத்துவந்தார். அவர் சையதுகளின் துணைகொண்டே அரியணை ஏறியபோதிலும், அவர்களைக் கவிழ்க்கும் சூழ்ச்சியில் ஈடுபட்டார். அதனால் தக்கணத்தின் ஆளுநர் பொறுப்பினை ஏற்பதற்கும், அப் பகுதியில் தமது கட்சியின் நலனைப் பாதுகாத்துக் கொள்வதற்கும் மீர் பக்ஷியான சையது உசேன் அலி தக்கணம் சென்றார். அவர் தக்கணத்தில் இருந்தபோது தமது தமையனாரான வஸீர் அப்துல்லாகானுக்கு எதிராகப் புதிய சூழ்ச்சிகள் அரசவையில் எழுந்தன என்பதைக் கேள்வியுற்றார். அதனால் பருக்ஷியாரை அடியோடு ஒழித்துவிடுவதென்று தீர்மானித்து வலிமைவாய்ந்த மராத்தியப் படையொன்றைத் தந்து உதவுமாறு கோரி ஷாகுவின் உதவியை நாடினார். பேச்சுவார்த்தைகள் தொடர்ந்தன. அதன் பயனாகப் பின்வரும் ஒப்பந்தம் உருவாகியது. (1) சிவாஜியின் 'சுயராஜ்' (Swaraj) என அழைக்கப் பெற்ற (சிவாஜியின் பழைய பகுதிகள்) பகுதிகளை அவற்றில் இருந்த கோட்டைகளுடன் ஷாகுவிடம் பேரரசர் ஒப்படைத்துவிட வேண்டும். (2) காண்டேஷ், பேரார், காண்ட்வனம், ஐதராபாத், கர்நாடகம் ஆகியவற்றில் மராத்தியர் அண்மைக் காலத்தில் கைப்பற்றிய பகுதிகளையும் ஷாகுவிடம் தந்துவிட வேண்டும். (3) முகலாய தக்கணத்தில் 'சௌத்', சர்தேஷ்முகி ஆகிய வரிகளைத் திரட்ட மராத்தியருக்கு அனுமதி வழங்கவேண்டும். சௌத்திற்குப் பிரதியாக 15,000 வீரர்களைக்கொண்ட படை ஒன்றினைப் பேரரசரின் சேவைக்கென ஷாகு அனுப்ப வேண்டும். சர்தேஷ்முகிக்குப் பதிலாகக் கொள்ளை, புரட்சிக் கலகங்கள் முதலியவற்றைத் தடுத்து நிறுத்தித் தக்கணத்தில் ஒழுங்கினையும் அமைதியினையும் காக்கும் பொறுப்பை அவர் ஏற்கவேண்டும். (4) கோலாபூரில் வாழ்ந்த சாம்பாஜியை அவர் (ஷாகு) துன்புறுத்தக்கூடாது. (5) பத்து

இலட்ச ரூபாய்களைப் பேரரசருக்குத் திறையாக ஆண்டுதோறும் அளிக்கவேண்டும். (6) டில்லியில் நிறுத்திவைக்கப்பெற்றிருந்த ஷாகுவின் தாயாரான யேசுபாய், ஷாகுவின் மனைவி, உடன்பிறந்தவரான மதன்சிங், மராத்திய அரச குடும்பத்தைச் சார்ந்த மற்றையோர், அவர்களுடைய பணியாட்கள் ஆகிய அனைவரையும் பேரரசர் விடுதலைசெய்து டில்லியிலிருந்து திரும்ப அனுப்பிவைக்கவேண்டும்.

இந்த ஒப்பந்தக் கூறுகளையெல்லாம் சையது உசேன் அலிகான் ஏற்றுக்கொண்டதோடு இவைகளைப் பேரரசர் ஏற்குமாறு செய்வதாகவும் வாக்களித்தார். டில்லி படையெடுப்பு ஒன்றில் பாலாஜி விஸ்வநாத்தும் 15,000 வீரரடங்கிய படையுடனை காண்டே ராவ் தபாடேயும் (Khande Rao Dabhade) உசேன் அலியுடன் சேர்ந்து கொண்டனர். பருக்ஷியாரைத் தவிசிலிருந்து நீக்கிய சையது சகோதரர்கள் ரஃபி-உத்-தராஜத்தை அரியணையில் அமர்த்தினர். புதிய மன்னரும் மராட்டியருடனை உடன்படிக்கையை ஏற்றுக் கொண்டார். அதனால், சௌத், சர்தேஷ்முகி ஆகியவற்றை வழங்குவதற்கான அரச ஆணைகளை எழுதி அவற்றினை பீஷ்வாவிடம் ஒப்படைத்தனர். சௌத் கொள்வதற்கான ஆணை 1719ஆம் ஆண்டுமார்ச் மாதம் 13ஆம் தேதியும், சர்தேஷ்முகிக்கான ஆணை அதே ஆண்டு மார்ச் மாதம் 25ஆம் தேதியும் வெளிவந்தன. ஷாகுவின் தாயாரான யேசுபாயும் அவரது, குடும்பத்தைச் சார்ந்த பிறரும் விடுதலையடைந்தனர். அப்போதிருந்து தக்கணத்திலிருந்த முகலாய சுபாக்களின் நிதி வருவாயில் முப்பத்தைந்து சதவீதத்தினைப் பெறும் சட்டமுறையான உரிமை ஷாகுவிற்குக் கிடைத்தது. ஆனால், அவர் பேரரசருக்கு அடங்கிய உட்குடியாகவே அப் பகுதியைப் பெறவேண்டியிருந்தது.

## பாலாஜி விஸ்வநாத்தின் மரணம்: அவரது ஆளுமையும், பண்பும்

1720ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 12ஆம் தேதியன்று பாலாஜி விஸ்வநாத் இவ்வுலக வாழ்வை நீத்தார். அவருக்கு இரு புதல்வர்களும், இரு புதல்வியரும் இருந்தனர். மூத்த புதல்வரான பாஜிராவ் பத்தொன்பது வயதான வாலிபராய் இருந்தபோதே தந்தைக்குப் பிறகு பீஷ்வாவானர்.

பாலாஜி விஸ்வநாத் கொங்கணத்திலிருந்து வந்த சித்பவான் பிராமணர் (Chitpawan Brahman) என்றபோதிலும் மகாராஷ்டிரத்திற்கு தேஷில் (Desh) குடியேறினர். அவர் சுயமாகக் கற்றுச் சொந்த முயற்சியிலேயே முன்னுக்கு வந்தவர். ஊர் பேர் தெரியாத சாதாரண நிலையிலிருந்து புகழின் உச்சிக்குச் சென்றவர். இடைக்

கால இந்திய வரலாற்றிலேயே, போர்வீரராக இல்லாமலிருந்தும் உயர்ந்த பதவிக்கு வந்த மிகச் சிலரில் அவரும் ஒருவர். குதிரை ஏறிச்செல்வதைத் துன்பமாக உணர்ந்தவர் பாலாஜி என்று கூறப் படுகின்றது. போர் வீரருக்கான ஆற்றல் அவரிடம் இல்லை யென்றாலும் அவர் தலைசிறந்த அரசியல் அறிஞராகவும், நல்ல ஆட்சி வினைஞராகவும் விளங்கினார். புரந்தரர்கள் (Purandaras), போகில்கள் (Bokils) மற்றுமுள்ள குறிப்பிடத்தக்க தனிமனிதர்கள், குடும்பங்கள் போன்ற மகாராஷ்டிர அரசியல் சக்திக்கூறுகளை ஷாகுவின் பக்கம் திருப்புவதில் பாலாஜி பெரும் பங்கு கொண்டார். கைதேர்ந்த நிதியாளராக விளங்கிய அவர் ஷாகுவின் நிதி நிலைமையைச் செம்மைப்படுத்தியதோடு அந்நாளில் இருந்த பல வளமிக்க பொருளக முதல்வர்களின் நிதி உதவியையும் ஷாகுவிற்குப் பெற்றுத் தந்தார். தமது வெல்திறத்தினாலும், சாமர்த்தியத்தினாலும் கிளர்ச்சி மிகுந்த சந்திர சென் ஜாதவையும், தானாஜி தொராட்டையும் அடக்குவதில் அவர் வெற்றிகண்டார். அதேபோன்று, ஷாகுவின் பகைவரான மராத்திய அரசகுலத்தின் கோலாப்பூர் பிரிவினரின் பெருமையைக் குறைப்பதிலும் வெற்றிபெற்றார். தானாஜி ஆங்ரேயை இணக்கப்படுத்தியதும், தக்கணத்தில் ஆறு சுபாக்களில் சௌத் வரியையும் சர்தேஷ்முகியையும் கொள்ளும் மராத்தியருடைய உரிமைக் கோரிக்கையை முகலாயப் பேரரசர் ஏற்றுக்கொள்ளும் வகையில் அமைந்த 1719ஆம் ஆண்டைய உடன்படிக்கையும், வெல்திறத்தில் அவர் பெற்ற தலைசிறந்த வெற்றிகளாகும். சௌத், சர்தேஷ்முகி ஆகியவற்றைத் தண்டுவதற்காக அவர் சூழ்திறமிக்க முறையினைக் கையாண்டார். அதாவது, தோடர்மாலின் (Todar Mal) நிலையான வரிவிதிப்பை அடிப்படையாகக்கொண்டு அதில் இருந்து கிடைக்கும் நிதியில் 35 சதவீதம் மராத்தியருக்குக் கிடைக்குமாறு ஏற்பாடு செய்தார். அப் பணத்தைத் தண்டுவதற்கென முகலாய தக்கணத்தின் பல்வேறு பகுதிகளில் தமது அதிகாரிகளையே நியமித்தார். இத்தகைய முறையினால் மராத்திய அரசின் வருவாய் வளர்ந்து கொண்டே செல்வதற்கு வழியேற்பட்டது. அதனோடு வரம்பு மீறிய வரிகளைச் செலுத்த முடியாத வறட்சியான பகுதிகளில் துன்புற்றிருந்த மக்களின் செயல்களில் தலையிடுவதற்கு ஒரு வாய்ப்பாகவும் அது அமைந்தது. பல பகுதிகளில் வரி கொள்ளும் பொறுப்பினை மராத்தியத் தலைவர்களிடம் பாலாஜி ஒப்படைத்தார். அதன்படி அரசாங்கத்தின் வருவாயை உயர்த்துவதன்மூலமாக அவர்களின் வருவாயும் உயர வழியிருந்தது. ஆயினும் அரசாங்கத்தின் கட்டிலிருந்து விடுபட ஏதுவாக இருக்கும் வகையில் ஒரே இடத்தில் நன்கு அமைந்த நிலப்பரப்பில் அதிகாரம் செலுத்த எத் தலைவரையும் அனுமதிக்காதது அவரது மதிநுட்பத்திற்கு மற்றொரு சான்றாகும். பாலாஜியின் குண இயல்புபற்றி சர் ரிச்சர்டு டெம்பிளின் (Sir Richard

Temple) குறிப்பு எடுத்து இயம்பத்தக்கது. அவர் பின்வருமாறு குறித்துள்ளார்: 'தமது வாரிசுகளைக் காட்டிலும் உண்மைப் பிராமணரைப் போன்று அவர் (பாலாஜி) விளங்கினர். அமைதி யான, அகல் விரிவான, முனைப்பான அறிவாற்றல் உடையவராக இருந்தார். கற்பனைத் திறம் வாய்ந்த, மேல்நோக்கிச் செல்லும் மன நிலையைப் பெற்றிருந்தார். அறமுறைச் சக்தியினால் ஆணவத்தை அடக்கியாளும் ஆற்றல் கொண்டிருந்தார். வெல்திறம் சார்ந்த இணைப்புகளை உருவாக்குவதிலும் நிதிசார்ந்த செய்திகளிலும் மேதை யாகத் திகழ்ந்தார். தீராத துன்பம் தரக்கூடிய செயல்களில் அரசியல் ஊழ் அவரைத் தள்ளியது. பலமுறை அவரைக் கொன்றுவிடுவதாகப் பலர் அச்சுறுத்தினர். ஆனால், அவரது இனத்திற்கு உரியமுறையில் அவர் விருப்பு வெறுப்பு அற்ற நிலையில் கழுவாய் காண வாய்ப்புக் கிடைக்கும்போது தம்மை ஆயத்தம் செய்துகொண்டார். அச்சுறுத்தும் ஆற்றலினாலும், வாதிடும் வல்லமையாலும் மராத்தியருடைய இறைமை நிலையை முகலாயர் ஏற்குமாறு செய்தார். தாம் நினைத்தவற்றையெல்லாம் வெற்றிகரமாக முடித்து, முகம்மதியர் ஆதிக்க அழிவின் அஸ்தி வாரத்தின்மீது இந்துப் பேரரசினைத் தோற்றுவித்துவிட்டோம் என்ற உணர்வுடனும் அந்தப் பேரரசின் தலைமைப் பதவி மரபு வழியாகத் தமது குடும்பத்தினருக்கே கிடைக்கும் என்ற மனநிறைவோடும் முதிராப் பருவ மரணமெய்தினர்'. (Oriental Experience, pp. 380-90). இரண்டாவது மராத்தியப் பேரரசிற்கு உண்மையில் அடி கோலியவர் பாலாஜி விஸ்வநாத்தே என்று கொள்வது பொருந்தும்.

## பாஜி ராவ் 1720–1740

பாலாஜி விஸ்வநாத்தின் மூத்த புதல்வரான பாஜி ராவைப் பிற தலைவர்கள், ஆலோசகர்கள் ஆகியோரின் எதிர்ப்பினுக்கிடையே 1720ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 27ஆம் தேதியன்று பீஷ்வாவாக ஷாகு நியமித்தார். அப்போது பாஜி ராவ் இருபது வயதுகூட நிரம்பாத இளைஞராயிருந்தார். எனினும், திண்மையையும், திடகாத்திரமான உடலையும், வழக்குமீறிய ஆண்மை யையும், கூர்மையான மதிநுட்பத்தையும் நடைமுறை சார்ந்த பொது அறிவையும் அவர் பெற்றிருந்தார். அது தவிரவும் அவர் குதிரை யேற்றத்தில் ஒப்பற்ற திறமை கொண்டிருந்தார். கணக்குகளில் மிகுந்த தேர்ச்சி பெற்றிருந்தார். ஆட்சித்துறை, வெல்துறை ஆகிய நடைமுறை சார்ந்த கலைகளில் முழுத் தேர்ச்சி அடைந்திருந் தார். முகலாயப் பேரரசின் சீரழிந்த நிலையை நன்குணர்ந் திருந்தார். அதிலிருந்து கூடுமானவரை மாநிலங்களைப் பறிப்பதற்

கான திட்டத்தையும் உருவாக்கினர். ஆயினும், ஸ்ரீபத் ராவ் பிரதிநிதி என்பார் அவரை எதிர்த்தார். அவருடைய திட்டம் கண்மூடித்தனமானதெனக் கண்டித்து கோலாப்பூரையும் கர்நாடகத்தையும் ஒடுக்கவேண்டுமென்று வற்புறுத்தினர். ஆனல், பாஜிராவின் நாவன்மை, எதிர்ப்புத் தெரிவித்தவரின் வாயை அடைத்து, ஷாகுவின் ஆதரவைப் பெற்றுத்தந்தது. 'இந்துக்களின் சொந்த நாட்டிலிருந்து அந்நியரை விரட்டி அழியாப் புகழ்பெற இதுவே தகுந்த தருணம்' என அவர் குறிப்பிட்டார். மேலும், அவர் பேசுகையில் 'பட்டுப்போகும் மரத்தின் அடித்தண்டினை வெட்டுவோம், கிளைகள் தானகவே விழுந்துவிடும்; இந்துஸ்தானத்தின்மீது நமது முயற்சிகளைத் திருப்புவோமானல் கிருஷ்ணாவிலிருந்து அட்டாக் வரையிலும் மராத்தியர் கொடி பறக்கும்' என மொழிந்தார். இவ் வார்த்தைகள் ஷாகுவின் மனத்தில் நன்கு பதிந்தன. புதிய பீஷ்வாவின் கொள்கையை ஏற்றுக்கொண்ட ஷாகு 'இமயத்திற்கு அப்பால் அதனை நீர் நடவேண்டும். மதிப்பார்ந்த தந்தையின் தகைமை சால் மைந்தர் நீவிர் என்பது திண்ணம்' என்று குறிப்பிட்டார். முடிவு செய்யப் பெற்றவுடன் முகலாயப் பேரரசருக்கு எதிராக பீஷ்வா தமது கவனத்தைத் திருப்பினர்.

## மாளவம், குஜராத் ஆகியவற்றின்மீதான படையெடுப்பு, 1724–1728

மேலே குறித்த கொள்கைக்கிணங்க 1724ஆம் ஆண்டில் பாஜிராவ் படையுடன் நர்மதையாற்றைக் கடந்து மாளவத்தை வெற்றி கொண்டார். 1699ஆம் ஆண்டு நவம்பர் மாதத்திலேயே அம் மாநிலத்தில் மராத்தியர் முதன்முதலாக நுழைந்தனர். ஆனல், அப்போது வெறும் கொள்ளைத் தாக்குதல் நிலையிலேயே அவர்களது செயல் அமைந்தது. ஆயின், மாளவத்தில் நிலையான காலடி ஊன்ற வேண்டுமென பாஜிராவ் விழைந்தார். அத்தகைய துணிகரச் செயலுக்குச் சாதகமான சமயம் கிடைத்தது. நாட்டில் இந்து ஆட்சியை மீட்க வேண்டுமென்ற மராத்தியரின் குறிக்கோளை இராஜபுத்திரத்தலைவர்கள், குறிப்பாக, ஜெய்ப்பூரின் ஜெய் சிங் ஆதரித்தனர். அதனல் அவர்கள் பாஜிராவுடன் நட்புக் கொண்டனர். எவ்வித எதிர்ப்பும் இன்றி பாஜிராவ் மாளவத்தில் வெற்றிபெற்றார். திறை கொள்வதற்காகத் தமது துணைவர்களான உதாஜி பவார் (Udaji Pawar), மல்ஹர் ராவ் ஹோல்கார், ரனேஜி சிந்தியா ஆகியோரை அங்கேயே விட்டுவிட்டுப் பூனவிற்குத் திரும்பினர். அவர்கள்தான் காலப்போக்கில் தார், இந்தூர், குவாலியர் ஆகிய இடங்களில் அரச குலங்களைத் தோற்றுவித்தனர். அதே சமயத்தில் குஜராத்திலும்

தங்களது ஆட்சியை நிலைநிறுத்த வேண்டுமென்று மராத்தியர் முயன்றனர். அம் மாநிலத்தின்மீது 1706ஆம் ஆண்டு மார்ச் மாதத்திலேயே தானுஜி ஜாதவ் முதல் முறையாகப் படை கொண்டு சென்றிருந்தார். அந்த மாநிலத்திலும் பக்லானிலும் திறை தண்டுவதற்காகச் சேனுபதியான காண்டேராவ் தபாடே அமர்த்தப்பெற்ருர். அவரது துணைவரான தமாஜி கெய்க்வார் பரோடா அரச குலத்தைத் தோற்றுவித்தார். தமாஜியின் மைத்துனரான பிலாஜி கெய்க்வார் குஜராத்தைக் கைப்பற்றி, சூரத்திற்கு 50 கல் கிழக்கேயுள்ள சோன்கரில் (Songarh) கோட்டையொன்றும் கட்டினுர்.

## பாஜி ராவும் நைஸாமும், 1721 – 1728

தக்கணத்தின் ஆறு சுபாக்களில் அரசப் பகர ஆளாக இருந்தவரும், சையது சகோதரர்களின் வீழ்ச்சிக்குப் பிறகு முகலாயப் பேரரசிலேயே மிகுந்தசக்தி வாய்ந்த தலைவராகவும் திகழ்ந்த, நைஸாம் உல் முல்க்கிற்கும் மராத்தியருக்கும் இடையேயான உறவு நிலையைப் பொருத்தியமைத்தல் புதிய பீஷ்வாவிற்குச் சிக்கல் நிறைந்த பிரச்சினையாக இருந்தது. தமது அதிகார எல்லைக்குட்பட்ட பகுதியை உரிமை பெற்ற அரசாக மாற்றியமைக்க உறுதி பூண்ட நைஸாம், மராத்தியரைத் தமது பெரும் பகைவர் என எண்ணியது இயற்கையே. அவர் 1719ஆம் ஆண்டைய உடன்படிக்கையைச் செயல்படுத்த மறுத்தார். ஷாகு அல்லது கோலாப்பூரில் வாழ்ந்த சாம்பாஜி ஆகிய இருவரில் எவர் மகாராஷ்டிரத்தின் மறுக்க முடியாத மன்னராகத் தம்மை நிலைநிறுத்திக்கொள்ளுகின்ருரோ அவருக்கே சௌத், சர்தேஷ்முகி ஆகியவற்றை அளிக்கப்போவதாக அறிவித்து, அதன்மூலமாக அவர்களிடையே வேற்றுமை விதைகளைத் தூவினுர். நைஸாமின் தந்திர நோக்கத்தை அறிந்துகொண்ட பாஜி ராவ் அவருடன் வெளிப்படையாகப் 'போரிடவேண்டுமென்று எடுத்துக் கூறினுர். ஆனுல், அமைதி விரும்பியான ஷாகு, அமைதியான வழிகளில் பூசலைத் தீர்த்துக்கொள்ளலாம் என யோசனை கூறினுர். அதன் விளைவாக 1721ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 14ஆம் தேதி சிக்கால்தனிலும் (Chikkalthan), 1723ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் 23ஆம் நாளன்று தொஹாதிற்கு (Dohad) 25 கல் தெற்கேயுள்ள பொலாஷாவிலும், 1724ஆம் ஆண்டு மே மாதம் 28ஆம் தேதி தாருக்கு அருகேயமைந்த நால்ச்சாவிலும் (Nalchha) நைஸாமை பாஜிராவ் மூன்று முறை சந்தித்தார். 1719ஆம் ஆண்டைய உடன்படிக்கையை செயல்படுத்துமாறு நைஸாமை அறிவுறுத்தி இணங்க வைத்தார். தஞ்சாவூர் அரசையும், ஷிவ்னர், சகான், மஹுலி, கார்னலா, பாலி, மிராஜ் ஆகிய கோட்டைகளையும் அவற்றுடன்

நிலப்பகுதிகளையும் ஷாகுவிடம் திருப்பித் தர இணங்குமாறு சேர்ந்த செய்தார். அவர் வேறு பல வேண்டுகோள்களையும் விடுத்தார். ஆனால், இத்தகைய வெல்திற மாநாடுகளினால் எவ்விதப் பயனும் ஏற்படவில்லை. இரண்டு ஆண்டுகளுக்கு (1722–1723) டில்லியில் வஸீராகப் பணியாற்றுவதற்கு நைஸாம் சென்றபோது, அவரது உதவியாளரான முபாரிஸ்கான் (Mubariz Khan) என்பவர் தக்கணத்தின் ஆட்சிப் பொறுப்பினை ஏற்றிருந்தார். வஸீர் பதவியில் (1722) பிப்ரவரி முதல் 1723, டிசம்பர் வரையில்) வெற்றி: பெருது தக்கணத்திற்குத் திரும்பிய நைஸாம் முபாரிஸ்கானுடன் போரிடவேண்டி வந்தது. அச் சூழ்நிலையைப் பயன்படுத்திக்கொண்டு பர்ஹான்பூர் மாவட்டத்தை பாஜி ராவ் கைப்பற்றிக்கொண்டார். எவ்வாறெனினும் நைஸாம், 1724ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் பத்தாம் நாளில் சகர்கெட்லா (Sakharkhedla) எனுமிடத்தில் முபாரிஸ் கானை முறியடித்துக் கொன்று, தமது மாநிலத்தை மீட்டுக்கொண்டார். அச் சண்டையின்போது பாஜி ராவ் நடுநிலை வகித்தார். அது முடிந்த பிறகு கர்நாடகத்தின்மீது இணையாகப் படையெடுத்துச் செல்லலாமென்று நைஸாமிடம் யோசனை கூறினர்.

1725, 1726ஆம் ஆண்டுகளில் பாஜி ராவ் கர்நாடகத்தின்மீது தொடர்ந்து இருமுறை படையெடுத்துச் சென்றார். அவருடன் நைஸாம் சேரவில்லை. மாறாக பீஷ்வாவுடன் கலக்காமலேயே தனித்து இயங்குவதற்கெனத் தமது துணைவரான ஐவாஸ்கான் (Aiwaz Khan) தலைமையில் ஒரு பெரும் படையினைக் கர்நாடகத்திற்கு அனுப்பினர். சித்தால்துர்க்கத்திற்கு (Chitaldurg) முன்னேறிச் சென்ற மராத்தியர், திறை நிலுவைகளை வசூலித்தனர். ஆனால், தக்கணத்தின் முறையான தலைவர் தாமே எனக் கருதிய நைஸாம் உல் முல்க், பாஜி ராவின் கர்நாடகப் படையெடுப்பினைத் தமது ஆட்சிக்குட்பட்ட பகுதியில் நேர்ந்த அத்துமீறிய செயலெனக் கொண்டு, பீஷ்வா கர்நாடகத்தில் இருந்தபோது மகாராஷ்டிரத்தில் தொல்லை விளைவிப்பதற்கான சில வழிமுறைகளை மேற்கொண்டார். ஷாகுவின் ஆதரவாளர்களைத் தவருன வழியில் தூண்ட முயன்றார். கோலாப்பூரில் வாழ்ந்த சாம்பாஜியை மகாராஷ்டிரம் முழுவதற்கும் உரிமைகொண்டாட ஊக்குவித்தார். சாம்பாஜியும் தமது அமைச்சரான நீல்கந்த் திரிம்பக்கின் (Nilkanth Trimbak) ஆலோசனைப்படி 1726ஆம் ஆண்டு அக்டோபர் மாத ஆரம்பத்தில் நைஸாம் உல் முல்க்குடன் சேர்ந்துகொண்டார். அவர்களிருவரும் ஷாகுவின் பகுதியைத் தாக்கினர். அதனல் அச்சமுற்ற ஷாகு நைஸாமுடன் சமாதான உடன்படிக்கை செய்துகொள்ள பேச்சுவார்த்தை தொடங்கவேண்டியதாயிற்று. மக்களிடமிருந்து நேரடியாக சௌத் வரியைத் தண்டுவதற்காகப் பல்வேறு பகுதிகளில் நியமிக்கப்

பெற்றிருந்த பகர ஆட்களையெல்லாம் விலக்கிக்கொள்ளவேண்டு மென்றும், அதற்கு ஈடாகத் தாம் பணம் அளிப்பதாகவும் கூறிய நைஸாமின் யோசனையை ஷாகு ஏற்கவிருந்த தருணத்தில், கர்நாடகத்திலிருந்து பாஜிராவ் திரும்பி வந்தார். அப்போது சௌத் வரிக்காகப் பணம் கொடுக்கவும் நைஸாம் மறுத்தார். மேலும், மகாராஷ்டிரத்தின் முறையான தலைவராக சாம்பாஜியையே தாம் கருதுவதாகவும் அறிவித்தார். அப்போதுதான் ஷாகு உண்மை நிலையை உணர்ந்துகொண்டார். நைஸாம் உல் முல்க்குடன் போரிட வேண்டுமென்ற பாஜிராவின் யோசனையையும் ஏற்றுக்கொண்டார். 1728ஆம் ஆண்டு மார்ச் மாதம் ஆறும் தேதியன்று அவுரங்காபாத் திற்கு மேற்கே இருபது மைல் தொலைவிலுள்ள பால்கேடிற்கு (Palkhed) அருகில் நைஸாமை பீஷ்வா வளைத்துக்கொண்டார். நைஸாமின் படைகளுக்கான தளவாடங்களையும் தண்ணீரையும் தடைசெய்து உடன்படிக்கையொன்றில் கையொப்பமிடுமாறு அவரை வற்புறுத்தினர். மார்ச் மாதம் 16ஆம் தேதி கையொப்ப மிடப்பெற்ற முங்கி-ஷியோகோன் உடன்படிக்கையின்படி கிருஷ்ணு ஆற்றிற்கு வடக்கே இருந்த மகாராஷ்டிரம் முழுவதற்குமான மன்னர் ஷாகுவே என்பதை நைஸாம் ஏற்றுக்கொண்டார். அவ் உடன்படிக்கையின் வாசகக் கூறுகள் பின்வருமாறு:

1. சாம்பாஜிக்கு அளித்துவந்த பாதுகாப்பை விலக்கிக் கொள்ளவும், அவரை பான்ஹலாவிற்குத் திரும்ப அனுப்பவும் நைஸாம் இணங்கினர்.

2. கிருஷ்ணுவிற்கு வடக்கே இருந்த மாவட்டங்களிலும், நைஸாமிடம் ஷாகு அளித்தது நீங்கலாக, கிருஷ்ணுவிற்கும் பாஞ்ச்–கங்காவிற்கும் (Paunch - Ganga) இடையேயமைந்த ஜாகீர்களிலும் சௌத் வரி கொள்ளும் ஷாகுவின் உரிமையை நைஸாம் ஏற்றுக்கொண்டார்.

3. மராத்தியரிடமிருந்து கைப்பற்றிய பகுதிகளை அவர் களிடமே திருப்பித் தந்துவிடுவதாகவும், சிறைப்பிடித்த மராத் தியரை விடுதலைசெய்வதாகவும் அவர் வாக்களித்தார்.

4. சௌத், சர்தேஷ்முகி ஆகியவற்றைக் கொள்ளும் ஷாகு வின் உரிமையைப் பொறுத்தவரையில் 1719ஆம் ஆண்டைய உடன்படிக்கைக்குத் தாம் கட்டுப்படுவதாகவும் அவர் உறுதியளித் தார். 1719ஆம் ஆண்டைய உடன்படிக்கை ஒப்புக்கொண்ட மராத் தியரின் உரிமைகளை முறையாக ஏற்றுக்கொண்ட காரணத்தால் 1728ஆம் ஆண்டு மார்ச் மாதம் பதினாறும் தேதி ஏற்பட்ட இந்த உடன்பாடு சிறப்புவாய்ந்தது. மேலும், சாம்பாஜியைத் தாம்

ஆதரிப்பதில்லையென்று நைஸாம் வாக்களித்ததால் ஷாகுவின் பகைவருடைய ஆதிக்கம் அழியத் தொடங்கியது. போர்த்திறம் வல்லவராகவும், வெல்திறமுடையவராகவும் விளங்கிய பாஜிராவின் புகழை அது உயர்த்தியது.

முங்கி–ஷேயோகோன் உடன்படிக்கையினுல் நைஸாமிற்கும் மராத்தியருக்குமிடையே ஒப்புரவிணக்கம் ஏற்பட்டுவிடவில்லை. திரிம்பக் ராவ் தபாடேயுடன் சேர்ந்து நைஸாம் சதியொன்றை உருவாக்கினுர். ஆனுல், 1731ஆம் ஆண்டு ஏப்ரலில் திரிம்பக்கை பீஷ்வா கொன்ருர். அடுத்தபடியாக, மாளவத்தின் முகம்மதுகான் பங்காஷுடன் இணைந்துகொண்ட நைஸாம் பாஜிராவைத் துரத்திச் சென்ருர். ஆனுல், மீண்டும் அவர் தோல்வியே கண்டார். போர்க் களத்தில் தோல்விகண்ட நைஸாம் இறுதியாகப் பாஜி ராவுடன் இரகசிய உடன்படிக்கையொன்றைச் செய்துகொண்டார். அதன் படி சௌத், சர்தேஷ்முகி வரிகளை நைஸாமிடமிருந்து பெறுவதற்கு ஈடாக அன்னுரது ஆட்சிக்கு உட்பட்ட பகுதியை அழிக்காது திரும்பிவிடுவதாக பாஜிராவ் வாக்குறுதி தந்தார். அதே சமயத்தில் மராத்தியருடைய வட இந்தியப் படையெடுப்பின்போது நடுநிலை வகிக்கச் சூழ்ச்சிமிக்க நைஸாம் இணங்கினுர். இங்ஙனம் மராத் தியருடைய தாக்குதலிலிருந்து தமது பகுதியைக் காத்துக்கொள்வ தற்காக மராத்தியருடைய பேராசைக் கனலை நைஸாம் வடக்கில் திருப்பினுர்.

## மாளவத்தையும் பந்தல்கண்டையும் நடைமுறையில் வெல்லுதல், 1728

அடுத்து பந்தல்கண்டையும் மாளவத்தையும் தாக்க பாஜி ராவ் முடிவு செய்தார். தமது சகோதரரான சிம்னுஜி அப்பாவை (Chimnaji Appa) மாளவத்திற்கு அனுப்பினுர். அம் மாநிலத்தை ஆண்டுவந்த திறமையும் அனுபவமும் மிக்க அரசப் பகர ஆளான கிர்தார் பகதூர் (Kirdar Bahadur) மாளவத்தைக் காக்கப் பெரு முயற்சி செய்தார். ஆயினும், டிசம்பர் மாதம் ஒன்பதாம் தேதி நடைபெற்ற கடுமையான சண்டையில் அவர் உயிரிழந்தார். அவரது உறவினரான தயா பகதூரும் (Daya Bahadur) அதே போர்க்களத்தில் மடிந்தார். இப்போது மாளவத்தின்மீது மராத்தி யரின் ஆதிக்கம் உறுதியடைந்தது. ஏறக்குறைய அதே சமயத்தில் பாஜி ராவ் பந்தல்கண்டிற்கு நேரடியாகப் படையெடுத்துச் சென்ருர். அக்காலத்தில் பந்தல்கண்டு அலகாபாத் மாநிலத்தின் ஒரு பகுதியாகவே இருந்தது. அலகாபாத்தில் இருந்த முகலாய ஆளுநரான முகம்மது கான் பங்காஷ் ஜெய்ப்பூரில் சத்ரசாலை

(Chhatra Sal) முற்றுகையிட்டார். இவ்வாறு இடருக்கு உள்ளான புகழ்மிக்க பந்தேலர் தலைவரான சத்ரசாலே பாஜி ராவைப் படை கொண்டுவருமாறு அழைத்தார். பீஷ்வாவும் தேவகிரியைவிட்டு நீங்கி வேகமாக முன்னேறிச்சென்று மார்ச் மாதம் 22ஆம் தேதி யன்று மஹோபாவை (Mahoba) அடைந்தார். பங்காஷிடம் தோற்றுச் சிறைப்பட்ட சத்ரசால், சிறையிலிருந்து தப்பி மஹோபா வில் தங்கியிருந்த பாஜி ராவைச் சந்தித்தார். இவ்வாறு இணைந்த இவ்வரும் முகம்மது கான் பங்காஷின் கரத்தை வலுப்படுத்துவதற் காகப் படையுடன் வந்த அவரது மகனை கைம்கானை ஜெய்த் பூருக்கு அருகில் முறியடித்தனர். அதன் பிறகு, அவர்கள் முகம்மது கானைத் தாக்கி முறியடித்து, அவரது படையின் பெரும் பகுதியைக் கொன்று குவித்தனர். ஆயினும், தாம் எப்போதும் பந்தல்கண் டிற்குத் திரும்பி வருவது இல்லை யென்றும், சத்ரசாலைத் துன்புறுத்துவ தில்லை யென்றும் முகம்மதுகான் எழுத்துவடிவில் உறுதிமொழி யளித்த பிறகு அவரை பர்ரூகாபாத்திற்குப் பின்வாங்கிச் செல்ல அனுமதித்தனர். திறந்த வெளியில் அரசவையைக் கூட்டிய சத்ரசால் ஹிந்தே ஷா (Hinde Shah), ஜகத்ராஜ் (Jagat Raj) என்ற தமது இளம் மக்களை பாஜி ராவிடம் அடைக்கலமாக ஒப்படைத்தார். தமது மைந்தர்களை பீஷ்வா தமது இளைய சகோதரர்களைப்போலப் பாவித்து, அவர்களுக்கு ஆதரவும் பாதுகாப்பும் அளிக்கவேண்டு மென்ற நிபந்தனையுடன் தமது நாட்டின் பெரும் பகுதியை சத்ரசால் பீஷ்வாவிற் களித்தார். அநேகமாக, அச் சமயத்தில்தான் பேரழகியான மஸ்தானியை பாஜி ராவிற்கு அவர் அறிமுகப்படுத்தி யிருக்கவேண்டும். பீஷ்வாவும் 1729ஆம் ஆண்டு ஜூன் மாதத் தொடக்கத்தில் ஜெய்த்பூரைவிட்டுப் பூனாவிற்குப் புறப்பட்டுச் சென்றார். பாஜிராவிற்குக் கிடைத்த பகுதியில் கல்பி, ஹடா, சாகர், ஜான்சி, சிரோஞ்ச், கூஞ்ச், கார்கோடா, ஹிந்தேநகர் ஆகியவை அடங்கியிருந்தன. பாஜி ராவ் அப் பகுதியை கோவிந்த் பந்த் கேர் (Govind Pant Kher) என்பாரின் பொறுப்பில் விட்டுவந்தார். அப் போதிருந்து கோவிந் பந்த் கேர், கோவிந் பந்த் பந்தேலா என அழைக்கப்பெற்றார். மாளவத்தின் முகலாய அரசப் பகர ஆளாக இருந்த ஜெய்ப்பூரின் ராஜா ஜெய்சிங் பீஷ்வாவுடன் சமாதானம் செய்துகொண்டார். முகலாயப் பகுதிகளைக் கொள்ளையிடாது இருந் தால் பீஷ்வாவை மாளவத்தின் துணை ஆளுநராக நியமிப்பதாகக் கூறினர். ஆயினும், அத்தகைய யோசனையைப் பேரரசர் ஏற்க மறுத்தார். எவ்வாறெனினும், அப்போதிருந்து மாளவமும், பந்தல் கண்டும் நடைமுறையில் மராத்தியரின் பிடியில் இருந்தன எனலாம்.

## குஜராத்தின்மீது ஆதிக்கம் : தபாதேக்கரின் வீழ்ச்சி

அடுத்தபடியாக குஜராத்தைத் தாக்குவதென்று பாஜி ராவ் தீர்மானித்தார். அவர் 1731ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில் அஹமத் நகரை அடைந்து, அம் மாநிலத்தின் புதிய ஆளுநரான மார்வாரின் மகாராஜா அபய் சிங்குடன் (Maharaja Abbai Singh) உடன்படிக்கை செய்துகொண்டார். இதற்கிடையில் பீஷ்வாவிற்கும், ஷாகுவிடம் சேனுபதியாக இருந்த திரிம்பக் ராவ் தபாதே என்பவருக்குமிடையே பூசல் தோன்றியது. பாலாஜி ராவின் ஆற்றலிலும், அதிகாரத்திலும் பொருமையுற்று, நைஸாமுடன் இணைந்திருந்த திரிம்பக் ராவிற்கும் பீஷ்வாவிற்குமிடையேயான அப் பூசல் தீவிரமடைந்தது. போர்மூலம் தங்களது பூசலைத் தீர்த்துக்கொள்வதற்காக இருதரப்பினரும் தபோயிக்கு அருகே அமைந்த பீலாபூர் (Bhilapur) சமவெளியில் சந்தித்தனர். சேனுபதி போரில் தோற்று மடிந்தார். அவரது மரணத்தோடு பாஜி ராவிற்கு எதிராக இருந்த சக்தி வாய்ந்த எதிரிகளில் இறுதியாக இருந்தவரும் மறைந்துவிட்டதால், பாஜி ராவ் நடைமுறையில் அரசரெனத் திகழ்ந்தார். திரிம்பக் ராவின் இளைய சகோதரரான யஸ்வந்த் ராவை (Yaswanth Rao) ஷாகு சேனுபதியாக நியமித்தார். ஆயினும், தபாதே குடியினர் இழந்த பெருமையை திரும்பப் பெறமுடியவில்லை. குஜராத்தில் தபாதேக்களின் ஆதிக்கம் அழிந்தது. அது பிலாஜி கெய்க்வாரிடம் சென்றது. பிந்தியவரையும் 1738ஆம் ஆண்டில் அபய் சிங் கொன்ருர். அவருக்குப் பின் இரண்டாம் தமாஜி குஜராத்தின் ஆட்சிப் பொறுப்பை யேற்ருர்.

## 1737ஆம் ஆண்டில் டில்லியைக் கொள்ளையிடுதல் : நைஸாமின் இறுதித் தோல்வி

1737ஆம் ஆண்டில் பாஜி ராவ் முதன்முறையாக யமுனையைக் கடந்து தோவாப் பகுதியைக் கொள்ளையடித்தார். வட இந்தியாவில் தீரமிக்க படையெடுப்புத் திட்டத்தினை மேற்கொண்டார். ஆயின், மல்ஹர் ராவ் ஹோல்காரின் தலைமையில் சென்ற அவரது படைப் பகுதி ஒன்று 1737ஆம் ஆண்டு மார்ச் மாதத்தில் அவத்தின் ஆளுநரான சாதத் கானுல் (Saadat Khan) முறியடிக்கப்பெற்றது. சாதத் கான் தமது வெற்றியை மிகைப்படுத்திப் பேரரசருக்கு அறிக்கை ஒன்றை அனுப்பினுர். அதில் மராத்தியரைத் தாம் சாம்பல் ஆற்றிற்கு அப்பால் விரட்டிவிட்டதாகப் பெருமிதத்தோடு குறிப்பிட்டார். அத்தகைய அறிக்கையைப் பொய்ப்பிப்பதற்காக பாஜி ராவ் வெகு வேகமாக முன்னேறி, பத்து நாட்களில் மேற்கொள்ளக்

கூடிய பயணத்தினை இரண்டே நாட்களில் செய்து 1737ஆம் ஆண்டு மார்ச் திங்களிலேயே டில்லியை வளைத்துக்கொண்டார். அதைக் கண்டு பேரரசர் பீதியடைந்தார். ஆனால் தாம் உயிருடன் வாழ்வதை அறிவிப்பதைத் தவிர வேறு நோக்கம் தமக்கு இல்லை யென்ற செய்தியைப் பேரரசருக்கு பாலாஜி அனுப்பிவைத்தார். டில்லியி லிருந்து திரும்புகையில் முகலாயப் படையொன்றை முறியடித்து விட்டு குவாலியருக்குத் திரும்பினார். இப்போது மராத்தியருடைய தாக்குதலிலிருந்து பேரரசினைக் காக்கக்கூடிய ஒரே தலைவர் நைஸாமே என்பதைப் பேரரசர் உணர்ந்துகொண்டார். அதனால் அவர் நைசாமை டில்லிக்கு வரவழைத்தார். பேரரசரின் யோசனையை ஏற்றுக்கொண்ட நைசாம் ஜூலை மாதத்தில் டில்லியைச் சென்றடைந்தார். மராத்தியரை நர்மதைக்கு அப்பால் விரட்டு வதற்காக அவர் போர்க்களம் சென்றார். எப்போதையும் போல அவரை வரவேற்பதற்கு பாஜி ராவ் ஆயத்தமாக இருந்தார். 1737ஆம் ஆண்டில் போபாலில் நைசாமை முற்றுகையிட்டார். 1738ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 17ஆம் தேதி தரோஹா சராய் (Daroha Sarai) என்ற மதிப்பழிக்கும் உடன்படிக்கையில் நைஸாமைக் கையெழுத்திடுமாறு வற்புறுத்தினார். அதன்படி மாளவம் முழுவதையும் மராத்தியருக்கு அளித்து நர்மதைக்கும் சாம்பல் ஆற்றிற்கும் இடையிலிருந்த பகுதியில் அவர்களுடைய முழு உரிமையை நைஸாம் ஏற்றுக்கொண்டார். மேலும், அவ்வுடன்படிக்கையைப் பேரரசர் ஏற்குமாறு செய்வதாகவும் வாக்களித்தார். இங்ஙனம் வட இந்தியாவிலிருந்து மராத்தியரை விரட்டுவதற்குப் பதிலாகப் பேரரசருக்கும் தமக்கும் பேரவமானம் வந்து சேர்வதற்கு நைஸாம் காரணமானார்.

1739ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் பாரசீக மன்னரான நாதிர் ஷா வடமேற்கு இந்தியாவின்மீது படையெடுத்து வந்தார். அவர் முகம்மது ஷாவை கார்னலில் முறியடித்ததோடு டில்லியையும் சூறையாடினார். அவர் தக்காணத்தில் படையெடுத்து வந்து முன்னேறக் கூடும் என்று அஞ்சிய பாஜி ராவ், நாட்டின் பாதுகாப்பிற்காக முகலாயருடனான வேற்றுமைகளை மறந்துவிடத் தயாராக இருந்தார். ஆனால், நாதிர் ஷா டில்லியைவிட்டுச் சென்றார். அதனால் பேரரசைப் பொறுத்தவரையில் தமது கொள்கையை மாற்றிக்கொள்ளுவதற்கான வழி ஏதும் பாஜி ராவிற்கு ஏற்படவில்லை.

## 1739ஆம் ஆண்டில் பஸ்ஸீனை சிம்னாஜி (Chimnaji) கைப் பற்றுதல்

அடுத்தபடியாகக் கடலுக்கும் மேற்குமலைத் தொடருக்கும் இடையே அமைந்த வளமான குறுநிலமாகிய கொங்கணத்தின்மீது

பாஜி ராவின் கவனம் சென்றது. அப் பகுதியினை மராத்தியருடைய கட்டுப்பாட்டின்கீழ்க் கொண்டுவருவதற்கெனத் தமது தம்பியாகிய சிம்ஞஜி அப்பாவை அனுப்பிவைத்தார். அப் பகுதியில் முதன்மை நிலையை அடைவதற்கான போட்டியில் கொலாபாவைச் (Kolaba) சார்ந்த ஆங்ரேயர், ஜஞ்சிராவைச் சார்ந்த சித்திகள், கோவாவில் வாழ்ந்த போர்ச்சுகீசியர் என்ற மூன்று சக்திகளும் ஈடுபட்டிருந்தன. ஷாகுவுடன் ஒப்பந்தம் செய்துகொண்டிருந்தபோதிலும் கானேஜி ஆங்ரே பீஷ்வாவின் அதிகாரத்தை எதிர்த்து நின்றார். அதனோடு போய் வந்துகொண்டிருந்த கப்பல்களின்மீது சௌத் வரி விதித்தார். சமஅளவில் வலிமை வாய்ந்திருந்த சித்திகளும் மராத்தியரின் நிரந்தர வைரிகளாகத் திகழ்ந்தனர். பஸ்ஸீனைத் தலைநகரமாகக்கொண்டிருந்த போர்ச்சுகீசியரும் சமய, அரசியல் காரணங்களுக்காக மராத்தியரிடம் பகைமை பூண்டிருந்தனர். பஸ்ஸீனில் இருந்த போர்ச்சுகீசிய ஆளுநர் பீஷ்வாவை 'கறுப்பர்' ('Nigger') என்றழைத்து அவமானப்படுத்தினர். அதனால் கர்வம்கொண்ட அன்னியரான போர்க்சுகீசியரைத் தண்டிப்பதற்காக பாஜி ராவ் தமது சகோதரர் சிம்ஞஜி ராவை ஏவினர். சிம்ஞஜியும் 1737ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் தாணுவைக் கைப்பற்றியதோடு சால்செட்டையும் (Salsette) பிடித்து அங்கிருந்த கோட்டையை அழித்தார். ஆயினும், மழைக்காலத்திற்குப் பிறகு பஸ்ஸீனைத் தாக்குவதில் அவர் தோல்விகண்டார். அதனால் அத் தீவினை முற்றுகையிட்டு, கோட்டைச் சுவர்களின் அஸ்திவாரம் வரையிலும் சுரங்கங்களைத் தோண்டி, நகருக்கு அருகே பீரங்கிப் படையினை வகுத்து எறிபீரங்கிகளைக்கொண்டு பெருங்கற்களைக் கோட்டைக்குள் எறியுமாறு செய்தார். நீண்ட, விடாப்பிடியான போராட்டத்திற்குப் பிறகு, போர்ச்சுகீசியர் சரணடைந்தனர். அவர் போர்ச்சுகீசியப் படையினை வெளியேற அனுமதித்ததோடு அவர்கள் கோவாவிற்கும் டாமனுக்கும் பாதுகாப்புடன் செல்வதற்கும் வழிவகுத்தார். பஸ்ஸீனிலேயே தங்கிவிட்ட போர்ச்சுகீசியருக்கு முழுச் சமயச்சுதந்திரம் வழங்கினர். இங்ஙனம் சிம்ஞஜி அப்பா பெருந்தன்மையோடு நடந்துகொண்டார். ஆயின், காம்பேயிலிருந்த ஆங்கிலேயர்கள் அச்சங்கொண்டு 1739ஆம் ஆண்டில் மராத்தியருடன் சமாதானம் செய்துகொண்டனர். தக்காணத்தில் தடையற்ற வாணிபம் செய்யும் உரிமையை அவர்கள் பெற்றனர்.

## ஆங்ரேய உட்பூசல்கள்

போர்ச்சுகீசியருக்கு எதிராக இத்தகைய சிறந்த வெற்றியை சிம்ஞஜி பெற்றுவந்த அதே சமயத்தில் மராத்தியரிடம் ஆங்ரேக்கள்

கொண்டிருந்த பற்றுறுதியில் பெருத்த மாற்றம் ஏற்பட்டது. காஞேஜி ஆங்ரேயருக்குப் பிறகு செகோஜி பதவியேற்ருர். அவ் விருவருமே திறமையும் பற்றுறுதியும் மிகுந்தவர்களாய் இருந்தனர். மராத்தியக் கடற்படைக்குத் தலைமை தாங்கினர். செகோஜி இறந்த பிறகு அவரது சகோதரர்களான சாம்பாஜியும், மாஞஜியும் (Manaji) வாரிசுரிமைக்காகப் போட்டியிட்டனர். அப்போது பாஜி ராவ் கொலாபாவிற்குச் சென்ருர். இருசகோதரர்களுக்கிடையே யான உரிமைப் போட்டியை அமைதியாகத் தீர்த்துவைக்க முடியாது எனக் கண்ட அவர், ஆங்ரேய சொத்தான புலத்தீனே இரண்டாகப் பிரித்து ஸ்வர்ணதுர்கத்திலிருந்து விஜயதுர்கம் வரையில் இருந்த பெரும் பகுதியை சாம்பாஜிக்கு அளித்து சர்க்கார் எனும் பட்டத்தையும் நல்கினர். வடக்கே இருந்த மற்றப் பகுதியை மாஞஜிக்கு வழங்கினர். கொலாபாவைத் தலைநகரமாகக்கொண்ட மாஞஜிக்கு வாஸரத்-மாப் (Wazarat-Maab) எனும் விருதுப் பெயரையும் அளித்தார். ஆயின், உடன்பிறந்தாருக்கிடையே இருந்த பொருமை தொடர்ந்து வந்தது. அவர்கள் முரண்பட்டுச் சண்டை யிட்டு வந்ததன் விளைவாக ஆங்கிலேயரும் போர்ச்சுகீசியரும் சூழ் நிலையைப் பயன்படுத்தி மராத்தியக் கடற்படையின் ஆற்றலை அழிக்க முயன்றனர். இதற்கிடையில் 1742ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 22ஆம் தேதியன்று சாம்பாஜி மரணமடைந்தார். ஆயினும், ஆங்ரேய பிரச்சினையைத் தீர்க்கமுடியவில்லை.

1740ஆம் ஆண்டின் தொடக்கத்தில் நைஸாம் உல் முல்க்கின் புதல்வர் நாஸிர் ஜங்கை அவுரங்காபாத்திற்கு அருகே பாஜி ராவ் முற்றுகையிட்டார். 1740ஆம் ஆண்டு மார்ச் மாதம் எட்டாம் தேதி யன்று முங்கி-ஷியாகோன் என்னும் இடத்தில் உடன்படிக்கை யொன்றில் கையெழுத்திடுமாறு அவரை வற்புறுத்தினர். அவ் வுடன்படிக்கையின்படி ஹாண்டியா, கார்கோன் ஆகிய மாவட்டங் களை நாஷர் ஜங் மராத்தியருக்கு அளித்தார். இதுவே பாஜி ராவின் இறுதி வெற்றியாகும். அதன் பின்னர், 1740ஆம் ஆண்டு மே மாதம் எட்டாம் நாளில் நர்மதை ஆற்றங்கரையில் அமைந்த ரேவார் என்னு மிடத்தில் பாஜி ராவ் திடீரென்று மரணமடைந்தார்.

## பாஜி ராவின் குண இயல்பு

படை மாட்சியிலும், வெல் திறத்திலும் சிவாஜிக்கு அடுத்த நிலையில் இருப்பவர் பாஜி ராவே என்பது வரலாற்று அறிஞரின் ஒருமித்த கருத்து. பத்தொன்பது வயதில் பிரதம அமைச்சராகப்

பதவியேற்ற அவர், மராத்திய நாட்டினைப் பல திசைகளிலும் பெருக்கி, உள்ளும் வெளியிலும் இருந்த பகைவரையெல்லாம் ஒழித்துக்கட்டினார். அவரது அரசியல் நடவடிக்கைகள் காரணமாக டில்லிக்குப் பதிலாகப் பூனாவே அதிகார மையமாக மாறியது. தலை சிறந்த வீரராகவும், ஒப்பற்ற அரசியல் அறிஞராகவும் விளங்கிய பாஜி ராவிடம் ஆண்மை குடிகொண்டிருந்தது. அக்காலத்தில் வாழ்ந்த குதிரைப்படைத் தலைவர்களில் பாஜி ராவ் தலைசிறந்தவர். மராத்திய இனத்தவரின் மறைந்திருந்து தாக்கும் போர் முறையில் வல்லவர். அதே சமயத்தில் அவர் பெருந்தன்மைமிக்க நண்பராகவும், தூண்டும் ஆற்றல் படைத்த பேச்சாளராகவும் திகழ்ந்தார். மற்றவரிடமுள்ள தகுதியை உணர்ந்துகொள்ளும் ஆற்றலும், அவர்களை அரும்பெருஞ் செயல்கள் புரியுமாறு செய்யும் திறனும் அவரிடம் மிகுதியாக இருந்தன. அவரது குண இயல்பைத் தொகுத்துக் கூறவந்த வரலாற்று அறிஞர் சர் ரிச்சர்டு டெம்பிள் பின்வருமாறு குறிப்பிட்டார்: ‘குதிரை ஏற்றத்தில் பாஜி ராவை விஞ்சியவர் யாருமிலர். அவர் போர்க்களத்தில் முந்தியிருந்தார். கடுமையான போரில் ஆபத்துடன் விளையாட ஆர்வங்கொண்டார். அவர் களைப்பை அறியாதவர். தமது படைவீரர் அனுபவிக்கும் இன்னல்களை யெல்லாம் தாமும் தாங்குவதில் பெருமை கொண்டார். அவர்களுடைய சிறு அளவு உணவினையே அவரும் உட்கொண்டார். தேசீய காரியங்களில் வெற்றிபெறவேண்டுமென்ற வேகம் அவரைத் தூண்டியது. இந்து சமயத்திற்கு எதிராக இருந்த பழம் பகைவர்களான மூகம்மதியர்களுக்கும், அப்போதுதான் அரசியல் வானில் தோன்றிய புதிய பகைவர்களான ஐரோப்பியருக்கும் எதிராக, அச் சமயத்தின்மீது அவர் கொண்டிருந்த பற்றார்வம் மிகுந்த நம்பிக்கை அவரை ஊக்குவித்தது. அரபிக் கடலிலிருந்து வங்காள விரிகுடா வரையிலான இந்தியத் துணைக்கண்டத்தில் மராத்தியர் அச்சம் விளைவிக்கும் நிலைக்கு வந்ததை அவரால் காணமுடிந்தது. அவர் பாசறையில் வாழ்ந்திருந்த காரணத்தால் தமது வீரர்களின் மத்தியில் கூடாரத்திலேயே உயிர் நீத்தார். இன்று வரையிலும் மராத்தியர் அவரைப் போர் புரியும் பீஷ்வா என்றும், ‘இந்து ஆற்றலின் அவதாரம்’ என்றும் எண்ணிவருகின்றனர். நாற்பது வயதை எட்டுவதற்குச் சில மாதங்கள் இருந்தபோதே அவர் இவ்வுலக வாழ்வை நீத்தார்.

## மஸ்தானியின் கதை

மஸ்தானி (Mastani) என்னும் பெயருடைய முஸ்லீம் நாட்டிய நங்கையிடம் பாஜி ராவ் கொண்டிருந்த காதலால் அவரது இல்லற

வாழ்க்கையின் இன்பம் கெட்டது. அநேகமாக சத்ரசால் பந்தேலாவே மஸ்தானியை அவருக்கு அறிமுகப்படுத்தியிருக்கவேண்டும். அக்காலத்தில் இந்தியாவிலேயே பேரழகி என மஸ்தானி புகழ் பெற்றிருந்தார். இந்துவிற்கும் முகமதிய மாதிற்கும் மகளாகப் பிறந்தவர் மஸ்தானி என்று கூறப்படுகின்றது. அவர் பலவகைப் பண்புகளில் சிறந்து விளங்கினார். பாஜி ராவ் தம்மிடம் அடிமையாகும் அளவிற்கு அவரது மனத்தைக் கொள்ளைகொண்டிருந்தார். சிறந்த பாடகியாக இருந்த அவர், சொந்த மனைவியைப்போல முழு ஈடுபாட்டுடன் பாஜி ராவின் நலனைக் கவனித்துக்கொண்டார். குதிரையேற்றத்தில் நன்கு பயிற்சி பெற்றிருந்த அவர் பீஷ்வாவைப் போலவே கடு முயற்சியையும் களைப்பையும் தாங்கும் சக்தி பெற்றிருந்தார்.

பாஜி ராவின் மூத்த புதல்வரான பிற்கால பாலாஜி பாஜி ராவிற்கு 1730ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 21ஆம் தேதி நடைபெற்ற திருமணத்திற்கான மராத்திய ஏடுகளில் மஸ்தானியின் பெயர்தான் முதலில் இடம்பெற்றது பூனாவிலிருந்த சனிவார் அரண்மனையின் ஒரு பகுதியில் அவர் வாழ்ந்திருந்தார். அதனால், அவர் பெயரையே அவ் வரண்மனை தாங்கி நின்றது. ரகுநாத ராவின் புனித நூல் சடங்கின்போதும், சதாசிவ ராவின் திருமணத்தின்போதும் பாஜி ராவின் அரண்மனையிலிருந்து மஸ்தானியை அகற்றினாலொழிய அவற்றில் தாங்கள் கலந்துகொள்ள முடியாதென பிராமண குருமார் அறிவித்தனர். ஒரு முறை படையெடுத்துச் சென்ற பாஜி ராவ் பூனாவில் இல்லாத சமயத்தில் பாலாஜி ராவும், சிம்னாஜி அப்பாவும் மஸ்தானியைக் காவலில் வைத்தனர். மதுவையும் மாமிசத்தையும் பாஜி ராவ் விரும்பி உண்டதற்கு மஸ்தானியின் உறவுதான் காரணம் எனக் கருதப்பெற்றது. பாஜி ராவின் முறையற்ற வாழ்க்கையை எவரும் குறைகூறாது இருப்பதற்காக மஸ்தானியைக் கொல்ல பீஷ்வாவின் குடும்பத்தினர் யோசனை கூறியிருக்க வேண்டும். தமது காதலியைச் சிறையில் அடைத்த செய்தியைக் கேள்வியுற்ற பாஜி ராவ் முற்றிலும் வலுவிழந்தவரானார். ஆயினும், தம் மனத்திற்கினியாளை, வன்முறையால் மீட்பதற்கு பூனா செல்வது செயல் நயமுடையதல்ல வென்று பொதுமக்களின் கருத்திற்கு அஞ்சிய பாஜி ராவ் எண்ணினார். அந்த வேதனையில் அவர் திடீரென மரணமடைந்தார். அத் துயரச் செய்தியைக் கேள்வியுற்றதும் பூனா அரண்மனையிலேயே மஸ்தானியும் உயிர் நீத்தார். அவரது முடிவிற்குக் காரணம் தற்கொலையா அல்லது மன அதிர்ச்சியா என்று கண்டறிந்து கூறுவது கடினம்.

## பாலாஜி பாஜி ராவ், 1740-1761: 1741-ல் பீஷ்வா மாளவத்தின் ஆளுநராதல்

மறைந்த பாஜி ராவின் மூத்த புதல்வரான நானுசாகிப் என வழங்கப்பெற்ற பாலாஜியை, 1740ஆம் ஆண்டு ஜூலை மாதம் நான்காம் தேதியன்று பீஷ்வாவாக ஷாகு நியமித்தார். அப்போது புதிய பீஷ்வாவின் வயது பதினெட்டு ஆண்டுகளும் ஆறு மாதங் களுமே. நன்கறிந்த நிதியக முதல்வரான பாபுஜி நாயக் ஜோஷி (Babuji Nayak :Joshi) என்பாரும் பீஷ்வா பதவிக்குப் போட்டி யிட்டார். ஆயினும், ஷாகு அவரது வேண்டுகோளைச் சிறிதும் பொருட்படுத்தாது, தயக்கம் ஏதுமின்றி பாலாஜிக்கே அப் பதவியை அளித்தார். தமது தந்தையின் மேற்பார்வையில் போர்க் கலையிலும், வெல்திறத்திலும் பாலாஜி நல்ல பயிற்சி பெற்றிருந்தார். ஆயினும், அவர்தம் தந்தையாரிடமிருந்த ஆர்வ எழுச்சியும், படைத்துறை சார்ந்த மேதைத் தன்மையும் பாலாஜியிடம் இல்லை. ஆயின், அவர் இனிய பண்பும், இணக்குவிக்கும் தன்மையும் மிகுந்தவர். அவர் பதவியை ஏற்ற உடனே, தமது தந்தையாருக்கு அளிப்பதாக நைஸாம் உல் முல்க் வாக்குறுதி செய்த மாளவத்தினை முறையாகப் பெறுவதற்காக வட இந்தியாவின்மீது படையெடுத்துச் செல்லத் திட்டமிட்டார். சிறிய தந்தையாகிய சிம்னுஜி உடன்வர, அவர் மாளவத்திற்குப் புறப்பட்டுச் சென்றார். ஆனால், நோய் காரண மாக இடையிலேயே சிம்னுஜி திரும்பவேண்டியதாயிற்று. அப்படித் திரும்பிய சிம்னுஜி, 1740ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 27ஆம் தேதி பூனுவில் இறந்தார். பாஜி ராவின் எல்லையற்ற அறிவாற்றலினல் மறைக்கப்பெற்றபோதிலும் பெரு வீரராகவும், புகழ்வாய்ந்த ஆட்சி யாளராகவும் சிம்னுஜி விளங்கினுர். அவர் சொந்த முறையிலான பேரரசைக் கொண்டவரல்லர். தமது தமையனுருக்குப் பற்றுறுதி யுடன் சேவை செய்து, தமது வெற்றிகளினல் வந்த பெருமையையும் முதல்வருக்கே அளித்தார், அவரது புதல்வரும் பவே சாகிப் எனப் பொதுமக்களால் போற்றப்பெற்றவருமான சதாசிவ ராவ் என்பாரே பிற்காலத்தில் பெரும் பெயருடன் வாழ்ந்து அவல முடிவெய்தியவர். தமது சிறிய தந்தையின் மறைவிற்காகத் துக்கம் அனுசரித்த பிறகு, பாலாஜி பயணத்தைத் தொடர்ந்தார். தோல்பூரை அடைந்து அங்கே 1741ஆம் ஆண்டு மே மாதக் கடைசி வாரத்தில் ஜெய்ப்பூரின் ஜெய்சிங்குடன் மாநாடு ஒன்றை நடத்தினுர். அதன் விளைவாக ஏற்பட்ட ஒப்பந்தத்தின்படி (1) பீஷ்வாவும் ஜெய்சிங்கும் ஒருவருக் கொருவர் உதவி செய்துகொள்வதோடு, நெருங்கிய நண்பர்களாகச் செயலாற்றவேண்டும். (2) பேரரசரிடம் மராத்தியர் பற்றுறுதி கொள்ளவேண்டும். (3) ஆறு மாத காலத்திற்குள் மாளவத்தின் ஆளுநர் பதவி பீஷ்வாவிற்குக் கிடைக்கவேண்டும். இத்தகைய

வெல்திற வெற்றிபெற்ற பின்னர், பாலாஜி ஜூலை மாதம் 17ஆம் தேதி பூனா திரும்பினார். அப்போது பட்டத்து இளவரசரான அஹ்மதை மாளவத்தின் சுபேதாராகவும், பீஷ்வா பாலாஜி ராவை அவரது துணைவராகவும் நியமிப்பதற்கான 'அரச ஆணை' பிறப்பிக்குமாறு (ஜூலை மாதம் 14ஆம் தேதி) பேரரசரை ஜெய்சிங் அறிவுறுத்தி இணங்க வைத்தார். இங்ஙனம் பாலாஜி ராவ் பெயரளவிலும், நடைமுறையிலும் மாளவத்தின் தலைவரானார். 1738ஆம் ஆண்டு நவம்பர் மாத முதலே தங்கள் வசம் இருந்த மாளவத்தை. 1741ஆம் ஆண்டு ஜூலை மாதம் 14ஆம் தேதியன்று மராத்தியர் முறையாகப் பெற்றனர். இங்ஙனம் மராத்தியர் பெற்ற வெற்றியை முறைமை உடையதாகச் செய்தனர். மாளவத்தைக் கொடையாக வழங்குதற்கான பத்திரத்தின்படி (1) பேரரசின் வேறெந்தப் பகுதியிலும் மராத்தியர் தலையிடுதல் கூடாது; (2) பேரரச சேவைக்கென 500 மராத்தியக் குதிரை வீரர்களை பீஷ்வா டில்லியில் நிறுத்திவைக்க வேண்டும்; (3) அவசியம் நேர்ந்த காலத்தில் மேலும் 4,000 மராத்தியப் படைவீரர்களைப் பேரரசின் செலவிலேயே அவருக்கு உதவிசெய்வதற்கென அனுப்பவேண்டும்; (4) 1741ஆம் ஆண்டிற்கு முன் தனிப்பட்டவர்களுக்கும் சமயநிலையங்களுக்கும் பேரரசர் வழங்கிய மாளவத்தில் இருந்த ஜாகீர்களை பீஷ்வா மதித்து நடக்க வேண்டும்; மேலும், அவர் குடியானவர்களின் மீதான வரிகளை உயர்த்தக் கூடாது.

## கர்நாடகத்தை வெல்லுதல், 1740-41

பாஜி ராவ் இறக்கும்போது பேராரின் ரகுஜி பான்ஸ்லே கர்நாடகப் படையெடுப்பில் ஈடுபட்டிருந்தார். தஞ்சாவூரை ஆண்ட ராஜா பிரதாப் சிங்கின் அழைப்பின் பேரிலேயே அப் படையெடுப்பு நடைபெற்றது. கர்நாடகத்தின் நவாபான தோஸ்த் அலி, புகழ்பெற்ற சிவாஜியின் ஒன்றுவிட்ட சகோதரரான வெங்கோஜியின் வழித்தோன்றலாகிய பிரதாப்சிங்கின் சுதந்திரத்தைப் பறிக்க முனைந்தபோது பிந்தியவர் பீஷ்வாவின் உதவியை நாடினார். படையெடுத்துச் சென்ற ரகுஜி பான்ஸ்லே. தோஸ்த் அலியை முறியடித்துக் கொன்றார். அவருடைய புதல்வரான சஃப்தார் அலியுடன் சமாதானம் செய்துகொண்டார். திருச்சியில் இருந்த தோஸ்த் அலியின் மருமகரான சந்தா சாகிப்பை 1741ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் முற்றுகையிட்டார். அவரைக் கைது செய்து சதாராவிற்கு அனுப்பினார். திருச்சிராப்பள்ளியை முரார் ராவ் கோர்படேயின் (Murar Rao Ghorpade) பொறுப்பில் ஒப்படைத்தார். அதன் பிறகு சந்தாசாகிப்புடன் நட்புக்கொண்டிருந்த பிரஞ்சுக்

காரரின் கோட்டையாகத் திகழ்ந்த பாண்டிச்சேரியை முற்றுகை யிட ரகுஜி விரும்பினுர். ஆயினும், அவர் அத்தகைய முயற்சியைக் கைவிட்டு பூனுவிற்குத் திரும்பவேண்டியதாயிற்று.

## ரகுஜி பான்ஸ்லே ஒரிஸ்ஸாவைக் கைப்பற்றுதல், 1751

ரகுஜி பான்ஸ்லேயிடமிருந்து தமக்கு எதிர்ப்புத் தோன்றக் கூடாதென்பதற்காக, நடைமுறையில் அலிவர்திகானின் பொறுப் பில் உரிமையோடு விளங்கிய வங்காளம், பீகார், ஒரிஸ்ஸா ஆகிய பகுதிகளில், அவர் தலையிடுவதை பீஷ்வா தாராளமாக அனுமதித் தார். அந்த மூன்று மாநிலங்களிலும் 'சௌத்' வரி கொள்வதற் கெனத் தமது நிதியமைச்சர் பாஸ்கர் பந்தின் (Bhaskar Pant) தலைமையில் வலிமை வாய்ந்த படை யொன்றை ரகுஜி பான்ஸ்லே அனுப்பி வைத்தார். ஆயின், அலிவர்தி கான், பாஸ்கர் பந்தை விருந்துக்கழைத்து, அவரையும், அவரது முக்கிய அதிகாரிகளையும் சூழ்ச்சியாகக் கொன்றுர். எவ்வாருயினும் அத்தகைய நம்பிக்கைத் துரோகத்திற்கு அவர் பெரும் விலை கொடுக்கவேண்டிவந்தது. அவரது பகுதியின்மீது படையெடுத்து வந்த ரகுஜி பல இடங்களை அழித்தார். ஒரிஸ்ஸாவையும், பீகார், வங்காளம் ஆகிய பகுதி களுக்கு சௌத் வரியாக ஆண்டுதோறும் பன்னிரண்டு இலட்ச ரூபாய்களையும் அலிவர்திகானிடமிருந்து வற்புறுத்திப் பெற்றுர் (1751). ஒரிஸ்ஸாவில் தங்காது பொதுநிர்வாக அமைப்பு எதையும் மராத்தியர் அமைக்கவில்லை. மாருக, அப் பகுதியை உள்நாட்டுத் தலைவர்களின் பொறுப்பிலேயே விட்டுவைத்தனர். வங்காளத்திலும் பீகாரிலும் வாழ்ந்த மக்கள் ரகுஜியின் குதிரை வீரர்களைக் கண்டு நடுக்க முறலாயினர்.

## ஜெய்ப்பூரில் மராத்தியர் தலையீடு; மராத்தியருக்கும் இராஜ புத்திரர்களுக்குமிடையே பூசல் தோன்றுதல்

ஜெய்ப்பூரில் புதிய தலைநகரை நிர்மாணித்தவர் எனவும், இலக் கியங்களை ஆதரித்தவர் என்றும் பெயர்பெற்ற ஆம்பரைச் சார்ந்த சவாய் ஜெய்சிங், 1743ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் மூன்றும் தேதி தமது ஐம்பத்தைந்தாவது வயதில் இவ்வுலக வாழ்வை நீத்தார். உதயபுரி ராணிக்குப் பிறந்த அவரது மூத்த மகன் ஈஸ்வரி சிங்கிற்கும், இளைய மகன் மாதவசிங்கிற்குமிடையே அரசுரிமைப் போட்டி ஏற்பட்டது. ஆயின், உதயபுரியின் தலைவரான மகாராணு ஜெகத்சிங், மாதவராவை ஆதரித்ததால் ஏழாண்டுகள் நீடித்த உள்

நாட்டுப்போர் எழுந்தது. ஜெய்ப்பூரின்மீது படைபெடுத்துச் சென்ற மகாராணு, மாதவராவிற்குப் பாதி நாட்டைத் தந்துவிடுமாறு கோரினுர். ரனேஜி சிந்தியா, மல்ஹர் ராவ் ஹோல்கார் ஆகியோருடைய ஆதரவைப் பெற்ற ஈஸ்வரி ராவ் 1745ஆம் ஆண்டில் மாதவசிங்கை முறியடித்தார். ஆயினும், ரனேஜி இறந்ததால் அவரது மகனுன ஜெயப்பாவிற்கும் மல்ஹர்ராவிற்குமிடையே தீவிரமான கருத்து வேறுபாடுகள் தோன்றின. அதனுல் ஈஸ்வரி சிங்கை சிந்தியா தொடர்ந்து ஆதரித்துவந்த அதே சமயத்தில், மல்ஹர்ராவ் மாதவசிங்கின் பக்கம் சேர்ந்துகொண்டார். தியோலிக்கு (Deoli) அருகிலுள்ள ராஜ்மஹால் என்னுமிடத்தில் 1747ஆம் ஆண்டு மார்ச் மாதம் 12ஆம் தேதி நடைபெற்ற கடுமையான போரில் மாதவசிங் தோற்ருர். அப்போது பீஷ்வாவின் ஆதரவைப் பெறுவதற்காகப் பேராள் ஒருவரை மகாராணு பூனுவிற்கு அனுப்பினுர். சிந்தியாவிற்கும் ஹோல்காருக்குமிடையே இருந்த பூசலின் விளைவாக மிகவும் குழப்பமான நிலை தோன்றியதால், தகராறைத் தீர்த்து வைப்பதற்காகப் பீஷ்வாவே வடநாட்டிற்குச் சென்ருர். காபூலிலிருந்து வந்த அப்தாலி படையெடுப்பாளருக் கெதிராகப் படைகொண்டு சென்றிருந்த ஈஸ்வரிசிங் அப்போதுதான் திரும்பிவந்தார். மாதவராவுடனுன தமது போராட்டத்தில் மராத்தியர் சுயநலத்தோடு நடந்துகொண்டனர் என்ற காரணத்தால், அவர்களிடம் வெறுப்புக்கொண்டிருந்தார். அதனுல் அவர் பீஷ்வாவைச் சென்று காணுமல் பிணக்குடன் ஒதுங்கி நின்ருர்.: ஆனுல், ஜெய்ப்பூருக்கு நாற்பது மைல் தொலைவிலிருந்த நெவாய் (Newai) என்னுமிடத்தில் தங்கியிருந்த பீஷ்வாவை, மாதவராவ் சந்திந்தார். அதன் பிறகு நடைபெற்ற மாநாட்டின் விளைவாக நான்கு மாவட்டங்களை ஈஸ்வரிசிங் மாதவராவிடம் ஒப்படைக்கவேண்டுமென்று முடிவாகியது. 1748ஆம் ஆண்டு ஜூன் மாதம் பீஷ்வா பூனுவிற்குத் திரும்பியதும் வாக்களித்தபடி மாவட்டங்களைத் தர ஈஸ்வரிசிங் மறுத்தார். அதனுல் மல்ஹர்ராவ் ஹோல்கார் படை பலத்தைப் பயன்படுத்தி ஒப்பந்தப்படி நடக்குமாறு ஈஸ்வரி சிங்கை வற்புறுத்த வேண்டியதாயிற்று.

ஈஸ்வரி சிங்கிடமிருந்து 'சௌத்' வரி கோருவதற்காக சிந்தியாவையும் ஹோல்காரையும் 1750ஆம் ஆண்டு மழைக்காலத்தின்போது பீஷ்வா அனுப்பி வைத்தார். கச்வஹாத் தலைவரான ஈஸ்வரி சிங்கின் கருவூலத்தில் போதிய பணம் இல்லை. அதனுல், மல்ஹர்ராவ் ஹோல்கார் ஜெய்ப்பூரின்மீது படையெடுத்துச் சென்ருர். ஈஸ்வரி சிங்கும் ஓரிரு இலட்ச ரூபாய்கள் தருவதாக வாக்களித்தார். ஆயினும், மராத்தியருடைய கோரிக்கையால் மிகுந்த எரிச்சலடைந்த ஈஸ்வரி சிங் நஞ்சு அருந்தியதோடு, நாகப்பாம்பைக்கொண்டு

கடிக்குமாறு செய்து உயிர்நீத்தார். அவரது மனைவியருள் மூவர் நஞ்சுண்டு இறந்தனர். மற்றும் இருபது பேர் அவரது சுடலைத் தீயில் மூழ்கி மடிந்தனர். மராத்தியருடைய நடத்தை கண்டு ஜெய்ப்பூர் நகரமே துன்பத்தில் ஆழ்ந்தது. மக்கள் செய்வதறியாது திகைத்தனர். மாதவராவ்கூடக் கொதித்தெழுந்தார். ஈஸ்வர சிங்கின் மரணத்திற்குப் பழிக்குப்பழி வாங்கவேண்டுமென்று துடித்தார். ஜெயப்பாவையும், மல்ஹர்ராவையும் விருந்திற்கழைத்து நஞ்சு கலந்த உணவைப் பரிமாறினர். ஆனால், அவர்கள் அதனை உண்பதற்கு முன்னர் நஞ்சு கலந்தது கண்டுபிடிக்கப்பட்டதால் சிந்தியாவும் ஹோல்காரும் உயிர் பிழைத்தனர். அடுத்த நாளன்று அழைப்பிற்கிணங்க நகரத்தைப் பார்ப்பதற்காகச் சென்ற ஜெயப்பாவும் அவரது ஆட்களும் நகருக்குள் நுழைந்ததும் வாயில்கள் அடைக்கப்பட்டன. மராத்தியர் படுகொலை செய்யப்பட்டனர். அக் கொடூர நிகழ்ச்சி 1751ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 20ஆம் தேதி நண்பகலிலிருந்து நள்ளிரவுவரை நடைபெற்றது. ஏறக் குறைய மூவாயிரம் மராத்தியர் உயிரிழந்தனர். மேலும், ஓராயிரமவர் புண்பட்டனர். அவர்களுடைய உடைமைகளை ராஜபுத்திரர் கொள்ளையிட்டனர். மீதமிருந்த மராத்தியர் நகருக்குச் சில மைல் களுக்கப்பால் தங்களது பாசறையை அமைத்துக் கொண்டனர். நல்ல வேளையாக ரோஹில்கண்டிலும், பருக்காபாத்திலும் வாழ்ந்த பட்டாணியருக் கெதிராகப் போரிடுவதற்கு என வஸீரான சஃப்தார் ஜங்கிடமிருந்து சிந்தியாவிற்கும் ஹோல்காருக்கும் அவசர வேண்டுகோள் வந்தது. அதனால் அவர்கள் ஜெய்ப்பூரை விட்டு தோவாப் பகுதிக்குப் பயணமாயினர். ஆயினும், ஜெய்ப் பூரில் நடந்த படுகொலையினால் மராத்தியருக்கும் ராஜபுத்திரர் களுக்குமிடையே பிளவு ஏற்பட்டது.

## ஷாகுவின் இறுதிக் காலம்: அவர்தம் குண இயல்புகள்

ஷாகுவின் இறுதிக் காலம் துன்பம் மிகுந்ததாக இருந்தது. அவரது மனைவியர் ஒருவருக்கொருவர் எதிரான சூழ்ச்சி செய்தனர். அவரது உடல் நலம் குன்றத் தொடங்கியது. அதிகாரத்தைக் கைப்பற்றுவதற்காகத் தாராபாய் மேற்கொண்ட செயல் திட்டத் தினாலும், ரகுஜி பான்ஸ்லே, முரார்ராவ் கோர்படே, ஆங்ரியா சகோதரர்கள் போன்ற முக்கிய மராத்தியத் தலைவர்களிடையே இருந்த தந்நலப் போட்டியினாலும் அவர் மிகுந்த கவலைக் குள்ளானார். பீஷ்வாவான பாலாஜி ராவிற்கு எதிரான கும்பல் ஒன்று அரசவையில் இருந்தது. அது அவரது செயல்முறைகளைப் பயனற்றுப் போகுமாறு செய்ததோடு, அவருக்கு எதிராகப் பல

குற்றச்சாட்டுகளை அரசரிடம் கொண்டு சென்றது. 1747ஆம் ஆண்டில் அவர் பீஷ்வா பதவியிலிருந்து நீங்குமளவிற்கு நிலைமை மோசமாகியது. ஆனால், அவர் இன்றியமையாதவர் என்பது வெளிப்படவே, மீண்டும் அப்பதவியில் நியமிக்கப்பெற்றார். இத்தகைய இடர்கள் போதாவென்று ஷாகுவிற்கு வாரிசாகப் பிள்ளை இல்லை. கோலாப்பூரில் வாழ்ந்த சாம்பாஜியைத் தத்து எடுத்துக் கொள்ளவும் அவர் விரும்பவில்லை. சதாரா சிறையில் அடைபட்டுக் கிடந்த தாராபாய், அவரது மகன் சிவாஜிக்குப் பிறந்ததாகக் கொள்ளப்பெற்ற குழந்தை ஒன்றைக் கொண்டுவந்து' அதனை வளர்ப்பு மகனாக ஏற்றுக்கொள்ளுமாறு ஷாகுவை வேண்டினார். அக் குழந்தை ராம் ராஜா எனப் பெயர் பெற்றது. எவ்வாறெனினும், ராம்ராஜாவை வாரிசாக ஏற்றுக்கொள்வதை ஷாகுவின் அரசியான சக்வாரிபாய் வெளிப்படையாகவே எதிர்த்தார். கோலாப்பூரிலிருந்த சாம்பாஜியும் ஆட்சியைக் கைப்பற்ற முயன்று தோல்வி கண்டார். இத்தகைய சூழ்நிலையில் மோசமான உடல்நிலை கொண்டிருந்த ஷாகு, 1749ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 25ஆம் தேதி தமது அரண்மனையில் உயிர்துறந்தார். அவர் இறக்கும்போது அவரது வயது 67 ஆண்டுகளும் 7 மாதங்களுமாகும். அவர் இறக்கும் போது விருப்ப ஆவணம் ஒன்றை விட்டுச்சென்றார். அதன்படி கோலாப்பூரில் வாழ்ந்த சாம்பாஜி வாரிசாக வரக்கூடாது என்றும் ராம் ராஜாவை வாரிசாக நியமிக்கலாம் என்றும் குறித்திருந்தார்.

மராத்திய சத்ரபதிகளில் (Chatrapati) உண்மையான அதிகாரங் கொண்டிருந்த கடைசி அரசர் ஷாகுவே. அவருக்குப் பிறகு வந்தவர்கள் வெறும் பொம்மை அரசர்களாகவிருந்தனர். பெருமளவில் சதாராவில் சிறைப்பட்டவர்களாக வாழ்ந்தனர். அதிகாரங்கள் அனைத்தும் பீஸ்வாவிடம் சென்றன. 'தனிப்பட்ட முறையில் திறமையான அரசியல்வாதியாகவோ அல்லது தகுதி வாய்ந்த படைத்தலைவராகவோ ஷாகு விளங்கவில்லை யென்றாலும், தமது உள்ளார்ந்த பொதுஅறிவினாலும், பரிவுமிக்க உள்ளத்தினாலும் அத்தகைய சிறப்பியல்புகளைக் கொண்டோரைக் கண்டெடுத்து, அவர்களுடைய சேவையைப் பயன்படுத்திக் கொண்டார்' என்று வரலாற்று அறிஞரான சர் தேசாய் எழுதுகின்றார். மேலும், அவர் குறிப்பிடுகையில் 'மனிதர்களுடைய தகுதிகளைச் சரியாக எடைபோட்டு அவர்களைத் தேர்ந்தெடுத்த பின்னர், அவர்களுக்கு முழு உரிமையை ஷாகு அளித்தார். காழ்ப்பு அல்லது தடை ஏதும் இல்லா அவ்வாறு செய்தார். குடியானவர்களின் நலனைப் பேணுவதில் குறிப்பாக அக்கறை காட்டினார். தரிசு நிலங்களைப் பயிரிடச் செய்தார். மரங்கள் நடுவதை ஊக்குவித்தார். ஏழை எளியவரின் துயர் துடைத்தார். இடர் தரும் வரிகளை நீக்கினார்' என்றும்

எழுதினர். (A New History of the Marathas, Vol. II, p. 277) ஒருமுறை அமைச்சர்களை நியமித்த பின்னர் அவர்களிடம் முழு நம்பிக்கை வைத்து ஆதரவளித்தார். அவர்களது வேலைகளில் அவர் தலையிடுவது இல்லை. அவர் அரசராக வெற்றியடைந்ததற்கு இதுவே காரணமாகும்.

முகலாயப் பேரரசின் உண்மையான குடியாள் தாமென ஷாகு கருதினர். டில்லிக்கும் சதாராவுக்குமிடையே சண்டை மூளுவதை அவர் விரும்பவில்லை. அவர் மக்களுடன் தாராளமாகப் பழகி அவர் களுடைய சமுதாய விழாக்களில் கலந்துகொண்டார். முஸ்லீம் வாழ்க்கை முறையைப் பெரிதும் விரும்பினர். அவுரங்கசீப்பின் பாசறையில் வளர்ந்த அவர் அவ்வாறு விரும்பியது இயற்கையே. வேட்டையாடுவதிலும் 'ஹூக்கா' குடிப்பதிலும் பற்றுர்வம் கொண் டிருந்தார். உவளகம் ஒன்றையும் வைத்திருந்தார். இந்துக் களுக்கும் முஸல்மான்களுக்குமிடையே அவர் எவ்வித வேற்றுமையும் பாராட்டவில்லை. எல்லாச் சமயங்களையும் பொறுத்துக்கொண்டார். பெருந்தன்மை காரணமாக இன்றுவரையில் மக்கள் மனத்தில் அவர் இடம்பெற்றுள்ளார்.

ஷாகுவின் மரணத்திற்குப் பின், 1750ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 14ஆம் தேதி ராம் ராஜா சத்ரபதியாக முடிசூடிக்கொண்டார். அவரைத் தமது முழுக்கட்டுப்பாட்டில் வைத்திருந்த தாராபாய் அவர் பீஷ்வாவுடன் சேருவதைத் தடைசெய்தார். தாராபாயின் பாதுகாப்பை எதிர்த்து ராம் ராஜா புரட்சி செய்தபோது அவரை மோசக்காரர் எனத் தாராபாய் தூற்றினர். அதனுல், அவர்களிரு வருக்குமிடையே சண்டை மூண்டது. இதற்கிடையில் தாராபாயை யும் அவரது முக்கிய ஆதரவாளரான பந்த் சச்சீவையும் (Pant Sachin) பீஷ்வா பூனுவிற்கு அழைத்தார். தாராபாயை அவர் மரியாதையுடன் நடத்தியபோதிலும் பந்த் சச்சீவைச் சிறையி லிட்டார். பூனுவில் நடைபெற இருந்த மாநாட்டில் கலந்துகொள் வதற்காக சத்ரபதி ராம் ராஜாவிற்கும் அழைப்புச் சென்றது. அதற் கிணங்கி பூனுவிற்கு வந்த ராம் ராஜா 'சங்கோலா' ஒப்பந்தத்தில் கையெழுத்திடவேண்டியதாயிற்று. அதன்படி முக்கிய அரசாங்கப் பதவிகளை எல்லாம் பீஷ்வாவின் ஆதரவாளர்களுக்கு அளித்தார். அப்போதிருந்து மராத்திய அரசியலில் பீஷ்வாவே உண்மையான ஆட்சியாளராகத் திகழ்ந்தார்.

## மகாராஷ்டிரத்தில் உள்நாட்டுப் போர் ; பீஷ்வா தமது பகைவர்மீது வெற்றி கொள்ளல்

'சங்கோலா ஒப்பந்தத்திற்குப் பிறகு ஐதராபாத்தின் நைஸா முடனுன மராத்தியரின் பூசலை முடிவிற்குக் கொண்டுவரவேண்டு

மென்று தீர்மானித்த பீஷ்வா, நைஸாமின் தலைநகரத்தை நோக்கிப் படையோடு முன்னேறினர். ஆனல், அவர் சென்றவுடன் அவரது ஆதிக்கத்தை அழிப்பதற்காக தாராபாய் சூழ்ச்சி செய்தார். சத்ரபதியின் அதிகாரங்கள் அனைத்தும் அவரது முதலமைச்சரான பிராமணரிடம் வெகுவிரைவாகச் சென்று அடைந்த காரணத்தால், மராத்தியத் தலைவர்கள் பீஷ்வாவிடம் பொருமையும் பகைமையும் கொண்டிருந்தனர். பீஷ்வா தமது ஆதரவாளர்களுக்கு முக்கிய அரசாங்கப் பதவிகளைப் பெறுவதற்கு உதவியாக இருந்த சங்கோலா ஒப்பந்தத்தை அவர்கள் வெறுத்தனர். இங்ஙனம் சதாரா கோட்டையைக் கைப்பற்றியதோடு, ராம் ராஜாவை விருந்திற்கழைத்து அவரைச் சிறையிலிட்ட தாராபாயுடன் சேருகின்ற மனநிலையில் மராத்தியத் தலைவர்கள் இருந்தனர். காண்டே ராவ் தபாடேயின் விதவையான உமாபாயைத் தாராபாய் தம் வசப்படுத்திக் கொண்டார். உமாபாயும் தமது கணவரின் பழைய துணைவரான கெய்க்வாரின் தமாஜியை வயோதிக ராணிக்கு உதவிசெய்வதற்காக குஜராத்திலிருந்து வரவழைத்தார். 15,000 படைவீரருடன் சதாராவைத் தாக்கவந்த தமாஜியை நானு புரந்தரேயும் (Nana Purandhare), பீஷ்வாவின் வேறு சில ஆதரவாளர்களும் எதிர்த்து நின்றனர். இதற்கிடையில், தமாஜி கெய்க்வார் சதாராவின்மீது படையெடுத்து வந்துள்ளார் என்ற செய்தியை அறிந்த பீஷ்வா, அருகிலிருந்த ரெய்ச்சூரிலிருந்து வேகமாகத் திரும்பிவந்து தமாஜியைத் தோற்கடித்தார். குஜராத்தின் பாதிப் பகுதியையும், இழப்பீடாக இருபத்தைந்து இலட்ச ரூபாய்களையும் தமாஜியிடமிருந்து வற்புறுத்திப் பெற்ருர். பீஷ்வா அதனேடு அமையவில்லை. கொடுத்த வாக்கையும் மீறி மீண்டும் தமாஜியைத் தாக்கி அவரையும் அவரது மகனையும் சிறைப்பிடித்தார். அவர்களோடு உமாபாய் தபாடேயையும் சிறையிலிட்டார். பீஷ்வாவிற்கும் கெய்க்வாருக்கும் இடையே ஏற்பட்ட முறிவு முழுமை அடைந்தது. அதன் பிறகு, தமாஜி பீஷ்வாவிற்கு இடக்கை கொண்டுதான் வணக்கம் தெரிவிக்கலானர். தம்மாலியன்றவரை பீஷ்வாவின் கோரிக்கையை மறுத்துவந்தார். ஆனல், தப்பிக்க வழியேதுமில்லாததைக் கண்டு பீஷ்வாவிடம் பணிந்தார். அதன்மேல் அவர் குஜராத்திற்குத் திரும்ப அனுமதி கிடைத்தது. அங்கே அவர் அகமதாபாத்தில் தங்கியிருந்த முகலாய ஆளுநரை விரட்டிவிட்டு அந்த மாநிலத்தின் உண்மைத் தலைவரானர்.

தமாஜி கெய்க்வாரின் தோல்வியும் பணிவும் தாராபாயை அச்சுறுத்தவில்லை, சதாரா கோட்டையை அவர் விடாப்பிடியாகக் காத்து நின்ருர். புனிதப் பிரமாணத்தின்மூலம் அவருக்குச் சுதந்தரம் வழங்குவதாக பீஷ்வா வாக்குறுதி அளித்த பின்னரே அவருடன்

சமாதானம் செய்துகொண்டார். ராம் ராஜா ஒரு மோசக்காரர் என தாராபாய் அறிவித்ததால், முந்தியவர் சிறையிலேயே வதிந்து 1777ஆம் ஆண்டில் அனுதைபோல மடிந்தார். அவர் இறப்பதற்கு முன் இளைய ஷாகு எனப் பெயர்கொண்ட ஒருவரைத் தமது பிள்ளையாக ஏற்றுக்கொண்டார். 1810ஆம் ஆண்டில் இறக்கும் வரையிலும் ஷாகு சத்ரபதியாகத் திகழ்ந்தார். இங்ஙனம் 1749ஆம் ஆண்டில் முதலாம் ஷாகு இறந்த பிறகு மராத்திய மன்னர்கள் பொம்மை அரசர்களாக வாழ்ந்தனர். பீஷ்வாக்களே நடைமுறையில் உண்மையான அதிகாரம்கொண்ட ஆட்சியாளராகத் திகழ்ந்தனர். இத்தகைய நிலை ஏற்பட்டதற்கு சத்ரபதி, பீஷ்வா ஆகிய இருவருமே பொறுப்பாளிகளாவர். அரசருடைய நலத்தையும் நாட்டின் நலத்தையும் பேணிய பீஷ்வாக்களிடம் அதிகாரத்தை முதலாம் ஷாகு ஒப்படைத்தார். ஆயின், முற்றிலும் ஆற்றலற்றவர்களான ஷாகுவின் சந்ததியார் தங்களுடைய உரிமைப்படியான அதிகாரத்தையும் (தலைமை அமைச்சர்களின் உண்மையான அதிகாரத்தையும்) பொருந்தச்செய்யும் வழியறியாது தடுமாறினர். நாட்டின் நலத்தைவிடத் தமது சொந்த நலத்தை வளர்த்துக் கொள்வதில் அக்கறை காட்டிய தாராபாயினுல் நிலைமை மோசமடைந்தது. அதிகாரத்தை பீஷ்வா பறிப்பதற்கு அவரும் காரணமாக இருந்தார். மகாராஷ்டிரத்தில் இருந்த ஆளும் வகுப்பாரிடையே பிரிவினை மனப்பான்மையை வளர்த்த காரணத்தால் இத்தகைய அதிகார மாற்றம் கேடு பயப்பதாய் அமைந்தது.

## நைஸாமுடனுன சச்சரவு, 1751-1760

உள்நாட்டிலிருந்த தமது பகைவரை பாலாஜி அடக்கிய பின்னர், 1751ஆம் ஆண்டு இறுதியில் ஐதராபாத்திற்கு எதிராகப் படையெடுத்துச் சென்றார். 1748ஆம் ஆண்டு ஜூன் மாதம் மரணமெய்திய நைஸாம் உல் முல்கின் மூத்த மகனுன காஸி உத்தீன் கானை (Gazi Uddin Khan), அவரது இளவலாகிய சலபத் ஜங்கிற்கெதிராக (Salabat Jang) பாலாஜி ஆதரித்தார். ஆயினும், ஃபிரஞ்சுப் படைத்தலைவரான புஸ்ஸியின் (Bussy) தலைமையில் நிலப்படைப் பிரிவுகளைப் போர்க்களத்திற்குக் கொண்டுவந்த சலபத் ஜங், பீஷ்வாவைப் புறமுதுகிடுமாறு செய்தார். பூனுவிற்குப் பதினுறு கல் தொலைவிலுள்ள பகுதிவரை ஊடுருவிச் சென்றார். ஆனுல், ஊதியம் கிடைக்காததால் ஐதராபாத் படைகள் கலகம் செய்தன. அதனுல் அவைகளை அவர் திரும்ப அழைத்துக்கொள்ளவேண்டிவந்தது. இதற்கிடையில் 1752ஆம் ஆண்டில் பீஷ்வாவின் ஆதரவைப் பெற்ற காஸி உத்தீன் கான் நஞ்சு வைத்துக் கொல்லப்பட்டார். இங்ஙனம்

மராத்தியப் படையெடுப்பு முடிவுற்றது. அடுத்தபடியாக, பாலாஜி கர்நாடகத்தின்மீது படையெடுத்துச் சென்று, பெருங் கொள்ளைப் பொருளுடன் பூனு திரும்பினர். மைசூரையும் அவர் கொள்ளை யிட்டார். நைஸாமுடன் உடன்படிக்கை செய்துகொண்டு, சாவ னூரின் (Savanur) நவாபைத் தாக்கித் திறை தருமாறு வற்புறுத்தினர்.

1758ஆம் ஆண்டில் நைஸாமிற்கும் பீஷ்வாவிற்குமிடையே புதிய பூசல்கள் எழுந்தன. அவ்வாண்டில்தான் நைஸாமின் சேவையிலிருந்த ஃபிரெஞ்சுப் படைத்தலைவர் புஸ்ஸியை, லாலி (Lally) திரும்ப அழைத்துக்கொண்டார். அதனுல் நைஸாமை அழிப் பதற்கு அதுவே தகுந்த வாய்ப்பு எனக் கருதிய பீஷ்வா, ஐதரா பாத்தைத் தாக்கினர்; பேரடி கொடுக்காமலேயே அகமதாபாத் தைக் கைப்பற்றினர். நைஸாமின் பீரங்கிப்படையின் தலைவரான இப்ராஹிம் கான் கார்டியைத் (Ibrahim Khan Gardi) தமது சேவை யில் சேருமாறு தூண்டினர். அதன் பிறகு நைஸாமின் சொந்த நாட்டைத் தாக்குவதற்காக 40,000 வீரர்களைத் தமது உறவினரும், சிம்னுஜி அப்பாவின் புதல்வருமான சதாசிவ ராவ் பவேவின் (Sadhashiv Rao Bhav) தலைமையில் பீஷ்வா அனுப்பினர். நைஸாம் சலபத் ஜங்கும் தமது பகுதிகளைக் காத்துக்கொள்ள ஆனமட்டும் பார்த்தார். ஆயினும், 1760ஆம் ஆண்டு, பிப்ரவரி மாதம் மூன்றும் தேதி பூனுவிற்குக் கிழக்கே 200 மைல் தொலை விலுள்ள உட்கிர் (Udgir) என்னுமிடத்தில் நடந்த சண்டையில் அவர் தோல்வியுற்றூர். அப் போரில் இப்ராஹிமின் பீரங்கிப்படை முக்கியப்பங்கு 'பெற்றது. நைஸாமின் படை சீர்குலைந்து ஆவ்சா (Avsa) என்னும் கோட்டைக்குப் பின்வாங்கியது. ஆயின், பவே அக் கோட்டையை உடனடியாக முற்றுகை செய்தார். அதனுல் நைஸாம் சரணுகதி அடையவேண்டியதாயிற்று. கால தாமதம் இன்றி, சமாதானமும் ஏற்பட்டது. பீஜப்பூரைச் சுற்றியிருந்த பகுதியையும் ஆண்டுதோறும் 60 இலட்ச ரூபாய்கள் வருமானமுள்ள அவுரங்காபாத்தையும் நைஸாம் மராத்தியரிடம் ஒப்படைத்தார். மேலும், அவர் தௌலதாபாத், அஸிர்கார், பீஜப்பூர், அஹ்மதுநகர், பர்ஹான்பூர் ஆகிய கோட்டைகளை வெற்றிபெற்ற மராத்தியருக் களித்தார். இதன் மூலமாக ஐயத்திற்கிடமில்லாத வகையில் போர்த் திறத்தில் வல்லவர் பவே என்பது உறுதியாயிற்று.

## வட இந்தியாவில் மராத்தியரின் தலையீடு: 1752ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் ஏற்பட்ட உடன்படிக்கை

மகாராஷ்டிரத்தில் இருந்த உள்நாட்டுப் பூசல்களைச் சமாளிப் பதில் பாலாஜி கவனம் செலுத்திவந்த அதேசமயத்தில் வட

இந்தியாவில் பல நிகழ்ச்சிகள் வேகமாக நடைபெற்றன. 1747ஆம் ஆண்டில் நாதிர் ஷா கொலையுண்ட பிறகு, ஆப்கானிஸ்தானத்தின் அரசராக வந்த அஹ்மத் ஷா அப்தாலி, முகம்மது ஷா ஆட்சியின் இறுதியில் பஞ்சாபின்மீது படையெடுத்து வந்தார். ஆனால், அவர் 1748ஆம் ஆண்டு, மார்ச் திங்களில் மனுபூர் (Manupur) என்னுமிடத்தில் முறியடிக்கப் பெற்றார். இதற்கிடையில் முகம்மது ஷாவும் மடிந்தார். அவருக்குப் பின் அவரது புதல்வர் அஹ்மத் ஷா பேரரசரானார். அவர் அவத்தின் சஃப்தார் ஜங்கைத் தமது வஸீராக நியமித்துக்கொண்டார். அண்டை நாட்டவரும் பருக்காபாத், ருஹில்கந்த் ஆகிய பகுதிகளில் வாழ்ந்தவர்களுமான பத்தான்களுக்கும் புதிய வஸீருக்குமிடையே தீவிர வேற்றுமைகள் தோன்றின. அதன் விளைவாக முன்னவர்மீது பின்னவர் படையெடுத்துச் சென்றார். அவர் அவ்விதம் பத்தானியர் குடியேற்றத்தை அழிக்க முனைந்திருந்த அதே சமயம் அஹ்மத் ஷா அப்தாலி 1749ஆம் ஆண்டின் மாரி காலத்தில் பஞ்சாபில் புகுந்தார்; அம் மாநிலத்தின் ஆளுநரான முய்ன் உல்முல்க்கிடம் பத்து இலட்ச ரூபாய்களை வற்புறுத்திப் பெற்றார். அதனோடு பஞ்சாபின் நான்கு வட மாவட்டங்களில் இருந்துவரும் நிதியை அப்தாலிக்கு அளிப்பதாக முய்ன் உல் முல்க் வாக்களித்தார். இதற்கிடையில் 1750ஆம் ஆண்டு, செப்டம்பர் மாதத்தில் பத்தானியர் வஸீரை தோவாபில் தோற்கடித்தனர். அவருடைய மாநிலங்களான அவத்தையும் அலகாபாத்தையும் பத்தானியர் கைப்பற்றி, லக்னோவைச் சூறையாடி, அலகாபாத் கோட்டையை முற்றுகையிட்டனர். அரச மாதாவான மால்கி ஸாமனி (Malke–i–Zamani), அவரது ஆதரவாளரும் அலியுமான ஜாவீத் கான் ஆகியோரின் தலைமையில் இருந்த அரசவைக் கட்சியின் கடுமையான எதிர்ப்பு இருந்த காரணத்தால், மராத்தியரின் உதவியை நாடுவதைத் தவிர சஃப்ஜங்கிற்கு வேறு வழியில்லை. ஜெயப்பா சிந்தியா, மல்ஹர்ராவ் தார் ஹோல்கார் ஆகியோரைத் துணைக்கழைத்தார். அவர்களுக்கு நாளொன்றிற்கு 25,000 ரூபாய் கொடுப்பதாக வாக்குறுதி தந்து, அவர்களது உதவியைப் பெற்றார். பரத்பூரின் சூராஜ்மால் ஜாத்தின் துணையையும் அவர் நாடினார். இத்தகைய கூட்டாளிகளின் துணையுடன் அஹ்மத் கான் பங்காஷை வஸீர் முறியடித்தார். தோல்வியுற்ற பங்காஷ் குமான் (Kumaun) குன்றுகளில் தஞ்சம் புகுந்தார். தங்களைக் காப்பாற்றுமாறு, இந்திய பத்தானியர்கள் அஹ்மத் ஷாவைக் கோரினர். அதனால் அஹ்மத் ஷாவும் 1751ஆம் ஆண்டு இறுதியில் மீண்டும் பஞ்சாபில் புகுந்தார். அதைக்கண்ட பேரரசர் பீதியுற்று, குமான் குன்றுகளில் படையெடுத்துச் சென்றிருந்த வஸீரைத் திரும்ப அழைப்பதற்கான அவசர ஆணைகளை அனுப்பினார். வஸீரும் சிந்தியாவுடனும் ஹோல்கா

ருடனும் ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டு, அன்னியப் படையெடுப்பாளரை விரட்டுவதற்கென டில்லி நோக்கிப் புறப்பட்டார். 1752ஆம் ஆண்டு, ஏப்ரல் மாதம் 22ஆம் தேதி ஏற்பட்ட ஒப்பந்தத்தின் உரிமைக் கூறுகள் பின்வருமாறு :

1. பேரரசரின் உள்நாட்டு வெளிநாட்டுப் பகைவர்களிடமிருந்து அவரைப் பீஷ்வா பாதுகாக்க வேண்டும் ;

2. மராத்தியர் அளிக்கின்ற உதவிக்கு ஈடாக அவர்களுக்கு 50 இலட்ச ரூபாய்களைப் பேரரசர் அளிக்கவேண்டும். அதில் அப்தாலிக்காக முப்பது இலட்சமும், பத்தானியர்போன்ற உள் நாட்டுப் பகைவர்களுக்கென இருபது இலட்சமும் அடங்கும் ;

3. பஞ்சாப், சிந்து, தோவாப் ஆகிய பகுதிகளின்மீது 'சௌத்' வரி விதிக்கும் அதிகாரம் பீஷ்வாவிற்கு உண்டு.

4. பீஷ்வாவை ஆக்ரா, ஆஜ்மீர் ஆகியவற்றின் ஆளுநராக நியமிக்கவேண்டும்.

ஆயின், ஏற்கெனவே அப்தாலியுடன் சமாதானம் செய்து கொண்டு, பஞ்சாபையும் அவருக்கு அளித்த பேரரசர் மேலே குறித்த உடன்படிக்கைக்கு இசைவு தரவில்லை, அதனால் சஃப்தார் ஜங் மிகுந்த அருவருப்புக் கொண்டார். வாக்குறுதி அளிக்கப்பெற்ற 50 இலட்ச ரூபாய்களைப் பெருமல் டில்லியைவிட்டு விலகுவது இல்லையென சிந்தியாவும் ஹோல்காரும் உறுதியுடன் இருந்ததால், மறைந்த நைஸாம் உல் முல்கின் மூத்தமகன் காஸியுத்தீனை, மராத்தியருடைய உதவியுடன் தக்கணத்திற்குச் சென்று, அம் மாநிலத்தின் பொறுப்பினை ஏற்குமாறு வஸீர் அறிவுறுத்தி இணங்க வைத்தார். மராத்தியருக்கு முப்பது இலட்ச ரூபாய்கள் அளிப்பதாகக் காஸிஉத்தீன் ஒப்புக்கொண்டார். இங்ஙனம் மராத்தியர் பிரச்சினையை வஸீர் தீர்த்துவிட்டார். ஆயினும், அரச கட்சியின் எதிர்ப்புக் காரணமாக அவர்கள் செயலாற்ற முடியவில்லை. அதன் விளைவாக அவருக்கும் பேரரசருக்கும் இடையே உள்நாட்டுப் போர் ஏற்பட்டது. அதில் சஃப்தார் ஜங் முறியடிக்கப்பெற்ருர். 1753ஆம் ஆண்டில் அவர் வஸீர் பதவியை இழந்தார். ஆயினும், அவத், அலகாபாத் ஆகிய மாநிலங்கள் அவர் பொறுப்பிலேயே விட்டுப் பெற்றன.

## கும்பேரை (Kumbher) மராத்தியர் முற்றுகையிடல்; 1754–ல் ஜாத்துகளுடன் இணக்கமுறிவு

1752ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் தோன்றிய உடன்படிக்கையைப் பேரரசர் உறுதிசெய்யவில்லையெனினும், அது மராத்தியரின்

பேராவலைத் தூண்டியதோடு ஆக்ராவையும் ஆஜ்மீரையும் அவர்கள் வலித்தாக்குதலால் கைப்பற்றுவதற்குகந்த ஒரு சாக்காக அமைந்தது. பரத்பூரின் திறமை சான்ற ஜாத் ராஜாவான சுராஜ்மால் ஆக்ராவின்மீது நாட்டங்கொண்டார். அதேசமயத்தில் மார்வாரின் ரதோர் குல அரசரும் ஆஜ்மீர்மீது நாட்டங்கொண்டார்; பரத்பூரின்மேல் படையெடுத்து வருமாறு இமாத் உல் முல்க் மராத்தியரை அழைத்தார். அதுவும் மராத்தியருக்கு ஒரு சாக்காக அமைந்தது. முகலாயச் செல்வரான இமாத் உல் முல்க் நைஸாம் உல் முல்க்கின் பேரர். அவர் மீர் பக்ஷியாக நியமிக்கப்பெற்ருர். சஃப்தார் ஜங்குடன் கூட்டுச் சேர்ந்திருந்ததற்காக சுராஜ்மாலை அவர் பகைத்தார். இதற்கிடையில் பீஷ்வா, பதினெட்டு வயதே நிரம்பிய தமது தம்பியாகிய ரகுநாத ராவை அனுபவம் பெறுவதற்காக 1753ஆம் ஆண்டில் மாரிகாலத்தின்போது வட இந்தியாவிற்கு அனுப்பியிருந்தார். அவ்வாறு அனுப்பப்பெற்ற ரகுநாத ராவும் டிசம்பர் மாதத்தில் ஜெய்ப்பூரை அடைந்தார்; அங்கிருந்து சுராஜ்மாலுக்குச் சொந்தமான வலிமைமிக்க கோட்டையாகிய கும்பேரை முற்றுகையிடுவதற்காக மல்ஹர் ராவ் ஹோல்காரை அனுப்பினர். போரைத் தவிர்க்க எண்ணிய ஜாத் மன்னர் போரின்றி சமாதானம் செய்துகொள்வதானல் 40 இலட்ச ரூபாய் தருவதாகக் கூறுமாறு தமது நம்பிக்கை வாய்ந்த ஆள் ஒருவரை ரகுநாதராவிடம் அனுப்பினர். ஆயின், அத்தகைய விருப்பறிவிப்பினை ரகுநாத ராவ் இறுமாப்புடன் மறுத்துவிட்டு, கும்பேரைத் தாக்குமாறு ஆணையிட்டார். நான்கு மாதங்களுக்குத் தொடர்ந்த அம் முற்றுகையில் (1754 ஜனவரி–மே) மல்ஹர் ராவின் மகனை காண்டே ராவ் ஹோல்கார் (Khande Rao Holkar) கொல்லப்பட்டார். ஜாத்துகள் மிகுந்த தீரத்துடன் கடுமையாகப் போரிட்ட காரணத்தால் மராத்தியரால் அக் கோட்டையைக் கைப்பற்ற முடியவில்லை. அதனேடு 30 இலட்ச ரூபாய்களை மூன்று ஆண்டுத் தவணைகளில் அளிப்பதாக ஜாத்துகள் அளித்த வெறும் வாக்குறுதியை ரகுநாத ராவ் ஏற்கவேண்டியதாயிற்று. அதன்பிறகு அவர் முற்றுகையைக் கைவிட்டார்.

ஜாத்துகளுடன் போர் நடந்துகொண்டிருந்த சமயத்தில் மல்ஹர் ராவ் இமாத் உல் முல்க்குடன் இணைந்து, சிக்கந்தராபாத்திற்கு அருகில் அமைந்திருந்த பேரரசரின் பாசறையைத் தாக்கிச் சூறையாடினர்; மீர் பக்ஷியைத் தொடர்ந்து டில்லிக்குச் சென்ருர். அங்கே மீர் பக்ஷியான இமாத் உல் முல்க், 1754ஆம் ஆண்டு ஜுன் மாதத்தில் பேரரசர் அஹ்மத் ஷாவைக் கொன்றுவிட்டு, இரண்டாம் ஆலம் கீரை அரசராக்கினர்; வஸீர் பதவியையும் தாமே எடுத்துக்கொண்டார். சிறிது காலத்திற்குள் ரகுநாத ராவும் ஜெயப்பாவும் டில்லியை அடைந்

தனர். அவர்கள் அளித்த ஆதரவிற்கு ஈடாக 82 இலட்ச ரூபாய்களை அளிப்பதாக இமாத் உல் முல்க் வாக்களித்தார். புதிய வஸீரிட மிருந்தும் பேரரசரிடமிருந்தும் பணத்தைப் பெறலாம் என்ற வீணான நம்பிக்கையுடன் ரகுநாத ராவும் தலைநகருக்கு அருகிலேயே சுற்றிக் கொண்டிருந்தார். அடுத்து, அவர் திறை தண்டுவதற்காக யமுனை ஆற்றைக் கடந்து ராஜஸ்தானத்திற்குள் புகுந்தார். அங்கே மல்ஹர் ராவ் ஹோல்கார் அவருடன் வந்து சேர்ந்தார். அச் சமயத்தில் மார்வாரைச் சார்ந்த பிஜெய் சிங்கிடமிருந்து (Bijai Singh) சௌத் வரி கொள்வதற்காக ஜெயப்ப சிந்தியா படையெடுத்துச் சென்றார். ஜெயப்பாவுடன் இணைந்துகொள்ள ரகுநாத ராவ் விழைந்தார். ஆனால், அவ்விதம் செய்யவேண்டாமென ஜெயப்பாவே யோசனை கூறினார். அதனால் ரகுநாத ராவும் குவாலியருக்குப் புறப்பட்டுச் சென்று, அங்கிருந்து பூனாவிற்குப் பயணமானார். இங்ஙனம் 1753ஆம் ஆண்டு, அக்டோபர் முதல் 1755ஆம் ஆண்டு ஆகஸ்ட் வரையிலான அவரது இரண்டாண்டுப் படையெடுப்பினால் மாரத்தியரின் நோக்கம் நிறைவேறுவதற்குப் பதிலாக, வடஇந்தியாவில் அவர்களது நலன் ஓரளவு பாதிக்கப்பட்டது.

## மார்வாரில் ஜெயப்ப சிந்தியா, 1755–1756
### மராத்திய இராஜபுத்திர பகைமைக்கு மற்றொரு காரணம்

ஜெய்ப்பூரின் உள்நாட்டு விவகாரங்களில் மல்ஹர் ராவ் ஹோல்கார் தலையிட்டு, அந் நாட்டின் அரியணைக்கான போட்டியில் ஒரு கட்சியை ஆதரித்தார். அதனால் ராஜபுத்திரர்களுக்கும் மராத்தியருக்கும் இடையே இடரார்ந்த பிளவு தோன்றியது. அதே சமயத்தில் ஜெயப்ப சிந்தியா மார்வாரில் தலையிட்டார். அவரது ஆணவம் நிறைந்த நடத்தையினால் 1741ஆம் ஆண்டுவரையில் நட்பு முறையில் ஒன்றாக இணைந்து வேலை செய்த மராத்தியருக்கும் ராஜபுத்திரத் தலைவர்களுக்குமிடையே இணைக்க முடியாத பிளவு தோன்றியது. 1749ஆம் ஆண்டு, ஜூன் மாதம் 20ஆம் தேதியன்று மார்வாரின் அபய்சிங் இறந்தார். 1752ஆம் ஆண்டு, செப்டம்பர் மாதத்தில் மரணமெய்திய பகத் சிங்கின் புதல்வரும் ஆஜ்மீரில் தங்கி யிருந்தவருமான பிஜெய் சிங்கை முற்றுகையிட்டிருந்த ஜெயப்ப சிந்தியாவின் உதவியை ராம் சிங் நாடினார். மெர்ட்டாவிற்குள் (Merta) பின்வாங்கிச் சென்ற ஜெய்சிங்கை ஜெயப்பா தொடர்ந்து சென்றார். இறுதியாக பிஜெய் சிங், நாக்பூர் கோட்டையில் தஞ்சம் புகுந்தார். அக் கோட்டையையும் ஜெயப்பா 1754ஆம் ஆண்டு, அக்டோபர் மாதத்தில் தீவிரமாக முற்றுகையிட்டார். ஓராண்டு காலத்திற்கு

நீடித்த அம் முற்றுகையினுல் இரு கட்சியினரும் மிகுந்த தொல்லைகளுக் குள்ளாயினர். இதற்கிடையில் (1755ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில் ஆஜ்மீரையும், மார்வாரில் வேறு பல இடங்களையும் ஜெயப்பா பிடித்துக்கொண்டபோதிலும், ஜெய்சிங்கும் விடாப்பிடியாகக் கோட்டையைக் காத்துவந்தார். ஆனுல், அதே சமயத்தில் அவர் முற்றுகையாளருடன் பேச்சுவார்தைகளைத் தொடர்ந்து நடத்தினுர்). 1755ஆம் ஆண்டு, ஜூலை மாதம் 25ஆம் தேதியன்று ஜெயப்பாவின் பாசறையின் ஒருபுறத்தில் அவரது ஆட்களுடன் பிஜெய்சிங்கின் தூதுவர்கள் பேச்சுவார்த்தை நடத்திக் கொண்டிருந்தனர். ஜெயப்பாவும் திறந்தவெளியில் நீராடிவிட்டு அப்போதுதான் வெளி வந்தார். அச் சமயத்தில் அங்குவந்த பிச்சைக்காரர் இருவர் காசுகளைப் பொறுக்கும் சாக்கில் அவரது அருகில் வந்து, தங்களது குறுவாட்களால் அவரது விலாவில் குத்திப் படுகாயமுறச் செய்தனர். அவர்களை பிஜெய் சிங்கின் கையாட்கள் எனக்கருதிய மராத்தியர் கடுஞ்சினங்கொண்டு, பிஜெய்சிங்கின் பகர ஆட்களையும் அவர்களுடன் வந்தவர்களையும் கண்டதுண்டமாக வெட்டி வீழ்த்தினர். இத்தகைய நிகழ்ச்சிகளின் விளைவாக மராத்தியருக்கும் ராஜபுத்திரர்களுக்குமிடையேயான பகைமை மேலும் முற்றியது. ஜெயப்பாவின் இளவலான தத்தாஜி முற்றுகையைத் தொடர்ந்தார். தமது உதவிக்கு வர வேண்டுமென்றும், வடஇந்தியாவிலிருந்து மராத்தியரை விரட்ட வேண்டுமென்றும், ஜெய்ப்பூரின் மாதவ சிங்கிற்கும், ருஹிலா தலைவர்களுக்கும், பேரரசருக்கும் பிஜெய்சிங் துயர் கலந்த அவசர வேண்டுகோள்களை விடுத்தார். அப்படியிருந்தும், பிஜெய் சிங்கிடம் இழப்பீடாக ஐம்பது இலட்ச ரூபாய்களையும், ஆஜ்மீர் ஜலோர் ஆகியவற்றையும் பெறுவதில் சிந்தியா வெற்றி பெற்ருர். மேலும், தமது நாட்டில் பாதிப் பகுதியைத் தமது உறவினரான ராம் சிங்கிற்கு அளிக்கவும் ஜெய்சிங் ஒப்புக்கொண்டார். இங்ஙனம் ஜெயப்பாவைப் பழிவாங்கிய பின்னர், நகார் முற்றுகையைத் தத்தாஜி கைவிட்டார். அதன் பிறகு ஆஜ்மீரைத் தம்மிடமே வைத்துக்கொண்டு, ஜலோரை ராம்சிங்கிடம் ஒப்படைத்துவிட்டுப் பூனுவிற்குப் பயணமானுர்.

## ரகுநாதராவ் பஞ்சாபை வென்று அடக்குதல் 1759-1760

படையெடுத்து வந்த அப்தாலியிடம் பஞ்சாப், முல்டான் ஆகிய மாநிலங்களை 1752ஆம் ஆண்டு எப்ரல் மாதத்தில் பேரரசர் அஹ்மத் ஷா அளித்தார் என்பதையும், முன்னையவர் முயின் உல் முல்கை அம் மாநிலங்களின் ஆளுநராக உறுதிசெய்தார் என்பதையும்

ஏற்கெனவே குறிப்பிட்டோம். 1753ஆம் ஆண்டு, நவம்பர் மாதத்தில் முயின் உல் முல்க் மரணமடைந்தார். அவர்தம் விதவையான முகலானி பேகம் நடைமுறையில் ஆளுநராக இருக்கும் அனுமதி பெற்ருர். இதனுல் அம் மாகாண ஆட்சியில் குழப்பம் தோன்றியது. இமாத் உல் முல்க் அதனைப் பயன்படுத்திக்கொண்டு, 1756ஆம் ஆண்டு, பிப்ரவரி மாதத்தில் அடினு பெக் கானை (Adina Beg Khan) பஞ்சாபின் ஆளுநராக நியமித்தார். முகலானி பேகத்தைச் சிறைப் பிடித்து டில்லிக்குக் கொண்டுவரச் செய்தார். கொள்கையற்ற வஸீரினுல், பேரரசரும் அவரது குடும்பத்தினரும் பட்டினி கிடக்கும் நிலைக்கு வந்தனர். அதனுல், மல்காயி ஸாமனியும், மற்ற முகலாய மாதர்களும் முகலானியையும், நிறைவுடைய அரசியல் அறிஞரான நஜீப் உத் தௌலாவையும் கலந்துகொண்டு, காபூலிலிருந்து இந்தியாவின்மீது படையெடுத்து வருமாறு அழைத்தனர். வஸீரை யும் அவரது அதிகாரத்திற்குப் பக்க பலமாக நின்ற கூட்டாளிகளும், வடஇந்தியாவின் துன்பங்களுக்குப் பெருமளவு காரணமானவர் களுமான மராத்தியரையும் வந்து பணியவைக்குமாறு வேண்டினர். அவ்வழைப்பிற்கு இணங்க வந்த அப்தாலியும் அடினு பெக்கானை முறி யடித்து, பஞ்சாபைக் கைப்பற்றிக்கொண்டார்; அங்கிருந்து 1757ஆம் ஆண்டு, ஜனவரி மாதத்தில் டில்லியை நோக்கிப் புறப்பட்டார்; தலைநகரில் வாழ்ந்த மக்களுக்கு பயங்கரமான கொடுமை இழைத்த பின்னர் ஆக்ராவையும் மதுராவையும் தாக்குவதற்கும் சுராஜ்மாலிட மிருந்தும் பிற ஜாத் தலைவர்களிடமிருந்தும் திறை கொள்ளுவதற்கு மெனத் தமது படைகளை அனுப்பினுர். அப் பகுதிகளில் வாழ்ந்த குடிமக்களை ஆப்கானியர் கொன்று குவித்தனர். அதன் பிறகு, திரும்பி வந்து அப்தாலியுடன் சேர்ந்துகொண்டனர். கொள்ளைநோய் பரவியதாலும், இந்தியக் கோடையின் வெப்பத்திற்கு அஞ்சியும் படையெடுப்பாளர்கள் கூடிய விரைவிலேயே தங்கள் நாடு திரும்பினர். அப்தாலி, நஜீப் உத் தௌலாவை தலைமை பக்ஷியாக நியமித்து, பேரரசர் இரண்டாம் ஆலம் கீரைக் காக்கும் பொறுப்பையும் அவரிடம் ஒப்படைத்துச் சென்ருர். இமாத் உல் முல்கை மீண்டும் வஸீராக நியமித்துவிட்டு, 1757ஆம் ஆண்டு, அக்டோபர் மாதம் முதல் தேதியன்று பன்னிரண்டு கோடி பெறுமான முள்ள பொருள்களைக் கவர்ந்து காபூலுக்குப் பயணமானுர். படை யெடுத்துவருமாறு செய்தி அனுப்பிய முகலானி பேகத்தின் சேவை தேவைப்படும் வகையில் அவருக்கு ஆதரவு அளித்த அப்தாலி, தமது வேலை முடிந்துவிட்ட பிறகு, அவ்வம்மையாரின் வாழ்க்கைக்கு வேண்டிய வசதி யேதும் செய்யாமலேயே திரும்பிவிட்டார். அவ் அம்மையாரும், ஏழ்மையிலும் அவமானத்திலும் உழன்று, 1779ஆம் ஆண்டில் இவ்வுலக வாழ்வை நீத்தார்.

அப்தாலியின் படையெடுப்பின்போது, ஏற்கெனவே 1756ஆம் ஆண்டு, அக்டோபர் மாதத்தில் பூனுவிலிருந்து புறப்பட்ட ரகுநாத ராவ் டில்லிக்கு வந்துகொண்டிருந்தார். மதுராவில் இருந்த பாதுகாப்பற்ற யாத்திரிகர்களை அப்தாலியின் படையினர் படு கொலை செய்துகொண்டிருந்த சமயத்தில், ராகுநாத ராவும் மல்ஹர் ராவும் ராஜபுதனத்தில் பயனற்ற பூசல்களில் வீணுகக் காலங் கழித் தனர். அன்னியப் படையெடுப்பாளர் ஆக்ராவைவிட்டு வெளியேறிய பிறகே அவர்கள் அந் நகரை அடைந்தனர். இமாத் உல்முல்கும் அவர்களை வரவேற்ருர். மராத்தியரின் வஞ்சினத்திற்கு அஞ்சிய நஜிப் உத் தெளலா மல்ஹர் ராவ் ஹோல்காரின் பாதுகாப்பை நாடினுர். மராத்தியர் டில்லியை நோக்கி விரைந்து சென்றனர். அந் நகரைப் பிடித்துக்கொண்டதோடு, சஹரான்பூர் வரையிலுள்ள தோவாப் பகுதியையும் கைப்பற்றினர் (ஆகஸ்ட் 1757). விட்டல் ஷிவ்தேவ் என்பார் நஜிப் உத் தெளலாவைச் சூழ்ச்சித் திறத்தால் வென்று சிறைப்படுத்தினுர். மராத்தியரின் எளிதில் மசியாத பகைவரான இந்த ருஹிலாத் தலைவரைத் தொலைவிலுள்ள தக்கணக் கோட்டையொன்றில் அடைத்துவிடக்கூடிய நிலையில் ரகுநாத ராவ் இருந்தார். ஆயின், அவரது ஊசலாடும் பண்பு காரணமாகவும், சிந்தியாவிற்கும் ஹோல்காருக்கும் இடையே மாறுபட்ட கருத்து களும் கொள்கைகளும் இருந்த காரணத்தாலும் நியாயமாகப் பெற வேண்டிய தண்டனையிலிருந்து நஜிப் உத் தெளலா தப்பித்துக் கொண்டார். அவரிடமிருந்து பெரும் பொருளை லஞ்சமாகப் பெற்ற மல்ஹா ராவ், வட இந்தியாவில் மராத்தியருடைய ஆதிக்கத்தை உறுதிப்படுத்துவதற்கு நஜிப்பின் சேவைகளைப் பயன்படுத்திக் கொள்வது அறிவுடைமையாகுமென்று வாதாடி, அவருக்கு விடுதலை வாங்கித் தந்தார். தனித் தன்மையற்ற ரகுநாத ராவும் மல்ஹர் ராவின் யோசனையை ஏற்றுக்கொண்டார். அதன் பிறகு, மராத்தியர் இரண்டாம் ஆலம்கீரை டில்லி அரியணையில் அமர்த்தினர். இமாத் உல்முல்கை வஸீர் பதவியில் உறுதிசெய்தனர். அஹ்மத் ஷா பங்காஷை மீர் பக்ஷியாக நியமித்தனர். இவற்றைச் செய்த பின்னர் லாகூரை நோக்கி முன்னேறிய ரகுநாத் ராவ், வழியில் குஞ்ச் புரத்தையும் சர்ஹிந்தையும் கைப்பற்றினுர். 1757ஆம் ஆண்டில் பஞ்சாபின் ஆட்சிப் பொறுப்பை ஏற்பதற்காகத் தமது மகன் தைமூரையும் படைத் தலைவர் ஜஹான் கானையும் அப்தாலி பின்னுல் விட்டுச் சென்ருர். அவர்கள் இருவரையும் விரட்டுவதற்காக அடினு பெக் கானுடன் இணைந்த ராகுநாத ராவ், வேண்டிய நடவடிக்கைகளை எடுத்தார். அவர் தாம் மேற்கொண்ட வேலையில் வெற்றி பெற்று, சர்ஹிந்தில் தோல்வியுற்ற காவற் படைத் தலைவரான அப்துஸ் சமத்கானையும் (Abdus Samad Khan) அப்துர் ரஹ்மானையும் சர்ஹிந்தில் பெரும் படையுடன் தங்குமாறு செய்தார். காபூலையு

காண்டஹாரையும் அப்தாலியிடமிருந்து பெறுமாறு அவர்களுக்கு ஆணையும் இட்டார். துகோஜி ஹோல்கார், சபாஜி சிந்தியா ஆகியோரின் தலைமையில் ஒரு பெரிய மராத்தியப் படையை லாகூரில் நிறுத்திவிட்டு, 1758ஆம் ஆண்டு, மே மாதத்தில் ரகுநாத ராவ் பூனாவிற்குப் பயணமானார். அவர் சென்றுவிட்ட பிறகு, துகோஜியும் சபாஜியும் எல்லைப் புறத்திற்குச் சென்று, அட்டாக்கைக் கைப்பற்றினர்; சிந்து ஆறு வரையிலான பகுதியில் நிதி தண்டுவதற்கான ஏற்பாடுகளையும் செய்தனர்; பஞ்சாபை அடினா பெக் கானின் பொறுப்பில் விட்டனர். அதற்காக அவர் ஆண்டு தோறும் 75 இலட்சம் ரூபாய் அளிக்க வேண்டும். ஆனால், 1758ஆம் ஆண்டு, செப்டம்பர் மாதம் பத்தொன்பதாம் தேதியில் அதீனா பெக் இறந்ததால் பஞ்சாபில் மராத்தியருடைய ஆட்சி நிலை குலைந்தது.

## ஷுகர்தாலில் இருந்த நஜீபை தத்தாஜி சிந்தியா முற்றுகையிடுதல்

பஞ்சாபில் ரகுநாதராவ் செய்த அப்பொழுதைக்கான ஆட்சி முறை ஏற்பாடு தாற்காலிகத் தகுமுறையே யாகும். அந்த எல்லைப்புற மாநிலத்தின் பாதுகாப்பிற்குத் தேவையான நிரந்தர ஏற்பாட்டைச் செய்வது தத்தாஜியின் பொறுப்பாக இருந்தது. திறமை மிக்க மராத்தியத் தலைவரை இணைக்காது, மராத்தியரிடம் பற்றுறுதி கொள்வர் என எதிர்பார்க்க முடியாத அப்துஸ் சமத் கான், அப்துர் ரஷ்மான் ஆகிய இரு முஸ்லீம் தலைவர் கையில் பஞ்சாபை ஒப்படைத்தது, ரகுநாத ராவ் உருவாக்கிய ஆட்சியமைப்பிலிருந்த முக்கியக் குறையாகும். 1758ஆம் ஆண்டு, மே மாதத்தில் பூனாவிலிருந்து புறப்பட்ட தத்தாஜி, ஜூன் மாதத்தில் திரும்பிவந்து கொண்டிருந்த ரகுநாத ராவை உஜ்ஜெய்னுக்கு அருகே சந்தித்தார்; அதன் பின்னர் டிசம்பர் மாதத்தில் டில்லியை வந்தடைந்தார்; அங்கிருந்து லாகூருக்குச் சென்று, சிந்து ஆறு வரையிலான பஞ்சாபின் ஆளுநராக சபாஜி சிந்தியாவை நியமித்தார் (பிப்ரவரி 1759); அதற்குப்பின் ஜூன் மாதத்தில் தோவாபிற்குத் திரும்பி வந்து, அப் பகுதியின் ஆட்சி அமைப்புப்பற்றி நஜிப் உத் தௌலாவுடன் கூடிப் பேசினார். எவ்வாறெனினும், தமது உயிருக்கு ஆபத்து வரும் என்று கூறிவிட்டு, மராத்தியப் பாசறையைவிட்டுக் கடுங் கோபத்துடன் நாஜிப் வெளியேறினார், ஆனால், அதன் பிறகும் முஸஃபர் நகருக்குப் பதினாறு மைல் கிழக்கே கங்கை ஆற்றின் மேல்கரையில் உள்ள ஷுகர்தாலில் நிலைகொண்ட அவர், தமது பகர ஆட்கள்மூலமாக மராத்தியருடன் தொடர்ந்து பேச்சுவார்த்தை நடத்தினார். மழை காரணமாக

வெள்ளப் பெருக்கு ஏற்பட்டபோது, தத்தாஜியைத் தம் பிடியில் சிக்கவைக்கவும் முயன்றார். ருஹில உறவினர்களான ஹாஃபீஸ் ரஹ்மத் கான் (Hafiz Rahmat khan), மற்றுமுள்ள பத்தானியர், அவத்தைச் சேர்ந்த ஷுஜா உத்தௌலா, காபூலைச் சார்ந்த அஹ்மத் ஷா அப்தாலி ஆகியவர்களை விரைவாக வந்து, தமக்கு உதவி அளிக்கவேண்டுமென்று கோரி, அவசர ஓலைகளை அனுப்பினார். அதன் காரணமாக தத்தாஜி எதிர்நடவடிக்கைகளை மேற்கொண்டு, செம்டம்பர் மாதம் 15ஆம் தேதியன்று நஜிபின் பாசறையைத் திடீரென்று தாக்கினார். ஆனால், அத் தாக்குதல் தோல்வியுற்றது. சண்டை தொடர்ந்து நடைபெற்றது. நஜிபிற்கு வந்துகொண்டிருந்த தளவாடங்களைத் தடுப்பதற்காகவும், ருஹிலர் அவருடன் வந்து இணைவதைத் தடை செய்வதற்கும் கோவிந்த் பந்த் பந்தேலாவைத் தத்தாஜி கங்கை ஆற்றிற்கப்பால் அனுப்பி வைத்தார். ஆனால், ஹாஃபீஸ் ரஹ்மதும் தண்டேகானும் (Dunde khan) கோவிந்த் பந்தை முறியடித்தனர். இதற்கிடையில் அனுப்கிரி கோசெய்ன் தலைமையிலான ஷுஜா உத் தௌலாவின் முன்னணிப் படை, பாலம் ஒன்றின் வழியாக ஆற்றைக் கடந்து வந்து, அக்டோபர் மாத இறுதியில் ஷுகர்தாலில் இருந்த நஜீபுடன் சேர்ந்துகொண்டது. அதன் பேரில் நஜீபின் பாசறையைத் தத்தாஜி தீவிரமாக முற்றுகையிடத் தொடங்கினார்.

ஷுகர்தாலுக்கருகே தத்தாஜி நிலைகொண்டு இருந்த அதே சமயத்தில், நஜீபின் வேண்டுகோளுக்கு இணங்க அஹ்மத் ஷா அப்தாலி, பஞ்சாபைக் கைப்பற்றுவதற்காக ஜஹான்கானின் தலைமையில் ஒரு படையை அனுப்பினார். ஆனால், சபாஜி, ஜஹான் கானை முறியடித்துக் காயப்படுத்தினார். அதனால் ஜஹான்கானும் ஏமாற்றத்துடன் பிஷாவருக்குப் பின்வாங்கிச் சென்றார். இத் தோல்வி கண்டு கொதித்தெழுந்த அப்தாலி அரசர் பஞ்சாபின் மீது படையெடுத்து வந்து சபாஜியை வென்றார். சிறியதாகவிருந்த மராத்தியப் படை பெருமளவு துன்புற்றது. சபாஜியும் மிகுந்த கிலியுடன் நவம்பர் மாதம் எட்டாம் தேதியன்று ஷுகத்தாலுக்கு ஓடினார். இங்ஙனம் மராத்தியர் பஞ்சாபை இழந்தனர்.

## இந்தியாவின்மீது அப்தாலி படையெடுப்பும், தத்தாஜியின் தோல்வியும் மரணமும்.

தத்தாஜி, இடரான நிகழ்ச்சிகளைக் கண்டு, மனம் தளராது ஷுகர்தால் முற்றுகையைத் தீவிரப்படுத்தினார். ஆனால், வஸீர் இமாத்-உல் முல்க் பீதியுற்றார். பேரரசர் படையெடுப்பாளருடன் சேர்ந்துவிடுவாரோ என அஞ்சிய வஸீர், அவரை 1759ஆம் ஆண்டு, நவம்பர் மாதம் 29ஆம் தேதியன்று கொலை செய்தார். சிறிது

காலத்திற்குப் பிறகு சுராஜ் மால் ஜாத்தின் பாதுகாப்பைப் பெறுவதற்காக அவர் பரத்பூருக்குச் சென்றார். அச்சமயத்தில் சர்ஹிண்டில் இருந்த அப்தாலி இரண்டாம் ஆலம்கீரின் கொலைபற்றிக் கேள்வியுற்று, வஸீரையும் அவர்தம் கூட்டாளிகளான மராத்தியரையும் தண்டிப்பதற்கென டில்லிக்குப் புறப்பட்டார். அதனால் ஷுகர்தால் முற்றுகையைத் தத்தாஜி கைவிடவேண்டியதாயிற்று. (1759ஆம் ஆண்டு, டிசம்பர் மாதம் 11ஆம் தேதி) அப்தாலியை எதிர்ப்பதற்காக டில்லிக்குச் செல்வது அவசியமாயிற்று. டிசம்பர் மாதம் 18ஆம் தேதியன்று யமுனையைக் கடந்த அவர், குஞ்புராவை தீரத்துடன் கைப்பற்றினார். தைமூரின் தலைமையில் 40,000 ஆப்கானியர் ஏற்கெனவே அம்பாலாவை அடைந்தனர் என்பதை அங்கே அறிந்தார். அப்போது தத்தாஜி, தமது படையின் ஒரு பகுதியை பீரங்கிகளுடனும் பிற தளவாடங்களுடனும் கோவிந்த் பந்த் பந்தேலாவின் தலைமையில் டில்லிக்கு அனுப்பியிருந்தார். ஆனால், நேரடிப் போரைத் தவிர்க்க எண்ணிய அப்தாலி, யமுனை ஆற்றைக் கடந்து, டில்லிக்கு வடக்கே பத்துக் கல் தொலைவிலுள்ள பராரிகாட்டில் (Bararighat) பாசறை அமைத்துக்கொண்டார். 1760ஆம் ஆண்டு, ஜனவரி மாதம் பத்தாம் தேதியன்று அவ்விடத்தில் கடுமையான போர் ஒன்று நடைபெற்றது. அப் போரில் தற்செயலாகப் பட்ட குண்டிற்கு தத்தாஜி இரையானார். ஜங்கோஜி சிந்தியாவும் காயமுற்றார். தத்தாஜியின் மரணத்தினால் அவரது படையினர் பீதியுற்றுச் சிதறி ஓடத் தொடங்கினர். வெகு விரைவிலேயே அப்தாலி டில்லியைக் கைப்பற்றி, யாகுப் கானை அதன் ஆளுநராக நியமித்தார்; கப்பம் கோரி, ராஜபுத்திரத் தலைவர்களிடமும், சுராஜ் மால் ஜாத்திடமும், ஷுஜா-உத்-தௌலாவிடமும் தமது பகர ஆட்களை அனுப்பினார். ஆனால், ஜாத் ராஜாவைத் தவிர மற்றையோர் மழுப்பலான பதில்களையே தந்தனர். ஜாத் ராஜா மாத்திரம், 'முதலில் மராத்தியரை டில்லியிலிருந்து விரட்டி, அங்கே தாங்களே தலைவர் என்பதை உறுதி செய்தால், நாங்கள் உங்களுடைய மனமுவந்த பண்ணையாளர்களாக இருப்போம்' என்று துணிந்து செய்தி அனுப்பினார். மேலும், படையெடுத்துச் செல்ல அப்தாலி விரும்பவில்லை. ஆயினும், டில்லியில் தங்கியிருக்குமாறு அவரை நாஜிப் உத் தௌலா வேண்டிக்கொண்டார். அதனோடு மராத்தியரை அழிக்க வேண்டுமென்றும், அப்படி அழிக்காவிட்டால் அவர்கள் திரும்பிவந்து அவர்மீதும், மற்ற முஸல்மான்களின்மீதும் வஞ்சம் தீர்த்துக்கொள்வார்களென்றும் குறிப்பிட்டார்.

## பாவே சாஹிப் டில்லியின்மீது படையெடுத்துச் செல்லல்

1760ஆம் ஆண்டு, பிப்ரவரி மாதம் 13ஆம் தேதி ஆமத் நகரில் தங்கியிருந்த பீஷ்வாவிற்கு தத்தாஜியின் மரணச் செய்தி கிடைத்

தது. தமக்கிழைத்த அவமானத்திற்கு வஞ்சம் தீர்த்துக்கொள்வதற்கும், அப்தாலியை நாட்டிலிருந்து விரட்டவும் தமது உறவினரான சதாசிவ ராவ் பாவேயை டில்லிக்கு அனுப்ப பீஷ்வா தீர்மானித்தார். பாவேயும் மேற்கொண்ட பணிக்கு வேண்டிய திறமையும் அனுபவமும் பெற்றிருந்தார். அப்போதைய சூழ்நிலையில் கூடுமான வரையில் போதுமான படையினரும் போர்த் தளவாடங்களும் அவரிடம் இருந்தன. இப்ரஹிம்கான் கார்டியின் தலைமையில் இருந்த திறமை மிக்க பீரங்கிப்படையும் பாவேயின் ஆணைக்குட்பட்டிருந்தது. அவர் இரண்டு இலட்சம் ஆட்களுடன் மார்ச் மாதம் 14ஆம் தேதியன்று பாட்தூரிலிருந்து (Patdur) புறப்பட்டார். அவருடன் சென்ற இரண்டு இலட்சம் ஆட்களில் ஏறக்குறைய 33,000 பேர்கள் பணியாட்கள், கணக்கர், கடைக்காரர்கள், பரிவாரத்தினர் போன்றோராவர். இங்ஙனம் சதாசிவராவ் ஜூன் மாதம் 4ஆம் தேதி குவாலியரை அடைந்தார். யமுனையைக் கடந்து, அப்தாலியின் கூட்டாளிகளான ருஹிலர்களைத் தாக்குவது என அவர் திட்டமிட்டார். அதற்கிணங்க ஆற்றைக் கடப்பதற்காக வேண்டிய ஏராளமான படகுகளைத் தயாராக வைத்திருக்குமாறு கோவிந்த் பந்த் பந்தேலாவிற்கு ஆணையிட்டார். ஆனால், குறித்த காலத்தில் மழையும் வெள்ளமும் வந்ததால் அவரது திட்டம் தோல்வியுற்றது. சாம்பல் ஆற்றிற்கு அப்பாலேயே நீண்ட காலத்திற்கு நிறுத்திவைக்கப்பெற்ற மராத்தியரால் உரிய காலத்தில் யமுனை ஆற்றிற்கருகில் வர இயலவில்லை. மல்ஹர் ராவ் ஹோல்காரும் ஜங்கோஜி சிந்தியாவும் ஆக்ராவிற்கருகில் பாவேயுடன் வந்து இணைந்தனர். ஜூலை மாதம் 16ஆம் தேதியன்று மதுராவை அடைந்த பாவேயை சுராஜ் மால் ஜாத் சந்தித்தார். தம்மிடமிருந்து பாவே சௌத் கோராமலும், தம்முடைய குடிகளின் பயிர்கள், சொத்துகள் ஆகியவற்றை அழிக்காமலும் இருந்தால், தாம் 10,000 வீரர்களோடு மராத்தியருடன் சேருவதாகவும், மராத்தியப் பெண்களுக்கும் போரில் ஈடுபடாதவர்களுக்கும் அடைக்கலம் தருவதாகவும் சுராஜ்மால் கூறினர். அத்தகைய விருப்பறிவிப்பினை பாவே ஏற்றுக்கொண்டார். யமுனையில் வெள்ளம் வந்த காரணத்தால் டில்லிக்குச் சென்று, அங்கிருந்து அப்தாலியின் பகர ஆட்களை விரட்டுவது எனத் தீர்மானமாகியது. அத்திட்டம் எளிதில் நிறைவேறியது. 1760ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 22ஆம் தேதியன்று தலைநகருக்குள் பாவே பிரவேசித்தார்.

சாம்பலைக் கடப்பதற்கு முன்பே ராஜஸ்தான தலைவருக்கும் அவத்தின் ஷுஜா உத்தௌலாவிற்கும், மற்றுமுள்ள முக்கியத் தலைவர்களுக்கும் பாவே கடிதங்கள் அனுப்பியிருந்தார்; அன்னியப் படையெடுப்பாளரைச் சிந்து ஆற்றிற்கப்பால் விரட்டுவதற்காக யாவரும் ஒன்றுசேரவேண்டுமென்று அவர்களைக் கேட்டுக்கொண்டார்.

ஆயின், மராத்திய வெல்திறம் வெற்றி பெறவில்லை. சிந்தியா, ஹோல்கார் ஆகியோருடைய வன்முறையான நடத்தையினால் விரோதம்கொண்ட இராஜபுத்திரர் அவருடன் சேராது தனித்து நின்றனர். மராத்தியரைவிட தமது அண்டை நாட்டினரான குஹிலரைப் பெரும் பகைவர் எனக் கருதிய ஷுஜா உத் தௌலா பாவேயுடன் சேர அநேகமாக ஒப்புக்கொண்டார். ஆனால், அதைப் பற்றி அப்தாலி அறிந்ததும், ஷுஜா உத் தௌலாவைத் தம் வழிக்குக் கொண்டுவருவதற்காக லக்னோவிற்கு நஜீப் உத் தௌலாவை நேரடியாக அனுப்பினார். மேதிகாட் (Mehdighat) என்னுமிடத்தில் தங்கியிருந்த நவாப் வஸீரை நாஜிப் சந்தித்தார். பொதுவான சமயத்தின்பேராலும், நலன்களின்பேராலும், வஸீர் ஷாவுடன்தான் இணையவேண்டுமென்று நஜீப் வற்புறுத்திக் கூறினார்; பாவே செய்ததைப்போலப் பேரரசின் வஸீர் பதவியை ஷுஜாவிற்கு அளிப்பதாகவும் வாக்குறுதி தந்தார். நஜீபின் விடாத் தொந்தரவை ஷுஜாவினால் புறக்கணிக்க முடியவில்லை. ஜூலை மாதம் பதினெட்டாம் தேதியன்று அனுப்ஷஹாரில் இருந்த அப்தாலியின் பாசறையில் அவருக்கு அன்பான வரவேற்பு கிடைத்தது. அப்தாலியுடன் ஷுஜா உத்தௌலா இணைந்தது மராத்தியரின் குறிக்கோளுக்குப் பேரிடியாக வந்தது. ஆயின், சுராஜ் மால் ஜாத்தும் மராத்தியருடனை உறவினை முறித்துக்கொண்டு, டில்லியிலிருந்து பரத்பூருக்குச் சென்றது மற்றுமோர் இடியாக அமைந்தது. பாவேவிற்கும் ஜாத் மன்னருக்கும் இடையே திடீரென்று பூசல் தோன்றியதற்கான காரணம் பற்றிப் பலவாராகக் கூறப்பெறுகின்றது. திறந்த வெளியில் நெருங்கிக் கலந்து, நேரடியாகப் போரிடவேண்டுமென்று பாவே விரும்பியதாகவும் மராத்தியப் படைத் தளவாடங்களையும், பீரங்கிப் படையையும், பெண்களையும் பரத்பூரிலேயே விட்டுவிட்டு மராத்தியருடைய மரபு வழியில் மறைந்திருந்து தாக்கும் முறையை அப்தாலிக்கு எதிராகப் பயன்படுத்தி, அவருக்குத் தேவையான துணைக் கலப் பொருள்களைத் தடைசெய்யவேண்டுமென்று சுராஜ்மால் கூறிய யோசனையை பாவே மறுத்தார் என்றும் கூறப்படுகின்றது. தமது படைவீரர்களுக்கு ஊதியம் வழங்குவதற்காக டில்லி கோட்டையில் 'திவானி அம்' என்னும் அழகிய மண்டபத்தின் முகட்டில் இருந்த வெள்ளித் தகடுகளை பாவே அகற்றியபோது சுராஜ்மால்சினம்கொண்டார். எவ்வாறெனினும் தமது நாட்டின் எல்லைக்கப்பால் மராத்தியருக்குச் சேவைசெய்ய சுராஜ்மால் ஒருபோதும் இசைந்ததில்லையென்றும், டில்லியைத் தமது பொறுப்பில் ஒப்படைக்கவேண்டுமென்றும், அவர் வற்புறுத்தியதாகவும் வரலாற்றுப் பேரறிஞரான சர் தேசாய் (Sardesai) கூறியுள்ளார். 'வரலாற்று ஆராய்ச்சியை வைத்துப் பார்க்கும்போது, கூறப்படும் பிற காரணங்களெல்லாம் பொருத்தமற்றவையாக, உண்மைக்குப் புறம்பானவையாக இருக்கின்றன

என்று அவர் எழுதியுள்ளார். எனவே, பூசலுக்கான காரணம் தீவிர மானதாகத் தெரிகின்றது. பேரரசரிடமும், அப்தாலிக்கு எதிராக வும் கடைப்பிடிக்கவேண்டிய கொள்கைப் பற்றிய சிக்கலே பிள விற்குக் காரணம் எனத் தெரிகிறது.

ஆகஸ்ட் முதல் அக்டோபர் வரையில் தமது ஓர் இலட்சம் வீரர்களுடன் பாவே டில்லியிலேயே தங்கினர். அந்நகரத்திலும் அதைச் சுற்றியுள்ள பகுதிகளிலும் கிடைத்த உணவுப் பொருள்க ளெல்லாம் தீர்ந்துவிட்டன. சிறிது காலத்திற்குள் உணவுப் பொருள்கள், பணம், கால்நடைத் தீவனம் ஆகியவை கிடைக்காத தால் பாவே மிகுந்த தொல்லைக்குள்ளானர். பூனுவிலிருந்து பீஷ்வா நிதி உதவியேதும் அனுப்பவில்லை. அதனல் மராத்தியப் படை யினரின் கட்டுத் தளரத் தொடங்கியது. ஆரம்பத்திலிருந்தே பூசலை அமைதியாகத் தீர்த்துக்கொள்வதற்கான பேச்சுவார்த்தைகள் தொடர்ந்து நடைபெற்று வந்தன. உணவுப் பொருள்களும் பணமும் போதிய அளவு கிடைக்காததால் அப்தாலியும் அல்லலுற் ருர். அதனல் மதிப்புடன்கூடிய சமாதானம் செய்துகொள்ள அவரும் விரும்பாமலில்லை. ஆனல் மராத்தியரை சாம்பல் ஆற்றிற்கு அப்பால் விரட்டும்வரை சமாதான ஏற்பாடு எதையும் நஜீப் உத்தௌலா ஏற்க மறுத்ததன் விளைவாக, அப்தாலிக்கும் பாவேவிற்கும் இடையேயான பேச்சு அறுந்தது. விஸ்வாஸ் ராவை பாவே பேரரசராகச் செய்தார் என்றும், நாணயங்களைத் தமது பெயரி லேயே வெளியிட்டார் என்றும், இந்தியா முழுவதிலும் மராத்திய ஆதிக்கத்தை ஏற்படுத்த முனைந்துள்ளார் என்றும் ஒரு வதந்தியை நஜீப் பரவவிட்டார். அப்தாலியும், பிற முஸல்மான்களும் இத்தகைய பிரசாரத்தினல் ஏமாந்திருக்கலாம். அதனல் இறுதிவரையில் மராத்தியருடன் போரிடத் தங்களை ஆயத்தம் செய்துகொண்டனர்.

## பானிப்பட்டில் பகைப் படைகள்

அப்தாலியை வடக்கில் விரட்டி, டில்லிமீதான நெருக்கத்தைத் தளர்த்துவதற்கென குஞ்ச்புராவைக் கைப்பற்றுவதற்காக 1760ஆம் ஆண்டு, அக்டோபர் மாதம் ஏழாம் தேதி பாவே டில்லியி லிருந்து புறப்பட்டார். அதற்கு முன்னமே தோவாப் பகுதியில் புகுந்து, ருஹில்கண்டை அழிக்குமாறு கோவிந்த் பந்த் பந்தேலா விற்கு ஆணையிட்டார். 17ஆம் தேதியன்று குஞ்ச்புராவைக் கைப் பற்றி, அதன் காவற்படைத் தலைவரான நஜபத்கானையும் (Najabat) சிறைப்பிடித்தார். நஜபத்கான் போரில் பெற்ற புண்களுக்குப்

பலியானார். அவரது முக்கிய சகாக்களும் கொல்லப்பட்டனர். குஞ்ச்புராவில் கிடைத்த பணமும் உணவுப் பொருள்களும் சிறிது காலத்திற்கு மராத்தியரின் துயர் துடைக்க உதவின. குஞ்ச்புராவின் வீழ்ச்சியைக் கேள்வியுற்ற அப்தாலி அதிர்ச்சியுற்றார். உடனடியாகத் தாக்குதல் நடத்தத் தீர்மானித்து, டில்லிக்கு வடக்கே இருபது கல் தொலைவிலுள்ள பாக்பட்டிற்கு (Baghpat) அருகில் யமுனையைக் கடந்தார். அக்டோபர் 25ஆம் தேதி அவ்வாற்றின் வலக்கரை ஓரமாகச் சென்று சோனிபட்டை (Sonipat) அடைந்தார். அன்னியப் படையெடுப்பாளரின் இத்தகைய அரிய சாதனையைப்பற்றி அறிந்ததும், பாவே வடக்கிலிருந்து திரும்பி, அப்தாலியின் முன்னணிப்படை நிலைகொண்டிருந்த இடத்திற்கு ஐந்து மைல் தூரத்திலுள்ள பானிப் பட்டை வந்தடைந்தார். அக்டோபர் மாத இறுதியில் இரு படைகளும் ஒன்றை ஒன்று காணும் நிலையில் இருந்தன; சிறுசிறு மோதல்களும் ஏற்பட்டன. பகைவர் போருக்கு ஆயத்தமாக இருப்பதைக் கண்ட பாவே அவர்களைத் திடீரென்று தாக்கவேண்டுமென்ற தமது முதலாவதான திட்டத்தைக் கைவிட்டார். இப்ரஹீம் கார்டியின் யோசனைப்படி போரிடாது காப்பு நிலையில் இருப்பதற்கும், அப்தாலி படையெடுப்பாளர் பட்டினியால் வலிமை இழக்கும் வரையில் அவர்களைத் தாக்காது இருப்பதற்கும் பானிப்பட்டு நகருக்குத் தெற்கே அமைந்த திறந்தவெளியில் அரண் அமைத்துக் கொண்டு நிலைத்திருந்தார். பெண்கள் உள்பட போரிடாத ஏராளமான ஆட்கள் அவருக்குப் பெருஞ் சுமையாக இருந்ததால், அவர் பகைப் படை அணிகளுக்குள் தீரமாகப் புகுந்து போரிடுவது அநேகமாக முடியாத ஒன்றாகத் தோன்றியது. கிழக்கு மேற்காக ஆறு மைல் நீளம் பரவியிருந்த மராத்தியரது பாசறை, வடக்குத் தெற்காக இரண்டு மைல் செறிவு கொண்டதாக அமைந்தது. 25 கெஜ அகலமும் 6 கெஜ ஆழமும் கொண்ட பெரிய குழி அரண் ஒன்று பாசறையைச் சுற்றி அமைந்திருந்தது. அதனை மேலும் வலிமை செய்யும் வகையில், பாரமான பீரங்கிகள் பொருத்தப்பெற்ற மண்சுவரும் எழுப்பப்பட்டிருந்தது. அதற்கு மூன்று மைல் தெற்கே சோனிபட்டை பின்னணியாகக் கொண்டு, அப்தாலியின் பாசறை அமைந்திருந்தது. குழி அரண்களாலும், வெட்டிய மரங்களைக் கொண்டு கட்டப்பெற்ற கோப்பு அரண்களாலும் (Abatis) அது வலிமையுற்று விளங்கியது. பானிப்பட்டை அடைந்த சில நாட்கள் பாவே உவகையார்ந்த எழுச்சியுடனிருந்தார். குஹில் கண்டைத் தாக்கிச் சூறையிட்டுப் பணமும் பொருளும் அனுப்புமாறு கோவிந்த் பந்த் பந்தேலாவிற்குக் கட்டளையிட்டார். ஆனால், யமுனைக்கு அருகில் தமது பாசறையை அப்தாலி நகர்த்திச் சென்றவுடன் நிலைமை தலைகீழாக மாறியது. அவ்வாறு செய்ததால், அவருக்கு ஏராளமாக நீர் கிடைத்ததோடு, தோவாப் பகுதியுடன்

எளிதாகத் தொடர்புகொள்வதற்கும், நஜீபின் ஆதிக்கத்திலிருந்த அப் பகுதியிலிருந்து இடையருது தானியங்கள், கால்நடைத் தீனி ஆகியவற்றைப் பெறுவதற்கும் வாய்ப்பு ஏற்பட்டது, மேலும், மராத்திய பாசறையைச் சுற்றிலும் வலிமை மிக்க காவற்படைகளை அப்தாலி நிறுத்தி வைத்தார். அதன் மூலமாக தோவாப், டில்லி, ராஜபுதனம் ஆகியவற்றுடன் மராத்தியர் தொடர்புகொள்ள முடியாதவாறு செய்ததுடன், அப் பகுதிகளிலிருந்து பொருள்கள் வருவதையும் தடைசெய்யுமாறு உத்தரவிட்டார். அப்போதும் வடக்கே இருந்த பகுதிகளுடன் மராத்தியர் தொடர்புகொள்ள வழியிருந்தது. ஆனால், விரைவிலேயே குஞ்ச்புராவை அப்தாலி கைப்பற்றியதால், மராத்தியர் பஞ்சாபுடன் கொண்ட தொடர்பும் அறுந்தது. இத்தகைய நிலை தோன்றியதன் விளைவாக மராத்தியப் பாசறையில் இருந்தோர் பெருந் துன்பத்திற்குள்ளாயினர். எப் பகுதியிலிருந்தும் வேண்டிய பொருள்கள் பாவேவிற்குக் கிடைக்க வாய்ப்பில்லை. இரண்டு மாத காலத்திற்குத் தக்கணத்திலிருந்து செய்தி ஏதும் பானிப்பட்டை அடையவில்லை.

பெருந் துன்பம் வந்தபோதும் பாவே மனம் தளரவில்லை. 1760ஆம் ஆண்டு, நவம்பவர் மாதம் முதல் தேதியிலிருந்து 1761ஆம் ஆண்டு, ஜனவரி மாதம் 14ஆம் தேதி வரையில் பகைவருடன் பல கைகலப்புகள் நடந்தன. ஆனால், அவற்றினுல் முடிந்த விளைவேதும் தோற்றவில்லை. நவம்பர் மாதம் 19ஆம் தேதியன்று இப்ரஹிம் கார்டியின் சகோதரரான ஃபடே கான் (Fateh Khan) அப்தாலியின் பாசறைமீது திடீர் இரவுத் தாக்குதல் நடத்தினர். ஆனால், அவர் தோற்றுப் பின்வாங்கினர். நவம்பர் மாதம் 2?ஆம் தேதியில் அப்தாலியின் வஸீரை ஜங்கோஜி சிந்தியா தாக்கினர்; அப்தாலியின் பாசறை வரை அவரைத் துரத்திச் சென்றார். ஆயினும், பீஷ்வா படைகளின் சரியான ஆதரவு அவருக்குக் கிடைக்காததால் அவர் திரும்பவேண்டியதாயிற்று. டிசம்பர் மாதம் ஏழாம் நாளில் மராத்தியப் படை ஒன்றை நஜீப் தாக்கினர். அத்தாக்குதலில் முந்நூற்றுக்கும் மேற்பட்ட ருஹிலர்கள் உயிரிழந்தனர். காஸியாபாத்திற்குத் தென்கிழக்கே பத்துக் கல் தொலைவிலிருந்த ஜலாலாபாத்தில் வேண்டிய பொருள்களைச் சேகரித்துக்கொண்டிருந்த கோவிந்த் பந்த் பந்தேலாவை நாஜிபின் ருஹிலப் படையினர் டிசம்பர் மாதம் 17ஆம் தேதியன்று திடீரெனத் தாக்கினர்; கோவிந்த் பந்தையும் கொன்றனர். அப்போது மராத்தியப் படை பட்டினியால் வாடியது. தானியங்களை வாங்குவதற்காகத் தங்க, வெள்ளி நகைகளை உருக்கி நாணயங்களாகச் செய்வதற்கென பாவே, பாசறையில் நாணயச் சாலைகளை அமைத்தார். அப்படியிருந்தும் தானியங்களின் விலை மிகவும் உயர்ந்துவிட்ட நிலையில் இரண்டு வாரங்களுக்கு மேல்

சமாளிக்க முடியவில்லை. நம்பிக்கை இழந்த நிலையிலிருந்த அவர் அப்தாலியுடன் சமாதானம் செய்துகொள்ள இறுதியாக முயன்றார். பெருமளவில் இழப்பீட்டுப் பணம் அளிக்கவும் முன் வந்தார். ஆனால், நஜீபின் ஆலோசனைப்படி அப்தாலி அந்த யோசனையைப் புறக்கணித்தார்.

## பானிப்பட்டுச் சண்டை: 1761ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 14ஆம் நாள்

கூடிய விரைவில் பகைவருடன் இறுதிச் சண்டை இடுவதில் பாவே மிகுந்த ஆர்வங்கொண்டார். ஆனால், மராத்தியரைத் தூண்டிவிட அப்தாலி அவசரப்படவில்லை. படைசார்ந்த நடவடிக்கையைத் தம்மிடம் விட்டுவிடுமாறும், ஆனால் அரசியல் செய்திகளைப் பற்றித் தம்மைத் தொந்தரவு செய்யவேண்டாமென்றும் பொறுமை இழந்திருந்த கூட்டாளிகளிடம் அப்தாலி கூறினார். மராத்தியர் உண்ண உணவின்றித் தவித்தனர். அவர்களுடைய தலைவர்கள் பாவேயை அணுகித் தாமதம் ஏதுமின்றிப் போரில் இறங்குமாறு வேண்டினர். 'இரண்டு நாட்களாக நாங்கள் எதுவும் சாப்பிட வில்லை; இத்தகைய அவலநிலையில் எங்களை அழியவிடாதீர்கள்; பகைவர்மீது தீவிரத் தாக்குதல் செய்ய அனுமதியுங்கள்; நம் தலைவிதி எப்படியோ அப்படியே நடக்கும்' என அவர்கள் மொழிந்தனர். பாவேயும் இறுதிப் போரில் இறங்குவதெனத் தீர்மானித்தார். இப்ரஹிம் கார்டியின் யோசனைப்படி மராத்தியப் படை முன்னேறுவது என்பது முடிவாகியது. அதன்படி மராத்தியப் படை முழுவதும் சதுர அணிவகுப்பு முறையில் மெதுவாக முன்னேற வேண்டும். அதன் நான்கு பக்கங்களையும் கன பீரங்கிகள் பாது காக்க வேண்டும். பெண்களும், போரில் கலந்துகொள்ளாத வர்களும் நடுவில் இருக்கவேண்டும். இங்ஙனம் இப்ரஹிம் கானுடைய பீரங்கிப் படை பாதுகாப்பு அளிக்க, மராத்தியப் பாசறையே மொத்தமாக நகர்வதற்கான திட்டம் உருவாகியது. இத்தகைய அணிவகுப்பில் ஜனவரி மாதம் 14ஆம் தேதி அதி காலையில் தாக்குதல் நடத்த மராத்தியப் படையினர் முன்னேறினர். அப்போதும் போரைத் தவிர்ப்பதற்கான இறுதி முயற்சி ஒன்றில் பாவே ஈடுபட்டார். அவர் ஷுஜா உத்தௌலா விடம் பணிபுரிந்த மராத்திய அதிகாரியான காஸிராஜ் என்பவருக்குக் குறிப்பொன்று அனுப்பினார். 'கோப்பை விளிம்புவரை நிறைந்து விட்டது. மேலும், அதில் ஒரு துளியைக்கூட அது கொள்ளாது. பூசலைச் சரிசெய்வதுபற்றிய இறுதியான பதிலைத்தயவுசெய்து எனக்கு அனுப்புங்கள்' என எழுதியிருந்தார். பதினான்காம் தேதி காலைதான் அக்குறிப்பு ஷாவின் கைக்கு வந்தது. அவர் அதைப்

பற்றிச் சிந்திக்க ஒரு நாள் வேண்டுமென்று விரும்பினர். ஆயின், மராத்தியப் படைகள் ஏற்கெனவே களத்திற்கு வந்துவிட்டதால் சமாதான முயற்சி காலங்கடந்ததாகிவிட்டது.

45,000 எண்ணிக்கைகொண்ட மராத்தியப் படை, போரிடாத ஏராளமானவரை நடுவிலே வைத்து மெதுவாக முன்னேறியது. ஆனால், ஒரேமொத்தமாக முன்னேறிச் செல்லவேண்டுமென்ற அவர்களது முதலாவது திட்டம் நிறைவேறவில்லை. அதனால் பாவே தமது படையின் அணிவகுப்பைத் திருத்தி நீண்ட கோடு போன்ற வடிவில் அமைத்தார். அவரும் விஸ்வேஸ்ராவும் மையத்தில் நிலை கொண்டனர். பெருமிதமான போர் யானைகளின்மீது இவர்ந்து வந்தனர். அவர்களுக்கு முன்னால் பாக்வா ஜண்டா (Bhagwa Jhanda) பறந்தது. பாவேவிற்கு இடப்புறத்தில் தமது முறையான பயிற்சிபெற்ற படைப்பிரிவுகளுடன் இப்ரஹிம் கார்தி நின்றிருந்தார். வலப்புறத்தில் அவரை அடுத்து இருந்தவர் தமாஜி செய்க்வார். பாவேயின் வலப்புறத்தில் மல்ஹர் ராவ் ஹோல்காரும் ஜங்கோஜி சிந்தியாவும் நிலைகொண்டனர். சேமப் படை எதையும் பாவே வைத்துக்கொள்ளவில்லை. அப்தாலியின் படையில் 60,000 வீரர்கள் இருந்தனர். அவர்களில் பாதிப்பேர் அன்னியர்கள். சிறிய அளவிலிருந்த காலாட் படையினைத் தவிர அவர்கள் பெருமளவில் குதிரை வீரர்களே. அத்தகைய பகைப் படையினைப் பிளக்கவேண்டுமென்பதற்காக மராத்தியர் தீவிரமாகத் தாக்கினர். பகைப் படையின் நடுப் பகுதிக்கு அப்தாலியின் வஸீரான ஷா வாலிகான் தலைமை வகித்தார். அவரிடம் தெரிந்தெடுத்த துரானியக் குதிரை வீரர்கள் இருந்தனர். ஷா பர்சந்த் கானும் (Shah Parsand Khan) நஜீப் உத் தௌலாவும் இடப்பக்கத்தில் நிலைகொண்டு ஜங்கோஜி சிந்தியாவிற்கும், மல்ஹர் ராவ் ஹோல்காருக்கும் எதிரில் நின்றனர். அப்தாலியின் வஸீருக்கும் நஜீப் உத் தௌலாவிற்கும் நடுவே ஷுஜா உத் தௌலா நிலைகொண்டார். வலப் பக்கத்தில் ருஹிலா படையுடன் பர்குர்தார் கானும் (Barkhurdar Khan) முகலாயப் படைப பிரிவுடன் அமீர் பெக்கும் (Amir Beg) இருந்தனர். தமது படையின் பின்னே நிலைகொண்டிருந்த சேமப் படைக்கு அருகே அப்தாலி ஊன்றி நின்றார். அங்கிருந்துகொண்டு களத்தில் பல பகுதிகளில் நடைபெற்ற போரின் நிலையை அறிந்துகொள்ள வசதியாக இருந்தது.

இப்ரஹிம் கார்தியின் கனமான பீரங்கிகளிலிருந்து ஏவுகணைகளையும் குண்டுகளையும் வீசியதோடு காலை ஒன்பது மணிக்கு மராத்தியத் தாக்குதல் துவங்கியது. ஹபீஸ் ரஷ்மத் கான், தந்தே கான், அஹமத் கான் பங்காஷ் ஆகியோரை கார்தி முதலில் தாக்கினர்.

ருஹிலர்கள் தீரத்துடன் போர்புரிந்தனர். ஆனால், அவர்களில் எட்டு அல்லது ஒன்பதாயிரம் வீரர்கள் இப்ரஹிமின் பீரங்கிகளுக்குப் பலியாயினர் அல்லது படுகாயமுற்றனர். அவர்கள் தாக்குதலைத் தாளாது பின்வாங்கினர். மூன்று மணி நேரத்திற்குக் கார்தியின் படையினரும் ருஹிலர்களும் கடுமையாகப் போரிட்டனர். அதன் பிறகு நடைபெற்ற நேருக்கு நேரான கைகலப்பில் அப்தாலி அனுப்பிய புதிய ஆப்கானியத் துருப்புகளும் கலந்துகொண்டு, கார்தியின் படைப்பிரிவுகளை அநேகமாக அழித்தனர். இத்தகைய போராட்டம் நடந்துகொண்டிருந்த அதே சமயத்தில் அப்தாலியின் வஸீர் தலைமைவகித்த நடுப் படைப்பிரிவினை மராத்திய அரச காவற்படையான குதிரைப்படை முழுவதும் கொண்டு பாவே தாக்கினர். ஆப்கானியர் கடுமையாக எதிர்த்துப் போரிட்ட போதிலும் அவர்தம் படையில் மூன்று அணிகளை மராத்தியர் ஊடுருவிச் சென்றனர். ஷா வாலிகான் பீதியடைந்தார். அவர் தமது குதிரைமீதிருந்து இறங்கி சிதறி ஓடிய படையினரை ஒன்று திரட்டும் வீணை முயற்சியிலீடுபட்டார். அப்போது, 'நண்பர்களே, நமது நாடு வெகு தொலைவில் உள்ளது. எங்கே ஓடுகிறீர்கள்'? என அவர் மொழிந்தார். ஆனால், அவர் பேச்சை யாரும் கேட்கவில்லை, அதனால் அப் போர் அப்தாலிக்கு பாதகமாக அமையும் போல் தோன்றியது. அவரது வலப்பக்கப் படை திரும்பி ஓடியது. மத்தியப்படை முறியடிக்கப்பெற்றது. இடப்பக்கப் படை மட்டும் நிலைகுலையாது நின்றது மராத்தியத் தாக்குதலை நம்பிக்கை இழந்த நிலையில் நஜீப் மூர்க்கமாக எதிர்த்துப் போராடியதால்தான் இறுதியில் நிலைமை சீரடைந்தது. ஜங்கோஜி சிந்தியாவையும் மல்ஹர் ராவ் ஹோல்காரையும் எதிர்நோக்கி நின்ற ருஹிலாப் படை எண்ணிக்கையில் மராத்தியப் படையைக் காட்டிலும் பெரிது. ஆயின், நஜீபிற்கும் மல்ஹர் ராவிற்குமிடையே இருந்த இரகசிய ஒப்பந்தம் ஒன்றிற்கிணங்க மல்ஹர் ராவ் ஜங்கோஜியைத் தனியாகத் தவிக்கவிட்டு, போர்க்களத்திலிருந்து ஓடினர். இச்சமயத்தில் தமது புதுச் சேமப் படைகளை அப்தாலி போரில் புகுத்தினர். போர்க்களத்திலிருந்து பின்னணிக்கு ஓடிய வீரர்களை முன்னால் கொண்டு வருவதற்காக ராணுவக் காவல்படையினரை அனுப்பினர். தமது வலப்புறத்தைக் காப்பதற்கென்று 4,000 வீரர்களை நிறுத்தி வஸீரான ஷா வாலிகானின் கையை பலப்படுத்துவதற்காக 10,000 ஆதாரப் படைவீரர்களை அனுப்பிவைத்தார். கையில் வாளேந்திப் பகைவரைத் தாக்கவேண்டுமென்று அவர்களுக்கு அறிவுறுத்தினர். அதே சமயத்தில் மராத்திய நடு அணியைப் பக்கவாட்டில் தாக்குமாறு ஷா பர்சந்த் கானுக்கும் நஜீப் உத் தௌலாவிற்கும் ஆணையிட்டார். ஒட்டகங்களின்மேல் பொருத்தப்பட்ட ஆப்கானிய சுழலச்சுத் துப்பாக்கிகள் சுடத் தொடங்கின. பகைவருடையு

ஒட்டகங்கள் போர்க்களத்தில் மேலும் கீழுமாக ஓடின. அவற்றின் மீது இருந்த சுழலச்சுத் துப்பாக்கிகள் நெருக்கமாக இருந்த மராத்தியப் படை அணிகளின்மீது நெருப்பை வாரிக் கொட்டின. மராத்தியர் பசியுடன் சோர்ந்து இருந்த சமயத்தில் அவர்களுடைய படையணிகளின் எல்லாத் திசைகளிலும் ஆப்கானியப் புதுப் படைகள் பல ஒரே சமயத்தில் எதிர்த்தாக்குதல் செய்ததால் மராத்தியர் நிலை குலைந்தனர். அப்போதும் அவர்கள் அங்குலத்திற்கு அங்குலம் கடுமையாகப் போரிட்டனர். இரண்டு மணி நேரத்திற்குக் கோரமான சண்டை நடைபெற்றது. அப்போது எதையும் பார்க்க முடியவில்லை. படைக்கலன்கள் மோதி உடைவதால் எழுந்த ஒலியும், பகைப் படைகள் எழுப்பிய கூக்குரல் ஒலியும் தவிர வேறெதையும் கேட்கவும் முடியவில்லை. ஏறக்குறைய பிற்பகல் 2–15 மணியளவில் எதிர்பாராத குண்டு ஒன்று பட்டு விஸ்வேஸ் ராவ் இறந்தார். அப்போது பாவே நம்பிக்கை இழந்த நிலையில் பகைவரை வெறியோடு தாக்கி, மேலும் ஒரு மணி நேரம் போரிட்டு, ஏற்பட்ட குழப்பத்தில் கொல்லப்பட்டார். அதனுடன் மராத்திய எதிர்த்தாக்குதல் திடீரென்று வீழ்ச்சியுற்றது. 'மந்திர சக்தியால் கட்டுண்டவர்களைப்போல மராத்தியப் படையினர் அனைவரும் பிணக் குவியல்கள் நிறைந்த போர்க்களத்தைவிட்டு, முதுகிட்டு வேகமாக ஓடினர்' எனக் காஸிராஜ் எழுதுகிறார். அவர்களைப் பாசறை வரையில் ஆப்கானியர் துரத்திச்சென்று, சிறிது இடமும் கொடுக்காது தாக்கினர். களத்திலிருந்து தப்பியோடியவர்களையெல்லாம் கண்ட இடத்தில் ஈவிரக்கமின்றி வெட்டிவீழ்த்தினர். அன்று இரவும் மறு நாள் முழுதும் படுகொலை தொடர்ந்து நடைபெற்றது. மராத்தியப் பாசறை முழுதும் சூறையாடப்பெற்றது. பெண்களும் குழந்தைகளும் அடிமைகளாயினர்.

ஜனவரி மாதம் பதினைந்தாம் நாளன்று பகலவன் உதித்தபோது தான் பானிப்பட்டுப் போரின் முக்கியத்துவம் உலகிற்குத் தெரிய வந்தது. 'மணிமலர் தூவிய மணற்பரப்புப் போலப் போர்க்களம் காட்சியளித்தது. கண்ணுக்கெட்டிய தூரம் வரை மனித உடல்கள் தூங்குவது போல அல்லது மந்திரசாலத்தால் ஒழுங்காக வகை செய்யப்பெற்றவைபோல ஒன்றன் காலடியில் மற்றது வீழ்ந்து கிடந்த சவங்களைத்தான் காண முடிந்தது' என சியார் (Siyar) எழுதினார். ஆயிரம் முதல் ஐயாயிரம் வரையில் எண்ணிக்கை கொண்ட முப்பத்திரண்டு பிணக் குவியல்களை எண்ணியதில் மொத்தம் 28,000 பிணங்கள் இருந்தன. ஏறக்குறைய இறந்தவரின் எண்ணிக்கைக்குச் சமமானவர் படுகுழிகளிலும் பாசறையைச் சுற்றியுள்ள பகுதிகளிலும் சிதறிக்கிடந்தனர். பானிப்பட்டு நகரத்தில் ஒளிந்துகொண்டிருந்த சுமார் 9,000 மராத்தியப் படையினர் ஈவிரக்கமின்றிக் கொல்லப்பட்டனர். போரின் கொடுமையைக்

கண்ணால் கண்ட மராத்தியரான காஸிராஜ் அப்தாலியின் ஆப்கானியருடைய வெறிச்செயல்களைப் பின்வருமாறு விளக்கி யுள்ளார்: ஒவ்வொரு துரானிய வீரனும் நூறு அல்லது இருநூறு போர்க் கைதிகளைக் கூடாரங்களுக்கு வெளியே கொண்டுவந்து வெட்டி வீழ்த்தினர். அவ்வாறு செய்யும்போது, 'எங்கள் நாட்டி லிருந்து நாங்கள் கிளம்பியபோது இந்தப் புனிதமானப் போரில் வெற்றிபெற்ற பின்னர் தங்களுக்காக எத்தனை முடியுமோ அத்தனை 'கஃபீர்களை' (Kafir-) கொன்று, அச்செயலினால் (புறச் சமயத்தவரைக் கொல்லுதல்) வரும் சமய நன்மையைத் தங்களுக்கு அளிக்குமாறு எங்கள் தாய் தந்தையர், உடன்பிறந்த சகோதரி, மனைவி ஆகியோர் கூறியதாகக்' கூக்குரலிட்டுக் கத்தினர். இவ்விதம் ஆயிரக்கணக் கான வீரர்களும் மற்றக் கைதிகளும் படுகொலை செய்யப்பெற்றனர். ஷாவின் பாசறையில் அவருடையதும், அவரைச் சார்ந்த செல்வ ருடையதுமான பகுதியைத் தவிர மற்றக் கூடாரங்களுக்கு வெளியே துண்டித்த தலைகள் குவிந்திருந்தன. மராத்திய மக்களுக்குள்ள தீர்ப்பு நாள் என்றே அதனைக் குறிப்பிடலாம். போர்க்களத்தில் வீழ்ந்த முக்கியமானவர்களில் பீஷ்வாவின் மூத்த மகனான விஸ்வேஸ் ராவ், பாவே, ஜெஸ்வந்தராவ் பவார், துகோஜி சிந்தியா போன்றவர்கள் குறிப்பிடத்தகுந்தவர்கள். இப்ராஹிம் கார்டி சிறைப்பட்டார். ஜங்கோஜி சிந்தியாவும் படுகாயமடைந்தார். அவர் சில நாட்களுக் குப்பின் கொல்லப்பட்டார். அவரைப் போர்க்களத்தில் தனியாக ஓடிய மல்ஹர் ராவ் ஹோல்கார் பத்திரமாகப் பூனாவை அடைந்தார். அடிபட்டு ஆயுள் முழுவதும் முடமானபோதிலும் களத்திலிருந்து ஓடியதால் மகதாஜி சிந்தியா உயிர் தப்பினார். ஃபரூர் நகரைச் சார்ந்த பலுச்சிகள் (Baluchis) அந்தாஜி மங்கேஷ்வரைக் (Antaji-Mankeshwar) கொன்றனர். சுருங்கக் கூறுமிடத்து, 75,000 மராத்தியர் போருக்குப் பலியாயினர் என்பது திண்ணம். 'குடும்பத்தில் ஒருவரை இழக்காத வீடே மகாராஷ்டிரத்தில் இல்லை; பல குடும்பங்கள் குடும்பத் தலைவனையே இழந்து தவித்தன; ஒரே அடியில் ஒரு தலை முறை சார்ந்த தலைவர்கள் அனைவரும் அழிந்துபட்டனர். (சர்க்கார் எழுதிய "Fall of the Mughal Empire', Vol. II, பக். 257) ஏறக் குறைய 25,000 மராத்தியர் தப்பிப் பிழைத்தனர். அவர்களில் ஷுஜா உத் தௌலாவின் பாசறையில் அடைக்கலம் புகுந்தவர்களும் அடங்குவர். அவர்களுக்கு ஷுஜா உத் தௌலா பெருந்தன்மை யோடு பாதுகாப்பு அளித்து, தமது சொந்தப் பணத்தைக் கொண்டு அவர்களது பயணத்திற்கு ஏற்பாடு செய்து, சுராஜ் மால் ஜாத்தின் நாட்டிற்குப் பத்திரமாக அழைத்துச் செல்லுமாறு செய்தார். சுராஜ் மாலும்ஹோல்காரும் சிந்தியாவும் தமக்கிழைத்த அநீதி களை மறந்து, எண்ணிறந்த மராத்திய அகதிகளுக்கு உணவு, உடை

உறைவிடம், மருத்துவ உதவி ஆகியவற்றைத் தம்மால் இயன்ற வரை அளித்துக் காத்தார்.

## மராத்தியத் தோல்வியின் விளைவுகள்

பானிப்பட்டில் மராத்தியர் அடைந்த தோல்வி குறித்து மாறுபட்ட கருத்துகளை வரலாற்று அறிஞர் கொண்டுள்ளனர். 75,000 மராத்தியரை இழந்ததுதான் பெரும் பேரிடர் என்றும், தங்களது ஆக்க நலனுக்கு எவ்விதப் பெருங் கேடும் நேரவில்லையென்றும் ஏறக்குறைய ஒரே முகமான கருத்தினைத் தற்கால மராத்திய அறிஞர்கள் கொண்டுள்ளனர். வரலாற்றுப் பேரறிஞரான சர்தேசாய் பின்வருமாறு எழுதினர்: போர்க்களத்தில் மராத்தியருக்குப் பெருத்த ஆட்சேபம் ஏற்பட்டபோதிலும் அத் துன்ப நிகழ்ச்சி வேறெதையும் தீர்மானிக்கவில்லை உண்மையில் அதன் தொடர்விளைவாக முதன்மையான மராத்திய இனத்தில் நானு பட்நிஸ்,:மகதாஜி சிந்தியா என்னும் முக்கியத்துவம் வாய்ந்த இருவர் முன்னணியில் நின்றனர். அழிவார்ந்த அந்நாளில் வியக்கத்தக்க வகையில் உயிர்பிழைத்த அவர்கள் இழந்த மராத்தியப் பெருமையை மீட்டனர். பானிப்பட்டுத் துயர நிகழ்ச்சியானது உயிர்களை அழிக்க வரும் இயற்கைத் தண்டனைபோல வந்தது உண்மையெனினும், அது முடிவான அரசியல் விளைவுகளைத் தோற்றுவிக்கவில்லை. மராத்தியர் மதித்துப் போற்றிய ஆதிக்கக் கனவுகளைப் பானிப்பட்டுச் சண்டை குலைத்துவிட்டது எனக்கொள்வது சமகால ஆணவங்களில் பதிவாகியுள்ள நிலையினைத் தவருகப் புரிந்துகொண்டதாக அமையும் (New History of the Marathas, Vol. II, பக். 454) சிறப்புவாய்ந்த வரலாற்று அறிஞரான ஜாதுநாத் சர்க்கார் (Jadunath Sarkar) வேறு வகையான கருத்தைக் கொண்டுள்ளார். அவர் பின்வருமாறு குறிப்பிடுகின்ருர்: இத்தகைய (மராத்தியரின்) மட்டுமீறிய குறுகிய நாட்டுப்பற்றுச் சார்ந்த உரிமைக் கோரிக்கை எத்துணை அளவிற்கு ஆதாரமற்றது என்பதைக் காய்தல், உவத்தல் அற்ற இந்திய வரலாற்று ஆராய்ச்சி அறிவிக்கும். மராத்தியப் படை ஒன்று நாட்டைவிட்டு ஓடிய முகலாயப் பேரரசரை அவருடைய மூதாதையாரின் தலைநகருக்கு மீண்டுவந்து 1772ஆம் ஆண்டில் அரியணையில் அமர்த்தியது என்பதில் ஐயமில்லை. ஆயினும், அவர்கள் அரசர்களை ஆக்குவோர்களாக, முகலாயப் பேரரசின்மீது ஆதிக்கம் செலுத்துவோராக, பேரரசரின் அமைச்சர்களுக்கும் உயர் படைத்தலைவர்கட்கும் உற்ற உண்மையான தலைவர்களாகவும் வரவில்லை. அத்தகைய பெருமித நிலையை 1789ஆம் ஆண்டில் மகதாஜீ சிந்தியா ஒருவர்தாம் அடைந்தார். 1803ஆம் ஆண்டில்

ஆங்கிலேயரும் அந்நிலையெய்தினர் (Fall of Mughal Empire, Vol. II, பக். 260). முந்திய கருத்தே நேர்மையானது, சரியானதும் கூட. முதலாவதாகப் பானிப்பட்டுப் போர் முற்றிலும் முடிவானது. மராத்தியப் படைக்கும் அதன் தலைவர்களுக்கும் பெருத்த சேதம் விளைந்தது. களத்திற்குச் சென்ற இலட்சத்திற்கும் அதிகமானவர்களில் ஆயிரக் கணக்கானவரே மகாராஷ்டிரத்திற்கு மீண்டனர். அதிலும் நாட்டிற்கு ஏற்பட்ட பெருங் கேட்டினைப்பற்றிக் கூறுவதற்காக உடலும் மனமும் நொந்துதிரும்பினர். இறந்தவருடைய எண்ணிக்கை பற்றியோ அல்லது பாவே போன்ற முக்கியத் தலைவர்கள் என்ன ஆனார்கள் என்பது பற்றியோ ஆதாரப்பூர்வமான செய்திகளை ஏறக் குறைய மூன்று மாதங்கள் வரை பீஷ்வாவால் அறிந்துகொள்ள முடியாத அளவிற்கு மராத்தியருடைய படை வலிமை குன்றியது. இரண்டாவதாக வெற்றிக்குப்பின் அப்தாலி இந்தியாவைத் தமது சொந்த இடமாகக் கொள்ளவில்லையெனினும், 1754-60 காலப்பகுதியில் பஞ்சாப், முல்டான், டில்லி ஆகிய மாநிலங்கள் அடங்கிய வடமேற்கு இந்தியப் பகுதியில் ஊசலாடிக்கொண்டிருந்த முஸ்லீம்களின் ஆதிக்கம் உறுதிபெற்று முடிந்த உண்மையாயிற்று. மேலும், அதன் பிறகு மராத்தியர் பஞ்சாபை மீட்கவோ அல்லது இந்திய எல்லையைக் காக்கவோ எவ்வித முயற்சியும் எடுத்துக்கொள்ளவில்லை. சுருங்கக் கூறுமிடத்து, பானிப்பட்டில் பெற்ற தோல்வியின் விளைவாக நாடு முழுவதும் தங்களுடைய ஆதிக்கத்தை ஏற்படுத்தவேண்டுமென்ற மராத்தியருடைய கனவு, நல்ல வேளையாகக் கலைந்தது. எனலாம். பீஷ்வாவுடன் சமாதானம் செய்துகொள்ள விரும்பி, அதற்கிணங்க 1763ஆம் ஆண்டு, பிப்ரவரி மாதம் அப்தாலி செய்துகொண்ட சமாதான உடன்படிக்கையினால் 1761ஆம் ஆண்டு கிடைத்த முடிவில், எவ்வித மாற்றமும் ஏற்படவில்லை. டில்லி உள்ளிட்ட வடமேற்கு இந்தியாவில் பத்தானியரின் ஆதிக்கமும் குறையவில்லை. மூன்றாவதாக, மராத்தியரது தோல்வியினால் ஏற்பட்ட நடைமுறை ஒழுங்கு சார்ந்த விளைவு பிறவற்றைக் காட்டிலும் பெரியது. அதுவரையில் வெல்ல முடியாதவை எனக் கருதப்பெற்ற மராத்தியப் படைகள் ராணுவ ரீதியிலும், அரசியல் வகையிலும் சிறப்பிழந்தன. கடந்த நான்கு ஆண்டுகளில் மராத்தியர் எவ்வாறு தங்களையே காத்துக்கொள்ள முடியாது இருந்தனரோ, அதேபோன்று அவர்களைச் சார்ந்திருந்தோரையும் காக்கும் நிலையில் இல்லையென்பதைத் தெளிவாக நிரூபித்துவிட்டதால் 1761ஆம் ஆண்டிற்கும் பிறகு அவர்களுடைய நட்பை நாடுவது வீணானது என இந்திய நாட்டவர் எண்ணத் தொடங்கினர். நான்காவதாக சர் ஜாதுநாத் சர்க்கார் எழுதியதைப் போல, அநேகமாக எல்லாப் பெரும்படைத் தலைவர்களையும், பீஷ்வா பாலாஜி ராவ் உள்பட, பெரும் அரசியல் அறிஞர்களையும் பானிப்பட்டுப் போர்

நீக்கியது. அதனுல் மராத்தியர் வரலாற்றிலேயே மிகவும் இழிந்தவ ரெனப் பெயரெடுத்த ரகுநாத் தாதாவின் (Raghunath Dada) பழி சார்ந்த பேராசை நிறைவேறுவதற்கு எளிதான இடைஞ்சல் அற்ற வழி பிறந்தது மற்றக் கேடுகளைக் காலம் சரிப்படுத்துவிட முடியும். ஆனல், பானிப்பட்டுப் போரில் ஏற்பட்ட வீழ்ச்சியின் விளைவாக வந்த தீமைகளில் இதுவே (ரகுநாத்திற்கு வழிவிட்டதே) தீவிரமான தாகும். மராத்தியரின் வீழ்ச்சிக்குக் காரணமாய் இருந்த பீஷ்வாவின் குடும்பத்தில் தோன்றிய உட்பூசல்கள், பானிப்பட்டில் மராத்தியர் அடைந்த தோல்வியினுல் எழுந்த சூழ்நிலையில் எழுந்ததே. ஐந்தாவதாக, மராத்தியரின் படுதோல்வியும், அதன் விளைவாக அவர்களுடைய அரசியல் வேணவாக்களின் அழிவும் இந்தியாவில் வாழ்ந்த பிரிட்டிஷ் வணிகர் 'தங்களுடைய நயவஞ்சகம் நிறைந்த அயலவரின் பிடியிலிருந்து விடுபடவும், விரைவாக எழுச்சியுறவும்' வழி செய்தன. இந்தியாவில் ஆங்கிலேயருடைய ஆதிக்கப் பாதை திறந்துவிடப்பட்டது. போரில் ஈடுபட்டிருந்த இரு கட்சியினரான மராத்தியரும் முஸல்மான்களும் பண்டைக்காலத்து குருக்ஷேத்திரக் களத்தில் கடுமையான சண்டையில் மூழ்கி இருந்த சமயத்தில் இந்தியப் பேரரசுபற்றிய தமது கனவுகள் நிறைவேறுவதற்கான வாய்ப்பு இருப்பது பற்றி, அக்காலத்தில் பிரதம அமைச்சராகவிருந்த பொதுமக்கட் பெருமகனுரான சாத்தம் பிரபுவிடம் விளக்குவதற்காக இந்தியாவில் பிரிட்டிஷ் பேரரசின் முதல் அடிகோலியான கிளைவ் (Clive) இங்கிலாந்திற்குச் சென்றுகொண்டிருந்தார் என்பது குறிப்பிடத்தக்கது. இந்தியாவின்மீது ஆதிக்கம் செலுத்துவதற்கான போட்டியில் புதிய போட்டியாளர் ஒருவரை பானிப்பட்டுச் சண்டை மறைமுகமாகப் புகுத்தியது. இதுவே அந்த வரலாற்றுச் சிறப்புடைய நிகழ்ச்சியின் நேரடி விளைவு எனலாம். அதனுல் அது இந்திய வரலாற்றில் ஒரு திருப்பத்தைக் குறிக்கும் நிகழ்ச்சியாகின்றது (New History of the Marathas, Vol. II, பக். 455). பானிப்பட்டுச் சண்டைக்கு அடுத்த நாள் கார்னுக் (Carnac) என்பவரின் தலைமை யில் இருந்த பிரிட்டிஷ் படையினர் முகலாயப் பேரரசரான இரண்டாம் ஷா ஆலத்தை முறியடித்தனர். அவரும் பிரிட்டிஷா ருடைய பாதுகாப்பில் வாழ வேண்டியதாயிற்று. 1761ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 16ஆம் தேதியன்று பாண்டிச்சேரியைக் கைப்பற்றிய பிரிட்டிஷ்காரர்கள் இந்தியாவில் பிரஞ்சுக்காரர்களின் ஆதிக்கத்தை அழித்தனர். ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனியின் (English East India Company) அரசியல் ஆதிக்கம் அப்போது வளர ஆரம்பித்தது.

## மராத்தியர் தோல்விக்குக் காரணங்கள்

பானிப்பட்டில் மராத்தியர் தோற்றதற்குப் பல முக்கிய காரணங்கள் இருந்தன. முதலாவதாக, பாவேயின் படையைக் காட்டிலும் அப்தாலியின் படை எண்ணிக்கையில் பெரிதாக இருந்ததுடன் போரிடும் சக்தியிலும் அது மேம்பட்டிருந்தது. சமகால ஆவணங்களை அடிப்படையாகக் கொண்டு, அப்தாலியின் படையில் 60,000 பேர் இருந்தனர் என்று சர் ஜாதுநாத் சர்க்கார் மதிப்பிட்டுள்ளார். ஆனால், அதே சமயத்தில் 45,000 வீரர்கள்கூட மராத்தியப் படையில் இல்லை என்பது உறுதி. இரண்டாவதாக, தோவாபிலிருந்தும், டில்லியிலிருந்தும் போதுமான பொருள்களை ஆப்கானியர் பெறமுடிந்ததால் அவர்கள் தங்களுக்கும், தங்கள் குதிரைகளுக்கும், பொதி விலங்குகளுக்கும் தேவைக்கும் அதிகமான உணவுப்பொருள்களை வைத்திருந்தனர். அதற்கு மாறாக, மராத்தியர் இரண்டு மாதங்களுக்குப் பட்டினியால் வாடினர்; ஒட்டிய வயிறுடன் போரிட்டனர். அத்தகைய வறுமையில் வாடிய படையினால் நல்ல முறையில் பொருள்களைப் பெற்று, மன நிறைவோடு இருந்த பகைப் படையினை வெல்லமுடியாது. மூன்றாவதாக, அஹ்மத் ஷா அப்தாலியின் படைகள் நல்ல தேர்ச்சியும் கட்டுப்பாடும் கொண்டவை. பாசறையிலும் போர்க்களத்திலும் அவர் ஒழுங்கினைக் காத்தார். ஒழுங்கின்மையையும் கீழ்ப்படியாமையையும் அவர் கடுமையாகத் தண்டித்தார். அவர் கட்டுப்பாட்டை வலியுறுத்தி, நடைமுறையில் கொண்டுவந்ததுபற்றிய பல நிகழ்ச்சிகள் ஏடுகளில் இடம் பெற்றுள்ளன. அதனை விளக்குதற்கு ஒரு சான்றினை இங்கே குறிப்பிடலாம். 1760ஆம் ஆண்டில் ஷுஜா உத் தௌலாவின் பாசறையில் அப்தாலியின் படைவீரர்கள் சில முறைகேடான காரியங்களைச் செய்தனர் என்று காஸிராஜ் எழுதியுள்ளார். 'அதனைக் கேள்வியுற்ற ஷா, அவர்களில் 200 வீரர்களைப் பிடித்து அம்புகொண்டு அவர்கள் மூக்கில் துளையிட்டு, துளைகளின் வழியாக கயிறுகளை நுழைக்குமாறு செய்தார்; இந்த நிலையில் அவர்களை ஒட்டகங்கள்போல ஷுஜாவிடம் இட்டுச் செல்லுமாறு பணித்தார்; அவர்களைக் கொல்லுவதோ மன்னித்துவிடுவதோ ஷுஜாவின் விருப்பத்தைப் பொறுத்தது என அறிவித்தார்.' அதற்கு மாறாக மராத்திய வீரர்களும் அதிகாரிகளும் தனியுரிமைக் கோட்பாட்டினராகவும், கலகம் விளைவிப்பவராகவும் விளங்கினர். ஒழுக்க வரம்பற்ற மனம்போனபோக்கே சுதந்திரம் என்று கூறி, கட்டுப்பாட்டுடன்கூடிய தன்னடக்கமும் உண்மையான படை அல்லது கட்சியின் ஒருங்கமைந்த குழு வேலையும், அடிமை மனப்பான்மையைக் குறிக்கும் என்றும், உயிர்த் தத்துவத்தின் வேகத்தையே அழித்துவிடும் என்றும் ஓலமிடும் சட்ட ஒழுங்கற்ற கீழோரைப்

போல மராத்தியப் படையினர் கட்டுப்பாட்டை வெறுத்தனர். வெறும் படை வலிமை மட்டும் வெற்றிதேடித்தருவதில்லை. ஒழுங்கமைதியுடைய கட்டுப்பாடே வெற்றிதர வல்லது. நன்கு அமைந்ததும், நல்ல கட்டுப்பாடு கொண்டதுமான பகைப் படையிடம் கட்டுப்பாடற்ற மராத்தியப் படைகள் தோற்றதில் வியப்பொன்றுமில்லை. நான்காவதாக, இப்ரஹிம் கார்டி என்னும் ஆற்றல் மிகுந்த படைத் தலைவரின் கீழ் வகையான பீரங்கிப் படையொன்றை பாவே வைத்திருந்தபோதிலும் மொத்தமாகப் பார்க்கும்போது படைக் கலன்களிலும் பிற போர்த்தளவாடங்களிலும் அவரது படைத்தரம் குறைந்தே காணப்பட்டது. நகரும் ஒட்டகங்களின்மீதிருந்து சுடக் கூடிய நூற்றுக்கணக்கான சுழலச்சுத் துப்பாக்கிகள் அப்தாலியிடம் இருந்தன. அதே சமயத்தில் நேருக்குநேர் நின்று கைகலக்கும்போது கார்டியின் பீரங்கிகள் பயனற்றுப் போயின. ஆனால், சுழலச்சுத் துப்பாக்கிகள் பல திசைகளிலிருந்து தொடர்ந்து சுட்ட வண்ணமிருந்தன. மராத்தியப் படையினர் வேலும் வாளும் தாங்கிப் போரிட்டனர். அதற்கு மாறாக, அப்தாலியின் வீரர்கள் கையில் துப்பாக்கிகள் இருந்தன. ஐந்தாவதாக அச்சமே அறியாத போர்வீரராக பாவே விளங்கியபோதிலும், அக்காலத்தில் ஆசியாவிலேயே தலைசிறந்த தளபதியாக விளங்கிய அஹ்மத் ஷா அப்தாலிக்கு முன்னால் அவரது ஆற்றல் மங்கியது. பிறவித் தலைவரான அப்தாலியின் மேம்பட்ட ஆளுமை, போரிலும் வெல்திறத்திலும் அவரது மேதைமை ஆகியவை அவர்தம் வெற்றிக்கு முக்கிய காரணங்களாகும். பாவே, போரில் ஈடுபட்டவர்களை மேற்பார்வை செய்து, தமது படைப்பிரிவுகள் பலவற்றோடு தொடர்பு கொள்ளாது அவரே கண்மூடித்தனமாகக் களத்தில் புகுந்து சண்டையிட்டார். மேலும், விஸ்வேஸ் ராவ் இறந்த பிறகு சாதாரணப் படை வீரனைப் போல சாவின் பிடியில் சிக்கிப் போராடினார். ஆறாவதாக, டில்லியுடனான செய்திப் போக்குவரவு வழிகளை நன்கு பராமரிக்க பாவே தவறிவிட்டார். மடத்தனமாக அந்த நகரை வைத்துக் காப்பதற்காகச் சில ஆயிரம் வீரர்களையே விட்டிருந்தார். பகைவர் வந்து தம்மைச் சூழ்ந்துகொள்ள இடங்கொடுத்துவிட்டார். தோவாபிலிருந்த ருஹிலா நாட்டவருடன் ஷா அப்தாலி முழு அளவில் நட்புத் தொடர்பினைக் கொண்டிருந்த அதே சமயத்தில் மராத்தியப் படை துண்டிக்கப்பெற்றுத் தனியாக நின்றது. அதனோடு அவர்களது நாட்டிலிருந்து பல நூறு மைல்களுக்கப்பால் மராத்தியப் படை முற்றுகைக்குள்ளாகி இருந்தது. இவற்றிற்கெல்லாம் மேலாக பத்தாண்டுகளுக்குமேல் ராஜபுத்திரத் தலைவர்களையும் ஜாத் ராஜாவையும் உள்ளிட்ட வட இந்திய மக்களின் வாழ்க்கையில் பேராசையோடு தலையிடுவதன்மூலமாகவும் வேண்டுமென்றே வலுத்தாக்குதல் மூலமாகவும் இந்துக்கள், முஸல்மான்கள் ஆகியோருடைய பரிவினை

மராத்தியர் ஒருங்கே இழந்தனர். அதனுல், பாவே துன்பத்தில் துவண்டபோது அவருக்கு உதவிசெய்ய வட இந்திய மக்கள் சுண்டு விரலைக்கூட அசைக்கவில்லை. பொதுமக்களுடைய பரிவும் ஆதரவும் இரண்டாவது பாதுகாப்பணியாக அமைவதால், மக்கள் காட்டிய எதிர் உணர்ச்சியையும் பானிப்பட்டில் மராத்தியர் தோல்வியுற்றதற்குக் காரணமாகக் குறிப்பிடலாம்.

## பாலாஜி பாஜிராவின் மறைவு: அவர்தம் ஆளுமையும் குண இயல்பும்

இரண்டு மாதங்களுக்குமேலாகப் பானிப்பட்டிலிருந்து செய்தி ஒன்றும் வராததாலும், தமது படையின் கதியினை உணராததாலும், பீஷ்வா வட இந்தியாவிற்குச் செல்லத் திட்டமிட்டார். சிறிது காலமாகவே அவர் உடல்நலம் குன்றியிருந்தது வெளிப்படையாகத் தெரிந்தது. அதனுல் பலவிதமான கவலைகளிலிருந்து அவரது கவனத்தை இன்னிசை, நடனம் ஆகியவற்றை அளிப்பதன்மூலமாகவும், வட இந்தியாவிலிருந்து அடிமைப் பெண்களைத் தருவிப்பதன்மூலமாகவும் திருப்பும் முயற்சி ஒன்று தோன்றியது. 1760ஆம் ஆண்டு, டிசம்பர் மாதம் 27ஆம் தேதி பைதானில் (Paithan) ஓர் இளநங்கையை மணக்குமாறுகூட பூஷ்வாவைத் தூண்டினர். இந்நிலையில் அவர் வடஇந்தியாவை நோக்கிப் புறப்பட்டுச் சென்று ஜனவரி மாதம் 24ஆம் தேதி பில்சாவை அடைந்தார். அங்குத்தான் நிதியக முதல்வர் ஒருவருடைய கடிதத்தின் மூலமாகத் தமது படையின் தோல்விபற்றி அறியலானுர். சில நாட்கள் அங்கே தங்கியபின் அவர் தமது பயணத்தைத் தொடர்ந்து சிரோஞ்சிற்கு 32 கல் தொலைவிலுள்ள பச்சாரை (Pachhar) அடைந்தார். அங்குத்தான் பானிப்பட்டுப் போரில் ஏற்பட்ட அழிவுபற்றிய அதிகாரபூர்வமான செய்திகளை அறிந்தார். அதனுல் மனம் பேதலித்த அவர் பூனுவிற்குத் திரும்பிவந்து, 1761ஆம் ஆண்டு ஜூன் மாதம் 23ஆம் நாளன்று இறந்தார்.

பாலாஜி பாஜி ராவ் வசீகரத் தோற்றமும், நயமான பேச்சும் கொண்டவர். தமது முன்னோர்களைப்போன்று அல்லாமல் அவர் கலையிலும், பண்பட்ட இயல் அமைதியிலும், உயர்ந்த வாழ்க்கைத் தரத்திலும் ஆர்வம் கொண்டிருந்தார். ஓரளவிற்கு வெற்றிகரமான போர்வீரராகவும், வெல்திற வினைஞராகவும் அவர் விளங்கிய போதிலும் அவரது தந்தையோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது படைத்துறை மேதகவிலும் அரசியல் ஞானத்திலும் தரங்குறைந்தவராகவே காணப்பெற்ருர். அவரது தலைமையில் மராத்திய மாநிலம்

மிருந்த பரப்புக் கொண்டதாயிற்று. 'இமயமலைக்கும் கன்யா குமரிக்கும் இடையே ஓடிய ஆறுகளில் மராத்தியரது குதிரைகள் தாகத்தைத் தணித்துக்கொண்டன. தக்கணத்தில் தமது நேரடி ஆட்சிக்குட்பட்ட பகுதியில் நிதி, நீதி ஆட்சிக்கான நேர்மையான முறைகளைப் புகுத்திய நல்லாட்சி வினைஞராக பாலாஜி விளங்கிய போதிலும், மராத்தியர் வாள்கொண்டு உருவாக்கிய பரந்த பேரரசில் முறையான அரசாங்கத்தை அமைக்க அவர் எவ்வித நடவடிக்கையும் எடுக்கவில்லை. அந்தப் பேரரசைப் பொறுத்தவரையில், 'ஒரு ஆட்சிமுறைத் திட்டமாக அமையாது, கொள்ளையிடுவதற்கான அமைப்பாக, ஆரம்ப காலத்திலிருந்த மராத்திய ஆட்சியே தொடர்ந்து இருக்க அனுமதித்தார்'. ஆனால், அவர் தக்கணத்தில் புரட்சிகரமான சீர்திருத்தங்களைப் புகுத்தினர். மகாராஷ்டிரத்தின் பொதுத்துறை ஆட்சியைத் தமது திறமைவாய்ந்த அமைச்சரான ராம் சந்திர சோஹன்வியிடம் (Sohenvi) ஒப்படைத்தார். சோஹன்வி இறந்ததும், அவருடைய உறவினரான சதாசிவ ராவ் பாவேயிடம் ஒப்படைத்தார். பல்லப மந்துங்குனி என்னும் ஆற்றல் மிக்க நிதித்துறை உயர் ஆணையாளர் நிதிசார்ந்த விதிகளையும் கட்டுத் திட்டங்களையும் திருத்தியமைத்தார்; நிதி தண்டுவோர் கணக்குகளைக் காட்டவேண்டுமென்று வற்புறுத்தினர்; நிதி தண்டுவதில் இருந்த ஊழல்களை ஒழித்தார். முறையற்ற பல வரிவிதிப்புகளை நீக்கினர். உரிமைபெற்ற கிராமக் குடியாட்சிகளின் தேவைகளும் கவனிக்கப்பெற்றன. முறை வழங்குவதும் ஒழுங்குசெய்யப் பெற்றது. பாலகிருஷ்ண காட்கில் என்ற கற்றறிந்த சட்ட வல்லுநர் தலைமை நீதிபதியாக நியமனம்பெற்ருர். ஊர்களிலும் நகரங்களிலும் இருந்த பஞ்சாயத்து சபைகள் சிறந்த முறையில் அமைந்திருந்தன. நேர்த்தியான கட்டிடங்களாலும், நெடுஞ்சாலைகளாலும் அணி செய்யப்பெற்ற பூனு நகரில் வலிமைமிக்க காவற்படை ஒன்றினை பீஷ்வா உருவாக்கினர். அவர் பல கோயில்களையும், ஓர் ஏரியையும் கட்டுவித்தார். இத்தகைய சீர்திருத்தங்களுக்காக மராத்தியக் குடியானவர்கள் இன்றளவும் அவரை நன்றியுணர்வுடன் நினைந்து வருகின்றனர்.

ஆயினும், ஹோல்கார், சிந்தியா தலைவர்கள்போன்ற தமது கீழ்ப் பணியாளரைக் கட்டுக்குள் வைக்க பாலாஜி பாஜி ராவ் தவறி விட்டார். வட இந்தியாவில் மராத்திய நலன்களுக்கு ஊறு ஏற்படும் வகையிலான அவர்களது நீண்ட பூசல்களை அவர் அனுமதித்தார். தமது தம்பியாகிய ரகுநாத ராவை நல்வழிப்படுத்தத் தவறினர். தமக் குட்பட்ட தலைவர்களில் ஒருவரான துலாஜி ஆங்கிரியாவை அடக் குவதற்காக ஆங்கிலேயரை உதவிக்கு அழைக்கும் அறிவற்ற செயலில் ஈடுபட்டார். வட இந்திய அரசியலில் அவர் தொடர்புகொண்

டிருக்கவில்லை. மராத்தியருடைய மாறாத பகைவரான நஜீப் உத் தௌலாவுடன் முறையற்ற கூட்டுச்சேருவதில் மல்ஹர் ராவ் ஹோல்காருக்கு அனுமதி வழங்கினர். ஹோல்கார், சிந்தியா ஆகிய தலைவர்கள் இரஜபுத்திரர்களுக்கும் ஜாத்துகளுக்கும் எதிராக நடவடிக்கை எடுக்க பீஷ்வா அனுமதித்ததால், அவர்கள் பகைவர்களாயினர். சுருங்கக் கூறுமிடத்து, ஒரு பக்கத்தில் மராத்தியருக்கும் மறு பக்கத்தில் இரரஜபுத்திரர், ஜாத்துகள், உண்மையில் பொதுவாக வட இந்தியாவில் இருந்த இந்துக்கள் ஆகியோருக்குமிடையே பகைமை தோன்றியதற்கு பாலாஜி பாஜி ராவே பொறுப்பானவர் எனக் கொள்ளலாம். இந்தியா முழுவதற்கும் ஆன இந்துக்களின் ஆட்சியை அமைக்கவேண்டுமென்ற மராத்தியரின் திட்டம் தோல்வி அடைந்ததற்கும் அவரே பொறுப்பாளி என்றும் கொள்ளலாம்.

## மேலும் படிப்பதற்கான நூல்கள்

### மூல ஆதார நூல்கள்

(a) மராத்திய மொழி நூல்கள்.

1. 'Aitihasik Patra - Vyawahar', Vols, 1–2. G. S. Sardesai and others (தொகுப்பு).
2. Rajwade (V. K.)–'Marathauchya Ithihasachin Sadhanen', 22 தொகுதிகள்.
3. 'Selections from Peshwa Dafdar', 45 தொகுதிதள். G. S. Sardesai தொகுத்தது.
4. 'Selections from Satara Raja's and Peshwa's Diaries', G. Vad and others தொகுத்தது.
5. 'Dilli - Yethil Mara - Rajkaranan', or 'Despatches of Hingane Parasnis தொகுத்தது. அதைத் தொடர்ந்துவந்த Hingane Daftar–ன் இரு தொகுதிகள்.
6. 'Purandan Daftar', 3 தொகுதிகள்.
7. 'Holkarshahi Ithihas Sadhanen', 2 தொகுதிகள் B. B. Thakur தொகுத்தது.
8. 'Sindhia–Shahi 1thihasachin Sadhanen', 4 தொகுதிகள், A. B. Phalke தொகுத்தது.

(b) பாரசீக மொழி நூல்கள் :

1. ‘Siyar - ul - Mutakherin’ (Text) Sayyid Ghulam Hussain எழுதியது.
2. ‘Tarikh-i-Muzaffari’ (கை. பி.) Muhammad Al Ansari எழுதியது.
3. ‘Mirat - i - Ahmadi’ (கை. பி.) Ali Muhammad Khan எழுதியது.
4. ‘Tazkira Najile-ud-daulat’ (கை. பி.) Sayyid Nur-ud-din எழுதியது. ‘Islamic History’-ல் Sir j. Sarkar மொழிபெயர்த் தெழுதியது.
5. ‘Karzar Shah Ahmed Abdali wa Sadashiva Rao Bhan’, Kashiraj Pandit எழுதியது. ‘Indian Historical Quarterly’-ல் (1934-1935) Sir Jadunath Sarkar மொழிபெயர்த் தெழுதியது.
6. ‘Imad-us-Saadut” (Text) Sayyid Ghulam Ali எழுதியது.

தற்கால நூல்கள் :

1. J. C. Grant Duff எழுதிய ‘History of the Marathas’, 3 தொகுதிகள்.
2. C. A. Kincaid and D. B. Parains எழுதிய ‘A History of the Maratha People’, 3 தொகுதிகள்.
3. M. G. Ranade எழுதிய ‘Rise of the Maratha Power’.
4. G. S. Sardesai எழுதிய ‘New History of the Marathas’, 3 தொகுதிகள்.
5. G. S. Sardesai எழுதிய ‘Main Currents of Maratha History’, இண்டாம் தொகுப்பு.
6. V. G. Dighe எழுதிய ‘Peshwa Baji Rao I and Maratha Expansion’.
7. Sir J. Sarkar எழுதிய ‘Fall of the Mughal Empire’, தொகுதிகள் 1-2.
8. A. L. Srivatsava எழுதிய ‘The First two Nawabs of Aveadh’, இரண்டாம் தொகுப்பு.
9. A. L. Srivatsava எழுதிய ‘Shuja-ud-daulah’, முதல் தொகுதி.
10. ‘Cambridge History of India’, தொகுதி IV, அதி. XIV.

# 12. ஆட்சி முறை

## முடிமன்னர், அவரது அதிகாரங்களும் கடமைகளும்

1206 முதல் 1526 வரையான சுல்தானியர் ஆட்சிக் காலத்தில் அரசருக்கு 'சுல்தான்' என்னும் பட்டப் பெயர் இருந்தது. ஆயின், முகலாய அரசின் தலைவர் 'பேரரசர்' (The Emperor) என்று பெயர் பெற்றார். இந்தியாவில் முகலாயப் பேரரசை நிறுவிய பாபரே (Babar) 'பாதுஷா' (Padshah) அல்லது பேரரசர் என்ற விருதுப் பெயரை முதன் முதலாகச் சூட்டிக்கொண்டவர். அவரது வழித்தோன்றல்கள் அப் பெயரையே தொடர்ந்து தாங்கிநின்றனர். குரான் கோட்பாட்டின்படி, முகலாயப் பேரரசர் முஸல்மான்களுக்குமட்டும் அரசராவார். அதாவது அமீர் உல் மும்நின் (Amir-ul-Mumnin) அல்லது உண்மைச் சமயத்தவரின் தலைவராக இருப்பவர். மன்னர் என்ற முறையில் தமது நடத்தைக்கு அவர் 'ஜமெய்த்' (Jamait) என வழங்கும் முஸ்லீம் பொதுமக்களுக்குப் பெயரளவில் கட்டுப்பட்டவர். ஆயின், நடைமுறையில் இருதர இயல் திறம் அவருக்கு உண்டு. அதாவது தமது முஸ்லீம் குடிகளுக்கு அவர் மன்னராகவும் சமயத்தலைவராகவும் விளங்கினார். அதே சமயத்தில் தமது ஆட்சிக்குப்பட்ட பகுதிகளில் வாழ்ந்த முஸ்லிம் அல்லாதாரின் சமயம் சாராச் செங்கோலராகவும் திகழ்ந்தார். அவர்தம் அதிகாரங்களுக்கு வரம்பு கிடையாது. ஆனால், நடைமுறையில் புரட்சி தோன்றுமென்ற அச்சமும், நாட்டில் தொன்று தொட்டுவரும் மரபுச் சட்டங்களும் அவரது வல்லாட்சியைக் கட்டுப்படுத்தின. குரான் விதிகளை மீறினால் இஸ்லாமிய சமய நூல் வல்லாரான உலேமா (Ulema) கட்டளையிட்டு அரசரைப் பதவியிலிருந்து நீக்கமுடியும். ஆனால், வலிமைவாய்ந்த படையொன்றைப் பேரரசர் வைத்திருக்கும் வரையில் இத்தகைய 'ஃபட்வா' (Fatwa) பயனற்ற காகிதத் துண்டேயாகும்.

கோனுட்சிபற்றிய இஸ்லாமியக் கோட்பாட்டில் பாபரும் ஹுமாயூனும் நம்பிக்கை கொண்டிருந்தனர். கூடுமானவரையில் குரான் விதிகளைச் செயற்படுத்த முயன்றனர். ஆனுல், உண்மை யான அதிகாரத்தைக் கைப்பற்றிய பிறகு அக்பர், கோனுட்சி பற்றிய இஸ்லாமியக் கோட்பாட்டினை உதறித்தள்ளினுர். உண்மைச் சமயத்தவரின் தலைவராக (Amir-ul-Mummen) அவர் விளங்கவில்லை. சமய, இன வேற்றுமையின்றித் தமது குடிமக்களுக்கெல்லாம் உற்ற மன்னரானுர். ஆயிரம் அருங் குணங்கள் இருப்பினும், யாவற்றையும் உள்ளடக்கிய அமைதி (சமயப் பொறை)யைத் தொடங்கி வைக்காது. எல்லா வகுப் பாரையும், எல்லாச் சமயப் பிரிவுகளையும் ஒரே வகையாக நோக்கி ஆதரவு தாராத ஒருவர், உன்னதமான அரசபதவிக்கு அருகதையற்றவர் என உறுதியாக நம்பினுர் ('Akbar Nama', Vol. II பக். 285). மற்றத் துருக்கிய முகலாய மன்னர்களின் கருத் துகளை ஏற்றுக்கொண்டதோடு மனித இனத்தில் தோன்றிய மற்றையோரைக் காட்டிலும் மன்னன் மிக உயர்ந்தவன் என்றும், அவன் ஆண்டவனின் நிழலாக, ஆட்பேராக விளங்குபவன் என்றும் அக்பர் கொண்டார். 'ஆண்டவனின் அருள் ஒளியாக, பகல வனின் பட்டொளியாக, அண்டத்தை விளக்கும் தீப ஒளியாக, முழுநிறைவேட்டின் நூற் பொருளாக ஒழுக்கங்களின் உறைவிட மாக இருப்பதே அரசபதவி என அபுல்பாஸல் எழுதியுள்ளார். இங்ஙனம் உயர் தனி நிலையில் உள்ளவர் மன்னர் என்பதால், தாம் சமயம் சாராத அரசர் என்பதோடு, முஸ்லீம்கள் முஸ்லீம் அல்லாதார் என்ற பாகுபாடின்றிக் குடிமக்கள் அனைவரின் ஆன் மீகத் தலைவரும் தாமே என அக்பர் உரிமை கொண்டாடினுர். சமயத்தலைமையையும், சமயச்சார்பற்ற தலைமையையும் பிரித்து வைப்பதால் தொல்லை ஏற்படும் என அவர் கருதினுர். அதனு லேயே அவ்விரு அதிகாரங்களையும் இணைத்துத் தம்மிடமே வைத்துக்கொள்ள முயன்ருர். சமயம் சார்ந்த அதிகாரங்களும், சமயம் சாராத அதிகாரங்களும் ஒருங்கிணைவதையே 'கிலாபத்' (Khilafat) அல்லது கோனுட்சிபற்றிய முஸ்லீம் கோட்பாடு கொண்டாடுகின்றது. ஆயின், முஸ்லீம் மன்னர் தமது இஸ்லா மியக் குடிகளுக்குமட்டுமே ஆன்மிகத் தலைவராவார். அவர் முகம்மதுவின் சமயத்தைப் பரப்பக் கடமைப்பட்டவர். அதனேடு முஸ்லீம்களுக்கும் முஸ்லீம் அல்லாதாருக்கும் இடையேயான மாருத வேற்றுமையை மங்காது வைத்திருக்கவேண்டியவர். ஆனுல், அக்பரின் கொள்கை இதற்கு மாருனது. பல சமயங்களுக்கும் சமயப் பிரிவுகளுக்குமிடையே அமைதியை நிலைநாட்டுவதோடு சமய ஏட்டின் அடிப்படையிலல்லாது மெய்யறிவின் அடிப்படையில் அமைந்த யாவற்றையும் உள்ளடக்கிய சமயத்தைப் பரப்பும்

பொறுப்பு ஏற்பதே மன்னரின் கடமையாகும் என அக்பர் கருதினர்.

சில மாற்றங்களுடன் கோனாட்சிபற்றிய அக்பரின் கோட்பாட்டையே ஜஹாங்கீரும் பின்பற்றினர். ஆனால், அவரது ஆட்சிக் காலத்தில் இஸ்லாமியக் கோட்பாட்டிற்குத் திரும்பச் செல்லும் போக்குத் தென்பட்டது. அக்பரின் கொள்கையை ஷாஜஹான் அடியோடு கைவிட்டார். அவர்தம் புதல்வரான அவுரங்கசீபு காலத்தில் இறைமைபற்றிய இஸ்லாமியக் கோட்பாடு, கலப்பற்ற நிலையில் பேரரசரின் வழிகாட்டும் தத்துவமாக அமைந்தது. அவரது வழியைப் பின்பற்ற முடியாத அளவிற்குப் பிற்கால முகலாய மன்னர்கள் நலிந்திருந்தபோதிலும் கோனாட்சி பற்றிய இஸ்லாமியக் கோட்பாட்டில் நம்பிக்கை கொண்டிருந்தனர்.

முகலாயப் பேரரசரிடம் பல அதிகாரங்கள் இருந்தன. அரசின் தலைவராக இருந்த மன்னர், அதனோடு படைகளின் உயர் தனித்தலைவராகவும் நீதியின் ஊற்றாகவும் விளங்கினர். மேலும், அவர் இஸ்லாமியத்தைக் காப்பவராகவும், முஸ்லீம் குடிகளின் ஆன்மீகத் தலைவராகவும் திகழ்ந்தார். அந்நிலையில் முஸ்லீம்களிடமிருந்து 'ஸகாத்' (zakat) என்னும் தீர்வைகொண்டு அதனை மசூதிகள் கட்டுதற்கும், இறைமை இயல் நூலாருக்கு மானியம் வழங்குவதற்கும், முஸ்லீம் இரவலரின் துயர் துடைப்பதற்கும் பயன்படுத்தினர். முறையான மந்திரிசபை ஒன்றும் அங்கு இல்லை. எப்போதும் நான்கு முதல் ஆறு அமைச்சர்கள் பணிபுரிந்தபோதிலும், கொள்கை வகுக்கும் அதிகாரம் அவர்களுக்குக் கிடையாது. அவர்கள் ஆலோசனை வழங்கலாமே தவிர தனி விருப்பக் குறிப்பு அளிக்கமுடியாது. அவர்தம் யோசனைகள் பேரரசரைக் கட்டுப்படுத்துவன அல்ல. இங்ஙனம் முகலாயப் பேரரசர் முழு நிறைவான வல்லரசராகத் திகழ்ந்தார். ஆயினும், அக்பர் முதல் ஷாஜஹான் வரையிலான பேரரசர்கள் குடிகளின் நலனைப் பேணுதலே தங்களது தலையாய கடமையெனக் கருதினர். அதனால் முகலாயப் பேரரசரை உணர் ஒளிர் வல்லரசர் எனல் பொருந்தும்.

## அமைச்சர்களும் அவர்களுடைய பொறுப்புகளும்

பாபர் முதல் அக்பர் ஆட்சிக் காலம்வரையில் அரசாங்கத்தில் நான்கு முக்கிய அலுவலகத் துறைகள் இருந்தன.

அவுரங்கசீபு காலத்தில் அவற்றின் எண்ணிக்கை ஆருக உயர்ந்தது. அவைகளாவன:

1. திவான் (Diwan) தலைமையில் இருந்த கருவூலம், நிதி சார்ந்த துறை.

2. கான்–இ–சமான் (Khan-i-Saman) அல்லது அரண்மனைச் சிறப்பு அலுவலரின்கீழ் இருந்த பேரரச அரண்மனைத் துறை.

3. மீர் பக்ஷீயின்கீழ் (Mir Bakshi) இருந்த படைத்துறைச் சம்பளம் வழங்கும் கணக்கு அலுவலகம்.

4. தலைமைக் காஸியின் (Qazi) தலைமையில் இருந்த பொது உரிமை, குற்ற வழக்கு சார்ந்த சமயச் சட்டத்துறை.

5. தலைமைச் சதர் (Chief Sadr) என்பவரின் கீழிருந்த அறக் கட்டளைகள், கொடைகள்பற்றிய துறை.

6. முஹ்தசீப்பின் (Muhtasib) கீழிருந்த பொது ஒழுக்கக் கட்டுப்பாட்டுத் துறை. இவைகளேயன்றிப் பிற்கால முகலாய மன்னர் காலத்தில் மற்றத் துறைகளுக்குச் சமமாக விளங்கிய வேறு இரு தாழ்வான துறைகளும் இயங்கி வந்தன. அவைகள் பின்வருமாறு:–

7. மீர் ஆதிஷ் (Mir Atish) அல்லது தாரோகா–இ தோப்காஞ (Daroga–i–Topkhana) வின்கீழ் இருந்த பீரங்கிப்படை.

8. தாக் சௌகியின் தாரோகாயின் (Daroga of dak Chowki) கீழிருந்த அஞ்சல், உளவறியும் துறை.

## முதலமைச்சர்

அக்பர், ஜஹாங்கீர், ஷாஜஹான் ஆகியோரது ஆட்சிக்காலத்தில் வக்கீல் (Vakil) அல்லது வகீல்-இ–முத்லக் (Vakil-i-Mutlaq) என்னும் பட்டப் பெயரை முதலமைச்சர் கொண்டிருந்தார். சில சமயங்களில் அவா வஸீர் என்றும் வஸீர்–இ–அலா (Wazir-i-Ala) என்றும் அழைக்கப்பட்டார். சில பிற்காலத்து மன்னர் ஆட்சியில் வகீல் எனும் முந்திய விருதுப் பெயர் மாற்றத்திற்குள்ளானது. சான்ருக, ஜகந்தர் ஷா (Jakandar Shah) அஸாத் கானை வகீல்–இ–முத்லக்காக நியமித்தார். ஆயின், அவரது புதல்வரான சுல்பிகார் கானை வஸீராக நியமித்தார். நிதித்துறையை முதலமைச்சரே கவனித்து வந்தார். ஆயின், அவர் திவாஞகவும் இருந்ததாலேயே அவ்வாறு செய்ய முடிந்தது. அவர் முக்கியமாகப் பொது ஆட்சித் துறை அதிகாரியே ஆவார். படைத்தலைமை அநேகமாக அவருக்கு

அளிக்கப்பெறுவது கிடையாது. நாட்டின் நலன்சார்ந்த செய்திகள் யாவற்றிலும் மன்னருக்கு ஆலோசனை கூறுவது அவரது முக்கியக் கடமையாகும். 'மன்னருக்கும் மற்ற அதிகாரிகளுக்கும் இடையே தொடர்பு ஏற்படுத்தும் இடையீட்டாளராக அவர் விளங்கினர்'. மன்னர் இல்லாதபோதும், அவர் நோய்வாய்ப்பட்டபோதும் வயது நிரம்பாதவராக இருந்த காலத்தும் முதலமைச்சரே அவருக்கும் பிரதிநிதியாக இருந்தார். மாநிலங்களிலிருந்தும், களத்திருந்த படைகளிடமிருந்தும் நிதிசார்ந்த ஏடுகள், கணக்குக் குறிப்புகள், அரசாங்கக் கடிதங்கள் ஆகியவை அவருடைய அலுவலகத்திற்கு வந்தன. எல்லாவிதச் செலவினங்களுக்கும் அவரே ஆணைகள் பிறப்பித்தார். கருவூலத்தைக் கட்டுப்படுத்தியதோடு நிதி தண்டுதல் தொடர்பான பிரச்சினைகள் யாவற்றிலும் அவரே முடிவெடுத்தார்.

குற்றேவல்காரர்களையும் பதவியற்ற சாதாரணப் படைவீரர்களையும் தவிர, மற்ற அதிகாரிகளுக்கான நியமன ஆணைகளையும், வேலை உயர்விற்கான கட்டளைகளையும் அவரே பிறப்பித்தார். துணை அமைச்சர் நிலையில் இருந்த இரு உயர் அதிகாரிகள் அவருக்கு உதவி புரிந்தனர், அவர்களில் ஒருவர் அரச நிலங்களின் பொறுப்பு ஏற்ற திவான் கலிசா (Diwan Khalish) என்னும் அதிகாரி; மற்றவர் திவான் தான் (Diwan Tan) அல்லது தாங்ஷ். பிந்தியவர் ஜாகீர் நிலங்களின் பொறுப்பேற்றிருந்தார்.

## மீர்பக்ஷி

படைத்துறை அமைப்பின் பொறுப்பேற்றவர் மீர்பக்ஷியே. மன்சப்கள் (Mansabs) நியமனத்திற்கான எல்லா ஆணைகளும் அவரது அலுவலகத்தின் மூலமாகவே சென்றன. படையில் அரசருடைய கட்டுத்திட்டங்களை அவர் அமல்நடத்த வேண்டும். குதிரைகளுக்குக் குறியிடுவதை மேற்பார்வை செய்யவேண்டும். மன்சப்தார்களிடம் இருக்க வேண்டிய வீரர்களின் எண்ணிக்கையை கண்காணிக்கவேண்டும். மன்சப்தார்கள் வைத்திருக்கவேண்டிய படைவீரரின் எண்ணிக்கையைக் குறிக்கும் குறிப்பேடுகளை வைத்துக் காத்து, அவர்களுடைய சம்பளத்திற்கான முறிகளுக்கு இசைவு தரவேண்டும். அதனுல்தான் அவரை சம்பளப் பட்டுவாடாத் தலைமை அதிகாரி என அழைத்தனர்.

## கான்-இ-சமான் அல்லது அரண்மனைச் சிறப்பு அலுவலர்

அக்பருடைய காலத்தில் கான்-இ-சமான் அமைச்சரெனும் அணிவரிசை பெறவில்லை. ஆயினும், அவரது வாரிசுகளின் காலத்

தில் அப் பதவி மிகச் சிறப்புவாய்ந்ததாயிற்று. அதனால் அது முழு வளர்ச்சியுற்ற அமைச்சகத்தின் நிலையை அடைந்தது. பேரரசரின் சொந்தப்பணியாளர், வேலைக்காரர் ஆகியோர் உள்பட அரண்மனைத் துறைக்கும், அரச அடுக்களைக்கும் கான்–இ-சமான் தலைமை வகித்தார். பேரரசருடைய அன்றாடச் செலவு, உணவு, பிற தேவையான பொருள்கள் ஆகியவற்றை அவர் மேற்பார்வை செய்தார். பேரரசர், அவரது உவளகத்தார், அரச அவையினர் முதலானோர் வேண்டிய ஆடைகளையும், அணிகலன்களையும், பிற விலைமதிப்பற்ற பொருள்களையும் உற்பத்தி செய்வதற்கான தொழிலகங்கள் அல்லது கார்கானாக்கள் (Karkhanas) கான்–இ–சமானின் பொறுப்பில் இருந்தன. அதனால் அவர் மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்தார். சில சமயங்களில் கான்–இ–சமான் வஸீராகப் பதவி உயர்வு பெறுவதுண்டு. அவருக்குக் கீழே துணை அமைச்சர் நிலையில் உள்ள உயர் அதிகாரியான திவான்-இ புயூதாத் (Diwan-i-Buyutat) பணியாற்றினார். அரசுக்குச் சேர வேண்டிய கடன்களைப் பெறுவதற்காகவும், இறந்தவருடைய சொத்தினை அவரது வாரிசுகளுக்காகக் காப்பதற்காகவும் இறந்தவர்களுடைய சொத்துகளைப் பதிவு செய்து வைத்தல் அவரது முக்கியப் பணியாகும்.

## தலைமைக் காஸி

'காலப்பகுதிக்குற்ற கலீபா'வாக இருந்த பேரரசர் உயர் தனி நீதிபதியாகத் திகழ்ந்தார். அவர் புதன்கிழமைதோறும் முறை வழங்கினார். ஆயினும், எல்லா வழக்குகளையும் விசாரித்து முறை வழங்குவதற்கான நேரம் பேரரசருக்கு இல்லையாதலால் தலைமைக் காஸி என்ற தலைமை நீதிபதி ஒருவரும் இருந்தார். "அவர் சமயம் சார்ந்த வழக்குகளில் மட்டும் நடுவராகப் பணியாற்றினார். அவைகளை முஸ்லீம் சட்டப்படி தீர்த்துவைத்தார்." மாநில, மாவட்ட, நகர காஸிகளைத் தலைமைக்காஸியே நியமித்தார். சிலசமயங்களில் பெரிய ஊர்களிலும் தலக் காஸிகள் இருந்தனர். மஃப்டிகள் காஸிகளுக்குத் துணையாக இருந்தனர். அராபியச் சட்ட இயலில் புலமை பெற்றிருந்த அவர்கள் வழக்குகளோடு தொடர்புகொண்ட கோட்பாட்டளவிலான சட்டத்தை எடுத்துரைத்தனர். பேரதிகாரம் பெற்றிருந்த காஸிகள் உயர்நிலையில் வைத்து எண்ணப்பெற்றனர். ஆனால், அந் நிலையை அவர்கள் அடிக்கடி தவறாகப் பயன்படுத்தினர். பொதுவாக, காஸியினுடைய அலுவலகம் ஊழலின் இருப்பிடமாகத் திகழ்ந்தது. வரலாற்றுப் பேரறிஞரான சர் ஜாதுநாத் சர்க்கார் எழுதியதைப் போல, 'பெருந்தன்மையான விதிவிலக்காக இருந்த

சிலரைத் தவிர முகலாயர் காலத்துக் காஸிகள் அனைவரும் லஞ்சம் வாங்குவதில் பேர்போனவர்கள்.'

## தலைமைச் சதர்

சமய அறக் கட்டளைகள் துறையும் கொடை வழங்கும் துறையும் தலைமைச் சதர் பொறுப்பில் இருந்தன. சமயப்பணி ஆர்வமுடையவர், அறிஞர், இறைமை இயல் வல்லுநர், துறவிகள் ஆகியோரை ஆதரிப்பதற்காகப் பேரரசரும் அரச குடும்பத்தினரும் ஜாகீர்களை வழங்குவதோடு பொருள் தொகைகளையும் ஒதுக்கி வைத்தனர். கொடைக்காக வரும் விண்ணப்பங்களை ஆய்வதும், கொடை வழங்குவதற்குத் தகுதியானவரை சிபாரிசு செய்வதும் சதரின் கடமைகளாகும். அதனால் அவர் அறக் கட்டளைக்கான நிலங்களுக்கும் கொடைப் பொருள்களுக்கும் நடுவராகவும், மேற்பார்வையாளராகவும் இருந்தவர் எனலாம். மாநில சதர்களை அவர் நியமித்தார். சில வேளைகளில் தலைமைச் சதராக இருந்தவர் தலைமைக் காஸியாகவும் பணியாற்றினர். ஆனால், அக்பருடைய காலத்திலும் அவரது வாரிசுகள் காலத்திலும் இவ்விரு உயர் பதவிகளை இருவர் தனித் தனியாக வகித்து வந்தனர். 'கையூட்டு மூலமாகவும் கையாடல் மூலமாகவும் பணக்காரர் ஆவதற்கு சதரின் நிலை நிறைய வாய்ப்பளித்தது. அக்பர் கால சதர்கள் பொறுப்பற்ற இழிதகவிற்கும், கொடூர உள்ளத்திற்கும் பேர்போனவர்கள்.'

## பொது ஒழுக்கக் கட்டுப்பாட்டு அலுவலர்

முஹ்தஸீப் (Muhtasib) அல்லது பொது ஒழுக்கக் கட்டுப்பாட்டு அலுவலர், அராபிய நபிகள் நாயகத்தின் கட்டளைகளைச் செயல் படுத்தவும், இஸ்லாத்திற்குப் புறம்பான பழக்கங்களை ஒழிக்கவும் கடமைப்பட்டவர். காய்ச்சி இறக்கிய சாராயம் அல்லது புளிப் பேறிய வார்க் கோதுமைகள், பிற மதுபானங்கள், அபின், கஞ்சா (Bhang) ஆகியவற்றைக் குடித்தல், சூதாடுதல், பால் சார்ந்த சில தீயொழுக்கங்கள் போன்றவற்றை அவர் தடை செய்யவேண்டும். புறச்சமயக் கருத்துகள், நபிநாயகத்திற்கு எதிரான பழிப்பு, அன்றுடம் ஐந்துமுறை துதிப்பதைப் புறக்கணித்தல், முகம்மதியர் ரம்ஸானைக் கொண்டாடாது இருத்தல் ஆகியவற்றிற்கான தண்டனை வழங்குதலும் பொது ஒழுக்கக் கட்டுப்பாட்டு அலுவலரின் அதிகாரத்தில் அடங்கும். அவுரங்கசீபின் ஆட்சிக்காலத்தில் புதிதாகக் கட்டிய கோயில்களை இடிக்கும் பணியையும் முஹ்தசீப்கள் ஆற்றிவந்தனர். சில சமயங்களில் அவர்கள் பொருள்களின் விலைகளை நிர்ணயிப்ப

தோடு அங்காடிகளில் சரியான எடைகளையும் அளவைகளையும் நடைமுறைக்குக் கொண்டுவர வேண்டியதாயிற்று.

## பீரங்கிப்படைத் தலைவர்

முதலில் மீர் பக்ஷியின் உதவியாளராக இருந்தவர்தான் பீரங்கிப் படைத் தலைவர். ஆயின், போர்களில் பீரங்கிப்படை மிக முக்கிய மான பணியினைச் செய்த காரணத்தால் அத் துறைத் தலைவரும் அமைச்சர் நிலைக்கு உயர்ந்தார். பிற்கால முகலாயர் ஆட்சியில் பேரரச அரண்மனைக் கோட்டையின் பாதுகாப்பிற்கான ஏற்பாடு களைச் செய்யும் பொறுப்பை மீர் ஆதிஷ் அல்லது பீரங்கிப்படைத் தலைவர் ஏற்றார். சில சமயங்களில் அதற்காக அவர் அரண்மனைக் கோட்டைக்குள்ளேயே தங்க நேர்ந்தது. அதனால் அவர் பேரரச ருடன் நெருங்கிய தொடர்புகொண்டு முக்கிய அமைச்சராகவும் உயர்ந்தார். கோட்டைகளைத் தகர்க்கும் வெடிகள், சிறு பீரங்கிகள் உள்ளிட்ட எல்லாவகையான பீரங்கிகளும் அவர் பொறுப்பில் இருந்தன.

## அஞ்சல் முறை, உளவறிதல் ஆகிய துறைகளின் தலைவர்

முகலாய ஆட்சிக்காலத்தின் பிற்பகுதியில் அவரும் ஒரு துறைத் தலைவராக ஆனார். பேரரசின் பல பகுதிகளில் நியமனம் பெற்றிருந்த ஏராளமான செய்தி எழுதுவோர், செய்தி கொண்டுசெல்வோர், ஒற்றர் ஆகியோர் அவர் பொறுப்பில் இருந்தனர். அவரவர் எல்லைக்குள் நடக்கும் முக்கிய நடப்புகள்பற்றி முறையாக அறிக்கைகளை அவர்கள் அனுப்பிவைக்க வேண்டும். பேரரச தாக் சௌக்கியின் தரோகாவின் ஆணைக்குட்பட்டுச் செயலாற்றிய மாநிலத் தலைமை அதிகாரிகளும் இருந்தனர். அவர்கள் தலைநகருக்கு ஒவ்வொரு வாரமும் செய்திகளின் சாரத்தை அனுப்பினர்.

## மாகாண (மாநில) ஆட்சிமுறை: சுபேதாரும் அவரது பொறுப்புகளும்

முகலாயப் பேரரசு பல மாகாணங்களாகப் பிரிந்திருந்தது. அக்பர் காலத்தில் 15 மாகாணங்கள் இருந்தன. அவையே அவுரங்கசீபின் ஆட்சிக் காலத்தில் 20 ஆக உயர்ந்தன. ஒவ் வொரு மாநிலத்திற்கும் ஆளுநர் ஒருவர் தலைமை வகித்தார்.

அக்பர் காலத்தில் அவர் சிபாசலார் என்னும் விருதுப் பெயரைக் கொண்டிருந்தார். ஆயின், அவரது வாரிசுகளின் காலத்தில் அப் பெயர் சுபேதார் அல்லது நாஸிம் என மருவியது. தமது மாகாணத் தில் அமைதியையும் ஒழுங்கினையும் காத்தல், பேரரசக் கட்டளைகளை நிறைவேற்றுதல், நிதி தண்டுவதில் உதவி செய்தல் ஆகியவையே அவரது முக்கியக் கடமைகளாகும். குற்றவியல் முறை வழங்கும் பொறுப்பும் அவருக்குண்டு. மாகாணத்தின் ஆட்சிப் பொறுப்பை ஏற்கப் புறப்பட்டுச் செல்லும்போது அவரிடம் சில யோசனைகளை வஸீர் கூறி அனுப்பினர். முக்கியமாக அவரவர் மாநிலத்தில் வாழ்ந்த முக்கிய மனிதர்களோடு தொடர்புகொள்ளவேண்டும்; பதவி உயர்விற்காகத் தகுதியான அதிகாரிகளைச் சிபாரிசு செய்யவேண்டும். கலகம் விளைவிக்கும் ஜமீன்தார்களைத் தண்டிக்கவேண்டும்; மாநிலத் தில் நடைபெறுகின்ற முக்கிய நிழ்ச்சிகள்பற்றி இரு வாரங்களுக்கு ஒரு முறை அறிக்கைகளை அரசவைக்கு அனுப்பவேண்டும் என்று அறிவுறுத்தினர். மேலும், படையினைப் போரிடும் தகுதியில் வைத் திருக்க வேண்டும்; விழிப்புடன் இருக்க வேண்டும்; இரவலர்க்கும் சாதுக்களுக்கும் உதவியளித்து, உழவரைக் காப்பதன் மூலமாகப் பயிர்த்தொழிலை வளர்க்க வேண்டுமென்றும் வற்புறுத்திக் கூறினர். சுபேதாரின் மற்றொரு முக்கியப் பணியாக இருந்தது, அவரது அதிகார எல்லைக்குட்பட்டிருந்த சிற்றரசர்களிடமிருந்து திறைகொள்வதாகும்.

## மாநிலத்தின் திவான்

மாநிலத்தில் இரண்டாவது முக்கிய அதிகாரியாக இருந்தவர் திவானே. முகலாய ஆட்சியில் ஆரம்ப காலத்தில் அவர் சுபேதா ருக்கு ஒத்த நிலையில் இருந்தார். ஆனல், சம அதிகாரம் அவரிடம் இல்லை. உண்மையில் இவ்விரு அதிகாரிகளும் விழிப்புடனும் கண்டிப்புடனும் ஒருவரை ஒருவர் கண்காணித்து வந்தனர். இங்ஙனம் அராபியரின் ஆரம்பகால ஆட்சிமுறைக் கொள்கையும் மரபும் தொடர்ந்து வந்தன. நிதி ஆட்சி திவானின் பொறுப்பாகும். தீர்வைகளை விதித்து அவற்றினைத் தண்டுவதற்கான ஏற்பாடுகளை அவர் செய்தார். அதற்கெனத் தண்டல் நாயகர்களை நியமித்தார். பொது உரிமை வழக்குகளில் முறை வழங்கும் பொறுப்பும் அவருக் கிருந்தது. ஆயின், மாநில திவானைப் பேரரச திவான் அல்லது வஸீர்–இ–அலா (Wazir-i-ala) நியமித்தார். அவரது நேரடியான கட்டளைகளின்படி மாநில திவான் செயலாற்றினர். பயிர்த்தொழிலை வளர்க்கவேண்டும்; கருவூலத்தைக் கண்காணிக்கவேண்டும்; நேர்மையான அமீன்களையும் (Amins) அமீல்களையும் நியமிக்க

வேண்டும்; உழவரைப் போற்றி அவர்களுக்குக் கடனுக முன்பணம் [தக்காவி (taqavi) கடன்] தந்து உதவ வேண்டும்; வஸீரின் அலுவலகத்திற்கு முறையாக அறிக்கைகளை அனுப்பவேண்டும் என மாநில திவான் தூண்டப்பெற்ருர்.

ஒவ்வொரு மாநிலத்திலும் பக்ஷி, காஸி, சதர், புயூதூத், முஹ் தாசிப் போன்ற வேறுபல அதிகாரிகளும் பணியாற்றினர். எந் தெந்தப் பெயருள்ள பதவிகளைப் பெற்றுத் தலைநகரில் வாழ்ந்த 'அதிகாரிகள் பேரரசு முழுமைக்கும் அதிகாரம் செலுத்தினர்களோ' அதே அதிகாரத்தை மாநிலத்தில் பணிபுரிந்த இந்த அதிகாரிகள் தங்கள் தங்களுடைய ஆட்சி எல்லைக்குள் அதிகாரம் செலுத்தினர்.

## மாவட்டங்கள் அல்லது சர்க்கார்கள்

மாநிலங்கள் மாவட்டங்களாக அல்லது சர்க்கார்களாகப் பிரிந் திருந்தன. ஃபாஜ்தார் என்னும் அதிகாரி மாவட்டத்தின் தலைவராக விளங்கினர். அவர் தற்கால மாவட்ட ஆணையாளரை (collector) ஒத்திருந்தார். சுபேதாரின் நேரடி ஆணைகளைப் பெற்றுப் பணி யாற்றிய அவர், முந்தியவருடன் நெருங்கிய தொடர்புகொண்டிருந் தார். அவர் ஒரு நிர்வாக அதிகாரி. படைப் பிரிவு ஒன்றிற்குத் தலைவ ராகவும் விளங்கினர். அமைதியையும் ஒழுங்கினையும் நிலைநாட்டு வதும், அரசக்கட்டளைகளையும் விதிமுறைகளையும் செயல்படுத்து வதும் அவரது முக்கியப் பொறுப்புகளாகும். வலிமைமிக்க ஜமீன்தார்களைக் கட்டுக்குள் வைத்தலும், சாலைகளில் திருடர்கள், கொள்ளைக்காரர்கள் போன்ருேரின் பயமின்றித் தடையற்ற போக்கு வரவு நடைபெற வழி செய்வதும் அவரது பொறுப்புகளேயாம். 'சுருங்கக் கூறுமிடத்து, ஃபாஜ்தார் என்னும் பெயருக்கிணங்க, சிறு கலகங்களை அடக்குவதற்கும், கள்ளர் கூட்டங்களைக் கலைப்பதற்கும் அல்லது சிறைப்பிடிப்பதற்கும், எல்லாவிதமான குற்றங்களைப்பற்றிக் கவனிப்பதற்கும், நிதித் துறை அதிகாரிகள், குற்ற இயல் நடுவர்கள், பொது ஒழுக்க நெறியாளர் ஆகியோருக்கு எதிர்ப்புத்தெரிவிப்பவருக்கு அச்சமூட்டும் வகையில் படை பலத்தைக் காட்டுவதற்கும் என மாநிலத்தில் நிறுத்தப்பெற்ற படைப் பிரிவின் தலைவரே அவ்வதிகாரி எனலாம்.' (Sarkar "Mughal Administration,' பக். 57)

## பர்காஞக்கள் அல்லது மஹால்கள்

மாவட்டங்கள் மேலும் பர்காஞக்கள் அல்லது மஹால்களாகப் பிரிக்கப்பெற்றன. ஒவ்வொரு பர்காஞவிலும் ஷிக்தார் (Shigdar)

அமீல், அமீன், ஃபொடாதார் (Fotadar-கருவூலத்தலைவர்) ஆகிய அதிகாரிகளும், கணக்கர்களான பிடிக்சிஸ்கள் (Bitikchis) சிலரும் பணி புரிந்தனர். பர்கானாவின் பொதுஆட்சிப் பொறுப்பையும் அமைதி, ஒழுங்கு ஆகியவற்றை நிலைநாட்டும் பொறுப்பையும் ஷிக்தார் ஏற்றிருந்தார். அவரது தலைமையில் ஒரு சிறு காவற்படை இருந்தது. அவர் குற்ற இயல் நடுவராகவும் பணியாற்றினார். ஆனால், இத்துறையில் அவரது பொறுப்பு மிகக் குறைவானதே. உழவர்களோடு நேரடியாகத் தொடர்புகொண்டவர் அமீல் என்னும் அதிகாரியே. தீர்வை விதித்து அதனைத் தண்டுவது அவரது முக்கியக் கடமையாகும். அமைதி, ஒழுங்கு ஆகியவற்றை நிலைநாட்டுவதிலும், குற்றவாளிகளைத் தண்டிப்பதிலும் ஷிக்தாருக்கு அவர் உதவி புரிந்தார். பர்கானாவின் கருவூலத் தலைவராக விளங்கியவர் ஃபொடாதார். அதன் வருவாய், செலவினங்களின் பதிவேட்டை அவர் முறையாக வைத்திருந்தார். கணக்கர் அல்லது எழுத்தர்களாக இருந்தவரே பிடிக்சிஸ்கள் எனப் பெற்றனர்.

## நகர ஆட்சி

கொத்தவால் நகரத்தின் தலைமை ஆட்சியாளராக விளங்கினார். நகரக் காவல்படையின் தலைவராகவும் இருந்த அவர் மத்திய அரசினால் நியமிக்கப்பெற்றவர். அவரது முக்கியப் பொறுப்புகளாக இருந்தவை: (1) நகரினைக் காவல் புரிதல், (2) வணிகச் சந்தையைக் கட்டுப்படுத்தி ஒழுங்குசெய்தல், (3) வாரிசுகளற்ற சொத்துகளைப் பாதுகாத்து முறையாக வழங்குதல், (4) நகர மாந்தருடைய பொது ஒழுக்கத்தைக் கண்காணித்துக் குற்றங்களை அகற்றுதல், (5) சமுதாய ஊழல்களைத் தடைசெய்தல், (6) கல்லறைகள், மயானங்கள், இறைச்சிக்காக விலங்குகளைக் கொல்லுமிடங்கள் ஆகியவற்றை ஒழுங்குபடுத்துதல். இத்தகைய பொறுப்புகளை அவர் நிறைவேற்றுவதற்காகச் சிறிய குதிரைப் படையையும் காலாட்படையையும் வைத்திருந்ததோடு,பல காவற்காரர்களையும் அமர்த்திக் கொண்டிருந்தார். நகரத்தைப் பல குடும்புகளாகப் பிரித்து (wards) ஒவ்வொன்றிற்கும் ஒரு துணைவரை நியமித்தார். அவ்வதிகாரிகள் அந்தந்தக் குடும்பிலுள்ள மக்கள் அனைவரின் பெயர்களும், அவர்களுடைய குண இயல்புபற்றிய குறிப்புகளும் நிறைந்த பதிவேடுகளை வைத்திருக்கவேண்டுமென்று கொத்தவால் வற்புறுத்தினார். நகரத்திற்குள் வருவோர் போவோர்பற்றிச் செய்தி அனுப்பவேண்டுமென்றும் சாரைகளைக் கண்காணிக்கவேண்டுமென்றும் ஒற்றர்களுக்கு ஆணையிட்டார். வேலையற்றவர்கள் தொல்லை தருவர் என்பதால் யாரும் வேலையின்றி இல்லாது பார்த்துக்கொள்வதும் அவரது கடமை

களில் ஒன்றாக இருந்தது. பொதுமகளிர், நடனமாதர், மது, மயக்கந் தரும் பிற பொருள்கள் ஆகியவற்றை அவர் கண்காணித்தார்.

பெருநகரங்களில் முகல்லாக்கள் (Mohallas) என்னும் பேட்டைகள் பிரிந்திருந்தன. அவைகள் தன்னிறைவு பெற்ற பகுதிகளாகத் திகழ்ந்தன. அவற்றில் அநேகமாக ஒரே தொழிலைக் கொண்ட மக்களோ அல்லது ஒரே ஜாதியைச் சார்ந்தவர்களோ வாழ்ந்து வந்தனர். தொழிற்கலைஞர்கள், இடைக்கால ஐரோப்பிய வணிகர் சங்கங்கள், தொழிற்கலைஞர் சங்கங்கள் போன்ற அமைப்புகளைக் கொண்டு கூட்டங்கூட்டமாக வாழ்ந்தனர். ஒவ்வொரு சங்கத்திலும் குழுத் தலைவரும் தரகரும் பணியாற்றினர். அவர்கள் மூலமாகவே யாவும் நடைபெற்றன. பெரு நகரங்களுக்கு வெளியே நகர்ப் புறங்கள் இருந்தன. அவற்றில் ஏதோ ஒரு குறிப்பிட்ட செல்வந்தரின் குடும்பத்தாரும் அவர்களுடைய ஆதரவாளர்களும் ஆட்களும் வசித்து வந்தனர். சான்றாக முகல்புரா (Mughulpura), ஜெய்சிங்புரா, ஜெஸ்வந்த்சிங்புரா போன்றவை பழைய டில்லிக்கு அருகே இருந்த சில புற நகர்ப் பகுதிகளாகும். அதேபோன்று ஆக்ராவிற்கு வெளியிலும் பலூச்புரா (Baluchpura), பிரதாப்புரா ஆகிய பகுதிகள் இருந்தன. பொதுவாகப் பெருநகரையோ அல்லது பட்டணத்தையோ மதில் சூழ்ந்திருக்கும். ஆனால், புறநகர்ப் பகுதிகள் மதிலுக்கு வெளியேதான் அமைந்திருந்தன. ஒரு நகரத்தை உருவாக்கும்போது அதனுடைய முக்கிய நெடுஞ்சாலைகளும் கழிநீர் செல்வதற்கான பொது வடிகாலும் (கண்டா நலா) பேரரசரின் ஆணையின் பேரில் அமைக்கப்பெற்றன. சில சமயங்களில் ஆற்றிலிருந்தோ அல்லது ஏரியிலிருந்தோ நீர் கொண்டுவருவதற்காக மூடு கால்வாய்களை அரசாங்கம் கட்டுவதுண்டு. ஆயின், குறுக்குச் சாலைகளையும், குடிதண்ணீருக்கான கிணறுகளையும் நகர மாந்தரே அமைத்துக் கொண்டனர். நகரப் பாதுகாப்பு, முக்கிய நெடுஞ்சாலைகளைத் தூய்மையாக வைத்திருத்தல், வணிகச் சந்தையை ஒழுங்கு செய்தல், சந்தைச் சுங்கம் (Market Toll) சுங்க கலால் வரிகள் ஆகியவற்றைத் தண்டுதல் போன்றவற்றில்தான் அரசாங்கம் அக்கறை காட்டியது. கூலச் சந்தையிலும், உப்புச் சந்தையிலும் விதித்த தீர்வைதான் மக்களிடமிருந்துவந்த முக்கிய வரி இனமாகும். தெருக்களில் விளக்கு வைத்தல், நீர் வசதி செய்து கொடுத்தல், கழிவுப் பொருள்களை அப்புறப்படுத்துவதற்கான ஏற்பாடுகள் செய்தல், மக்களுக்கு மருத்துவ உதவி அல்லது கல்வி யளித்தல் போன்றவை அரசாங்கத்தின் பொறுப்புகளல்ல. இவை யாவும் நகர மாந்தருடைய தனிப்பட்ட பொறுப்புகள். எனவே, அவை அவர்களிடமே விடப்பெற்றன.

## ஊர் ஆட்சி

நம் இனத்தவர் ஊராட்சித் துறையில்தான் மிகச் சிறந்த அரசியல் அமைப்புச் சார்ந்த பணி புரிந்துள்ளனர். பண்டைக் காலந்தொட்டே நன்கு அமைந்த ஊர்ச் சமுதாயங்கள் இந்திய மண்ணில் வாழ்ந்து வந்தன. அவைகள் சொந்த முறையில் தங்களுக்குற்ற அலுவல்களைக் கவனித்து வந்தன. ஒவ்வோர் ஊரும் உரிமைபெற்ற குடியரசாக விளங்கியது. குடும்பத் தலைவர்களைக் கொண்ட சபை ஒன்று ஊர் ஆட்சிப் பொறுப்பை ஏற்றிருந்தது. ஊர்க்காவல், துப்புரவு, ஆரம்பக் கல்வி, நீர்ப்பாசனம், மருத்துவ உதவி, பொதுத் துறைப் பணிகள், மக்களின் சமய ஒழுக்க நலன், முறை வழங்குதல் ஆகியவற்றில் அச் சபை பொறுப்பேற்றிருந்தது. விளையாட்டு, இசை, திருவிழாக் கொண்டாட்டங்கள் ஆகியவற்றிற் கான ஏற்பாடுகளையும் அது செய்துவந்தது. வழக்குகளை விசாரிப் பதற்கென பஞ்சாயத்து சபை ஒன்று பணியாற்றியது. ஊர் சபை யானது பல துணைக் குழுக்களாகப் பிரிந்திருந்தது. அக் குழுக்கள் உறுப்பினர்கள் தனித்தனியே பல பொறுப்புகளை ஏற்று நடத் தின. அவற்றின் ஒருவகையான தேர்தல் முறையினுல் தெரிந் தெடுக்கப்பெற்றனர். இவற்றைத் தவிர உறுப்பினர்கள் வழக்கு களையோ அல்லது சச்சரவுகளையோ தீர்ப்பதற்கு என அந்தந்த ஜாதியைச் சார்ந்த பஞ்சாயத்துகளும் பணியாற்றி வந்தன. ஒவ்வோர் ஊரிலும் ஓரிரு காவற்காரர்கள், புரோகிதர், பள்ளி ஆசிரியர், குறிநூல் வல்லுநர், தச்சர், கருமார், மட்கோவர், வண்ணுன், அம்பட்டன், மருத்துவர், கணக்கர் அல்லது பட்வாரி (Patwari) ஆகிய பணியாளர் வாழ்ந்திருந்தனர். காலாகாலமாக நமது பண்பாட்டையும் சமுதாயத்தையும் கட்டிக்காத்த பெருமை இத்தகைய ஊர்ச்சமுதாயங்களுக்கு உரியது எனலாம்.

## படைத்துறை ஆட்சி

முகலாயருடைய படை அமைப்புத் திட்டம் மன்சப்தாரி முறை (mansabdari) எனப் பெயர் பெற்றது. டில்லி சுல்தான்களின் ஆட்சிக் காலத்திலேயே அதனுடைய அறிகுறித் தடையம் காணப் பெறுவதால் அது நமது நாட்டிற்கு முற்றிலும் புதுமையானது அல்ல என்பது தெளிவு. ஷெர் ஷா (Sher Shah), இஸ்லாம் ஷா (Islam Shah) போன்ருேரது படைகளிலும் ஆயிரம் வீரர்கள், இரண்டாயிரம் வீரர்கள், அதற்கும் மேற்பட்ட எண்ணிக்கைகொண்ட வீரர்கள் என இருந்த படைப் பிரிவுகளின் படித்தர வரிசையில் அமைந்த தலைவர்கள் பணியாற்றிவந்தனர். ஆயின், அக்பர்தாம் அத் திட்டத்தை முறைப்படி அமைத்து ஒழுங்குபடுத்தியவர்.

மன்சப் என்னும் சொல், பதவியையோ அல்லது படி வரிசையையோ குறிக்கும். அதனால் பேரரச சேவையில் பதவிகள் வகித்ததவர்களே மன்சப்தார்களாவர். அக்பர் ஆட்சிக்காலத்தில் கீழ்த்தரமான மன்சப்தார் 10 வீரர்களைக்கொண்ட தலைவராகவும் மிக உயர்ந்த நிலையில் உள்ள மன்சப்தார் 10,000 வீரர்களைக் கொண்டவராகவும் இருந்தனர். அன்னாரது ஆட்சியின் இறுதிக் காலத்தில் உச்சவரம்பு 12,000படை வீரர்களாயிற்று. 5,000-க்கு மேற்பட்ட பதவிகள் பேரரச குடும்பத்து இளவரசர்களுக்கே அளிக்கப்பெற்றன. ஆயினும், சிறிது காலத்திற்குப் பிறகு, சில செல்வந்தர்கள் 7,000 வரையிலான பதவிகளைப் பெற்றனர். ஜஹாங்கீர், ஷாஜஹான் ஆகியோரது ஆட்சிக்காலங்களில் 8,000 வரையிலுள்ள பதவிகளைச் செல்வந்தர்கள் அடைய முடிந்தது. அதே சமயத்தில் பேரரச குடும்பத்தில் தோன்றியவர்களின் பதவியின் மதிப்பு 40,000-க்கு உயர்ந்தது. பிற்பட்ட முகலாயர் காலத்தில் உச்ச வரம்பு 50,000 வரை சென்றது.

மன்சப்தார்கள் மூன்று பிரிவினர்களாகப் பிரிந்திருந்தனர். 10 முதல் 400 வரையிலான வீரர்களை வைத்திருக்கும் தகுதியுடைய வர்கள் மன்சப்தார் என்னும் பொதுப்பட்டத்தையே பெற்றிருந்தனர். 500 முதல் 2,500 வரையிலான பதவிகளை வகித்தவர்கள் உமாரா (Umara) எனப் பெயர் பெற்றனர். 3,000 அல்லது அதற்கும் மேற் பட்ட பதவிகளை வகித்தவர்கள் உமாரா-இ-ஆஸம் (Umara-i-Azam) அல்லது பெருஞ் செல்வந்தர்கள் (பிரபுக்கள்) என அழைக்கப் பெற்றனர்.

தொடக்கக் காலத்தில் ஒவ்வொரு மன்சப் படிநிலையிலும் ஒரே ஒருவகை அல்லது தரத்து அதிகாரிகளையே அக்பர் நியமித்தார். ஆனால், தமது ஆட்சியின் இறுதியில் சவார் (Sawar) என்னும் படி நிலையைப் புகுத்தியதன் மூலமாக 5,000-க்கு மேற்பட்ட மன்சப் பதவி ஒவ்வொன்றிலும் மூன்று வகைகளை அவர் புகுத்தினர். பதவி அல்லது மன்சப் குறித்த எண்ணிக்கை கொண்ட படைவீரர்களை மன்சப்தார்கள் வைத்திருக்கவேண்டுமென்ற அவசியம் இல்லை. அதன் விளைவாக ஸ்மித் (Smith), இர்வின் (Irwin), பிளாச்மேன் (Blochman) போன்ற சில வரலாற்று ஆசிரியர்கள் செய்ததைப் போல, 1,000 வீரருக்குரிய மன்சப்தார் என்றால் உண்மையில் 1,000 படைவீரர்களுக்குத் தலைவர் எனக் கொள்ளுதல் தவறாகும். மன்சப்தார்கள் ஓரளவு படைவீரர்களை வைத்திருக்கவேண்டு மென்பது உண்மை. ஆனல், அவர்கள் பதவி குறிக்கின்ற எண்ணிக்கையில் ஒரு பகுதியையே வைத்துக் காத்தனர். இங்ஙனம் பேரரசின் அதிகாரிகளுடைய படிநிலையையும் ஊதியத்

தையும் நிர்ணயிப்பதற்குப் பயன்பட்ட எளிய முறையாகவே மன்சப் திட்டம் அமைந்தது. மன்சப்தார்களை நியமிப்பதிலோ, பதவி உயர்வு தருவதிலோ அல்லது பதவி நீக்கம் செய்வதிலோ நிலையான விதிமுறைகளைக் கடைப்பிடிக்கவில்லை. நடைமுறையில் படையினைத் திரட்டுவதில் திறமைகாட்டி வேண்டிய அளவு படை வீரரைக் கொண்டுவரும் மன்சப்தார் அடுத்த படிநிலைக்கு உயர்த்தப் பெற்றார்.

ஸாத் (Zat), சவார் ஆகியவற்றின் சிறப்புப் பற்றி அறிஞர்கள் மாறுபட்ட கருத்துகளைக் கொண்டுள்ளனர். மன்சப்தாரி முறையை அக்பர் புகுத்தியபோது மன்சப்தாரின் படிநிலைக்கும், அவர் மொத்தமாகச் சேர்த்துவைத்திருக்கவேண்டிய படைவீரர், குதிரைகள், யானைகள் முதலியவற்றின் எண்ணிக்கைக்கும் இடையே வேற்றுமை இருக்கவில்லை யென்பதே இந் நூலாசிரியரின் கருத்தாகும்,

ஆயின், பல படிநிலைகளுக்குற்ற மொத்த எண்ணிக்கைகொண்ட குதிரைகள், யானைகள், ஒட்டகங்கள் முதலானவற்றை மன்சப் தார்கள் வைத்திருந்தபோதிலும் வேண்டிய அளவு குதிரைப்படையினரை வைத்துக் காத்து, தேவையானபோது கொண்டுவர அவர்கள் தவறினர். அதனால் பரிப்படையினரையும், பொதி விலங்குகளையும் ஒன்ருகச் சேர்த்துக் கணக்கிடுவது குழப்பம் விளைவிக்கவல்லது என அக்பர் உணர்ந்தார். இத்தகைய குழப்பத்தைப் போக்கி அந்தந்தப் படிநிலையிலுள்ள மன்சப்தார்கள் குறித்த குதிரைப்படை வீரரைக் கொண்டிருக்கச் செய்வதற்காக ஸாத்திலிருந்து மாறுபட்ட சவார்படிநிலையினைப் புகுத்தி இருக்க வேண்டும். அதிலிருந்து ஸாத் என்னும் படிநிலை குதிரைவீரர்களையோ, பரிப்படையினரையோ குறிக்காது குதிரைகள், யானைகள், பொதிவிலங்குகள், வண்டிகள் முதலானவற்றையே சுட்டியது. தற்கால அறிஞர் தவருகக் கொள்வதைப் போன்று தனியொருவரைக் குறிக்கும் படிநிலையன்று ஸாத் என்பது. மாருக, அக்பர் ஆட்சியில் மான்சப்தார் ஒருவர் உண்மையில் வைத்திருக்கவேண்டிய குதிரைவீரர்களின் எண்ணிக்கையையே அப்பதவி குறித்தது. ஆயின், அவரது வாரிசுகள் ஆட்சிக்கு வந்த காலத்தில் இவ்விதி முறையும் சிறிது தளர்ச்சியுற்றது. சவார் படிநிலை குறித்ததைக் காட்டிலும் மிகக் குறைந்த எண்ணிக்கையுள்ள குதிரைப் படையினரையே மன்சப்தார்கள் வைத்திருந்தனர். அனல், மன்சப்தார் ஒவ்வொருவரும் அவரவர் படிநிலைக்குற்ற குதிரைவீரர்களில் நான்கில் ஒரு பங்கினையாவது வைத்திருக்க வேண்டுமென ஷாஜஹான் வகுக்கவேண்டிவந்தது. ஆயின், இந்தியா

விற்கு வெளியில் சேவை செய்யவேண்டியிருந்தால், பெயரளவில் படிநிலை குறித்த எண்ணிக்கையில் நான்கில் ஒன்று என அல்லாது ஐந்தில் ஒரு பங்கு குதிரைவீரரைக் கொண்டிருந்தால் போதும். சர் ஜாதுநாத் சர்க்காரின் கருத்துப்படி 'அவுரங்கசீபின் ஆட்சிக் கால இறுதியில் அவரது அதிகாரிகள் பெயரளவில் வைத்திருக்க வேண்டிய படைகளின் மொத்த எண்ணிக்கையில் பத்தில் ஒரு பங்கே முகலாயப் படையின் உண்மையான எண்ணிக்கையாகும்'. அவுரங்கசீபிற்குப் பின்னால் வந்தவர்களின் ஆட்சியின் மன்சப் பதவிகள் மதிப்பார்ந்த பதவிகளாக மாறின. 7,000 படிநிலையில் இருந்த மன்சப்தார் ஏழு குதிரைவீரர்களைக் கூடத் தமது சேவை யில் வைத்திருக்க வேண்டுவது அவசியமன்று. சான்றாக 1719 முதல் 1748 வரை அரசாண்ட முகம்மது ஷாவின் காலத்தில் 7,000 படிநிலை யில் இருந்த லுட்ஃப்-உல்லா-கான் (Lutf-ulla-Khan) என்ற மன்சப் தார் ஏழு குதிரைவீரர்களையல்ல, ஏழு கழுதைகளைக்கூட வைத்துக் கொள்ளவில்லை.

5,000-க்கும், அதற்கும் கீழேயுள்ள படிநிலைகளைச் சார்ந்த மன்சப் தார்களில், ஒவ்வொரு நிலையிலும் முதலாவது, இரண்டாவது, மூன் றாவது என மூன்று தரத்தார் இருந்தனர். ஒரு குறிப்பிட்ட பதவியில் இருந்த மன்சப்தாரின் சவார் படிநிலையும் சாத் படிநிலையும் ஒன்றாக இருக்குமானால் அவர் முதல் வகையைச் சார்ந்தவராவார். மாறாக, இரண்டாவது வகை மன்சப்தார் சாத் படிநிலைக்குக் குறைந்த, ஆனால், பாதி அளவிற்கும் குறையாத சவார் நிலையில் இருந்தார். மூன்றாவது வகையாரோவெனின், சாத் படிநிலையில் பாதிக்கும் குறைந்த சவார் படிநிலையிலோ அல்லது சவார் படிநிலையை அறவே பெறாதவராகவோ இருந்தார். சான்றாக. 5000 சாத் படிநிலையில் இருந்த ஒரு மன்சப்தார் 5000 குதிரைவீரர்களைக் கொண்டவராக (சவார் படிநிலையில்) இருந்தால் அவர் 5000-ல் முதல் தரத்தின ராவார். மாறாக, அவரது சாத் படிநிலை 5000 ஆகவும் சவார் படிநிலை 2,500 ஆகவும் இருந்தால் அவர் இரண்டாம் தரத்தவர். அதுவே அவரது சாத் படிநிலை 5,000 ஆகவும், சவார் படிநிலை 2500-க்குக் குறைவாகவும் இருந்தால் அவர் மூன்றாம் தரத்தவர். மன்சப்தார் அனைவர்க்கும் இவ் விதி முறை பொருந்தும். ஆயின் தோ-அஸ்பா (Du-Aspa), சேஅஸ்பா (Seh Aspa) அமைப்பு காரணமாக மன்சப்தாரி முறையில் மேலும் சிக்கல் தோன்றியது. இரு குதிரைகளை நடத்திச் செல்லும் வீரர்கள் தோ-அஸ்பா எனவும், மூன்று குதிரைகளை நடத்திச் செல்லும் வீரர்கள் சே-அஸ்பா எனவும் அழைக்கப்பெற்றனர். நடத்திச் செல்லப்பெறும் குதிரைகளின் எண்ணிக்கையைப் பொறுத்தே வீரர் களின் ஊதியத்தைக் கணக்கிட்டனர்.

அவரவர் இனத்தை அல்லது கூட்டத்தைச் சார்ந்தவர்களிடையே யிருந்து படைவீரரைத் தேர்ந்தெடுத்துப் பராமரிக்கும் அதிகாரம் மன்சப்தார்களுக்கு இருந்தது. அக்பரின் ஆட்சிக்காலத்திலும் முகம்மது ஷா வரையிலான அவர்தம் சந்ததியார் ஆட்சிக்காலங்களிலும் அன்னியரான துருக்கியர், பாரசீகர். ஆப்கானியர் போன்ேருரும், உள்நாட்டவரான இராஜபுத்திரரும் மன்சப்தார்களில் பெரும்பான்மையானவர். சில அராபியரும் வேறு சில அன்னிய நாட்டவரும் மன்சப்தார்களாகப் பதவி வகித்தனர். ஆயின், மிகக் குறைவான இந்திய முஸ்லீம்களே உயர் படிநிலைகளில் இருந்தனர். தங்களுக்கு வேண்டிய பரிகளையும், பிற தளவாடங்களையும் மன்சப்தார்களே வாங்கிக்கொள்ளவேண்டும். ஆயினும், சில வேளைகளில் அரசாங்கமே அவற்றை அளித்தது. ஒரு மன்சப்தாரின் பொறுப்பிலிருந்த படைகள் முதலானவற்றிற்கு மொத்தமாக ஒரு தொகை வழங்கப்பெற்றது. இங்ஙனம் பேரரசரின் ஆணைகட்கு உட்பட்டு அவரது சேவகத்தில் இருந்தபோதிலும் தங்களுக்கு ஊதியம் அளித்த சொந்தத் தலைவர்களையே வீரர்கள் அறிவர்.

மீர் பக்ஷியின் தணிக்கைக்காகக் கூடும் பேரணிக்கு நன்முறையில் படைக்கலந்தாங்கிய வீரர்கள் எத்துணை பேர்களை ஒரு மன்சப்தார் கொண்டுசெல்கின்ருரோ அதைப் பொறுத்தே அவரது ஊதியம் அமைந்தது. படைக்கு ஆள் எடுத்து முதல் முறையாகப் பேரணிக்குக் கொண்டுவரும்போது வீரர்களைப் பற்றியும் குதிரைகளைப் பற்றியும் விரிவான செய்திகளைப் பதிவுசெய்துகொண்டனர். பக்ஷியின் முன்னிலையில் ஒவ்வொரு குதிரையின் வலத் தொடையில் அரசாங்க அடையாள முத்திரையையும் (dagh), இடத் தொடையில் மன்சப்தாரின் அடையாள முத்திரையையும் இட்டனர். மன்சப்தார்களுக்கு உயர்ந்த ஊதியம் அளித்ததால் அவர்களுக்குச் செலவுகள் அனைத்தும் போக நல்ல வருவாய் கிடைத்தது.

## படைப் பிரிவுகள்

முகலாயப் படைகளில் காலாட்படை, குதிரைப்படை, துப்பாக்கிப்படை, யானைப் பன்டை, போர்க்கப்பல் அணிஎனும் ஐம்பெரும் பிரிவுகள் இருந்தன.

### காலாட்படை

குறை ஊதியமும், அரைகுறையான அமைப்பும் கொண்ட படைப் பிரிவு காலாட்படையே. அதில் ஆஷாம் (Ahsham), சே பந்தி (Sehbandi) என்ற இரு பிரிவுகள் உண்டு. அவ்விரு பிரிவுகளைச் சார்ந்த

வீரர்களும் வாளும் குறுகிய ஈட்டியும் தாங்கி நின்றனர். அவர்களது போரிடும் திறம் பெயரளவில்தான் இருந்தது. வேலையற்று வெறுமெனத் திரிந்தவர்கள் சே-பந்தி படைப்பிரிவில் சேர்த்துக்கொள்ளப் பெற்றனர். பொதுவாக நிதி கொள்வதற்கு அவர்கள் உதவியாக இருந்தனர். இங்ஙனம் அவர்கள் படைவீரர்களாக அன்றி காவற் படையினரைப் போன்று இருந்தனர்.

## குதிரைப் படை

குதிரை வீரர்களில் இரு வகையினர் உண்டு. முதல் வகையினர் அரசாங்கத்திடமிருந்து குதிரையையும், பிற படைக்கலன்களையும் பெற்றனர். அவர்கள் பார்க்கீர்கள் (Bargirs) என்று அழைக்கப்பட்டனர். சிலாதார் (Silehdars) எனப் பெயர்பெற்ற மற்றொருவகையினர் சொந்தக் குதிரைகளையும் படைக்கலன்களையும் கொண்டுவந்தனர். பார்க்கீர்களைவிட அவர்களுக்கு ஊதியம் மிகுதி

## துப்பாக்கிப் படையினர்

பீரங்கிப்படை வீரர்களும், துப்பாக்கி கொண்டு போரிடும் வீரர்களும் இப் பிரிவில் இடம்பெற்றனர். அவர்கள் மீர்ஆதிஷ் அல்லது பீரங்கிப் படைத்தலைவரின்கீழ்ப் பணிபுரிந்தனர். முகலாய பீரங்கிப் படையில் ஜின்ஸி (Jinsi), தஸ்தி (Dasti) எனும் இரு பிரிவுகள் இருந்தன. ஜின்ஸியில் கனரக பீரங்கிகளும், தஸ்தியில் துப்பாக்கிகள், சுழல் அச்சுத் துப்பாக்கிகள் உள்படப் பலவகை இலேசான பீரங்கிகளும் அடங்கி இருந்தன. இவ்விரு பிரிவுகளுக்கும் தனித்தனியான படைத்தலைவர்களும், படைக் கொட்டில்களும் உண்டு. ஆயினும், இவை இரண்டும் மீர் ஆதிஷின் கட்டுப்பாட்டில் இருந்தன.

## யானைப் படை

போர்க்களத்தில் யானைகளும் பயன்படுத்தப்பெற்றன. அவற்றின்மீதிருந்து போர்க்களத்தை நன்கு கவனிக்க முடியுமாதலால், படைத்தலைவர்கள் யானை மீதேறிச் சென்றனர். புகைவரைத் தாக்குவதற்கும், காலாட்படை அணிகளைச் சிதைப்பதற்கும், கோட்டைவாயில்களைத் தகர்ப்பதற்கும் யானைகள் பயன்பட்டன. ஆனால், பீரங்கிகள் அதிகமாகப் பயன்படுத்தப் பெற்றபோது யானைகளினால் ஏற்படும் நன்மையைவிடத் தீமையே அதிகமாகும்.

## போர்க் கப்பல்கள்

முகலாயருக்குச் சொந்தமான நாவாய்ப் படை கிடையாது. நாட்டின் மேற்குக் கரைக்கான கடல் பாதுகாப்பை அவர்கள் அபிசீனியர்களிடமும் (Abyssinians) ஜன்ஜிராவின் சித்திகளிடமும் விட்டுவைத்தனர். ஆயினும், பலவகையான மரக்கலங்கள் கொண்ட சிறு கடற்படை ஒன்றை முகலாய அரசாங்கம் கீழ் வங்காளத்தில் வைத்துக் காத்துவந்தது. ஒரு தரோகாவின் தலைமையில் இருந்த இம் மரக்கலங்களில் பீரங்கிகள் பொருத்தப் பட்டிருந்தன. இதைத் தவிரப் பேரரசப் படை ஆறுகளைக் கடப் பதற்காகப் பாலம் அமைப்பதற்கெனப் படகுகளைச் சேகரித்துத் தரும் மீர் பஹார் என்ற அதிகாரியும் இருந்தார். ஆயினும், பெரும் எண்ணிக்கையிலான மரக்கலங்களை அரசாங்கம் வைத்திருக்க வில்லை.

மன்சப்தார்களது படைகளைத் தவிர வேறு படைப் பிரிவுகளும் இருந்தன. தனிப்பட்ட உயர்ந்த மதிப்புள்ள குதிரை வீரர் களான அஹ்தேக்களும் (Ahdais), மீர் பக்ஷியினுல் நேரடி யாகப் படையில் சேர்க்கப்பெற்று மத்திய அரசிலிருந்து ஊதியம் பெற்ற துணைத் துருப்புகளான தாக்கிலீக்களும் (Dhakhilis) அப் பிரிவினராவர். துணைத் துருப்பினரைத் தான் மீர்பக்ஷி திரட்டினுர் என்றுலும், மன்சப்தார்கள் திரட்டிய படைகள் உள்ளிட்ட சேனை அனைத்தின் பேரணியை மேற்பார்வையிடுதல், கட்டுப்பாட்டினை நிலைநாட்டுதல் ஆகிய பொறுப்புகளை அவரே ஏற்றிருந்தார். ஆயினும், மீர் பக்ஷி படைகளின் தலைவர் அல்லர். பேரரசரே படை களுக்கெல்லாம் தனிமுதல் தலைவராக விளங்கினுர். இங்ஙனம் போர்வீரர்களைத் திரட்டுதல், பேரணியை மேற்பார்வையிடுதல், ஊதியம் அளித்தல் ஆகியவையே மீர் பக்ஷியின் வேலைகளாகும்.

முகலாயப் படையினர் படை அணிகளாகப் (regiment) பிரிந்திருக்கவில்லை. படை அணி சார்ந்த உடற்பயிற்சியோ அல்லது கட்டுப்பாடோ கிடையாது. உண்மையான படைப்பயிற்சி தரப் படவில்லை. மீர் பக்ஷியின் பதிவேடுகளில் குறிக்கப்பெற்றிருந்த பெயரளவிலான படைபலத்தின் ஒரு பகுதியே உண்மையில் சேவை யிலீடுபட்டது. படைத்தலைவர்களுக்கும், மன்சப்தார்களையே நேரடித் தலைவர்களாகக் கருதியிருந்த படை வீரர்களுக்குமிடையே எவ்வித ஒப்பந்தமும் இல்லை. பொதுவாக, படைவீரர்களுக்கான சம்பளப் பாக்கி நிறைய இருந்தது. பிற்பட்ட முகலாயர் ஆட்சிக்காலத்தில் சில சமயங்களில் இரண்டு மூன்று ஆண்டுகளுக்கும் படைவீரர்கள் ஊதியம் பெருதிருந்தனர். ஆரம்ப காலத்தில் முகலாயப் படை எளிதில் இயங்கும் தன்மை கொண்டதாக இருந்தது. அதுவே அதன்

வலிமைக்கு முக்கிய காரணமாகவும் அமைந்தது. எனினும், இராஜபுதனம், மகாராஷ்டிரம் போன்ற பகுதிகளில் இருந்த பாலை நிலத்திலும், மலைப்பிரதேசத்திலும் இத்தகைய எளிதில் இயங்கும் தன்மையை அது இழந்தது. அவுரங்கசீப் ஆட்சியின் பிற்பகுதியில் 'விரைந்து செயலாற்றும் மராத்தியப் படைக்கு முன்னால் முகலாயப்படை செயலிழந்து நின்றது.' பதினெட்டாம் நூற்றாண்டில் கட்டுப்பாடு மிகுந்த, ஐரோப்பியத் தலைவர்கள் நடத்திச்சென்ற இந்தியப் படை அணிகளுக்கு (European-led-Sepoy) முன்னும் அது செயலிழந்து நின்றது.

## நிதி ஆட்சி

முகலாயப் பேரரசின் வருவாயை மத்திய அரசாங்கத்து வருவாய் என்றும், உள்நாட்டு அல்லது மாகாண வருவாய் என்றும் இருவகையாகப் பிரிக்கலாம். வாணிபம், நாணயச்சாலை, நன்கொடைகள், பரம்பரைச் சொத்துரிமை, உப்பு, சுரங்கம், நிலம் ஆகியவற்றிலிருந்து மத்திய அரசிற்கு வருவாய் கிடைத்தது. இவற்றில் நிலத்தீர்வையே மிகுந்த வருவாய் அளிப்பதும், முக்கியமானதுமாகும். பாபரும் ஹுமாயூனும் இந்துக்களிடமிருந்து புண்ணியச் செலவு வரியும், ஜெஸியா வரியும் கொண்டனர். அதே சமயத்தில் முஸ்லீம்களிடமிருந்து ஸகாத் வரி கொண்டனர். புண்ணியச் செலவு வரியையும் ஜெஸியாவையும் அக்பர் நீக்கினர். ஆனால், 1679ஆம் ஆண்டின் தொடக்கத்திலேயே அவுரங்கசீப் அவற்றை மீண்டும் விதித்தார். சையது சகோதரர்களின் ஆதிக்கம் வளர்ந்தகாலத்தில் ஜெஸியாவை மீண்டும் நீக்கினர். முகம்மது ஷாவின் காலத்தில் மீட்கப்பெற்ற அவ் வரி மீண்டும் ஒழிந்தது. எனினும், புண்ணியச் செலவு வரியும், இறந்தவரின் சடலத்தைக் கங்கையில் எறிவதற்காக இந்துக்களிடமிருந்து பெற்ற வரியும் முகலாயர் ஆதிக்கம் அழியும் வரையிலும் தொடர்ந்து இருந்தன.

## நில வரி

சுல்தானியர் காலத்திலிருந்த நிலவரி முறையை பாபரும், ஹுமாயூனும் பின்பற்றினர். நிலத்தை அளக்காமலும், நிலத்தில் உற்பத்தியான உண்மையான விளைபொருளை மதிப்பிடாமலும் பழைய ஆவணங்களின் அடிப்படையிலேயே பொதுவாக வரி தண்டினர். ஆனால், பல சோதனைகளைத் தொடர்ச்சியாகச் செய்த பிறகு அக்பர் வருவாய்த் திட்டத்தையே அடியோடு மாற்றி இறுதி

யில் தோடர் மாலின் (Todar Mal) பந்தோபஸ்த் (Bandobast) முறையை நிலைநாட்டினர். 1580ஆம் ஆண்டைய புகழ்வாய்ந்த அய்னிதாஸாலாவை (Ain-i-Dahsala) அடிப்படையாகக் கொண்ட இம் முறையில் சில நிலையான செயல் முறைகள் அடங்கியிருந்தன. முதலாவதாக நிலையான அளவை முறையின்மூலமாக நிலத்தை அளந்தனர். ஒவ்வோர் ஊரிலுமுள்ள குடியானவர்களிடம் இருந்த பயிரிடுவதற்கு ஏற்ற நிலங்களின் மொத்தப் பரப்பினைக் கணக்கிட்டனர். இவ்வாறுகப் பேரரசு முழுவதிலுமுள்ள நிலங்களை அளந்து கணக்கிட்டனர். இரண்டாவதாக, தொடர்ந்து பயிர் செய்வதற்கு உகந்ததா, இல்லையா என்ற அடிப்படையில் நிலங்களை நான்கு வகைகளாகப் பிரித்தனர். போலஜ் (Polaj), பிரௌத்தி (Parauti), சச்சர் (Chachar), பஞ்சர் (Banjar) என்பவையே அந் நான்கு வகை நிலங்களாகும். மூன்றுவதாக, ஒவ்வொரு பர்காஞுவிலும், ஒவ்வொரு பயிர் வகையிலும், ஒவ்வொரு வகை நிலத்தில், ஒரு பிகாவில் விளைந்த பத்து ஆண்டுகளின் சராசரி விளைச்சல் அடிப்படையாகக் கொள்ளப்பெற்றது. அதில் மூன்றில் ஒரு பங்கினை அரசாங்கம் வரியாகக் கொண்டது. நான்காவதாக, வரியைப் பொருளாகப் பெறுவதற்குப் பதிலாகப் பணமாக அரசாங்கம் பெற்றது. அதற்காக அக்பர் பேரரசு முழுவதையும் பல தஸ்தூர்களாகப் பிரித்தார். அவை ஒவ்வொன்றிலும் பலவகையான தானியங்களின் விலைகள் ஒரே சீராக இருந்தன. தஸ்தூர் (Dastur) ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு தானியத்திற்கும் தனித்தனியாகப் பத்து ஆண்டுச் சராசரி விலை நிர்ணயிக்கப்பட்டது. அந்தச் சராசரி விலையே அத் தானியத்தின் நிகழ்கால விலையாகக் கொள்ளப்பெற்றது. மேலே குறித்த கணக்கீட்டின்படி அரசாங்கம் தனது பங்கைக் குடியானவரிடமிருந்து கோரியது. இங்ஙனம் குடியானவரிடமிருந்து நிலவரி கொள்வதற்காக ஒவ்வோர் ஆண்டின் விளைச்சலின் அளவையும், தானியங்களின் நிகழ்கால விலையையும் அறிய வேண்டிய அவசியமில்லை. ஆயினும், விளைச்சல்பற்றியும் தானியங்களின் விலைபற்றியும் அரசாங்கம் தொடர்ந்து பதிவேடுகளை வைத்திருந்தது. அவற்றை அடிப்படையாகக்கொண்டு அவ்வப்போது தீர்வையை மாற்றியமைத்தது. முதலில் கால் சா நிலத்திற்கே இம் முறை பயன்பட்டது. பிற்காலத்தில் அக்பர் அதனை ஜாகீர் நிலங்களுக்கும் விரிவு செய்தார். இம் முறையில் அரசாங்கம் குடியானவருடனே நேரடியாக நிலவரி ஏற்பாட்டினைச் செய்துகொண்டது. அதனுல் இது 'ரயத்துவாரி' (Ryotwari) எனப் பெயர் பெற்றது. குடியானவர் ஒவ்வொருவரும் பட்டா (Patta) அல்லது உரிமை ஆவணம் பெற்றனர். அவர்கள் காபூலியத் (Qabuliyat) அல்லது ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டனர். ஒரு பர்காஞுவிலோ அல்லது ஊரிலோ எதிர்பாராத கேடு விளையுமானுல் அப்போது அக்பர் நிலவரி

யில் கழிவு அளித்தார். அக் கழிவு கேட்டினுல் விளைந்த அழிவின் அளவைப் பொறுத்து இருந்தது. ஊர்த் தலைவர்கள், பட்வாரிகள் ஆகியோருடைய துணையுடன் பர்கானுவில் இருந்த அரசாங்க அதிகாரிகள் நிலவரி தண்டினர். இங்ஙனம் ரயத்துவாரி முறையானது முறையானதாகவும் நேர்மையானதாகவும் இருந்தது. ஆங்கிலோ இந்திய அறிஞர் அனைவரும் அதனைப் புகழ்ந்து பேசியுள்ளனர்.

தோற்றுவித்தவருடைய விழிப்புடன்கூடிய கவனம் காரணமாக அத் திட்டம் அக்பர் காலத்தில் நன்கு பணியாற்றியது. ஆயின், ஜஹாங்கீர் காலத்திலிருந்து அது சீர்குலையத் தொடங்கியது. ஷாஜஹான், அவுரங்கசீப் ஆகியோர் ஆட்சிக் காலங்களில் அக்பரின் 'ரயத்துவாரி' நிலவர ஏற்பாட்டுடன் குறிப்பிட்ட தொகை அளித்து வரிவாடகை பெறும் உரிமை கொண்ட குத்தகைக்காரர்களை நியமிக்கும் அழிவார்ந்த முறையும் புகுத்தப்பெற்றது. முதலில் ரயத்துவாரி முறையை ஜாகீர் நிலங்களில் இருந்து விலக்கினர். அதன் பின்னர், கால்சா நிலங்களிலும் குறிப்பிட்ட தொகைக்கீடாக வரிவாடகைக் குத்தகைவிடும் முறை பரவியது. பிற்கால முகலாயர் ஆட்சியில் தோடர் மாலின் 'பந்தோபஸ்த்' முறை அடியோடு நீங்கியது. குத்தகை முறையே பொது வழக்காகியது.

இடைக்காலம் முழுவதிலும் குடியானவர்களுக்கும் நிலவரி கொள்வோருக்குமிடையே தீராத பகைமை இருந்துவந்தது. நிலவரி கொள்வோர் அரசாங்க அதிகாரிகளாயினும், ஒப்பந்தக்காரர்களின் ஆட்களாயினும் அப் பகைமை நிலவி இருந்தது. பேரரசரின் விருப்பத்திற்கு மாருக, தீர்வைகள் அல்லது திறைகள் வடிவில் நியாயமான நிலவரிக்கும் அதிகமாகக் குடியானவர்களிடமிருந்து அரசாங்க அதிகாரிகள் நிதி திரட்டினர். அத் தீர்வைகள் ஏராளமாக, பலதரத்தவையாக இருந்ததால் அவற்றைத் தொகுத்துக் கூறுதல் இயலாத ஒன்ருகும். முகலாய அரசர்கள் அவற்றினை மீண்டும் மீண்டும் நீக்கியபோதிலும் அவை வேறு உருவெடுத்து வந்தவண்ணமிருந்தன. முறையற்ற வரிகள்; அக்கால நிலையற்ற தன்மை; நிலம் மன்னருக்குரியது; உழுவோர் உயிர்வாழ்வதற்கான குறைந்த அளவு விளைபொருளை விட்டு விளைச்சலில் பெரும் பகுதியைப் பெறும் உரிமை அவருக்கு உண்டு எனும் கருத்து ஆகியவற்றினுல், கூடுமானவரையில் நிலவரியைத் தட்டிக்கழிக்கவே குடியானவர் முயன்றனர். அதனுல். அதன் காரணமாக அவர்கள் கொடுக்கவேண்டிய வரிப் பாக்கி வளர்ந்துகொண்டே இருந்தது. இவற்றின் விளைவாக அக்பர், ஜஹாங்கீர் ஆகியோர் ஆட்சிக் காலங்கள் தவிர, முகலாயர் காலத்தில் இந்தியக் குடியானவர்களின் நிலை மிகவும் மோசமாக இருந்தது

## செலாவணியும் நாணயச்சாலேயும்

செலாவணியை நிதித்துறை கவனித்தது. நாணயச்சாலேயையும் கருவூலத்தையும் அதுவே கட்டுப்படுத்தியது. பாபரும் ஹுமாயூனும் பழைய செலாவணி முறையே தொடர்ந்து இருக்க அனுமதித்தனர். தங்கள் பெயர் பொறித்த நாணயங்களேயும் வெளியிட்டனர். அச் செலாவணி முறையை ஷெர் ஷா சீர்திருத்தி அமைத்தார். அவர் 175–180 தானிய எடையுள்ள வெள்ளி ரூபாயையும், செம்பு நாணயம் ஒன்றையும் புகுத்தினர். 1577ஆம் ஆண்டில் அரசாங்கச் செலாவணி முறையில் அக்பர் மேலும் சீர்திருத்தம் கொண்டுவந்தார். டில்லியிலிருந்த பேரரச நாணயச்சாலேயின் தலேவராக ஷிராஸைச் சார்ந்த காஜா அபுஸ் சமத் (Khwaja Abus Samad) என்பாரை நியமித்தார். பலவகைப்பட்ட எடையுள்ளவையும், மதிப்புக்கொண்டவையுமான தங்க, வெள்ளி, செம்பு நாணயங்களே அச்சிட்டு வெளியிட்டார். தங்க நாணயங்கள் மட்டும் 26 வகையில் இருந்தன. 172½ தானிய எடையுள்ள காசே முக்கிய வெள்ளி நாணயமாகும். சதுர வடிவிலும், வட்ட வடிவிலும் ரூபாய் நாணயங்கள் வெளிவந்தன. அக்பர் காலத்து முக்கியமான செம்பு நாணயங்கள் தாம் என்றும், பைசா அல்லது புளூஸ் என்றும் அழைக்கப்பட்டன. அவற்றின் எடை 323·5 தானியங்களாகும். நாற்பது தாம்கள் ஒரு ரூபாய்க்குச் சமமாகும். நாணயங்களில் தமது உருவத்தை அக்பர் பொறிக்கவில்லே. நாணயங்களில் தமது உருவிஃனப் பொறித்த முதல் முகலாய மன்னர் ஜஹாங்கீரே. ஒருவகை நாணயங்களில் வலக் கையில் மதுக் கோப்பை ஏந்தியிருப்பதுபோல அவரது உருவம் பொறிக்கப்பட்டுள்ளது. ஜஹாங்கீரின் மற்ருெரு வகை வெள்ளிக் காசுகளில் இராசி மண்டலம் பொறிக்கப்பட்டது. தாங்கள் வெளியிட்ட நாணயங்களில் தங்களது பெயர்களேப் பொறித்துக்கொண்டதைத் தவிர ஜஹாங்கீரும் ஷாஜஹானும் அக்பர் காலச் செலாவணி முறையை அப்படியே பின்பற்றினர் எனலாம். ஆயின், அவுரங்கசீப் காலத்தில் சிறிது மாற்றம் தோன்றியது. அவர் வெள்ளி நாணயத்தின் மதிப்பை ½ சதவிகிதத்திற்கு உயர்த்தினர். முகலாயப் பேரரசு வீழும் வரை அச் செலாவணி முறையே தொடர்ந்து வந்தது.

நாணயங்கள் செய்வதற்கான தங்கமும் வெள்ளியும் அநேகமாக வெளிநாடுகளிலிருந்தே வந்தன. குறிப்பாகக் கிழக்கு ஆப்பிரிக்காவிலிருந்து வந்தன. இந்தியாவிலிருந்து தங்கத்தையோ அல்லது வெள்ளியையோ யாரும் ஏற்றுமதி செய்யக்கூடாது. இந்தியாவில் இறக்குமதியான தங்கத்தைக் கொண்டு நாணயங்கள் செய்தனர். அணிகலன்களேயும் பிற ஆடம்பரப் பொருள்களேயும் செய்தனர்.

கருவூலத்தில் அதனை முடக்கியும் வைத்தனர். ராஜபுதனம், மத்திய இந்தியா, ஹிமாலயப் பிரதேசம் ஆகியவற்றில் செம்பு ஏராளமாகக் கிடைத்தது.

## முறை வழங்குதல்

இஸ்லாமியச் சட்டத்தின் அடிப்படையிலேயே சுல்தானியர் கால முறை வழங்கும் திட்டம் அமைந்தது. இஸ்லாமியச் சட்டத்தின்படி உண்மைச் சமயத்தில் நம்பிக்கைகொண்டவர்கள் என்றும், நம்பிக்கையற்றவர்கள் என்றும் மக்கள் இரு கூறுகளாகப் பிரிக்கப்பெற்றனர். இஸ்லாத்தில் நம்பிக்கையற்றவர்களை அரசின் குடிகளாகவே அச் சட்டம் மதிப்பதில்லை. வழக்கில் தொடர்புகொண்டவர் முஸ்லீம்களாக இருப்பினும், முஸ்லீம்களல்லாதாராக இருப்பினும் எல்லா வழக்குகளையும் மன்னர் இஸ்லாமியச் சட்ட அடிப்படையிலேயே தீர்த்து வைத்தார். பாபரும் ஹுமாயூனும் இதே பழக்கத்தைத் தொடர்ந்தனர். கோனுட்சியில் இஸ்லாமியக் கோட்பாட்டை மறுத்த அக்பரும் முறை வழங்கும் திட்டத்தில் அடிப்படை மாறுதல் ஏதும் செய்தாரில்லை. சிறுசிறு சீர்திருத்தங்களை மட்டுமே புகுத்தி அத் திட்டம் திறமையாகச் செயல்படும் வகையில் மாற்றி அமைத்தார். அவர் கொண்டுவந்த முக்கிய மாற்றத்தினுல் இஸ்லாமியச் சட்டத்தின் செயல் பரப்புக் குன்றியது. மேலும், கூடுமானவரை நிறைய வழக்குகளைப் பொது அல்லது மரபு வழக்கான சட்ட எல்லைக்குக் கொண்டுவரும் வகையில் அச் சட்டம் விரிவடைந்தது. உதாரணமாக, இஸ்லாமியச் சமயக் கொள்கையை மீறுதல், இந்து அல்லது கிறிஸ்தவ சமயத்தைப் பரப்புதல் போன்றவற்றிற்கு இஸ்லாமியச் சட்டப்படியான மரண தண்டனையை அக்பர் வழங்கவில்லை. இந்துக்கள் கட்சிக்காரர்களாக இருந்த வழக்குகளைத் தீர்த்துவைக்க இந்து நடுவர்களையே அவர் நியமித்தார். இங்ஙனம் இத்தகைய மாற்றங்கள் தவிர, அக்பரின் ஆட்சிக் காலம் உள்பட முகலாயர் காலத்தில் இஸ்லாமிய முறை வழங்கும் திட்டம் தொடர்ந்து வழக்கிலிருந்தது.

முகலாயர் காலம் முழுவதிலும் பேரரசர் நீதியின் நிலைக்களனுக விளங்கினுர். நீதி வழங்குவதற்கென்றே ஒதுக்கப்பெற்ற புதன்கிழமைகளில் திறந்த அரசவையில் மன்னர் வழக்குகளை நேரடியாக விசாரித்துத் தீர்ப்புக் கூறினுர். தலைமைக் காஸி, பிற நீதிபதிகள், சமயநூல் வல்லார் ஆகியோரும் அரசவையில் வீற்றிருந்தனர். பேரரசரின் அவையே உயர் மேல் முறையீட்டு மன்றமாகத் திகழ்ந்தது. ஆயின், சில சமயங்களில் பேரரசர் முதல் முறையாக நேரடியாக

வரும் வழக்குகளையும் விசாரித்தார். எவ்வாறெனினும், மிகச் சிலரே அரசவையை அணுக முடிந்தது. மேலும், வழக்குகளைத் தீர்த்து வைப்பதற்குப் பேரரசருக்குக் காலம் அதிகமாகக் கிடைப்பதுமில்லை.

அடுத்த நிலையில் இருந்த உயர்நீதிமன்றம் தலைநகரில் இருந்த தலைமைக் காஸியினுடையது. அவர் குரான் விதி முறைகளின்படி வழக்குகளைத் தீர்த்துவைத்தார். அந் நீதிமன்றமும் மேல்முறையீட்டு மன்றமேயாயினும், பேரரசரைப்போலத் தலைமைக் காஸியும் சில சமயங்களில் நேரடியாக வரும் வழக்குகளையும் விசாரித்தார். ஒவ்வொரு மாநிலத்தின் தலைநகரிலும் மாநில காஸி ஒருவர் பணியாற்றினார். அவரைப் பேரரசின் தலைமைக் காஸி நியமித்தார். நகரங்களிலும், பெரும்பான்மை முகமதியக் குடிகள் வாழ்கின்ற பெரிய ஊர்களிலும் காஸிகள் நியமிக்கப்பெற்றனர். 'மாநில காஸியின் அதிகார எல்லை மிகப் பரந்துகிடந்ததாலும், அவரது வேலைச்சுமையைப் பகிர்ந்துகொள்வதற்கான தலத் துணைவரோ அல்லது உதவியாளரோ இல்லாததாலும் மாநிலத்தில் எழுகின்ற வழக்குகளில் சிலவற்றையே அவரால் விசாரிக்க முடிந்தது'. (Sarkar, 'Mughal Administration', பக். 96–97). அதன் காரணமாக, நாட்டுப்புறங்களிலும், ஓரளவு பட்டணங்களிலும், பெரு நகரங்களிலும் பெரும்பான்மையான வழக்குகளைப் பஞ்சாயத்துகளே தீர்த்துவைத்தன.

முகலாய ஆட்சி முறையிலேயே மிக மெலிந்த துறையாக இருந்தது முறைவழங்கும் துறையே எனலாம். மத்திய அரசாங்க அலுவலகத் துறை ஒன்றின் கட்டுப்பாட்டில் பல படிநிலைகளில் இருந்த நீதிமன்றங்கள் அப்போது அமையவில்லை. மக்கள் அனைவருக்கும் பொதுவான சட்டத்தொகுப்பு அங்கில்லை. அதேபோன்று சட்டத்திற்குப் பொருள் விளக்கம் தருகின்ற உயர்நீதிமன்றமும் இல்லை. ஒரே சமயத்தில் தனித்தனியாகச் செயலாற்றுகின்ற மூன்று வகை முறை வழங்கு அமைப்புகளை முகலாயர் பெற்றிருந்தனர். சமய நீதிமன்றங்கள் காஸிகளின் தலைமையில் இயங்கிவந்தன. பொதுச்சட்ட வழக்குமன்றங்கள் ஆளுநர் தலைமையிலும், பிற உள்நாட்டு அதிகாரிகளின் தலைமையிலும் பணியாற்றின. பேரரசரும் அவரது ஆட்களும் அரசியல் முறை மன்றங்களுக்குத் தலைமைதாங்கினர்.

## சமயச் சட்ட நீதிமன்றங்கள்

ஆரம்பகாலத்தில் எல்லாப் பொது உரிமை வழக்குகளையும் குற்ற இயல் வழக்குகளையும் காஸியே தீர்த்துவைத்தார். ஆனால், முகலாயர் காலத்தில் இப் பழக்கம் கைவிடப்பெற்றது. சமயத்

தோடு நெருங்கிய தொடர்புகொண்ட வழக்குகளையே காஸி விசாரித்தார். சான்ருகக் குடும்ப விதிமுறைகள்பற்றி எழுகின்ற பூசல்களின் அடிப்படையில் அமைந்த வழக்குகள், சமயக் கொடைகள் சம்பந்தமாக வருகின்ற வழக்குகள் முதலானவை காஸியிடம் வந்தன. அவற்றினைக் குரான் விதிமுறைகளின்படி அவர் தீர்த்துவைத்தார். முன்னுல் வந்த சமயநூல் வல்லார்களும், முஃப்தி களும் (Mufti) அளித்த பொருள்விளக்கங்களை ஏற்க காஸி கடமைப் பட்டவர். முதலில் வகீல்–இ ஷாரா அல்லது 'குரான் விதிமுறைகளில் வல்லவர் எனப் பெயர்பெற்றிருந்த முப்தி, ஏறக்குறைய தற்கால சட்டத் தலைமைப் பணி முதல்வரை ஒத்தவர். அவர் காஸியின்மீது மிகுந்த செல்வாக்குக் கொண்டிருந்தார். வஃப் (Waqfs) அல்லது கொடையையும், அனுதைகள், செயலிழந்தோர் போன்ரோருடைய சொத்துகளையும் நிர்வகித்தலும் காஸியின் கடமையாகும். ஆண் உறவினர் அற்ற முஸ்லீம் மங்கையரின் திருமண ஒப்பந்தத்திற்கான ஆவணங்களை வரைவது அவரது பொறுப்பாகும். காஸியின் நீதி மன்றத்தில் முஸ்லீமல்லாதாருடைய சாட்சி செல்லாது.

முஸ்லீம் அல்லது குரான் சட்டத்தையே காஸி பயன்படுத்தினர். வேறு எந்தச் சட்டத்தையும் அரசு ஏற்கவில்லை. இந்தியாவிற்கு வெளியில்தான் இஸ்லாமியச் சட்டம் தோன்றியது. அது அரசாங்கம் இயற்றிய சட்டமன்று; திருவெளிப்பாடாகத் தோன்றி யது. அது வளர்வதற்கு வேறு இரண்டு ஆதாரங்களும் உண்டு. முன் நிகழ்வுகள், வழக்குச் சட்டங்களும் சட்ட இயல்வல்லார் கருத்துகளுமே அவ்விரு ஆதாரங்களாகும். ஆயின், இவை இரண்டுமே திருமறையில் இல்லாத ஒரு கொள்கையையோ அல்லது விதியையோ கூட்டாது, குரானின் பொருளை வெளிப் படையாக எடுத்து விளக்கவல்லவையே என்பது குறிப்பிடத் தக்கது. மேலும், இஸ்லாமியச் சட்டத்தின் கருத்துப் படிவங்கள் அன்னிய நாட்டவையாக இருந்ததால் இந்திய காஸி ஒருவர் எத்துணைதான் கற்றறிந்தவராக இருப்பினும், சட்டம் சார்ந்த கொள்கையை வகுப்பதிலும், குரானில் தெளிவற்று இருக்கின்ற ஒன்றை விளக்குவதிலும், அதில் விளக்கமாகக் குறிப்பிடாத வழக்கு களில் குரான் சட்டத்தின் போக்கு இப்படித்தான் அமைந்திருக்கும் எனக் கருதி அதற்குத் துணையாக ஒன்றினைப் புகுத்துவதிலும், அவ ருடைய முடிவு அதிகாரபூர்வமானது அன்று எனக் கருதப்பெற்றது. அதனுல் ஹனுஃபி (Hanafi), மலாகி (Malahi), ஷாபி (Shafi), ஹன்பலி (Hanbali) எனும் நான்கு வகையான முஸ்லீம் சட்ட வல்லுநர்குழுக்கள் தொகுத்து வெளியிட்ட முஸ்லீம் சட்டத்தொகுப்பு களையே காஸிகள் நம்பியிருந்தனர். ஹனுபி அல்லது பழைமை சார்ந்த சுன்னி பிரிவினரின் சட்டத்தொகுப்பைத்தான் முகலாயப்

பேரரசர்கள் பின்பற்றினர். அவுரங்கசீப் இரண்டு இலட்ச ரூபாய் செலவில் சமய இயல் வல்லார்க் குழுவினைக் கொண்டு ஹனபி பிரிவின் சட்டத்தின் சாரத்தைத் தொகுத்து அளிக்க ஏற்பாடு செய்தார். அது ஃபதவா-இ-ஆலம்கீரி (Fatawa-i-Alamgiri) எனப் பெயர்பெற்றது. 'இங்ஙனம் அரேபியா அல்லது எகிப்தில் ஏற்பட்ட சட்டமுறை சார்ந்த மாற்றங்களைப் பிரதிபலிக்கும் நிலையிலல்லாது தானாக வளரும் அல்லது மாற்றங்கொள்ளும் நிலையில் இந்தியாவில் முஸ்லீம் சட்டம் இல்லை.' (J.Sarkar, "Mughal Administration,' பக்.101.)

இத்தகைய குறைபாடுகள் இருந்தமையாலும், இஸ்லாமிய அரசில் சமயச் சட்டத்திற்குப் புறம்பான தனிப்பட்ட பொதுஉரிமைச் சட்டம் இல்லாத காரணத்தினாலும் நமது இடைக்கால வரலாற்றில் முறை வழங்கும் செய்திகளில் முஸ்லீம் அல்லாதவர்கள் மிகுந்த துன்பத்திற்குள்ளாகி இருக்கவேண்டும். ஆட்சி சார்ந்த பல கூறுகளை அக்பர் திருத்தியமைத்தபோதிலும் தொடர்ந்து இஸ்லாமியச் சட்டத்தின் அடிப்படையிலேயே இயங்கிவந்த குற்ற இயல் நீதி முறையில் அவர் தலையிடவே இல்லை. இங்ஙனம் இஸ்லாமியச் சட்ட முறையின் ஆதிக்கத்தில் இந்துக்கள் அடைந்த இன்னல்களை நாம் எளிதாக உணர்ந்துகொள்ள முடியும்.

## சமயம் சாராச் சட்ட வழக்கு மன்றங்கள்

அரசப் பகர ஆட்கள், பிற தலஅதிகாரிகள், ஃபாஜ்தார்கள், கொத்தவால்கள் ஆகியோர் சமயம் சாரா வழக்கு மன்றங்களின் தலைவர்களாகத் திகழ்ந்தனர். அக்பர் காலத்தில் இந்துக்கள் சம்பந்தப்பட்ட இத்தகைய வழக்குகளைத் தீர்ப்பதற்காக பிராமணப் பண்டிதர்கள் நியமிக்கப்பெற்றனர். ஊர் பஞ்சாயத்துகளும், ஜாதி பஞ்சாயத்துகளும் இவ்வகையைச் சார்ந்தவையே. சமயம் சாரா வழக்குமன்றங்களின் நடுவர்கள் காஸிக்கு அடக்கமானவர்களல்லர். காஸிக்கும் அவர்களுக்கும் எவ்விதத் தொடர்பும் கிடையாது. அவர் ஷரா அல்லது குரான் சட்டத்தையன்றி மரபுச் சட்டம் அல்லது மரபு வழக்கச் சட்டத்தையே பயன்படுத்தினர்.

## அரசியல் முறை மன்றங்கள்

புரட்சிசெய்தல், கலகம் விளைத்தல், களவாடுதல் வழிப்பறி செய்தல், பொதுப்பணத்தைக் கையாடுதல், அரசாங்க அதிகாரிகளைக் கொலைசெய்தல் போன்ற அரசியல் குற்றவழக்குகளை மன்னரோ அல்

லது மாநில ஆளுநர், ஃபாஜ்தார்கள், கொத்தவால் போன்ற பகர ஆட்களோ விசாரித்தனர். அவர்கள் அரசின் தேவைகளுக்கேற்பத் தீர்ப்புகள் வழங்கினரேயன்றிக் குரான் விதிமுறைகளின்படி அல்ல. இத்தகைய வழக்குகளோடு காஸிக்கு எத்தகைய தொடர்பும் இல்லை.

## குற்ற வகைகள்

இஸ்லாமியச் சட்டப்படி குற்றங்கள் மூன்று வகைப்படும். அவையாவன: (1) ஆண்டவனுக்கு எதிரான குற்றங்கள்; (2) அரசுக்கு எதிரான குற்றங்கள்; (3) தனி மனிதருக்கு எதிரான குற்றங்கள்.

ஆண்டவனை அவமதித்தல் எனும் முதல்வகையான குற்றங் களுக்கு மன்னிப்பே கிடையாது. அவை ஆண்டவனின் உரிமைக் குட்பட்டவை (haqq-Allah). ஆதலால் நிச்சயமாகத் தண்டனைக் குரிய குற்றங்களாகும். மற்ற இருவகைக் குற்றங்களும் மன்னிக்கக் கூடியவை. மேலும், குற்றம் செய்தவரோடு சமரசம் செய்துகொள்ளக் கூடியவை. இங்ஙனம் மனிதரைக் கொலை செய்தல் கடவுளின் கட்டளையையோ அல்லது அரசின் அமைதி யையோ மீறுவதாகாது என்பது விநோதமே. கொலைசெய்தல் என்பது கொலை செய்யப்பெற்றவனின் குடும்பத்திற்கு இழைக்கின்ற தீங்கு தான். அதுவும் கொலையுண்டவனின் நெருங்கிய உறவினருக்கு குருதிப் பணம் அல்லது இழப்பீட்டுப் பணம் அளிப்பதன் மூலமாகச் சரிசெய்துவிடக்கூடியது. அதற்குமேல் நாட்டின் நிர்வாகத் தலைவரோ அல்லது சமயச் சட்ட நீதிபதியோ எவ்வித கவனமும் செலுத்தவேண்டியதில்லை. கொலையுண்டவரின் உறவினர்கள் இழப் பீட்டுப் பணத்தை வாங்க மறுத்துப் பழிக்குப் பழிவாங்க வேண்டு மென்று வற்புறுத்தும்போதுதான் காஸி மரண தண்டனை விதித்தார். அரசாங்கமும் அதனை நிறைவேற்றிவைத்தது. (Sarkar, 'Mughal Administration,' பக். 102)

## முஸ்லீம் சட்டப்படி தண்டனைகள்

குற்றங்களுக்கென ஹத் (Hadd), தஸீர் (Tazir), கிஸாஸ் (Qisas) தாஷிர் (Tashhir) எனும் நான்கு வகைத் தண்டனைகள் உண்டு. ஹஜாத் (hajat) அல்லது சிறையிடல் எனும் மற்றுமொரு தண்டனை யும் வழக்கிலிருந்தது.

## ஹத்

இது கடவுளுக்கு எதிரான குற்றங்களுக்கான தண்டனை. அதனால் மானிடர்-எவரும் அதனை மாற்றுதல் கூடாது. ஹத் எனும்

தலைப்பில் பின்வரும் குற்றங்களும் அவற்றிற்கான தண்டனைகளும் தரப்பட்டுள்ளன.

| குற்றம் | தண்டனை |
|---|---|
| 1. பிறன் மனை விழைதல் | கல்லெறிந்து கொல்லுதல். |
| 2. மணமாகுமுன் ஆண் பெண் உறவு (Fornication) | 100 கசையடிகள். |
| 3. மணமான மங்கையைக் கூடா ஒழுக்கமுடையவள் எனப் பொய்யுரைத்தல் | 80 கசையடிகள். |
| 4. திராட்சை ரசம் போன்ற மயக்கம் தரும் பானங்களை அருந்துதல் | 80 கசையடிகள். |
| 5. களவு | வலக் கையை வெட்டுதல் |
| 6. வழிப்பறி | கைகளையும், பாதங்களையும் துணித்தல் |
| 7. கொள்ளையுடன் கொலை | வாளால் வெட்டிக் கொல்லுதல் அல்லது சிலுவை போன்றவற்றில் அறைந்து கொல்லுதல். |
| 8. சமய எதிர்ப்பு (Kufr) | மரணம். |

## தஃஸீர்

ஹத்தில் சிறப்பாகக் குறிப்பிடப்பெறாத குற்றங்கள் இத் தலைப்பில் அடங்கின. இவ்வகைக் குற்றங்களுக்குத் தண்டனை வழங்கும்போது நீதிபதியானவர் தம் விருப்புரிமையைப் பயன் படுத்தலாம். 'ஆண்டவனின் விருப்பம்' எனும் வகையில் தஃஸீர் குற்றங்கள் வராததாலும் குற்றவாளியைத் திருத்தும் நோக்கத் தோடும் நீதிபதி விரும்பினால் குற்றவாளியை மன்னித்துவிட முடியும். பொதுமக்களின் கண்டனம், வழக்குமன்ற வாயில்வரையில் குற்றவாளியை இழுத்துச் செல்லுதல், பொதுமக்களுடைய வெறுப்பிற்கு இலக்காகுதல், சிறையிலிடல், நாடுகடத்துதல், கன்னத்தில் அறைதல், 3 முதல் 75 வரையிலான கசையடி

கொடுத்தல் போன்ற தண்டனைகள் குற்றவாளியின் தரத்திற்கு ஏற்றாற்போல அளிக்கப்பெற்றன. சில சமயங்களில் தண்டமும் விதிக்கப்பெற்றது.

## கிஸாஸ் அல்லது பழிக்குப் பழிவாங்குதல்

கொலை செய்தல், ஆழமான புண் உண்டாக்குதல் ஆகியவற்றிற்குச் சாதாரணமாகப் பழிக்குப் பழிவாங்குவதே தண்டனையாக அமைந்தது. பழிக்குப்பழி கோருவதோ, இழப்பீடு கேட்பதோ பாதிக்கப்பெற்றவர் அல்லது அவரது நெருங்கிய உறவினரின் தனிப்பட்ட உரிமையாகும். அவ் உரிமை புறக்கணிக்கப்படுமானால் வழக்கினை காஸியின் விசாரணைக்குக் கொண்டுசெல்லலாம். கொலையாளி அளிக்க முன்வந்த இழப்பீட்டுப் பணத்தை இறந்தவரின் உறவினர் ஏற்றுக்கொண்டாலும், இழப்பீட்டுப் பணம் இன்றியே குற்றவாளியை அவர்கள் மன்னித்துவிட்டாலும் அரசர் அக் குற்றத்தைப்பற்றிக் கவனம் செலுத்துவதில்லை. விவிலிய நூலின் பழைய ஏற்பாட்டின் முதல் ஐந்து ஏடுகளில் கண்ட (Mosaic Law) சட்டப்படி, சில விதிவிலக்குகளோடு, 'கண்ணுக்குக் கண், பல்லுக்குப் பல்' என்ற வகையில் சிறு குற்றங்களுக்குப் பழிக்குப்பழிவாங்கினர்.

## தாஷிர் அல்லது பொதுவிடத்தில் இழிவு செய்தல்

இஸ்லாமியச் சட்ட நூல்களில் இடம்பெற்ற இத் தண்டனையை இடைக்காலம் முழுவதிலும் முஸ்லீம் மன்னர்கள் அளித்துவந்தனர். இந்துக்களும் இதனை ஏற்றுக்கொண்டனர். குற்றவாளியின் தலையை மொட்டையடித்தல், குற்றவாளியின் முகம் வால் பக்கம் திரும்பியிருக்குமாறு அவனைக் கழுதைமீது ஏற்றிப் புழுதியைப் பூசியும், கழுத்தில் செருப்பு மாலையை அணிவித்துப் பேரொலியுடன் முக்கிய வீதிகளின் வழியாகக் கொண்டுசென்று நகரைவிட்டு அவனைத் துரத்துதல், சில வேளைகளில் அவன் முகத்தில் கருப்புச் சாயம் பூசுதல் போன்றவை வழக்கமான தாஷிர் வகைகளாகும்.

புரட்சி செய்தல், பொதுப்பணத்தைக் கையாடுதல், நிதி செலுத்தத் தவறுதல் போன்ற அரசிற்கெதிரான குற்றங்கள் பற்றிக் குரான் சட்டம் வெளிப்படையாக ஒன்றும் கூறவில்லை. அதனால் அத்தகைய வழக்குகளில் பேரரசரின் இச்சைப்படியே தண்டனைகள் வழங்கப்பெற்றன. மரண தண்டனை அளிக்கும்

போது சில சமயங்களில் குற்றவாளியை யானையின் காலில் இடறவைத்தனர். உயிருடன் புதைத்தல், நாகப்பாம்பைக் கொண்டு கடிக்கச்செய்து உயிரைப்போக்குதல், நெரித்துக் கொல்லுதல் போன்ற முறைகளும் பயன்பட்டன. பலவகையான சித்திரவதைகளும் தண்டனைகளாக அமைந்தன. கீழ்வரும் குற்றங் களுக்கு மரண தண்டனை விதித்தனர்:—

1. கொலையுடன் கொள்ளை.

2. கொலையுண்டவரின் அடுத்த உறவினர் இழப்பீட்டுப் பணம் ஏற்க மறுக்கும்போது கொலை செய்தவரைக் கொலைசெய்தல்.

3. பிறன் மனை விழைதல்.

4. இஸ்லாத்தின் கொள்கை மீறல்.

5. புறச் சமயம்.

6. தீர்க்கதரிசியான நபிநாயகத்திற்கு (Sable-al-Rasul). அவமதிப்பு,

மேலே குறித்தவற்றைத் தவிர முகலாயப் பேரரசர்கள் பின் பற்றிய ஹனுபி பிரிவு முஸ்லீம் சட்டத்தின்கீழ்ப் பின்வரும் மூன்று வழக்குகளிலும் மரணதண்டனை விதித்தல் முறையாகும்.

1. அல்லாவை அல்லது நபிநாயகத்தைப் பழித்த ஒருவரு டைய - உண்மைச் சமயத்தில் நம்பிக்கை வைக்காத - உறவினரைக் கொல்லுதல்.

2. உண்மைச் சமயத்தில் நம்பிக்கை வைக்காத போர்க் கைதி ஒருவரை, 'கொல்லுவதற்கான அதே அளவு காரணங்கள் உயிர்ப்பிச்சை அளிப்பதற்கும் இருக்கும்போதும்', கொல்லுதல்.

3. தமது உயிர், உடைமை, உதவியாளர் ஆகியவற்றைக் காப்பதற்கென்று தற்காப்பிற்காகக் கொலை செய்தல்.

பொதுவாகக் கடனைத் திருப்பிக்கொடுக்காமல் இருத்தலுக்கும் மற்றச் சிறுசிறு குற்றங்களுக்கும் சிறைத் தண்டனை (Lajax) வழங்கப் பெற்றது.

## சமயக் கொள்கை

முகலாயரது காலம் முழு அளவில் சமயப்பொறை வாழ்ந்த காலம் எனவும், சமயக்கருத்தில் உரிமையும், எல்லாச் சமூகத்

தாரும் வெளிப்படையாக வழிபடும் உரிமையும் முகலாய மன்னர்கள் வழங்கினர் எனவும் தற்கால அறிஞர் சிலர் கருத்துக் கொண்டுள்ளனர். ஆயின், சமகால ஏடுகளை ஆழ்ந்து ஆராயும் போது இத்தகைய கொள்கை தவறுனது என்பது விளங்கும். 1526 முதல் 1748 வரையிலான 200 ஆண்டுகளுக்கு மேலிருந்த முகலாயர் ஆட்சியில் அக்பரின் ஆட்சிக் காலமாகிய (1628–1657) ஏறக்குறைய 30 ஆண்டுகளுக்குத்தான் முழுச் சமயச் சுதந்திரமும் உரிமையும் இந்துக்களிடம் இருந்தன. 1605 முதல் 1627 வரையிலான ஜஹாங்கீரின் ஆட்சியில் சமயப்பொறை ஓரளவு குறைந்தது. 1628 முதல் 1657 வரையிலான ஷாஜஹானின் ஆட்சியில் அது மேலும் குறைந்தது. அதனோடு அக்பர் காலத்திற்கு முந்தி இருந்த நிலையை மீட்பதற்கான முயற்சியும் நடைபெற்றது. அவுரங்கசீப், அக்பரின் சீர்திருத்தங்களை அழித்தார் என்பதும், இஸ்லாமின் ஆதிக்கத்தை நிலைநாட்டியதோடு முஸ்லீம் அல்லாதாருக்குச் சமயப் பொறை வழங்குவதற்காக இருந்த எல்லா நடவடிக்கைகளையும் நிறுத்திவைத்தார் என்பதும் யாவரும் நன்கு அறிந்ததே. அவருக்குப் பின் ஆட்சிக்கு வந்தவர்கள் அவரது கொள்கையையே பின்பற்றினர். பிற்கால முகலாயப் பேரரசர் கையிலிருந்து அதிகாரம் வெளியேறும் வரையில் கோட்பாட்டளவிலாவது சமய ஒறுப்புக்கொள்கை தொடர்ந்து வந்தது. இங்ஙனம் கலப்பற்ற சமயப்பொறை வாழ்ந்த காலம் முகலாயருடைய ஆட்சிக்காலம் எனக் கூற இயலாது என்பது தெளிவு. உண்மை என்னவென்றுல், அக்காலப்பகுதியில் இரண்டு சக்திகள் ஒன்றோடொன்று மோதின. சமயப்பொறைக்கும் முஸ்லீம் சமய வெறிக்கும் இடையே நடைபெற்ற போராட்டத்தில் இறுதியில் சமயவெறியே வெற்றிபெற்றது.

சுல்தானியர் காலத்து மன்னர்களைவிட வாழ்வில் பரந்த நோக்கங்கொண்ட பண்புள்ள மனிதராக பாபர் திகழ்ந்தபோதிலும் இஸ்லாத்தின் ஆதிக்கத்தை நிலைநிறுத்த வேண்டும், முஸ்லீம் அல்லாதாருக்கு சமயச் சுதந்திரம் வழங்கக் கூடாது என்ற குரான் சார்ந்த கொள்கையையே அவர் பின்பற்றி நடந்தார். அவரது சொந்த வாழ்க்கை விளக்க நூலில் அவர் இந்துக்களுக்கு எதிராக நடத்திய புனிதப் போரைப்பற்றி (Jihad) பல இடங்களில் குறிப்பு வருகின்றது. இந்துக்களைப் பல இடங்களில் கபீர்கள் என்றும் அந் நூல் குறிப்பிடுகின்றது. ராணு சங்கா (Rana Sanga) பாபருக்கு வெறுப்பிற்குரிய புறச் சமயியாகக் காட்சியளித்தார். அத் தீரமிகு ராஜபுத்திரருடனும், சாந்தேரியின் மேதினி ராயுடனும் (Medni Rai) ஆன தமது போரை, புறச்சமயத்தாருக்கு எதிராக இஸ்லாத்தின் புகழினை உயர்த்த எழுந்த போர் என்று பாபர் விளக்கினுர். ஒரு

இந்துவின் மரணத்தைப்பற்றிக் குறிக்க வந்த போது 'சமய நம்பிக்கை அற்ற அவர் நரகம் சேர்ந்தார்' (Kafir lea Jahannum Rafi) என்ற மரபாக வரும் அடைமொழியையே இந்தப் 'பண்புள்ள' பேரரசர் பயன்படுத்தினர். அவர் பத்திர முத்திரை வரியிலிருந்து முஸ்லீம்களுக்கு விலக்கு அளித்தார். அதனை இந்துக்கள்மீது மட்டும் சுமத்தினர். சாந்தேரியிலிருந்த கோயிலை அவர் இடித்துத் தள்ளினர். ஸ்ரீ ராமச்சந்திரரின் பிறப்பிடத்தைக் குறிப்பதாக அமைந்த அயோத்தியில்(Fairabad) இருந்த திருக்கோயிலை இடிக்கு மாறு தமது அதிகாரிகளுள் ஒருவரான மீர்பாகிக்கு (Mirbagi) ஆணையிட்டார். அவரது ஆணையின் பேரில் அவ்விடத்தில் ஒரு மசூதி 1528-29-ல் கட்டப்பெற்றது (அந்த மசூதியின்மீதான கல் வெட்டினைக் காண்க; ('The U. P. Historical Society Journal, 1936') பாபரின் ஆட்சிக்காலத்தில் வேறு சில இந்து சமணக் கோயில்கள் தரைமட்டமாயின. "ஏற்கெனவே இருந்த சமயக் கொள்கையின் கடுமையைத் தளர்த்தத் தேவையான நடவடிக் கையை பாபர் எடுத்தார் என்று நம்புதற்கான காரணம் ஏதும் இல்லை" என்று பேராசிரியர் ஸ்ரீ ராம் சர்மா அவர்கள் எழுதியுள்ளார். [1]

இந்துக்களைப் பொறுத்த சமயக் கொள்கையில் தமது தந்தையை ஹுமாயூனும் பின்பற்றினர். சித்தூர் ராஜபுத்திரர்களுடன் குஜராத்தின் பகதூர் ஷா போரிட்டுக்கொண்டிருந்தபோது அவரைத் தாக்க ஹுமாயூன் மறுத்துவிட்டார். சமய நம்பிக்கையற்றவரை வீழ்த்தி, அதனால் சமயம் சார்ந்த பெருமையைத் தேடிக் கொண்டிருந்த சோதர முஸ்லீமைத் தாக்கினர் என்ற அவப்பெயர் தமக்கு வரக்கூடாது என்பதே அதற்குக் காரணமாகும். எவ்வா றெனினும், ஷியா சமயப் பிரிவைப் பொறுத்துக்கொள்ள வேண்டிய கட்டாயமான சூழ்நிலை ஹுமாயூனுக்கு ஏற்பட்டது. அவரை இந்தியாவிலிருந்து வெளியேற்றிய ஷேர்ஷா இஸ்லாமிய ஆதிக் கத்தை நிலைநிறுத்துவதில் மேலும் மிகுந்த ஆர்வம் காட்டினர். அவர் ஜோத்பூரிலிருந்த முக்கிய இந்துக்கோயிலை இடித்து அதனை மசூதியாக மாற்றியமைத்தார். அம் மசூதி இன்றளவும் இருந்து வருகின்றது. சமய நம்பிக்கையற்ற முக்கிய ஒருவரைக் கொன்று அதனால் சமயம் சார்ந்ததான கீர்த்தி பெறுவதற்காக ரெய்சினின் (Raisin) புரான் மாலுக்கு (Puran Mal) எதிராக ஒரு புனிதப் போரை ஷேர்ஷா துவக்கினர். இஸ்லாம் ஷாவோவெனின் முற்றிலும்

---

1 பாபரின் இறுதி விருப்ப ஆவணத்தைப்பற்றிக் குறிப்பிட்டு, இந்துக்களிடம் பெருந்தன்மையோடு நடந்துகொள்ள வேண்டுமென்றும், பசுவதையை நீக்க வேண்டுமென்றும் ஹுமாயூனுக்கு பாபர் ஆணையிட்டிருந்தார் என விளக்கும் போபாலில் ஆவணம் போலியானது; அதனைப் பொருட்படுத்த வேண்டியதில்லை,

முஸ்லீம் சமய இயல் நூல் வல்லாரின் பிடியில் சிக்கியிருந்தார். இந்துக்களையும் முஸ்லீம் புறச் சமயிகளையும் ஒறுப்பது அவரது சமயக் கொள்கையாக இருந்தது.

பேரரசின் சமயக் கொள்கையில் தீவிர மாறுதலைத் தோற்று வித்தவர் அக்பரே. 'உண்மை எங்கும் வாழ்வது' என நம்பிய அக்பர் முதன்முதலாக இந்துக்கள் அளிக்கவேண்டியிருந்த புண்ணியச் செலவு வரியை 1563ஆம் ஆண்டில் நீக்கினார். அடுத்த படியாக 1564ஆம் ஆண்டில் மிகுந்த வெறுப்பிற்குள்ளான ஜெஸியா வரியை நீக்கினார். இங்ஙனம் அவர் தமது மக்கள் அனைவருக்கும் பொதுவான குடியுரிமையைத் தோற்றுவித்தார். அதன் பிறகு ஆலயங்கள், மாதா கோயில்கள் ஆகியவற்றைக் கட்டுதல் உள்ளிட்ட முஸ்லீம் அல்லாதாரின் பொது வழிபாட்டிற்குரியவற்றின் மீதான பிற தடைகள் யாவற்றையும் மெதுவாக நீக்கினார். தமது இந்து அரசியர் அரண்மனையிலேயே கடவுட் படிமங்களை வைத்து வழிபட அனுமதித்ததன் மூலமாக இந்துக்களின் பொது வழிபாட்டு விழாக்கள் முஸ்லீம்களின் காதுகளுக்கும் கண்களுக்கும் தெய்வ நிந்தனையானவைகளாகும் என்னும் மாயைக்கு அவர் ஒரு மூற்றுப் புள்ளி வைத்தார். அவர் மேலும் ஒரு படி சென்று, வற்புறுத்தி இஸ்லாம் சமயத்தில் சேர்ப்பதைத் தடை செய்தார். அதனோடு கட்டாயச் சமய மாற்றத்தின்மூலமாக முஸ்லீமாகிவிட்ட சக இந்துக்களை மீட்கவும் அனுமதி வழங்கினார். (Badayuni, Vol. II, பக்கம் 398.) 1603ஆம் ஆண்டில் விருப்பமுள்ளோரைக் கிறித்தவ சமயத்தில் சேர்த்துக்கொள்ள அனுமதி தந்தார். அரசாங்க சமயம் இஸ்லாம் என்ற நிலையை மாற்றித் தமது பேரரசில் வாழ்ந்த எல்லாச் சமயங்களும் சமம் என்ற நிலையை உண்டாக்கினார். நாட்டு மக்களில் பெரும்பான்மையினராக இருந்த இந்துக்களின் சமய மனப் பாங்குகளை மதிக்கவேண்டுமென்பதற்காக அரண்மனை மடைப் பள்ளியில் மாட்டிறைச்சி பயன்படுத்துவதை அறவே ஒழித்தார். ஆண்டின் சில நாட்களில் இறைச்சிக்காக விலங்குகளைக் கொல் வதைத் தடைசெய்தார். தனிப்பட்ட முறையில் அவர் புலால் உண்பதை அநேகமாகக் கைவிட்டார். இந்துக்களின் பலவகை யான ஆடைகளை அணிந்ததோடு இந்து வாழ்க்கை முறைகளையும் கடைப்பிடிக்கலானார். ரக்ஷ பந்தன் (Raksha-Bandhan), தீபாவளி, வஸந்த், சிவராத்திரி போன்ற சில இந்துத் திருவிழாக்களில் அவர் கலந்துகொண்டார். அரசாங்கத்தில் மிக உயர்ந்த பதவிகளையும் இந்துக்களுக்கு அளித்தார். இங்ஙனம் முழு அளவில் சமயப் பொறை துலங்கும் சகாப்தம் ஒன்றினை அக்பர் துவக்கிவைத்தார்.

இவற்றுடன் அமையாது நாட்டிலுள்ள மதிவாணர்களிடையே சமய ஒற்றுமை நிலவுவதை அவர் பெரிதும் விரும்பினர். அதன் காரணமாக தீன்-இ-லாஹி எனப் பெயர்கொண்ட சமயம் ஒன்றையே நிறுவினர். அப் புதிய சமயத்தின் முக்கியக் கூறுகள் பற்றி முந்தைய இயலிலேயே விளக்கியதால் இங்கே மீண்டும் அதைப் பற்றிக் குறிப்பிடத் தேவையில்லை. சமயக் கசப்பையும் பூசலையும் முடிவிற்குக் கொண்டுவர வேண்டுமென்ற உயர்ந்த நோக்கத்துடனே தீன்-இ-லாஹியை அக்பர் நிறுவினர் என்று கூறினல் போதும். அக் காலத்தில் இந்துக்களும் முஸ்லீம்களும் மிகப் பழைமை விரும்பிகளாக இருந்தனர். தங்களது மரபாக வந்த நம்பிக்கைகளையும் பழக்கங்களையும் கைவிடுதல் என்பது அவர்களால் நினைத்துப்பார்க்கவும் முடியாத ஒன்று. அந் நிலையில் அக்பரின் நோக்கம் நிறைவேருமற்போனதில் வியப்பொன்றுமில்லை.

ஜஹாங்கீர் அரசு எய்தியதும், தாங்கள் இழந்த செல்வாக்கை மீண்டும் பெறுதற்கும், சமயப் பொறைக் கொள்கையை முடிவிற்குக் கொண்டுவர வேண்டுமென்று புதிய மன்னரை இணங்க வைக்கவும் முஸ்லீம் சமய நூல் வல்லார்கள் முயற்சியொன்றில் ஈடுபட்டனர். ஆயின், தமது தந்தையார் வகுத்த பாதையிலிருந்து பிறழ ஜஹாங்கீர் விரும்பாததால் அம் முயற்சி தோல்வியுற்றது. ஆயினும், தமது நாட்டில் இஸ்லாத்தின் நலனை வளர்ப்பதில் ஜஹாங்கீர் அதிக அக்கறை காட்டத் தொடங்கினர். அவர் அடிக்கடி இந்துக்களையும் கிறித்தவர்களையும் இஸ்லாமிய சமயத்திற்கு மாற்றினர். இந்து சமயத்தில் ஆர்வம் கொண்டு இந்து சந்நியாசி ஒருவரைச் சென்று கண்டதற்காகச் சில முஸ்லீம் இளைஞர்களைத் தண்டித்தார். அவரது ஆட்சியின் பதினைந்தாம் ஆண்டில் காஷ்மீரிலிருந்த ராஜாரியைச் சார்ந்த முஸ்லீம் மங்கையருக்கும் இந்து ஆடவருக்குமிடையேயான கலப்பு மணங்களைத் தடைசெய்தார். சீக்கியர் தலைவரான குரு அர்ஜன்சிங்கை அவர் நடத்திய விதத்தில் ஓரளவு சமய நோக்கம் இருந்தது. அதே காரணம்பற்றித்தான் குஜராத்தில் வாழ்ந்த ஜைன சமயத்தாரிடம் கடுமையாக நடந்துகொண்டார். இத்தகைய குறைபாடுகளைத் தவிர அக்பரின் சமயப் பொறைக் கொள்கையையே ஜஹாங்கீர் பின்பற்றினர். பொதுவாக முஸ்லீம்களுக்கும் முஸ்லீம் அல்லாதாருக்குமிடையே அவர் சிறிதும் வேற்றுமை பாராட்டவில்லை. ஜைனர்களைத் தவிர மற்றெல்லா சமூகத்தாரின் பொது வழிபாட்டிற்கும், சமய விழாக் கொண்டாட்டங்களுக்கும் அவர் தடையேதும் விதிக்கவில்லை. "இவ்வளவிருந்தும் சில சமயங்களில் ஜஹாங்கீர், பெருவாரியான முஸ்லீமல்லாதாரின் மன்னர் என்பதைவிட உண்மைச் சமயத்தின் (இஸ்லாம்) பாது

காவலராக நடந்துகொண்டார். அக்பரது பரந்த நோக்கிலிருந்து சிறிதளவேனும் திசைமாற்றம் தோன்றியது ('Religious Policy of the Mughul Emperors, பக்கம் 90').

ஜஹாங்கீருக்குப் பின் பட்டத்திற்கு வந்த ஷாஜஹான் பழைமைப் பண்புகொண்ட முஸ்லீமாவார். தமது அரசவையில் இஸ்லாமியச் சூழ்நிலையை உருவாக்க அவர் பாடுபட்டார். மன்னர் முன் மண்டியிட்டு வணங்கும் பழக்கமாகிய சிஜிதாவை (Sijida) நீக்கினர்; மன்னரைப் பல பொருள்களால் நிறுக்கும் இந்துக்களின் பழக்கமாகிய துலாதானத்தை (Tuladan) ஒழித்தார்; ராகி, தஸரா, வசந்த் முதலான இந்துப் பண்டிகைகளை நிறுத்தினர்; அரச ஆண்டுக் குறிப்பேட்டில் ஹிஜ்ரி சகாப்தத்தை (Hijri era) மீட்டார். ஈத், ஹாப்-இ-பராத் (Shab-i-Barat), மிலாத் (Milad), பாராவஃபத் (Barawafat) ஆகிய முஸ்லீம் திருவிழாக்களைப் பழைய முஸ்லீம் பாணியிலேயே அரசவையில் கொண்டாடத் தொடங்கினர். இந்து ராஜாக்கள் அரசு எய்தும்போது ஷாஜஹானின் முன்னோர்கள் அவ்வரசர்களின் நெற்றியில் தீகா (tika) குறியினை இட்டனர். ஆயின், ஷாஜஹான் அப்பொறுப்பினைத் தமது பிரதம அமைச்சரிடமே விட்டார். இந்துக்களின் மீதான புண்ணியச் செலவு வரியை மீட்டார். ஆயின், அவைக்களப் புலவரான காசியைச் சார்ந்த கவிந்திராச்சார்யாவின் (Kavindracharya) தொந்தரவின் பேரில் அதனை நிறுத்திவைத்தார். இத்தகைய நடவடிக்கைகளினால் அமைதியுருது புதிய ஆலயங்களைக் கட்டுவதற்கும், பழைய கோயில்களைப் புதுப்பிப்பதற்கும் ஷாஜஹான் தடை விதித்தார். புதிய கோயில்களை அழிப்பதற்கான போராட்டம் ஒன்றையே துவக்கினர். அதனால் குஜராத்தில் மூன்று ஆலயங்களும், பனாரஸிலும் அதன் சுற்றுப்புறங்களிலும் 72 கோயில்களும், அலாகாபாத், காஷ்மீர் போன்ற மாநிலங்களில் இன்னும் ஏராளமான கோயில்களும் தரைமட்டமாயின. பந்தேல்கண்டு மீதான படையெடுப்புப் போன்றவற்றில் இந்துக்களின் கோயில்களை அழிப்பது என்று பேரரசர் உறுதிகொண்டிருந்தார். அன்னாரது ஆட்சிக் காலத்தில் குஜராத்தின் அரசப் பகர ஆளாக இருந்த அவுரங்கசீப் பல திருநிலைமாடங்களைத் தரைமட்டமாக்கினர். முக்கியமாக சராஷ்பூரில் இருந்த சிந்தாமணி ஆலயத்தை அடியோடு அழித்தார். இங்ஙனம் பேரரசில் எழுந்த புதிய இந்து ஆலயங்களை அழிப்பதோடு பகைவர்களுடையதும், புரட்சி செய்த இந்துத் தலைவர்களுடையதுமான சமய நிலையங்களை முறையாகச் சிதைக்கும் பழக்கத்தையும் ஷாஜஹான் மேற்கொண்டார். அந்த இந்துக் கோயில்களில் இருந்து கிடைத்த பொருள்களைக்கொண்டே மசூதிகளைக் கட்டுவித்தார். தாராவின் (Dara) செல்வாக்கு மிகுந்த காரணத்தால் சில ஆண்டுகளுக்குப் பிறகு ஷாஜஹானின் சமய வெறி ஓரளவு குறைந்தது.

புதிய ஆலயங்களை இடிப்பதற்கான ஆணைகளை அவர் ரத்து செய்தார். எனினும், முஸ்லீம்களை இந்து சமயத்தில் சேர்க்கும் பழக்கத்திற்குத் தடை விதிக்கும் ஆணைகள் அவரது ஆட்சிக்காலம் முழுவதும் தொடர்ந்துவந்தன. ஜம்முவில் பதௌரி மாவட்டத்திலும் பிம்பார் மாவட்டத்திலும் பெரு வழக்கிலிருந்த இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இடையேயான கலப்பு மணங்களைத் தடைசெய்தார். அப்பகுதியில் வாழ்ந்த இந்துக்கள் முஸ்லீம் மங்கையரை மணந்து, அவர்களை இந்து சமயத்தைத் தழுவுமாறு செய்துவந்தனர். சமய மாற்றம் பெற்ற முஸ்லீம் மாதர்களை அவரவர் தந்தைமார்களிடம் ஒப்படைத்துவிடவேண்டுமென்றும், அவர்களை மணந்துகொண்ட இந்துக்கள் முஸ்லீம்களாக மாறவேண்டும் அல்லது தண்டப் பணம் தர வேண்டுமென்றும் ஷாஜஹான் ஆணையிட்டார். முஸ்லீம் மாது ஒருத்தியை சமய மாற்றம் செய்து மணந்து, முஸ்லீம் பையன் ஒருவனையும், ஆறு முஸ்லீம் பெண்களையும் வளர்த்த தால்பத் (Dalpat) என்ற இந்துவிற்கு மரண தண்டனை அளித்தார். போர்க் கைதிகளை இஸ்லாம் சமயத்தைத் தழுவுமாறு செய்தார். அதற்கு மாருக முஸ்லீம் கைதிகளை இந்துக்களிடம் அடிமைகளாக விற்கக் கூடாது என ஆணையிட்டு அறிக்கையொன்றை வெளியிட்டார். மேலும், இஸ்லாத்தைத் தழுவினல் குற்றவாளிகளை மன்னிக்கும் இஸ்லாமியப் பழக்கத்தையும் அவர் மீட்டார். இஸ்லாத்தின் கொள்கை மீறலுக்கும், நபி நாயகத்தையோ குரானையோ பழித்தலுக்கும் மரண தண்டனை வழங்கினுர். குரானைப்பற்றி அவமதிப்பாகப் பேசியதாக இந்து ஒருவரைக் கொன்ருர். நபிநாயகத்தைப்பற்றித் தவருகப் பேசியதற்காக சய்லா (Chhaila) எனும் பிராமணருக்கு மரண தண்டனை விதித்தார். அவரது ஆட்சியின் இறுதிக் காலத்தில் இத்தகைய கடுமையான விதி முறைகளில் சில வழக்கொழிந்தன என்ருலும் ஷாஜஹானின் கொள்கையில் அவரது தந்தையின் கொள்கையைக் காட்டிலும் பெருந்தன்மை குறைந்திருந்தது. உண்மையில் ‘அகல் விரிவான அரசு’ எனும் அக்பரின் குறிக்கோளை ஷாஜஹான் இழந்துவிட்டார்.

பிற்போக்கின் வழிமுறை, அவுரங்கசீப் ஆட்சிக்கு வந்ததும் முழுமை பெற்றது. அரசாங்க சமயம் என்ற பழைய நிலைக்கு இஸ்லாம் சமயத்தை அவர் மீட்டுவந்தார். இந்தியாவை ஒரு முஸ்லீம் நாடாக்க இடையருது முயன்றுவந்தார். முதலில் சூரிய இலாஹி ஆண்டைப் (Solar Ilahi) பயன்படுத்துவதை நிறுத்தியதோடு சூரியப் புத்தாண்டு விழாக்கள் கொண்டாடுவதையும் தடுத்தார். அடுத்தபடியாக இந்துக்களின் பழக்கமாகவும், மனிதரை வழிபடுதல் என அவர் கண்களுக்குக் காட்சி தந்ததுமான ஜரோகாதர்ஷன் (Jharokha-Darshan) எனும் பழக்கத்தை முடிவிற்குக் கொண்டுவந்தார். அடுத்துத்துலா தானத்தை ஒழித்தார். அதைத் தொடர்ந்து இந்து விழாக்களாகிய

தஸரா, வஸந்த், ஹோலி ஆகியவற்றினைக் கொண்டாடுவதைத் தடைசெய்தார். ஜோத்பூரின் மகாராஜா ஜெஸ்வந்த்சிங் இறந்ததும் இந்துக்களின்மீதான ஜெஸியாவையும் புண்ணியச் செலவு வரியையும் பேரரசர் திரும்பவும் விதித்தார். மேலும், பேரரசின் பல பகுதிகளிலும் இருந்த கோயில்களை மொத்தமாக இடித்துத் தள்ளுமாறும் ஆணையிட்டார். அதை அடுத்து எல்லா மாநில ஆளுநர்களுக்கும் ஆணைகள் சென்றன. அவற்றில் சமய நம்பிக்கையற்றவர்களின் பள்ளிகளையும் கோயில்களையும் அழிக்கவேண்டுமென்றும், புறச் சமயிகளின் (Kafirs) சமயப் பழக்கவழக்கங்களையும், அவர்களுடைய கல்வி சார்ந்த நடவடிக்கைகளையும் முடிவிற்குக் கொண்டுவருதல் வேண்டுமென்றும் குறிப்பிடப்பெற்றது ('Massir-I-Alamgiri' பக்கம் 81). அதன் விளைவாக அனைவரது போற்றுதலுக்கும் உரிய காஸியிலிருந்த விஸ்வநாதர், கோபிநாதர் கோயில்களும், மதுராவிலிருந்த கேசவராயர் ஆலயமும், வேறு பல ஆலயங்களும் தரைமட்டமாயின. நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் இந்துக்களின் ஆலயங்கள் அழிக்கப்பெற்றதால் அவர்கள் திகைப்புற்றனர். சில பகுதிகளில் எதிர்ப்பும் தோன்றலாயிற்று. ஆனால், அவுரங்கசீப் அசைந்து கொடுக்கவில்லை. அதற்கு மாறாகக் கடவுட் படிமங்களை உடைக்கவும் கோயில்களை அழிக்கவுமான பணியில் ஈடுபட்டிருந்த அதிகாரிகள் பலரைக் கண்காணிப்பதற்காக உயர் அதிகாரி ஒருவரை (Darogah) அவர் நியமித்தார். எல்லா மாநிலங்களிலிருந்தும் உடைந்த விக்கிரகத் துண்டுகளை தில்லிக்கும் ஆக்ராவிற்கும் வண்டி வண்டியாகக் கொண்டுவந்தனர். அவற்றை அந் நகரங்களிலும், பிறவற்றிலும் அமைந்த ஜாமி மசூதிகளின் படிகளுக்கடியில் வைத்துப் புதைத்தனர். பகைமை பாராட்டிய ராஜபுத்திர அரசிலிருந்த கோயில்களை மட்டுமே அழிக்குமாறு அவுரங்கசீப் ஆணையிட்டார் என்று சில சமயங்களில் பேசப்படுகின்றது. ஆனால், அது உண்மையன்று. ஒருபோதும் புரட்சி செய்யாது நட்புடன் இருந்த ஜெய்ப்பூர் நாட்டிலிருந்த கோயில்களில் பெரும்பான்மையானவை இடித்துத் தள்ளப்பெற்றன. ('Massir-I-Alamgiri,' பக். 174.) இதைத் தவிர அரசாங்கம் பொதுப் பணியில் ஈடுபட்டிருந்த இந்துக்களின் எண்ணிக்கையைக் குறைப்பதற்கான வழிவகைகளை அவுரங்கசீப் மேற்கொண்டார். நிதித் துறையில் இருந்த இந்துக்கள் அனைவரையும் பதவியிலிருந்து நீக்கவேண்டுமென்று ஆணை பிறப்பித்தார். ஆயினும், அவர்களுக்குப் பதிலாகப் பதவி ஏற்கக்கூடிய தகுதிவாய்ந்த முஸ்லீம்கள் இல்லாத காரணத்தால் அவ்வாணையை அப்படியே நிறைவேற்ற முடியவில்லை. ஆயினும், மார்வாரின் ஜெஸ்வந்த் சிங்கும் ஆம்பரின் ஜெய்சிங்கும் இறந்த பிறகு உயர் பதவிகளில் இந்துக்களை நியமிக்காதவாறு 'கடுங்கண்டிப்பாளரான' பேரரசர் பார்த்துக் கொண்டார். வரிவிதிப்பிலும் இந்துக்களுக்கு எதிராக ஒருதலைச்

சார்பாக நடந்துகொண்டார். சுங்கவரிகளிலிருந்து முஸ்லீம்களுக்கு விலக்கு அளித்தார். ஆனால், அதே சமயத்தில் பழைய விதமாகிய 5 விழுக்காட்டிலேயே இந்துக்கள் அவ் வரிகளைச் செலுத்திவந்தனர். தோட்டப் பயிர்களின்மீது இந்துக்களிடமிருந்து 20 சதவீத வரியும், முஸ்லீம்களிடமிருந்து 16.6 சதவீத வரியும் கொண்டனர். கால்நடைகளை விற்கும்போது 5 சதவீதம் வரியாக இந்துக்கள் அளிக்க வேண்டியிருந்தது. ஆனால், அதே சமயத்தில் முகமதியர்கள் $2\frac{1}{2}$ சதவீத வரியே செலுத்தினர். முஸ்லீம்களைப் போன்று இந்துக்கள் ஆடை அணியக் கூடாது என்ற ஆணை பிறந்தது. இராஜபுத்திரர்களைத் தவிர மற்ற இந்துக்கள் இராக்கிய அல்லது துரானியக்குதிரைகள்மீதோ அல்லது யானைகள், பல்லக்குகள் ஆகியவற்றின்மீதோ அமர்ந்து செல்லக்கூடாது. பொது இடங்களில் அவர்கள் படைக்கலம் தாங்கிச் செல்லவும் தடை இருந்தது.

பல வழிகளில் இஸ்லாமிய சமயத்தைத் தழுவ ஊக்கமளித்தனர். இஸ்லாத்தைத் தழுவிய குற்றவாளிகள் மன்னித்து விடப்பெற்றனர். சமயம் மாறி இஸ்லாத்தில் சேர்ந்தவர்களுக்கு அரசாங்கப் பதவிகள் அளித்ததோடு வேறு பல வழிகளில் நன்மைகளும் செய்தனர். இஸ்லாமிய சமயத்தைத் தழுவச் செய்வதற்காக இந்துக்களை எல்லா வழிகளிலும் நெருக்கினர். முஸ்லீமல்லாதார், தங்களது மூதாதையரின் சமயத்தைப் புறக்கணித்து இஸ்லாத்தில் சேரவேண்டுமென்பதற்காக இஸ்லாமியச் சட்டநீதி கடுமையாக்கப்பெற்றது. இங்ஙனம் அவுரங்கசீபின் தலைமையிலான முகலாய அரசு தீவிர சமயப் பரப்புப் பணிசார்ந்த அமைப்பாகத் திகழ்ந்தது. இஸ்லாத்தைப் பரப்புவதில் அது தனது அதிகாரத்தையும் வள ஆதாரங்களையும் பயன்படுத்தியது. 16ஆம் நூற்றுண்டில் அக்பர் புகுத்திய சமயப் பொறைக் கொள்கையானது 17ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியில் அவுரங்கசீபின் ஆட்சியில் அடியோடு கைவிடப்பெற்றது.

பிற்கால முகலாய மன்னர்கள் அவர்களுடைய அமைச்சர்களின் கைப்பாவையாக மாறும் வரையில் தில்லி அரசவையில் சமய ஒப்புக் கொள்கையையே தொடர்ந்து ஆதிக்கம் செலுத்தி வந்தனர். 1707 முதல் 1711 வரையிருந்த பகதூர்ஷாவின் அரசாங்கம் கடுமையாக இருந்ததோடு இந்துக்களுக்கெதிராகவும் இருந்தது. ஜெஸியாவும் புண்ணியச் செலவு வரியும் தொடர்ந்து கொள்ளப்பெற்றன. பகதூர் ஷாவிற்குப் பின் அரசாண்ட ஜகந்தர் ஷாவும் முந்தியவரின் கொள்கையைப் பின்பற்றினர். இவ்விரு மன்னர் காலத்தில் பேரரச அவையில் மிகுந்த திறமை வாய்ந்த அல்லது உயர் பதவியிலிருந்த இந்து யாருமில்லை. ஆயின், 1713ஆம் ஆண்டில் பருக்ஷியார் பட்டத்திற்கு வந்ததும் அவரது அரசாங்கக் கொள்கையை சையது சகோதரர்கள்

கட்டுப்படுத்தியபோது வெறுக்கப்பெற்ற ஜெஸியா நீக்கப்பெற்றது. ஆயினும், முகலாயப் பேரரசு வீழும் வரையிலும் புண்ணியச் செலவு வரி கொள்ளப்பெற்றது. முகம்மது ஷா முதலான தில்லி அரசர்கள் மராத்தியரைப்பற்றி நிரந்தர அச்சம் கொண்டிருந்த காரணத்தால் தங்களது இந்துக் குடிகளைத் துன்புறுத்தக் கனவிலும் கருதினர் இல்லை. இங்ஙனம் பிற்கால முகலாயரின் கையாலாகாத்தனத்தினாலேயே அவுரங்கசீப்பின் காலத்து இஸ்லாமிய அரசின் கோட்பாடுகள் வழக்கொழியத் தொடங்கின.

## முகலாயரின் இராஜபுத்திரக் கொள்கை

ஆம்பரின் அரசரோடும், மேவாரின் மன்னரோடும் பாபரும் ஹுமாயூனும் தொடர்புகொண்டு அவர்களுடன் போரிட்டபோதிலும் அவர்களை முழுவதும் அடக்கி அடிமை கொள்ளமுடியவில்லை. இராஜபுத்திரருடன் கூட்டுச் சேர்வதன் முக்கியத்துவத்தையும், அவர்களுடனான நட்பின் பயனையும் உணரக்கூடிய அளவிற்கு அரசியல் நயத்திறம் அவர்களிடமில்லை. இராஜபுத்திரத் தலைவர்களைப்பற்றிய முகலாயரது கொள்கையை அடியோடு மாற்றியமைத்த பெருமை அக்பருக்கு உண்டு. முன்னுய்வற்ற மனப்பாங்கின் விளைவாக, அல்லது இராஜபுத்திரர்களுடைய வீரம், கொடை, நாட்டுப்பற்று ஆகியவைபற்றிய வீரமார்ந்த மதிப்புக் காரணமாக இராஜபுத்திரரை அக்பர் நன்முறையில் நடத்தவில்லை; அது திட்ட நோக்குடைய கொள்கையின் விளைவேயாகும். மேலும், பழிப்பற்ற சுயநலத் தகுதியை ஒப்புக்கொள்ளுதல், நீதி, நேர்மை ஆகிய கருத்துகளின் அடிப்படையிலும் அக்கொள்கை உருவாகியது. தம்மைச் சார்ந்த முஸ்லீம் பிரபுக்களும் அதிகாரிகளும் பற்றுறுதி குறைந்து இருந்ததோடு மீண்டும் மீண்டும் புரட்சியில் ஈடுபட்டதாலும், இந்தியாவில் வாழ்ந்த ஆப்கானியர் முகலாய அரசகுலத்தின் தீராத பகைவர் என்பதாலும், இராஜபுத்திரர்களின் கூட்டுறவை நாடுவது என அக்பர் தீர்மானித்தார். மேலும், தமது தந்நலமிக்க செல்வந்தர்களுக்கும் அதிகாரிகளுக்கும் உற்ற எதிரிடையாக இராஜபுத்திரர்களைக் கொள்ளத் தீர்மானித்தார். அதன் காரணமாகத்தான் இராஜபுத்திரரின் பற்றுறுதியைச் சோதனையிட்ட பின்னர், 1562ஆம் ஆண்டில், அவர் கச்சவஹா அரசகுலத்துடன் மணவினைத் தொடர்பு கொண்டார். அதன்பிறகு பிற இராஜபுத்திரத் தலைவர்களுடனும் நட்பு கொள்ளத் தொடங்கினர். அரசப் பகர ஆள்கள், படைத்தலைவர்கள் போன்ற மிக உயர்ந்த பேரரசப் பதவிகளில் அவர்களை அமர்த்தினர். அதன் விளைவாக 350 ஆண்டுகளுக்குமேல் தனித்து நின்றதோடு டில்லியை ஆண்ட துருக்கிய–ஆப்கானிய சுல்தான்களுடன் விடாப்

பிடியாகப் போரிட்ட இராஜபுத்திரர்கள் முகலாய மன்னரின் தீவிர ஆதரவாளராக மாறினர். அதனுடன் இந் நாட்டில் முகலாயர் ஆதிக்கம் வளர்வதற்குற்ற மிகுந்த பயனுள்ள கருவியாகவும் திகழ்ந்தனர். அக்பர், ஜஹாங்கீர், ஷாஜஹான் ஆகியோரது ஆட்சிக் காலங்களில் தோன்றிய இராணுவம், அரசியல், ஆட்சிமுறை, பொருளாதாரம், சமூகம், பண்பாடு, கலை ஆகிய துறைகள் சார்ந்த சாதனைகளுக்கு அவர்கள் தாராளமாக, வளமான முறையில் உதவி செய்தனர். அவர்களது கூட்டுறவினால் முகலாயர் ஆட்சி உறுதியடைந்ததோடு நிலைத்தும் நின்றது. நாட்டில் எப்போதும் காணாத பொருளாதார வளமும் பண்பாட்டு மறுமலர்ச்சியும் தோன்றின. முகலாய ஆட்சியின் விலைமதிக்கவொண்ணா மரபுரிமைச் செல்வமான இந்து-முஸ்லீம் கலாச்சார ஒற்றுமையும் ஏற்பட்டது.

அக்பரின் இராஜபுத்திரருடனான நட்புக் கூட்டுறவுக் கொள்கையை ஜஹாங்கீர் தொடர்ந்து மேற்கொண்டார். எவ்வாறெனினும், அக்பர் காலத்தில் அரசாங்கப் பணிகளில் இராஜபுத்திரர் பெற்றிருந்த பங்கின் அளவிற்குக் குறைவாகவே ஜஹாங்கீரின் காலத்தில் அவர்கள் பங்குகொண்டனர் என்பதை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். ஜஹாங்கீரின் 22 ஆண்டுக் கால ஆட்சியில் மூன்று இந்துக்களே மாநில ஆளுநராக இருந்தனர். அவர்களும் குறுகிய காலத்திற்கே பதவியில் இருந்தனர். அவரது ஆட்சிக் காலத்தில் இந்து திவான்கள் எத்தனைபேர் என்பது தெரியவில்லை. மோகன் தாஸ் எனும் இந்து திவானின் பெயரைமட்டுமே வரலாற்றுப் பதிவாளர் குறித்துள்ளனர். முஸ்லீம்களை வேலைக்கமர்த்தவே ஜஹாங்கீர் விரும்பினர் என்று ஹாக்கின்ஸ் (Hawkins) குறித்துள்ளார் (Hawkins, பக்கம் 106 - 107).

ஷாஜஹான் பட்டத்திற்கு வந்ததும் பொது அரசாங்கப் பணிகளுக்கு முஸ்லீம்களையே நியமிக்கவேண்டுமென்ற வெற்றுரைவாரமான ஆணை ஒன்றை வெளியிட்டார். எனினும், அதை நடைமுறைக்குக் கொண்டுவர அவர் எவ்வித வழிமுறையும் மேற்கொள்ளவில்லை. அவரது ஆட்சியில் இராஜபுத்திரர் தொடர்ந்து உயர் பதவிகளை வகித்துவந்தனர். பேராசிரியர் எஸ். ஆர். சர்மாவின் (S. R. Sharma) கணக்குப்படி, ஷாஜஹானின் 31 ஆண்டு ஆட்சிக் காலத்தில் 1,000 முதல் 7,000 வரையிலான வீரர்களைக்கொண்ட 241 மன்சப்தார்களில் 52 பேர் இந்துக்களாவர். அவர் பட்டத்திற்கு வந்தபோது மிகக் குறைந்த எண்ணிக்கைகொண்ட இந்துக்களே உயர்பதவிகளை வகித்தனர். ஷாஜஹான் காலத்தில் இராஜபுத்திரர்களையோ மற்ற இந்துக்களையோ அரசாங்கப் பொதுப்பணியிலிருந்து நீக்கவில்லை எனக் கொள்ளுதல் பொருந்தும். இராஜபுத்திரர்களும் பிற இந்துக்களும் அரசப் பகர ஆள்களாகவும் படைத்தலைவர்

களாகவும் இருந்ததோடு, நிதித்துறையில் உயர் அதிகாரிகளாகவும் பணியாற்றினர். 7,000 வீரர்களைக்கொண்ட பெரும்பதவியை வகித்த ஜோத்பூரின் மகாராஜா ஜெஸ்வந்த்சிங் என்பார் பேரரசில் பிரதான செல்வந்தராகத் திகழ்ந்தார். ஷாஜஹான் ஆட்சியின் இறுதியில் பேரரச திவானாக விளங்கியவர் ராஜா ரகுநாத் என்பவரே.

ஆயின், அவுரங்கசீப் ஆட்சிக்கு வந்ததிலிருந்து முகலாயருடைய இராஜபுத்திரக் கொள்கையில் கேடு பயக்கும் திடமான மாறுதல் தோன்றியது. இந்துக்களையும், குறிப்பாக, அவர்களது தலைவர்களும் பேரரசில் முஸ்லீம்களுடன் அதிகாரத்தைப் பகிர்ந்து கொண்டவர்களுமான இராஜபுத்திரர்களையும் பழைமைப் பண்பு கொண்டாடும் சுன்னி சமயப் பிரிவினைச் சார்ந்தவரான அவுரங்கசீப் வெறுத்தார். ஆயினும், மார்வாரின் மகாராஜா ஜெஸ்வந்த்சிங்கும், ஆம்பரின் ராஜா ஜெய்சிங்கும் உயிருடன் இருந்தவரையில், எதிர்ப்புத் தோன்றும் என்ற அச்சங் காரணமாக இராஜபுத்திரர்களுக்கு எதிராக முக்கிய நடவடிக்கை எதையும் அவுரங்கசீபு எடுக்கவில்லை. 1678ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் ஜெஸ்வந்த்சிங் இறந்ததும் பேரரசர் தமது கொள்கையை வெளிப்படுத்தினர். பேரரசுடன் மார்வாரை இணைத்துக்கொள்வதற்கான வழிமுறைகளைக் கையாண்டார். இந்துக்களின்மீது ஜெஸியா வரி விதித்தார். ரதோர்கள் (Rathors), சிசோதியர்கள் (Sisodias) ஆகியோரின் எதிர்ப்பைக் குலைப்பதற்காகவும், அவர்களின் சக்தியை அழிப்பதற்காகவும் அவர்களுடன் போரிட்டார். இத்தகைய கொள்கையை எதிர்த்து இராஜபுதனத்திலும், பந்தெல்கண்டிலும், வேறு சில மாநிலங்களிலும் புரட்சிக் கலகங்கள் தோன்றின. பேரரசரிடம் பற்றுறுதியும், ஈடுபாடும்கொண்டு பணிபுரியும் இராஜபுத்திரர் யாருமிலர். அதனல், அவுரங்கசீப் வெளிப்படையாகவே முஸ்லீம்களை விருப்பமுடன் தேர்ந்தெடுத்து அரசாங்கப் பதவிகளில் அமர்த்தினர். அதனேடு பல இந்துக்களைப் பதவியிலிருந்து நீக்கினர். அதன் விளைவாக, பேரரசின் பரப்பிற்குக் காரணமாக இருந்த இராஜபுத்திரர்கள் பேரரசரின் மாருத பகைவர்களாக மாறவேண்டிய நிலை ஏற்பட்டது. பேரரசருடன் அவர்கள் ஒத்துழைக்க மறுத்தனர்; அவருடன் போரிட்டனர்; அவர் இறக்கும்வரையில் புரட்சிக் கலகத்தில் ஈடுபட்டனர்.

புஷ்கரில் மாநாடு கூட்டி, முகலாயருடன் மணவினைத் தொடர்பு கொள்வதில்லை என்றும், அவர்களுடைய மேலாதிக்கத்தை அழிப்பது என்றும் முடிவுசெய்த சில இராஜஸ்தானத் தலைவர்களுடன் அவுரங்கசீப்பை அடுத்து ஆட்சிக்கு வந்த முதலாம் பகதூர் ஷா, ஜகந்தர் ஷா, பருக்ஷியார் ஆகியோர் போரிடவேண்டிய கட்டாயம்

ஏற்பட்டது. நட்புடன்இருந்த ஜெய்ப்பூரின் அரசரும் இராஜபுத்திர மாநாட்டில் கலந்துகொண்டார். அவுரங்கசீப்பும் முதலாம் பகதூர் ஷாவும் பின்பற்றிய கேடார்ந்த கொள்கையின் விளைவாக, மராத்தியர், சீக்கியர், ஜாத்துகள் ஆகியோருக்கும் நாதர் ஷா, அஹ்மத் ஷா அப்நாலிபோன்ற அன்னியப் படையெடுப்பாளர் களுக்கும் எதிராக முகலாயர் இட்ட போர்களில், அவர்கள் பக்கம் நின்று போரிடக்கூடிய முக்கிய இராஜபுத்திரத் தலைவர் ஒருவரும் இல்லை. சில சமயங்களில் ஜெய்ப்பூர் அரசர் முகலாயப் படையுடன் சேர்ந்துகொண்டார். எனினும், பேரரசினைப் பாது காக்கவேண்டும் என்று தம்மால் இயன்றதனைத்தையும் செய்ய அவர் மனமார விரும்பவில்லை. உண்மையில் மராத்தியருக்கும் முகலாயருக்கும் இடையே சண்டை நடந்தபோது, பீஷ்வா பாஜிராவுடன் நேசஉடன்படிக்கை செய்துகொள்வது அறிவுடைமை யாகுமென இராஜா ஜெய்சிங் கருதினர்.

இராஜபுத்திரர்களுக்கு ஆதரவளித்து, அரசாங்க சேவையில் உயர்பதவிகளை அவர்களுக்கு அக்பர் வழங்காது இருந்திருந்தால், இராஜபுத்திரச் சிக்கலே தோன்றியிராதென்றும், அவுரங்கசீப்பும் அவரது வாரிசுகளும் இராஜஸ்தானத்துத் தலைவர்களை எவ்வித இடரும் இன்றித் தங்கள் பிடியில் வைத்திருப்பர் என்றும் தற்கால அறிஞர் சிலர் எழுதுவர். ஆயின், இத்தகைய கருத்து முற்றிலும் தவருனது. பெருந்தன்மையான, சமய சமரசம் சார்ந்த கொள்கை மூலமாக இராஜபுத்திரரின் ஆதரவை அக்பர் பெருதிருந்தால் சுல்தானியர் காலத்தில் ஒன்றன்பின் ஒன்ருக வந்த அரசகுலங்கள் அடைந்த கதியையே ஆளும் முகலாயர் குடியும் அடைந்திருக்கும். மேலும், சுல்தானியர் காலம் கழிந்துவிட்டது. பதினன்காம் நூற் ருண்டையும் பதினைந்தாம் நூற்ருண்டையும் போன்றதன்று பதினரும் நூற்ருண்டு. பதினரும் நூற்ருண்டில் டில்லியை ஆளும் மன்னர் எத்துணைதான் வலிமை கொண்டவராக இருப்பினும், இந்திய அரசியலில் இழந்த நிலையினை விரைவாக மீட்டுவந்த இராஜ புத்திரர்களைப் புறக்கணிக்க இயலாது. மேலும், அரசியலில்கூட எல்லோரையும் எக்காலத்தும் ஏமாற்றுவது என்பது முடியாத ஒன்று. இந்திய மக்களில் முக்கியக் கூறுகளாக இருந்தவர்களின் ஒத் துழைப்பு இல்லாமல் முகலாயர் தங்கள் ஆட்சியினை வெற்றிகரமாக நடத்தியிருக்க முடியாது. மேலே குறித்த கொள்கையினை ஆதரிக்கும் அறிஞர், சூழ்நிலை எதுவாயினும் மிருக பலத்தினல் வெற்றியடையலாம் என்பதில் நம்பிக்கை கொண்டவர்களாகக் காணப்படுகின்றனர். ஆட்சிப் பொறுப்பினை அக்பர் ஏற்றபோது அவர் சமாளிக்கவேண்டியிருந்த தனித்தன்மை கொண்ட இராணுவ

அரசியல் சிக்கல்களை நன்கு அறிந்தவர்களுக்கு அக் கொள்கை ஏற்புடையதாகப் படுவதில்லை.

## முகலாயரின் தக்கணக் கொள்கை

தக்கணத்தை வென்றடக்குவதைப்பற்றிச் செயல்முனைப்பான கருத்துக் கொள்வதற்கு முதலிரு முகலாய மன்னர்களுக்கு நேரமில்லை. தென்னிந்தியாபற்றிய செய்திகளில் அக்கறை காட்டியதோடு, அதன் அரசியல் வளர்ச்சிகளிலும் பாபர் கவனம் செலுத்தினர் என்பது அவரது வாழ்க்கை விளக்க நூலால் தெளிவாகும். ஆயின், அவர் இந்தியாவில் வாழ்ந்த காலம் மிகக் குறைவு. அதனுல் வட இந்தியா முழுவதையும்கூட அவரால் வென்றடக்க முடியவில்லை. ஹுமாயூ னின் கொந்தளிப்புமிக்க வாழ்க்கையும் வட இந்தியாவைப் பொறுத்ததாகவே அமைந்தது. வட இந்தியாவில் தமது ஆதிக் கத்தை நிலைநாட்டிய பிறகு, தக்கணத்தை வென்று அடக்கவல்ல மெய்யான திட்டமொன்றை உருவாக்கிய முதல் முகலாய மன்னர் அக்பரே. இதில் மௌரியர், குப்தர், கில்ஜியினர், துக்ளக்குகள் போன்ற முன்னுல் வந்த இந்துஸ்தானத்து மன்னர்களின் மரபுக் கொள்கையையே அவர் கடைப்பிடித்தார். அக்பரின் தக்கணக் கொள்கையில் இரு முக்கிய நோக்கங்கள் இருந்தன. அவற்றில் ஒன்று, அகில இந்தியப் பேரரசு ஒன்றைத் தமது தலைமையில் நிறுவுவது என்பது. மற்றது, இந்தியாவில் ஓர் அரசியல் சக்தியாக வளரத் தொடங்கிய போர்ச்சுகீசியரைக் கடலுக்கு விரட்டுவதாகும். சந்திரகுப்த மௌரியர் அல்லது சமுத்திரகுப்தர் போன்ற பண்டைக் கால இந்திய மன்னர் வகையைச் சார்ந்த பேரரசுக் கோட்பாட்டின ரான அக்பர், துணைக்கண்டம் முழுவதையும் அடக்கியாள மனமார விரும்பினர். அதற்கிணங்க அகமதுநகர், பீஜப்பூர், கோல்கொண்டா, காண்டேஷ் ஆகிய தக்கண சுல்தானியங்களைத் தமது மேலாதிக் கத்தில் கொண்டுவருவது அவர் கொள்கையாகும். அக் கொள்கை யின் ஆரம்பமும் நோக்கமும் முழுக்கமுழுக்கப் பேரரசுக் கோட் பாட்டின் விளைவேயன்றிச் சமய அடிப்படையில் எழுந்ததன்று.

தக்கணத்தின் சுல்தான்கள் தமது மேலாதிக்கத்தை முறையாக ஏற்கவேண்டுமென்று விரும்பிய அக்பர், 1591ஆம் ஆண்டில் தூதுக் குழுக்களைத் தக்கண அரசுகளுக்கு அனுப்பினர். அக்பரின் யோசனைக்குச் செவிசாய்த்த காண்டேஷ், அவரது மேலாதிக் கத்தையும் ஏற்றுகொண்டது. ஆனுல், அகமதுநகர், பீஜப்பூர், கோல் கொண்டா ஆகியவை பண்புநயத்துடன் அவரது விருப்பார்வத்தைப் புறக்கணித்தன. எனவே, வெல்திறத்தினுல் ஆகாத ஒன்றைப் படைபலங்கொண்டு பெறுவது என அக்பர் தீர்மானித்தார். அகமது

நகருக்கு எதிராக இளவரசர் முராத், அப்துர் ரஹிம் கான் கானு ஆகியோரின் தலைமையில் ஒரு பெரும் படையை அனுப்பினார். அப் படை அகமதுநகரை முற்றுகையிட்டது. ஆயினும், அகமது நகர் அரசரின் புதல்வியும். பீஜப்பூரின் அரச உரிமைகொண்ட இராணி யாருமாகிய சாந்த் பீபி (Chand Bibi) அந்நகரைத் தீரத்துடன் பாதுகாத்தார். இருந்தபோதிலும், இறுதியில் அக்பரைப் பேரரசரென ஏற்றுக்கொள்ளவும், பேராரைப் பேரரசுக்கு அளிக்கவும் அகமது நகரின் மன்னர் இசைந்தார் (1596). ஆயின், அக்பருடனுன உடன் படிக்கையைப் புறக்கணித்துவிட்டு மீண்டும் போரைத் துவக்க வேண்டுமென்று சுல்தானின் செல்வந்தர்களிற் சிலர் யோசனை கூறினர். அதன் விளைவாக முகலாயர் அகமது நகரைக் கைப்பற்றி அழித்தனர். சாந்த் பீபியும் 1600ஆம் ஆண்டில் தற்கொலை செய்து கொண்டோ, பகைவரால் கொல்லப்பட்டோ இறந்தார். அகமது நகரத்தில் பாதிக்குமேல் முகலாயர் கைக்கு வந்தது. ஆயினும் ஷாஜஹானின் ஆட்சிக் காலம்வரையிலும் அந் நாடு முழுவதையும் பேரரசுடன் இணைத்துக்கொள்ள முடியவில்லை.

இதற்கிடையில், அகமதுநகர அரசர் அளித்த எதிர்ப்பைப் பயன்படுத்திக்கொண்டு காண்டேஷ் கிளர்ச்சி செய்தது. அதனுல் அக்பர் தக்கணத்திற்கு நேரடியாக வந்தார். அவர் பர்ஹான்பூரைக் கைப்பற்றினுர். நீண்ட காலத்திற்கு முற்றுகையிட்டு, காவற்படையினருக்கு ஏராளமாகப் பணம் வழங்கி, வலிமை வாய்ந்த அஸிர்கார் கோட்டையையும் கைப்பற்றினுர். அதன் பிறகு, வெற்றிகொண்ட பகுதிகளை அகமதுநகர், பேரார், காண்டேஷ் எனும் சுபாக்களாகப் பிரித்து, ஏற்கெனவே 'மாளவத்தையும் குஜராத்தையும் ஆளும் பொறுப்பேற்றிருந்த தமது மகன் தானியாலிடம் (Daniyal) ஒப்படைத்தார் (1601). இங்ஙனம் நர்மதைவரையிலிருந்த முகலாயப் பேரரசின் தெற்கு எல்லை கிருஷ்ணுவின் மேல்கரைக்கு வந்தது.

ஜஹாங்கீரும் தமது தந்தையின் முற்போக்குக் கொள்கையைப் பின்பற்றினுர். அகமதுநகரத்தின் மீதமுள்ள பகுதியை வென்றடக்க அவர் முயன்ருர். அதனுல் அவரது ஆட்சிக் காலம் முழுவதிலும் தக்கணத்தில் போர் நடந்தவண்ணமிருந்தது. ஆயினும், அகமதுநகரின் முதல் அமைச்சராகவும் கொரில்லா போர்முறையில் வல்லவராகவும் விளங்கிய அபிசீனியரான மாலிக் ஆம்பருடைய (Abyssinian Malik Amber) ஆற்றல், அரசியல் நயம் ஆகியவை காரணமாகவும், முகலாயப் படைத்தலைவர்களுக்கிடையேயான வேற்றுமைகளின் காரணமாகவும் அகமதுநகரைக் கைப்பற்றுவதில் ஜஹாங்கீர் வெற்றிபெற முடியவில்லை. அவர் முதலில் தமது புதல்வரான பார்வஸையும், அதன்பிறகு இளவரசர் குர்ரத்தையும்

(Khurram) படைத்தலைவர்களாக நியமித்தார். ஆயினும், மெய்யான படைத்தலைவராக இருந்த அப்துர் ரஹீம் கான் கானுவினுல் படையினைச் சரியாகக் கட்டுப்படுத்த முடியவில்லை. அதனோடு அவர் திறமையற்றவராகவும் இருந்தார். இங்ஙனம் முகலாயருக்கு அரை குறை வெற்றியே கிட்டியது. அகமதுநகரையும் வேறு சில கோட்டைகளையும் இளவரசர் குர்ரம் 1616ஆம் ஆண்டில் கைப்பற்றினர். அதற்குப் பரிசாக ஷாஜஹான் எனும் பட்டத்தையும், 30,000 ஸாத், 20,000 சவார் படிநிலைக்கு உயர்வும் பெற்றார். ஆயினும், இவ் வெற்றி பெயரளவிலானதே. 1605ஆம் ஆண்டில் எங்கிருந்ததோ அங்கேயே முகலாயப் பேரரசின் எல்லை அமைந்திருந்தது.

ஷாஜஹான் பட்டத்திற்கு வந்ததும், தமது முன்னோர்கள் கையாண்ட பேரரசுப் பரப்புக் கொள்கையைத் தொடர்ந்து பின்பற்றினர். ஆயின், அவரது கொள்கைக்குச் சமயப் பொல்லாங்கும் காரணமாக அமைந்தது. உரிமை இழக்காது இருந்த மீதமுள்ள அகமது நகர அரசினைக் கைப்பற்றுவதற்காகப் படை ஒன்றை ஷாஜஹான் அனுப்பிவைத்தார். முகலாயருக்கு நல்வாய்ப்பாக 1626ஆம் ஆண்டில் மாலிக் ஆம்பர் மரணமடைந்தார். அதனோடு சுல்தானுக்கும், அவரது புதிய அமைச்சரும் மாலிக் ஆம்பரின் புதல்வருமான ஃபதே கானுக்குமிடையே (Fateh Khan) பூசலும் இருந்து வந்தது. ஆயினும், அகமதுநகருக்குச் சொந்தமான வலிமைவாய்ந்த பரெண்டா (Parenda) கோட்டையைக் கைப்பற்ற முகலாயர்களால் முடியவில்லை. பதேகானும் முகலாயருடன் ஒப்பந்தம் செய்து கொண்டுஷாஜஹானின் யோசனைப்படி, சுல்தான் நைஸாம் உல் முல்கைக் கொன்றார். நைஜாம் உல்முல்கின் மகனுன பத்து வயது நிரம்பிய ஹுசெய்ன் ஷாவை அரியணை ஏற்றினர். முகலாயரிடமிருந்து பத்தரை இலட்ச ரூபாய் இலஞ்சமாகப் பெற்றுக்கொண்டு தௌலதாபாத் கோட்டையை அவர்களிடம் ஒப்படைத்தார் (1631). 1633ஆம் ஆண்டில் அகமதுநகரம் இறுதியாகப் பேரரசுடன் இணைக்கப் பெற்றது. அதன் கடைசி அரசரான ஹுசெய்ன் ஷா குவாலியர் கோட்டையில் சிறைவைக்கப்பெற்றார். ஃபதே கான் முகலாய சேவையில் மன்சப்தாராக நியமனம் ஆனதோடு நிறைய ஊதியமும்பெற்றார்.

அதன் பிறகு, ஷியா சமயப் பிரிவு சார்ந்த அரசுகளான பீஜப்பூரிலும் கோல்கொண்டாவிலும் ஷாஜஹான் தலையிடத் தொடங்கினர். சமய வெறியும் பேரரசக் கோட்பாடும் முகலாய மன்னரைத் தூண்டின. ஷியா சமயத்தைச் சார்ந்த மன்னர்களின் ஆட்சியில் உரிமையோடு வாழ்ந்துவந்த அவ்விரு தக்கண அரசுகளையும் அழிக்க அவர் விருப்பங்கொண்டார். 1635ஆம் ஆண்டில் தமது

மேலாண்மையை அவர்கள் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று வற்புறுத்தினர். மேலும், மறைந்த அகமதுநகர் ராஜ்ஜியத்தின் சுல்தான் எனப் பெயரளவில் நைஸாம் ஷாஹி எனும் சிறுவனை அமர்த்திய ஷாஜி மராத்தாவிற்கு அவர்கள் உதவிசெய்வதை நிறுத்திக்கொள்ள வேண்டுமென்றும் வற்புறுத்தினர். தமது கோரிக்கையை வன்முறையில் நிலைநாட்ட ஷாஜஹான் ஆயத்தமாக இருந்ததைக் கண்ட கோல்கொண்டாவின் சுல்தான் அவரது மேலாதிக்கத்தை ஏற்கவும் பேரரசரின் பெயரை நாணயங்களில் பொறிக்கவும், அவரது பெயரால் குத்பாவை படிக்கவும் இசைந்தார் (1636). ஆயின், ஷாஜஹானின் கோரிக்கையை பீஜப்பூர் சுல்தான் தட்டிக்கழித்ததால், அவரது தலைநகரம் முற்றுகைக்குள்ளாகியது. இறுதியில் அவர் பேரரசரின் மேலாண்மையை ஏற்றுக்கொண்டதோடு திறை செலுத்தவும் வேண்டியதாயிற்று (மே மாதம் 1636). இப்போது காண்டேஷ், பேரார், தெலங்கானா, தௌலதாபாத் ஆகிய தக்கண மாநிலங்களின் ஆளுநராக இளவரசர் அவுரங்கசீப் நியமிக்கப்பெற்றார். ஆட்சித்துறையைச் சீர்படுத்த வழிவகைகளை அவர் மேற்கொண்டபோதிலும் தாராவுடனான பகைமை காரணமாக அவர் 1644ஆம் ஆண்டில் அப் பதவியிலிருந்து வெளியேற வேண்டியதாயிற்று. 1653ஆம் ஆண்டில் அவர் மீண்டும் தக்கணத்திற்கு நியமனமாகிவந்தார். மீர்ஜும்லாவைத் தம் பக்கம் இழுத்துக் கொண்டு, கோல்கொண்டாவைப் பேரரசோடு இணைப்பதற்காக அந் நாட்டைத் தாக்கினர். ஆயின், ஷாஜஹான் குறுக்கிட்டு முற்றுகையைக் கைவிடுமாறு அவுரங்கசீப்பிற்கு ஆணையிட்டார் (மார்ச், 1656). இங்ஙனம் பத்து லட்சம் இழப்பீட்டுப் பணமும் ரங்கீர் (Rangir) மாவட்டமும் முகலாயருக்களித்து கோல்கொண்டா மேலும் சிறிது காலத்திற்குப் பிழைத்திருந்தது. அடுத்தபடியாக அவுரங்கசீப் பீஜப்பூரின்மீது படையெடுத்துச் சென்றார். அந் நாடு முகலாய ஆதிக்கத்திற்கு உட்பட்ட அடிமை நாடு அன்று என்பதால் அதன் உள்நாட்டு விவகாரங்களில் தலையிடும் உரிமை அவர்களுக்குக் கிடையாது. இருப்பினும் பீடாரையும் கல்யாணையும் இளவரசர் கைப்பற்றிக்கொண்டார். ஆயின், ஷாஜஹான் தலையிட்டு அங்கிருந்த பேரரசப் படையினைத் திரும்ப அழைத்துக்கொள்ளுமாறு செய்தார். உடன்படிக்கை ஒன்று ஏற்பட்டது. அதன்படி பெருந்தொகையை இழப்பீடாக பீஜப்பூர் அளித்தது. மேலும், பீடார், கல்யாண், பரெண்டா ஆகியவற்றையும் முகலாயரிடம் ஒப்படைத்தது. ஷாஜஹான் ஆட்சியில் மிகுதியுள்ள நாட்களில் முகலாயர் தக்கணத்தில் அதற்கு மேலும் முன்னேறவில்லை.

அவுரங்கசீப்பின் ஆட்சியில் முதல் 25 ஆண்டுகளுக்கு வட இந்தியாவிலேயே அவர் கவனஞ் செலுத்தினர். பீஜப்பூரையும் கோல்

கொண்டாவையும் அடிமை கொள்ளும் வேலையைத் தமது படைத் தலைவர்களிடமே அவர் விட்டு வைத்தார். சிவாஜியின் தலைமையில் மராத்தியரின் எழுச்சியினால் நிலைமை சிக்கலாயிற்று. மராத்திய ருடனே இரு முஸ்லீம் சுல்தான்களுடனே ஆன போர்களில் பேரர சரின் படைத்தலைவர்கள் முடிந்த வெற்றிபெறத் தவறினர். சிவாஜி யின் நாட்டில் நான்கில் மூன்று பங்கையும், அதே அளவு கோட்டை களையும் முகலாயருக்கு அளிப்பதோடு, சிவாஜியே ஆக்ராவிற்கு வந்து அவுரங்கசீப்பைக் காண (1665-56) இசையுமாறு செய்த பெருமை மிர்ஸா ராஜா ஜெய்சிங்கைச் சாரும். ஆயின், இவ் வெற்றி இறுதியில் முகலாயருக்குக் கேடு பயக்கும் விளைவுகளைத் தோற்று வித்தது.

சிவாஜியின் மறைவிற்குப் பிறகு, தம்மிடமிருந்து ஓடி ஒளிந்த மகனான அக்பருக்கும் புதிய மராத்திய மன்னரான சாம்பாஜிக்கும் இடையே கூட்டு ஏற்படுவதைத் தடுப்பதற்காக அவுரங்கசீப் தக்கணம் சென்றார். அக்பரைப் பிடிக்கவும் மராத்தியரை அழிக்கவும் வீணான முயற்சிகளில் பேரரசர் நான்கு ஆண்டுகளைக் கழித்தார். அதன் பிறகு, பீஜப்பூரின்மீதும் கோல்கொண்டாவின்மீதும் தமது கவனத்தைச் செலுத்தினார். அவர்தம் தந்தையாரைப்போலவே அவுரங்கசீப்பின் கொள்கையும் ஓரளவு சமயம் சார்ந்ததாகவும், ஓரளவு பேரரசக் கோட்பாடு சார்ந்ததாகவும் அமைந்தது. சுன்னி சமயப் பிரிவைச் சார்ந்த தீவிரவாதியாக இருந்த அவுரங்கசீப், தக்கணத்தில் வாழ்ந்த ஷியா சமயப் பிரிவை அடியோடு அழிக்க விரும்பினார். அவர் பீஜப்பூரை முற்றுகையிட்டார். அதுவும் 1686ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத் தில் சரணடைந்தது. அந் நாடு பேரரசுடன் இணைக்கப்பெற்றது; சுல்தான் சிக்கந்தரும் சிறைபிடிக்கப்பட்டார். அடுத்து, கோல் கொண்டாவின் முறை வந்தது. அதுவும் கடுமையான போருக்குப் பின் வீழ்ச்சியுற்றது. அப்துல்லா பானி (Abdulla pani) எனும் பேர்கொண்ட ஆப்கானியன் பேரரசரிடமிருந்து பெரும் பொருளைக் கையூட்டாக வாங்கிக்கொண்டு, கோட்டை வாயிலைத் திறந்து முகலாயரை உள்ளே விட்டான். 1687ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில் கோல்கொண்டா பேரரசருடன் இணைந்தது. அதனுடைய கடைசி அரசரான அபுல் ஹாஸனுக்கு (Abul Hasan) ஆண்டு தோறும் 50,000 ரூபாய்கள் உபகாரச் சம்பளமளித்து தௌலதா பாத்தில் சிறைவைத்தனர்.

இப்போது அவுரங்கசீப் மராத்தியருக்கு எதிராக முழுக்கவனத் தையும் செலுத்தினார். முதலில் அவர் வெற்றி பெற்றார். மராத்திய மன்னரான சாம்பாஜியை 1689ஆம் ஆண்டில் சிறைப்பிடித்துக்

கொன்ருர். மராத்தியரின் தலைநகரான ரெய்காரை அவர் கைப்பற்றியதால். சாம்பாஜியின் வாரிசான இராஜாராம் கர்நாடகத்திற்கு ஓடவேண்டியதாயிற்று, மேலும், தெற்கில் முகலாய ஆதிக்கத்தை விரிவுபடுத்தி, தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி போன்ற இந்து அரசுகளிலிருந்து திறை கொண்டதன்மூலமாக அவுரங்கசீபு தமது முன்னோர்களின் ஆசையை நிறைவேற்றியதுபோலத் தோன்றியது. இங்ஙனம் 1690ஆம் ஆண்டில் இந்தியாவில் முகலாயருடைய ஆதிக்கம் உச்சநிலையை அடைந்தது எனலாம். "இப்போது அவுரங்கசீபு யாவற்றையும் அடைந்துவிட்டதாகத் தோன்றியது; ஆயின், உண்மையில் அவர் யாவற்றையும் இழந்தார். அவரது முடிவின் தொடக்கமாகவே அது அமைந்தது. அவரது வாழ்க்கையின் துயர் மிக்கதும் நம்பிக்கைக் கேடானதுமான அதிகாரம் (chapter) தொடங்கிவிட்டது. மராத்தியர் அழிவிலிருந்து மீண்டனர். அவர்கள் துவக்கிய மக்கள் போரினுல் அவுரங்கசீப்பின் கருவூலம் காலியாகியது. அவர் தற்காப்பு நிலையிலேயே நிற்கவேண்டியதாயிற்று. முடிவற்ற போரினுலும், களைப்பாலும் தளர்ச்சியுற்ற அவர், 1707ஆம் ஆண்டு மார்ச் மாதத்தில் மரணமெய்தினுர். அவரது தக்கணக் கொள்கை நன்மை பயப்பதற்குப் பதிலாகப் பேரரசின் வீழ்ச்சிக்குற்ற வகையான காரணமாக அமைந்தது.

## முகலாயர்களின் மத்திய ஆசியக் கொள்கை

மத்திய ஆசியாவிலிருந்த டிரான்ஸ் ஆக்ஸியான (Trans Oxiana) பகுதியிலிருந்தே முகலாயர் வந்தனர். அதன் காரணமாக அக்குலத்தில் தோன்றிய ஆரம்ப கால அரசர்கள், தங்களது முன்னோர்களின் உரிமையாகவந்த பகுதியை மீட்டு அதனை ஆளவேண்டுமென்ற ஆர்வங்கொண்டிருந்தனர். வட இந்தியாவில் தமது நிலையை உறுதிசெய்துகொண்ட பிறகு, தம் மூதாதையரான தைமூரின் தலைநகரமாக விளங்கிய சாமர்கண்டை (Samargand) மீட்பதற்கான இறுதி முயற்சியில் இறங்கவேண்டுமென்று பாபர் விரும்பினுர். ஆனுல், இந்தியாவில் அவர் நடத்திய போர்களினுல் இத்தகைய படையெடுப்பிற்கான காலம் அவருக்குக் கிடைக்கவில்லை. மேலும், அவர் 1530ஆம் ஆண்டில் அகால மரணமுற்ருர். ஹுமாயூனும் அதே ஆசையைக் கொண்டிருந்தார். ஆயினும், அதற்கான மெய்யான தீவிர நடவடிக்கை எடுப்பதற்குத்தேவையான மனத்திட்பமோ வலிமையோ அவரிடம் இல்லை. அதே ஆசையினுல் அக்பரும் தூண்டப்பெற்ருர்; எனினும், மத்திய ஆசியாவிலிருந்த தமது மூதாதையரின் புனித பூமியை வெல்வதற்கான அவகாசம்

அவருக்குக் கிடைக்கவில்லை. ஜஹாங்கீர் போன்ற கடுமையற்ற வாழ்க்கையை விரும்பும் ஒருவர், இந்துகுஷ் மலைக்கப்பால் இடர் மிகுந்த படையெடுப்பிற்கு வேண்டிய நெஞ்சுரம் கொண்டாரில்லை. எவ்வாறெனினும், அவரது புதல்வரும் வாரிசுமான ஷாஜஹான் சாமர்கண்டைக் கைப்பற்றும் முக்கிய நோக்கத்திற்கு முன்னோடியாக இருக்கும் பால்க் (Balk), படக் ஷான் (Badak Shan) ஆகியவற்றை வென்றடக்கும் திட்டத்தை மேற்கொள்வதற்கான ஆர்வமும், ஆற்றலும் பெற்றிருந்தார், 'தம் குடியினரின் மரபுரிமைப் பகுதியாகவும், தமது புகழ்வாய்ந்த முன்னோரான தைமூரின் இருப்பிடமாகவும் தலைநகரமாகவும் திகழ்ந்த சாமர்கண்டை வெல்வதற்கான திறவுகோல்களாகவும் இருந்த பால்க், படக் ஷான் வெற்றியில் பட்டத்திற்கு வந்த நாள்முதலே பேரரசரின் மனம் குடிகொண்டது' என அப்துல்ஹமீத் லஹாரி (Abdul Hamid Lahauri) எழுதியுள்ளார். துருக்கிஸ்தானத்தின் உஸ்பெக் மன்னருடைய விவகாரங்களில் தலையிடுவதற்கான வாய்ப்பு ஷாஜஹானுக்கு 1646ஆம் ஆண்டில் கிடைத்தது. அப் பகுதியில் உள்நாட்டுப் போர் ஒன்று மூண்டது. அத்தருணத்தில் இந்துகுஷ்மலைக்கும் ஆக்ஸஸ் (Oxus) ஆற்றிற்கும் இடையே அமைந்த பால்க்கையும் படக் ஷானையும் கைப்பற்றுமாறு இளவரசர் முராதை ஷாஜஹான் தூண்டினார். அப்பகுதிகளை முராத் கைப்பற்றினார். ஆயினும், அவர் தமது வெற்றியை உறுதிசெய்வது கடினமாக இருந்தது. கடுமையற்ற இன்பமான வாழ்க்கையிலேயே பழக்கப்பட்ட முராத் தமது பொறுப்பினைக் கைவிட்டு டில்லிக்குத் திரும்பினார். அவரைப் பேரரசர் அவமதித்ததோடு நிலைமையைச் சீர்படுத்துவதற்காக வஸீரான சாதுல்லாகானை பால்கிற்கு அனுப்பி வைத்தார். அடுத்துப் பெரும் படையோடு அவுரங்கசீப்பை அனுப்பினார். ஆனால், உஸ்பெக் மக்கள் ஒன்றுதிரண்டு எதிர்த்தனர். நஸார் முகம்மதுவின் தலைமையில் இருந்த அவர்களை கடுமையான போரில் அவுரங்கசீப் முறியடித்தபோதிலும் அவர் பால்கைவிட்டு வெளியேறிப் பின்வாங்க நேரிட்டது. முகலாயப் படையினர் பெருந் துன்பங்களுக்குள்ளாயினர். அதனால் ஷாஜஹானின் மத்திய ஆசியக் கொள்கை கைவிடப்பெற்றது. அத்தகைய படையெடுப்புகளினால் முகலாயருக்கு ஆட்சேதமும் பணச்செலவும் மிகுதியாக ஏற்பட்டன. இங்ஙனம் ஷாஜஹானின் பயனற்ற பால்க் படையெடுப்பு முடிவடைந்தது. அப் போரினால் இரண்டு ஆண்டுகளில் இந்திய அரசாங்கத்தின் கருவூலம் நான்கு கோடி ரூபாய்களைச் செலவழித்தது. அதற்கு ஈடாக வெற்றிகொண்ட நாட்டிலிருந்து 22½லட்ச ரூபாய்கள் வரியாகக் கிடைத்தன. அதன் பயனாக ஓர் அங்குல நிலமும் பேரரசுடன் இணையவில்லை; அரசகுலம் ஏதும் மாறவில்லை. பால்க் அரியணையிலிருந்து எந்தப் பகைவனும் வெளியேறி நட்பரசன் ஆட்சிக்கு வரவில்லை. பால்க் கோட்டையில்

சேர்த்து வைத்திருந்த ஐந்து இலட்சம் பெறுமானமுள்ள உணவுப் பொருள்களும், பிற கோட்டைகளில் குவிக்கப்பெற்றிருந்த பொருள் களும் புகாரியர் (Bukharians) வசம் சிக்கின. அவற்றோடு நஸார் முகம்மதின் பேரக்குழந்தைகளுக்கு அளிக்கப்பெற்ற 50,000 ரூபாய்களும், தூதுவர்களுக்கு அளிக்கப்பெற்ற 25,000 ரூபாய்களும் புகாரியர்களுக்குக் கிடைத்தன. 50,000 போர்வீரர்கள் களத்தில் மடிந்தனர். அதைப்போன்று பத்து மடங்கு எண்ணிக்கையிலான (பாசறையில் பின்தொடர்ந்து வருவோர் உட்பட) மக்கள் மலை களின்மீதான கடுங்குளிரிலும் பனியிலும் மாண்டனர். வடமேற்கு எல்லை மாநிலத்தைக் கடந்து சென்ற வலுத்தாக்குதல் அடிப்படை யிலான பேரரசக் கோட்பாட்டிற்காக இத்தகைய கேடார்ந்த விலையை இந்தியா கொடுக்கவேண்டியிருந்தது. (Sarkar, 'Aurangzeb', vol. I, 3rd. ed., பக். 99-100).

அதன் பிறகு மத்திய ஆசியாவை வெல்லவேண்டுமென்ற கனவை முகலாயப் பேரரசர்கள் கைவிட்டனர். அதுபோன்ற ஆசை அவுரங்கசீப்பிற்கு இல்லை. அவருக்குப்பின் வந்த பேரரசர்களோ அதைப்பற்றி நினைக்கவும் ஆற்றலற்றிருந்தனர்.

## வடமேற்கு எல்லைப்புறக் கொள்கை

1545 முதல் 1554 வரையில் சூர்களின் ஆட்சி நிலவிய சில ஆண்டுள் நீங்கலாக, நம் நாட்டில் முகலாயர் ஆட்சி தோன்றிய 1526ஆம் ஆண்டிலிருந்து 1739ஆம் ஆண்டுவரையில் ஆப்கானிஸ் தானம் இந்தியாவின் ஒரு பகுதியாகவே திகழ்ந்தது. அதனால் நமது காலத்தில் வடமேற்கு எல்லைப்புற மாநிலம் எனப் பெயர்பெற்றதும், ஆப்கானிஸ்தானத்திற்கும் இந்தியாவிற்கும் இடையே அமைந்தது மான மலைச்சாதிக் கூட்டத்தினர் வாழும் பகுதியும் முகலாயப் பேரர சின் ஒரு பிரிவாக இருந்துவந்தது. எக்காலத்தும் இப் பகுதி போர்த்திறன் சார்ந்த முக்கியத்துவமும் பொருளாதாரச் சிறப்பும் பெற்றுத் திகழ்ந்த ஒன்றாகும். அதன் காரணமாக அந்தந்தக் காலங் களில் வாழ்ந்துவந்த இந்திய மன்னர்கள் அப்பகுதியின்மீது பயனுள்ள கட்டுப்பாடு கொள்ள முயன்றனர். மத்திய ஆசியாவை தென் ஆப்கானிஸ்தானம், பலுசிஸ்தானம், இந்தியா ஆகியவற்றி லிருந்து பிரித்துவைக்கும் இந்துகுஷ் மலைத்தொடரானது ஹீரட்டிற்கு வடக்கே மிகத் தாழ்வாக உள்ளது. இங்ஙனம் அது மத்திய ஆசியா அல்லது பாரசீகத்திலிருந்து காபூலுக்கோ இந்தியாவிற்கோ வரும் பகைவர்களுக்கு வழிவிட்டது. அதனால் மத்திய ஆசியாவிலிருந்தும் பாரசீகத்திலிருந்தும் வந்த பகைவர் காபூலில் அல்லது இந்தியாவில் நுழைவதைத் தடுப்பதற்காக எளிதில் வீழக்கூடிய அப் பகுதியின்

மீது முகலாயப் பேரரசர்கள் கவனம் செலுத்தவேண்டிவந்தது. இரண்டாவதாக, இந்தியாவில் முகலாயப் பேரரசின் பாதுகாப்பிற்கு இன்றியமையாததான வெல்லுதற்கரிய காண்டஹார் கோட்டையை முகலாயர் தங்கள் பிடியில் வைத்திருக்கவேண்டியதும் அவசிய மாயிற்று. மிகுந்த போர்த்திறம் சார்ந்த முக்கியத்துவம் வாய்ந்த நிலையில் இருந்த காண்டஹார் கோட்டை அக்காலத்தில் இந்தியா வின் முதல் பாதுகாப்பு அரணாகத் திகழ்ந்தது. மேலும், அது பெரு வணிகக்களமாகவும் இருந்தது. வாணிபப் பொருள்களைப் பண்டமாற்றுச் செய்வதற்காக ஆசியாவின் பல்வேறு பகுதிகளிலிருந் தும் வணிகர்கள் அங்கு வந்து குவிந்தனர். மூன்றாவதாக, தற்கால வடமேற்கு எல்லைப்புற மாநிலம் பெயரளவில் முகலாயரின் மேலாதிக் கத்தில் இருந்தபோதிலும், அது நடைமுறையில் உரிமைபெற்ற பகுதியாகவே விளங்கியது. அங்கே யூஸுஃப்ஸாயிகள் (Yusufzais), கட்டாக்கர்கள் (Khattaks), மொஹ்மாண்டுகள் (Mohmonds), உஸ் பெக்குகள் (Usbegs) போன்ற குழப்பம் விளைவிக்கும் மலைநாட்டு மக்கள் வாழ்ந்துவந்தனர். அவர்கள் தங்களுக்குரிய மலைகளில் மிகவும் ஆபத்தானவர்களாய் இருந்தனர். ஓரளவு குடியரசு மனப் பான்மை வாய்ந்தவர்களாகவும், தங்கள் சுதந்திரத்தின்மீது மிகுந்த மோகம் கொண்டவர்களாகவும் வாழ்ந்தனர். மிகச் சிறந்த இயற்கை அரண்களைக் கொண்டிருந்த தங்களது நாட்டில் போர்புரிவதில் வல்லவர்களாய் இருந்த அவர்கள், தங்களை அடிமைப்படுத்த எண்ணும் அருகிலுள்ள எந்தப் பேரரசின் எவ்வகை முயற்சியையும் எப்போதும் எதிர்த்து நின்றனர்.

வட இந்தியாவின் தலைவராவதற்கு முன்பே காண்டஹார் கோட்டையை பாபர் கைப்பற்றிக்கொண்டார். மேலும், இந்துகுஷ் மலைத்தொடரில் ஹீரட்டிற்கு வடக்கே இருந்த எளிதில் வீழக்கூடிய பகுதியைக் காப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்தார். வெளிநாட்டுப் படையெடுப்பிலிருந்து ஆப்கானிஸ்தானத்தையும் இந்துஸ்தானத் தையும் காப்பதற்காகவே அவ்வாறு செய்தார். ஆப்கானிஸ் தானமும் பஞ்சாபும் கம்ரனுக்கு அளிக்கப்பெற்றபோதிலும் பாபர் செய்த ஏற்பாடு ஹுமாயூன் காலத்திலும் தொடர்ந்துவந்தது. ஆயினும், வடமேற்கு எல்லைப் பகுதியில் வாழ்ந்த மலைநாட்டு மக்களைப் பொறுத்த முறையான கொள்கையை பாபரோ அல்லது ஹுமாயூனோ வகுக்கவில்லை. எவ்வாறெனினும், அவர்கள் மலைநாட்டு மக்களின்மீது பயனுள்ள கட்டுப்பாடு கொண்டிருக்க வேண்டும். எவ்வாறெனின், அவர்களுடைய ஆட்சிக் காலங்களில் மலைநாட்டு மக்கள் கிளர்ச்சி செய்யவில்லை. இந்துகுஷ் பகுதியின் பாதுகாப்பைப் பொறுத்த வரையில் அக்பரும் அதே கொள்கையைப் பின்பற்றினர். இங்ஙனம் இழந்த காண்டஹாரை பாரசீகத்தின் ஷாவிடமிருந்து மீட்டார்.

உஸ்பெக்குகளின் கலகத்தை அடக்கியதோடு, அவர்களுடைய தலைவனாகிய அப்துல்லா கானை (Abdulah Khan) முகலாயப் பேரரசுடன் நட்புப் பாராட்டுமாறு செய்தார். ஆயினும், வடமேற்கு எல்லைப் பகுதியில் ராஷ்னியர் கிளர்ச்சி என்ற மலைநாட்டு மக்களின் பயங்கரமான கிளர்ச்சி ஒன்று தோன்றியது. தனியுருவம்கொண்ட இஸ்லாம் சமயத்தைப் போதித்து, முஸ்லீம் அல்லாதாரைப் பகைக்கும்படி தூண்டிய பயாஸித் (Bayazid) என்பாரைப் பின்பற்றியவர்களே ராஷ்னியர்கள். அவர்கள் முகலாயப் பேரரசரின் ஆதிக்கத்தை எதிர்த்தனர். எல்லையைப் பயனுள்ள முறையில் பாதுகாக்க வேண்டியதன் முக்கியத்துவத்தை உணர்ந்த அக்பர், ராஷ்னியரின் குழப்பங்களை அடக்குவதற்காகப் படை ஒன்றை அனுப்பினார். அடுத்தபடியாக, ராஷ்னியருடன் சேர்ந்துகொண்ட யூஸுப்லாயிகளுடன் போரிடுவதற்காக ராஜா தோடர்மாலை அனுப்பினார். தோல்வியுற்ற மலைநாட்டு மக்களில் பலர் கொல்லப்பட்டனர். ஸ்வாத் (Swat), பஜார் (Bajaur), புனர் (Buner) ஆகிய எல்லைப்புறப் பகுதிகளிலிருந்து கலகக்காரர்கள் விரட்டப்பெற்றனர். மலைநாட்டு மக்களின் கிளர்ச்சிகளினால் காஷ்மீரம், சிந்து, பலுசிஸ்தானம் ஆகியவற்றை வென்று இணைத்துக்கொள்வதன்மூலமாகவும், காண்டஹாரைக் கைப்பற்றுவதன் மூலமாகவும் வடமேற்கு எல்லைப்புறப் பகுதியை முழுமையாக்க வேண்டியதற்குத் தேவையான நடவடிக்கைகளை மேலும் எடுக்க வேண்டியதன் அவசியத்தை அக்பர் உணர்ந்தார். இங்ஙனம் வடமேற்கு எல்லை பாதுகாப்புக்கொண்டதாயிற்று.

ஜஹாங்கீரின் ஆட்சியில் காண்டஹாரை இழந்ததால் எல்லையில் வலிமை குன்றியது. முக்கியமான அக் கோட்டையும், அதனைச் சுற்றியிருந்த பகுதியும் முகலாயருக்கும் பாரசீகருக்கும் இடையே சர்ச்சைக்குரிய பொருள்களாயின. 1587 முதல் 1629 வரை ஆட்சி புரிந்த ஷாஅப்பாஸ் (Shah Abbas), 1621ஆம் ஆண்டில் காண்டஹாரை முற்றுகையிட்டு, 1622ஆம் ஆண்டு ஜூன் மாதத்தில் அதனைக் கைப்பற்றினார் பலமுறை படை ஆயத்தம் செய்தபோதிலும் ஜஹாங்கீரால் அதனை மீட்கமுடியவில்லை.

காண்டஹார் மாநிலம் பேரரசிற்கு வெளியே சென்றுவிடுமானால் வடமேற்கு எல்லையில் முகலாயரின் நிலை தளர்வுறும் என்பதை உணர்ந்த ஷாஜஹான், காண்டஹார் கோட்டையை வெல்திறத்தால் மீட்டார். காண்டஹாரின் பாரசீக ஆளுநரான அலி மர்தன் கான் (Ali Mardan Khan) என்பார் பயன்மிகுந்த அக் கோட்டையை ஷாஜஹானிடம் ஒப்படைத்து அதற்கீடாக விலையுயர்ந்த வெகுமதிகளையும் மேலான பதவிகளையும் பெற்றார். இத்தகைய அவமானத்தைப் பாரசீகத்தின் இரண்டாம் ஷா அப்பாஸினால்

பொறுத்துக்கொள்ள முடியவில்லை. அதனால் மாரிக்காலத்தில் காண்டஹாரைத் தாக்குவதற்காக அவர்1648ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதத்தில் ஆயத்தமானார். பனி பெய்ததால் அக்கோட்டையிலிருந்த ஆளுநருக்கு ஷாஜஹானால் உதவிப் படை அனுப்பமுடியவில்லை. எனவே, 1648ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில் அந்தக் கோட்டையில் தங்கியிருந்த முகலாயக் காவற்படை சரணடைந்தது. காண்டஹாரும் மறுபடியும் ஷாவின் கைக்கு வந்தது. அதனை மீட்பதற்காக ஷாஜஹானும் மூன்று முறை வீணாக முயன்றுபார்த்தார். 1649ஆம் ஆண்டில் அவுரங்கசீப்பின் தலைமையில் முதல் முயற்சி நடைபெற்றது. மூன்றாண்டுகளுக்குப் பின்னர் காண்டஹாரின் இரண்டாவது முற்றுகை நிகழ்ந்தது. இம் முறை அவுரங்கசீப்பும் சாதுல்லா கானும் தலைமை தாங்கிச் சென்றனர். அருகிலிருந்த வண்ணம் நெருக்குவதற்கெனப் பேரரசரும் காபூலுக்குப் புறப்பட்டுச் சென்றார். 1653ஆம் ஆண்டில் தாராவின் தலைமையில் மூன்றாவது முறையாக முயன்று பார்த்தனர். அப்போதும் முகலாயருக்குத் தோல்வியே கிட்டியது. இம் மூன்று படையெடுப்புகளின் விளைவாக ஏராளமானவர் உயிரிழந்ததோடு 12 கோடி ரூபாய்களுக்கு மேல் செலவழிந்தது. இங்ஙனம் காண்டஹார் படையெடுப்பு முகலாயப் பேரரசின் படை சார்ந்த அரசியல் பெருமையினை வெகுவாகப் பாதித்தது.

காண்டஹாரை மீட்க அவுரங்கசீப் முயலவில்லை. எனினும், சோதர முஸ்லீம்களின் குருதியினைச் சிந்தக்கூடாது எனும் ஆவல் கொண்ட பழமைப் பண்புகொண்டமுஸல்மானாக இருந்தபோதிலும், அரசியல், பொருளாதாரக் காரணங்களுக்காக வடமேற்கு எல்லைப் புறப் பகுதியில் முற்போக்குக் கொள்கையை அவுரங்கசீப் பின்பற்றினார். அப் பகுதியில் வாழ்ந்த குழப்பம் விளைவிக்கும் மலைநாட்டு முஸ்லீம் மக்கள் முகலாய ஆதிக்கத்திற்கு அமைதியாக அடிபணிய மறுத்தனர். அதனோடு பேரரசருக்கும் அவரது அரசாங்கத்திற்கும் கலகத்தை உண்டுபண்ணினர். அம் மலைநாட்டு மக்கள் வழிப்பறிக் கொள்ளையில் ஈடுபட்டனர். வடமேற்குப் பஞ்சாபில் இருந்த வளமிக்க நகரங்களைச் சூறையாடினர். வடமேற்கில் அமைந்த கணவாய்களை வாணிபத்திற்குத் தடையின்றி வைத்திருப்பதற்கென உதவித் தொகைகள் அளித்து அவர்களைத் தம் வசப்படுத்திக் கொள்ள அவுரங்கசீப்பும் முயன்றார். ஆனால், பெருகிவந்த உடலுரமிக்க மலைநாட்டு மக்கள் ‘அரசியல் உபகாரச் சம்பளத்தினால், அமைதியுறவில்லை. அவர்களின் ஒரு கூட்டத்தினரான யூஸுஃப்ஸாயிகள், பாகு எனும் தலைவனின்கீழ் 1667ஆம் ஆண்டில் புரட்சி செய்தனர். அவர்கள் அட்டாக்கிற்கு அருகில் சிந்து ஆற்றைக் கடந்து ஹசாரா மாவட்டத்தைத் தாக்கினர். யூஸுஃப்ஸாயிகளின் மற்றொரு கூட்டத்தினர் மலைகளிலிருந்து வெளிப்பட்டு, மேற்கு

பெஷாவர் மாவட்டத்தையும் அட்டாக் மாவட்டத்தையும் சூறையாடி அழித்தனர். ஆயினும், சில மாதங்களுக்குள் யூஸுப்ஸாயிகள் ஒடுக்கப்பெற்றனர். அக்மல் கான் (Akmal Khan) எனும் தலைவரின் கீழிருந்த அப்ரிடி கூட்டத்தினர் (Afridis) 1672ஆம் ஆண்டில் கிளர்ச்சி செய்தனர். மன்னரென முடி சூட்டிக்கொண்ட அக்மல் கானும் முகலாயருக் கெதிரான தேசீயப் போராட்டத்தில் சேர்ந்துகொள்ளுமாறு எல்லாப் பத்தானியர்களையும் வேண்டிக் கொண்டார். அலி மஸ்ஜித் (Ali Masjid) என்னுமிடத்தில் முகம்மது அமீன் கானின் தலைமையில் வந்த முகலாயப் படையினை அப்ரிடி கூட்டத்தினர் முறியடித்தனர். முகலாயப் படைக்குப் பெருஞ் சேதம் விளைவித்ததோடு பெரும் பொருளையும் கொள்ளையிட்டனர். இந்த வெற்றியினுல் அக்மல் கானின் மதிப்பும் ஆசையும் வெகுவாக வளர்ந்தன. மேலும், அட்டாக்கிலிருந்து காண்டஹார்வரையில் பரந்த அளவில் மலைநாட்டு மக்கள் கிளர்ச்சி செய்யத் தொடங்கினர். கட்டாக் கூட்டத்தினர் அப்ரிடி கூட்டத்தாருடன் சேர்ந்து கொண்டனர். கட்டாக்குகளின் தலைவரும், புகழ்படைத்த புலவரும் வீரருமான குஷால் கான் என்பவர் மலைநாட்டு மக்களின் தேசீய எழுச்சியின் முக்கியத் தலைவராக இருந்து, தமது எழுத்தாலும் வீரசாகசத்தாலும் அம் மக்களைத் தூண்டினுர். ஷுஜாத் கான் (Shujat Khan) எனும் பேரரசப் படைத்தலைவரை 1674ஆம் ஆண்டில் மலை நாட்டு மக்கள் தோற்கடித்துக் கொன்றனர். மிகுதி யிருந்த முகலாயப் படையைக் காக்க ஜெஸ்வந்த சிங் ரதோர் வர வேண்டியிருந்தது.

1674ஆம் ஆண்டு மத்தியில் நிலைமை மிகவும் ஆபத்தானதாக மாறியதால், பத்தான்களைப் பயமுறுத்துவதற்காக அவ்வாண்டு ஜுலை மாதத்தில் பெஷாவருக்கு அருகிலிருந்த ஹஸன் அப்தால் (Hasan Abdal) எனுமிடத்திற்கு அவுரங்கசீப்பே நேரில் செல்ல வேண்டியதாயிற்று. அங்கே அவர் சாதுரியமான சூழ்ச்சித்திறத் தாலும் படைவலிமையாலும் முக்கிய பத்தான் தலைவர்களில் பலரைத் தம்வசப்படுத்திக்கொண்டார். பரிசுப் பொருள்கள், உபகாரச் சம்பளங்கள், ஜாகீர்கள் ஆகியவற்றை அத் தலைவர்களுக்கு அவர் அளித்தார். இவற்றிற்குப் பணியாது ஆணைக்கு அடங்க மறுத் தவர்களை ஆயுதம்கொண்டு அடக்கினுர். அமீன் கான் என்பவரை ஆப்கானிஸ்தானத்தின் அரசப் பகர ஆளாக நியமித்தார். மலை நாட்டு மக்களிடம் இசைவிணக்கக் கொள்கையைப் பின்பற்றிய அத் திறமை வாய்ந்த அதிகாரியினுல் அவர்களை அடக்கியாள முடிந்தது. தமது முன்னேர்களைப் போலவே, மலைநாட்டு மக்களின் தலைவர்களுக்கு உதவித் தொகை வழங்குவதன்மூலமாகவும், ஒரு கூட்டத்தினருக்கு எதிராக மற்றெரு கூட்டத்தாரைத் தூண்டி விடுவதன்மூலமாகவும் வடமேற்கு எல்லைப் பகுதியில் அவுரங்கசீப்

அமைதியைக் காத்துவந்தார். ஆயினும், கட்டாக் கூட்டத்தாரின் தலைவரான குஷால்கான்மட்டும் தமது மகனை தம்மைக் காட்டிக் கொடுக்கும்வரையில் தொடர்ந்து கலகம் செய்து வந்தார். இறுதியில் சிறைப்பட்ட அவர் அங்கேயே மடிந்தார்.

ஆப்கானிஸ்தானம் முகலாயப் பேரரசின் ஒரு பகுதியாகத் தொடர்ந்துவந்த காலம்வரையில் வடமேற்கு எல்லையில் அமைந்த கணவாய்களை அமைதியான போக்குவரத்திற்கு உரியதாகச் செய்வதற்கென மலைநாட்டு மக்களின் தலைவர்களுக்குக் கையூட்டாகப் பொருள் வழங்கும் கொள்கையை அவுரங்கசீப்பிற்குப்பின் வந்த அரசர்களும் கடைப்பிடித்தனர். 1739ஆம் ஆண்டில், ஆப்கானிஸ்தானத்தை நாதர் ஷா கைப்பற்றியபோது சிந்து ஆறே இந்தியாவின் எல்லையாக அமைந்தது. மேலும், இந்தியாவிற்கும் ஆப்கானிஸ்தானத்திற்கும் இடையே இருந்த பகுதியில் வாழ்ந்த மலைநாட்டு மக்கள் அந்த வாய்ப்பினைப் பயன்படுத்திக்கொண்டு தங்கள் உரிமையை மீட்டனர்.

## மேலும் கற்பதற்கான நூல்கள்

### ஆதார நூல்கள்

(a) பாரசீக மொழி நூல்கள்

ஐந்துமுதல் எட்டுவரையிலான அதிகாரங்களுக்குத் தரப் பெற்றுள்ள பொருட்குறிப்பு நூல் பட்டியலைக் காண்க.

### தற்கால நூல்கள்

1. Sir Jadunath Sarkar எழுதிய, 'Mughal Administration' 4th Ed. 1952.
2. Prof. Sri Ram Sharma எழுதிய, 'Mughal Government and Administration' (1951).
3. Ilen Hasan எழுதிய, 'The Central Structure of the Mughal Empire' (1936).
4. Dr. P. Saran எழுதிய, 'The Provincial Government of The Mughals' (1941).
5. William Irvine எழுதிய, 'The Army of The Indian Mughals' (1903).
6. Abdul Aziz எழுதிய, 'The Mansabdari System and the Army of the Mughals'.
7. Dr. R. P. Tripathi எழுதிய, 'Some Aspects Of Muslim Administration' (1936).
8. Prof. Sri Ram Sharma எழுதிய, 'The Religion's Policy of The Mughal Emperors'.
9. Edwards and Garret எழுதிய, 'Mughal Rule in India'.

# 13. சமுதாயமும் பண்பாடும்

இன்று இருப்பதைப் போலவே முகலாயர் காலத்து இந்தியா வின் நிலேயும் இருந்தது. ரயில்வேக்களும், பஞ்சாபிலும் தற்கால உத்தரப்பிரதேசத்திலும் காணப்பெறுகின்ற கால்வாய் அமைப்பு களும் அக்காலத்தில் இல்லே யென்பது உண்மையே. உறுதியான சரளேக்கல் சாலேகள் அப்போது இல்லே. பண்படாத சாலேகளே பிரதான நகரங்களே இணேத்தன. அவற்றின் இருமருங்கிலும் நிழல்தரு மரங்கள் நடப்பெற்றன. வணிகரும், வழிப்போக்கரும் இரவினேப் பாதுகாப்புடன் கழிப்பதற்கான விடுதிகள் சாலேகளில் முறையாக அமைந்திருந்தன. நீண்டகாலத்திற்குத் தலேநகரமாக விளங்கிய ஆக்ரா, நாட்டின் பிற பகுதிகளோடு நல்ல முறையில் சாலேத் தொடர்பு கொண்டிருந்தது. கிழக்கில் டாக்கா நகரத்தோடும், வட மேற்கில் காபூலுடன் ஆக்ராவை நெடுஞ்சாலேப் பெருவழி இணேத்து வைத்தது. அப் பெருவழி, பாட்னு, அலகாபாத், பனரஸ், ஆக்ரா, மதுரா, டில்லி, லாகூர், அட்டாக் ஆகியவற்றின் மூலமாகக் காபூலே அடைந்தது. மற்ருெரு சாலே ஆக்ராவில் தொடங்கி அசிர்கார்வரை நீண்டது. ஆக்ராவைத் தவிர தோல்பூர், குவாலியர், ஜோத்பூர், சிரோஹி (Sirohi), ஆஜ்மீர், அசிர்கார் போன்ற நகரங்கள் அச் சாலே யின்மீது அமைந்திருந்தன. மூன்ருவது முக்கியச் சாலே ஆக்ராவையும் அகமதாபாத்தையும் இணேத்தது. மற்ருெரு நெடுஞ்சாலே லாகூருக்கும் முல்டானுக்கும் இடையே சென்றது. சிந்து, கங்கை, யமுனே, காக்ரா (Ghagra) ஆகியவையும், வங்காளத்தில் ஓடிய ஆறுகளும் படகுப் போக்குவரத்திற்கு ஏற்றவையாக இருந்தன. மக்கள் போக்கு வரவிற்கும், படைகளேயும் பிற பொருள்களேயும் பல இடங்களுக்குக் கொண்டுசெல்லவும் அவ்வாறுகளே அடிக்கடி பயன்படுத்தினர். இப்போது இருப்பதைக்காட்டிலும் நிறையக் காடுகள் முகலாயர் காலத்தில் இருந்தன. முக்கியமாக உத்தரப்பிரதேசத்தில் கெரக்பூர், கோண்டா, லக்கிம்பூர்-கேரி, பிஜ்னேர் ஆகிய மாவட்டங்களிலும் பீஹார், மத்தியப்பிரதேசம் ஆகிய மாநிலங்களின் பகுதிகள் பலவற்றி லும் காடுகள் மிகுந்திருந்தன. கங்கைச் சமவெளியின் சில பகுதி

களில்கூடக் காட்டுவிலங்குகள் காணப்பெற்றன. கங்கைக்கும் யமுனைக்கும் தெற்கேயுள்ள பகுதிகளில் யானைகள் ஏராளமாக வாழ்ந்தன. மாளவத்தின் பகுதிகள் சிலவற்றில் சிங்கங்களையும் புலிகளையும் சுடமுடிந்தது. இவற்றைத் தவிர நாட்டின் பொதுக்கூறுகள் அப்போது இன்றைய நிலைக்கு அதிகம் மாறுபடவில்லை. நாட்டுப்புறங்களில் மக்கள் நிறைந்த, நெருக்கமான ஊர்கள் ஏராளமாக இருந்தன. கல்கத்தா, பம்பாய், மதராஸ், கான்பூர், கராச்சி நகரங்கள் அப்போது தோன்றவில்லை. கன்னோசி, விஜயநகரம் போன்ற பண்டைக்காலத் தலைநகரங்கள் சிதைந்த நிலையில் இருந்தன. ஆயின், பதேபூர் சிக்ரி (Fatepur Sikri), ஆக்ரா, டில்லி, அலகாபாத், பனாரஸ், முல்டான், லாகூர், உஜ்ஜெயினி, அகமதாபாத், ஆஜ்மீர், பாட்னு, ராஜ்மஹால், டாக்கா ஆகிய நகரங்கள் வளம்பெற்று விளங்கின. அவை அனைத்தும் ஏராளமான மக்கள் வாழுகின்ற செல்வம் கொழிக்கும் நகரங்களாகும். நாட்டின் பல பகுதிகளிலும் பெரும் பூங்காக்கள் பெருகி இருந்தன. குறிப்பாக, பெரு நகரங்களின் புறப்பகுதிகளை அவைகள் அழகு செய்தன. தொலைவிலிருந்து காணும்போதே நாட்டுப்புறங்கள் மட்டுமின்றி நகரங்களும் அழகாகக் காட்சியளித்தன.

இன்று இருப்பதைவிட முகலாயர் காலத்தில் மக்களின் நெருக்கம் குறைவாக இருந்தது. மக்களிற் பெரும்பான்மையினர் இந்துக்களே. அவர்கள் பல ஜாதியினராகப் பிரிந்திருந்தனர். ஜைனர்களும், பௌத்தர்களும், சீக்கியரும் அவர்களுடன் இணைந்தவர்களே. மேல் வகுப்பார் அநேகமாக ராஜபுத்திரர், பிராமணர், காயஸ்தர், வைஷ்கள் ஆகிய பிரிவுகளைச் சார்ந்தவர்களாக இருந்தனர். அவர்கள் ஒன்றாக அமர்ந்து உணவு அருந்துவதோ, தங்களுக்குள் கலப்பு மணம் செய்து கொள்வதோ கிடையாது. நமது காலத்தைவிட அக்காலத்தில் ஜாதி முறை மிக்க கடுமையாக இருந்தது. பொதுவாக இராஜபுத்திரர்கள் போர்வீரர்களாகத் திகழ்ந்தனர். அவர்களுடைய கூட்டத்தலைவர்கள் சிறுசிறு பகுதிகளை ஆளும் அரசர்களாக வாழ்ந்ததோடு பேரரச சேவையில் உயர்படிநிலையிலுள்ள மன்சப்தார்களாகவும் பதவி யேற்றனர். பிராமணர்கள் குருமார் தொழிலிலோ கல்வி கற்பிக்கும் பணியிலோ ஈடுபட்டனர். அவர்களில் குஜராத்தி நகார்கள் போன்ற சிலர் பாரசீக மொழி பயின்று அரசாங்க அதிகாரிகளாகப் பணியாற்றி வந்தனர். பிற்கால முகலாயர் ஆட்சியில் இந்த நாகர் வகுப்பைச் சேர்ந்த சிலர் மாநிலங்களின் தலைவர்களாகவும் விளங்கினர். வணிக சமூகத்தினரே வைஷ்களாவர். காயஸ்தர்கள் பெரும்பாலும் எழுத்தர்களாகவும், செயலர்களாகவும் (முன்ஷிகள்) நிதித்துறை அதிகாரிகளாகவும் பணிபுரிந்தனர். குறிப்பாக வங்காளத்திலும், வேறுசில பகுதிகளிலும் வாழ்ந்த கீழ் ஜாதி இந்துக்கள் இஸ்லாம் சமயத்தைத் தழுவினர். அதேபோன்று பஞ்சாப், காஷ்மீரம், ஆகிய

வற்றில் வாழ்ந்த மேல்ஜாதிக்காரர் சிலரும் தங்களது முன்னோர்களின் சமயத்தைத் துறந்து புதிய சமயத்தில் சேரவேண்டுமென்ற கட்டாயத்திற்கு உள்ளாயினர். முகலாயர் ஆட்சிக் காலத்தில் புதிய ஜாதி உட்பிரிவுகள் ஏராளமாகத் தோன்றின. காஷ்மீரத்து பிராமணர்களிடையே காஸி, தோஷ்கனி (Toshkhani), அகா (Agha) போன்ற உட்பிரிவுகளும், குஜராத்தில் வாழ்ந்த பிராமணர்களிடையே முன்ஷிகளும் தோன்றினர். அதேபோன்று காயஸ்தர்களிடையே குனங்கோக்களும் (Qanungo) ராய்ஸதாக்களும் (Raizada) தோன்றினர். மேலும், நாட்டின் பல பகுதிகளில் வாழ்ந்திருந்த முதல் மூன்று மேல்ஜாதியினரிடையே பக்ஷிக்கள் (Bakshis), மேத்தாக்கள் (Mehtas) ஆகிய பிரிவினர் தோன்றலாயினர். ஜாதிமுறையானது இந்து சமுதாயத்தைப் பல பிரிவுகளாகப் பிரித்துவைத்தபோதிலும், கூட்டான அமைப்பிற்கு அது வழிவகுத்தது எனலாம். அதில் இணைந்த உறுப்பினரின் ஒழுக்க முறைகளை அது மேற்பார்வை செய்தது.

முகம்மதியரில் இரு தீவிரப் பிரிவினர் வாழ்ந்துவந்தனர். அவ்விரு வகையினருள் ஒரு பிரிவினர் அரேபியா, பாரசீகம் ஆகியவற்றி லிருந்தும், பிற நாடுகளிலிருந்தும் வாணிபம் செய்யவோ, வேலை நாடியோ வந்தவர்கள். மற்றவர்கள் உள்நாட்டிலேயே வாழ்ந்த இந்துக்களில் இஸ்லாம் சமயத்தைத் தழுவியவர்கள் அல்லது அத் தகையோரின் வழிவந்தவர்கள். பின்கூறிய வகுப்பார் ஓரளவு எண்ணிக்கை மிகுதியானவர். அரேபியாவிலிருந்தும் பாரசீகத்தி லிருந்தும் வந்த முகம்மதிய வணிகர்கள் துறைமுகப்பட்டினங்களில் தங்களது குடியேற்றங்களை அமைத்துக்கொண்டனர். பணியை நாடி வந்தவர்கள் அநேகமாக வட இந்தியாவில் தங்கினர். குறைந்த அளவினரே அகமது நகர், பீஜப்பூர், கோல்கொண்டா போன்ற நாடுகளின் அரசவைகளை நாடிச் சென்றனர். முகலாய அரசவையில் அன்னிய முஸ்லீம்கள் ஆதிக்கம் செலுத்தினர். அராபியர், பாரசீகர், துருக்கியர், மங்கோலியர், உஸ்பெக்குகள் போன்றோரே அன்றிச் சில அபிசீனியர்களும் ஆர்மீனியர்களும் இந்தியாவிற்கு வந்தனர். இத்தகைய வெளிநாட்டு இந்திய முஸ்லீம்கள் அனைவரும் சமய நம்பிக்கை அடிப்படையில் நான்கு வகையினராகப் பிரிந்திருந்தனர். அவர்கள் சுன்னிகள் என்றும், ஷியாக்கள் என்றும், போராக்கள் என்றும், கோஜாக்கள் என்றும் பெயர் பெற்றனர். முஸ்லீம்களில் பெரும்பான்மையோர் சுன்னி பிரிவைச் சார்ந்தவர்களே. சுன்னி பிரிவினருக்கும், ஷியா பிரிவின ருக்கும், இஸ்லாத்தின் மற்றப் பிரிவினர்களுக்குமிடையே பூசல்கள் தோன்றுவது புதுமையானதல்ல. இன அடிப்படையில் துருக்கியர் என்றும், ஆப்கானியர் என்றும், பாரசீகர் என்றும், சையதுகள்

என்றும், இந்தியர்கள் என்றும் முஸ்லீம்கள் பிரிந்து நின்றனர். இந்திய முஸ்லீம்களில் பலர் இந்து சமயத்தில் எந்த ஜாதிப் பிரிவிலிருந்து வந்தார்களோ அதே பிரிவுகளுடன் தொடர்புகொண்டவர்களாகக் கருதிவந்தனர். அன்னிய நாட்டிலிருந்து துணிகர வீரர்கள் தடையின்றி வந்ததாலும், குடியிறக்கத்தின்மீது எவ்விதத் தடையும் இன்மையாலும் போர்ச்சுகீசியர், ஆங்கிலேயர், சீனர், துருக்கியர், யூதர் போன்ற ஐரோப்பாவிலிருந்தும் ஆசியாவிலிருந்தும் வந்த பல தேசத்து மக்களை இந்தியாவில் காணமுடிந்தது. பல நூற்றுண்டுகளுக்கு முன்னரே இந்தியாவில் அடைக்கலம் புகுந்த பார்ஸிகள் அக்பர் காலத்திலும் ஜஹாங்கீர் காலத்திலும் முக்கியமாகப் பயிர்த் தொழிலில் ஈடுபட்டிருந்தனர். ஆயின், ஷாஜஹான் காலத்தில் அவர்கள் வாணிபத்தில் அக்கறை கொண்டனர். ஐரோப்பியரைப் பொறுத்தவரையில் போர்ச்சுகீசியர்தாம் சிறந்த நிலையில் இருந்தனர். கோவாவும், இந்தியாவின் மேற்குக் கரையில் இருந்த வேறு சில இடங்களும் அவர்களுடைய ஆதிக்கத்தில் இருந்தன. சிந்து, கங்கை ஆறுகளின் கழிமுகப் பகுதிகளிலும் அவர்கள் வணிகக் களங்களை வைத்திருந்தனர்.

## சமயக் கொள்கைகளும் பழக்கவழக்கங்களும்

குஜராத்திலும் பம்பாயிலும் வாழுகின்ற பார்சிகள்; மேற்குக் கரையில், குறிப்பாக, கொச்சி-திருவாங்கூரில் வசிக்கின்ற கிறித்தவர்கள்; நாட்டின் பல பகுதிகளிலும் வாழுகின்ற அன்னிய, ஐரோப்பிய வணிக சமூகத்தினர் ஆகிய பல்வேறு சமயங்கள் சார்ந்த சமூகத்தினர் இருந்தபோதிலும், இந்தியத் துணைக்கண்டத்து மக்களில் பெரும்பாலோர் ஆதியிலிருந்து வந்த இந்துக்களும், இந்திய முஸ்லீம்களும், அன்னிய முஸ்லீம்களும்தாம். அவர்கள் முகலாய அரசவையிலும், பாசறையிலும், அரசாங்க அலுவலகங்களிலும் ஒன்றாக வேலைசெய்து அக்கம்பக்கமாக வாழ்ந்துவந்தனர். படையெடுத்துச் செல்லும் நாட்டின் பழைய சமயத்தையும் பண்பாட்டையும் வென்று அழிக்கும் ஆர்வம் இஸ்லாத்திற்கு எப்போதும் உண்டு. அதற்குப் பூர்வாங்க நடவடிக்கையாக முஸ்லீம்களுக்கும் முஸ்லீம் அல்லாதவருக்குமிடையே புறவேற்றுமையைத் தோற்றுவிப்பது வழக்கமாகும். முஸ்லீம்கள் துய்க்கும் முழுக் குடியுரிமையற்ற 'பாதுகாக்கப்பெற்ற தொழிலாளர்கள்' அல்லது ஸிம்மிகள் என முஸ்லீம் அல்லாதாரை அறிவிப்பதன் மூலமாக அத்தகைய புறவேற்றுமையைத் தோற்றுவித்தனர். ஆயின், இஸ்லாம் தனது முக்கியக் குறிக்கோள்களில் தோல்வியே கண்டது. எனினும், அது நமது ஒரே இனத்தன்மையை அழித்து முஸ்லீம்களுக்கும் (நம்பிக்கை

கொண்டவர்) இந்துக்களுக்கும் (காஃபீர்கள்) இடையே பிளவினை ஏற்படுத்துவதில் வெற்றியடைந்தது. முஸ்லிம் சமயம் சார்ந்த பொதுமக்கள் அக்பரின் சமயப் பொறைக் கொள்கையைக் கடுமையாக எதிர்த்தனர். இந்துக்களின் விட்டுக்கொடுக்கும் மனப் பான்மை இருந்தபோதிலும், முகலாயர் ஆட்சிக் காலம் முழுவதிலும் இரு பெரும்பான்மைச் சமூகத்தினரிடையே பகைமை தொடர்ந்து வந்தது. தங்களது ஆதிக்க நிலையை உணர்ந்திருந்த முஸ்லிம்கள் பொதுவாகவே ஆணவத்தோடு நடந்துகொண்டனர். அவர்கள் இந்துக்களின் சமயக் கொள்கைகளையும் வாழ்க்கை முறையையும் வெறுத்தனர். தங்களது அரசியல் மெலிவை இந்துக்கள் உணர்ந்திருந்தபோதிலும், 'அசுத்தமானவர்' என்க் கருதிய முஸ்லீம்கள் தங்களை நடத்திய முறைபற்றி உள்ளத்தில் வெறுப்புக்கொண்டனர். இந்துக்களைச் 'சமய நம்பிக்கையற்றவர்' (Kafirs) என்று முஸ்லீம்கள் பழித்தனர். அதற்கு முஸ்லிம்கள் 'தீண்டத்தகாதவர்கள் அல்லது மிலேச்சர்கள்' (Malekkchhas) என்று இந்துக்கள் திருப்பிப் பழித்தனர்.

இந்துக்களிடையே ஜைனரும் சீக்கியரும் வாழ்ந்தனர். இந்து சமய வரலாறு முழுவதிலும் எங்கும் நிறைந்த, எல்லாம் வல்ல இறைவனையே நம்பியிருந்தபோதிலும், முகலாயரின் ஆட்சிக் காலத்தில் உருவ வழிபாடே பெருவழக்காக இருந்தது. மேலும், சமயப் பொறையோடு வாழ்ந்த அக்பர், ஜஹாங்கீர் ஆகியோரின் ஆட்சிக் காலத்தில் நாட்டின் பல பகுதிகளில் பல்வேறு கடவுளர் களுக்காகக் கோயில்கள் கட்டப்பெற்றன. அக்காலத்தில் வாழ்ந்த நமது முன்னோர்களில் பத்தாயிரக்கணக்கானவர்களின் மனத்தை இராமரையும் கிருஷ்ண பரமாத்மாவையும் மையமாகக்கொண்ட வைஷ்ணவச் சமயப் பிரிவும் பக்திமார்க்கமும் கொள்ளைகொண்டன. பாமர மக்களுக்கும் உயர்ஜாதிக் குடியினருக்கும் ஒழுக்க நெறிகளைப் போதிப்பதற்கென்று பல அருள்தொண்டர்களும் சீர்திருத்தக்காரர் களும் தோன்றினர். உணவு, உடை, பானம் ஆகியவற்றை நுகர்வதில் அளவோடு இருந்த இந்துக்களில் பெரும்பான்மை யானவர் தூய, தீமையற்ற, சிக்கன வாழ்க்கையை மேற்கொண்டனர். ஆண்டின் பல நாள்களில் உண்ணுநோன்பைக் கடைப்பிடித்தனர். புனிதத் தலங்களுக்கு யாத்திரை செய்தனர். அறக்கொடை அளித்தனர். ஜாதி, சமய வேறுபாடு இன்றித் துன்புற்ற மக்களின் துயர் துடைப்பதற்காகத் தங்களது வருவாயில் ஒரு பகுதியைச் செல விடுதலைச் சமயக் கடமையாகவே கருதினர். கங்கையையும், யமுனையையும், பிற ஆறுகளையும் அவர்கள் போற்றி வணங்கினர், அருள்தொண்டர்களைச் சென்று கண்டனர்.

முஸல்மான்கள் உருவ வழிபாட்டை எதிர்த்தபோதிலும், முன்னோர்களின் கல்லறைகளைப் போற்றினர். அவர்களில் பலர் 'தஸியா'வைக் கொண்டாடினர். நாட்டுப்புறங்களில் தல இந்துக் கடவுளரையும் வணங்கினர். அருள்தொண்டர்களையும் ஃபகீர்களையும் (Faqirs) வழிபடுதல் பொதுப் பழக்கமாக இருந்துவந்தது.

அடிமைமுறை இருந்த காரணத்தால் சமுதாயத்தில் சீர்குலைவு தோன்றியது. அக்பர் அதனைத் தடைசெய்தபோதிலும், போர்க் கைதிகள் அடிமைகளாக்கப்பெற்றதோடு, இஸ்லாம் சமயத்தைத் தழுவுமாறும் கட்டாயப்படுத்தப்பெற்றனர். இந்துக்கள், முஸ்லிம்கள் ஆகியோரிடையே மூடநம்பிக்கைகளும், நிமித்தங்களில் நம்பிக்கையும், குறியியலும் (Astrology) பொதுவாக இருந்தன. முகலாயர் காலத்தில் வாழ்ந்த எல்லா வகுப்பினரின் சமய வாழ்விலும் இரசவாதம், மந்திரங்கள், தாயத்துகள், இவைபோன்ற தெய்வ ஆதரவுச் சாதனங்கள் முதலியவற்றில் நம்பிக்கை கொள்ளுதல் முக்கியப் பண்பாகும்.

## ஆடை, அணிகலன்கள், அழகு சாதனங்கள்

நீண்ட மேலங்கி (coat), இறுக்கமான கால்சட்டை, தலைப் பாகை ஆகியவை நம் நாட்டு உயர்குடியினரும் நடுத்தர வகுப்பாரும் உடுத்திய ஆடைகளாகும். ஏழை, பணக்காரர் எனும் வேற்றுமையின்றி இந்துக்கள் தலைப்பாகை அணிந்தனர். பலர் பட்டு அல்லது பருத்தியினாலான துண்டினை இடுப்பில் கட்டித் தொங்கவிட்டனர். அதேசமயத்தில் மற்றொரு துண்டினைத் தோளின் மீது போர்த்தியிருந்தனர். பாமர மக்கள் 'தோத்தி' (Dhoti) அல்லது வேட்டியை இடுப்பில் சுற்றியிருந்தனர். ஏழ்மை நிலையில் உள்ள முகம்மதியர்கள் பைஜாமாவையும் நீண்ட சட்டையையும் உடுத்தினர். முகலாயப் பேரரசர்கள் பகட்டான விலையுயர்ந்த ஆடைகளை அணிந்தனர். அதற்குமேல் அணிமணிகளால் அலங்கரிக்கப்பெற்ற தலைப்பாகையும் சூடினர். மேலங்கியின் இழைக் கச்சையை இந்துக்கள் இடப்புறம் முடிந்தனர்; அதே சமயத்தில் முகம்மதியர் அதனை வலப்புறம் முடிந்தனர். இந்து மாதர் புடவை கட்டினர்; முஸ்லீம் மங்கையர் பைஜாமா அல்லது 'காக்ரா' (Ghagra) வையும் ரவிக்கையும் (Jackets) உடுத்தினர். அவற்றோடு சிறு துகில் கொண்டு தலையை மூடினர். வடமேற்குப் பகுதிகளில் 'குலாஸ்' (Kulas) அல்லது காஷ்மீர்க் குல்லாய் பெருவழக்காயிற்று. காலுறை அணியும் வழக்கம் இல்லையாயினும், பெரும்பான்மையோர் பல வடிவிலும் அமைப்பிலும் ஆன காலணிகளை (shoes) அணிந்தனர். அலம்புதற்காகப் பயறுகளின் பொடி, அரிசி மாவு அல்லது சீயக்காய்த்

தூளைப் பயன்படுத்தினர். கூந்தல் கருக்கும் மையும், வழுக்கையைப் போக்கும் மருந்துகளும், உடலில் வேண்டாத ரோமத்தை நீக்கு வதற்கான மருந்து வகைகளும் உபயோகத்தில் இருந்தன. நம் நாட்டுப் பெண்கள் சந்தனம்போன்ற பலவகை நறுமணச் சாந்து களைப் பூசி மகிழ்ந்தனர். கைகளிலும் பாதங்களிலும் சிவப்புச் சாயம் பூசிவந்தனர். கண்களுக்கு மையிட்டனர். தற்காலப் பெண்டிர் உதட்டுச் சாயம் பூசுவதற்கு ஈடாக அக்காலத்தில் பான் (Pan) அல்லது வெற்றிலைபாக்கு போட்டுக்கொண்டனர். தைலங்களும் நறுமணப் பொருள்களும் இன்றியமையாது தேவைப் பட்டன; இக் காலத்தைப்போலவே முகலாயர் கால மங்கையரும் அணிகலன் பூணுவதில் மட்டிலா ஆர்வங் காட்டினர். அன்றுடம் காலைவேளைகளில் கடைப்பிடிக்கவேண்டிய நெறிமுறைகளில் உடல் தூய்மை ஒன்ருக அமைந்தது. தாதுன் (Datun) கொண்டு பல் துலக்குதல், கண்களையும் வாயையும் கழுவுதல், வாசனைப் பொருள் கொண்டு உடம்பைத் தேய்த்தல், பிடித்துவிடுதல், தைலம் பூசுதல், தலைநீவல், குளித்தல், கண்களுக்கு மையிடுதல், முகப்பூச்சிடுதல், வெற்றிலை போடுதல் ஆகியவை காலைக்கடன்களில் அடங்கின.

இந்து, முஸ்லீம் சமூகங்களைச் சார்ந்த சாதாரண மக்கள் ஏறக் குறைய ஒரேவகையான உணவினை உட்கொண்டனர். முஸ்லீம்கள் இறைச்சியை விரும்பி உண்டனர்; இந்துக்களில் பலர் அதனை உட்கொள்ளவில்லை. எனினும், இந்துக்கள் பொதுவாகப் புலாலை வெறுத்தனர் என்று கொள்வது சரியல்ல. தமிழ்நாடு, மகாராஷ்டிரம், குஜராத், மத்திய இந்தியா ஆகிய பகுதிகளில் வாழ்ந்த வைஷ்ணவர் களில் பலரும், பிராமணர், ஜைனர் ஆகியோருமே புலாலை அடியோடு மறுத்தனர். பழக்கம் காரணமாகவும் பொருளாதார நெருக்கடி காரணமாகவும் இந்து சமூகத்தில் பொதுமக்கள் சைவ உணவு கொள்வோராயினர். அக்பர், ஜஹாங்கீர் போன்ற முகலாய மன்னர்கள், சில நாள்களில் புலாலுக்காக விலங்குகளைக் கொல்லக் கூடாதென்று தடை விதித்தனர். அந் நாள்களில் புலால் உணவை உட்கொள்ளாமலும் இருந்தனர். பலவகையான புலால் உணவு களையும், புலவு (Pulao) போன்ற சுவைமிக்க உணவு வகைகளையும் உயர்குடி மக்கள் பெரிதும் விரும்பினர். மது அருந்த முஸ்லீம் களுக்குத் தடை இருந்ததால் பொது இடங்களில் அதனை வழங்குவ தில்லை. உயர்குடிப் பிறந்தோரும் நடுத்தர வகுப்பாரும் கனி வகைகளை ஏராளமாக உண்டனர். ஊறுகாய்களும் அச்சார்களும் (achars) பொதுவாக உட்கொள்ளப்பெற்றன. வெண்ணெய், பயறு வகைகள், காய்கறிகள், அரிசி, சப்பாத்தி அல்லது ரொட்டித் துண்டுகள் ஆகியவை இந்துக்களின் சைவ உணவுப் பொருள்க ளாயின. சமையல் அறைகளைச் சுத்தமாக வைத்திருத்தலை

இந்துக்கள் ஒரு சமயக் கடமையாகவே கொண்டனர். சந்தைகளில் விற்ற சமைத்த பொருள்களை இந்துக்கள் உட்கொள்வதில்லை. பீங்கான், கண்ணடி, களிமண் ஆகியவற்றால் ஆன கலன்களை முஸ்லீம்கள் பயன்படுத்தினர். இந்துக்களோவெனின், தங்களது நிலைக்கேற்ப செம்பு அல்லது வெள்ளியினாலான பாத்திரங்களை உபயோகித்தனர். உணவு அருந்துவதற்கு முன்னும் பின்னும் இந்துக்கள் வாயையும் கைகால்களையும் கழுவிக்கொண்டனர்.

சமயத் தடை இருந்தபோதிலும், மேல்வகுப்பைச் சார்ந்த முஸ்லீம்கள் மது அருந்தினர். அவர்களில் பலர் மட்டற்ற குடியினால் வலிப்பு கண்டு இறந்தனர். இராஜபுத்திரர்கள் மதுவோடு கஞ்சாவும் குடித்தனர். பல இந்துக்கள் அபினுக்கு அடிமையாயினர். ஜஹாங்கீரின் காலத்திலிருந்து புகையிலையை மக்கள் மிகுதியாகப் பயன்படுத்தத் தொடங்கினர்.

## பொழுதுபோக்குச் சாதனங்கள்

முகலாயர் காலத்து வாழ்ந்திருந்த நம் நாட்டு மக்கள் விளையாட்டுகளிலும் வேடிக்கைகளிலும் மிகுந்த பற்றுதல் கொண்டிருந்தனர். மேல்குடியிலும் நடுத்தர வகுப்பிலும் தோன்றிய ஆண் பெண் இருபாலாரும் சதுரங்க ஆட்டம், சீட்டு ஆட்டம், பலவகையான ஆடு புலியாட்டங்கள் போன்றவற்றில் ஆர்வங் காட்டினர் வேட்டையாடுதல், விலங்குப் போட்டி வைத்தல், 'சாகன்' (Chaugan) அல்லது குதிரைமீதமர்ந்து செண்டு கொண்டு ஆடும் பந்தாட்டம் போன்ற வெளிப்புற விளையாட்டுகளில் கலந்து கொள்ளும் வாய்ப்பு ஒருசிலருக்கே கிடைத்தது. செண்டாட்டத்தை நீரிலும் ஆடினர் (Water Polo). இராக்காலங்களில் எரியும் செண்டுகளைக் கொண்டு விளையாடினர். மற்போர், செப்படி வித்தைகள், சித்து வேலைகள் ஆகியவற்றை மக்கள் அனைவரும் கண்டு மகிழ்ந்தனர். காற்றாடி விடுதல், போலிச் சண்டைகள், கண்ணும் பொத்தியாட்டம், மரமேறுதல் முதலான களியாட்டங்களும் எல்லோரது மனங்களையும் கவர்ந்தன. நாட்டின் பல பகுதிகளிலும் வாழ்ந்த உயர்குடியினருக்கும் நடுத்தர வகுப்பாருக்கும் நாட்டிய விருந்துகள் தனிப்பட்ட பொழுதுபோக்காக அமைந்தன. செல்வந்தருடைய உவளகங்களில் வாழ்ந்த மங்கையர் நாட்டியம், நாடகம், காதல், வீரம் ஆகியவைபற்றிய கதைகள் முதலியவற்றில் இன்பங் கண்டனர்.

பொழுதுபோக்குக் களியாட்டங்களில் வேட்டையாடுதல் முக்கிய இடத்தினைப் பெற்றது. முகலாய மன்னர்கள் அதில் அடிக்கடி

ஈடுபட்டனர். 'கமார்கா' (Kamargha) என்னும் தனிவகையான வேட்டை முறையை அக்பர் கண்டுபிடித்தார். அது விரைவிலேயே பலரால் விரும்பிப் போற்றப்பட்டது. அத்தகைய வேட்டையில் பொதுவாக 40 காஸ் (Kos) கொண்ட நிலப்பரப்பில் பறையறைவோர் வட்டமாக நின்று விலங்குகளை விரட்டுவர். அந்த வளையம் சிறிது சிறிதாகக் குவியும். யானைமீது அமர்ந்த பேரரசர் விலங்குகளைச் சுட்டுக் கொல்லக்கூடிய அளவிற்குப் பறையறைவோரின் வளையம் நெருக்கிவரும். யானையைக் கண்ணிவைத்துப் பிடிப்பதும் புலி வேட்டையாடுவதும் பேரரசரின் தனியுரிமைகளாக இருந்தன. படகு ஓட்டுவதும் சுவையான பொழுதுபோக்காக அமைந்தது. அரசவையினரும் பல இன்பப் படகுகளை வைத்திருந்தனர். கதை கேட்டல், இசை, பாட்டு ஆகியவற்றில் செல்வந்தர் இன்பம் கண்டனர். மன்னர்களும், பிரபுக்களும், பிற செல்வர்களும் பூங்காக்கள் வளர்ப்பதைப் பொழுதுபோக்காகக் கொண்டனர்.

## திருவிழாக்களும் கொண்டாட்டங்களும்

திருவிழாக்களினாலும் பொதுக் கொண்டாட்டங்களினாலும் உறவினர்களும் நண்பர்களும் ஒன்றுகூடுவதற்கு வாய்ப்புகள் ஏற்பட்டன. மேலும், சலிப்பூட்டும் அன்றாட வாழ்க்கைப் பணிகளிலிருந்து கருத்துத் திருப்பத்திற்கும் இவை வாய்ப்பளித்தன. இந்துக்களும் முஸ்லீம்களும் ஏராளமான திருவிழாக்களிலும் கொண்டாட்டங்களிலும் ஈடுபட்டனர். ஆண்டில் பல முறைகள் படாடோபமான காட்சிகளைப் பொதுமக்கள் கண்டு களிப்பதற்கான வாய்ப்புகள் பலவற்றை முகலாய அரசவை அளித்தது. பர்ஷியப் புத்தாண்டு தினமான நௌரோஸ்; பேரரசரும் இளவரசர்களும் பிறந்த நாள்கள்; பேரரசர் அரசு எய்திய ஆண்டு நிறைவுநாள்கள்; தஸரா, வசந்த், தீபாவளி போன்ற இந்து திருவிழாக்கள் (அவுரங்கசீபின் ஆட்சிக் காலத்தில் தவிர), இரண்டு ஈத் பெருநாள்கள் ஷபீ பராத் (Shab-i-Barat), பரா வாஃபத் (Bara Wafat) போன்ற முஸ்லீம்களின் திருவிழாக்கள் வந்தபோது அரசவையும் அரண்மனையும் கோலாகலக் காட்சியளித்தன. சிறப்பு தர்பார்களும், விருந்துகளும், பிற களியாட்டங்களும் அப்போது இடம்பெற்றன. சில சமயங்களில் கண்ணைக் கவரும் கடைத்தெருக்கள் தோன்றுவதுண்டு. கேளிக்கைக்காகவும் இன்பம் அடைவதற்காகவும் செல்வந்தர் வீட்டுப் பெண்டிர் அவைகளைக் காணச் சென்றனர். இந்துக்கள், முஸ்லீம்கள் ஆகியோருடைய சமய விழாக்களும் கொண்டாட்டங்களும் எழுத்திலடங்கா. அவை நம் காலத்தவைகளைப் பெருமளவு ஒத்திருந்தன. ஹரித்துவார், பிரயாகை, அயோத்தி,

மதுரா, குர்முக்தேஷ்வர், நிம்சார், கயா, குருக்ஷேத்திரம், உஜ்ஜெயினி முதலான பல இந்து சமயப் புண்ணியத் தலங்களில் அவ்வப்பொழுது திருவிழாக்களும் கொண்டாட்டங்களும் நடைபெற்றன. அவற்றைக் காண ஏராளமான ஆடவரும், பெண்டிரும், சிறுவர்களும் சென்றனர். இத்தகைய திருவிழாக்கள் சமய, சமுதாயப் பயன்களை அளித்த காரணத்தால் பொதுமக்களுடைய பாராட்டுதல்களைப் பெற்றன. ஆஜ்மீர், பானிப்பட்டு, சரஹந்த், அஜோதான் முதலிய இடங்களில் முஸ்லீம் விழாக்கள் நடைபெற்றன. புண்ணியத் தலங்களாக விளங்கிய அவற்றிற்கு நாட்டின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் ஏராளமான யாத்திரிகர்கள் சென்றவண்ணமிருந்தனர்.

## பெண்களின் நிலை

பண்டைய இந்து அரசர்கள் காலத்தைப்போன்று அல்லாது முகலாயர் காலப் பெண்கள் சமுதாயத்தில் உயர்ந்த இடத்தினைப் பெற்றில்லை. இஸ்லாத்தின் செல்வாக்கினாலும், முஸ்லீம் அரசர்களும் பிரபுக்களும் நடந்துகொண்ட முறையினாலும் பர்தாவும் (purdah – முகத்தை மறைத்தல்), சிறுபிள்ளைத் திருமணமும் பொது வழக்காயின. தாழ்ந்த வகுப்பாரைத் தவிர, இந்து சமூகத்தைச் சார்ந்த பெண்கள் வீடுகளைவிட்டு வெளியே செல்வதில்லை. இந்துக்களைவிட முஸ்லீம்கள் பர்தா முறையைத் தீவிரமாகக் கையாண்டனர். பெண்குழந்தை பிறப்பதைத் தீச்சகுனமாகக் கருதினர். ஆனால், ஆண்மகன் பிறப்பதைக் கொண்டாட்டத்திற்குரியதாக எண்ணினர். சிறிய வயதிலேயே திருமணம் நடைபெற்றதால் நமது சமுதாயத்தில் விதவைகளின் எண்ணிக்கை பெருகியது. மறுமணம் செய்து கொள்ளவும் அவர்கள் அனுமதிக்கப்படவில்லை. சுன்னி சமய மரபுப்படி ஒரே சமயத்தில் நான்கு மனைவியரை மணக்கக்கூடிய நிலையிலிருந்த முஸல்மான்கள் ஒன்றிற்கு மேற்பட்டவரை மணத்தல் பொதுவழக்காக இருந்தது. ஷியா சமயப் பிரிவைச் சேர்ந்தவர் நான்கிற்கு மேலும் எத்தனை பேரை வேண்டுமானாலும் மணக்கலாம். இந்துக்களிடையே மணமுறிவு கிடையாது. ஆனால், முஸ்லீம்களில் ஆண்களும் பெண்களும் மணமுறிவு செய்துகொள்ளலாம். பலதார மணத்தை இந்து சமயம் தடைசெய்யவில்லையென்றாலும், பழக்கம் காரணமாகவும் பொருளாதார நெருக்கடி காரணமாகவும் அவர்கள் ஒருத்தியை மணத்தல் பொதுவழக்காய் இருந்தது. சாதாரணமாக மிதமான வருவாயும் மட்டமான நிலையும் கொண்டவர்கள் ஒரு மனைவிக்கு மேலே மணப்பதில்லை. இந்து அரசகுலத்தினரே இத்தகைய களியாட்டத்தில் ஈடுபட்டனர். இத்தகைய இடர்ப்பாடுகள் இருப்பினும், இல்லங்களில் பெண்கள் மிகுந்த செல்வாக்குப் பெற்

றிருந்தனர். சில பெண்கள் அவர்தம் கணவன்மார்களின் தொழில் களில் உதவியாக இருந்தனர். இக் காலப்பகுதியில் ஆற்றல் மிகுந்த ஆரணங்குகள் பலர் இந்து சமுதாயத்தில் வாழ்ந்திருந்தனர். வீராங் கனையாகவும், திறமை மிக்க ஆட்சி வினைஞராகவும் திகழ்ந்த காண்டுவனத்து ராணி துர்காவதி, ராணி கார்ம்வதி, மீராபாய், தாராபாய் முதலானவர்கள் குறிப்பிடத்தகுந்தவர்கள். முஸ்லீம் மாதர்களில் நூர்ஜஹான், மும்தாஜ்மஹால், சாந்த் பீபி, ஜஹனரா, ராஷனரா, ஸெபுன்னிஸா, காபூலின் கவர்னரான அமின்கானின் இல்லத்தரசி ஷாஹிப்ஜி போன்றவர்கள் அக்கால விவகாரங்களில் முக்கியப் பங்கு பெற்றனர்.

## பயிர்த்தொழிலும் கைத்தொழிலும்

மக்களில் பெரும்பான்மையோர் பயிர்த்தொழிலை நம்பி வாழ்ந் தனர். ஏறக்குறைய இக்காலத்தைப்போலவே அக்காலத்துப் பயிர்த் தொழிலும் அமைந்தது. கோதுமை, பார்லி, பயறு, பட்டாணி, எண்ணெய் வித்துகள் போன்ற பழக்கமான பயிர்களோடு கரும்பு, அவுரி (Indigo), கசகசாச் செடி (Poppy) ஆகியவையும் நாட்டின் பல பாகங்களிலும் பயிரிடப்பெற்றன. பயிர்வகைகள் வட்டாரப் பண்பு பெற்றிருந்தன. தற்கால உத்தரப் பிரதேசத்தின் பல பகுதிகளிலும், வங்காளத்திலும், பீகாரிலும் கரும்பு பயிராகியது. வட இந்தியாவிலும் தென்னிந்தியாவிலும் பல இடங்களில் அவுரி உற்பத்தியாகியது. ஏராளமான இடங்களில் பருத்தி பயிராகியது. பயிர்த்தொழிற் கருவி களும் சாதனங்களும் தற்காலத்தில் இருப்பனவற்றைப் போன்ற வையே. எவ்வாறெனினும், செயற்கை முறையில் நீர்பாய்ச்சுதல் முகலாயர் காலத்தில் இல்லை. கிணறுகள் அல்லது குளங்களிலிருந்தே குடியானவர்கள் நிலங்களுக்கு நீர் பாய்ச்சினர். இருப்பினும், பயிர்த் தொழில் சார்ந்த பொருள்களில் நாடு தன்னிறைவு பெற்றிருந்தது. பயிர்த்தொழில் சாராத பொருள்களில் மீன்கள், உலோகங்கள், உப்பு, அபின், மது ஆகியவை முக்கியமானவையாகும். குமானிலும் (Kumaun), பஞ்சாபின் மலைகளிலும் ஆறுகளிலும் தங்கம் கிடைத்தது. நாட்டின் பல பகுதிகளிலிருந்து கிடைத்த இரும்பினைப் படைக்கலன் கள், கருவிகள் முதலானவைகளைச் செய்ய மிகுதியாகப் பயன்படுத்தி னர். ராஜஸ்தானத்திலும் மத்திய இந்தியாவிலும் செம்புச் சுரங்கங் கள் இருந்தன. பதேபூர்சிக்ரியிலும் ராஜஸ்தானத்தின் பல பகுதி களிலும் செம்மை நிறக் கற்சுரங்கங்கள் காணப்பட்டன. தட்டாவில் மஞ்சள் நிறக் கல்லும், ஜெய்ப்பூர், ஜோத்பூர் ஆகிய இடங்களில் சலவைக்கல்லும் கிடைத்தன. கோல்கொண்டா வைரச் சுரங்கங்கள் பெயர்பெற்றவை. சோட்டாநாகபுரியிலிருந்தும் ஒளிமணிக் கற்கள்

கிடைத்தன. சாம்பார் ஏரியிலிருந்தும் பஞ்சாப் குன்றுகளிலிருந்தும் உப்பு வந்தது. மேலும், கடலிலிருந்தும், குஜராத், சிந்து ஆகிய பகுதிகளின் ஏரி நீரிலிருந்தும் உப்பெடுத்தனர். மாளவத்திலும் பீகாரிலும் அபினைப் (Opium) பரவலாகப் பயிரிட்டனர். மதுபானங்களை எல்லா இடங்களிலும் தயாரித்தனர். வெடிமருந்துகள் செய்வதற்கு மிகவும் தேவையான வெடியுப்பையும் உற்பத்திசெய்தனர்.

பருத்தி பயிரிடுதலும் பருத்தி ஆடைகள் உற்பத்தி செய்வதும் மிக முக்கியத் தொழிலாகும். பருத்தித் தொழில் எல்லா ஊர்களிலும் நடந்துவந்தது. உள்நாட்டு உபயோகத்திற்காக நாடு முழுவதிலும் பருத்தி ஆடைகள் உற்பத்தியாயின. ஆயினும், ஆக்ரா, பனாரஸ், ஜான்பூர், பாட்னா, பர்ஹான்பூர், லக்னோ, கெய்ராபாத் ஆகிய நகரங்களும், பீடார், பீஹார், வங்காளம், மாளவம் போன்ற பகுதிகளில் இருந்த வேறு சில இடங்களும் நேர்த்தியான பருத்தியாடைகளுக்குப் பெயர்பெற்றவையாகும். பருத்தித் தொழிலோடு சாயமிடும் துணைத்தொழிலும் வளர்ச்சியுற்றிருந்தது. இந் நாட்டில் உற்பத்தியான அழகும் அழியாத் தன்மையும் பொருந்திய சாயங்களைக் கண்டு எட்வர்டு டெர்ரி (Edward Terry) வியப்பிலாழ்ந்தார். அயோத்தியாவிலும் (ஃபய்ஸாபாத்) காண்டேஷிலும் பொன்னுடைகள் நெய்தனர். பட்டாடைகளுக்கும், நேர்த்தியான மஸ்லின் துணிகளுக்கும், படுக்கை விரிப்புகளுக்கும் டாக்காவும் வங்காளத்தில் வேறு சில இடங்களும் புகழ்பெற்று விளங்கின. அழகிய பூவேலைகொண்ட சமுக்காளங்கள் முல்தானில் உற்பத்தியாயின. காஷ்மீரம் தன்னுடைய கம்பளங்களுக்கும், பிற பட்டு, கம்பளப் பொருள்களுக்கும் பெரும் புகழ்கொண்டது. அமிர்தசரசில் கம்பள சமுக்காளமும் சால்வையும் உற்பத்தி செய்யும் தொழிற்சாலையை ஜஹாங்கீர் நிறுவினார். பஞ்சாபு, உத்தரப் பிரதேசம் ஆகியவற்றிலும் வேறு சில மாநிலங்களிலும் சித்திரப் பின்னல் வேலைப்பாடுடைய துணிகள் நெய்யப்பெற்றன. வண்ணங்கள் அச்சிட்ட துணிகளைப் பேரார், சிரோங், பர்ஹான்பூர், அகமதாபாத், ஆக்ரா ஆகிய இடங்களில் உற்பத்தி செய்தனர். பதேபூர்சிக்ரியிலும், ஆல்வாரிலும், ஜான்பூரிலும் கம்பளங்களை நெய்தனர். கூடாரத் துணிகளின் உற்பத்திக்கு பஞ்சாபிலுள்ள சியால்கோட் புகழ்பெற்று விளங்கியது. பல பொருள்களையும் பெருமளவில் ஆக்குதற்கு அரசாங்கம் ஆதரவுகாட்டியது. அரசவையோடு இணைந்த பல கர்கானுக்கள் அல்லது தொழிற்கூடங்களில் பல நூற்றுக்கணக்கான தொழிலாளர்கள் வேலைசெய்து வந்தனர்.

தற்காப்பிற்கும் வலுத்தாக்குதலுக்கும் வேண்டிய படைக்கலன்கள் நாடு முழுவதும் உற்பத்தியாயின. ஆயினும், பஞ்சாபிலும்

குஜராத்திலும்தாம் அத் தொழிலின் முக்கியக் கேந்திரங்கள் விளங்கி வந்தன. சோமநாதபுரத்தில் உற்பத்தியான வாள்கள் நாடு முழுவதிலும் பெயர்பெற்றிருந்தன. ஜான்பூரிலும் குஜராத்திலும் செய்யப்பெற்ற நறுமணத் தைலங்களும், டில்லியிலிருந்து வந்த பன்னீரும் தலைநகரத்து அவைக்களத்திலும், மாநிலத்து அவைகளிலும் ஏராளமாகத் தேவைப்பட்டன. சியால்கோட், கயா, காஷ்மீரம் ஆகிய இடங்களில் காகிதம் உற்பத்தியாகியது. வெள்ளி அணிகலன்களும் பொற்கலன்களும் பீடாரிலிருந்து வந்தன. பதேபூர்சிக்ரியிலும் பேராரிலும் கண்ணாடித் தொழிற்சாலைகள் இருந்தன. பாறை உப்பினால் ஆன பொருள்களுக்குப் பஞ்சாபிலிருந்த கியோரா (Kheora) பெயர்போனது. தென்னிந்தியாவில் முத்தெடுக்கும் தொழில் சிறந்து விளங்கியது. மரச்சாமான்களும் தோற்பொருள்களும் எவ்விடத்தும் உற்பத்தியாயின. பயனுள்ள பொருள்கள் பலவும், பித்தளைச் சாமான்களும், மட்பாண்டங்களும், தானியங்களையும் அன்றாடம் பயன்படும் பிற பொருள்களையும் அரைப்பதற்கான எந்திரங்களும் வட்டார உபயோகத்திற்காக எல்லா இடங்களிலும் ஆக்கியளிக்கப்பட்டன. இங்ஙனம் பொதுவாகப் பயன்படும் பெரும்பாலான பொருள்களில் நாடு தன்னிறைவு பெற்றிருந்தது.

## வாணிபம்

ஆசிய, ஐரோப்பிய நாடுகள் பலவற்றுடன் விறுவிறுப்பான வாணிபம் நடைபெற்றது. முகலாயர் காலத்தில் நமது நாட்டிற்கும், ஈழம், பர்மா, சீனு, ஜப்பான், கிழக்கிந்தியத் தீவுகள், நேபாளம், பாரசீகம், மத்திய ஆசியா, அரேபியா, செங்கடல் துறைமுகங்கள், கிழக்கு ஆப்பிரிக்கா ஆகியவற்றிற்குமிடையே வாணிபத் தொடர்புகள் இருந்தன. போர்ச்சுகீசியர், டச்சுக்காரர், ஆங்கிலேயர், பிரஞ்சுக்காரர் ஆகியோர் நமது பொருள்களை ஐரோப்பியச் சந்தைகளுக்குக் கொண்டுசென்றனர். நெசவுப் பொருள்கள், குறிப்பாகப் பலவகைப் பருத்தி ஆடைகள் முக்கிய ஏற்றுமதிப் பொருள்களாயின. ஐரோப்பாவிலும், ஆசிய நாடுகள் பலவற்றிலும் இந்திய நாட்டுத் துணிகளை வெகுவாக விரும்பினர். மிளகு, அவுரி, அபின், வெடியுப்பு, வாசனைப் பொருள்கள், சர்க்கரை, பட்டு, உப்பு, மணிகள், பொரிகம் (Borax), மஞ்சள், அரக்கு, மெழுகு, பெருங்காயம் (hing), பலவகையான மருந்துகள், தட்டுமுட்டுச் சாமான்கள் ஆகிய பொருள்களும் ஏற்றுமதியாயின. தங்கம், குதிரைகள், உலோகங்கள், பட்டு, தந்தம், பவழம், விலையுயர்ந்த கற்கள், பட்டுத் துகில், மென்துகில், அகல் துணிகள், சரிகைத் துணிகள், அம்பர் என்னும் நறுமணப் பசை, மருந்துவகை

கள், பீங்கான் போன்ற சீன நாட்டுப் பொருள்கள், ஆப்பிரிக்க அடிமைகள், ஐரோப்பிய மதுவகைகள் போன்றவை பிற நாடுகளிலிருந்து இறக்குமதியாயின. விநோதப் பொருள்களையும் அருமையான பொருள்களையும் பேரரச, மாநில அரசவையாளர் பெரிதும் வேண்டினர். கண்ணாடிச் சாமான்களும் வெளிநாடுகளிலிருந்து, அநேகமாக வெனிஸ் நகரிலிருந்து இறக்குமதியாயின.

உள்நாட்டிலுள்ள மக்கள் அனைவருக்கும் தேவையான பருத்தி ஆடைகள் கிடைத்தது போக ஆஃப்ரிக்கா, அரேபியா, எகிப்து, பர்மா, மலாக்கா, ஸ்ட்ரெட்ஸ் பகுதிகள் ஆகியவற்றிற்கும், ஆசியாவின் வேறு பல நாடுகளுக்கும் பலவகையான பருத்தி ஆடைகள் ஏற்றுமதியாயின. மேலும், நமது பருத்திப் பொருள்கள் இத்தாலி, பிரான்ஸ், இங்கிலாந்து, ஜெர்மனி போன்ற நாடுகளில் மிகுதியாகத் தேவைப்பட்டதால் அவற்றினை அந் நாடுகளுக்குக் கொண்டு சென்றனர். அன்னிய நாடுகளுடன் கடல்கடந்து வாணிபம் செய்வதற்கு வாயில்களாக அமைந்தவை காம்பே, சூரத், பரோச், லாரிபந்தர் (Lahri-Bandar), பஸ்ஸீன், சால் (Chaul), கோவா, கள்ளிக்கோட்டை, கொச்சி, நாகப்பட்டினம், மசூலிப்பட்டினம், சட்கோன் ஆகிய துறைமுகங்களே. நிலவழி வாணிபம் இரு வழிகளின்மூலமாக நடைபெற்றது. முதல் வழி லாகூரிலிருந்து காபூலுக்கும் அதற்கப்பாலும் சென்றது. இரண்டாவது பாதை முல்தானிலிருந்து காண்டஹாருக்கும் அதற்கப்பாலும் சென்றது. மட்டான சுங்க வரிகளையே அரசாங்கம் கொண்டது. சூரத்தில் ஏற்றுமதியான எல்லாப் பொருள்களின்மீதும் 3½ சதவீத வரியே விதித்தனர். பொன்னுக்கும் வெள்ளிக்கும் 2 சதவீதம் விதித்தனர். வாணிபநிலை எப்போதும் நமக்குச் சாதகமாகவே இருந்தது. இறக்குமதியான பொருள்களை வினியோகிப்பதற்கும் பொருள்களை வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதற்கும் லாகூர், முல்தான், லாரிபந்தர் (சிந்து), காம்பே, அகமதாபாத், சூரத், சட்கோன், பாட்னா, ஆக்ரா போன்ற முக்கியச் சந்தை நகரங்கள் பேரரசில் இருந்தன.

## பொருளாதார முறை

உற்பத்தியாளரையும் நுகர்வோரையும் பிரித்துவைக்கும் பெரிய இடைவெளி முகலாயர் காலத்துப் பொருளாதார முறையின் ஒரு முக்கியக் கூறாகும். குடியானவர்கள் கைத்தொழில் சார்ந்த தொழிலாளர்கள், வணிகர் ஆகியோர் உற்பத்தியாளராயினர். ஆயின், செல்வந்தர்கள், பொதுத்துறை ஆட்சி அலுவலகங்களையும் படையையும் சார்ந்த அதிகாரிகள், பல தொழில்களிலும் சமயப்

பணிகளிலும் ஈடுபட்டிருந்த மக்கள், பணியாள்கள், அடிமைகள், பிச்சைக்காரர்கள் ஆகியோர் நுகரும் வகுப்பார்களாக அமைந்தனர். அளவுக்கு மீறிய அதிகாரிகளும் வீட்டு வேலைக்காரர்களும் நிறைந்திருந்தது மற்றொரு முக்கியக் கூறும். உடன் துணைவர் கூட்டமும் பணிமக்கட் கூட்டமும் சூழ இருப்பது செல்வந்தரின் பொதுவழக்காகும். இந்துக்களிலும் முஸ்லீம்களிலும் ஏராளமான சமயம் சார்ந்த இரவலரும் பிச்சைக்காரரும் வாழ்ந்துவந்தனர். அவர்கள் பயனுள்ள பணியேதும் செய்தாரில்லை. அதனால் அரசாங்கத்தின் வருவாயில் பெரும் பகுதி பாழாகியது. அந்தச் செலவினை உற்பத்தியில் ஈடுபட்டிருக்கும் வகுப்பார்களே தாங்கவேண்டியிருந்தது. பிரபுக்களும் அதிகாரிகளும் மிகுதியான ஊதியம் பெற்றனர். அவர்கள் ஆடம்பர ஆரவாரப் பொருள்களில் பணத்தை வாரி இறைத்தனர். முதல்தரமான உணவுப் பொருள்கள், விலையுயர்ந்த ஆடைகள், விலைமதிக்கவொண்ணு அணிகலன்கள், யானைகள், குதிரைகள் ஆகியவற்றில் அவர்கள் பெருவிருப்புக்கொண்டிருந்தனர். செல்வந்தர்கள் தங்களது மக்களுக்குத் திருமணம் செய்வதற்கும், கட்டடங்கள், கல்லறைகள், மசூதிகள் ஆகியவற்றிலும், பிற நாட்டு அருங்கலைப் பொருள்களை வாங்குவதிலும் ஏராளமாகச் செலவு செய்தனர். மட்டுமீறிய ஆடம்பர வாழ்க்கையினால் பலர் கடன்பட்டனர். அதனால் குடியானவர்களிடமிருந்து கொடுவரி கொள்ள வேண்டிய நிலையில் இருந்தனர். பலவிதத் தொழில்களில் ஈடுபட்டிருந்தவர்களும், அரசாங்கப் பணியில் இருந்த சாதாரண அதிகாரிகளும் நிறைந்த நடுத்தர வகுப்பினர் நல்ல நிலையில் இருந்தனர். உயர்குடிப் பிறந்த வணிகரும், நடுத்தர வகுப்பைச் சார்ந்த வணிகரும் பொருள் வாழ்வில் வளம்பெற்றிருந்தனர். திறமைவாய்ந்த வேலைக்காரர்கள் மட்டான வாழ்க்கைக்கு வேண்டிய பொருளைச் சம்பாதித்தனர். ஆயின், தொழிலைக் கற்காத வேலைக்காரர்கள், பணியாள்கள், கடைக்காரர்கள் ஆகியோரின் நிலை மோசமாக இருந்தது. அவர்களுக்குக் குறைந்த ஊதியமே கிடைத்தது. கொடுமைகளை அவர்கள் பொறுத்துக்கொள்ள வேண்டியிருந்தது. கீழ் வகுப்பைச் சார்ந்த மக்கள் ஏழ்மையில் உழன்றனர். வாழ்க்கையில் மிகச் சாதாரண வசதிகள்கூட அவர்களுக்குக் கிட்டவில்லை. இப்போதைப்போலவே அவர்கள் மண்குடிசைகளில் வாழ்ந்தனர்; நாள் முழுதும் உழைத்தனர்; சொத்துகளும் அவர்களிடமில்லை.

குடியானவர்கள், தொழிலைக் கற்காத வேலைக்காரர்கள் பணியாள்கள், சிறு கடைக்காரர்கள் ஆகியோரின் நிலை, அக்பர் காலத்திலிருந்து அவுரங்கசீபு காலம்வரையிலும் படிப்படியாகச் சீர்குலைந்து வந்தது. பிற்கால முகலாய மன்னர்கள் காலத்தில் அது மிகவும் மோசமாகியது. இடைவிடாத போர்களினாலும், அரசாங்கத்தின்

ஆற்றல் இழந்த தன்மையாலும் அவுரங்கசீபின் ஆட்சிக் காலத்தில் பயிர்த்தொழில், கைத்தொழில், வாணிபம் ஆகிய மூன்றும் மோசமாகப் பாதிக்கப்பட்டன. சர் ஜாதுநாத் சர்க்கார் பின்வருமாறு எழுதுவார். 'இங்ஙனம் இந்தியாவில் கடுமையான பொருளாதார வறட்சி தோன்றியது ; தேசிய இருப்புக் குறைந்தவுடன் சிறு கைத்தொழில் திறமையும் நாகரீகத்தின் தரமும் விரைவாகக் குறைந்துவந்தன. நாட்டின் பரந்த பகுதிகள் பலவற்றில் கலையும் பண்பாடும் மறைந்துவந்தன.' அப் பேரரசரின் மரணத்திற்குப் பிறகு பேரரசு சீர்குலைந்ததாலும், நாட்டின் பல பகுதிகளில் உரிமை பெற்ற அரசுகள் தோன்றியதாலும், பொருளாதார முறையானது அநேகமாக முற்றிலும் சீர்குலைந்தது. மத்திய அரசாங்கத்தின் ஆற்றலின்மை, மராத்தியரின் கொள்ளைகள், நாதர்ஷா, அகமதுஷா அப்தாலி ஆகிய அன்னியரின் படையெடுப்புகள், போர்ச்சுகீசியரின் கடற்கொள்ளை, ஐரோப்பிய வணிகரும் அவர்தம் ஆள்களும் வாணிபம் சார்ந்த சிறப்புரிமைகளைத் தவருகப் பயன்படுத்தியது ஆகிய காரணங்களினுல் மக்களில் பெரும்பகுதியினர் பொருளாதார இன்னலுக்குள்ளாயினர். இங்ஙனம் நம் நாடு ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனியின் ஆதிக்கத்தின்கீழ் வந்தபோது அதனுடைய பொருளாதார நிலை மிகத் தாழ்ந்திருந்தது. அதன் மக்களில் பாதிப்பேருக்கு மேல் துன்பம் நிறை ஏழ்மையான வாழ்வு பெற்றிருந்தனர்.

## விலைகள்

முகலாயரது காலத்தில் தானியம், காய்கறிகள், கனிவகைகள், பால், நெய், எண்ணெய், இறைச்சி, மீன், ஆடைகள்போன்ற அன்ருடம் பயன்படும் பொருள்கள் மிகவும் மலிவாகக் கிடைத்தன. அக்பரின் ஆட்சிக் காலத்தில் சாதாரணமாக 12 மாண்டு கோதுமையின் விலை ஒரு ரூபாயாகும். அதேபோன்று தனித்தனியாக ரூபாய்க்கு 18 மாண்டு பார்லியும், 10 மாண்டு தரமான அரிசியும், 18 மாண்டு மூங்கும், 16 மாண்டு மாவும் கிடைத்தன. ஒன்றரை ரூபாய்க்கு ஒரு செம்மறியாட்டை வாங்கலாம். ரூபாய்க்கு 17 சேர் இறைச்சியும், 44 சேர் பாலும் வாங்கமுடியும். வேலையாள்களின் தினக்கூலியும் குறைவே. தொழிற் பயிற்சியற்ற வேலையாளுக்கு, நாள் ஒன்றிற்கு 2 தாம்கள், அதாவது, ஒரு ரூபாயில் இருபதில் ஒரு பாகம் கூலியாகக் கிடைத்தது. தச்சரும், பிற தொழிற் பயிற்சிபெற்ற வினைஞரும் ஒரு நாளைக்கு 7தாம்களைப் பெற்றனர். அக்பருக்குப்பின் அரசாண்ட மன்னர்கள் ஆட்சிக் காலத்தில் விலைகளில் அதிக மாற்றம் இல்லை. ஆயினும், போர்க்காலங்களிலும் பஞ்சகாலங்களிலும் தற்காலிக

மாக விலைகள் வெகுவாக உயர்ந்தன. மற்றபடி, பொதுவாகப் பேசுமிடத்து முகலாயர் காலத்தில் பொருள்களின் விலை மலிவாகவே இருந்தது. எல்லாப் பொருள்களும் எளிதாகவும் மலிவாகவும் கிடைத்ததன் விளைவாக சாதாரண மக்களும் இடர்ப்பாடு ஏதுமின்றி உயிர்வாழ்வதற்கு வேண்டிய பொருள்களைப் பெற்றனர். சொந்த நிலமின்றிக் கூலிக்கு வேலைசெய்யும் தொழிளாளர்கள் இன்றைவிட அக்பர், ஜஹாங்கீர் ஆகியோரின் ஆட்சிக் காலங்களில் அதிக உணவினைப் பெற்றிருக்கவேண்டுமென்று வரலாற்று அறிஞர் ஸ்மித் (Smith) கருதுகின்றார். ஆயின், பொதுவாகப் பேசுமிடத்து, பாமர மக்கள், இன்றிருக்கும் அதே பொருளாதார நிலையில் அக் காலத்தும் இருந்திருக்கவேண்டுமென்று மோர்லண்டு கருதுகின்றார். முகலாயர் காலத்தில் சாதாரண மனிதனின் வருவாய் உயர்ந்ததாக இல்லையெனினும், அவன் பட்டினியால் வாடவில்லை யென்பது உண்மையாகும். தாராளமாகவும் மலிவாகவும் கிடைத்த தானியத்தின் தேவையையும், வாழ்க்கைக்கு இன்றியமையாதனவாக இருந்த பிற பொருள்களின் தேவையையும் அவன் அதிகமாக உணரவில்லை. மேலும், அக்காலத்தில் வாழ்ந்த சாதாரணக் குடிமகன் இக்கால மக்களைவிடக் குறைந்த சில தேவைகளைக் கொண்டிருந்தான்; அதிக மனநிறைவோடு வாழ்ந்தான். இருபதாம் நூற்றாண்டில் வாழு ம்மக்களைக்காட்டிலும் அவன் நேர்மையும், மனநிறைவும், தூய வாழ்க்கையும் பெற்று விளங்கினான்.

## பஞ்சங்கள்

நம் நாட்டுப் பயிர்கள் மழையை நம்பியிருப்பதால், பருவமழை தவறுமானால் அநேகமாகப் பஞ்சம் தோன்றும். 1555-56 ஆண்டுகளில், அதாவது, அக்பரின் முதல் ஆட்சியாண்டில் வடமேற்கு இந்தியா பஞ்சத்தால் பாதிக்கப்பெற்றது. அதைத் தொடர்ந்து ஏராளமான மக்களைக் கொண்டுசென்ற கொள்ளை நோய் ஒன்று பரவியது. 1573-74-ல் குஜராத்தில் ஒரு பஞ்சம் தோன்றியது. மற்றொரு பஞ்சம் 1595-96-ல் காஷ்மீரத்தை வாட்டியது. 1575-ல் வங்காளத்தில் பஞ்சம் ஏற்பட்டது. 1630-32ஆம் ஆண்டுகளில் தக்கணமும் குஜராத்தும் கடுமையான பஞ்சங்களில் அடிபட்டன. அவுரங்கசீபின் ஆட்சிக் காலத்தில் ஏற்பட்ட பல பஞ்சங்கள் பற்றிக் குறிப்புகள் கிடைக்கின்றன. ஆயினும், அவைகள் கடுமையானவைகளாகத் தோன்றவில்லை. அக்பர் முதலான முகலாய மன்னர்கள் தங்களால் இயன்றவரை பஞ்சத்தால் வாடிய மக்களின் துயர் துடைக்கும் கொள்கையைப் பின்பற்றினர். துயர் துடைப்புப் பணிகளைத் துவக்கினர். அவற்றிற்காகப் பெரும்பொருள் அளித்தனர்,

பஞ்சத்தில் அடிபட்ட பகுதிகளில் வரிகளை நீக்கினர். ஆயினும், பஞ்சப் பிரச்சினை மிகப் பெரியது என்பதாலும், அரசாங்கம் ஆற்ற லற்றதாக இருந்ததாலும், முகலாயர்களால் அப் பிரச்னையை வெற்றி கரமாகத் தீர்க்க முடியவில்லை.

## கல்வி

மக்களுக்குக் கல்வி புகட்டுதல் தனது கடமை என முகலாய அரசாங்கம் கருதவில்லை. கல்விக்கென்று தனியான அரசாங்க அலுவல்துறை அப்போது கிடையாது. அதேபோல் கல்வியறிவினைப் பரப்புதற்காக அரசாங்க வருவாயில் ஒரு பகுதியினை ஒதுக்குவதும் கிடையாது. எவ்வாறெனினும், அக்பர் கல்வியை ஆதரிக்க முயன் றார். பல ஆரம்பப் பள்ளிகளையும் உயர்நிலைப் பள்ளிகளையும் திறந்துவைத்தார். அவற்றுடன் கல்லூரிகள் சிலவற்றையும் துவக்கினர். கல்வி முறையைத் திருத்தியமைத்தார். பாடத்திட்டத் தில் ஒழுக்கநெறி இயல், சமுதாய நடத்தை, கணக்கு, பயிர்த்தொழில், வானவியல், வடிவ வியல் (Geometry), உரு அளவை நூல் (Mensuration), உறுப்பமைதி இயல் (Physiognomy), குறியியல், வீட்டுப் பொருளாதாரம், பொது ஆட்சி முறை, அளவையியல், வரலாறுபோன்ற சில முக்கியப் பாடங்களைப் புகுத்தினர். சமஸ்கிருத, இந்திப் பள்ளைகளைத் தவிர பிறவற்றில் பாரசீகமே பயிற்றுமொழியாக அமைந்தது. அவர்தம் பின்னோரும் அவருடைய கொள்கையைப் பின்பற்றினர். அக்பர் நிறுவிய அரசாங்கப் பள்ளிகளில் முகலாய மன்னர் அனைவரும் ஒரேவகையான அக்கறை கொண்டிருந்தனர் என்பதை எடுத்துக்காட்டவல்ல சான்றுகள் ஏதும் இல்லையெனி னும், முகலாயப் பேரரசு சீர்குலையும்வரையிலும் இத்தகைய பள்ளி களுக்கு அரசாங்கம் தொடர்ந்து பணவுதவி அளித்து, அவை தொடர்ந்து பணியாற்ற வழிசெய்ததாகத் தெரிகின்றது. ஆயினும், அரசாங்கப் பள்ளிகளின் எண்ணிக்கை மிகக் குறைவு. மேலும், அவை பொதுமக்களுக்குக் கல்வி புகட்டுவதற்காக எழுந்தவை யல்ல. அதுமட்டுமன்றித் தனிப்பட்ட ஸ்தாபனங்களின்பள்ளிகளுக்கு அரசாங்கம் உதவி செய்யவில்லை. இங்ஙனம் முகலாய இந்தியாவில் கல்வியானது பணிமுறை சாராத ஒன்ருக, சமயத்தின் சேடியாக விளங்கியது. முகலாயர் அதில் அக்கறை காட்டினர் என்று சொன்னுல், அதற்குக் காரணம் மக்களுடைய நலனைப் பேணி வளர்க்கவேண்டுமென்ற நோக்கமல்ல; சமய நன்மையைப் பெற வேண்டுமென்பதற்காகக் கல்வியில் ஊக்கம் காட்டினர்.

பொதுமக்கள் தங்களது குழந்தைகளின் கல்விக்கான ஏற்பாடு களைந் தாங்களே செய்துகொண்டனர். அக் காலத்தையும் அக்

காலச் சூழ்நிலையையும் மனத்தில்கொண்டு பார்க்கும்போது முற்றிலும் நிறைவான ஏற்பாடுகள் செய்யப்பெற்றன எனக் கொள்ளலாம். இதைப்பற்றி F. W. தாமஸ் அவர்களும் பின்வருமாறு எழுதியுள்ளார். இத்துணைப் பழங்காலத்தில் இத்தகைய கல்வியின்மீதான ஆர்வமோ, அக் கல்வியின் இத்துணை சக்திவாய்ந்த நிலையான செல்வாக்கோ வேறு எந்த நாட்டிலும் காணமுடியாதவை. வேத காலத்து எளிய கவிஞர் முதலாக இக்கால வங்காளத் தத்துவ ஞானி தாகூர் ஈறாக உள்ள பல அறிஞரும் ஆசிரியர்களும் இடையறாது வந்தவண்ணமிருந்தனர். ஏறக்குறைய எல்லா ஊர்களிலும் தனியார் பள்ளிகள் இயங்கிவந்தன. அப் பள்ளிகள் பெரும்பாலும் கோயில்களுடனோ மசூதிகளுடனோ இணைந்திருந்தன. ஏறக்குறைய ஐந்து வயதில் முறையான கல்வி தொடங்குவது இந்துக்களின் வழக்கமாக இருந்தது. முஸ்லீம்கள் பொதுவாகத் தங்களது குழந்தைகளுக்கான 'மக்தப்' (Maktap) சடங்கினை நான்கு ஆண்டுகள், நான்கு மாதங்கள், நான்கு நாட்கள் நிரம்பியவுடன் செய்துவைத்தனர். பயிர்த்தொழிலில் அல்லது குற்றேவல் தொழிலில் ஈடுபட்டிருந்த ஏழ்மையானவர்களைத்தவிர, மற்ற இந்துக்கள் தங்களது குழந்தைகளைப் படிப்பதற்கும், எழுதுவதற்கும், கணக்குச் செய்வதற்கும் பள்ளிகளுக்கு அனுப்பினர். அக்பர் காலத்திலிருந்து இந்துக்களும் பாரசீகம் பயில முற்பட்டனர். அவர்களிற் பலர் பொதுவாக முஸ்லீம்களுக்கென்று இருந்த மக்தப்களுக்குச் சென்றனர். இந்துக்களைப்போன்று முஸ்லீம்கள் தங்கள் குழந்தைகளின் கல்வி வளர்ச்சியில் ஊக்கம் காட்டவில்லை. மட்டான நிலையிலுள்ள முஸ்லீம்கள் தங்களது புதல்வர்களின் கல்வியில் அக்கறை காட்டவில்லையென்று ஐரோப்பாவிலிருந்து வந்த பிரயாணிகள் குறித்துச் சென்றனர். கல்வி கற்கத் தொடங்குவோருக்கான ஆரம்பப் பள்ளிகளே 'மக்தப்' எனப்பெற்றன. மௌல்விகள் அப் பள்ளிகளை நடத்தி வந்தனர். ஜஹாங்கீர் காலத்தில் எல்லா நகரங்களிலும் ஊர்களிலும் அத்தகைய பள்ளிகள் இருந்தன என்று டெல்லா வல்லா (Della Valla) என்பார் கூறியுள்ளார். அக்காலத்தில் அச்சடித்த அரிச்சுவடிகள் இல்லை. குழந்தைகள் மரப் பலகைகளில்தான் அகர வரிசையையும் எண்களையும் எழுதிப் பழகினர். முஸ்லீம் பள்ளிகளில் ஒவ்வொரு குழந்தைக்கும் குரானைக் கற்பித்தனர். குழந்தைகள் குரானை மனப்பாடம் செய்தனர். இந்துப் பள்ளிகளில் இராமாயணம், மகாபாரதம், புராணங்கள் ஆகியவற்றிலிருந்து பாடங்கள் கட்டாயமாக இருந்தன. ஆரம்பக் கணிதத்தில் மிகுந்த கவனம் செலுத்தினர். எண்களின் மடங்குகளை அல்லது 'பஹராக்களை' (Faharas - பெருக்கல் வாய்பாடு) மனப்பாடம் செய்வதற்கெனச் சுவையான முறையொன்று வழக்கிலிருந்தது. வகுப்பிலுள்ள மாணவர்கள் அல்லது ஒரு பள்ளியில் ஒரே நிலையிலுள்ள மாணவர்

அனைவரும் ஒன்றுகக் கூடி அவற்றினைப் பழகிக்கொண்டனர். அழகிய கையெழுத்து இருக்கவேண்டுமென்று வற்புறுத்தப்பட்டது. அழகான கையெழுத்தைப் பழகினர். வகுப்புகள் காலையிலும் மாலையிலும் நடைபெற்றன. உணவிற்காக இடைவேளை விட்டனர். இலவசக் கல்வி அளிக்கவேண்டுமென்பது சமய விதி; ஆகையினால், மாணவர்கள் சம்பளம் கட்டத் தேவையில்லை. செல்வந்தர்கள் ஆசிரியரை ஆதரித்தனர். சில சமயங்களில் மாணவர்களின் பெற்றோரும் அவருக்கு வெகுமதிகள் வழங்கினர். மாணவர்களும் பொது மக்களும் ஆசிரியரை நன்கு மதித்தனர். குறும்பு செய்யும் மாணவர்களுக்கும் சோம்பேறியாக அல்லது பாடங்களைப் படிக்காது வந்த மாணவர்களுக்கும் கன்னத்தில் அறைதல்போன்ற உடலை வருத்தும் தண்டனைகள் அளிக்கப்பட்டன. சில சமயங்களில் வேண்டுமென்றே குறும்புசெய்தல், அன்றாட வேலையைப் புறக்கணித்தல், கெட்ட நடத்தை ஆகியவற்றிற்காக மாணவர்களைப் பள்ளி நேரத்திற்கு அப்பாலும் நிறுத்திவைப்பதுண்டு. தவறிழைக்கும் மாணவர்கள் தங்கள் பாடத்தினைப் பத்து அல்லது பதினைந்து முறை திரும்பத் திரும்ப எழுதவேண்டியதாயிற்று.

பல இடங்களில் உயர் கல்விக்கான நிலையங்கள் விளங்கின. அவற்றில் மிகச் சிறந்த சமயக் கல்வியும் சமயம் சாராக் கல்வியும் அளிக்கப்பெற்றன. சில சமயங்களில் ஒரு நகரத்திலேயே பல உயர் நிலைக்கல்விக்கூடங்கள் அல்லது கல்லூரிகள் வாழ்ந்திருந்தன. அவை அனைத்தும் ஒன்றுக இணைந்து ஒரு பல்கலைக்கழகம் போன்று திகழ்ந்தன. முகலாயர் காலத்தில் பனாரஸும் நாதியாவும் இந்துக்களின் உயர்கல்விக் கேந்திரங்களாக விளங்கின. 'ஒருவகையில் பனாரஸ் பல்கலைக் கழகமாகத் திகழ்ந்தது; ஆயின், நமது பல்கலைக் கழகங்களில் இருப்பதைப் போல முறையான கல்லூரிகள் அல்லது வகுப்புகள் அங்கே இல்லை. பண்டைக்காலப் பள்ளிகளை அது ஒத்திருந்தது. ஆசிரியர்கள் நகரின் பல பகுதிகளில் தனியார் வீடுகளில் பரவியிருந்தனர்' (Bernier's 'Travels' '1891' பக். 341). இத்தகைய தனியார் வீடுகளிலேயே வகுப்புகள் நடந்தன. அதற்கென்றே அவ் வீடுகளை அடுத்துத் தோட்டங்கள் அமைந்திருந்தன. வடமொழி இலக்கணம், இலக்கியம், இந்து மெய்யுணர்வு இயலின் ஆறு வகைகள், இந்து சமய நூல்கள் ஆகியவற்றை பனாரஸில் கற்பித்தனர். வங்காளத்திலிருந்த நாதியாவும் இந்து சமயக் கல்விக்கான சிறந்த கேந்திரமாகும். பனாரஸைப் போலவே நாதியாவிற்கும் நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் அறிஞர்கள் வந்தவண்ணமிருந்னர். மிதிலை, திர்ஹுத் (Tirhut), மதுரா, பிரயாகை, ஹரித்துவார், உஜ்ஜெய்னி, அயோத்தியா, சர்ஹிண்டு, மூல்டான் ஆகியவையும் இந்து உயர் கல்விக் கேந்திரங்களாகத் திகழ்ந்தன.

முஸ்லீம் கல்விக் கேந்திரங்களும் ஏராளமாக இருந்தன. டில்லி, ஆக்ரா, பதேபூர்சிக்ரி, லாகூர் போன்ற நகரங்களில் முகலாயப் பேரரசர்கள் பல பள்ளிகளை நிறுவினர். பெரிய நகரங்களில் முஸ்லீம் அறிஞர்களும் சமய இயல் வல்லுநர்களும் பள்ளிகளைத் திறந்தனர். இங்ஙனம் ஆக்ரா, டில்லி, லாகூர், ஜான்பூர், சியால்கோட் முதலானவை முக்கிய முஸ்லீம் கல்விக் கேந்திரங்களாக வளர்ச்சியுற்றன முகலாயர் காலத்தில் முஸ்லீம் கல்விக்கான முதன்மையிடத்தினை ஆக்ரா நகரம் பெற்றிருந்தது. அங்கே பல கல்லூரிகள் விளங்கிவந்தன. அவற்றில் பெரும்பாலானவற்றைப் பேரரசர்களும் அவர்களுடைய பிரபுக்களும் நிறுவினர். அடுத்த நிலையில் இருந்தது டில்லி நகரம். அங்கேயும் பல கல்லூரிகள் இருந்தன. அவற்றில் மிகப் பழமையானவற்றை ஹுமாயூனும் மாஹம் அனகாவும் (மதராசாயி பீகம்) கட்டுவித்தனர். முகலாய ஆட்சியின் தொடக்க காலத்தில் ஆக்ரா அல்லது டில்லிபோலக் கல்வி வளர்ச்சியில் லாகூர் புகழ்பெறவில்லையெனினும், அவுரங்கசீப் காலத்திலிருந்து அதன் பெருமை அன்னிய நாடுகளிலும் பரவத் தொடங்கியது. பதினைந்தாம் நூற்றாண்டில் 'இந்தியாவின் ஷிராஜ்' (Shiraj of India) எனப் பெயர் பெற்ற ஜான்பூர் முகலாயர் ஆட்சிக் காலம் முழுவதும் சிறப்புடன் விளங்கியது. லக்னௌ, அலகாபாத், குவாலியர், சியால்கோட், அம்பாலா, தானேஸ்வரம், காஷ்மீரம் ஆகியவற்றிலும் பல பள்ளிகளும் பேரறிஞர்களும் வாழ்ந்திருந்தனர்.

வானநூல், குறியியல், மருத்துவம், கணிதம் ஆகியவற்றைக் கற்பதற்காகச் சில முஸ்லீம் மாணவர்கள் இந்துப் பள்ளிகளில் சேர்ந்தனர் என்பதற்கு ஆதாரம் உண்டு. அக்பர் காலத்திலிருந்து பாரசீக மொழியில் புலமை பெறுவதற்காக இந்துக்கள் முஸ்லீம் கல்விக் கூடங்களுக்குச் சென்றனர். ஆரம்பப் பள்ளியிலும் உயர்நிலைப் பள்ளியிலும் குறிப்பிட்ட காலத்திற்கு மாணவர் படிக்கவேண்டுமென்ற கட்டாயம் இல்லை. அறிவுக்கூர்மையும் மதிநுட்பமும் மிகுந்த மாணவர்கள் குறுகிய காலத்திலேயே புலமை பெற்றுப் பள்ளியைவிட்டு வெளியேறினர். உயர்கல்வி நிலையங்களில் பட்டம் பெறுவதற்காகப் பொதுவாக 10 அல்லது 12 ஆண்டுகள் பயில வேண்டியிருந்தது. ஆனால், ஆண்டுதோறும் நடக்கின்ற முறையான தேர்வுகள் அங்கே கிடையா. ஒரு குறிப்பிட்ட பாடத்தில் மாணவர்களுடைய புலமையை அவர்களுடைய ஆசிரியரே தீர்மானித்தார். சில சமயங்களில் உயர்கல்விப் பயிற்சி முடிவடையும் போது மாணவர்கள் இலக்கியப் போட்டிகளில் கலந்துகொள்வதுண்டு. பொதுவாகப் பட்டமோ அல்லது சான்றிதழோ அளிப்பதில்லை; ஒரு மாணுக்கருடைய ஆசிரியர்களின் அல்லது அவருக்குக் கல்வி புகட்டிய கல்விக்கூடத்தின் பெருமையை வைத்தே அவரது திறமையையும் புலமையையும் நிர்ணயித்தனர்.

முகலாயர் காலத்து மாதர் கல்வி என்பது அரசிளங் குமரிகளும் உயர்குடிப் பெண்டிருமே பெறக்கூடியதாக இருந்தது. பெண்களுக்கென்று பள்ளிகள் கிடையா. ஆயின், செல்வந்தர்கள் தனியாக ஆசிரியர்களை வைத்துத் தங்கள்புதல்வியருக்குக் கல்வி கற்பித்தனர். இலக்கியம், ஆரம்ப கணிதம், சமய நூல்கள் ஆகியவற்றைப் பெண்கள் கற்றனர். படித்த பெண்கள் சமுதாயத்தில் உயர்ந்த இடத்தைப் பெற்றனர்; இல்லங்களில் மிகுந்த செல்வாக்குச் செலுத்தினர். குல்படான் பேகம், சலீமா சுல்தானா, ரூப்மதி, ஸெப் உன்னிஸா, ஸினுத் உன்னிஸா போன்ற சில கற்றறிந்த மாதர்கள் இலக்கியத் துறையில் சிறப்புற்று விளங்கினர். ராணி துர்காவதியும் சாந்த் பீபியும், நூர்ஜஹான், ஜஹானாரா, சாஹிப்ஜிபோன்றோரும் அக்கால அரசியலில் பெரும் பங்கு பெற்றனர்.

## இலக்கியம்—பாரசீக மொழி இலக்கியம்

முகலாயருடைய வருகையினால் பாரசீக மொழி இலக்கியத்திற்கு எழுச்சி ஏற்பட்டது தைமூர் காலத்து மன்னர்களே அறிஞர்களாகவும் இலக்கியத்தை ஆதரிப்பவர்களாகவும் திகழ்ந்தனர். துருக்கிய, பாரசீக மொழிகளில் இயல்பான திறங்கொண்ட புலவராகத் திகழ்ந்த பாபர் அம்மொழிகளில் கைதேர்ந்த எழுத்தாளராகவும் விளங்கினார். ஹுமாயூனும் அதே அளவிற்கு இலக்கியத்தில் ஆர்வம் காட்டினார். அவர்களுடைய அரசவையில் பேரறிஞர் பலர் வாழ்ந்திருந்தனர். பேரரசர்களின் ஆதரவில் அவர்கள் பல பயனுள்ள இலக்கியங்களைப் படைத்தனர் இடைக்கால இந்திய வரலாற்றில் அக்பரின் ஆட்சிக் காலம் பண்பாட்டு மறுமலர்ச்சிக் காலமாகும். அவரது சமயச் சமரசக் கொள்கையும், பரந்த மனப்பான்மையும், கல்வி வளர்ச்சியில் அவர் காட்டிய கனிவும், அவர் நிலைநாட்டிய உள்நாட்டு அமைதியும் வளமும், இலக்கியங்களும் கலைகளும் வளர்ந்தோங்க வகைசெய்தன. அதனால் அவரது ஆட்சிக் காலத்தில் பேராற்றல் கொண்ட பேரறிஞர் பலர் இகல் வாய்ந்த பல இலக்கியங்களைப் படைத்துத் தந்ததில் வியப்பொன்றுமில்லை பாரசீக இலக்கியங்களை மூலப்படைப்புகள் என்றும், மொழிபெயர்ப்புகள் என்றும் இரு கூறுகளாகப் பிரிக்கலாம். கடிதங்களும் கவிதைகளும் முதல் வகையில் முக்கிய இடம்பெற்றன. இலக்கிய நயத்திற்கு எடுத்துக்காட்டுகளாக விளங்கிய கடிதங்களின் தொகுதியைப் பின்வருவோருக்கென விட்டுச்செல்வது அக்காலப் பெருவழக்காக இருந்தது. அபுல் ஃபாஸல், அவர் போன்ற பிற எழுத்தாளர்களின் கடிதங்கள் நமக்குக் கிடைத்துள்ளன. அவை அக்பர் கால பாரசீக இலக்கியப் பாணிக்கு எடுத்துக்காட்டுகள் எனக் கொள்ளப்படுகின்றன. இடைக்காலத்தில்

இலக்கிய நயத்தை எடுத்துக்காட்டவல்ல சிறந்த கருவியாகக் கவிதையைக் கருதினர். இந்திய முஸ்லீம்களும் அன்னிய முஸ்லீம் களும் அவற்றில் மிகுந்த பற்றுர்வம் கொண்டனர். அக்பரது அரசவையில் ஏராளமான புலவர்கள் வாழ்ந்திருந்தனர். அவர்களில் பலர் 'தீவான்' அல்லது கவிதைத் திரட்டுகளைக் கொண்டிருந்தனர் என்று அபுல்ஃபாஸல் குறிப்பிடுகின்றுர். அக்பர் தம் அரசவையில் இருந்த தலைசிறந்த 59 பாரசீக மொழிப் புலவர்களின் பெயர்களை 'அய்னி அக்பரி' அளிக்கின்றது. அவர்களைத் தவிர முதல் வகை சார்ந்த 15 புலவர்கள் பாரசீகத்திலிருந்து கவிதைகளை அனுப்பி வந்தனர். அக்பரின் அவைக்களப் புலவரான அபுல் ஃபைஸி (Abul Faizi) என்பார் அமீர் குஷ்ருவிற்குப் பிறகு (Amir Khusrau) பாரசீக மொழியில் தலைசிறந்த கவியாக விளங்கினுர். ஃபைஸியின் பாரசீக மொழிக் கவிதைகள்பற்றியும், மற்றப் புலவர்களின் கவிதை களைப்பற்றியும் திறனுய்வாளர்கள் மாறுபட்ட கருத்துகளைக் கொண்டுள்ளனர். அப் புலவர்கள் சாதாரணப் பாத்தொடுப்பவரை விட எவ்விதத்தும் உயர்ந்தவரல்லர் என வரலாற்று அறிஞரான வின்செண்ட் ஸ்மித் கருதியுள்ளார். எனினும், அக்கால இலக்கியப் படைப்புகள்பற்றி இந்திய அறிஞர்கள் உயர்ந்த கருத்துக்கொண்டுள் ளனர். எவ்வாருயினும், ஸ்மித் கூறுவதை அப்படியே ஏற்றுக் கொள்ள முடியாதாயினும், பாரசீக மொழியில் எழுதிய அக்காலப் புலவர்கள் கருத்தைவிட மொழியிலேயே அதிகக் கவனம் செலுத் தினர். பெரும்பான்மையில் காதலே அவர்கள் விரும்பி ஏற்ற பாடலின் படர்தரு பொருளாக அமைந்தது.

பல அறிஞர்கள் குரானுக்கு விளக்கவுரைகள் வரைந்தனர். அபுல்ஃபாஸல் எழுதிய 'அக்பர் நாமா'வும் (Akbar Nama), 'அய்னி அக்பரி'யும், நைஸாமுத்தின் அஹ்மத் எழுதிய 'தபகாதி அக்பரி'யும் (Tabaqat-I-Akbari), ஜாஹர் எழுதிய 'தாஸ்கிராத்-உல்-வாஹத்'தும் (Tazkirat-ul-Waqyat), குல்பதான் பேகத்தின் 'ஹுமாயூன் நாமா'வும் (Humayun Nama) குறிப்பிடத்தகுந்த வரலாற்று நூல்களாகும். 'தொபாயி அக்பர் ஷாயி' (Tofa-i-Akbar Shahi) அல்லது 'தாரீக்கி ஷெர்ஷாயி' (Tarikh-i-Sher Shahi) என்னும் நூலை அப்பாஸ் சர்வானி இயற்றினுர். இஸ்லாத்தின் ஆயிரம் ஆண்டு வரலாற்றினைத் தொகுத்து அளிக்குமாறு அக்பர் ஆணையிட்டார். அதற்காக நகீப் கானையும் (Naqib Khan), தட்டாவின் முல்லா முகம்மதுவையும், ஜஃபார் பெக்கையும் (Jaffar Beg) நியமித்தார். அந் நூல் அபுல்ஃபாஸ லின் முகவுரையோடு உரிய காலத்தில் வெளிவந்தது. அதற்கு 'தாரீக்கி அல்ஃபி' (Tarikh-i-Alfi) எனப் பெயரிட்டனர். அப்துல் காதர் பதயூனியின் முன்தக்கப் உத் தவாரிக் (Muntakhab-ut-Tawarikh அஹ்மத் யதகாரின் 'தாரீக்கி சலதீன் ஆப்கானு' (Tarikh-i-Salatin

Afaghana) பயாஸீத் சுல்தானின் 'தாரீக்கி ஹுமாயூன்', நூருல் ஹக்கினுடைய 'ஸாத் உல் தவாரிக்' (Zaud-ul-Tawarikh), ஆஸாத் பெக்கினுடைய 'வஹாயத் ஷெய்க் இலாதாத்', பைஸு சர்ஹிந்தி எழுதிய 'அக்பர் நாமா', ஆரீப் காந்தாரி எழுதிய 'தாரிக் அக்பர் ஷாஹி' போன்றவையும் அக்காலத்தில் எழுந்த வரலாற்று நூல்களாகும்.

நாட்டிலுள்ள கற்றறிந்த மேலோருக்குப் பொதுவான இலக்கியங்களை அளிப்பதற்காக சமஸ்கிருத, துருக்கிய, அராபிய, கிரேக்க மொழிகளில் அமைந்த தலைசிறந்த பல இலக்கியங்களைப் பாரசீக மொழியில் பெயர்த்துத்தர அக்பர் வழிசெய்தார். புகழ்வாய்ந்த வான வியல் நூலான 'தஜக்' (Tajak) என்பதும், 'துஜுக்கி பாபரி' (Tujuk-i-Babauri) அல்லது பாபரின் வாழ்க்கைக் குறிப்புகளைப் பாரசீக மொழியில் பெயர்த்தெழுதினர். 'ஸிச்சி-ஜதிதே-மிராஸை' (Zichi-Jadide-Mirazai) என்னும் நூலின் ஒரு பகுதியும், 'மஜ்முல்-இ-புல்தானும்' (Majmul-i-Buldan) மொழிபெயர்க்கப்பட்டன. இராமாயணம், மகா பாரதம், அதர்வ வேதம், இராஜதரங்கிணி, ஹர்வான்ஷ் புராணம், பஞ்சதந்திரம் ஆகியவையும் வேறு பல தலைசிறந்த சமஸ்கிருத நூல்களும் பாரசீக மொழியில் பெயர்த்து எழுதப்பெற்றன.

அக்பருக்குப்பின் வந்த முகலாய மன்னர்கள் காலத்தும் பாரசீக மொழி இலக்கியம் சிறப்புற்று விளங்கியது. பெரும் புலமை படைத்தவராகவும் திறனாய்வாளராகவும் விளங்கிய ஜஹாங்கீர், தமது பெரும்பாட்டனரான பாபரைப் பின்பற்றித் தமது வாழ்க்கை விளக்க நூலான 'துஸுக்கி ஜஹாங்கீரி'யைப் (Tuzuk-i-Jahangiri) படைத்தார். அவரது 17ஆம் ஆட்சியாண்டுவரையில் அந் நூல் தொடர்கின்றது. அன்னாரது ஆணையின்பேரில் முதமித்கான் (Mutamud Khan) எனும் அறிஞர் அதனைப் பத்தொன்பதாம் ஆண்டுத் தொடக்கம்வரை கொண்டுவந்துவிட்டார். அந் நூலில் தந்தைக்கு எதிராக ஜஹாங்கீர் செய்த கிளர்ச்சி, நூர்ஜஹானை அவர் மணந்த விதம், இளவரசர் குஷ்ருவின் மரணம் போன்ற சில நிகழ்ச்சிகள் திரித்துக் கூறப்பெற்றுள்ளன. ஆயின், இதைத் தவிர அந் நூலில் ஜஹாங்கீரின் வாழ்க்கைபற்றிய ஒளிவுமறைவற்ற விளக்கங்களைக் காணலாம். சிறப்புவாய்ந்த இலக்கியங்களைப் படைத்த அறிஞர்களைப் பேரரசர் பெரிதும் ஆதரித்தார். அவரது அரசவையில் நிஷாபூரின் நஸீரி என்பாரே பாரசீக மொழியில் தலைசிறந்த புலவராகத் திகழ்ந்தார். அரசவையில் இருந்த முதமித்கான் 'இக்பால் நாமா-இ-ஜஹாங்கீரி' எனும் நூலை இயற்றினர். அது ஜஹாங்கீரின் ஆட்சிக் கால வரலாற்றை அறிந்துகொள்வதற்குற்ற முதன்மையான நூலாகின்றது. 'மஆசிரி ஜஹாங்கீரி', 'ஜுப்த் உத் தவாரீக்' (Zubd-ut-Twarikh)

போன்ற வேறு சில வரலாற்று நூல்களும் ஜஹாங்கீர் காலத்தில் எழுந்தன. அவர்தம் அரசவையை அணிசெய்த அறிஞர்களில் இத்மாத்-உத்-தௌலா என அழைக்கப்பெற்ற கியாஸ்பெக், நகிப்கான், முதமித்கான் நியாமதுல்லா, அப்துல் ஹக், திஹ்லவீ ஆகியோர் மிக முக்கியமானவர்கள். குரானுக்காக விளக்கவுரைகள் தொடர்ந்து எழுதப்பெற்றன. கவிதைகள் ஏராளமாக வெளிவந்தன. ஆனால், மொழிபெயர்ப்புத் துறையில் மந்தமேற்பட்டது. கற்றறிந்த பெரியோர்களையும் புலவர்களையும் ஆதரிப்பதில் ஜஹாங்கீர் தமது தந்தை, பாட்டனர் ஆகியோரின் கொள்கையைத் தொடர்ந்து பின்பற்றினர். கலீம் எனும் புனைபெயர் கொண்ட அபுஸாலி (Abuzalih). ஹாஜி முகம்மது ஜான், சந்திரபான் எனும் பிராமணர் ஆகியோர் சிறப்பிடம் வகித்தனர். அவரது ஆட்சிக் காலத்தில் ஏராளமான வரலாற்று நூல்கள் வெளிவந்தன. அவைக்களத்து வரலாற்று அறிஞரான அப்துல் ஹமீது லஹாரி 'பாதுஷா நாமாவை' எழுதினர். மற்றொரு புகழ்பெற்ற அறிஞரான அமினயி கஜவீனி (Aminai Qazvini) வேறொரு 'பாதுஷா நாமாவை' வரைந்தார். 'ஷாஜஹான் நாமாவை' இனயத்கானும் 'அலாமி சாலியை' முகம்மது சாலியும் எழுதினர். பேரரசரின் மூத்த மகனை தாரா ஷுகோவும் தலைசிறந்த அறிஞராவர். அவர் அராபிய, பாரசீக, சமஸ்கிருத மொழிகளில் மிகுந்த தேர்ச்சி பெற்றிருந்தார். சூபி மெய்யுணர்வுக் கோட்பாடு பற்றியும், முஸ்லீம் அருள்தொண்டர்களின் வாழ்க்கை விளக்கங்களாகவும் பல நூல்களை எழுதியுள்ளார். சில உபநிடதங்களையும், பகவத்கீதையையும், யோக வாசிஷ்டாவையும் அவர் மொழிபெயர்த்துள்ளார். அவரது மூலநூல்களில் 'மஜம்-உல்-பாரெய்ன்' (Majm-ul-Bahrain) அல்லது 'சமுத்திரங்களின் சங்கமம்' (Mingling of the Oceans) மிகச் சிறந்ததாகும். அதில் இந்து சமயமும் இஸ்லாமும் ஒரே இலக்கினை அடைவதற்கான இரு வழிகளே என்பதையும், அவை இரண்டையும் எளிதில் இணைத்துவிட முடியும் என்பதையும் எடுத்துக்காட்ட முயன்றுள்ளார். அவுரங்கசீப் முஸ்லீம் சமயநெறி, சட்டவியல் ஆகியவற்றில் திறனாய்வுமிக்க அறிஞராகத் திகழ்ந்தார் எனினும், கவிதையில் அவருக்குச் சுவையார்வமில்லை. தமது ஆட்சிபற்றிய வரலாற்றினை எழுதுவதற்குத் தடையாக இருந்தார். இருப்பினும், அவரது ஆதரவு இல்லாதவிடத்தும் பல சிறந்த வரலாற்று நூல்கள் அவர் காலத்தில் எழுதப்பெற்றன. காபிகானுடைய 'முன்தக்கப் -உல்-லுபாப்' (Muntakht-abul-Lubab), மிர்ஸா முகம்மது காஸிமின் 'ஆலம்கீரி நாமா', முகம்மது சாகீயின் 'மஆசிரி ஆலம்கீரி,' பீம்சேனுடைய 'நுஷ்கா–இ-தில்குஷா' (Nuskha-i-Dilkusha), ஈஷ்வர்தாஸ் நகார் எழுதிய 'பதூஹாத்-இ-ஆலம்கீரி' (Futuhath-i-Alamgiri), சுஜன்ராயின் 'குலசத்-உத்-தவாரீக்' (Khulasa-ut-Tawarikh) போன்றவை அவற்றுள் சில

வாகும். அவுரங்கசீப்பின் ஆணைப்படி முஸ்லீம் சமயநெறி வல்லார் குழு ஒன்று அதிகாரபூர்வமான, தெளிவான முஸ்லீம் சட்டச் சாரமான 'பதவா-இ-ஆலம்கீரியை' உருவாக்கினர். முகம்மது ஷாவின் ஆட்சிக் காலம்வரையில் (1713-48) ஆண்ட அவுரங்கசீப்பின் சந்ததியார்கள் பாரசீக மொழி இலக்கியத்தைத் தொடர்ந்து ஆதரித்து வந்தனர். அதன் பிறகு, முகலாய மன்னர்களுடைய வறுமையும், பாரசீக மொழிப் புலமைக் குறைவும் அவர்களைப் பாரசீக மொழியை விட்டு உருது மொழிக்குத் திரும்புமாறு செய்தன. அதனால் பாரசீக மொழியின் இடத்தை உருது மொழி கைப்பற்றியது. இருப்பினும், பதினெட்டாம் நூற்றாண்டில் இந்துக்களும் முஸ்லீம்களும் பல பாரசீக மொழி நூல்களை, குறிப்பாக சூபி சமயம்பற்றியும் வரலாறு பற்றியும் பல நூல்களை எழுதியுள்ளனர். ஆனால், அவற்றின் இலக்கியத் திறன் மிகக் குறைவானது. வரலாற்று நூல்கள் பாரசீக மொழியில் தொடர்ந்து வெளிவந்தவண்ணமிருந்தன. அவற்றை முதலில் வட்டார அரசகுலங்கள் ஆதரித்து வந்தன. அதன்பிறகு, ஆங்கில கவர்னர்களும் அதிகாரிகளும் அவற்றிற்கு ஆதரவளித்தனர். இத்தகைய காலவழிச் செய்திக் கோவைகளில் குலாம் ஹூசெய்ன் எழுதிய 'சியார்-உல்-முதாகிரின்' (Siyar-ul-Mutakhirin), முகம்மது அலி அன்சாரி எழுதிய 'தாரீக்கி முசாபரி', ஹரிசரண்தாஸினுடைய 'தவாரிக்-சஹர்-குல்ஸாரி-ஷூஜய்' (Tawarikh-Chahar-Gulzar-i-Shujai), குலாம்அலி நாக்வியினுடைய 'இமாத்-உதஸ்-சாதத்' (Imad-ut-us-saadat), சுல்தான்அலி சபாவாயின் 'மாதன் உஸ்-சாதத் (Maadan-us-Saadat), கைருத்தீனின் 'இப்ரத் நாமா' (Ibrat Nama)' முர்டாஸா ஹூசெய்ன் பில்கிராமியின் 'ஹதிகா உல் அகாலிம்' (Hadiqat-ul-Aqalim) போன்றவை முக்கியமானவையாகும். இரண்டாம் ஷா ஆலம் இறக்கும்வரையிலான டில்லி அரசவை சார்ந்த வரலாற்று நூல்கள் தொடர்ந்து எழுதப்பெற்றுவந்தன. அவை ஏராளமானவை. அவற்றின் பெயர்களைத் தருதல் அருமையே.

## ஹிந்திக் கவிதைகள்

ஹிந்தி மொழிக் கவிதையின் முதல்தரமான காலம் 16ஆம், 17ஆம் நூற்றாண்டுகளே. பாபர், ஹுமாயூன், ஷெர்ஷா, அவர் தம் சந்ததியார்கள் ஆகியோரின் ஆட்சிக் காலங்களில் ஹிந்தி எழுத்தாளர்களுக்கு அரசாங்க ஆதரவு கிடைக்கவில்லையாயினும், பத்மாவதி, மிரிகவதிபோன்ற சிறந்த ஹிந்தி இலக்கியங்கள் அக்பர் காலத்திற்கு முன்பே எழுதப்பெற்றன. பத்மாவதி எனும் நூல் செய்யுள் வடிவில் அமைந்த ஒரு நவீனம். அது மேவார் ராணி பத்மினியின் கதையைத் தொடர் உருவகமாகத் தருகின்றது. அக்ப

ரின் ஆட்சிக் காலம் ஹிந்தி கவிதைகளின் பொற்காலமாகத் திகழ்ந்தது. அவர் அளித்த அமைதியும் ஒழுங்கும், அவர் பின்பற்றிய சமய சமரசக் கொள்கையும் இந்தி மொழிப் புலவர்களின் மேதையைத் தூண்டி, ஒப்பற்ற கவிதைகள் தோன்றுதற்குக் காரணமாயிருந்தன. துளசிதாஸ், சுர்தாஸ், அப்துர் ரஹீம் கான் கன்னு, பீர்பால் போன்றவர்கள் ஹிந்தி இலக்கிய வானில் ஒளிவிடும் தாரகைகளாகத் திகழ்ந்தனர். திறனாய்வாளர்களின் ஒருமித்த கருத்துப்படி அக்கால ஹிந்தி, பாரசீக மொழிப் புலவர்களில் முதலிடம் வகிக்கவல்லவர் துளசிதாஸரே. எவ்வாறெனினும், அக்பர் அவரை நேரடியாக அறிந்ததில்லை. அவர் இருபத்தைந்து உயர்தர நூல்களை எழுதியுள்ளார். அவற்றில் பொதுவாகத் துளசி ராமாயணம் என அழைக்கப்பெறும் 'இராமசரித் மானஸ்' என்னும் வீர காவியமே ஒப்பற்றது. அடுத்தபடியாக, முக்கியத்துவம் பெற்றவர் புலவர் சுர்தாஸ். அவர் துளஸிதாஸைவிட ஏராளமான நூல்களை எழுதியுள்ளார். 'சர் சாகரின்' ஆசிரியர் அவரேயாவர். அதுவன்றி, வேறு பல பாடல்களை பிராஜ் பாஷையிலும் புனைந்துள்ளார். சில திறனாய்வாளர் அவர் துளசிதாஸைவிட மேலானவர் எனக் கொள்வர். அவர் அநேகமாக அக்பரின் அவைக்களத்தோடு தொடர்புகொண்டிருந்த 'ஆக்ராவின் குருட்டுப் பாணராக' இருக்கவேண்டும். அக்பரின் அரசவையை வேறு பல ஹிந்தி மொழிக் கவிஞர்களும் அணி செய்தனர். அன்னாரது ஆட்சிகாலத்தில் ஹிந்தி இலக்கியங்களிலும் கவிதைகளிலும் முஸ்லீம் புலவர்களும் பங்குகொள்ளத் தொடங்கினர். அவர்களில் இந்தியப் பண்பாட்டை ஹிந்தி மொழிப் பாடல்களில் வெற்றிகரமாக விளக்கிய அப்துர் ரஹீம்கான் கன்னு முதலிடம் வகித்தார். தோஹாக்கள் (Dohas), சத்சாயிகள் (Satsais) போன்ற அவரது பேனாமுனையிலிருந்து வந்த நூற்றுக்கணக்கான செய்யுள்கள் நமக்குக் கிடைத்திருக்கின்றன. இன்றும் நமது செய்யுள் திரட்டுகளில் அவற்றிற்குப் பெருமிதமான இடம் உண்டு. ராஸ்கான் என்பார் மற்றொரு ஹிந்தி மொழிக் கவிதைகள் இயற்றிய முஸ்லீம். அவர் கிருஷ்ண பரமாத்மாவின் பக்தர். பிருந்தாவனத்தில் கிருஷ்ண பரமாத்மாவின் வாழ்க்கையை விளக்கவல்ல முதல் தரமான பாடல்கள் பலவற்றை அவர் பாடியருளினர். 1614ஆம் ஆண்டில் அவர் யாத்த 'பிரேம் பாதிகா' (Prem-Batika) இன்றளவும் மக்கள் மனத்தைக் கவர்கின்றது. கவிராஜ் என்னும் பட்டம்பெற்ற பீர்பால், ராஜா மான்சிங், ராஜா பகவன்தாஸ், நரஹரி, ஹரிநாத் ஆகியவர்கள் அக்பரின் அவையில் இருந்த பிற குறிப்பிடத்தகுந்த எழுத்தாளர்கள். ஹிந்தி மொழிக் கவிஞர்களில் பலர் அரசவையில் வாழ்ந்து, அங்கேயே கவிதைகளை இயற்றினர். நந்ததாஸ், விட்டல் நாத், பரமானந்ததாஸ், கும்பன்தாஸ் போன்ற கிருஷ்ணபக்தி மிகுந்தவர்கள் அத்தகைய புலவர்களில் முக்கியமானவர்கள்.

இலக்கிய முனைப்பார்வம் அரசர்களோடும் பிரபுக்களோடும் நின்றுவிடவில்லையென்பது அக்காலத்தின் மிக முக்கியப் பண்பாகும். அது அடிப்படையில் மக்களுடைய இயக்கமாக இருந்தது. ஹிந்தி கவிஞர்களில் பலர் நாட்டுப்புறங்களில் மிகுதியாகக் காணப்பெற்றனர். தலப் பெருநிலக்கிழார்களும் செல்வங்கொண்ட பொது மக்களும் அவர்களை ஆதரித்தனர். ஹிந்தி கவிதை உலகின் பொற்காலமாகத் திகழ்வதற்குக் காரணமாக இருந்த உணர்ச்சியை நன்கு அறிவதற்கு மிஸ்ராபந்து விநோதும் ராம்சந்திர சுக்லாவும் எழுதிய 'ஹிந்தி சாஹித்யா கா இதிகாஸ்' (Hindi Sahitya-Ka-Ithihas) என்னும் நூலின் ஏடுகளைப் புரட்டவேண்டும்.

ஜஹாங்கீரும் ஷாஜஹானும் ஹிந்தி கவிதையைத் தொடர்ந்து ஆதரித்தனர். துளசிதாஸின் இலக்கிய வாழ்க்கையின் இறுதிக் காலம் ஜஹாங்கீரின் ஆட்சி காலத்தில்தான் கழிந்தது. ஜஹாங்கீர், ஷாஜஹான் ஆகியோரின் அவைகளைப் பல தலைசிறந்த எழுத்தாளர்கள் அணிசெய்தனர்.

அவர்களில் 'சுந்தர் சிரிங்கரை' (Sundar Shringar) எழுதிய சுந்தர் கவி, 'கவிதா ரத்னகரின்' ஆசிரியரான சேனதிபதி, சிரோமணி மிஸ்ரா, பனர்சிதாஸ், புசான், நாதிராம் முதலானோர் முக்கியமானவர்கள். பல சமயப் பாடல்களை இயற்றிய தேவகவி என்பார் மற்றொரு புகழ்மிக்க புலவராவார். மாண்பு மிக்க பீஹாரி என்பாரை மீர்ஸா ராஜா ஜெய்சிங் ஆதரித்தார். இவர்களைத் தவிர பன்னவைச் சேர்ந்த பீரான்நாத்தும், அகமதாபாத்தைச் சார்ந்த தாதுவும் (Dadu) குறிப்பிடத்தகுந்தவர்கள். இந்து சமயத்தையும் இஸ்லாம் சமயத்தையும் ஒப்புரவிணக்கம் செய்ய முயன்ற அவர்கள் பல பாடல்களை இயற்றியுள்ளனர். மேலும், அவர்கள் முறையே 'பிரான்னதி' (Prannathi), 'தாதுபந்தி' (Dadupanthi) என்னும் சமயப் பிரிவுகளை நிறுவினர். அக்காலத்தில் இக் கலையில் வழி காட்டியாக விளங்கியவர் ஓர்ச்சாவைச் சார்ந்த கேசவதாஸ் ஆவார். அவரது 'கவிப் பிரியா', 'ரஸிக் பிரியா' 'அலங்காரித் மஞ்சரி' ஆகியவை கவிதைக் கலைக்கும் யாப்பிலக்கணத்துக்கும் எடுத்துக் காட்டுகளாகத் திகழ்ந்தன.

முகலாயர் ஆட்சி காலத்தில் தற்காலப் பிற இந்திய மொழிகளும் எழுச்சியுற்றன. சரன்ஸும் பிறரும் இயற்றிய பல கவிதைகள் ராஜஸ்தானி மொழியை வளமாக்கின. பிரித்விராஜ் ரத்தோரின் பாடல்கள், ராணபிரதாப்சிங்கின் உரிமை வேட்கையையும், சமய ஆர்வத்தையும், நாட்டுப் பற்றையும் உலகில் பறைசாற்றியதோடு, இயற்றிய ஆசிரியருக்கு மங்காப் புகழைத் தேடித்தந்தன. பல

காலவழிச் செய்திக் கோவைகள் எழுதப்பெற்றன. அவற்றில் மோதாநைஸியின் 'கியாத்' (Khyat), 'குமான் ராசோ', (Khuman Raso), 'ஹமீர் ராசோ' (Hamir Raso), 'ராணு ராசோ' ஆகியவையும், சுராஜ்மாலின் 'வான்ஸ் பாஸ்கரும்' (Vans-Bhaskar) சிறப்புவாய்ந் தவை. இக்காலத்தில் வங்காள மொழி இலக்கியமும் பெரு வளர்ச்சி யுற்றது. கிருஷ்ணதாஸ் கவிராஜ், பிரிந்தாவன்தாஸ், ஜயாநந்தா, திரிலோசன்தாஸ், நரஹரி சக்கரவர்த்தி ஆகியோர் குறிப்பாக சைதன்யரின் வாழ்க்கையை விளக்கவல்ல வைஷ்ணவ சமய இலக் கியங்களைப் படைத்தனர். பகவத் கீதை, மகாபாரதம், இராமாயணம் முதலானவை வங்காள மொழியில் பெயர்த்து எழுதப்பெற்றன. அவுரங்கசீப் ஹிந்தி இலக்கியத்தை ஆதரிக்கவில்லை. அன்னாரது ஆட்சி காலத்தில் அத் துறையில் பின்னடைவு தோன்றியது. ஆயினும், இந்து அரசர்களின் அவைகளில் ஹிந்தி அறிஞர்களும் கவிஞர்களும் தொடர்ந்து சிறப்புற வாழ்ந்துவந்தனர். ஆயின், 18ஆம் நூற்றாண்டில் ஹிந்தி இலக்கியத்தின் தனி மேம்பாடும் கருத் தழகும் சீர்குலையத் தொடங்கின.

## உருது மொழியும் கவிதைகளும்

ஒருபுறத்தில் அன்னியரான துருக்கியர் பிற மத்திய ஆசிய மக்கள் ஆகிய இவர்களுக்கும், மற்றொருபுறத்தில் இந்துக்களுக்குமிடையே தொடர்பு ஏற்பட்டதன் விளைவாக டில்லி சுல்தானியர் ஆட்சி காலத் தில் பொதுவான பேச்சு வழக்கு ஒன்று உருவெடுத்தது. ஆயின், அது பிற்கால முகலாய மன்னர் காலத்தில்தான் மொழிவடிவம் பெற்றது. ஆரம்ப காலத்தில் ஸபானி ஹிந்தவி (Zapan–i–Hindavi) எனப் பெயர்பெற்ற அம் மொழி பிற்காலத்தில் உருது என வழங்கலாயிற்று. டில்லி, மீரட் ஆகிய பகுதிகளில் பல நூற்றாண்டுகளாகப் பேசப் பட்டுவந்த மேலைஹிந்தியின் பேச்சு வழக்காக உருது அமைந்தது. அம் மொழியின் இலக்கண அமைப்பு இந்தியாவிற்குரியது. ஆனால், அதில் மெள்ளமெள்ளப் பாரசீக, அராபிய மொழிச் சொற்கள் அள விற்குமீறிப் புகுந்தன. தமது கவின்பெறு கருத்துகளை வெளியிடும் வாய்ப்பான கருவியாக அம் மொழியைப் பயன்படுத்திய முதல் முஸ்லீம் எழுத்தாளர் அமீர் குஷ்ருவே எனக் கருதப்பெறுகின்றது. இத்தகைய உள்நாட்டு, ஆனால், கலப்பு மொழியாகிய உருதுவை விட்டு, பாரசீக மொழியையே முகலாய மன்னர்கள் போற்றிவந்தனர். அதனால் 18ஆம் நூற்றாண்டின் தொடக்க காலம்வரையில் அவர் களுடைய ஆதரவினை அம் மொழி பெறவில்லை. தக்கணத்தின் முஸ்லீம் அரசர்கள்தாம் 'ரேகா' (Rekha) என்று அழைக்கப்பெற்ற உருது மொழிக் கவிதைகளை முதலில் ஊக்குவித்தனர். ஆயின்,

டில்லி அதனை ஏற்றுக்கொள்ளவில்லை. எவ்வாறெனினும், பதினெட்டாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் முகலாய மன்னர்களும் பிரபுக்களும் பாரசீகத்தைத் தங்களது தாய்மொழியாக வைத்துக் கொள்ளத் தவறிவிட்டனர். வீட்டிலும் அரசவையிலும் பாசறையிலும் உருதுவைப் பயன்படுத்தத் துவங்கினர். தமது அரசவையில் உருது செய்யுள்களைப் பாடுதற்குத் தக்கணக் கவியான வாலி என்பாரை அழைத்ததன்மூலமாக உருது மொழிக்கு ஊக்கமளித்த முதல் முகலாய மன்னர் முகம்மது ஷாவே (1719—48). 1722ஆம் ஆண்டில் வாலியும் டில்லிக்குச் சென்றிருந்தார். அதன் பிறகு பல முஸ்லீம் அறிஞர்கள் பல்வேறு பொருள்கள்பற்றி உருது மொழியில் செய்யுளியற்ற முன்வந்தனர். அப்ரு (Apru), ஹதீம், நஜி, மாஸ்முன், மஜார் ஆகியோர் டில்லியில் இருந்த ஆரம்பகால உருது மொழிக் கவிஞர்கள். அவர்கள் 18ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் வாழ்ந்திருந்தனர். ஆயினும், பத்தொன்பதாம் நூற்றாண்டுத்தொடக்கத்தில் ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனியார் உருதுவை அரசாங்க மொழியாக்கிய பின்னர்தான் அது சிறந்தோங்கத் தலைப்பட்டது.

## சமஸ்கிருதம்

சமஸ்கிருத, ஹிந்தி இலக்கியங்களில் பாபரும் ஹுமாயூனும் ஆர்வங் கொள்ளவில்லை. சமஸ்கிருத மொழிக்கு ஆதரவு அளித்த முதல் முகலாய மன்னர் அக்பரே. அம்மொழிசார்ந்த பல அறிஞரும் புலவரும் அவரது அவையை அழகு செய்தனர்; பேரரசருடைய போற்றுதலுக்கும் உரியராயினர். ஹிந்தி மொழிப் புலவர்களில் பெரும்பாலோர் சமஸ்கிருதத்திலும் புலமை பெற்றிருந்தனர். அவர்களுடைய செய்யுள்களைச் செவிமடுப்பதோடு அக்பர் நின்றுவிடவில்லை. இந்து சமயக் கொள்கைகள் பற்றியும் கோட்பாடுகள் பற்றியும் அவர்களுடன் விவாதித்தார். 'பர்சிபிரகாசா' (Parsiprakasa) என்னும் முதல் பாரசீக-சமஸ்கிருத மொழி அகராதி அன்னாரது காலத்திலேயே உருவானது. தமது தந்தையின் வழியைப் பின்பற்றிய ஜஹாங்கீர் சமஸ்கிருத அறிஞர்களையும் கவிஞர்களையும் ஆதரித்துப் போற்றி வந்தார். பழைமைப் பண்புகொண்ட ஷாஜஹானும் தமது முன்னோர்களின் அடிச்சுவட்டைப் பின்பற்றி, சமஸ்கிருதப் பேரறிஞர்களுக்கு ஆதரவு காட்டினார். அவரது சமஸ்கிருத அவைக்களப் புலவரான புகழ்வாய்ந்த ஜகந்நாத் பண்டிட், 'ரஸ் கங்காதர்' (Ras Gangadhar) 'கங்கா லஹரி' (Ganga Lahri) ஆகியவற்றைப் படைத்தார். ஷாஜஹானின் ஆதரவு பெற்று, அவருடைய அவையில் வாழ்ந்திருந்த மற்றொரு சமஸ்கிருதப் பேரறிஞர் கவீந்திர ஆச்சார்ய சரஸ்வதி என்பார். அவ்வப்போது ஷாஜஹானால் வரவேற்கப்பெற்று, தங்களது

கவிதைகளுக்காகப் பரிசுகள் பெற்ற ஏராளமான சமஸ்கிருதப் புலவர்களின் பெயர்களை அவைக்களத்து வரலாற்று அறிஞரான அப்துல் ஹமீத் லஹாரி அளித்துள்ளார். கவிதைகளைத் தவிர மிகுந்த பயனுள்ள வானவியல், குறியியல் சார்ந்த சொற்களின் அகராதியை 1643ஆம் ஆண்டில் வேதாங்கசார்யா (Vedanga-charya) கொண்டு வந்தார். எவ்வாறெனினும், சமஸ்கிருத பண்டிதர்களை அவுரங்கசீப் வெறுக்கத் தொடங்கினர். அவரது ஆட்சி காலத்திலும், அவர்பின் வந்த முகலாய மன்னர்களின் காலங்களிலும் அரசவையில் சமஸ்கிருத அறிஞர்கள் மதிக்கப்படவில்லை. ஆயினும், இந்து அரசர்களின் அவைகளில் சமஸ்கிருதம் தொடர்ந்து சிறப்புற்று விளங்கிவந்தது. எனினும், முகலாயர் காலத்து சமஸ்கிருத இலக்கியங்களை முதல்தரமானவையாக, மூலமுதலானவையாக, கிளர்ச்சியூட்டும் கலைக் கோலங்களாகக் கருதமுடியாது.

## ஓவியம்

ஓவியத்திற்குக் குரான் தடை விதித்தபோதிலும் முகலாயப் பேரரசர்கள் அதில் மிகுந்த ஆர்வங்கொண்டிருந்தனர். பதின்மூன்றும் நூற்றாண்டில் பாரசீகத்தை வெற்றிகொண்ட மங்கோலியர்கள் ஓவியக் கலையை அந் நாட்டில் புகுத்தினர். இந்திய, புத்த சமய, இரானிய, பாக்டிரிய, மங்கோலியக் கருத்துகளின் செல்வாக்கினை மிகுதியாகக்கொண்டு வளர்ந்த, சீனக்கலையின் வட்டார வடிவமே பாரசீக ஓவியக் கலையாகும். பாரசீகத்தின் தைமூரிய குலத்தரசர்கள் அதனை ஆதரித்தனர். ஹீரட்டிற்கு வந்தபோதுதான் இத்தகைய ஓவிய வகையுடன் பாபர் தொடர்புகொண்டதாகத் தெரிகின்றது. அதனை அவர் ஆதரிக்கத் தொடங்கினர். இசை, கவிதை, ஓவியம் ஆகியவற்றில் அளவிலா ஆர்வங்கொண்ட ஹுமாயூன் நாட்டைவிட்டு ஓடிய காலத்தில் தலைசிறந்த பாரசீக ஓவியர்களுடன் தொடர்புகொண்டார். அவர்களில் ஹீரட்டைச் சார்ந்த புகழ்படைத்த பீஸாத் என்பாரின் சீடரான மீர் சையது அலியையும், குவாஜா அப்துஸ் சமத்தையும் (Khwaja Abdus Samad) 1550ஆம் ஆண்டில் தம்முடன் காபூலுக்கு அழைத்துச்சென்றார். அங்கே இந்த ஓவியர்களிடம் ஹுமாயூன் அக் கலையைப் பயின்றார். அவரது மகனான அக்பரும் அவர்களிடம் பயிற்சி பெற்றார்.

சீன அல்லது மங்கோலியப் பாணியாகிய இந்த ஓவியக் கலையையே அக்பர் இந்தியாவிற்குக் கொண்டுவந்து, அதைத் தமது அரசவையிலும் புகுத்தினர். ஆதரவற்று, புறக்கணிக்கப்பெற்ற நிலையிலும் பண்டைக் காலத்திலிருந்து தொடர்ந்துவந்த இந்திய

ஓவியப் பாணியுடன் அது கலந்தது. மிகப் பழங்காலத்திலேயே இந்து ஓவியக்கலை மரபுகள் வேரூன்றின. அவை அஜந்தா குகைகளில் அமைந்த காரை ஓவியங்கள்; பர்ஹத், எல்லோரா ஆகிய இடங்களில் காணப்பெறும் புடைப்புச் சிற்பங்கள் ஆகியவற்றின் மூலமாகப் பதினாரும் நூற்றாண்டில் தொடர்ந்துவந்தன. அக்பரது ஆட்சி காலத்தில் பாரசீக (சீன) முறையும் இந்திய முறையும் சிறிது சிறிதாக இணைந்தன. காலப்போக்கில் அவை இரண்டும் ஒன்றாயின. ஆயின், அக் கலையில் அன்னியப் பண்புகள் சிறிது சிறிதாக மறைந்தன. இறுதியில் அது முழுமையும் இந்தியக் கலையாயிற்று. இத்தகைய வளர்ச்சியைப் பாட்னாவிலுள்ள குதாபக்ஷ் நூல் நிலையத்தில் வைக்கப்பெற்றுள்ள 'தாஸ்தானி அமீர் ஷம்யா', 'தாரீக்கி கான்தானி தைமூரியா', 'பாதுஷாநாமா' போன்ற பாரசீக நூல்களின் பிரதிகளில் தீட்டப்பெற்றுள்ள ஓவியங்களிலிருந்து நன்கறியலாம். 1550 முதல் 1560 வரையிலான காலப்பகுதியில் மீர்சையது அலியும், குவாஜா அப்துஸ் சமத்தும், 'தாஸ்தானி அமீர் ஹம்சா'விற்குத் தேவையான விளக்கப் படங்களை வரைந்தனர். அவற்றில் சீன-பாரசீகப் பாணியின் செல்வாக்கு மிகுதியாகக் காணப்பெறுகின்றது. இந்து பாணியும் சீன-பாரசீகப் பாணியும் 1562ஆம் ஆண்டிலிருந்து கலக்கத் தொடங்கின. இதனைத் தான்சேன் என்னும் புகழ்பெற்ற பாடகர் முகலாய அரசவைக்கு வந்ததை விளக்கும் ஒப்புயர்வற்ற ஓவியத்தில் இருந்து நன்கறியலாம். 1569ஆம் ஆண்டிலிருந்து 1585ஆம் ஆண்டுவரையில் பதேபூர் சிக்ரியில் இருந்த தமது அரண்மனைச் சுவர்களை, இந்து, பாரசீகப் பாணிகளைக் கொண்ட கலைஞர்களின் கூட்டு முயற்சியால் எழுந்த ஓவியக் கலையின் தலைசிறந்த கைவண்ணங்களைக்கொண்டு அலங்கரிப்பதற்கு அக்பர் ஏற்பாடு செய்தார். அது ஓவியக்கலை வளர்ச்சியில் அடுத்த கட்டத்தைக் குறிப்பதாக அமைந்தது. இத்தகைய வளர்ச்சியின்போது கூட்டுக் கலையில் காணப்பெற்ற அன்னியக் கூறுகள் மெதுவாக மறைந்தன. இந்தியப் பண்புகளே மேலோங்கி நின்றன. அக்பர் அளித்த பேராதரவின் விளைவாகப் பல தலைசிறந்த ஓவியர்கள் அவரது அரசவையை நாடி வந்தனர். அவர்களில் இந்து ஓவியக்கலைஞர்களே எண்ணிக்கையில் மிகுந்தவர்களாகவும், மிகுந்த திறமை கொண்டவர்களாகவும் விளங்கினர். கைத்திறம் மிக்க பாரசீக ஓவியர் மிகச் சிலரே அரசவையில் இருந்தனர். அவர்களுள் மிகுந்த புகழ்பெற்றவர் அப்துஸ் சமத், பர்ருக் பெக், குஷ்ராவ்குலி, ஜாம்ஷெட் என்போராவர். அக்பரின் அவையிலிருந்த பதினேழு தலைசிறந்த கவிஞர்களில் பதின்மூவர் இந்துக்களாவர். அவர்களில் தஸ்வந்த், பசவான், சன்வால்தாஸ், தாராசந்த், ஜெகந்நாத், லால், கேசு, முகுந்த், ஹரிபான்ஸ் ஆகியோர் தலைமையானவர்கள். அவர்களுடைய கலைத் திறத்தைப்பற்றி அபுல்

பாஸல் மிக உயர்வாகப் பேசுகின்றார். அவர் பின்வருமாறு எழுதியுள்ளார்: 'நூற்றுக்கு மேற்பட்ட ஓவியர்கள் அக் கலையில் வல்லுநர்களாகிவிட்டனர். ஏராளமானவர் அக் கலையில் முழுமை அடைந்த நிலையில் அல்லது அதனை அடையும் வழியில் இருந்தனர். சிறப்பாக இது இந்துக்களைப் பொறுத்தவரையில் உண்மையாகும். பொருள்களைப்பற்றி நாம் கொண்டிருக்கும் கருத்தைக்காட்டிலும் அவர்கள் தீட்டிய ஓவியங்கள் சிறந்து விளங்குகின்றன. உண்மையில் அகில உலகிலும் அவர்களுக்கிணையானவர்களைக் காணமுடியாது' (Ain-i Akbari, Vol. I, பக். 107).

ஓவியக் கலைக்கெனத் தனியான அரசாங்கத் துறை ஒன்றை அக்பர் நிறுவினார். குவாஜா அப்துஸ் சமத்தை அதன் தலைவராக நியமித்தார். பேரரசர் அத் துறையை நேரடியாகக் கண்காணித்து, அதற்கு எல்லா வழிகளிலும் ஊக்கமளித்தார். கலைஞர்களை அரசாங்கப் பணியாளர்களாக நியமித்து, பேரரச சேவையில் அவர்களுக்கு மன்சாப் பதவிகளையும் வழங்கினார். பேரரசர் அளித்த ஊக்கத்தின் விளைவாகத் 'தேசிய இந்திய ஓவியப் பள்ளி' என்று அழைக்கக்கூடிய நிலையிலுள்ள ஓவியப் பள்ளி ஒன்று உருவாகியது. இந்தியாவின் பல பகுதிகளிலிருந்தும் கலைஞர்கள் அங்கு வந்தனர். வெளி நாடுகளிலிருந்தும் சிலர் அதில் வந்து சேர்ந்தனர். அதன் உறுப்பினர்கள் பலதரப்பட்ட ஜாதிகளையும் சமயங்களையும் சேர்ந்தவர்களாக இருந்தபோதிலும், தலைசிறந்த கலாரசிகரான பேரரசரின் இசைவினைப் பெறக்கூடிய உயர்ந்த ஓவியங்களைப் படைக்க வேண்டுமென்ற ஒரே குறிக்கோள் அவர்களைத் தூண்டியது. அக்பருடைய உருவப் படங்களும் அரசவையாளரின் உருவப் படங்களும் வரையப்பெற்றன. அழகிய செருகேடுகள் (Albums) தயாரிக்கப்பட்டன.

சுவைத்திற வல்லுநரான ஜஹாங்கீரின் ஆர்வம் மிக்க ஆதரவு காரணமாக அக்பர் காலத்தில் வளர்ந்த அந்த ஓவியப் பள்ளி அவரது மைந்தரின் காலத்திலும் செழித்தோங்கி வளரலாயிற்று. தமது அழகுச் சுவையுணர்வை திருப்தி செய்யவல்ல உயர்தர ஓவியங்களுக்கு எந்த விலையும் கொடுக்கத் தயாராக இருந்த பேராதரவாளர் ஜஹாங்கீர். தூரிகைபற்றி ஓவியம் தீட்டுவதில் அவர் வல்லவர். தம்மிடம் வந்த ஓவியங்களை வரைந்த கலைஞர்களின் பெயர்களைக் கூறுமளவிற்குத் திறனாய்வு மிக்கவர். 'பல கலைஞர்கள் ஒரே தன்மைத்தான படங்களை வரைந்து முடிப்பார்களேயானால், அவற்றில் ஒவ்வொரு படத்தையும் வரைந்த ஓவியரை என்னால் குறிப்பிட்டுச் சொல்லமுடியும்' என்றும் அவர் பெருமை பேசினார். மேலும், ஒரே படத்தினைப் பல கலைஞர்கள் வரைந்து முடித்தாலும்,

அப் படத்தின் பல பகுதிகளையும் வரைந்தவர்களது பெயர்களைத் தம்மால் குறிப்பிட முடியும் என்றும் கூறினர். ('Tuzuk-i-Jahangiri', translated by Rogers and Beveridge, Vol. I, பக். 20). அவர் காலத்தில் வாழ்ந்த தலைசிறந்த முஸ்லீம் கலைஞர்கள் ஆகா ராஜா, ஹீரட்டைச் சார்ந்த அவரது மகன் அப்துல் ஹசன், முகம்மது நாதிர், சாமர்கண்டைச் சார்ந்த முகம்மது முராத், உஸ்தாத் மன்சூர் என்போராவர். இந்து ஓவியர்களில் பிஷன்தாஸ் (ஒப்பற்ற உருவப் படமும் ஓவியமும் வரைவோர்), மனோஹர், மாதவா, துளசி, கோவர்தன் போன்றோர் தலைசிறந்தவர்கள்.

ஒண்ணிற மூட்டப்பெற்ற சிறு கைவரைப்படக்கலை என்னும் முகலாய ஓவியக் கலைப்பிரிவு, அக் கலையின் உயிர்போலும், உணர்வு போலும் இருந்த ஜஹாங்கீரின் ஆதரவில் உச்ச நிலை அடைந்தது. அக்பர் அக் கலைக்கு அடிக்கல் நாட்டினர். ஆயின், இராஜபுத்திர இளவரசியாருக்குப் பிறந்த அவரது புதல்வரான ஜஹாங்கீரே தமது அறிவாற்றலாலும், கலைசார்ந்த உள்ளுணர்வாலும் அப் புதிய கலைப் பிரிவு முதிர்ச்சிபெற வழிகாட்டினர். தமது அருமையான திறனாய்வுத் திறத்தால் அது வெற்றி பெற வழி வகுத்தார்.

தமது முன்னோர் அளித்த ஆதரவை ஷாஜஹானும் தந்தார் எனினும், அவர்தம் தந்தையாரும் பாட்டனாரும் ஓவியக் கலைமீது கொண்டிருந்த தணியாத ஆர்வம் அவரிடம் இல்லை. ஓவியக் கலையைவிட அவர் கட்டடக் கலையிலும் அணிகலன்களிலும் சுவையார்வம் கொண்டிருந்தார். அதனால் ஜஹாங்கீர் காலத்தில் மிக உயர்ந்த நிலையை அடைந்த ஓவியக் கலையின் தரம், அவருக்குப் பின் குன்றியது. அரசவையிலிருந்த ஓவியக் கலைஞரின் எண்ணிக்கை குறைந்தது. அதனோடு அவர்களது படைப்புகளும் தரமிழந்தன. ஷாஜஹான் காலத்தில் வாழ்ந்த ஓவியர்களில் தலைமையானவர்கள் பகீர்ருல்லா, மீர் ஹாஷிம், அனூப், சித்ரா போன்றோரே. ஷாஜஹான் காலத்து ஓவியங்களில் பொன்னும் செறிவான வண்ணங்களும் ஒளிர்ந்தனவே ஒழிய, வண்ணங்களின் இணக்கமான சேர்க்கை காணப்படவில்லை. ஆயின், அவரது மூத்த மகனான தாரா ஷுகோ அக் கலையினைப்பேரார்வத்துடன் ஆதரித்தார். அவரது மரணம் ஓவியக் கலைக்கும் பேரிடியாக வந்தது.

பண்டைப் பண்புகொண்ட முஸல்மானான அவுரங்கசீபு சித்திரக் கலையை எதிர்த்தார். அரசரின் ஆதரவை இழந்த அக் கலையும்விரைவாக வீழ்ச்சியுற்றது. பீஜப்பூர், கோல்கொண்டா போன்ற இடங்களில் இருந்த அரண்மனை ஓவியங்களை அவுரங்கசீபு அழித்தார். மேலும், சிக்கந்தராவில் இருந்த அக்பரின் கல்லறையில்

காணப்பெற்ற ஓவியங்களின்மீது வெள்ளையடித்தார். சில ஓவியர்கள் டில்லி நகரத்தில் தொடர்ந்து வாழ்ந்ததோடு பேரரசரின் உருவப் படங்களையும் வரைந்தனர். ஆனால் அவரது அனுமதி இன்றியே இவ்வாறு செய்தனர். பேரரசு சிதைவுற்றபோது அவத்து, ஐதராபாத், மைசூர், வங்காளம்போன்ற மாநிலங்களில் எழுந்த புதிய அரசுகளை நாடி, திறைமைவாய்ந்த ஓவியர்கள் தஞ்சமடைந்தனர். லக்நௌவும் பாட்னாவும் கூடுமானவரை ஓவியர்களை ஆதரித்தன. எவ்வாறெனினும் அக்கலை இராஜபுதனத்தில் வளம்பெற்றுத் திகழ்ந்தது. அங்கே அது இராஜபுத்திர ஓவியக் கலைப்பிரிவு எனப்பட்டது. ஜெய்ப்பூரும் நாத்வாராவும் அதன் முக்கியக் கேந்திரங்களாக விளங்கின. பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் காங்ரா பிரிவு என்னும் புதிய ஓவியக் கலைப்பிரிவு ஒன்று தோன்றியது. அதன் வழி வந்தனவற்றுள் தெஹ்ரி கார்வால் (Tehri Garhwal) பிரிவும் ஒன்றாகும். தகுதியுள்ள திறனாய்வாளர்கள் இத்தகைய பிரிவுகளின் கலைப் படைப்புகளைப் புகழ்ந்து பேசியுள்ளனர்.

## சித்திரக் கையெழுத்துக் கலை (Calligraphy)

சித்திரக் (Calligraphy) கையெழுத்துக் கலை, ஓவியக் கலையுடன் நெருங்கிய தொடர்புகொண்டிருந்தது. அது இந்தியா, பாரசீகம் சீனா ஆகிய நாடுகளில் மிகுதியாகப் போற்றப்பெற்றது. கவின் கலையாகக் கருதப்பெற்ற அதனை முகலாயப் பேரரசர்களிற் பலர் விரும்பிப் போற்றிவந்தனர். அக்பர் படிக்காதவராயினும் கையெழுத்துக் கலையில் சுவையார்வம் கொண்டு, அக் கலையில் வல்லார் பலரை வேலைக்கமர்த்தினார். தமது நூலகத்தில் வைப்பதற்கென்று பல அழகிய நூல்களின் பிரதிகளை எழுதுவதற்கு அவர்களைப் பயன்படுத்தினார். அழகிய கையெழுத்தில் அமைந்த ஏடுகளைச் சேகரித்து, அவற்றினைச் சித்திரங்களைப்போலச்செருகேடுகளில் வைத்துப் பாதுகாப்பது வழக்கமாகும். அக்பர் காலத்தில் எண்வகைக் கையெழுத்துகள் இருந்தன என்றும், அவற்றில் நஸ்தாலிக் (Nastalig) என்னும் வகையையே அக்பர் சிறப்பாக ஆதரித்தார் என்றும் அபுல் பாஸல் கூறுகின்றார். அதில் முழுக்க முழுக்க வளைகோடுகளே இருந்தன. 'ஸரீன் கலாம்' (Zarin Qalam) என்ற பட்டம்பெற்ற முகமது உசெயின் காஷ்மீரி என்பவரே அக்பரது அரசவையில் தலைசிறந்த கையெழுத்துக்கலைஞராகத் திகழ்ந்தார். ஜஹாங்கீரும் கையெழுத்துக் கலையில் விருப்பார்வம்கொண்டிருந்தார். அழகிய கையெழுத்துப் பிரதிகளைப் படைப்பதற்காகப் பல கலைஞர்களை நியமித்தார். தமது முன்னோர்களைப்போலவே ஷாஜஹானும் அக் கலையை

ஆதரித்தார். ஒரு காலத்தில் ஓவியராகவும், கையெழுத்துக் கலையில் வல்லவராகவும் விளங்கிய மீர் ஹாஷிம் அவரது அரசவையில் மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்தார். அவுரங்கசீபு சித்திர வேலைப் பாடுடைய கையெழுத்தில் வல்லவராக விளங்கினர். குரானை அவர் அழகிய கையெழுத்தில் எழுதினர். அவர் நூலகத் தலைவரும் கையெழுத்துக் கலை வல்லாருமான ஜவஹிர் ரகாம் என்பாருக்கு மிகுந்த அன்பாதரவு காட்டினர். அரச முத்திரையில் வாசகங்களைப் பொறித்தல், கட்டடங்களிலும் நினைவுச்சின்னங்களிலும் குரான் வாசகங்களை எழுதி அணிசெய்தல், அழகிய செருகேடுகளாக வைத்தல்போன்ற பல வழிகளில் சித்திரக் கையெழுத்துக் கலை பயன்பட்டது.

சித்திரக் கையெழுத்துக் கலையோடு நூல்களைக் கலை உணர்ச்சியுடன் தைத்துக்கட்டும் கலையும், அவற்றை அழகிய சித்திர வேலைப் பாடுகளைக்கொண்டு வண்ண மெருகூட்டும் கலையும் தொடர்பு கொண்டிருந்தன. நூல்களைக் கட்டுதல், அவற்றின் ஓரங்களிலும் மேலட்டைகளிலும் வண்ண மெருகூட்டுதல், நூலின் கருத்துகளை சித்திர வரைப்படங்களாகக் காட்டுதல் போன்றவற்றில் ஈடுபட்டவர்கள் கலைஞர் என்றே கருதப்பெற்றனர். ஓவியரென்றே அழைக்கப் பெற்ற அவர்கள் பெருமதிப்புப் பெற்றிருந்தனர். பயனுள்ள முறையில் சேர்த்து அழகாகக் கட்டி, விலையுயர்ந்த வண்ணமெருகூட்டிப் பல தினுசுகளாக வெளிவந்த முகலாயர் காலத்து நூல்களிற் பல நமக்குக் கிடைக்கின்றன. அவற்றினை நம் நாட்டிலுள்ள கையெழுத்துச் சுவடி நூலகங்களில் பாதுகாத்து வருகின்றனர். அவைகளில் மிகச் சிறந்தவற்றுள் ஆள்வாரிலும் ஆக்ரா கல்லூரியிலும்* காணப்பெறும் பாபர் நாமாவின் படிகள், பாட்னவிலுள்ள குதா பாக்ஷ் நூல்நிலையத்தில் வைக்கப்பெற்றிருக்கும் 'தாரிக்கி காந்தன் தைமூரியாவும்' 'பாதுஷா நாமாவும்' சிலவாகும்.

## சிற்பக்கலை

பண்டைக்கால இந்தியாவில் சிற்பக்கலையானது சிறந்த முறையில் முன்னேற்றமடைந்தது. ஆனல், உயிருடன் வாழ்பவரின் உருவச்சிலைகளை வெறுக்கும் குரான் கோட்பாட்டைப் பின்பற்றிய பழைமைப் பண்புகொண்ட முஸ்லீம்கள் ஆனதால் பாபரும் ஹுமாயூனும் சிற்பக்கலையினை ஆதரிக்கவில்லை. ஆயின், அக்பர் மரபு வழுவாத முசல்மானுக இருந்தும், சிற்பக்கலையை ஆதரித்தார். சித்தூரின் மாபெரு வீரர்களான ஜெய்மால், பட்டா ஆகியோர்

*இப்போது இதனை, புது டில்லியிலுள்ள மத்தியப் பழம்பொருள் கண்காட்சிசாலையினர் வாங்கியுள்ளனர்.

யானைகளின் மேல் அமர்ந்திருப்பதுபோன்று அழகிய சிலைகளை வடிக்குமாறு செய்து, அவற்றினை ஆக்ரா கோட்டை வாயிலில் வைத்தார். பதேபூர் சிக்ரியின் யானைவாயிலில் $12\frac{1}{2}$ அடி உயரமுள்ள பீடங்களின்மீது அமைந்த மாபெரு யானைகளின் உருவங்கள் சிதைந்த நிலையில் இன்றளவும் காட்சியளிக்கின்றன. ஆரம்ப காலத்தில் அந்த யானைகளின் துதிக்கைகள் வாயிலின்மேல் குறுக்கேவந்து பிணைந்திருந்தன. ஜஹாங்கீரும், ராணா அமர்சிங், அவரது புதல்வரான கரன்சிங் ஆகியோரின் உண்மை உருவில் அமைந்த சலவைக்கல் சிலைகளை வடிக்குமாறு செய்து, அவற்றை ஜரோகா தர்ஷனுக்குக் கீழே ஆக்ராவிலிருந்த அரண்மனைப் பூங்காவில் வைக்குமாறு செய்தார். சிற்பக் கலையை ஷாஜஹான் ஆதரித்ததற்கான ஆதாரம் ஏதும் கிடைக்கவில்லை. அக் கலையினை அவுரங்கசீபு அடியோடு வெறுத்தார் என்பதும், டில்லியிலும் ஆக்ராவிலும் இந்த சிலைகளைக் கண்டதுண்டமாக உடைத்தெறியுமாறு கட்டளையிட்டார் என்பதும், பதேபூர்சிக்ரியிலும் ஆக்ராவிலும் உள்ள கல் யானைகளைச் சிதைத்துச் சேதப்படுத்துமாறு ஆணையிட்டார் என்பதும் யாவரும் அறிந்த செய்திகளே. இங்ஙனம் ஆதரவற்ற நிலையில் அக் கலை அழிந்தது.

## ஒப்பனைச் செதுக்கு வேலை (சித்திர வேலை) (Decorative Carving)

ஒப்பனைப் புடைப்புச் சித்திர வேலையை முகலாயர் பெரிதும் விரும்பினர். அவர்கள் தந்த ஊக்கத்தினாலும், அளித்த ஆதரவினாலும் அக் காலத்தில் மேம்பாடுற்றிருந்த அக் கலையைப் பயன்படுத்தி முகலாய மன்னர்கள் தங்களது அரண்மனைகளை அழகுபடுத்தினர். சிக்கந்திராவிலுள்ள அக்பரின் கல்லறையின் மேன்மாடச் சுவர்களின் மீதான நுண்ணயமான சித்திர வேலைப்பாடுகளில் 52 வெவ்வேறான வகைகள் காணப்பெறுகின்றன. தவிர மேகங்கள், செடிகள், மலர்கள், பட்டாம்பூச்சிகள், பல வகை வண்டினங்கள் ஆகியவற்றின் உருவங்களையும், வழக்கார்ந்த படிவாயில் ஒப்பனைக் குடும்பங்களையும் கொண்டு அக் கல்லறையை அணிசெய்துள்ளனர். அக் காலத்தில் உயர்தர முகலாயக் கட்டடங்களுக்குப் புடைப்பியல் சித்திரவேலைப் பாடுகள் இன்றியமையாதனவாகக் கருதப்பெற்றன. கல்லில் செதுக்கப்பெற்ற சலவைக்கல் திரைகளும் அக் காலத்தில் புதுநடைப் பாணியாகக் கொள்ளப்பெற்றன. பதேபூர்சிக்கிரியில் ஷெய்க் சலீம் சிஸ்தியின் (Shaik Salim Chisti) கல்லறையில் காணப்பெறும் சலவைக்கல் திரை அமைப்பும், தாஜ்மஹாலில் உள்ள நினைவுச் சின்னத்தைச் சுற்றிலும் அமைந்த அருமையான வேலைப்பாடு

கொண்ட சலவைக்கல் திரையும், குஜராத்தில் காணப்பெறும் தலை சிறந்த சித்திர வேலைகளுக்கீடான வெளிப்புறச் செதுக்கோவியங்களை, அக்பர் காலத்தும் ஷாஜஹான் காலத்தும் வாழ்ந்த கலைஞர்களால் ஆக்கித்தர முடியுமென்பதற்குச் சான்றாக விளங்குகின்றன.

## பல்வண்ணப் பட்டைக்கலை (Mosaics)

முகலாயரது கட்டடங்களில் பல்வண்ணப் பட்டைக்கலையும், உட்பதித்து ஒப்பனை செய்யும் கலையும் மிகுதியாகப் பயன்பட்டன. அக்பரின் ஆட்சி காலத்தில் பாரசீக வடிவியலுக்கிணங்கப் பல்வண்ணத் துண்டுப்பாளங்களைக்(Tesserae)கொண்டு இணைத்த பட்டைகள் பயன்படுத்தப் பெற்றன. ஆயின், ஜஹாங்கீரின் ஆட்சி காலத்தில் உட்பதித்து ஒப்பனை செய்தல் அல்லது சலவைக்கல்லில் விலையுயர்ந்த கற்களைப் பதித்து அழகுசெய்யும் கலையே (Pietra-dura) சிறப்புற்று விளங்கியது. அதில் சலவைக்கல்லில் அமைந்த குதை குழிகளில் விலையுயர்ந்த கற்களை அல்லது ஓரளவு விலையுயர்ந்த மணிகளை மெல்லிய துண்டுகளாக வெட்டி, ஓரளவு புதைக்கும் முறையைப் பின்பற்றினர். ஆக்ராவிலுள்ள இத்மாத் உத்தெளலாவின் கல்லறையிலும், உதயபுரியின் பிச்சோலா ஏரியின்கண் அமைந்த புகழ்வாய்ந்த ஜக்மந்திர் என்னும் நீர்–அரண்மனையிலும் இத்தகைய சலவைக்கல்லில் மணிகளைப் பதித்து அழகுசெய்யும் கலையை முதலில் பயன்படுத்தியதாகத் தோன்றுகின்றது. ஷாஜஹான் காலத்தில் பிற பல்வண்ணப் பட்டைக்கலைகள் இக்கலையின் முன் ஒளியிழந்தன. டில்லி, ஆக்ரா ஆகிய இடங்களில் அமைந்த கோட்டைகளில் இருந்த ஷாஜஹானின் கட்டடங்களிற் பல, சலவைக்கல்லில் மணிகளைப் பதித்து ஒப்பனை செய்யும் கலையின் சிறப்பு மேலோங்கி நிற்கின்றது. ஷஹாத்ராவிலுள்ள ஜஹாங்கீரின் கல்லறை, லாகூரிலுள்ள ஷீஸ் மஹால், நௌலகா, ஆக்ராவிலமைந்த தாஜ்மஹால் ஆகியவை சலவைக் கல்லில் மணி பதித்து அணிசெய்யும் அலங்காரக் கலையின் அற்புதமான எடுத்துக்காட்டாகும்.

## இசை

பண்டைக்கால இந்திய நாகரிகத்தின் சிறப்பியல்புகளில் முதல் தரமான இசையும் ஒன்றாகும். நம் நாட்டு வேந்தர் பலர் அக் கலையினைப் போற்றி வந்தனர். குப்த அரச குலத்தைச் சார்ந்த சமுத்ர குப்தரைச் சிறப்பாகக் குறிப்பிடலாம். அக் கலையில் மிகுந்த ஆர்வம் கொண்டிருந்த அவர் தம் கையில் வீணையேந்திய நிலையில் தமது

உருவத்தினை நாணயங்களில் பொறிக்குமாறு செய்தார். ஆரம்ப கால முஸ்லீம் சமயச் சட்ட வல்லுநர்கள் இசைக் கலையை ஆதரிக்க வில்லை. அது நல்லதும் அல்ல, கெட்டதும் அல்ல ஷராவினால் மட்டும் அனுமதிக்கப்படுவது என்ற வகையில் அதனை 'மூபா' (Mubah) என அழைத்தனர். இருந்தபோதிலும் 1205 முதல் 1526 வரையிலான சுல்தானியர் ஆட்சி காலத்தில் சில முஸ்லீம் பிரபுக்கள் அதனைப் போற்றி வளர்த்தனர். சிறப்பாக மாளவத்தின் பாஸ் பகதூரும், ஜான்பூரின் ஷார்கி குலத்தினரும் அதனைப் பேணி வளர்த்தனர். முகலாயப் பேரரசர்கள் அக் கலையில் சுவையார்வம் மிக்கிருந்தனர். பாபர் இசையில் வல்லவராக விளங்கினார். அக் கலையில் ஆராய்ச்சி நூல் ஒன்றை அவர் எழுதியதாகக் கூறப் படுகின்றது. ஹுமாயூனும் அதே அளவிற்கு அக்கறை காட்டினார். பண்டைக்கால இந்திய இசையில் அக்பரும் மிகுந்த ஆர்வம் காட் டினார். மாட்சிமை தங்கிய மன்னர் இசையில் மிகுந்த கவனம் செலுத்தினார்; மயங்க வைக்கும் அக் கலையில் வல்லார் அனைவர்க்கும் ஆதரவளித்தார் என அபுல் பாஸல் எழுதினார். அவர் திறமை வாய்ந்த இசைக் கலைஞராகத் திகழ்ந்தார்; நக்கரா அல்லது குடமுடிவு என்னும் இசைக் கருவியை நன்கு வாசிக்க அறிந்தவர். அவர் லால் கலாவந்திடம் ஹிந்தி வாய்ப்பாட்டைக் கற்றார். ஹிந்தி மொழியின் ஓசைகளையும். மூச்சொலிகளையும் கற்றுக்கொண்டார். நாட்டிலுள்ள தலைசிறந்த இசைவாணரைத் தம் அரசவையில் கூட்ட வழிவகைகளை மேற்கொண்டார். வெளிநாடுகளிலிருந்தும் பல இசைக் கலைஞர்களை வரவழைத்தார். அவர் காலத்தில் வாழ்ந்த இசைப் புலவர்களின் எண்ணிக்கை பெருகியது. அவர்களில் இந்துக் கள், இரானியர், துரானியர், காஷ்மீரிகள் ஆகிய அனைவரும் அடங்குவர் என அபுல் பாஸல் குறிப்பிடுவார். அவர்களை ஏழு பிரிவினராகப் பிரித்திருந்தனர். ஒவ்வொரு பிரிவினரும் வாரத்தில் ஒரு நாளைக்குப் பேரரசருக்கும் அரச அவையோருக்கும் இசை விருந் தளித்து இன்ப மூட்ட வேண்டும். இத்தகைய இசைவாணர்களில் 36 கலைஞர்களை அய்னி அக்பரியில் அபுல் பாஸல் குறிப்பிடுகின்றார். அவர்களில் தான் செனும் (Tan sen) மாளவத்தின் முன்னாள் மன்னரான பாஸ்பஹதூரும் மிக்க முக்கியமானவர்கள். அக் காலத் தில் தலைசிறந்த பாடகராக இருந்தவர் தான் சென். அவரைப்பற்றிக் குறிப்பிடும்போது, 'கடந்த ஆயிரம் ஆண்டுகளில் அவர்போன்ற பாடகர் யாரும் தோன்றவில்லை' யென, அபுல்பாஸல் கருதினார். அவர் முதலில் ரேவாவின் அரசரிடம் இருந்தார். ஆனால், 1562-63-ல் அவரை அக்பரின் அவைக்கு அனுப்பவேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. ராஜா மான்சிங் தொமார் குவாலியரில் நிறுவிய இசைப் பள்ளியில் தான் சென் இசை பயின்றார். அவர் சில புது ராகங்களைக் பண்களை) கண்டுபிடித்தாதகக் கூறப்படுகின்றது. அவர் சில ராகங்

களைப் பொய்ப்பித்தார் என்றும், அவற்றில் இந்தளமும் (Hindol) மேகமும் (Megh) அவர் காலத்திற்குப் பின் மறைந்துவிட்டனவென்றும் திறனாய்வாளர் கூறுவர். இத்தகைய குற்றச்சாட்டின் உண்மை எதுவாயினும், 'அக் காலப் பாடகர்களில் தலைசிறந்தவர்' என்னும் புகழ் அவருக்கிருந்தது. அவர் அக்பரின் சேவையில் சேர்ந்த சிறிது காலத்திற்குப்பின் முகமதியரானார். மீர்ஸா என்னும் விருதுப்பெயர் அவருக்கு அளிக்கப்பெற்றது. 1589ஆம் ஆண்டில் இறந்த அவரை குவாலியரில் அடக்கம் செய்தனர். தான் செனுக்கு அடுத்த நிலையில் இருந்த மற்றொரு பெயர்பெற்ற பாடகர் பாபா ராம்தாஸ் என்பவரே. பாய்ஜீ பாவ்ராவும் சமமான புகழ்படைத்தவர். அக்பரது அரசவையில் இருந்த முதல் தரமான இசைக் கலைஞர்களில் சுர்தாஸும் ஒருவராகக் குறிப்பிடப் பெறுகின்றார்.

இசைக் கலையில் அக்பர் காட்டிய ஆர்வமும், அளித்த ஆதரவும் வாய்ப்பாட்டிலும் இன்னிசைக் கருவிகளிலும் மிகுந்த வளர்ச்சி தோன்றுதற்குக் காரணமாயின. அவரது அரசவையில் இந்து முஸ்லீம் இசைக்கலைகள் இணைந்து ஒன்றாயின. அதனால் மாறுபட்ட சங்கீத முறைகளையும் ஒன்றாக இணைத்துத் தேசிய இந்திய இசைக் கலையை உருவாக்கிய பெருமை அக்பரைச் சாரும்.

தமது தந்தையைப்போலவே ஜஹாங்கீரும் இசைக்கலையில் சுவையார்வம் கொண்டிருந்தார். பல முதல்தரமான இசைவாணர்களைத் தமது அரசவையில் வைத்து ஆதரித்து, அவர்கள் அளித்த இசை விருந்தினை அவ்வப்போது கேட்டு மகிழ்ந்தார். அவர் தம் காலத்தில் வாழ்ந்த ஆறு குறிப்பிடத்தகுந்த இசைக் கலைஞர்களின் பெயர்களை இக்பால் நாமா இ ஜஹாங்கீரி தருகின்றது. இரவும் பகலும் பல நூற்றுக்கணக்கான இசைக் கலைஞரும் நாட்டிய நங்கையரும் வாழ்ந்திருந்தனர். ஏழு நாட்களுக்கு ஒரு தரம் அவர்களுடைய முறை வரும். அப்போது அவர்களில் யாராவது ஒருவரை இன்னிசை அல்லது நாட்டிய விருந்து அளிக்க அரசரோ, அரண்மனைப் பெண்டிரோ அழைத்தால், அவர்கள் மாளிகைக்கு வந்து கலை விருந்து தரத் தயாராக இருக்கவேண்டும். அவரவருடைய தரத்திற்கு ஏற்றவாறு அரசர் அவர்களுக்கு உதவிப் பணமளித்தார். இவ்வாறு வில்லியம் பிஞ்ட்ச் (William Fintch) என்பார் எழுதினார். ('Early Travels', W. Foster, பக். 183). ஷாஜஹானும் இசையிலும் பாட்டிலும் பற்றுடையவராக இருந்தார்; அரசவையில் ஏராளமாக இருந்த இசைவாணர்களில் தலைசிறந்தவர்களின் இசையை ஒவ்வொரு நாளும் படுக்கைக்குச் செல்லுமுன் கேட்டு மகிழ்ந்தார். திவானிகாஸில் அன்றாடம் இசை விருந்துகள் நடைபெறுவது வழக்கம். அவற்றில் வாய்ப்பாட்டும் இன்னிசைக் கருவிகளும் முக்கிய

இடத்தைப் பெற்றன. சில சமயங்களில் அக் கலையில் மிகுந்த தேர்ச்சி பெற்றிருந்த ஷாஜஹானும் அவற்றில் கலந்துகொள்வதுண்டு. அவரது குரல் இனிமையானது. இத்தகைய இன்னிசை விருந்து களுக்கு வந்த இவ்வுலகத்தில் நாட்டம் கொள்ளாத புனிதமான சூபிகளும் அருள்தொண்டர்களும் அவரது இன்னிசைக் குரல்கேட்டு ஆனந்தத்தால் புலனுணர்வுகளை இழந்தனர். ('Studies in Mughal India' by Sarkar, பக். 12–13). இசைவாணரை ஷாஜஹான் பெரிதும் ஆதரித்தார். ராம்தாஸும் மஹாபத்ராவும் அவர்தம் அவையிலிருந்த இரு ஒப்பற்ற பாடகர்கள். தமது சமஸ்கிருத மொழி அவைக்களப் புலவரான ஜெகன்னாத் என்பார் ஆடல்சார்ந்த பாடல் ஒன்றைப் பாடியபோது-அவ்விசையைக் கேட்ட பேரரசர் பெரு மகிழ்ச்சியுற்றார் என்றும், பாடகரின் எடைக்கு ஈடான தங்கத்தை அவருக்குப் பரிசாக வழங்கினார் என்றும் கூறப்படுகின்றது.

அவுரங்கசீபும் தமது ஆட்சியின் முதல் பத்து ஆண்டுகளில் தமது மூதாதையர்களைப்போலவே திறமைவாய்ந்த இசைவாண ரின் இசையைக் கேட்டார். அக் கலைக்கு ஆதரவும் தந்தார். அவரது அரசவையில் பல இசைக் கலைஞர்கள் வாழ்ந்துவந்தனர். பல இனிய குரல் படைத்த பாடகர்களும், இன்னிசைக் கருவிகளை மீட்டி மயக்கவல்ல கலைஞர்களும் அவரது அரியணையைச் சுற்றியிருந் தனர் என்றும், முதல் சில (பத்து) ஆண்டுகளில் சில வேளைகளில் அவர்களுடைய இசை விருந்தினை அவர் கேட்டார் என்றும் மஆசிரீ ஆலம்கீரியின் ஆசிரியரான சாகி முஸ்தையது கான் எழுதினார் ('Maasire–i-Alamgri', பக். 526). ஆனால், ஆண்டுகள் செல்லச் செல்ல, தன்னடக்கமும் தன் மறுப்பும் கைக்கொண்ட அவுரங்கசீபு இன்னிசை கேட்பதைக் கைவிட்டார். தமது அரசவையிலிருந்து இசைவாணரை வெளியேற்றினார். ஆயினும் சில எழுத்தாளர்கள் தவருகக்கொண்டதைப் போல, மக்கள் பாடுவதையும், வாய்ப்பாட்டு அல்லது இன்னிசைக் கருவிகளைக் கேட்டு இன்புறுவதையும் அவர் தடைசெய்யவில்லை. எவ்வாறெனினும், அரசவையிலிருந்து இசை வாணர்களை வெளியேற்றியதால் அக் கலையின் வளர்ச்சியில் பெருந் தடை ஏற்பட்டது. அதனால் ஒரு வெள்ளிக்கிழமையன்று வழிபாட் டிற்காகப் பேரரசர் ஜாமி மசூதிக்குச் சென்றுகொண்டிருந்தபோது அவைக்களத்து இசைக் கலைஞர்கள் சவ ஊர்வலத்திற்கு ஏற்பாடு செய்திருந்தனர். அப்போது அழுகையையும் விம்மலையும் கேட்ட பேரரசர் அவர்களுடைய துன்பத்திற்குற்ற காரணம் என்னவென வினவினார். பேரரசரின் ஆணைகளினால் இசைக்கலை இறந்து விட்டது என்றும், அதனைச் சவக்குழிக்குக் கொண்டுசெல்வதாக வும் பதிலளித்தனர். அதற்கு, 'இசைக் கலையின் ஆன்மாவிற்காக அவர்கள் பிரார்த்திக்க வேண்டும். அதனை அடியோடு

புதைத்துவிட்டார்களா எனப் பார்க்கவேண்டும்' என்று அவுரங்க சீபு பதிலளித்தார். அரசர்தம் ஆதரவு இல்லாத இடத்தும் இசையும் நடனமும் தொடர்ந்து செழித்தோங்கின. இசையும் நடனமும் அளிக்கும் இன்பத்தைத் துறப்பதற்கு அரண்மனையைச் சார்ந்த மாதர்கள் ஒப்பவில்லை. அதேபோன்றும் பிரபுக்களும், அரசவையோரும், பிற செல்வர்களும், பாமரரும் மயக்கும் இக் கலைமீது தொடர்ந்து பற்றுக்கொண்டிருந்தனர்.

## கட்டடக் கலை

முகலாயர்கள் பெருங் கட்டடக் கலைஞர்களாகத் திகழ்ந்தனர். பாபர் இந்தியாவின்மீது படையெடுத்து வந்தபோது மத்திய ஆசியக் கட்டடக் கலையும் உள்நாட்டு இந்துக் கட்டடக் கலையும் 300 ஆண்டுகளுக்குமேல் அக்கம்பக்கமாக வாழ்ந்திருந்தன. மத்திய ஆசியக் கட்டடக் கலையில் கவிகைமாடம் (Dome), உயர்ந்த அடுக்குமாடிகள் (Minarets) வளைவுகள், ஆரம்பகால துருக்கியப் படையெடுப்பாளர் கொண்டுவந்த கவிகை மோடுகள் (Vaults) ஆகியவை சிறப்புற அமைந்தன. இந்துக்கட்டடக் கலையில் தட்டையான கூரைகள், குறுகிய தூண் வரிசைகள், பிடிமானக் கொள்கை அடிப்படையில் அமைந்த வளைவுகள், தண்டயக்கட்டின்மீதமர்ந்த சுவர்நிலை அடுக்குப் பேழைகள் (Corbel Brackets) போன்றவை அடிப்படைக் கூறுகளாகும். மத்தியஆசியக் கலை இந்தியாவில் நீண்ட காலமாக வாழ்ந்திருந்தபோதிலும் இந்தியக் கலையின்மீது அது அதிகச் செல்வாக்குச் செலுத்தவில்லை. அதற்குமாறுக, நாட்டிலிருந்த ஆரம்பகால துருக்கியக் கட்டடக் கலையின்மீது அக் கலைபற்றிய இந்தியக் கருத்துகள் மிகுந்த செல்வாக்குச்செலுத்தி வந்தன. அதற்குப் பின்வரும் காரணங்களைக் குறிப்பிடலாம். முதலாவதாக, துருக்கிய மன்னர்கள் இந்தியக் கலைஞர்களையும் சிற்பிகளையும் அமர்த்த வேண்டியிருந்தது. அக் கலைஞர்கள் கட்டட அமைப்புப் பற்றியும் கையாளவேண்டிய முறை பற்றியும் தெளிவான சொந்தக் கருத்துகளைக் கொண்டிருந்தனர். அதனுல் அவர்கள் கடந்த பல நூற்றுண்டுகளாக நாட்டில் வழக்கிலிருந்த கட்டடக் கலை, ஒப்பனைக் கலை சார்ந்த கருத்துகளைத் தங்களை அறியாமலேயே முஸ்லீம் கட்டடங்களில் புகுத்தினர். இரண்டாவதாக, ஆரம்ப காலத்தில் வந்த படையெடுப்பாளர்கள் அநேகமாக அவர்கள் முரட்டுத்தனத்துடன் அழித்த இந்து, சமணக் கோயில்களின் அழிபாடுகளைக் கொண்டே மசூதிகளையும், அரண்மனைகளையும், கல்லறைகளையும் கட்டலாயினர். இதனுல் அவர்கள் மனத்தில் கொண்டிருக்கக்கூடிய அன்னிய உருப் படிமத்தை நடைமுறையில் கொண்டுவரும்போது

மாற்றமேற்பட்டது. மூன்றாவதாக, முஸ்லீம் இந்துக் கட்டடக் கலைப் பணிகளில் குறிப்பிடத்தகுந்த வேற்றுமைகள் காணப்படினும் அவர்களுடைய கட்டடங்கள் சிலவற்றில் ஒத்திருந்தன. அதனால் சில வேளைகளில் துருக்கிய சுல்தான்கள் இந்து சமணக் கோயில்களில் காணப்பெற்ற தட்டையான கூரைகளை அகற்றிவிட்டு அவற்றிற்குப் பதிலாகக் கவிகை மாடங்களையும், அடுக்கு மாடிகளையும் அமைத்து மசூதிகளாக மாற்றினர். இத்தகைய சூழ்நிலை காரணமாக முஸ்லீம் கட்டடக் கலைப்பாணியின்மீது உள்நாட்டுக் கலை தொடர்ந்து செல்வாக்குச் செலுத்திவந்தது. இவ்வகைச் செல்வாக்கு டில்லி சுல்தான்களின் காலத்தில்மட்டுமல்லாது முகலாயர் கால முழுவதும் இருந்துவந்தது. இதனை முகலாயக் கட்டடங்களில் காணப்பெறும் குறுகிய தூண் வரிசைகள், சதுரத் தூண்கள் (Pilasters), தண்டயக் கட்டின்மீதமர்ந்த சுவர்நிலை அடுக்குப் பேழைகள், பிற அணியலங்காரக் கூறுகள் போன்றவற்றில் காணலாம்.

கூர்நனிச்சுவை யுணர்வுகொண்ட பாபர் டில்லியிலும் ஆக்ராவிலும் துருக்கிய, ஆப்கானிய மன்னர் எழுப்பிய கட்டடங்களை மிகுதியாகப் போற்றவில்லை. ஆனால், குவாலியரில் இருந்த அழகிய கட்டடங்களைக் கண்டு அவர் மயங்கினார். அந் நகரத்திலிருந்த மான் சிங், விகர்மஜித் ஆகியோரின் அரண்மனைகளில் எல்லா இடங்களையும் சுற்றிப் பார்த்த அவர், அவை முறையான திட்டமின்றி வெவ்வேறான பிரிவுகளைக்கொண்டு கட்டப்பெற்றிருந்தன என்றாலும், தனியழகு வாய்ந்தவை எனக் குறிப்பிட்டார். குவாலியரில் அமைந்த அரண்மனைகள் பதினாறும் நூற்றாண்டின் முதல் பகுதியில் வாழ்ந்த இந்துக் கட்டடக் கலைக்கு அழகிய எடுத்துக்காட்டுகளாகத் திகழ்ந்தன. மேலும், பாபர் தமக்கு வேண்டிய அரண்மனைகளைக் கட்டிக்கொள்ள விழைந்தபோது அவர் பின்பற்றுதற்கேற்ற முன்மாதிரியாக அவை அமைந்தன. ஆக்ரா, சிக்ரி, பயானா, தோல்பூர், குவாலியர், அலிகார் (Koil) ஆகிய இடங்களில் கட்டடங்களை எழுப்புதற்காக நூற்றுக்கணக்கான தொழிலாளர்களிடம் வேலைவாங்கினார். ஆயின், அவர் அவ்விடங்களில் அரண்மனைகளையோ, பிற பொதுமனைகளையோ கட்டவில்லை. மாறாகக் காட்சிமாடங்கள், நீராடும் பொய்கைகள், கிணறுகள், குளங்கள், நீர் ஊற்றுகள் ஆகியவற்றையே அமைக்கலானார். அவரது அரண்மனைகள் காலமெனும் காலனின் அழிவுச் சக்திக்குமுன் நெடுநாட்கள் நிலைக்கமுடியாத தற்காலிக அமைப்புகளாகத் தென்படுகின்றன. அவரது கட்டடங்களில் இரண்டுமட்டுமே அழியாது நின்றன. அவை பானிப்பட்டில் காபூலிபாக்கில் கட்டப்பெற்ற பெரிய மசூதியும், ருஹில்கண்டில் சம்பல் என்னுமிடத்தில் அமைந்த ஜமா மசூதியும் ஆகும். அவ்விரண்டும் 1526ஆம் ஆண்டில் கட்டப்பெற்றன.

மூன்ருவது கட்டடமாகிய மசூதியும் பாபரின் ஆணைகளின்படி அபுல் பாகியினுல் அயோத்தியில் கட்டப்பெற்றது. ஆயின், இவற்றில் எதுவுமே தனித்தன்மை வாய்ந்த கட்டடக்கலைச் சிறப்புடையவை யன்று. கட்டட அமைப்புத் திட்டங்களில் துணைபுரிவதற்காக சினுன் (Sinan) எனும் தலைசிறந்த அல்பேனியக் கட்டடக் கலைஞரின் சீடர் களில் ஒருவரை கான்ஸ்டான்டிநோபிளிலிருந்து வரவழைக்க பாபர் எண்ணங்கொண்டார். ஆயின், அவ்வெண்ணத்தை அவர் கைவிட்ட தாகத் தெரிகின்றது. ஹுமாயூனும் அதே அளவிற்குக் கட்டடக் கலையில் பற்றுதல்கொண்டிருந்தபோதிலும், தலைசிறந்த கட்டடம் எதையும் அவர் தமது நினைவுச்சின்னமாக விட்டுச்செல்லவில்லை. டில்லியிலிருந்த தீன் பஞ (Din Panah) எனும் அவரது அரண்மனை தரத்தைப்பற்றியோ, நிலைத்து நிற்கும் தன்மைபற்றியோ சிறிதும் கருதாது விரைவில் கட்டப்பெற்ற ஒன்ருகும். அது அநேகமாக அவரது பகைவரான ஷெர்ஷாவினுல் அழிக்கப்பெற்றிருக்கவேண் டும். ஆக்ராவில் ஒன்றும், ஹிஸ்ஸாரில் ஃபடேஹாபாத் என்னு மிடத்தில் ஒன்றுமாக அவர் கட்டிய இரு மசூதிகள் இன்று பாழடைந்து கிடக்கின்றன. மேலும், அவற்றின் கட்டட அமைப்பில் மூல முதற் தன்மை காணப்பெறவில்லை. எவ்வாறெனினும், தங்களது சுவை யுணர்வு, அனுபவம் ஆகியவற்றின் துணைகொண்டு பாபரும் ஹுமாயூனும் டில்லியை யாண்ட சுல்தானியர் காலத்தில் இருந்த தைக் காட்டிலும் அழகிய கட்டடங்களை எழுப்புதற்குச் சாதக மான மரபு வழியினை நிலைநாட்டுவதற்கு மறைமுகமாக உதவினர் எனலாம்.

அக்பருடைய ஆட்சிக் காலத்திற்கு முன்னுல் இந் நாட்டில் இருந்த இந்திய முஸ்லீம் கட்டடக்கலைக்கு மிகச் சிறந்த எடுத்துக் காட்டாக விளங்கியது ஷெர்ஷாவின் வீருர்ந்த கல்லறை மாடம் எனக் கூறலாம். அது பீஹாரில் சசாரம் என்ற இடத்தில் ஓர் ஏரியின் நடுவே அமைந்த உயர்ந்த ஒரு சதுரப் பீடத்தின்மீது ஷெர்ஷாவால் கட்டப்பெற்ற ஒன்ருகும். அக் கட்டடத்தின் அமைப்பு முகம்மதிய ருடையதாக இருப்பினும், அதன் புறத்தில் இந்துத் தண்டயக் கட்டு களினுலும், சித்திர வேலைப்பாடமைந்த அச்சுருக்களினுலும் அலங் கரிக்கப் பெற்றிருக்கின்றது. அது துக்ளக் கட்டடங்களின் எளிமைத் தோற்றத்திற்கும் ஷாஜஹானின் ஒப்பற்ற கலைப்படைப்பின் பெண்மை யெழிலுக்கும் இடைப்பட்டது என்பது திறனுய்வாளரின் கருத்து. தாம் அழித்த ஹுமாயூனின் தீன் பஞ கோட்டைக்கருகில் புராணு கிலா என்று பேர்கொண்ட மற்றொரு சிறந்த கட்டடத்தை ஷெர்ஷா எழுப்பினுர். புராணு கிலாவின் ஒரு பகுதி மட்டிலுமே காலத்தின் கொடுமையைத் தாங்கிநின்றது. அதனுள் கட்டப்பெற்ற கிலா-இ-குஹ்னு மஸ்ஜித் என்று பெயர்படைத்த மசூதி, 'அதன்

அதியற்புதமான கட்டடக் கலைப் பண்புகளுக்காக வடஇந்தியக் கட்டடங்களுக்கிடையே உயர்ந்த இடத்தைப் பெறத்தக்கதாயுள்ளது.'

ஷெர்ஷாவின் மறைவிற்கும், அக்பர் அரசு எய்தியதற்குமிடையேயான காலத்தில் தரமான கட்டடமேதும் எழவில்லை. ஆட்சிப் பொறுப்பினைத் தாமே ஏற்ற அக்பர், நாட்டில் அமைதியையும் ஒழுங்கையும் நிலைநாட்டிய பிறகு பெருமளவில் கட்டடங்கள் தோன்றுவதற்கான சாதகமான சூழ்நிலை உருவாகியது. கட்டடக்கலையில் பேரரசர் கொண்ட ஆர்வமும் அளித்த ஆதரவும் பல சிறப்புவாய்ந்த நினைவுச் சின்னங்கள் எழுவதற்குக் காரணமாயிருந்தன. மாட்சிமை தங்கிய மன்னர், நேர்த்தியாகக் கட்டடங்களை அமைக்கத் திட்டமிட்டார்; 'தமது மனத்திலும் இதயத்திலும் உறைந்து கிடந்த எண்ணத்திற்குக் கல், களிமண் இவற்றைக் கொண்டு உருவளித்தார்' என அவைகளைப்பற்றி அபுல் ஃபாஸல் பொருத்தமாகக் கூறினார். அப்போதிருந்த கட்டடக்கலையின் பல பாணிகளின் வகை நுணுக்கங்கள் யாவற்றையும் அவர் அறிந்திருந்தார். அவர் அளித்த புதிய கருத்துகளுக்கு அவரைச் சூழ்ந்திருந்த கட்டடக்கலை வல்லார்கள் செயல் முறையிலான வடிவம் கொடுத்தனர். ஆக்ரா, பதேபூர் சிக்ரி, லாகூர், அலகாபாத், அட்டாக் முதலான இடங்களில் அவர் எழுப்பிய கட்டடங்களில்; அவர்தம் ஆளுமை பொதிந்து கிடக்கின்றது. அக்பர் உருவாக்கிய கட்டடக்கலையின் பாணி இந்து, முஸ்லீம் பாணிகளின் சேர்க்கையினை எடுத்துக்காட்டுவதாக அமைந்தது. அதனை இந்து, முஸ்லீம் பாணி அல்லது கட்டடக்கலையின் இந்திய தேசீயப் பாணி என அழைக்கலாம்.

அக்பரின் மாற்றுந்தாயான ஹாஜி பேகத்தின் மேற்பார்வையில் டில்லியில் கட்டப்பெற்ற ஹுமாயூனின் கல்லறைதான் அந்தப் பேரரசரின் ஆட்சியில் எழுந்த முதல் பெருங்கட்டடமாகும். ஹாஜி பேகம் பாரசீகப் பற்றுக்கொண்டவராதலாலும் அக் கல்லறையைக் கட்டிய மீராக் மீர்ஸா கியாஸ் என்பவர் ஒரு பாரசீக நாட்டவராதலாலும் அது பாரசீகப் பாணியிலேயே அமைந்தது; உயர்ந்த எருக்கத்தின்மீது பக்கங்கள் ஓரளவு புடைத்த இருவகை மாடங்கொண்ட இந்தியக் கட்டடங்களின் மிகப் பழைய எடுத்துக்காட்டாக அது விளங்கியது; சாமர்கண்டில் காணப்பெற்ற தைமூர், பீபி கானம் ஆகியோரின் கல்லறைகளை ஒத்திருந்தது. பதினோராம் நூற்றாண்டின் இறுதியில் டமாஸ்கஸ் நகரத்தில் எழுந்த உமாயித் மசூதியின் பாணியைக் கொண்டதாகக் கூறப்படுகின்றது. காலமுறைப்படி அடுத்து வந்தவை அக்பரே திட்டமிட்டு மேற்பார்வை செய்து கட்டிய ஆக்ரா, லாகூர் ஆகிய இடங்களில் அமைந்த அரண்மனைக் கோட்டைகளே. அவர் கட்டிய ஆக்ரா கோட்டையின் மதில்கள்

70 அடி உயரமுள்ளவை. ஏறக்குறைய ஒன்றரை மைல் சுற்றளவுள்ளவை. அவற்றில் இரு வாயில்கள் இருந்தன. மேற்புற வாயில் டில்லி வாயில் எனப் பெயர் பெற்றது. அந்த முக்கிய வளைவாயிலின் இருபுறத்தும் இரு கல்யானைகள் இருந்ததால் அது யானை வாயில் என்றும் அழைக்கப்பெற்றது. சிறிய வாயிலான மற்றொன்று அமர்சிங் வாயில் எனப் பெயர் பெற்றது. இத்தகைய மதிலுக்குள் ஒருவகைச் சிவப்புக் கல்லினால் ஆன 500 கட்டடங்களை அக்பர் கட்டுவித்தார். அவற்றில் பல ஷாஜஹானால் அழிக்கப்பெற்றன. அவை இருந்த இடத்தில் வெண்மையான சலவைக்கல்லினால் ஆன காட்சி மாடங்களை அப் பேரரசர் கட்டினார். ஆக்ரா கோட்டைக்குள் அமைந்த அக்பர்காலக் கட்டடங்களில் வெண்மையான வங்காளி பரிகத்தோடு (bastion) கூடிய அக்பர் மஹாலும், பட்டத்து இளவரசருக்கும் அவரது குடும்பத்தாருக்கும் எனக் கட்டப்பெற்ற ஜஹாங்கீர் மஹாலும் மிகச் சிறப்பு வாய்ந்தவை. இவ்வரண்மனைகள் செம்மணற் பாறைக் கற்களைக் கொண்டு அமைந்தன. நடுவில் சதுரமான முற்றத்தைச் சுற்றிலும் இரண்டு அடுக்குகளைக்கொண்ட அறைகளை அமைத்துக் கட்டப்பெற்றன. இவ்விரு அரண்மனைகளிலும் கூடுமான வரையில் வளைவுகளைப் பயன்படுத்தவில்லை. மாறாக ‘தூலம், தண்டயம்’ ஆகியவற்றை வைத்துக் கட்டும் முறையே கையாளப் பெற்றது. சிறிது காலத்திற்குப்பின் கட்டப்பெற்ற ஜஹாங்கீரி மஹாலில் நேர்த்தியான நுண்ணிய கைவேலைப்பாடுகளையும் தூலங்களைத் தாங்கி நிற்கும் செதுக்கப்பெற்ற கல்லினால் ஆன தண்டயங்களையும் காணலாம். அது இந்து அரசரின் அரண்மனை என்று சொல்லத்தக்க அளவிற்குக் கட்டட அமைப்பிலும் அணிசெய்வதிலும் இந்துக் கட்டடமாக இருந்தது. ஆக்ரா கோட்டையின் பொதுப் பண்பு மான்சிங் காலத்து குவாலியர் கோட்டையை ஒத்திருந்தது. “யானை வாயில், அமர்சிங் வாயிலின் இணைப்புகள், கோட்டை மதிலின்மேல் எழுந்த அரண்மனைகள், இவ்வரண்மனைகளின் அமைப்பு, இவற்றுடன் வேறு சில வளைவு உருவங்கள் ஆகிய அனைத்தும் நாற்பது ஆண்டுகளுக்கு முன்னர் பாபரின் போற்றுதலுக்கு உரியதாயிருந்த இராஜபுத்திரக் கோட்டையை, அன்னாரைக் காட்டிலும் நல்வாய்ப்பு மிகுந்த அவரது பேரன் முன்மாதிரியாகக் கொண்டார் என்பதைக் குறிக்கின்றன (Cambridge History of India, Vol. IV, பக். 538).

ஆக்ரா கோட்டையைக் கட்டிய அதே சமயத்தில் லாகூர் கோட்டையும் கட்டப்பெற்றது. அதனுள் அமைந்த கட்டடங்கள் ஆக்ராவிலுள்ள ஜஹாங்கீரி மஹாலை ஒத்திருந்தன. ஆயின், அழகு செய்வதில் செறிவும், கட்டுப்பாடு குறைந்த நிலையும் ஜஹாங்கீரி மஹாலிலிருந்து லாகூர் கோட்டையில் அமைந்த கட்டடங்களை

வேறுபடுத்திக் காட்டின. தண்டயங்களில் யானைகள், சிங்கங்கள் ஆகியவற்றின் உருவங்களும், மயில் வடிவிலமைந்த ஒப்பனைப் பட்டயங்களும் மிகுந்திருந்தன. அவற்றிலிருந்து இந்துத் தொழிற் கலைஞர்களின் ஆதிக்க மிகுதியையும், முகலாய மேற்பார்வை யாளரின் சகிப்புத் தன்மையும் புலப்படுகின்றன. பின்னுளில் கட்டப் பெற்ற அலகாபாத் கோட்டையில் உள்புற மதில்கள் உள்ளிட்ட பல கட்டடங்கள் மறைந்துவிட்டன. எவ்வாறெனினும், அக்பருடைய புதிய தலைநகரமான ஃபதேபூர் சிக்ரியே கட்டடக் கலையில் அவர் கொண்ட வெற்றிக்குச் சிகரமாக அமைந்தது. அதில் ஏராளமான கட்டடங்கள் எழுந்தன. அவற்றில் ஆவணக்களரி, திவான்-இ-காஸ், திவான்-இ-அம், கருவூலம், பாஞ்ச் மஹால் மரியமின் மாளிகை, துருக்கிய சுல்தானுவின் மாளிகை, பேரரசரின் பள்ளியறைகள், நூலகம், ஜோதி பாய் அரண்மனை, பீர்பால் அரண்மனை ஆகியவை சிறப்பு வாய்ந்தவை. மதிலுக்கு வெளியே புலாந் தர்வாஜா என்னும் உயர்ந்த வாயிற்கூடத்துடன் கூடிய ஜாமி மசூதி கம்பீரமாக நிற்கின்றது. அம் மசூதியின் மதில்களுக்குள் வெண் சலவைக் கல்லினுல் ஆன ஷெய்க் சலீம் சிஸ்தியின் கல்லறை அமைந்துள்ளது. இத்தகைய கட்டடங்களில் பெரும்பாலானவற்றில் கலவைப் பாணி காணப்பெறுகின்றது. அதாவது, ஓரளவு முஸ்லிம் கலைப்பண்பும், பெருமளவில் இந்துக் கலைப்பண்பும் இணைந்துள்ளன. திவான்-இ-காஸில் உள்ள தூணின்மீது சிகரம் போன்று அமைந்த கும்பலான தண்டயங்கள், பாஞ்ச் மஹாலிலும், ஜோதிபாய் அரண்மனையிலும் புடைப்புச் சிற்பமாக அமைந்த மணி, சங்கிலி ஆகியவை, மரியம் மாளிகையில் காணப்பெறும் விலங்குகள் போன்றவற்றின் சித்திர உருவங்கள் முதலான சில ஒப்பனைக் கூறுகள் இந்து, சமணக் கோயில்களில் இருப்பனவற்றின் படிகளாகக் காட்சியளிக்கின்றன. ஒப்பற்று விளங்கும் கட்டடங்களில் திவான்-இ-காஸிம் ஒன்று என்பது திறனுய்வாளரின் கருத்து. சலவைக் கல்லாலும், செம்மணற் பாறைக் கல்லாலும் கட்டப்பெற்ற புலாந் தர்வாஜா, ‘இந்தியாவிலேயே முழு நிறைவான கட்டடங்களில் ஒன்று.’ பதேபூர் சிக்ரியைக் கட்டி முடிக்கப் பதினேர் ஆண்டுகள் (1569-1580) பிடித்தன. இப்போது அது பாழான இடமாக இருப்பினும், மாபெரும் மனிதரின் ஆளுமையை மனத்தில் நன்கு பதியும் வகையில் வெளிப்படுத்து கின்றது.

வேறு பல குறிப்பிடத் தகுந்த கட்டடங்களையும் அக்பர் கட்டு வித்தார். அட்டாக் கோட்டை, மெர்டாவிலும் ஆம்பரிலும் அமைந்த மசூதிகள், வேறு சில அரண்மனைகள் அவற்றில் அடங்கும். அவரது புதல்வர் கட்டிமுடித்த சிக்கந்தரா கல்லறைக்கான திட்டத்தை

அவரே வகுத்தார். இவையே யன்றிப் பல சராய்களையும் பள்ளிகளையும் கட்டினர். பல ஏரிகளையும், கிணறுகளையும் வெட்டினர்.

அக்பர் உருவாக்கிய கட்டடக் கலையின் புதுப்பாணி, இராஜஸ்தானத்து இராஜபுத்திர மன்னர்களின் கட்டடங்கள் உள்பட, நாடு முழுவதிலும் எழுந்த கட்டடங்களில் பெருத்த மாறுதலை உண்டு பண்ணியது. அக்பரின் ஆட்சிக்காலத்தில் ஆம்பர், பிகானிர், ஜோத்பூர், ஓர்ச்சா, தாதியா போன்ற இடங்களில் கட்டப்பெற்ற அரண்மனைகளில் முகலாயக் கலையின் செல்வாக்கினைத் தவருது காணமுடியும். அக்பரது கட்டடக் கலையின் தேசீயமயமாக்கும் சத்தியிலிருந்து இந்துக்களின் கோயில்கள்கூடத் தப்பமுடியவில்லை. பிருந்தாவனத்தில் எழுந்த இந்து திருநிலை மாடங்கள் அக்கால முகலாயக் கலைப் பாணியிலிருந்து சில பண்புகளைக் கடனுகப் பெற்றிருந்தன என்பது தெளிவு.

கட்டடக் கலையைக்காட்டிலும் சித்திர ஓவியங்களிலும், பூங்காக்களிலும் ஜஹாங்கீர் மிகுந்த பற்றுதல் கொண்டிருந்த காரணந்தால் முகலாயரது கட்டடக் கலை வளர்ச்சியில் ஒருவிதத் தடையேற்பட்டது. அவர் சில கட்டடங்களைக் கட்டினர். ஆனல், அவை அவரது தந்தையின் கட்டடங்களைவிடத் தரத்தில் தாழ்ந்தவையாக இருந்தன. இருப்பினும், ஜஹாங்கீரின் கட்டடங்களிற் சில தனித்த சிறப்பு வாய்ந்தவை. நூர்ஜஹான் ஆக்ராவில் எடுத்த இதமாத்-உத்-தெளலாவின் கல்லறை அவர் காலத்துத் தலைசிறந்த கட்டடமாக விளங்கியது. அதனைச் சலவைக்கல் கொண்டு கட்டி ஓரளவு விலையுயர்ந்த கற்களைப் பதித்து ஒப்பனை செய்யும் கலையினுல் அணி செய்தனர். முழுதும் வெண் சலவைக்கல்லினுல் கட்டி ஒளிமணிக் கற்களைப் பதித்து ஒப்பனை செய்து அழகு செய்யப்பெற்ற முதல் முகலாயக் கட்டடமும் அதுவே. ஒப்புயர்வற்ற கலைத்திறனை விளக்கவல்ல கலைப்பொருளின் எடுத்துக்காட்டாக விளங்கும் தன்னிகரற்ற கட்டடக் கலை சார்ந்த படைப்பு என்று பார்த்தாலும் அல்லது தணியாத தந்தைப் பற்றின் கலைசார்ந்த சின்னமாக வைத்துப் பார்த்தாலும், அக்காலத்து முகலாயரிடம் குடிகொண்ட அழகுணர்ச்சிக் கோட்பாடுகளின் மேன்மையை இதமாத்-உத்-தெளலாவின் கல்லறையின் ஒவ்வொரு பகுதியும் வெளிப்படுத்துகின்றது (Percy Brown, Cambridge History of India, Vol. IV, பக். 553). அடுத்தபடியாக சிக்கந்தராவிலுள்ள அக்பரின் கல்லறையைக் குறிப்பிடலாம். அக்பரே அதனைக் கட்டத் திட்டமிட்டபோதிலும் அது 1605 முதல் 1612 வரையில் ஜஹாங்கீரின் மேற்பார்வையிலேதான் கட்டி முடிக்கப்பெற்றது. அது ஐந்து மொட்டை மாடிகளைக் கொண்டிருந்தது. அவை மேலே செல்லச் செல்ல குறுகின. அவற்றின்

மீது கவிகை மாடங்கள் காணப்படவில்லை. அதனால் பொதுவாகக் கவிகை மாடமாக அமையும் உயர்மாடத்தில் சமாதிச் சின்னம் வைப்பதற்காகக் கட்டப்பெறும் பண்டைப் பண்புள்ள முஸ்லீம் பாணியிலிருந்து அக்பரின் கல்லறை மாறுபட்டிருந்தது. புத்த விஹாரங்களின் பாணியில் அக் கல்லறை கட்டப்பெற்றது எனச் சில திறனாய்வாளர் கருதுகின்றனர். அக் கட்டடத்தின் திட்டத்தில் மேல்மாடியில் கவிகை மாடமும் சேர்ந்திருக்கலாம். ஆயினும், அதனைக் கட்டாமல் விட்டிருக்கலாம். ஜஹாங்கீரே, லாகூருக்கு அருகேயுள்ள ஷஹாத்ரா என்னுமிடத்தில் தமது கல்லறையைத் தாமே திட்டமிட்டு அமைத்தார். அக்பரது கல்லறைக்குப் பின் அது கட்டப்பெற்றது. அதைவிட அளவில் சிறியதாக இருந்தது, அதன்மேல் சலவைக் கல்லினால் ஆன காட்சி மாடம் ஒன்றும் கட்டப்பெற்றது. ஆயின், சீக்கியருடைய ஆதிக்கம் ஏற்பட்டபோது அவர்கள் அம் மாடத்தினை அழித்தனர். மணியிழைத்த சலவைக் கற்களாலும், வண்ணப்பட்டை ஓவியங்களாலும் அக் கல்லறையின் உட்புறம் அணிசெய்யப்பெற்றது. ஒப்பனை செய்வதில் பளபளக்கும் ஓடுகள் முக்கிய இடத்தைப் பெற்றன. ஆயினும், முழுக்கட்டடத்தின் அமைப்புப் பயனற்றதாக இருந்தது என பெர்ஸி பிரௌன் (Percy Brown) குறிப்பிடுவார்.

ஷாஜஹான் காலத்தில் முகலாயக் கட்டடக் கலையானது உச்ச உயர் நிலையை அடைந்தது. ஆக்ரா, லாகூர், டில்லி, காபூல், காஷ்மீரம், ஆஜ்மீர், காந்தாரம், அகமதாபாத் ஆகியவற்றிலும் வேறு சில இடங்களிலும் வெண்சலவைக் கல்லினால் ஆன அரண்மனைகள், மசூதிகள், கல்லறைகள், காட்சி மாடங்கள் ஆகியவற்றை அவர் கட்டுவித்தார். ஆக்ராவிலும் லாகூர்க் கோட்டையிலும் இருந்த அக்பரது செம்மணற்பாறைக் கல்லினால் கட்டப்பெற்ற பல கட்டடங்களை இடித்துவிட்டு அவற்றிற்குப் பதிலாகச் சாம்பரின் அருகே அமைந்த மக்ரணு (Makrana) கற்சுரங்கங்களிலிருந்து ஏராளமாகக் கிடைத்த வெண்சலவைக் கற்களைக்கொண்டு பல கட்டடங்களை எழுப்பினர். ஆக்ரா கோட்டையில் ஜஹாங்கீரி மஹாலுக்கு வடக்கேயிருந்த அவர்தம் பாட்டனார் காலக் கட்டடங்கள் பலவற்றையும் இடித்துவிட்டு அவை இருந்த இடத்தில் திவானி ஆம், திவானி காஸ், காஸ் மஹால், ஷீஷ் மஹால், முஸாமன் பர்ஜ், மாச்சி பவன், மோதி மஸ்ஜித் அல்லது முத்து மசூதி ஆகியவற்றைக் கட்டினர். ஒன்றையடுத்து ஒன்றாக அமைந்த பல இரட்டைத் தூண் வரிசைகளோடு திவானி ஆம் மிக நேர்த்தியான கட்டடமாகத் திகழ்ந்தது. வன்கண்மையுடைய காப்பரண்மேல் தொங்கும் தேவ கன்னியின் வனமாளிகைபோல முஸாமன் பர்ஜ் காட்சியளித்தது. குற்றமற்ற தன்மையினாலும் பல கூறுகள் திறமையோடு ஒழுங்குற

அமையப்பெற்று இருப்பதாலும் முத்து மசூதி முகலாயப் பாணியின் உன்னத நிலையைப் பிரதிபலிப்பதாக அமைகின்றது. தூய்மைக்கும், அற்புத அழகிற்கும் ஆக்ரா கோட்டையில் அமைந்த இவ்வெண் சலவைக்கல் மசூதியைக் காட்டிலும் சிறந்த கட்டடம் வேறெதுவுமில்லை. ஆக்ராவிலுள்ள ஜமா மஸ்ஜித் மற்றொரு குறிப்பிடத்தகுந்த கட்டடமாகும். அதன் மதிற்சுவர்களின்மேல் பல உருவ அளவு கொண்ட அழகிய திறந்த கூடாரங்களின் வரிசையைக் காணலாம். அதைப்போலவே லாகூர் கோட்டையில் ஷாஜஹான் பல குறிப்பிடத் தகுந்த மாறுதல்களைச் செய்தார். அதன் வடமேற்குப் பகுதியில் நாற்பது தூண்களைக்கொண்ட மண்டபம் (திவானி ஆம்), முஸாமன் பர்ஜ், ஷீஷ் மஹால், நௌலகா, குவாப்கா ஆகியவற்றையும் பிற கட்டடங்களையும் அவர் எழுப்பினார். டில்லிக்கு அருகே ஷாஜஹான்பாத் என்னும் புதிய நகர மொன்றிற்கு அடிகோலினார். அங்கே செங்கோட்டையெனப் பெயர்பெற்ற கோட்டை அரண்மனையைக் கட்டினார். அக் கோட்டையினுள் சலவைக் கல்லினால் ஆன பல அழகிய கட்டடங்களை எடுப்பித்தார். அவற்றுள் முதன்மையானவை, மோதிமஹால், ஹீராமஹால், ரங்மஹால் ஆகியவற்றோடு அரசாங்க அலுவலகக் கட்டடங்களான திவானி ஆம், திவானி காஸ், இசையரங்கம் சிறு அரசாங்க அலுவல் மனைகள் கடைத்தெருக்கள் போன்றவையாம். ஒவ்வோர் அரண்மனையின் முன்புறத்திலும் மலர்ப் பாத்திகளைக் கொண்ட தோட்டம், கால்வாய், அணிசெய்யும் நீரூற்றுகள் ஆகியவை அழகூட்டின. அடுக்கடுக்கான மொட்டை மாடிகளும் ஒளிவிடும் கவிகை மாடங்களும் தொங்குவது போன்ற முகப்பு மாடிகளும் அக் கட்டடங்களின்மீது அமைந்திருந்தன. துளையிட்ட திரைகளையும் சுவர் ஓவியங்களையும் கொண்டு ஒப்பனை செய்து அழகுபடுத்தப்பெற்றன. அரண்மனைகளின் தரையிலும் பிற மனைகளின் தரையிலும் சலவைக்கல் பரவியிருந்தன. ஷாபர்ஜிலிருந்து அரண்மனைக்கு வந்த நஹாரி பிஷிஷ்ட் அல்லது சுவர்க்க நீரோடையிலிருந்து அரண்மனையின் பல பகுதிகளுக்கு நீர் கிடைத்தது. நீரூற்றுகளுக்கும் அதிலிருந்து நீர் விடப்பெற்றது. இத்தகைய நீரூற்றுகளில் ரங்மஹாலின் நடுப்பகுதியில் அமைந்த நீரூற்றே தலைசிறந்தது. அரண்மனைகளின் அழகிய அமைப்பும், அவற்றின் வழக்கு மீறிய வளமான கலைநய மிக்க ஒப்பனையும் அவற்றில் ஒன்றன் சுவர்மீது பொறிக்கப்பெற்ற கல்வெட்டுச் செய்தி நேர்மையானது என்பதை விளக்கவல்லன என்று திறனாய்வாளர் கருதுவர். பின்வரும் அக் கல்வெட்டுச் செய்தி குறிப்பிடத்தக்கது :

> “மண்ணுலகில் சுவர்க்கம் ஒன்று
> இருக்குமானால், இதுதான் அது,
> இதுதான் அது ; இதைத் தவிர
> வேறெதுவுமில்லை”

அக் கோட்டைக்குச் சற்றுத் தொலைவில் நகரின் மதில்களுக்குள்ளேயே டில்லியின் ஜமா மசூதியை ஷாஜஹான் கட்டினார். அது பேரழகு வாய்ந்த பெருங்கட்டடம். அதன் அமைப்பில் கம்பீரமும் ஒருவகை வீறுப்பும் காணப்பெறுகின்றன. ஆயினும், ஷாஜஹானின் கட்டடங்களில், ஒப்பற்று விளங்குவது ஆக்ராவிலுள்ள புகழ்பெற்ற தாஜ்மஹாலே. அது உலகிலுள்ள கட்டடக்கலை விநோதங்களில் ஒன்றாகக் கருதப்பெறுகின்றது. அதனைக் கட்டுதற்கு 4½ மில்லியன் பவுன்கள் செலவாயின. 1631ஆம் ஆண்டில் துவங்கிய அதன் கட்டுமான வேலைகள் 1653ஆம் ஆண்டில் முடிவுற்றன. 'அது ஐரோப்பிய, ஆசிய மேதைகளின் இணைப்பினால் வந்த விளைவு' என்ற வரலாற்று அறிஞரான ஸ்மித் என்பாரின் கருத்தை அறிஞருலகம் இப்போது ஏற்பதில்லை. உஸ்காத் அஹ்மத் என்பாரே அதன் அமைப்புத் திட்டத்தை உருவாக்கியவர். அதனைக் கட்டுவதற்கு உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் இருந்துவந்த பல தொழிற்கலைஞர்களும் சித்திரக் கையெழுத்து வல்லுநர்களும் உதவியாக இருந்தனர். 'அதன் கட்டடப் பகுதிகளை அமைக்கும் பொறுப்பு முக்கியமாக முகம்மதியர் கையிலேயே இருந்தது என்பதையும் ஒப்பனை செய்யும் வேலை முக்கியமாக இந்துத் தொழிற்கலைஞர்களிடமே இருந்தது என்பதையும், சிறப்பாக மணியிழைத்த சலவைக்கல் ஒப்பனை செய்யும் கடினமான பணியை கன்னோசியிலிருந்து வந்த ஒரு இந்துத் தொழிற்கலைஞர் கூட்டத்தாரிடம் ஒப்படைத்திருந்தனர் என்பதையும் குறிப்பிடலாம், என்று பெர்ஸி பிரௌன் எழுதுகிறார் (Cambridge History of India, Vol. IV, பக் 564). கட்டட அமைப்பில் முக்கியமாகப் பாரசீகப் பாணியைக்கொண்ட அக் கல்லறை, இந்துக் கட்டடக்கலை, ஒப்பனைகள் ஆகியவற்றின் பண்புகள் சிலவற்றையும் தன்னகத்தேகொண்டு விளங்குகின்றது. பிரதான கவிகை மாடத்தின் உருவ அமைப்பு தைமூரிய கட்டடங்களில் இருந்து வந்ததே. ஜெரூஸலத்திலிருந்த பாறைக் கவிகை மாடமே அதன் மூல மாதிரியாகும். ஆயின், மற்றொரு புறத்தில் இருக்கும் அகன்ற குழிவான இணைப்புகள் உள்நாட்டைச் சார்ந்தவை. இந்துக் கோயில்களின் வளைகூரைகளாக அமைந்த கட்டுமான வேலை சார்ந்த ஒன்றன்மீதொன்றான வளையங்களிலிருந்து அவை வந்தன (Cambridge History of India. Vol. IV, பக். 565). கட்டட அமைப்புத் திட்டத்திலும், அத்திட்டத்தை நிறைவேற்றியதிலும் தாஜ்மஹால் மறுவற்றது. ஒப்பனைகளின் தூய தன்மையாலும், அது கட்டப்பெற்றுள்ள பால்வண்ணச் சலவைக்கல்லாலும் இவற்றிற்கும் மேலாக அதனை எழுப்பத் தூண்டிய கணவன் மனைவிக்குரிய காதலாலும் அது மனத்தில் ஆழப் பதியக்கூடியதாக அமைந்துள்ளது. அதனால் அதனைக் கல்லில் எழுந்த கவிதை எனக் கண்டோர் விளக்கினர்.

ஷாஜஹான் மரணத்திற்குப் பிறகு முகலாயக் கட்டடக்கலை வேகமாகச் சீர்குலையத் தொடங்கியது. அவருக்குப் பின் வந்த அவுரங்கசீப் அதிகமாக ஒன்றும் கட்டவில்லை. அவர் எழுப்பிய சில கட்டடங்களும் மிகச் சாதாரணமானவையாகவும் தரம் குறைந்தனவாகவும் இருந்தன. அவுரங்கபாத்தில் தமது அரசியார் ரபியா-உத்-தௌரானியின் கல்லறையை அவுரங்கசீப் கட்டினார். ஆயின், அதுவும் இடைப்பட்ட தரங்கொண்டதே. அது கீழ்த்தரமான வளைவுகளையும் பொருளற்ற அலங்காரங்களையும் கொண்டிருந்தது. லாகூரிலமைந்த பாதுஷாஹி மசூதி அளவிற் பெரியதாயினும் டில்லியிலுள்ள ஜாமி மசூதியின் மோசமான போலியே. அப் பேரரசரின் மறைவிற்குப் பின் முகலாயர்பாணி அடியோடு அழிந்தன. 18ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் எழுந்த கட்டடங்கள் சுவையுணர்வுச் சூன்யத்தையும், அமைப்பு, நிறை திட்பம், ஒப்பனை ஆகியவற்றில் வறட்சியையும் வெளிப்படுத்தி நிற்கின்றன.

## அணிகலன்கள்

பண்டைக்காலத்திலிருந்தே இந்துக்களில் ஆண், பெண் இருபாலாரும் அணிகலன்களையும் மணிகளையும் பெரிதும் விரும்பி அணிந்துவந்த காரணத்தால், பழங்காலத்திலேயே அணிகலன்கள் செய்யும் கலை உயர்ந்த தரத்தை அடைந்தது. எவ்வாறெனினும் அணிகலன்களின்மீதும் மணி வகைகளின்மீதும் மாறாத பற்றுக் கொண்ட முகலாய மன்னர்கள் அக் கலையை மேலும் வளர்ந்தோங்கச் செய்தனர். குவாலியரின் ராஜா விக்ரமஜித்தின் குலத்தவரிடமிருந்த புகழ்வாய்ந்த கோஹினூர் வைரத்தை ஹுமாயூன் கைக்கொண்டார். அக்பர் ஒளிமணிக் கற்களைப் பெருமளவில் சேகரித்து வைத்தார். அவற்றில் மிகவும் நேர்த்தியான பெரும் பவழங்களும் இருந்தன. அவற்றைக்கொண்டு ஒவ்வொன்றும் பத்து இலட்ச ரூபாய்கள் பெறுமானமுள்ள இரு மாலைகளைச் செய்வித்தார். ஜஹாங்கீர் வைத்திருந்த ஒளிமணிக்குவியலில் அக்பரிடமிருந்து மரபுவழியாகப் பெற்றவையும் அடங்கின. அவற்றில் $1\frac{1}{2}$ மணங்கு பதிக்கப்பெறாத வைரங்கள், 12 மணங்கு நன்முத்துக்கள், 5 மணங்கு மரகதக் கற்கள், ஒரு மணகு கெம்புக் கற்கள், ஒரு மணங்கு நீலக் கற்கள், ஏராளமான கல் பதித்த அணிகலன்கள், தட்டுமுட்டுச் சாமான்கள் ஆகியவை அடங்கும். முகலாயப் பேரரசர்களிலெல்லாம் ஷாஜஹானே ஒளிமணிக் கற்களில் தணியாத ஆர்வமும் பற்றும் கொண்டிருந்தார். அரச குடும்பத்தாருக்குப் பரிசுகளாக வழங்கிய இரண்டு கோடி பெறுமான நகைகளைத் தவிர, அவர் சொந்தமாக, 5 கோடி ரூபாய் பெறுமானமுள்ள அணிமணிகளை வைத்திருந்தார்

தூய தங்கத்தால் செய்து மணிகளிழைத்த மயில் சிம்மாசனம் ஒன்று அவரிடமிருந்தது. 'அது தங்கக் கால்களைக் கொண்ட கட்டிலின் வடிவைப் பெற்றிருந்தது. மரகத மணியிழைத்த மேற்கவிகையை (canopy) மரகதத்தினலான பன்னிரு தூண்கள் தாங்கிநின்றன. அவை ஒவ்வொன்றும் ஒளிமணிக் கற்கள் பதிக்கப்பெற்ற மயில்கள் இரண்டைச் சுமந்திருந்தன. ஜதையாக இருந்த மயில்களுக்கிடையே மரகதம், வைரம், முத்து, கெம்பு ஆகிய மணிகள் நிறைந்த மரம் ஒன்று நின்றது.' உள்ளிருந்த கூரையில் மரகதமணிக் கற்களும், மேற்கூரையில் கெம்பும், பிற கற்களும் நிறைந்திருந்தன. பேரரசரின் இருக்கைக்குச் செல்வதற்கான மணிக்கற்களால் ஆன மூன்று படிகள் இருந்தன. இருக்கையைச் சுற்றிலும் ஒளிமணிகளால் ஆன பதினறு பட்டைகள் அமைந்தன. அவற்றின் மையமாக இருந்த பட்டையின் நடுவில் முதலாம் ஷா அப்பாஸ் ஜஹாங்கீருக்குப் பரிசாக வழங்கிய ஒப்புயர்வற்ற கெம்புக் கல் பதிக்கப்பெற்றிருந்தது.' 1739ஆம் ஆண்டில் மயில் சிம்மாசனத்தை நாதர் ஷா பாரசீகத் திற்குக் கொண்டுசென்ருர். அது இப்போது எங்கும் காணப்பட வில்லை. முகலாய அரசகுலப் பெண்டிர் வைத்திருந்த அணிமணி களின் மதிப்பும், அவற்றிலிருந்த வேலைப்பாடும் மயக்கமூட்ட வல்லவை. முகலாயப் பேரரசு சீர்குலையத் தொடங்கியதாலும், அதன் காரணமாக அரச குடும்பத்தாரும் செல்வந்தரும் வறுமை யுற்றதாலும் 18ஆம் நூற்ருண்டில் அக் கலை சீரழிந்தது.

## பூந்தோட்டங்கள்

முகலாயர் வருவதற்கு முன்பே இந்தியாவில் பல தோட்டங்கள் விளங்கியிருந்தன. ஆனல், அவை வடிவியல் சார்ந்த அமைப்புக் கொண்டிருக்கவில்லை. மேலும், அவை அனைத்தும் அரண்மனை களோடிணைந்த இன்பக் களங்களாகவும் அமைக்கப்பெறவில்லை. இந் நிலையில் பாரசீகத்திலும் துருக்கிஸ்தானத்திலும் வளர்ச்சி யுற்றிருந்த புதுவகைப் பூந்தோட்டங்களை நம் நாட்டிற்கு பாபர் கொண்டுவந்தார். அவற்றின் முக்கியப் பண்புகள் பின்வருமாறு: சிறு கால்வாய்கள், தண்ணீர்ப்பள்ளம் அல்லது குளம் ஆகிய வடிவில் அமைந்த செயற்கை நீர்நிலைகள் அதில் இருந்தன. இருமருங்கிலும் அமைந்த நடைபாதையின் விளிம்பைத்தொடும் அளவிற்கு நீர் மட்டம் அமையுமாறு கட்டிய தாழ்வான நீர்வீழ்ச்சிகளும் இருந்தன. அத் திட்டத்தில் சரிவான நிலத்தில் பல மொட்டை மாடிகள் போன்ற மேடைகள் காணப்பெற்றன. அவை பொதுவாக குரான் காட்டும் சுவர்க்கத்தின் எட்டுப் பிரிவுகளைக் குறிக்கும் எட்டு மேடைகளாக அமைந்தன. சிலசமயங்களில் ஏழு கோள்களைக் குறிக்கும் வகையில் ஏழு மேடைகளைக் கட்டுவதும் உண்டு. மிக உயர்ந்த மேடையின்மீது

முக்கியக் காட்சி மாடம் கட்டப்பெற்றது. சில சமயங்களில் மிகத் தாழ்ந்த மேடையின்மீதும் அது கட்டப்பெற்றது. இத்தகைய காட்சி மாடங்களில் அமர்ந்திருப்பவர் தடையின்றிச் செடிகொடிகளையும் நீர் வீழ்ச்சிகளையும் காண்பது எளிதாக இருந்தது.

அழகிய மலர்களிலும், பசுந்தழைகளிலும் மிகுந்த பற்றுர்வம் கொண்டிருந்த பாபர் அதுபோன்ற பூந்தோட்டமொன்றை ஆக்ராவில் அமைத்தார். அது ராம் பாக் (Ram Bagh) எனப் பெயர் பெற்றது. ஹுமாயூனும் கலைச்சுவை உணர்ச்சியில் குறைந்தவரல்லர். அவர் ஒழுங்கான பூந்தோட்டங்களையும் பழத்தோட்டங்களையும் கொண்டு டில்லியில் புதிதாகக் கட்டிய தீன் பனு நகரத்தை அழகுபடுத்தினர். அக்பரும் தமது முன்னோர்களைப் பின்பற்றி ஆக்ரா கோட்டையிலும், பதேபூர் சிக்ரியிலும், வேறு பல இடங்களிலும் தோட்டங்களை அமைத்தார். ஆயினும், அவரது தோட்டங்களில் தலைசிறந்து விளங்கியது அவர் அடக்கம் செய்யப்பெற்றுள்ள சிக்கந்தரா தோட்டமே யாகும். இத் தோட்டத்தின் நடுவில் அவரது அழகிய கல்லறை கம்பீரமாக நிற்கின்றது. இதன் திட்ட அமைப்பில் நான்கு பிரிவுகளையும், அவற்றைச் சுற்றியுள்ள பெரும் வேலியையும் காணலாம். வேலியாக அமைந்த நான்கு பக்கச் சுவர்கள் ஒவ்வொன்றின் நடுவிலும் ஒரு வாயில் அமைந்துள்ளது. நடுவில், கல்லறையின் பக்கங்களில் குளங்களும் முன்னுல் நடு நீரூற்றும் அமைந்துள்ளன. நேர் ஒழுங்காக அமைந்த கால்வாய்கள் இருக்கின்றன. கால்வாய்களும் நீர்வழிகளும் மட்பாண்டத்தொழிலுக்குரிய பொருள்களைக் கொண்டு பாவப்பெற்றுள்ளன. அவற்றின் இருமருங்கிலும் சைப்ரஸ் (cyprus), தேவதாரு (pine), பனைபோன்ற மரங்களும், அழகிய செடிவகைகளும் அணிசெய்கின்றன.

ஜஹாங்கீரின் ஆட்சிக்காலத்தில் முகலாயருடைய தோட்டக் கலை முழுநிறைவெய்தியது. அவர் சென்று தங்கிய இடங்களிலெல்லாம் மிக நேர்த்தியான பூந்தோட்டங்களைத் திட்டமிட்டு அமைத்தார். ஜஹாங்கீரின் கவர்ச்சிமிகுந்த தோட்டங்களில் காஷ்மீரின் ஸ்ரீநகரத்தில் உள்ள ஷாலிமார் பாக் ஒன்றுகும். மலைகள் அதன் பின்னணியாக அமைந்துள்ளன. அழகிய தால் ஏரிக்கு முன்னுல் அத் தோட்டம் கம்பீரமாக அமைந்துள்ளது. அவர் காலத்தில் வேறு சில சிறப்புவாய்ந்த தோட்டங்களும் உருவாயின. ஆக்ராவில் இதிமாத்-உத்-தௌலா கல்லறைத் தோட்டம் லாகூருக்கு அருகே அமைந்த அவரது ஷஹாத்ரா கல்லறைத் தோட்டம் ஆகிய இவை மிக முக்கியமானவை. இவை இரண்டும் சிக்கந்தரா தோட்டத்தைப் போன்ற அமைப்புக் கொண்டவை. ஆயின், பல உயர்மட்ட நீரூற்றுக் குளங்களும், எட்டுப் பெரும் மேடை

களும் அவற்றில் சிறப்பியல்புகளாகும். நாட்டிலேயே மிகுந்த வனப்புக்கொண்ட பூந்தோட்டங்களில் ஒன்றான காஷ்மீரத்தில் ஸ்ரீநகரின்கண் அமைந்த நிஷாத் பாக்கை நூர்ஜஹானின் சகோதரரான அசப்கான் (Asaf Khan) கட்டினார்.

தோட்டக் கலையில் ஷாஜஹானும் சுவையார்வம் மிக்கவராக விளங்கினார். அழகிலும் பெருமையிலும் தாஜ்மஹால் தோட்டத்திற்கு அடுத்த நிலையிலுள்ள லாகூருக்கு அருகேயுள்ள புகழ்பெற்ற ஷாலிமார் தோட்டத்தை அவர் அமைத்தார். அதன் நடுவில் உயர்ந்த நீர்த்தேக்கத்துடன் கூடிய மேடையொன்றால் இணைக்கப்பெற்ற இரு சார்-பாக்கள் அமைந்துள்ளன. நீர்த்தேக்கத்தின் இருபக்கங்களிலும் காட்சி மாடங்கள் கட்டப்பெற்றுள்ளன. தோட்டப் பரப்பு முழுதும் பல மலர்ப்படுக்கைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. டில்லியிலுள்ள செங்கோட்டையைப் பல பூந்தோட்டங்கள் அணிசெய்கின்றன. அவற்றில் ஹயாத் பாக் மிகவும் நேர்த்தியானது. அது அக்கோட்டையிலேயே மிகப் பெரிய பூந்தோட்டமாகவும் மனத்தை மயக்கும் வகையில் அமையப்பெற்றதாகவும் விளங்குகிறது. வழக்கமாக உள்ள நீரோடைகளுக்கிடையே சதுர வடிவமான மலர்ப்படுக்கைகளும் உயர்ந்துநிற்கும் சவான், பாதன் எனும் காட்சி மாடங்களும் கவினுற அமைந்துள்ளன. டில்லியிலுள்ள தால் கடோரா பாக்கும், ஷாலிமார் பாக்கும், வஸீர் பாக் என்று பெயர்பெற்ற காஷ்மீரத்திலுள்ள தாராவின் பூங்காவும் குறிப்பிடத்தகுந்த தோட்டங்களாகும்.

மாந்தருக்கு இயற்கையாக அமையும் பல இன்பங்களை ஒதுக்கித் தள்ளிய அவுரங்கசீப் பூந்தோட்டங்களில் பற்றார்வம் கொள்ளவில்லை. ஆரம்ப கால முகலாயர் காலத்தில் அடைந்த உன்னதமான நிலையிலிருந்து அது வீழ்ச்சியுற்றது உண்மையே. இருப்பினும், தோட்டக்கலை இந்நாட்டில் மறைந்துவிடவில்லை. லாகூரிலுள்ள பாதுஷாஹி மசூதியின் மதிலுக்குள் அழகிய பூந்தோட்டம் ஒன்று உருவாகியது. ஃபிதாய் கான் (Fidai Khan) என்பவர் பஞ்சாபில் பிஞ்ஜோர் என்னுமிடத்தில் மற்றொரு நேர்த்தியான பூந்தோட்டத்தை அமைத்தார். லாகூருக்கு அருகில் அவுரங்கசீப்பின் புதல்வியான ஸெப் உன்னிஸ்ஸா அழகிய தோட்டமொன்றை அமைத்து அதற்கு சார் பர்ஜி என்று பெயரிட்டார்.

காலப்போக்கில் பல முகலாயத் தோட்டங்கள் சீர்குலைந்தன. மேலும் பல அடியோடு அழிந்தன. ஆயினும், இன்று அழியாது இருக்கின்ற சில தோட்டங்களே. லாகூருக்கு அருகிலுள்ள ஷாலிமார் பூந்தோட்டத்தின் வாயிலில் பொறிக்கப்பெற்றிருக்கும் வாசகம் புகழ்ந்துரையானது, சிறிதும் பொருந்தாதது அல்ல என்பதை

விளக்கப் போதுமானவையாகும். அக் கல்வெட்டில் 'மணிவடிவ மலர்கள் மண்டிக்கிடக்கும் மாண்பினால் இது இனிமையானது. பகலும் இரவும் பூத்துக்குலுங்கும் ரோசா மலர்கள் அழகிய ஒளி விளக்குகளாகத் திகழ்கின்றன'.

## மேலும் கற்பதற்கான நூல்கள்


1. W. Foster தொகுத்தளித்த 'Early Travels in India'.
2. Bernier எழுதி, Constable and Smith தொகுத்தளித்த 'Travels in the Moghul Empire,' (1656–1668).
3. Tavernier எழுதிய 'Travels in India'.
4. Manucci எழுதி, William Irvine தொகுத்து மொழி பெயர்த்து அளித்த 'Storia do Mogor', Vols. 1–4.
5. V. A. Smith தொகுத்த 'Rambles and Recollections of Sleeman'.
6. W. H. Moreland எழுதிய 'India at the death of Akbar'.
7. W. H. Moreland எழுதிய 'From Akbar to Aurangzeb'.
8. F. E. Keay எழுதிய 'Ancient Indian Education'.
9. N. N. Law எழுதிய 'Promotion of Learning in India during the Muhammadan rule.'
10. Sir J. Sarkar எழுதிய 'Studies in Mughul India'.
11. George Grierson எழுதிய 'Literature of Hindustan'.
12. Fox-Strangways எழுதிய 'Music of Hindustan'.
13. L. Binyon எழுதிய 'Court Painters of the Grand Moguls'.
14. Percy Brown எழுதிய 'Indian Painting under the Mughals'.
15. V. A. Smith எழுதிய 'History of Fine Arts in India and Ceylon'.
16. Ferguson எழுதிய 'History of Indian and Eastern Architecture'.
17. E. B. Havell எழுதிய 'Indian Sculpture and Painting'.
18. C. M. Villiers Stuart எழுதிய 'Garden of the Great Mughals'.
19. 'Cambridge History of India', Vol. IV, Chapter XVIII.

# 14. முகலாயப் பேரரசு : அது கொண்ட வெற்றிகளும் அடைந்த தோல்விகளும்

## முகலாய ஆட்சியின் தன்மை

முகலாய அரசாங்கத்தின் தன்மையைச் சில தற்கால இந்திய வரலாற்று அறிஞர்கள் தவருகப் புரிந்துகொண்டுள்ளனர்; அல்லது வேண்டுமென்றே அதனுடைய நலஞ்சார்ந்த பண்பினை மிகைப் படுத்தியுள்ளனர். அவர்கள் முகலாய ஆட்சியினைத் 'தேசிய அரசாங்கம்' என்றும், முகலாயர் காலத்தை 'இந்திய தேசியக் கோட் பாடு விளங்கிய' காலம் என்றும் விளக்குவர். இங்ஙனம் முகலாய ஆட்சியை அளவுக்கு மீறி உயர்த்திப் பேசுவதற்கு உற்ற காரணங் கள் எளிதில் விளங்கக்கூடியவையே. முதலாவதாக, பிரிட்டிஷாரின் ஆட்சிக்குச் சற்றுமுன்னர்தான் முகலாயப் பேரரசு வாழ்ந்திருந்தது. நாட்டுப்பற்று உணர்வினுல் உந்தப்பெற்று பிரிட்டிஷ் ஆதிக்கத்தை வெறுத்த நம்நாட்டு அறிஞர்கள் பிரிட்டிஷ் ஆட்சிக்கு முன்பிருந்த அரசாங்கம் மேலானது என்றும் இந்திய நாட்டுப் பண்புத் திறத்திற்கு அதிகப் பொருத்தமுடையது என்றும் விளக்கமுறப்படுவது இயற்கையே. அதன் விளைவாக முகலாயர் காலத்தில் நாட்டில் இந்தியருடைய ஆட்சி நிலவியது என்று எடுத்துக்காட்ட முயன் றுள்ளனர். இங்ஙனம் அவர்கள் அக் காலத்தை தேசியக் கோட் பாடு மலிந்த காலம் எனக் கொண்டனர். இரண்டாவதாக, 1206 முதல் 1526 வரையில் இருந்த டில்லி சுல்தானியர் ஆட்சியைக் காட்டிலும் முகலாயர் ஆட்சி எத்துணையோ மேலானது. முழுக்க முழுக்க இஸ்லாமிய அரசாக விளங்கிய சுல்தானியர் ஆட்சி, நாட்டு மக்களில் பெருவாரியாக இருந்த இந்துக்களிடம் சமயப் பொறை காட் டத் தவறியது. மேலும் கடுமையான சமய ஒறுப்பினைக் கடைப்பிடித் தது. எனவே, ஒப்புரவிணக்கம் காட்டிய முகலாயரது ஆட்சியை நம் நாட்டு வரலாற்றில் ஒளிவிடும் அதிகாரம் என நமது வரலாற்று அறிஞர் கொள்ளத் தொடங்கினர். மூன்ருவதாக, ஜாதி சமய வே

பாடு இன்றிக் குடிமக்களைச் சமமாகப் பாவிக்கும் போற்றத்தகுந்த கொள்கையைப் பின்பற்றி, அவர்களுடைய பொருளாதார, நாகரிக நிலையை உயர்த்த முயன்ற அக்பரைப் போன்ற அருந்திறல் அரசரை முகலாய குலம் தோற்றுவித்தது. அவரை அடுத்து வந்த இரு வேந்தர்கள், அதே அளவு இல்லாவிடினும் அவரது கொள்கையைப் பின்பற்றி ஒழுகினர். முகலாயர் காலம் முழுவதற்குமான நேரிய, நிறைவான நோக்கம் கொள்ளாதவர்களும், கொள்ள முடியாதவர்களும் அக்பருக்கும் ஜஹாங்கீருக்கும் எது பொருந்துமோ அதுவே பாபர், ஹுமாயூன், அவுரங்கசீப் போன்ருேருக்கும் பிற்கால முகலாயருக்கும் பொருந்துமெனத் தவருகக் கொண்டனர். நான்காவதாக, சமுதாய ஒற்றுமைக்காகவும், இந்திய முஸ்லீம் சமூகத்தாரிடையே நமது பொதுவான வரலாறுபற்றிய பெருமித உணர்வை உருவாக்கும் நோக்கத்தோடும் நம் நாட்டு அண்மைக் கால வரலாற்று உண்மைகளைத் தற்கால இந்து எழுத்தாளரில் சிலர் வேண்டுமென்றே திரித்துக் கூறியுள்ளனர். நம் நாட்டு முஸ்லீம்கள், முஸ்லீம் ஆட்சியில் ஒருநிலைச்சார்பான பற்றுதல் கொண்டிருந்தாலும், நமது வரலாற்றில் இடைக்காலத்தில் தாங்களே ஆளும் பிரிவினராக இருந்ததாகத் தவருக எண்ணிவந்ததாலும், சில உண்மைகள் அவர்களுக்குக் கசப்பாக இருந்தன. அத்தகைய உண்மைகளைச் சில இந்து எழுத்தாளர்கள் பூசி மெழுகி இருக்கின்றனர். இறுதியாக, நம் நாட்டுத் தற்கால முஸ்லீம் எழுத்தாளர்கள் ஒருமுகமாக இக்கட்டான உண்மைகளை மறைத்தும் முகலாய அரசாங்கத்தின் வெற்றிகளை மிகைப்படுத்திக் கூறுவதன் மூலமாகவும் வரலாற்றினைப் பொய்ப்பிக்க முற்பட்டனர். அதனுல் அவர்கள் பாடநூலாசிரியர், அரசியல்வாதிகள், இந்து சமூகப் பாமர மக்கள் ஆகியோரை மட்டுமன்றி, பொறுப்புணர்ச்சி வாய்ந்த நம் நாட்டு வரலாற்று மாணவர் சிலரையும் தவருன பாதையில் இழுத்துச் சென்றுள்ளனர்.

முகலாய ஆட்சி முக்கியமாக அன்னிய ஆட்சியே. ஓரளவிற்குத் தான் அது இந்தியப் பண்பு கொண்டது. பாபரும் ஹுமாயூனும் வெளிநாட்டிலிருந்து வந்த வெற்றியாளர். அவர்தம் குறிக்கோள்களும், விருப்பார்வங்களும், வாழ்க்கை முறையும், அரசாங்க அமைப்பும் வேற்று நாட்டவையே. இந்தியாவில் தம்மை அடக்கம் செய்வதைக்கூட பாபர் விரும்பவில்லை. ஹுமாயூனும் திடீரென்று இறந்திருக்காவிட்டால் தமது உடலைக் காபூலுக்குக் கொண்டு சென்று அங்கே தமது தந்தை புதைக்கப்பெற்ற இடத்திற் கருகில் புதைக்குமாறு இறுதி விருப்ப ஆவணத்தில் எழுதிச் சென்றிருக்கக் கூடும். அக்பர்தாம் தமது முன்ஞேர்களின் கொள்கையை மாற்றியமைத்ததோடு இந்தியக் கருத்துகளையும், வாழ்க்கைமுறையையும்

ஏற்று அமைக்க முற்பட்டார். ஆயினும், ஜிஸியா வரியை ஒழித்து 1563ஆம் ஆண்டில் அவர் துவக்கிவைத்த சமயப் பொறைச் சகாப்தம் 250 ஆண்டுகளாக (1526–1803) வாழ்ந்த முகலாய ஆட்சியில் 90 ஆண்டுகளுக்குமேல் நீடிக்கவில்லை. இந்த 90ஆண்டுகளிலும் பலமுறை ஜஹாங்கீரும் ஷாஜஹானும் சமயப் பொறைக் கொள்கையைக் கைவிட்டுச் சமய வெறியோடு நடந்துகொண்டனர். அச் சமயங்களில் இந்துக்களின் கோயில்கள் இடிக்கப்பெற்றன. அவர்கள் கட்டாயச் சமய மாற்றம் பெற்றனர். எனவே, முகலாய ஆட்சிக் காலம் முழுவதையும் இந்திய தேசீயக் கோட்பாடு மிளிர்ந்த காலம் எனக் கொள்வது வரலாற்றிற்கு முரண்பட்டதாகும். உண்மையில் ஆட்சியை இந்தியமயமாக்கும் கொள்கைக்கும், இஸ்லாமிய அரசின் கோட்பாடுகளையும் வழக்காறுகளையும் வெறியுடன் கூடிய மீட்பிற்குமிடையே போராட்டம் நடைபெற்ற காலமே முகலாயரது ஆட்சிக் காலம்.

அன்னியக் கருத்துகளையும் இந்தியக் கருத்துகளையும் அடிப்படையாகக் கொண்டு முகலாய ஆட்சி முறை அமைந்தது உண்மையில் அராபிய, பாரசீகக் கூறுகளான அன்னியக் கூறுகளே அதில் முக்கிய இடம் பெற்றன. அதனால் முகலாய ஆட்சி முறை 'இந்தியப் பின்னணியில் அமைந்த பாரசீக அராபிய (Perso–Arabic) முறை' என்று சான்றோர் சரியாகக் குறிப்பிட்டனர். சர் ஜாதுநாத் சர்க்கார் குறிப்பிடுவதைப் போல அவர்களுடைய (முகலாய மன்னர்களுடைய) அரசாங்கக் கோட்பாடுகள், சமயக் கொள்கை, வரி விதிப்பு விதிகள், அலுவலகத்துறை அமைப்பு, அதிகாரிகளின் பதவிப் பட்டங்கள் ஆகிய அனைத்தும் இந்தியாவிற்கு வெளியிலிருந்து ஆயத்த நிலையில் இறக்குமதியானவை. ஆயினும், ஆட்சிக்குட்பட்ட மக்கள் அறிந்ததும் அத்துறையில் ஏற்கெனவே இடம் பெற்றிருந்த பழைய உள்ளூர் முறையுடன் சமரச இணக்கம் ஏற்பட்டது. இங்ஙனம் உள்நாட்டுத் தேவைகளுக்கேற்ப இறக்குமதியான திட்டத்தின் வகை நுணுக்கங்களில் மாறுதல் தோன்றியது. பேரரசரும் அவரது அவையத்தாரும் பாரசீகத்திலிருந்தும், எகிப்திலிருந்தும் அகத்தூண்டுதல் பெற்றனர்.

முகலாய அரசாங்கத்தில் பணிபுரிந்தவர்களில் பெரும்பான்மையோர் அயலவரே. அக்பர் காலத்தில் உயர் அதிகாரிகளாக இருந்தோரில் எழுபது சதவீதத்தினர் அன்னியரான பாரசீகர், துருக்கியர், உஸ்பெக்குகள், ஆப்கானியர் போன்றோரே; முப்பது சதவீதத்தினர் இந்திய முஸ்லீம்களும் இந்துக்களுமாவர். அரசாங்கப் பதவிகளை இந்துக்களுக்கும் கொடுக்க அக்பர் முன்வந்தபோதிலும், நடைமுறையில் குறைந்த எண்ணிக்கையினரே அத்தகைய பதவி

களை வகித்தனர். அக்பரின் நாற்பது ஆண்டுக் கால ஆட்சியில் 500 படைவீரர்களுக்கு மேற்பட்ட வீரர்களைக் கொண்ட மன்சப்தார் பதவிகளில் 21 இந்துக்களே நியமனமாயினர். அவர்களில் ஆம்பர். மார்வார், பிகானிர், ஜெய்ஸால்மர், பந்தேல்கண்டு ஆகியவற்றின் அரசர்கள் போன்ற 17 இராஜபுத்திரத் தலைவர்கள் அடங்கினர். 500-க்கும் குறைவான பதவிகளில் 37 இந்துக்கள் நியமிக்கப் பெற்றனர். அவர்களிலும் 30 பேர் சிறு இராஜபுத்திர நாடுகளின் தலைவர்கள். 500 முதல் 5000 வரை பெறுமானமுள்ள மன்சப்தார் பதவிகளில் இராஜபுத்திரர் அல்லாத இந்துக்கள் நால்வரே இருந்தனர். அவர்கள் பீர்பால், ராஜாதோடர்மால், தோடர்மாலின் மகன், மற்றொரு முதன்மையான காட்ரி குலத்தைச் சார்ந்தவர் போன்றோராவர். ஷாஜஹானின் ஆட்சிக் காலம் தவிர, ஜகந்தர்ஷாவின் ஆட்சிக் காலம் முடிய அப்போது முகலாயப் பேரரசு ஏற்கெனவே அழியும் நிலையில் இருந்தது. இருந்த பிற முகலாய மன்னர்களின் ஆட்சிக் காலங்களில் பேரரச சேவையிலிருந்த இந்துக்களின் வீதாசாரம் குறைவாகவே இருந்தது. மேலே கூறிய விளக்கத்திலிருந்து அநேகமாக எல்லா முக்கிய இன்றியமையாத பதவிகள் அன்னியரிடமே யிருந்தன என்பது தெளிவு. அளவுக்கு மீறிய அன்னிய அதிகாரிகளைக் கொண்ட அரசாங்கத்தை தேசீய அரசாங்கம் என்று அழைக்க இயலாது.

படை கொண்டு நாட்டைக் கைப்பற்றியாளும் படைத்துறை சார்ந்ததாகவே முகலாய ஆட்சிமுறை அமைந்தது. இறுதி வரையில் அது இத்தன்மை பெற்றிருந்தது. பெரும்பான்மையில் அன்னியர்களை மிகுதியாகக் கொண்ட மிகப் பெரும் படை ஒன்று முகலாய அரசாங்கத்திடம் இருந்தது. மக்களைப் பயமுறுத்தவும் அவர்களைக் கட்டுப்பாட்டில் வைக்கவும் முக்கிய இடங்களில் வலிமை வாய்ந்த காவற்படைகளை அரசாங்கம் நிறுவியது. முகலாயப் பேரரச சேவையில் இருந்த அனைவரும் மன்சப்தார்களாக நியமிக்கப் பெற்றனர். இங்ஙனம் அவர்கள் படைத் தலைவர்களாயினர். பொது ஆட்சித்துறைப் பணிக்கும் படைப்பணிக்கும் எவ்வித வேற்றுமையுமில்லை. முறையான பொது ஆட்சித்துறைக் கருவூலமும் அப்போது இல்லை. முகலாய அரசாங்கம் தொடர்ந்து படைமுறை சார்ந்ததாக இருந்ததும் அது உள்நாட்டு வெளிநாட்டுஅமைதியைக் காத்தல், வரி கொள்ளுதல் ஆகிய இரு முக்கியக் கடமைகளை மட்டுமே நிறைவேற்றியதும் அவ் வாய்ப்பேயாகும். எவ்விதச் சமுதாயப் பணிகளையும் அது மேற்கொள்ளவில்லை. அதாவது, இந்நாட்டில் மில்லியன் கணக்கில் வாழ்ந்த மக்களுடைய உடல் சார்ந்த அறிவு நலஞ்சார்ந்த, ஒழுக்க நெறிசார்ந்த நலன்களைப் பேணும் முயற்சியில் அது ஈடுபடவில்லை. மக்களுக்குக் கல்வியறிவு ஊட்ட முயலவில்லை.

பேரரசர்கள் சில பள்ளிகளைத் திறந்து வைத்த போதிலும், சில கற்றறிந்த பெரியோர்களுக்கு உதவித் தொகை அளித்தபோதிலும், இத்தகைய ஆதரவு அரசவையோடு தொடர்புகொண்ட சிலருக்கு அளிக்கப்பட்டதே ஒழியப் பொது மக்களிடையே கல்வியைப் பரப்புவதற்காகவன்று. அரசவையில் இலக்கியம், கவிதை, இசை, ஓவியம் போன்றவை ஆதரிக்கப்பெற்றன. ஆயின், அவை அரசர்களின் தனிப்பட்ட சொந்தச் செய்திகளாக இருந்தன. கலையையும், பண்பாட்டையும் நாட்டில் பரப்புவதற்கு அவர்கள் எவ்வித முயற்சியும் செய்யவில்லை. ஆனால், இந்துக்கள் முஸ்லீம்கள் என்னும் இருபெரும் சமுதாயத்தினரை நிரந்தரமாகப் பிரித்து வைப்பதற்காக, வேண்டுமென்றே முயன்று வெற்றி பெற்றதுதான் முகலாய ஆட்சியின் தனிப்பெரும் குறையாகும். இது முஸ்லீம்களுக்கும் முஸ்லீம் அல்லாதாருக்குமிடையேயான வேற்றுமையை நிரந்தரமாக வைத்திருக்க வேண்டுமென்ற இஸ்லாமிய மரபிற்கு இசைந்ததாகும். முகலாயப் பேரரசர்களில் அக்பர் மட்டும் மக்களிடையே ஒற்றுமையை வளர்க்க வேண்டுமென்று சிறிது காலமே நிலைத்திருந்த முயற்சியிலீடுபட்டார். அது இருபத்தைந்து ஆண்டுகள்கூட நிலைக்கவில்லை. அவருடன் அம் முயற்சியும் மடிந்தது. இச் செய்தியில் அக்பருக்கு முன்பிருந்த நிலையை மீட்க ஜஹாங்கீர் வேண்டுமென்றே முயன்றார். முஸ்லீம் மாதரை இந்துக்கள் மணந்துகொள்வதற்குத் தடை விதித்தார். அவ்வாறு செய்வதை மரண தண்டனைக்குரிய குற்றமாக்கினார். ஷாஜஹானும் அவ்வாறே செய்தார். அவுரங்கசீப்பும் அவருக்குப் பின் வந்த அரசர்களும் பழைமைப் பண்பு கொண்ட முஸ்லீம் மன்னர்கள். அதன் விளைவு தான் இன்று வரையில் இவ்விரு சமயத்தாரும் பிளவுபட்டிருப்பது. அது முகலாய மன்னர்களிடமிருந்து மரபுரிமைச் சொத்தாக வந்துள்ளது.

## இந்துக்களின் நிலை

'குடிமக்களின் பொருளாதார வளத்திற்கும் ஒழுக்கநெறி சார்ந்த வளர்ச்சிக்கும் எத்துணையளவு பயனுள்ளதாக அமைகின்றது என்பதை வைத்தே எந்த ஓர் அரசியல் முறைபற்றியும் இறுதியாக முடிவெடுக்கப்படுகின்றது' என வரலாற்று அறிஞரான சர் ஜாதுநாத் சர்க்கார் எழுதியுள்ளார். இந்தியாவிலிருந்த முகலாய ஆட்சிக்கு இவ்வடிப்படையைக் கொள்வோமானால், அந்த ஆட்சி பெருந்தோல்வியுற்றதென்றே கூறவேண்டும். ஏனெனில், மக்களுடைய ஒழுக்கநெறி சார்ந்த பொருளாதார நிலை பொதுவாக நன்கு அமைந்த காலமாகிய அக்பரின் தலைமையிலிருந்த குறுகிய தலைமுறையைத் தவிர, 1526ஆம் ஆண்டிலிருந்து 1803ஆம் ஆண்டு

வரையில் நம் நாட்டு மக்களில் பெரும்பாலோர் மோசமான வாழ்க்கை நடத்தினர். பொதுவாக இந்துக்களின் நிலை கடினமான தாக இருந்தது என்பதையும், அவர்தம் இன்னுயிர், மானம், சொத்து ஆகியவை பாதுகாப்புடன் இல்லையென்பதையும் அக்கால ஐரோப்பிய வணிகரும் பிரயாணிகளும் விட்டுச்சென்ற குறிப்புகளி லிருந்தும், சமகால முஸ்லீம் எழுத்தாளர்களின் நூல்களில் ஆங் காங்கே சிதறிக்கிடக்கும் குறிப்புகளிலிருந்தும் தெளிவாகின்றது.

"இஸ்லாமிய சமய அடிப்படையில் அமைந்த அரசின் மூல ஆதாரக் கொள்கையே இத்தகைய பரந்த அழிவிற்கு மூலகாரணம். மனித சமுதாய ஆட்சியின் சிக்கலான பிரச்சினைகளுக்கு மாற்றம் கொள்ளாத ஷாரியத் சட்டத்தைப் பயன்படுத்தும்போது மக்க ளிடையேயான ஒற்றுமைப்பண்பு குலைகின்றது. உண்மைச் சமய நம்பிக்கைகொண்டோர் என்றும் சமய நம்பிக்கையற்றோர் என்றும் குடிமக்களை நிரந்தரமான தனித்தனிப் பிரிவுகளாகப் பிரிப்பதன் மூலமாக அரசியல் நீதியின் அடிப்படையே அழிகின்றது. நல்லறிவும் நேர்மைப் பண்பும்கொண்ட பிரிட்டிஷ் ஆட்சியில் கனடாவில் பிராடஸ்டென்ட் சமயம் சார்ந்த பிரிட்டிஷ்காரர்களுக்கும் கத்தோலிக்க சமயம் சார்ந்த ஃபிரெஞ்சுக்காரர்களுக்குமிடையே காணப்படுவதைப் போன்ற 'வேற்றுமையில் ஒற்றுமையைக்' கலப்பற்ற சமய அடிப்படையிலான அரசில் காண இயலாது. ஏனெனில், கி.பி. 650-ல் உருவான இஸ்லாத்தின் அடிப்படைக் கொள்கைகள் அப்போதிருந்து மாறாது வந்திருக்கின்றன. அத்தகைய திட்டத்தில் 'முன்னேற்றம் சார்ந்த சட்டமியற்றுதல்' என்பது இயலாத ஒன்றாகும். ஏனெனில், அவ்வாறு செய்தல் நபி நாயகத்தின் எங்கும் நிறைந்த தன்மையை எதிர்ப்பது போலாகும்." (Sir. J. N. Sarkar in 'Hindustan Standard', Puja Annual, 1951). முகலாயர் காலத்தில் சமய வெறிகொண்ட அவுரங்கசீப்பின் ஆட்சியில்தான் இந்து சமய ஒறுப்பும், இந்து குடிகளின்மீது அரசியல் அடக்குமுறையும் இருந்தன என்றும், மற்றக் காலங்களில் இந்துக்கள் முழு உரிமை பெற்று இன்பவாழ்வு வாழ்ந்தனர் என்றும் சில அறிஞர் கருதுவர். ஆயின், இது தவறான கருத்தாகும். தமது ஆட்சியின் கடைசி இருபத்தைந்து ஆண்டுகளில் இந்துக்களுக்கும் முஸ்லீம் களுக்கும் இடையேயான பிளவை ஒழிக்கவேண்டுமென்று அக்பர் முயன்ற போதிலும், இந் நாட்டில் இஸ்லாம் வந்ததிலிருந்து 'ஷாராவினால்' (Shara) அவ்விரு சமூகத்தாரிடையே தோன்றிய மாறாத பிளவு, முகலாயர் காலம் முழுதும் தொடர்ந்தது. அதற் கெதிராக அக்பர் கொண்டுவந்த விதிமுறைகளை இந்நாட்டில் வாழ்ந்த முஸ்லீம் மக்கள் ஏற்க மறுத்துவிட்டனர். முன்பே குறிப்பிட்டதைப் போல அக்பர் காலத்திற்கு முன்பிருந்த அதே நிலையை ஜஹாங்கீரும்

மீட்டார். அக்பரின் மறைவோடு இந்துக்களின் அரசியல் சமத்துவம், முழு சமயச் சுதந்திரம், பொது இடங்களில் சமயக் கருத்துகளைப் பரப் பவும் சமய மாற்றம் செய்யவுமான உரிமை, சட்டத்தின்முன் சமநிலை ஆகியவையும் மறைந்தன. ஷாஜஹான் ஆட்சிக்காலம் முடியும் வரை அவை குறைந்த அளவில் நிலவிவந்தன. பொதுவாகப் பேசு மிடத்து, முகலாய மன்னர்கள் அரசின் இஸ்லாமியக் கோட்பாட்டில் நம்பிக்கைகொண்டிருந்தனர். அக் கோட்பாட்டின்படி இந்துக் களையும் அவர்களுடைய சமயத்தையும் ஒடுக்குவது அரசின் கடமை யாகும். சமயப் பொறையென்பது விதிவிலக்காக அல்லது அரசாங்கம் தனது கடமையைப் புறக்கணிப்பதன்மூலமாகத்தான் அமையமுடியும். அரசாங்கம் வலிமையற்றதாகவோ, தனது கடமையைப் புறக்கணிப்பதாகவோ அமையுமானுல் இந்துக்களை ஒறுத்து, அவர்களைத் 'தகுந்த இடத்தில்' வைக்கவேண்டிய கடமையை முஸ்லீம் மக்களே மேற்கொள்ளவேண்டும். அவ்வப் போது முஸ்லீம் வெறியர்கள் பல இடங்களில் தலையெடுத்து, அதிகாரத்தைக் கைக்கொண்டு கோயில்களை இடித்தல் போன்ற சமயப் பழிப்பான செயல்களில் ஈடுபட்டனர். முகலாயப் பேரரசு சீர்குலைந்த காலத்திலும் இத்தகைய நிகழ்ச்சிகள் ஏராளமாக எழுந்தன. உதாரணமாக 1755ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில் பனாரஸிலிருந்த காஸியும், முஹ்தாசிபும் முஸ்லீம் கூட்டத்தைச் சேர்த்துக்கொண்டு பழைமையான விஸ்வேஷ்வர மகாதேவர் திருநிலை மாடத்திற்கு அருகே புதிதாகக் கட்டிய கோயிலொன்றைத் தரைமட்டமாக்கினர். அதன் விளைவாக அந் நகரத்தில் 'ஹர்த்தால்' (hartal) அல்லது கதவடைப்பு ஏற்பட்டது. (Delhi Chronicle, பக். 128). 19ஆம் நூற்றுண்டின் தொடக்ககாலத்தில் பரீலியைச் சார்ந்த மௌல்வி சையது அஹ்மத் நிகழ்த்திய கொடுமைகள் யாவரும் அறிந்தவையே. இத்தகைய கூறுகளினுல் மிக நல்ல காலங்களிலும் இந்துக்கள் தடைகள் நிரம்பிய, பாதுகாப்பற்ற வாழ்க்கையே பண்பாட்டுத் துறையிலும் ஆன்மீகத் துறையிலும் பெற்றிருந்தனர். ஏனெனில், முல்லாக்களின் தலைமையில் வந்த அன்னிய கும்பல்கள் எப்போது வேண்டுமானுலும் இந்துக்களின் மீது பாயலாம். அதே சமயத்தில் சட்டத்தையும் ஒழுங்கையும் காக்கவேண்டியவர்கள் அக்கறை காட்டாது இருந்தனர் அல்லது இந்துக்களைக் காக்கும் சக்தியற்றவர்களாயிருந்தனர். (Sarkar, 'Society during the Muslim Period', Hindustan Standard, Puja Annual, 1951.) எவ்வாறெனினும் முஸல்மான்களின் எண்ணிக்கை மிகக் குறைவாகவும், பெரிய நாடுகளின் தலைவர்களாக விளங்கிய வர்கள் இந்துக்களாகவும், அவர்கள் கொடுங்கோன்மையை எதிர்க்கும் வல்லமை பெற்றவர்களாகவும் இருந்த தென்னிந்தியாவில் சமய ஒறுப்பு இல்லை. ஆயின், வடஇந்தியாவில் அது பொது விதி

யாகியது. அதனுல், ஓரளவு சுதந்திரம் பெற்றிருந்த இராஜபுத்திர நாடுகளிலும், எளிதிற் செல்லமுடியாத இடங்களிலுமே இந்து நாகரீகம் தழைத்தோங்க முடிந்தது.

கட்டுப்படுத்தும் முகலாய ஆட்சியின் மிக மோசமான விளைவு யாதெனில், இந்துக்கள் உண்மையைப் பேசவோ எழுதவோ முடியவில்லை. அவர்களால் முஸ்லீம்களுடன் சரிசமமாகச் செயலாற்ற முடியவில்லை. உலகில் வாழ்வதற்காகக் கீழ்த்தரமான சூழ்ச்சியையும் நயவஞ்சகத்தையும் அவர்கள் வளர்த்துக்கொண்டனர். பிறரை ஏமாற்றுவதிலும் தேர்ச்சியுற்றனர். இந்தியாவில் சமய அடிப் படையிலான முகலாயர் ஆட்சியின்மீது பெருங் களங்கமாக அமைந்தது இந்து பண்பில் தோன்றிய சீர்குலைவேயாகும்.

அக்பரின் காலத்திலும், ஜஹாங்கீரின் ஆட்சியில் சில ஆண்டு களிலும் தவிர, இந்து சமுதாயப் பாமரமக்களின் பொருளாதார நிலை மோசமாக இருந்தது. நேர்மையும் பெருந்தன்மையும் மிக்க அக்பர் கால நிதித்துறை சார்ந்த விதிமுறைகள் அவருக்குப் பின் வந்த அரசர்களின் ஆட்சிக்காலத்தில் வழக்கொழிந்தன. ஜிஸியா, புண்ணியச் செலவு செய்வோர்மீதான வரி, இறந்த இந்துக்களின் எலும்புகளை கங்கையில் இடுவதற்கான வரி ஆகியவற்றினைத் திரும்ப விதித்ததன் மூலமாக இந்துக்களின்மீதான வரிச் சுமையை அவுரங்கசீப் உயர்த்தினுர். ஏற்கெனவே, முன் ஓர் அதிகாரத்தில் கண்டதைப்போல வரிவிதிப்பதில் இந்துக்களுக்கு எதிராக ஒருபுறச் சார்பாக நடந்துகொண்டார். ஷாஜஹானும் அவுரங்கசீப்பும் வரி வீதத்தை உயர்த்தினர். பூமியில் விளைந்த பொருளில் மூன்றில் ஒரு பகுதியை அக்பர் விதித்தார். ஆயின், பயனில் பாதி தரவேண்டு மென்று ஷாஜஹான் வற்புறுத்தினுர். அபுல் ஃபாஸலின் குறிப்புப்படி அக்பரின் வருவாய் ரூ. 13,21,36,851. அப்துல் ஹமித் லஹாரியின் செய்திப்படி ஷாஜஹானின் வருமானம் ரூ. 22,50,00,000 ஆகும். தமது ஆட்சியின் முதல்பகுதியில் அவுரங்கசீப் ரூ. 38,63,16,584 வரியாகக் கொண்டார். இதில் ஜிஸியா, புண்ணியச் செலவு வரி, குறிப்பாக இந்துக்களின்மீது விதிக்கப்பெற்ற வேறு சில சில்லறை வரிகள் அடங்கவில்லை. முகலாய அரசவையின் ஆடம்பரத்தையும், அளவுமீறிய செலவையும், அற்பத்தனமான அதிகாரவர்க்கத் தையும் ஆதரிப்பதற்கென எண்ணற்ற இந்துக் குடிகள் உழைக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது என பெர்னியர், டேவர்னியர், மனுக்கி போன்ற சமகால ஐரோப்பியப் பிரயாணிகள் குறிப்பிட்டுள்ளனர். மேலும், மக்களை வற்புறுத்திப் பயிர்த்தொழிலில் ஈடுபடுத்தவேண்டியிருந்தது. குடியானவர்கள்மீது அரசாங்கம் தாங்கமுடியாத சுமையை வைத்தது. அவர்கள் தங்களுடைய

உழைப்பினுல் வரும் பயனில் பெரும்பகுதியை அரசுக்குக் கொடுக்க வேண்டியதாயிற்று. எண்ணிறந்த இந்து குடிகளின் நிலையை மோர்லண்டு (Moreland) பின்வருமாறு சுருக்கி எழுதியுள்ளார்: ‘ஆடையற்று இருந்த நெசவாளர் பிறர் உடுத்த உழைத்தனர். பசியுடன் வாடிய குடியானவர்கள் பட்டினங்களுக்கும், பெரிய நகரங்களுக்கும் உணவளிக்கப் பாடுபட்டனர். இந்தியா முழுவதையும் எடுத்துப் பார்க்கும்போது, அது பொன்னுக்கும் வெள்ளிக்கும் பண்டமாற்ருகப் பயனுள்ள பொருள்கள் பலவற்றை இழந்தது. வேறுவகையில் கூறுவதானுல் கற்களுக்காக உணவைத் தந்தது. ஒவ்வொரு பருவகாலத்திலும் பட்டினியின் விளிம்பில் வாழ்ந்த ஆண்களும் பெண்களும் உணவு கிடைக்கும் என்ற நம்பிக்கையில் தான் உயிர் வாழ்ந்தனர். ஆயின், அடிக்கடி நடைபெறுவதைப் போல, அந்த நம்பிக்கை நாசமாகுமானுல் அடிமைகளாகத் தங்களை விற்பதே உய்யும் வழியாக இருந்தது. பட்டினி, தற்கொலை, மனிதரை மனிதர் உண்ணுதல் ஆகிய மாற்று வழிகளும் உண்டு. உற்பத்தியைப் பெருக்கி, வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதன்மூலமாகத் தான் இத்தகைய மோசமான நிலையிலிருந்து விடுதலை பெறமுடியும். ஆயின், அப்போதிருந்த அரசாங்க ஆட்சிமுறைகள் அவ் வழியினை அடியோடு அடைத்தன. உற்பத்தியை அரசாங்கம் ஒறுத்தது. பொருள் நுகர்ச்சியில் கூடுதல் தோன்றும் அறிகுறியைப் புதிய வரிகளுக்கான முன்னறிவிப்பாகக் கருதியது. (Moreland: ‘From Akbar to Aurangzeb’, பக். 304–5).

ஆயிரம் ஆண்டுகளாக இருந்த துன்பத்திற்குப் பிறகு சுதந்திரம் தோன்றி, வயதுவந்தோர் வாக்குரிமை வழக்கிற்கு வந்து, நிலப் பிரபுத்துவம் (zamindari) ஒழிக்கப்பெற்றதால் நம்நாட்டு எண்ணிறந்த ஏழை மக்களின் நம்பிக்கைவாய்ந்த புதிய சகாப்தம் இன்று தோன்றியுள்ளது.

## இராஜஸ்தானத்தையும், தோவாப் பகுதியையும் ஆரம்ப கால சுல்தானியர் கைப்பற்ற முடியாத நிலையில் முகலாயர் மட்டும் வெற்றி பெற்றது எவ்வாறு

தோவாப் பகுதியை வென்று அடக்குவதிலும், தீரமிக்க இராஜபுத்திரரை அடக்கி வட இந்தியா முழுவதிலும், தக்காணத்தின் சில பகுதிகளிலும் தங்களுடைய பயனுள்ள கட்டுப்பாட்டை ஏற்படுத்துவதில் முகலாயர் வெற்றி கண்டனர். ஆனுல், அவ்வாறு செய்வதில் டில்லி சுல்தான்கள் தோல்வியுற்றனர். நிதி கொள்வதற்கும் நாட்டின் பல பகுதிகளில் வாழ்ந்த கிளர்ச்சி செய்யும் மக்களை அடக்கி

வைப்பதற்கும் அவர்கள் பல படையெடுப்புகளையும் மேற்கொண்டனர். இத்தகைய நிலைக்கு உற்ற காரணம் என்னவென்று கேட்கலாம். ஆயின் காரணத்தைக் கண்டுபிடித்தல் கடினமன்று. ஆப்கானிஸ் தானத்திலிருந்தும், மத்திய ஆசியாவிலிருந்தும் அடுக்கடுக்காக வந்த அன்னியப் படையெடுப்பாளரிடமிருந்து தங்களுடைய சுதந்திரத்தையும் பண்பாட்டையும் காத்துக்கொள்வதற்காகப் பொதுவாக இந்துக்களும், குறிப்பாக இராஜபுத்திரரும் 350 ஆண்டுகளுக்கு மேலாக ஓயாது போரிட்டு வந்தனர் என்பதை நாம் கவனத்திற் கொள்ளவேண்டும். ஆனால் முகலாயர் காலத் தொடக்கத்தில் அவர்கள். சோர்வுற்றிருந்தனர். படையெடுப்பாளரை எதிர்த்து நின்ற நம் நாட்டவர் ஏறக்குறைய ஒன்றுகவே இருந்தனர். தந்தை, மகன், பேரன் என்று வழிவழியாகவந்த அதே மக்கள் அன்னியருடன் போராடினர். எண்ணிக்கை குறைந்து, ஏமாற்றத்தால் மனம் தடுமாறி, தளவாடங்களில் வறியராகிச் சோர்வுற்ற நிலையில் போராடி வந்தனர். ஆனல், மத்திய ஆசியாவின் பண்படாத தங்களது நாடுகளிலிருந்தோ ஆப்கானிஸ்தானத்திலிருந்தோ அடுக்கடுக்காக வந்த படையெடுப்பாளர்கள் புதுமைப் பொலிவுடன் போரிட்டனர். இரண்டாவதாக, ஐரோப்பாவிலும் மேற்கு ஆசியாவிலும் போரில் புரட்சியைப் புகுத்திய வெடிமருந்து கண்டுபிடிக்கப் பெற்றிருந்த காலத்தில், முகலாயர் இந்தியாவிற்கு வந்தனர். துருக்கிய வல்லுநர் இயக்கிய பெரிய பீரங்கிகளும் சிறு பீரங்கி வகைகளும் அவர்களுடமிருந்தன. ஆனல், நம் நாட்டு மக்கள் வெடிமருந்தைப் பயன்படுத்த அறிந்திருக்கவில்லை. அவர்களிடம் பீரங்கியும் இல்லை. பஞ்சாப் சமவெளியில் பாஜாரிலும் (Bajaur), பேராவிலும், பானிப் பட்டிலும், கான்வாவிலும் பாபர் பயன்படுத்திய பீரங்கிகளின் நாச வேலையைக் கண்டு அவர்கள் திகைப்புற்றனர். முகலாயரது குண்டுகளுக் கெதிரில் அவர்களுடைய அம்புகள் பயனற்றவையாயின. மூன்ருவதாக, பாபர் கொண்டுவந்த போர்முறை (இந் நூலின் இரண்டாம் அதிகாரத்தில் விளக்கியவாறு) உயர்வானது. போர்க் களத்தில் படைவீரரை ஒழுங்கமைத்தல், படைப்பிரிவுகளை அணி வகுத்து நிறுத்துதல் ஆகியவற்றிலும் சண்டை நடக்கும்போது பயன்படுத்திய சூழ்ச்சித்திற முறைகளிலும் அது மிகவும் மேம்பட்டு விளங்கியது. நான்காவதாக, பாரசீகம், மத்திய ஆசியா, ஐரோப்பா ஆகிய பகுதிகளில் ஏற்பட்ட ஆயுத வளர்ச்சியோடும் படைமுறை சார்ந்த சூழ்ச்சித் திறன்களோடும் தொடர்பற்று இருந்த இந்திய அரசர்களுக்கும் அரசியல் அறிஞர்களுக்கும், ஜஹாங்கீர் நீங்கலாக உள்ள பாபர் முதல் அவுரங்கசீப் வரையிலான முகலாய மன்னர்கள் படைத்தலைமையிலும், வெல்திறத்திலும் மேம்பட்டு விளங்கினர். ஐந்தாவதாக, டில்லி சுல்தானியரின் வலிமையைப் பலமுறை எதிர்த்து நின்ற இராஜஸ்தானம், மத்தியப் பிரதேசம், தோவாப்

உள்ளிட்ட வட இந்தியாவை உண்மையாக அடக்கியாண்டவர் அக்பர் ஒருவர்தான் ; அவரது முன்னேரான பாபரோ ஹுமா யூனே அல்லது அவரது வாரிசுகளான ஜஹாங்கீர், ஷாஜஹான், அவுரங்கசீப் ஆகியோரோ அல்லர் என்பது குறிப்பிடத்தக்கது. மேலும், அக்பர் இடையருத பல வெற்றிகளைக் கொண்ட வெற்றி வீரர்மட்டுமல்லர் ; அவர் மிக உயர்ந்த நிலையிலிருந்த அரசியல் அறிஞரும் ஆவார். இராஜபுத்திரர்களுடனுன நட்பின் உண்மை மதிப்பை உணர்ந்து, சமயப் பொறைக் கொள்கையாலும் நட்பு முறையிலான கூட்டுறவினுலும் அவர்களுடன் சமரச இணக்கம் செய்துகொள்ள மிகுந்த ஆர்வம்கொண்டிருந்தார். இராஜபுத்திரர் களைப் பொறுத்தவரையில் இடைவிடாது அதிகாரத்தைக் காட்டு வது பயனற்றது என்பதோடு ஆபத்தானது என்பதையும், பேரர சரை ஆதரிக்கவேண்டுமென்ற தனிப்பட்ட முறையிலான ஆர் வத்தை அவர்களுக்கு அளிப்பதன் மூலமாக அவர்களுடைய மதிப் பையும் பற்றுறுதியையும் நிச்சயமாகப் பெறமுடியும் என்பதையும் அறிவுக்கூர்மையுடன் அக்பர் உணர்ந்துகொண்டார் என கர்னல் ஜேம்ஸ் டாட் (Col. James Tod) எழுதியுள்ளார். இங்ஙனம் அக்பருடைய அரசியல் மேதைமையும், கவர்ச்சியான நடைப் பாங்கும் உண்மையில் இந்தியரை, குறிப்பாக இராஜபுத்திரரை வெற்றிகொண்டனவே யன்றி அவரது படைபலமன்று. அவர் காலத்தில் வெற்றிகொண்ட பகுதிகளில் முறையான ஆட்சி ஏற் பட்டது. அவர் ஒரு கையினுல் விளைந்த புண்ணை மறு கைகொண்டு ஆற்றினுர். அத்தகைய உயர்ந்த மேதைமையை டில்லி சுல்தானியர் எவராலும் எட்டமுடியாது. ஆருவதாக, அக்ப ருடைய வெல்திறத்தினுல் இராஜபுத்திரர் பிளவுபட்டனர். அவர்கள் ஒருவருக்கொருவர் எதிராக இருந்ததால் முகலாயர் ஆதிக்கத்திற்கு எதிராக இருந்த பயனுள்ள எதிர்ப்பின் சக்தி குன்றியது. பதினு ரும் நூற்ருண்டின் பிற்பகுதியில் தலைசிறந்த இராஜபுத்திர வீரராக வும், நாட்டுப் பற்று மிக்கவராகவும் விளங்கிய மகாராணு பிரதாப் பிற்கு எதிரான போரில் மற்றெல்லா இராஜபுதனத்து அரசர்களும் அக்பருடன் இணைந்தனர். 1576ஆம் ஆண்டில் பிரதாபிற்கு எதிராக ஹால்டி–காதி எனும் சண்டையில் ராஜா மான்சிங்கின் வெற்றி பற்றிக் குறிக்கவந்த வரலாற்று அறிஞன் பதௌனி, 'இஸ்லாத் தின் வாளினை இந்து இயக்குகிருர்' என்ற முல்லா ஷிரீனுடைய (Mulla Shirin) குறிப்பின் முழுப்பொருளை அன்றுதான் உணர்ந்த தாகச் சூதுவாதற்ற, ஆனுல் சரியான முறையில் விளக்கினுர். அதனுல் 18, 19ஆவது நூற்ருண்டுகளில் பிரிட்டிஷாருக்காக இந்தி யாவை வெற்றிபெற்றுத் தருவதில் இந்தியர்களே முக்கிய பங்கு பெற்ற தைப்போல், முகலாயர்களுக்காக இந்தியாவை வெற்றிபெற்றுத்தந்த வர்கள் இந்தியர்களே. மேவாரின் மன்னர் அமர்சிங், காங்ராவின்

அரசர் ஆகியோரின் பெயரளவிலான பணிவையும், தக்கணத்தில் வறண்ட பகுதிகள் சிலவற்றின்மீதான ஆதிக்கத்தையும் தவிர, ஜஹாங்கீரும் ஷாஜஹானும் குறிப்பிடத் தகுந்த அளவிற்கு முகலாயப் பேரரசினை விரிவுபடுத்தவில்லை. தக்கணத்தில் இருபத்தைந்து ஆண்டுகளாக இருந்த அவுரங்கசீப்பின் முயற்சியினுல் புதிய பகுதிகள் ஏதும் முகலாயப் பேரரசுடன் இணையவில்லை. மாருக அப் பேரரசர் இறந்து முப்பது ஆண்டுகளுக்குள் முகலாயப் பேரரசு சீர்குலைவதற்கும், சிதைவதற்கும் அம் முயற்சி காரணமாக அமைந்தது.

## இந்திய சமுதாயத்தில் ஒன்றறக் கலக்க முஸ்லீம்களின் மறுப்பு

முகலாயர் ஆட்சி தொடங்கிய காலத்தில் இந்து சமயத்தையும் இஸ்லாத்தையும் சமரசம் செய்து இணக்குவிக்கும் பெருமுயற்சி இந் நாட்டில் தோன்றியது. அப்போது வாழ்ந்திருந்த தலைவர்களான சைதன்யரும் நானக்கும் கடவுளின்மீதான அன்பையும் பற்றையும் வலியுறுத்தினர்; ஜாதி முறையையும் சமய குருமாரின் ஆதிக்கத்தையும் பழித்தனர்; சமயத்தின் உறுதிக் கோட்பாட்டையும், அதன் வெளிப்புற அமைப்புகளையும் சடங்குகளையும் வேண்டாமென்று வாதிட்டுத் தடுத்தனர். ஆயினும் இத்தகைய இயக்கம் முஸ்லீம் மன்னர்கள்மீதும், முஸ்லீம் பொதுமக்கள்மீதும் அதிக செல்வாக்குப் பெறவில்லை. ராமனும் ரஹீமும், ஈஸ்வரனும் அல்லாவும் ஒரே கடவுளின் பல நாமங்களே என்பதை அவர்கள் நம்ப மறுத்தனர். இருப்பினும் அவ்வியக்கம் தொடர்ந்து வந்தது. அக்பரின் காலத்தில் முஸ்லீம்களை இணைத்துக்கொள்வதற்காக இந்துக்கள் புதிய முயற்சியிலீடுபட்டனர். அவர்கள் அல்லோபநிடதத்தை (Allopanishad) எழுதினர். முற்பிறவியில் அக்பர் ஓர் இந்துசமயத் துறவியாக இருந்தார் என்றும், அரசராகப் பிறப்பதற்காகப் பிரயாகையில் அவர் தவம் (tap) செய்தார் என்றும் கூறி அதனைப் பேரரசர் நம்புமாறு செய்ய முயன்றனர். அக்பரும், தாம் தவமிருந்ததாகக் கூறப்பெற்ற இடத்தினைத் தோண்டிப் பார்க்குமாறு ஆணையிட்டார். அங்கே சன்யாசியின் குடிசையில் இருக்கத்தக்க கமண்டலமும், மான் உரியும், வேறு சில பொருள்களும் கிடைத்தன. டில்லியின் அரசர் அண்டத்தின் அரசர் என்று இந்து பண்டிதர்கள் அறிவித்தனர். அவர்கள் பேரரசர் அக்பரை அநேகமாக ‘ஆதர்’ (awtar) ஆகச் செய்யும் அளவிற்குச் சென்றனர். தர்ஷனிய பிராமணர்கள் (Darshaniya Brahmans) காலையில் பேரரசரின் திருமுகத்தைக் காணுமல் காலை உணவு கொள்வது இல்லை. அரச

சபையிலிருந்த இச்சகம் பேசுவோர், பேரரசர் சாதாரண மானிடர் அல்லர் என்று பறைசாற்றும் அளவிற்கு முகத்துதி செய்வதில் ஈடு பட்டனர். ஆயினும், முகலாயர்களை இந்து சமயக் கூட்டத்தில் ஒன்றிணைப்பதில் தோல்வியே கண்டனர்.

மற்ற முஸ்லீம்களைப் போலவே முகலாயரும் நாடு பிடிப்பதற் காக மட்டுமன்றி அந்த நாட்டு மக்களைச் சமயமாற்றம் செய் வதற்காகவும் இந்தியாவிற்கு வந்தனர். இஸ்லாம், ஆன்மீகப் போரில் நம்பிக்கைகொண்ட சமயமாகும். அதனைப் பின்பற்று பவர்கள் முகமது நபியின் அறிவுரையைப் பரப்புவதைத் தங்களது தலையாய கடனாகக்கொண்ட பற்றார்வம் மிகுந்த சமயப் பரப்பாள ராகத் திகழ்கின்றனர். இரண்டாவதாக, 'ஒரு கடவுட் கோட் பாட்டைத் தீவிரமாகக்கொண்ட இஸ்லாம்' பலகடவுட் கொள்கை கொண்ட சமயத்துடன் எவ்வித ஒப்புரவிணக்கம் ஏற்படுவதை யும் எதிர்த்தது. 'அதனால் அல்லாவை விஷ்ணுவின் எண்ணிறந்த அவதாரங்களில் ஒருவராகவும், முகமதைத் தெய்வத் தன்மை பொருந்திய சாது என்றும் ஏற்றுக்கொள்வதன் மூலமாக இந்திய முஸ்லீம்களை இந்து சமயக்கட்டில் இணைப்பது என்பது இயலாத ஒன்றாயிற்று.' மூன்றாவதாக, ஆரம்பகால துருக்கிய ஆப்கானிய அரசர்களைப் போலவே முகலாயரும் அன்னிய வெற்றியாளர்கள். அவர்கள் இந்துக்களைத் தாழ்ந்தவர்கள் என வெறுத்து ஒதுக்கினர். நாட்டை வெற்றிகொண்டவர்களின் உள்ளியல்பான பெருமிதம் அவர்கள் உள்ளத்தில் குடிகொண்டிருந்தது. அவர்கள் தனித்து வாழத் தீர்மானித்தனர். நான்காவதாக, இஸ்லாம் சமய மறுப்பிற்கு மரண தண்டனை அளித்து, முஸ்லீம் ஒருவரை அச் சமயத்திலிருந்து வெளியேற்றிக்கொண்டுவருவது கடும் குற்றம் என்று கொண்ட மக்களிடம் இந்து சமயப் பரப்பாளரும், போதகர்களும் வெற்றிபெறுவது முடியாத ஒன்றாகும். இஸ்லாம் சமயத்திற்கு மாற்றப்பட்ட இந்து ஒருவர் தமது முன்னோர்களின் சமயத்தின்மீது பரிவு காட்டினால், இஸ்லாமிய அரசின் சட்டங் களின்படி அவர் மரண தண்டனைக்குள்ளாவார். அக்பரின் ஆட்சிக் காலத்தின் பிற்பகுதி நீங்கலாக முகலாயர் காலம் முழுவதிலும் இவ் விதி வழக்கிலிருந்தது. ஐந்தாவதாக, இந் நாட்டில் முஸ்லீம்களின் ஆட்சி இருந்த காலத்தில் நபிநாயகத்தின் வாழ்க்கையை அல்லது அவரது போதனைகளை எதிர்த்து யாரும் ஒரு வார்த்தையும் சொல்லக்கூடாது. நபிநாயகத்தை அவமதிப் பவர் அதாவது சாப்-அல்-ரசூல் (Sabb-al-Rasul) என்னும் குற்றம் புரிபவர் மரண தண்டனைக்குள்ளாவார். 'ஸிந்கிஸம் (Zindqims– அதாவது புறச்சமயம், கட்டுப்பாடற்ற சமயக் கருத்து) நபிநாய கத்தின் பெருமையை அவமதிக்கும் அறிவுசார்ந்த புரட்சி (அதனால்

அதற்கு மரண தண்டனை அளிக்கவேண்டும்) என்று முஸ்லீம் சட்ட வல்லுநர்கள் விளம்பினர். இத்தகைய கடுமையான தண்டனைக் குரிய விதி இருந்த காரணத்தால் முகலாயர் காலத்தில் இஸ்லாம் சமயத்தையோ அதனை நிறுவியவரையோ மென்னயமாகக் கண்டிப்பதும் நினைத்துப்பார்க்கவும் இயலாத ஒன்றாகியது.' (See Sarkar, 'Mughul Administration', 4th edition, பக். 108.) ஆறுவதாக, இரு சமுதாயத்தாருக்கு இடையே இணைப்பினை ஏற்படுத்த இன்றியமையாததாக இருந்த கலப்புத் திருமணம் நடைபெற வழியில்லை. எவ்வாறெனில், முஸ்லீம் ஒருவரை மணப்ப தற்குமுன் இந்து மங்கை இஸ்லாம் சமயத்தைத் தழுவவேண்டு மென்று வற்புறுத்தும் பழக்கமும், முஸ்லீம் மாதினை மணப்பதற்கு முன் இந்து சமயத்தைச் சார்ந்தவர் முஸ்லீமாக மாறவேண்டு மென்று வற்புறுத்தும் வழக்கமும் நிலைத்திருந்தன. இக் காலத்தில் இருப்பதுபோன்ற சமயம் சாராத திருமணத்தை இஸ்லாம் அனு மதிப்பதில்லை என்பதை மறந்துவிடுதல் கூடாது. இஸ்லாத்தில் மணமக்கள் இருவரும் முஸ்லீம்களாக இருந்தால்தான் முறையான திருமணம் நடக்கமுடியும். அப்படியின்றி அவர்களில் ஒருவர் முஸ்லீம் அல்லாதவராக இருப்பின், திருமணத்தை முறையான தாக்குவதற்கு, அவனோ, அவளோ முஸ்லீமாக மாறவேண்டும். இத்தகைய சூழ்நிலையில் இரு சமயத்தாரிடையே ஒற்றுமையைத் தோற்றுவிப்பதற்காக நம் நாட்டுச் சீர்திருத்தக்காரர்களும், போதகர்களும் எடுத்துக்கொண்ட முயற்சிகளனைத்தும் பயனற்றுப் போயின. மேலும், ஜாதுநாத் சர்க்கார் குறிப்பிடுவதைப் போல, 'முஸ்லீம்களின் மனங்களில் இந்திய நாட்டிற்குப் புறம்பான போக்கு தொடர்ந்து வந்திருக்கின்றது.'

## முகலாய ஆட்சியின் வெற்றிகள்

முகலாயப் பேரரசும், அதற்கு முன்பிருந்த டில்லி சுல்தானியமும் பெற்ற சிறப்பான வெற்றி யாதெனில், சோழரது வீழ்ச்சிக்குப் பின் தோன்றிய இந்தியாவின் தொடர்பற்ற நிலையை முடிவிற்குக் கொண்டுவந்ததேயாகும். வெளிநாடுகளுடன் தொடர்பு இல்லாத தால் நம் நாட்டவருடைய நோக்கம் குறுகியது. நாகரீகம் மாறு மரபுடையதாகியது. மக்களிடமிருந்த முன்னேற்ற ஆர்வம் அழிந்தது. மீண்டும் ஆஃப்ரிக்காவுடனும் ஆசியாவின் பெரும்பாலான பகுதிக ளுடனும் தொடர்பு ஏற்பட்டதால் வாழ்க்கை, எண்ணம் ஆகிய வற்றில் உலகப் போக்குடன் நம் நாடு ஒததுப்போக முடிந்தது. மேலும், இடைக்காலத்துப் பன்னாட்டு வாணிகத்தில் பங்குபெற முடிந்தது. பொக்காரா, சாமர்கண்டு, பால்க், கோரேசான்,

குவாரிஸிம், பாரசீகம், மலேயா தீவக்குறையிலிருந்த நாடுகள் ஆகியவற்றுடன் இந்தியா மீண்டும் வாணிபத் தொடர்புகொள்ளத் துவங்கியது. முகலாய ஆட்சி ஏற்பட்டது முதல் ஆப்கானிஸ்தானம் முகலாயப் பேரரசின் ஒரு பகுதியாக மாறியது. 1739ஆம் ஆண்டு வரை அது அந் நிலையில் இருந்துவந்தது. வெளியுலகுடன் தொடர்பு கொள்ளவும் வாணிகம் செய்யவும் நிலம், கடல் ஆகிய இரு வழிகளும் பயன்பட்டன. அரேபியா, பாரசீகம், துருக்கி, எகிப்து, பார்பரி (Barbary), அபிசீனியா, ஸான்ஸிபார் போன்ற நாடுகளுடன் வாணிபம் செய்வதற்கான வாயில்களாகத் தட்டா, புரோச், சூரத், சால், ராஜ்பூர், கோவா, கார்வார் ஆகிய துறைமுகங்கள் விளங்கின. மசூலிப்பட்டணம் போன்ற நமது கிழக்குக் கரையிலமைந்த துறை முகங்கள் எகிப்திற்கும், சுமத்திராவிற்கும், ஜாவாவிற்கும், சீனுவிற்கும் கப்பல்களை அனுப்பிவைத்தன. நிலவழிகள் போலன் கணவாய் வழியாக காந்தாரத்திற்கும், அங்கிருந்து பாரசீகத்திற்கும் சென்றன. முகலாயர் காலம் முழுவதிலும் மக்கள் நடமாட்டம் மிகுதியாக இருந்தது.

அடுத்து, அநேகமாகத் தென்கோடி நீங்கலாக உள்ள இந்தியத் துணைக்கண்டம் முழுவதையும் மத்திய அரசு ஒன்றின்கீழ் கொண்டு வந்து, ஒருமுகப்படுத்தப்பெற்ற ஒற்றை அரசு முறையை (unitary system) தந்ததன் மூலமாக முகலாயப் பேரரசு, வட இந்தியா முழுவதிலும், தக்கணத்தின் பெரும் பகுதியிலும் அரசியல் ஒற்று மையை உருவாக்கியது. முகலாய மாநிலங்கள் இருபதும் ஒரே வகையான ஆட்சி முறையையும், ஒரே ஆட்சிமொழியையும், ஒரேவித அரசாங்கப் பதவிகளையும், அரசாங்க விதி முறைகளையும் கொண்டிருந்தன. அதிகாரிகளும் படையினரும் மாநிலத்திற்கு மாநிலம் மாற்றப்பட்டனர். நாடு முழுவதிலும் வணிகர்கள், பிரயாணிகள், புண்ணியச் செலவினர் ஆகியோர் சுற்றிவந்தனர். இவை அனைத்தும் நாட்டின் பேரரசு சார்ந்த ஒற்றுமையைத் தோற்றுவித்தன. ஒரு மாநிலத்து மக்கள் மற்றொரு மாநிலத்தில் கவலையின்றி வாழ்ந்தனர்.

மூன்றாவதாக, திறமையும் நீண்ட ஆயுளும் பெற்ற பல அரசர்கள் ஏறக்குறைய இருநூறு ஆண்டுகளாக அளித்த வெளிநாட்டு அமைதியும், உள்நாட்டு ஒழுங்கும் பாதுகாப்பும், பயிர்த்தொழில், வாணிகம், கைத்தொழில் ஆகியவற்றைத் தூண்டி, பொருளாதார வளம் மிகுந்த சகாப்தத்தைத் தோற்றுவித்தன. நயமான பருத்தி கம்பள ஆடைகள், கம்பளங்கள், திரைச் சீலைகள், பொன், வெள்ளி அணிகலன்கள் ஆகியவற்றையும், பிற ஆடம்பரப் பொருள்களையும் பெருமளவில் உற்பத்தி செய்வதற்காகப் பல

தொழிற்கூடங்களை அரசாங்கம் நிறுவியது. அக்பர் நிலை நிறுத்திய நேர்மையும் தாராளத் தன்மையும்கொண்ட நிதிமுறைத் திட்டத்தின் விளைவாக இரு தலைமுறைகளில் வாழ்ந்த நம் நாட்டுக் குடியானவர்களின் வாழ்க்கை டில்லி சுல்தானியர் காலத்தில் இருந்ததைவிட மேம்பட்டு விளங்கியது. உயர்குடிப் பிறந்தோரும் நடுத்தர வகுப்பாரும் பன்னாட்டு வாணிகத்தினால் பணக்காரராயினர்.

நான்காவதாக, வரலாற்று எழுத்தாண்மைக் கலையின் வளர்ச்சிக்கு முகலாயர்கள் (அவர்களுக்கு முன்பிருந்த துருக்கிய ஆப்கானியர் ஓரளவிற்கு) பொறுப்பானவர்கள். வரலாற்றினை வரையும் கலையினை இந்துக்கள் சிறப்பாகப் போற்றி வளர்க்கவில்லை. அப்படியே செய்தபோதிலும் நிகழ்ச்சிகளின் காலத்தைக் குறிப்பிடுவதில் கவனம் செலுத்தவில்லை. அதற்கு மாறாக, முகம்மதியர்கள், அரசாங்க ஆவணங்களை எழுதிப் பாதுகாப்பதிலும், காலவழிச் செய்திக் கோவைகளை எழுதுவதிலும், எழுதும்போது சரியான ஆண்டு, திங்கள், நாள் ஆகியவற்றைத் தருவதிலும் கவனம் செலுத்தினர். பல முறைகளை அடிப்படையாகக்கொண்டு, வெவ்வேறான காலங்களில் இருந்து தொடங்கும் பல பொது ஆண்டுகளைப் (era) பயன்படுத்திய இந்துக்களுக்கு நேர்மாறாக முகம்மதியர் ஹிஜ்ரி ஆண்டு என்று பெயர்பெற்ற பொது ஆண்டு ஒன்றையே பயன்படுத்தினர். முகலாய மன்னர்கள் வரலாற்று அறிஞரை ஆதரித்தனர். அவர்களிற் சிலர் தங்களது வாழ்க்கை விளக்க நூல்களைத் தாங்களே வரைந்தனர். இங்ஙனம் முகலாயர் காலத்தில் ஏராளமான கடிதங்களும் காலவழிச் செய்திக் கோவைகளும் எழுதப்பெற்றன. இவை பல மன்னர்களுடைய ஆட்சிக் காலங்களின் முக்கிய நிகழ்ச்சிகள் பற்றிய உண்மை விளக்கங்களைத் தருகின்றன. அதன் விளைவாகத் தான் முகலாயர் காலவரலாறுபற்றிய முறையான ஆராய்ச்சி நூல்கள் பலவற்றைத் தற்கால இந்தியர்கள் எழுதமுடிந்தது.

ஐந்தாவதாக, டில்லி சுல்தானியர் காலத்தில் இருந்ததைவிட, இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்குமிடையே அன்றாடத் தொடர்பு ஏற்படுவதற்கு அதிக வாய்ப்புகளை ஏற்படுத்தித் தந்ததன் மூலமாக முகலாயர் காலத்தில் நாட்டிலிருந்த இரு பெரும்பான்மையர் சமயங்களுக்கிடையே மேம்பட்ட மன ஒத்திசைவு வளர்ந்தது. இந்திய வரலாற்றில் முதன் முறையாக முஸல்மான்கள் இந்து சமயக் கருத்துகளையும் கோட்பாடுகளையும் கற்று, அவற்றினைப் போற்றவும் தலைப்பட்டனர். அபுல் ஃபாஸலும் அப்துர் ரஹீம் கான் கன்னுவும், ராஸ்கானும், தாரா ஷுகோவும் நமது சாத்திரங்களை முறையாகக் கற்று, அவற்றினைப் பாரசீக உரை நடை மூலமாகவும் இந்திக் கவிதை

களின் மூலமாகவும் விளக்கினர். மற்றொருபுறத்தில் இஸ்லாத்தின் நெருங்கிய தொடர்பு காரணமாக இந்து சமுதாயத்தில் எதிர்வினை தோன்றியது. ஜாதி முறையைக் கடுமையாக்குவதன் மூலமாகத் தன்னைக் காத்துக்கொள்ள இந்து சமயம் ஆரம்பகாலத்தில் முயன்ற போதிலும், இஸ்லாத்தின் விட்டுக்கொடுக்காத ஒரே கடவுட் கொள்கை அதன்மீது செல்வாக்கு செலுத்தத் தவறவில்லை. புதிய சமயத்தோடு சமரச இணக்கம் செய்துகொள்ளவேண்டுமென்ற விருப்பம் வந்தது அதன் முக்கிய விளைவாகும். ஒரே குறிக்கோளை அடைவதற்கான வெவ்வேறான வழிகளே சமயங்கள் என்று கூறி, அச் சமயங்களின் அடிப்படை ஒற்றுமையை நமது ஆச்சாரியர்களும், சீர்திருத்தக்காரர்களும் வற்புறுத்தத் தொடங்கினர். ஆயினும், ஹன்டரும் (Hunter) வேறு சில ஐரோப்பிய அறிஞரும் செய்ததைப் போல 'இஸ்லாத்தின் செல்வாக்குக் காரணமாகவே இடைக் காலத்தில் இந்துக்களிடையே ஒரே கடவுட் கோட்பாடு சார்ந்த அல்லது பிராமண சமய எதிர்ப்பு, ஜாதி முறை எதிர்ப்பு இயக்கங்கள் எழுந்தன' எனக் கொள்ளுதல் தவறாகும். பண்டைக் காலத்தி லிருந்தே ஒருவனே தேவன் எனும் கொள்கையை இந்துக்களிடையே தலைசிறந்த அறிஞர்கள் நம்பிவந்தனர். பொதுமக்கள் போற்றி வணங்கும் எண்ணிறந்த தெய்வங்களுக்குப் பின்னால் தன்னிகரற்ற தெய்வம் ஒன்றை ஏற்றுக்கொண்டனர். அதனால் ஒரே கடவுட் கோட்பாட்டை இந்துக்களுக்கு இஸ்லாம் சமயம் கற்றுத்தந்தது என்பது வரலாற்று உண்மையன்று. ஆயினும், பிராமணர்களுடைய மேலாண்மைக்கும் சமயச் சடங்குகளுக்கும் எதிராக எழுந்த இயக்கங் களுக்கு இஸ்லாம் தூண்டுதல் அளித்தது. மேலும், அது பக்தி இயக்கத்தையும் மறைமுகமாக வளர்த்தது. இரு சமயங்களையும் சார்ந்த பற்றற்ற வழுள்ளவர்கள், தங்கள் சமயங்களில் உள்ள சடங்கு கள், மாறாநிலைக் கோட்பாடு, சமயப்புறச் சின்னங்கள் ஆகியவற்றில் இருந்த வேற்றுமைகளைப் புறக்கணித்து ஒன்றாகச் சேருவதற்குற்ற பொது நிலையை பக்தி இயக்கம் ஏற்படுத்தியது. முகலாயர் காலத் தொடக்கத்தில் நானக், தாது, சைதன்யர் போன்றவர்கள் நேசச் செய்தியை யாவருக்கும் போதித்தனர். பிராமணர்கள், முல்லாக்கள் இவர்களுடைய எந்த ஒரு குறிப்பிட்ட சமயத்தின் மாறாத சமயக் கோட்பாட்டில் நம்பிக்கை கொள்ளாதவர்களும் கடவுளுக்கு முன்னால் சமமானவர்களாகக் கொண்ட பொதுச் சமயத் திருக்கூட்டம் ஒன்றை உருவாக்க முயன்றனர். இத்தகைய இயக்கம் முகலாயர் ஆட்சியில் நீண்டகாலம் தொடர்ந்து வந்தது.

அக்பருடைய அரசவையில் இருந்த தாராளச் சூழ்நிலையில் அறிவு வளர்ச்சியுற்ற இந்துக்களையும் முஸ்லீம்களையும் இணைக்க முயன்ற, 'சூபிஸ சமயப்பிரிவு' (Sufism) தலைகாட்டியது. அது

முகலாயர் காலம் முழுவதிலும் கற்றறிந்த இந்துக்களையும் முஸ்லீம்களையும் தொடர்ந்து தன்பால் இழுத்துவந்தது. இந்துக்களின் வேதாந்தத்திலிருந்தே 'சூபிஸம்' முளைத்தது எனலாம். பற்றார்வமிக்கவர்கள் கடவுளைக் கண்டு அவருடன் நேரடித் தொடர்புகொண்டதாக உணருவதற்கேற்ற 'நுண்ணறிவு உணர்ச்சி' 'இன்புநிலை'யான சமயமே 'சூபிஸம்' ஆம். அதன் காரணமாக மாறாத சமயக் கோட்பாட்டின் தளையிலிருந்து விடுபட்ட பேரறிஞர்களும், மெய்யுணர்வு அறிஞர்களும், மறைஞானிகளும் மட்டுமே அதில் சேர்ந்திருந்தனர். அக்பர் காலத்திலிருந்து நம் நாட்டில் கற்றறிந்த மாந்தரிடையே 'சூபிஸம்' விரைவாகப் பரவத் தொடங்கியது. அவரது தாராளச் சமயக் கொள்கை காரணமாக அரசவையிலும் பாசறையிலும் இந்துக்களும் முஸ்லீம்களும் ஒன்றாகக் கூடுவதற்கு வழி வகுத்தது. மேலும், "சூபிஸ சமய போதகர்களும் ஆதரவாளர்களும் தடையோ இடர்ப்பாடோயின்றிக் கூட முடிந்தது. பேரரசரே 'சூபி' கொள்கையில் ஓரளவு நாட்டங்கொண்டு அச் சமய அறிஞர்களை ஆதரிக்கத் தொடங்கினார். அவரது கொள்ளுப் பேரரான தாரா ஷுகோவும் 'வேதாந்தம் ஒன்றில்தான் நிறைவான அனைத்திறைக் கொள்கையைத் தாம் கண்டதாக' வெளிப்படையாகவே அறிவித்தார். உபநிடதங்களில் ஐம்பதை மொழிபெயர்த்தளித்தார். மஜா மல் பஹாரைன் (Maja-maul-Baharain) அல்லது 'இரு சமுத்திரங்களின் சங்கமம்' எனும் தனிச் சிறப்புவாய்ந்த தலைப்புகொண்ட நூலை அவர் எழுதினார். அதில் இந்து சமய அனைத்திறைக் கொள்கை சார்ந்த கலைச் சொற்களைப் பாரசீக மொழியாளருக்கு விளக்கினார். இரு சமயத்தாரும் 'சூபி' நெறியைக் கற்றறிவதற்கென அக் கலைச்சொற்களுக்கிணையான 'சூபி' சமயச் சொற்களையும் தந்தார்." இங்ஙனம் கபீர், தாது, நானக், சைதன்யர் போன்றோருடைய செல்வாக்குப்பெற்ற சமயப் பிரிவுகளைப் போல 'சூபி' சமயப் பிரிவும் இந்துக்களையும் முஸ்லீம்களையும் நெருக்கமாகக் கொண்டுவர முயன்றது.

ஆறாவதாக, கட்டடக் கலை, ஓவியம், இசை போன்ற இன்பக் கலைகளின் வளர்ச்சியில் முகலாயர்கள் குறிப்பிடத்தகுந்த தொண்டாற்றினர். கட்டடக் கலைப் பிரியர்களான அவர்களது ஆதரவில் அக் கலை பெரிதும் வளர்ச்சியுற்றது. நம் நாட்டு இந்து அரசர்கள் வீறார்ந்த, நிலைத்து நிற்கக்கூடிய மாளிகைகளை எழுப்புவதில் கவனம் செலுத்தவில்லை. கோயில்களுக்கே தங்களுடைய திறமையையும் பொருளையும் வாரி இறைத்தனர். அதற்கு மாறாக, முகலாயர்கள் மசூதிகளை மட்டும் எழுப்பாது அரண்மனைகள், கல்லறைகள், கவின்மிகு தோட்டங்கள் ஆகியவற்றையும் அமைத்தனர் இஸ்லாமியக் கட்டடக் கலையையும் உள்நாட்டு இந்து பாணியையும் இணைக்க

அக்பர் தீவிரமாக முயன்றார். அதன் விளைவாக இந்து, முஸ்லீம்களின் சமயம் சாராக் கட்டடங்களைப்பொறுத்தவரையில் அவர்களின் பொதுச் சொத்தாக விளங்கிய முகலாயக் கட்டடக் கலை அல்லது இந்திய-முஸ்லீம் கட்டடக் கலை என்னும் புதிய கட்டடக் கலைப் பாணி தலையெடுத்தது.

ஆயின், ஓவியத் துறையில்தான் முகலாயர் தலைசிறந்த தொண்டாற்றியுள்ளனர். பாரசீகத்தில் செல்வாக்குப் பெற்றிருந்த சீன ஓவியக் கலையை அவர்கள் இந்தியாவிற்குள் கொண்டுவந்தனர். அக்பர் காலத்தில் அக் கலை அஜந்தா குகைகளில் உள்ள மாண்புமிக்க வண்ண ஓவியங்களின் மூலமாக நம் காலம் வரையிலும் தொடர்ந்து வரும் உள்நாட்டு இந்துக் கலையுடன் இணைந்தது. அக்பரின் ஆதரவில் தேசீய இந்திய ஓவியப் பள்ளி ஒன்று நிறுவப் பெற்றது. சீன, இந்திய ஓவியக் கலைகள் ஒன்றறக் கலந்தன. காலப்போக்கில் அன்னியப் பண்புகள் மறைந்தன. ஓவியக் கலையானது முழுக்க முழுக்க இந்தியக் கலையாகவே மாறியது. இந்திய ஓவியக் கலைப் பாணி உச்சநிலையில் இருந்த ஜஹாங்கீரின் ஆட்சிக் காலத்தில் உருவப் படங்களை வரைவதில் நமது கலைஞர்கள் மிக உயர்ந்த திறமை காட்டினர். ‘இந்தியக் கலை’ அல்லது ‘முகலாய ஓவியம்’ எனப் பெயர் பெற்ற இக் கலைப்பிரிவு இன்றளவும் செல்வாக்குடன் திகழ்கின்றது.

ஏழாவதாக, நாட்டில் அமைதியையும், பாதுகாப்பான உணர்வையும் நிலைநாட்டியதன் மூலமாக, தற்கால இந்திய மொழிகளிலும், இலக்கியங்களிலும் வழக்கு மீறிய வளர்ச்சி தோன்றுவதற்கு முகலாயர் ஆட்சி காரணமாகியது. கி.பி. 1200-க்குப் பிறகு வடமொழி நூல்கள் தொடர்ந்து எழுதப்பெற்றபோதிலும் உண்மையில் அம்மொழி இலக்கியம் வளரவில்லை. ஆதரவு இன்மையாலும், டில்லி சுல்தானியர் ஆட்சி ஏற்பட்டதன் மூலமாகத் தோன்றிய அரசியல், பொருளாதாரம், பண்பாடு ஆகியவற்றில் ஊக்கமளிக்கும் சூழ்நிலை உருவாகியதாலும், ஏறக்குறைய 350 ஆண்டுகளுக்கு (1200–1550), இந்து நுண்ணறிவு அநேகமாக வறண்டு கிடந்தது. ஆயினும், 16ஆம் நூற்றுண்டு முதல் சூழ்நிலை மாறத் தொடங்கியது. நாட்டில் ஓரளவு அமைதியும் அரசியல் உறுதிப்பாடும் தோன்றிய காரணத்தால் இந்து அறிஞர்கள் பழைய நிலையை எய்தினர். வடமொழியிலன்றி நமது வட்டார மொழி இலக்கியங்களில் திடீர் கிளர்ச்சி தோன்றியது. முக்கியமாக, ஹிந்தி கவிதையில் இத்தகைய கிளர்ச்சி ஏற்பட்டது. உத்தரப் பிரதேசத்தில் ராய் பரீலி மாவட்டத்தைச் சேர்ந்த மாலிக் முகம்மது ஜெய்ஸி என்பவரே இக்காலத்தில் ‘மிரிகவதி’(1502), ‘பத்மாவதி’ என்னும் இரண்டு இறவாத இலக்கியங்

களைப் படைத்த முதல் பேரறிஞர். அதன் பிறகு 'அகாரவத்', 'சபனுவத்' (Sapanawat), 'காந்தார்வத்', 'மது மாலதி' போன்ற பிற பெருமைவாய்ந்த ஹிந்தி நூல்கள் எழுதப்பெற்றன. உஸ்மானின் 'சித்ரவதியை' அடுத்து சூரின் 'சாகித்ய லாஹரி'யும் புருஷோத் தமரின் 'தாராமா சமேதும்' (Dharama-Shamedh) வெளிவந்தன. எவ்வாறெனினும், துளசிதாஸும், சூர்தாஸும் ஹிந்தி கவிதை உலகில் ஒளிவிடும் தாரகைகளாவர். அவர்கள் இயற்றிய 'இராமா யணமும்', 'சூர் சாகரும்' அம் மொழியில் புகழ்மிக்க முதல்தரமான இலக்கியங்களாகத் திகழ்கின்றன. முகலாயர் கால ஹிந்தி கவிதை உலகிற்கு அப்துர் ரஹீம்கான் கன்னு, ராஸ்கான் ஆகியோரும், சென்ற அத்தியாயத்தில் குறிப்பிடப்பெற்ற பல கவிஞர்களும் என்றென்றும் நிலைத்துநிற்கும் தொண்டாற்றினர். அதேபோன்று பல முதல்தரமான நூல்கள் எழுந்த காரணத்தால் வங்காள மொழி இலக்கியமும் வளம்பெற்றது. அவற்றில் பெரும்பாலானவை சைதன்யரின் வாழ்க்கை விளக்க நூல்களாகும். அவற்றுள்ளும் ஜயநந்தரும், லோச்சன்தாஸும் எழுதிய 'சைதன்ய பக்வத்', 'சைதன்ய சரிதாம் ரிதா', இரு 'சைதன்யமங்கள்' ஆகியவை சிறப்பு வாய்ந்தவையாகும். இவையன்றி, வைஷ்ணவ அறிஞர்கள் வேறு பல சமய இலக்கியங்களைப் படைத்தளித்தனர்.

முகலாய மன்னர்களும், பிரபுக்களும் அளித்த ஆதரவு காரண மாகப் பாரசீக மொழி இலக்கியங்கள் ஏராளமாக எழுந்தன. கவிதை களைத் தவிர குரான் முதலான சமய இலக்கியங்களுக்கான விளக்க உரைகளும், வரலாற்று நூல்களும், பிற பயனுள்ள துறைகள் சார்ந்த மூல நூல்களும் மிகுதியாக வெளிவந்தன. இவைகளை இந்தியரே எழுதினர். ஆயின், அக்காலத்தில் எழுதப்பெற்ற பாரசீக மொழி இலக்கியங்களில் பெரும்பாலானவை முகலாய அரசவையில் பணிபுரிய பாரசீகத்திலிருந்து வந்து குடியேறிய அன்னியர்களுடைய படைப்புகளாகும். எவ்வாறெனினும், பாரசீக மொழி இலக்கியங்கள், சிறப்பாகக் கவிதைகள் அநேகமாகப் பேரரசரையும், அரச குடும் பத்தாரையும் புகழ்ந்து பேசும் இச்சக உரைகளாக இருப்பதால் அவற்றினுல் அதிக பயன் ஏற்படவில்லை.

அன்னிய முஸ்லீம்களுக்கும் உள்நாட்டு இந்துக்களுக்கும் இடையே ஏற்பட்ட தொடர்பினுல் 15ஆம் நூற்றுண்டில் உருது மொழி பிறந்தது. அது இடையீட்டுப் பொது மொழியாக (lingua-franca) வந்தபோதிலும் பாரசீக மொழியே அரசாங்க மொழியாகவும், நயமும் நாகரீகமும் மிகுந்த வகுப்பாரின் மொழியாகவும் விளங்கிய தால், 18ஆம் நூற்றுண்டின் பிற்பகுதி வரையில் அம்மொழி (உருது) முகலாயருடைய ஆதரவினைப் பெறவில்லை. உண்மையில் முகலாயப்

பேரரசர்களும் பிரபுக்களும் உருது மொழியினை வெறுத்து ஒதுக்கினர். ஆயின், தக்கணத்தில் அம்மொழி 'ரெக்தா' எனப் பெயர் பெற்று, உள்நாட்டு சுல்தான்களின் ஆதரவைப் பெற்றது. அத்தகைய ஆதரவு காரணமாக 16, 17ஆம் நூற்றுண்டுகளில் ஏராளமான கவிஞர்கள் அம் மொழியை வளப்படுத்தினர். அவர்களில் 17ஆம் நூற்றுண்டின் இறுதியிலும் 18ஆம் நூற்றுண்டின் ஆரம்பகாலத்திலும் வாழ்ந்திருந்த அவுரங்காபாத்தின் வாலி என்பாரே தலைசிறந்தவராகத் திகழ்ந்தார்.

எட்டாவதாக, முகலாயர் காலத்தில் இந்து சமுதாய நடைப் பாங்கு, பேச்சு வழக்கு, வாழ்க்கை முறை ஆகியவற்றில் முஸ்லீம் களின் செல்வாக்கு மிகுதியாக இருந்தது. சுல்தானியர் காலத்தில் முன்னூறு ஆண்டுகளுக்கு மேலாக இந்துக்களும் முஸ்லீம்களும் அக்கம் பக்கமாக வாழ்ந்திருந்தபோதிலும், புதிதாக வந்தவர்கள் (முஸ்லீம்கள்) நமது நடைப் பாங்கின்மீதோ வாழ்க்கை முறை மீதோ அதிகச் செல்வாக்கு செலுத்தவில்லை. ஆனல், முகலாயர் களோவெனில் நாகரீகமானவர்கள். உயர்ந்த வாழ்க்கைத்தரம் கொண்டவர்கள். அதனுல் அவர்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்ட உயர்குடி மக்கள், நடுத்தர வகுப்பார் தங்களுடைய உடை, பழக்கவழக்கங்கள், மொழி, நடத்தை ஆகியவற்றில் முகலாயரைப் பின்பற்றி மாற்றங்கொண்டனர். ஆயின், பொது மக்கள் பாதிக்கப்படவில்லை. நமது விளையாட்டுகளிலும், கேளிக்கைகளிலும் பல முறையானும் மொழியானும் 'முகம்மதிய மயமாயின' (Muhammadanised). சிறப்பாக வேட்டையாடுதல், வேட்டைப் பறவைகளை வளர்த்துப் பழக்குதல், குதிரைமீதமர்ந்து விளையாடும் செண்டாட்டம் (Polo), சத்ராஜ் முதலான விளையாட்டு கள் இவ்வாருயின. நமது மொழியும் இலக்கியப் பாணியும் முஸ்லீம் செல்வாக்கிலிருந்து விடுபட முடியவில்லை. நமது மொழிச் சொற்க ளோடு பல பாரசீக, அராபிய, துருக்கியச் சொற்கள் கலந்தன. அவற்றினை ஹிந்தி, வங்காளி. குஜராத்தி, மராத்தி மொழிகளிலும், தற்காலப் பிற இந்திய மொழிகளிலும் ஏராளமாகக் காணமுடிகின்றது. இந்துக்கள் பாரசீக மொழி நூல்கள் எழுதும்போது பொதுவாக முகம்மதியர் பாணியைப் பின்பற்றி 'அருளிரக்கமும் தயையும் மிகுந்த ஆண்டவரின் பேரால்' என்று ஆரம்பித்தனர். கடவுளைப் பற்றியும், நபிநாயகத்தைப்பற்றியும், இமாம்களைப்பற்றியும் ஏதாவது புகழ்ந்து எழுதிய பிறகே மூலக் கருத்தினை எழுதத் தொடங்கினர். அக்பர் காலத்திலிருந்து பாரசீக மொழி அரசாங்க மொழியானதால், 17ஆவது 18ஆவது நூற்றுண்டுகளில் பல நடுத்தர வகுப்பு சார்ந்த இந்துக்களும் தங்களது சமய நூல்களையும் அம் மொழியில் கற்றனர். சிலர் அன்ருடம் துதி பாடுவதற்கும் அம் மொழியைப் பயன்படுத்

தினர். நாட்டுப்புறங்களில் வாழ்ந்த மக்கள்கூட முஸ்லீம் மொழிச் செல்வாக்கிலிருந்து முற்றிலும் விடுபடவில்லை. சான்ருக, ஆவணம், வாதி, எதிர்வாதி, விற்பனை, அடைமானம் போன்ற சட்டம் சார்ந்த சொற்களின் பாரசீக மொழி வடிவங்கள் இந்து, முஸ்லீம்களின் பொதுச் சொத்துகளாக விளங்கின.

ஒன்பதாவதாக, போர்க் கலையை முகலாயர் பெரிதும் திருத்தியமைத்தனர். இந்தியாவிற்கு வந்த பாபர் பழைய போர் முறையே வழக்கிலிருக்கக் கண்டார்; அதில் களத்திலிருந்த படைகள் மரபு வழக்காக வந்த நான்கு பிரிவுகளாக நின்றன. வட இந்தியாவில் பீரங்கிப் படையை அறியாதிருந்தனர். துருக்கியர். மங்கோலியர், பாரசீகர், உஸ்பெக்குகள் போன்ருேரிடமிருந்து அறிந்துகொண்ட படைமுறைச் சூழ்ச்சித் திறங்களையும், கள பீரங்கிகளையும் பாபர் இந்தியாவிற்குக் கொண்டுவந்தார். மேலும், இந்துக்களைவிட முகலாயர்கள் பெரும் படைகளை வைத்திருந்தனர். படையினர் அனைவரும் முணுமுணுப்பு ஏதுமின்றி உயர் தனிப்படைத் தலைவருக்குப் பணிந்து நடக்கவேண்டுமென்று வற்புறுத்தினர். இவையனைத்திற்கும் சிறு படைகளைக் கட்டியாள்வதைக் காட்டிலும் மேம்பட்ட படைத் தலைமையும் ஒழுங்கமைப்புத் திறனும் மிகுதியாகத் தேவைப்பட்டன. வடமேற்கு எல்லையை அரண்காப்புகளால் வலிவடையச் செய்வதன் மூலமாக அவர்கள் மேலும் திறமை வாய்ந்த பாதுகாப்புத் திட்டத்தையும் உருவாக்கினர். இந்துக்களின் ஆட்சிக் கால யானைப் படையை அவர்கள் புறக்கணித்தனர். குதிரைப் படைக்கு முக்கியத்துவம் அளித்தனர். வெற்றி பெறுவதற்காகப் படைத்துறை சார்ந்த ஏய்ப்பு நடவடிக்கைகள், சூழ்ச்சிகள், தாக்குதல்கள், வெல்திறம் ஆகியவற்றைப் புகுத்தினர். அதற்கு மாருக இராஜபுத்திரர்கள் போரினைப் பந்தயப் போட்டியாகக் கருதி, களத்தில் நேர்மையுடன் போரிடவேண்டுமென்ற ஒன்றிற்காகவே எதையும் இழக்கத் தயாராக இருந்தனர்.

பத்தாவதாக, அதிகாரங்கள் அனைத்தும் பேரரசரிடம் குவிந்திருந்த முகலாய ஆட்சி முறைத் திட்டம் நன்கு வகுக்கப்பெற்றது. அவர்களுடைய அரசவைச் சடங்குகள், உடை, மென்னய, ஒழுங்கு முறை ஆகியவையும் மேம்பட்டு விளங்கின. இவையெல்லாம் மக்களுடைய மனத்தைப் பெரிதும் கவர்ந்தன. இங்ஙனம் ஓரளவு உரிமையுடன் வாழ்ந்த இந்து அரசர்கள் முகலாய ஆட்சி முறையையும், அதனேடு தொடர்பு கொண்ட சடங்குகளையும் கடன் கொண்டனர். அதனல் அவை இந்திய மக்களின் வாழ்க்கையோடு ஒன்றறக் கலந்துவிட்டன. உயர்குடிப் பிறந்த இந்துக்கள் அழகிய ஆடை ஆடம்பரமான உணவுப் பொருள்கள், புதிய வகையான உண்

கருவிகள் கலன்கள், நறுமணப் பொருள்கள், இசை, நடனம் போன்றவற்றில் முகலாயர் கொண்டிருந்த சுவையார்வத்தைப் பின்பற்றி ஒழுகினர். இதனால் நாட்டிலுள்ள முதன்மையான இந்து குடும்பத்தினர் முகலாய செல்வந்தர்களுக்குச் சமமாயினர்.

## முகலாயப் பேரரசின் வீழ்ச்சிக்கான காரணங்கள்

பிற்கால முகலாயப் பேரரசர்களின் பண்பு நலம் படிப்படியாகக் குறைந்துவந்ததே முகலாயப் பேரரசின் வீழ்ச்சிக்குற்ற முதல் காரணமும் முதன்மையான காரணமுமாகும். முகலாய அரசாங்கம் ஒருமுகப்படுத்தப்பெற்ற வல்லாட்சியாகும். அத்தகைய அரசாங்க முறையில் ஆளும் மன்னருடைய ஆளுமையையும், குணநலத்தையும் பொறுத்தே யாவும் அமைந்தன. அவர் வலிமையும் திறமையும் கொண்டவராக இருந்தால் அரசாங்கம் நன்கு நடக்கும். அதற்கு மாறுக இருப்பின் அரசாங்கத்தில் எல்லாப் பிரிவுகளிலும் அவரது ஆற்றலற்ற தன்மை பிரதிபலிப்பதோடு எல்லாம் தவருகப் போகும். முதல் ஆறு முகலாய மன்னர்களும் திறமையும் பண்பாட்டுறுதியும் கொண்டவர்கள். ஆனுல், முதலாம் பகதூர் ஷா முதல் இரண்டாம் பகதூர் ஷா வரையிலான அவுரங்கசீப்பிற்குப்பின் ஆண்ட அத்துணை வாரிசுகளும் பொம்மைகளாக இருந்தனர். அவர்களிடம் சொந்தத் திறமையோ மனத் திட்பமோ சிறிதும் இல்லை. இதற்குப் பெருமளவில் அவுரங்கசீப்பே பொறுப்பாளியாவார். அவரது ஆட்சி மிக நீண்டதாக இருந்தது. அவருக்குப்பின் அவரது இரண்டாவது புதல்வர் பட்டத்திற்கு வந்தபோது அறுபத்திரண்டு வயதை எட்டியிருந்தார். அவரது பேரன் ஐம்பத்தொரு வயதில்தான் அரியணையேறினர். ஆட்சி செய்வதற்குரிய சக்தியோ ஆசையோ இல்லாத காலத்தில் அவர்கள் ஆட்சிப் பொறுப்பை யேற்றனர். மேலும், அவுரங்கசீப் தமது புதல்வர்களின்மீது மிகுந்த சந்தேகம் கொண்டார். அவர்களில் இருவரைச் சிறையிலிட்டார். அவர்களைச் சுற்றிலும் ஒற்றர்களை வைத்து அவர்களுடைய திட்டங்களையும் முறைகளையும் அறிந்துகொள்ள முற்பட்டார். இங்ஙனம் அவர்களிடம் முனைப்பார்வம், துணிவாண்மை, பொறுப்புணர்ச்சி ஆகியவை வளரவொட்டாமல் தடுத்தார். அவர் வழிவந்தவர்கள் அவரைவிட மோசமாக இருந்தனர். இளவரசர்களை அரசவையிலேயே வைத்திருந்தனர். ஆட்சிமுறை, வெல்திறம், தொலை மாநிலங்களில் போர் போன்றவற்றில் அவர்கள் அனுபவம் பெற முடியாதவாறு செய்தனர். அதன் மூலமாக முகலாயப் பேரரசின் வீழ்ச்சியை விரைவுபடுத்தினர். இத்தகைய சூழ்நிலையில் 18ஆம் நூற்றுண்டில் வாழ்ந்த முகலாய மன்னர்கள் பிரபுக்களின் பிடியிலிருந்த செயலிழந்த

பொம்மைகளாக மாறினர். அவுரங்கசீப்பை அடுத்துவந்த முதலாம் பகதூர் ஷாவை 'முன்னறிவற்ற மன்னர்' என வழங்கினர். அவருக்குப்பின் வாரிசாக வந்த ஜஹந்தர் ஷா ஓர் ஊதாரியான மூடராவார். முகலாய அரசகுலத்தவரிலேயே மிகுந்த கோழையானவர் பர்ரூக்ஷியாரே. முகமது ஷாவும் 'ரங்கீலா' (Rangila) எனப் பெயர் பெற்றார். அகமது ஷாவும் அவர்பின் வந்தோரும் தன்னலமும், பழிபாவத்திற்கஞ்சாத பண்பும் கொண்ட அமைச்சர்களின் கைப்பாவைகளாக வாழ்ந்திருந்தனர். இங்ஙனம் தங்களைக் கட்டுப்படுத்திக்கொள்ள முடியாத கையாலாகாதவர்கள் பேரரசைக் கட்டிக் காப்பது என்பது இயலாத ஒன்றாகும்.

முகலாயச் செல்வந்தரின் கீழ்நிலை நோக்கிய போக்கு முகலாயப் பேரரசின் சீர்குலைவிற்கும் வீழ்ச்சிக்குமான அடுத்த காரணமாக அமைந்தது. அக்பர், ஜஹாங்கீர், ஷாஜஹான் போன்றோர் கால இந்திய வரலாற்றை பைராம்கானும், முனிம்கானும், முஸஃபர்கானும், அப்துர் ரஹீம்கான் கன்னுவும், இதிமாத் உத்தௌலாவும், மகபத் கானும், அசப்கானும், சாதுல்லாகானும் உருவாக்கினர். ஆனால், பிற்கால முகலாயப் பேரரசர்களின் குணநலம் குன்றியபோது பிரபுக்களின் பண்பிலும் சீர்குலைவு தோன்றியது. வெளிநாட்டு முஸ்லீம்கள் இந்தியாவில் பெற்ற செல்வமும், அவகாசமும் அவர்களிடம் ஆடம்பரத்தையும் சோம்பலையும் வளர்த்தன. அவர்களுடைய உவளகங்களில் பல பெண்கள் இருந்ததால் காமக் களியாட்டங்கள் மிகுந்தன. அதன் விளைவாகக் குணநலமும், துணிகரச் செயல்மீதான பற்றுதலும் குன்றின. இங்ஙனம் ஆளும் வர்க்கத்தினரிடம் உடல், ஒழுக்கம், அறிவாற்றல் ஆகிய அனைத்திலும் சீர்குலைவு ஏற்பட்டது. இத்தகைய சீர்குலைவு ஏற்பட்டதால் எந்த ஒரு முகலாயச் செல்வந்தர் குடும்பமும் ஓரிரு தலைமுறைகளுக்குமேல் அரசியல் முக்கியத்துவம் வாய்ந்ததாக இருக்க முடியவில்லையென்று சர் ஜாதுநாத் சர்க்கார் சரியாகச் சொன்னார். மாஸீர் உல் அம்ரா எனும் முகலாயப் பிரபுக்களின் குறிப்பேட்டில் செல்வந்தர் ஒருவரின் வெற்றிகளைப்பற்றி மூன்று பக்கங்களில் விளக்கம் இருக்குமானால், அவரது மகனைப் பற்றி சாதாரணமாக ஒரு பக்க அளவிற்கு விளக்கம் வரும்; அவரது பேரனைப்பற்றிச் சில வரிகளே இடம் பெறும். அதுவும் 'இங்கே குறிப்பிடத்தக்க அளவிற்கு எதையும் அவர் செய்யவில்லை' என்று இருக்கும். துருக்கியர், ஆப்கானியர், பாரசீகர், பிற மத்திய ஆசிய முஸ்லீம்கள் ஆகிய அனைவரும் இந்தியாவிற்குப் புறம்பானவர்கள். அதனால் இந் நாட்டின் ஒத்துவராத மண்ணில் சீர்குலைவது இயற்கையே. துருக்கியரும் ஆப்கானியரும் அடிப்படையில் படைத்துறை சார்ந்த மக்கள். அவர்கள் போரிட்டு வெற்றிகொள்ளும் வேலை சிறிதும் அற்ற நிலையில் சீரழிந்தனர். திறமையாளரைத்

தேர்ந்தெடுத்து அவர்கட்குப் பரிசு வழங்கும் நிலையில் பேரரசர் இல்லாதபோது பேரரசிற்காக உயிரையும் விடவேண்டுமென்ற ஆர்வமோ ஊக்கமோ பிரபுக்களிடம் இல்லாது போயிற்று.

முகலாயப் படையில் தோன்றிய ஒழுக்கச்சிதைவு மூன்றாவது முக்கியக் காரணமாகியது. முகலாயப் படையின் தோற்றமும் அமைப்பும், மெலிவும் குறைபாடும்கொண்டது. உயர் அதிகாரிகளும், பிரபுக்களும் திரட்டிப் பாதுகாத்துவந்த படைப்பிரிவுகளே அதில் முக்கிய இடம்பெற்றன. படைகளை வைத்துக் காப்பதற்கென்று அதிகாரிகளுக்கும் பிரபுக்களுக்கும் நாட்டில் பெரும் நிலப்பரப்பு களின் வருவாய் ஒதுக்கப்பெற்றது. அதன் காரணமாகப் படைவீரர் மன்சப்தாரை ஓர் அதிகாரி என்று கருதாது தமக்குற்ற தலைவ ராகவே கருதினர். அரசாங்கக் கருவூலத்திலிருந்து நேரடியாக ஊதியம் வாங்காது, தங்களது படைத்தலைவர் அல்லது மன்சப்தாரிட மிருந்தே ஊதியம் பெற்ற படைவீரர்களுக்கும் பேரரசருக்குமிடையே தொடர்பு இல்லை. இத்தகைய முழுதும் திடமற்ற முறையில் பொதிந்து கிடக்கும் குறைபாடுகள் அவுரங்கசீப்பின் ஆட்சியிலும், அவர்தம் வாரிசுகளின் ஆட்சிக் காலங்களிலும் மேலும் மோச மாயின. பிற்கால முகலாயப் பேரரசர்களின் அதிகாரம் தளர்ச்சி யுற்றபோது படைக்காப்பிற்காக ஒதுக்கப்பெற்றிருந்த நிலங்களைப் பெருஞ்செல்வந்தர்களும், அதிகாரிகளும் தங்களுடைய மரபுரிமைச் சொத்தாக மாற்றிவிட்டனர். இதனால் தமது அதிகாரத்தை வலி யுறுத்தத் தேவையான வலிமைவாய்ந்த சொந்தப்படை பேரரசரிடம் இல்லை. தவிரவும், மத்திய அரசின் ஆதிக்கம் மெலிந்த காரணத் தால் மன்சப்தார்கள் ஒருவர்மீது ஒருவர் பொறாமைகொண்டு பல தீமைகளைச் செய்தனர். தமது வெற்றியின் பெருமையை மற்றோர் அதிகாரி பகிர்ந்துகொள்வார் என்று ஒருவர் உணர்ந்தால் முக்கால் பங்கு வெற்றி கிட்டிய போரையோ முற்றுகையையோ வேண்டு மென்றே வெற்றிகரமாக முடித்துவைக்காது இருத்தல் என்பது அடிக்கடி நடைபெற்ற ஒன்றாகும். மேலும் 17ஆம் நூற்றாண்டின் இறுதியிலிருந்து பகைவருடன் துரோகமான கடிதத் தொடர்பு கொள்ளுவது முகலாய அதிகாரிகளின் வழக்கமாகியது. பேரரசரும், மீர்பக்ஷியும் திறமையும் உறுதிப்பாடும் அற்றவர்களாக இருந்த போது படைக்கலம் தாங்கிய கும்பலாக மாறிவிட்ட படையில் முறையான கட்டுப்பாட்டினை நிலைநிறுத்த முடியவில்லை. அவுரங்க சீப்பும் படைத்துறை சார்ந்த குற்றங்களைக் கவனியாது விட்டார். கடமையினைச் செய்யாதுவிடுவோருக்கு முறையான தண்டனைகள் அளிக்கப்பெறவில்லை. இவ்விதக் காரணங்களால் முகலாயர் கொடியினை நாட்டின் பல கோடிகளுக்கும், ஆக்ஸஸ் ஆற்றிற்கு அப்பாலும், மத்திய ஆசியாவில் ஹெல்மாண்டிற்கும் எடுத்துச்சென்ற

முகலாயப் படை வலுத்தாக்குதலுக்கும் பாதுகாப்பிற்கும் பயனற்றதாகியது.

நான்காவதாக, பேரரசின் பொருளாதார நொடிப்பு அதன் வீழ்ச்சிக்கு மற்றொரு முக்கிய காரணமாகியது. அக்பர் நிறுவிய நியாயமான நிதி முறையினால் நாடு வளம்பெற்றது; அரசாங்கம் செழிப்புற்று விளங்கியது; நாட்டு மக்கள் ஓரளவு வளமான வாழ்க்கையைப் பெற்றனர். ஆயின், இத்தகைய ஏற்பாடு அவருக்குப் பின் வந்தவர்களுடைய ஆட்சியில் சீர்குலைந்தது. உற்பத்தியாளர் மீது அரசாங்கம் பெரும் சுமையை வைத்த காரணத்தால் அப்பளுவினைத் தாங்கமுடியாது அழிந்தவர் பலர். அதற்கு நேர்மாறாக ஆக்கம் தராத வேலைகளில் திறமையும், மேதைமையும் போற்றுதற்காகப் பெரும் தொகைகளை அரசர் வாரிவழங்கினர். நிலத்தை உழுது பயிர்செய்த குடியானவர்களுடன் நேரடித் தொடர்புகொண்ட அக்பரின் நிதித்திட்டம் அவரது புதல்வர் காலத்திலும், பேரர் காலத்திலும் வழக்கொழிந்தது. அவுரங்கசீப்பின் காலத்திலும் அவருக்குப் பின்வந்த அரசர்கள் காலத்திலும் அது அநேகமாகக் கைவிடப்பட்டது. அதற்கு மாறாக, அவ்வரசர்கள் நிலத்தைக் குறிப்பிட்ட தொகைக்கீடாக வாடகைக் கட்டண உரிமையளிக்கும் குத்தகையில் விட்டனர். அதன் விளைவாக, உற்பத்தியாளர்மீதான நேரடிச்சுமை மிகுதியாக உயர்ந்தது. 'உற்பத்தி செய்யும் வேலையில் ஈடுபடுவதற்கு வேண்டிய ஊக்கம் அளிக்காத அளவிற்கு அவர்களுடைய பங்கு' வெகுவாகக் குறைந்துவிட்டது. ஷாஜஹான் காலத்தில் இது தெளிவாகியது. 'அவருடைய (ஷாஜஹானின்) அரசவையின் மாட்சிமையையும், ஆட்சியின் தாராளத்தன்மையையும், சொந்த முறையிலான செல்வாக்கையும் அக்கால அறிஞர் அனைவரும் புகழ்ந்துள்ளனர். ஆனால், அதே சமயத்தில் இந்த நேர்த்தியான முகப்புமண்டபம், சரிந்துகொண்டிருந்த உட்பகுதியை மறைத்துக்கொண்டிருந்தது என்ற உண்மையை அவர்கள் மறைத்தார்களில்லை. இத்தகைய மட்டுமீறிய ஆடம்பரச் செலவு நாட்டின் பொருளாதாரத்திற்குப் பெரும் சுமையாக வந்தது. அதே சமயத்தில் அதிகாரிகளின் ஊதாரித்தனமும், முகலாய கவர்னர்களின் கொடுமை நிறைந்த சித்தப்போக்கும் தங்களுடைய துயரத்திற்கான கழிவு ஏதும் இல்லாதிருந்த மக்களின் துன்பத்தைப் பெருக்கின' ('William Foster' எழுதிய 'English Factories in India', 1655-60, பக். 1–2). நிலத்தின் வருவாயிலிருந்து அரசாங்கத்திற்குச் சேரவேண்டிய பங்கினை ஷாஜஹான் ஐம்பது சதவீதத்திற்கு உயர்த்தினார். நிதிக் கோரிக்கை எவ்வளவு உயர்ந்ததோ அதே விகிதத்தில் உற்பத்தி குறைந்தது. குடியானவர்கள் நிலத்தைவிட்டு ஓட முயன்றனர். ஆனால், அவர்கள் பயிர்த்தொழிலில் ஈடுபடுமாறு

வற்புறுத்தப்பெற்றனர். அரியணையை அடைவதற்கும், அதனைக் காப்பதற்கும் பல போர்களில் ஈடுபட்ட அவுரங்கசீப்பின் காலத்திலும், அவர் வழிவந்த அரசர்கள் காலத்திலும் முகலாய அரசாங்கத்திற்குப் பொருளாதார நொடிப்பு ஏற்பட்டது. இரண்டாம் ஆலம் கீரின் காலத்தில் பொருளாதார வீழ்ச்சி நிறைவுபெற்றது. அரசருக்கு உரிய நிலத்திலிருந்து வரும் வருவாயையும் கொள்கையற்ற வஸீரான இமாத் உல் முல்க் பறித்துக்கொண்டார். எனவே, அரசர் பட்டினியால் வாடினார். இரண்டாம் ஆலம் கீர் பட்டத்திற்கு வந்து ஒன்றரை மாதத்திற்குப் பிறகு இத்காவிற்கு (Idgah) ஊர்வலமாகச் செல்லத் தகுதியான போக்குவரவுச் சாதனம் அரசருக்குக் கிடைக்கவில்லை. அதனால் அவர் கோட்டையிலிருந்த மசூதிக்கு உவளகத்திலிருந்து நடந்தே சென்றார். வரலாற்று அறிஞரான ஜாதுநாத் சர்க்காரின் பின்வரும் சொற்கள் கவனித்தற்குரியன. ‘ஒரு முறை உவளக அடுக்களையில் மூன்று நாட்களுக்கு அடுப்புப் பற்றவைக்கவில்லை. ஒரு நாள், மேலும் பட்டினியைத் தாங்கமுடியாத அரசிகள் பர்தாவைப் புறக்கணித்து அரண்மனையைவிட்டு நகரத்தைநோக்கி ஓடினர். ஆயின், கோட்டை வாயில்கள் அடைபட்டிருந்தமையால் ஆண்கள் தங்குமிடங்களில் ஒரு பகலும் ஓர் இரவும் அமர்ந்திருந்தனர். அதன் பிறகு அவரவர் அறைகளுக்குத் திரும்பிச் சென்றனர் (‘Fall of the Mughul Empire,’ Vol. II, 2nd ed., பக். 27), 1755ஆம் ஆண்டில் இது நடந்தது. அதன் பிறகு ஐம்பது ஆண்டுகளுக்குப் பொருளாதார நொடிப்பு ஏற்பட்ட முகலாய அரசாங்கம் எப்படி வாழ்ந்தது என்பது வியப்பிற்குரியதாகும்.

ஐந்தாவதாக, நாட்டு மக்களில் பெரும்பான்மையினராக இருந்த இந்துக்களை சமய ஒறுப்புச் செய்தல் எனும் முன்னறிவற்ற கொள்கையை அவுரங்கசீப் பின்பற்றியது அவரது குலத்தின் வீழ்ச்சியை விரைவுபடுத்தியது. சமயப் பொறை அளித்ததன்மூலமாகவும் ஜாதி, சமய, இன வேறுபாடின்றி, தகுதிவாய்ந்தவர்களுக்குப் பதவிகளை அளித்ததன் மூலமாகவும் இந்துக்களை அக்பர் தம் வசப்படுத்திக்கொண்டார். தமது அரியணையைக் காக்கும் நம்பிக்கை வாய்ந்தவர்களாக இந்துவீரர் கூட்டங்களை, சிறப்பாக இரஜபுத்திரர்களைத் தம் சேவையில் சேர்த்துக்கொண்டார். அவர் தலைமையிலும், அவரை அடுத்துவந்த மூன்று மன்னர்களின் தலைமையிலும் முகலாயருடைய கொடிகளை இந்தியத் துணைக்கண்டத்தின் எல்லாப் பகுதிகளுக்கும், மத்திய ஆசியாவின் நடுப் பகுதிக்கும் இராஜபுத்திரர் கொண்டுசென்றனர். ஆனால், அவுரங்கசீப் இந்துக்களின்மீது ஜிஸியாவை மீண்டும் விதித்தார். இராஜபுத்திரர்மீது அவநம்பிக்கை கொண்டார். மார்வார் அரசின் வாரிசை இஸ்லாம் சமயத்திற்கு மாற்றும் தகாத முயற்சியில் ஈடுபட்டார். இராஜபுத்திரரைப் பகைத்

துக்கொண்டார். அதனால் அவர்கள் முகலாயக் கொடுங்கோலருடன் போரிடுவது என உறுதி பூண்டனர். அநேகமாக முகலாயப் பேரரசு வீழும்வரை ரத்தோர்களும் சிசோதியர்களும் புரட்சி செய்தவண்ணமிருந்தனர். பந்தேலர்களும் சீக்கியரும் அவர்களைப் பின்பற்றினர். ஆயின், சமய ஒறுப்புக் கொள்கையை முதலில் வன்மையாக எதிர்த்தவர்கள் ஜாத்துகளே. புனிதமான இந்து கோயில் இருந்த இடத்தில் 'அப்துன் நபிஸ்' (Abdun Nabis) மசூதியைக் கட்டியவரும், இந்து பெண்களைத் தூக்கிச்சென்றவருமான மதுரா மாவட்டத்தின் முகலாய அதிகாரியை அவர்கள் தாக்கினர். தற்காலிக இடைவெளிகளுடன் ஜாத்துகள் செய்த புரட்சி முகலாயப் பேரரசிற்கு முள்ளாக அமைந்தது. பரத்பூரில் உரிமைபெற்ற ஜாத் அரசு நிறுவப்பெற்ற பிறகு அப் புரட்சி மறையவில்லை. சீக்கிய குருவான தேஜ்பகதூரைப் பேரரசர் கொடூரமாகக் கொன்ற காரணத்தால் குருகோவிந்த சிங்கின் தலைமையிலான சீக்கியர் பழிவாங்கக் காத்திருந்தனர். புகழ்பெற்ற கால்சாவை அமைப்பதன்மூலமாகக் கோவிந்தசிங், தமது ஆதரவாளர்களைப் போர்க்கிளர்ச்சிகொண்ட பிரிவினராக மாற்றினர். அவுரங்கசீப்பின் குலம் அழிவதற்கு இந்த கால்ஸா ஒரு முக்கியக் காரணமாகியது.

ஆருவதாக, இஸ்லாத்திலுள்ள புறச்சமயப் பிரிவுகளை அடியோடு அழித்துவிடவேண்டுமென்ற விருப்பத்தினல் அவுரங்கசீப் ஷியாக்களுக்கு எதிராகக் கிளம்பினர். இந்துக்களிடம் காட்டிய அதே அளவு வெறுப்பினை ஷியாக்கள்மீதும் காட்டினர். கிலாபத்திற்கு அலியே வாரிசாக வந்தார் என்று நம்பியதற்காக ஷியாக்களுக்கு எதிராகச் சமயவெறிகொண்ட அவுரங்கசீப் கடுமையான நடவடிக்கைகளை மேற்கொண்டார். அரசாங்கப் பதவிகளைத் தர மறுத்தார். அவர்களுடைய போதனை, பள்ளிகள், சமயப் பழக்கவழக்கங்கள் ஆகியவற்றின்மீதும் தடைவிதித்தார். பாரசீகத்து ஷியாக்கள் நலம் வாய்ந்த அறிஞர்கள், தலைசிறந்த ஆட்சிவினைஞர்களாகத் திகழ்ந்தவர்கள். சிறப்பாக நிதிசார்ந்த செய்திகளில் வல்லவர்கள். அக்பர், ஜஹாங்கீர், ஷாஜஹான் ஆகியோரின் ஆட்சிக் காலங்கள் சிறந்து விளங்கியதற்கு அவர்களும் காரணமாயினர். ஆனல், தீவிர சுன்னி பேரரசராகவிருந்த அவுரங்கசீப், தங்களை விரும்பவில்லை என்பதை உணர்ந்த அவர்கள், முகலாயப் பேரரசில் பணியாற்ற இந்தியாவிற்கு வருவதை நிறுத்திக்கொண்டனர். அதே அளவிற்குப் போரிலும், பொதுத்துறை ஆட்சியிலும் திறமைபெற்று இந்தியாவில் வாழ்ந்திருந்த ஷியாக்களும் சமய ஒறுப்பால் துன்புற்றனர். ஷியா, சுன்னி கிளர்ச்சிகள் எழுந்தபோது பேரரசர் சுன்னிகளை வெளிப்படையாக ஆதரித்தார். அதன் விளைவாக மத்திய ஆசியாவிலிருந்து புதுத் திறமையாளர் வருவது நின்றுவிட்டதோடு, ஆதரவு

இன்மையாலும், பகைமை உணர்வாலும் அத் திறமை இந்தியாவில் அழிக்கப்பட்டது.

ஏழாவதாக அவுரங்கசீப்பின் தலைசிறந்த படைவீரர்களின் அழிவிற்குக் காரணமாகி மீண்டும் சரிப்படுத்த முடியாத அளவிற்கு முகலாயரது பெருமையைக் குலைத்த அவர்தம் தக்கணக் கொள்கை, அவர் குலம் வீழ ஒரு முக்கிய காரணமாகியது. பீஜப்பூர், கோல் கொண்டா ஆகிய ஷியா அரசுகளை அவர் அழித்தார். மராத்தியரை அழிப்பதற்கான முடிவற்ற நீண்ட போரிலீடுபட்டார். இதனால், உரமிக்க மராத்தியர் தற்காப்பிற்காகப் போராடவேண்டிய தாயிற்று. அவர்கள் வெற்றியடைந்தபோது வலுத்தாக்குதல் செய்யத் துணிந்தனர். நர்மதையைக் கடந்து வடஇந்தியாவில் முகலாய ருக்குச் சொந்தமான மாநிலங்களைத் தாக்கவும் முற்பட்டனர். அவுரங்கசீப்பின் சமய ஒறுப்புக் கொள்கையினால் இந்துக்கள் ஏற்கெனவே பகைவராயினர். பேரரசின் இந்து அதிகாரிகளும், குடியாட்களும் ஒன்று மெத்தனமாக இருந்தனர். அல்லது இரகசிய மாக முகலாய நலனுக்கு எதிராக இருந்தனர். இந்நிலை மராத்திய ருக்கு நல்ல வாய்ப்பாக அமைந்தது. இராஜபுத்திரர், பந்தேலர், பிற இந்துக்கள் ஆகியோருடைய பொதுவான சமய உள்ளார்வத்தை மராத்தியர் தூண்டினர். அதன் விளைவாக அவர்கள், பாஜிராவ் வடஇந்தியாவிற்கு வந்தபோது அவருடன் சேர்ந்துகொண்டனர். பேரரசு வீழ்ந்த பிறகு, பிற உரிமைபெற்ற வட்டார முஸ்லீம் அரச குலங்களும் தானாகவே வீழ்ந்துவிடும் என்ற நம்பிக்கையில் முகலாயப் பேரரசின் அடிமரத்தை வெட்டும் கொள்கையைச் செயல்படுத்த பாஜிராவ் தீரத்துடன் வடநாடு சென்றபோது அங்கே இருந்த இந்துக்களின் ஆதரவைப் பெற்றார். இங்ஙனம் அவுரங்கசீப் இறந்து முப்பத்தோர் ஆண்டுகளுக்குள் அவர் வழிவந்தவர்கள் ஜாத்துகள், சீக்கியர், பந்தேலர், ரத்தோர்கள், கச்வஹர்கள், சிசோதியர்கள் ஆகியோருடன் போரிடவேண்டியிருந்தது. அவர்கள் பக்கம் படை பலமிக்க கூட்டத்தார் ஒருவரும் இல்லாதுபோயினர். 'இந்துக்கள் பிற்கால முகலாய மன்னர்களிடம் பற்றுறுதிகொண்ட குடியாளராக இல்லாதுபோனதோடு பகைவர்களாகவும் விளங்கினர். அன்னியப் படையெடுப்பு ஆபத்து இருந்த காலத்தில் முகலாயர் இந்துக்களுக் கெதிராகப் படைகளை அனுப்பவேண்டியிருந்தது' என ஜாதுநாத் சர்க்கார் எழுதுகிறார் (Later Mughuls, Vol. II, பக். 310).

எட்டாவதாக, முகலாயப் பேரரசர்கள் உள்நாட்டு, வெளிநாட்டு ஆபத்துகளைச் சமாளிக்கவேண்டியிருந்த காலத்தில் பகைக் கும்பல்கள் தோன்றின. அவை பேரரசின் கட்டுறுதியைக் குலைத்த தோடு அதன் வீழ்ச்சிக்கும் காரணமாயின. ஆபத்தும் இடர்ப்பாடும்

நேர்ந்த சமயத்தில் நாதிர் ஷா, அஹ்மத் ஷா அப்தாலி போன்ற அன்னியர்களுக்கு எதிராகவும், ஜாத்துகள், சீக்கியர், மராத்தியர் போன்ற உள்நாட்டுப் புரட்சியாளருக்கு எதிராகவும் முஸ்லீம் செல்வந்தர்கள் ஒன்றுபட்டுப் போரிடுவர் என்று எதிர்பார்க்கப் பெற்றது. ஆயின், தேவையான தலைமைப் பண்புகள் அற்று மெலிந்து, ஒழுக்கக் கேடுற்று வாழ்ந்த மன்னர் காலத்தில் பேரர சவையில் தலைமை அதிகாரம் கொண்ட செல்வந்தர்கள் புறக் கணித்த நிலையில் அது முடியாதுபோயிற்று. பிற்கால முகலாயர் காலத்தில் வாழ்ந்த அரசவைச் செல்வந்தர்கள் இரு முக்கியப் பிரிவுகளாகப் பிரிந்திருந்தனர். அவர்கள் துரானி அல்லது மத்திய ஆசியப் பிரிவினரும் இரானி அல்லது பாரசீகப் பிரிவினருமாவர். துரானியர் சுன்னி சமயப் பிரிவைச் சார்ந்தவர்கள். ஆனால், இரானி யர் ஷியா வகுப்பைச் சார்ந்தவர்கள். நாதிர் ஷா படையெடுத்து வந்த காலத்தில் அசப் ஜா, நைஸாம் உல் முல்க், கமருதீன்கான் போன்ற முக்கிய துரானிய தலைவர்கள், அமீர்கான், இஷாக்கான் சாதத்கான், பரான் உல்முல்க் ஆகியோரின் தலைமையிலான பாரசீகருக்கு எதிராக இருந்தனர். அவர்கள் ஒருவருக்கொருவர் மிகுந்த பகைமை பாராட்டினர். தங்களது சச்சரவுகளில் பேரரசின் நலனையும் மறந்தனர். ஒரு கும்பல் மற்ற கும்பலைப்பற்றி மன்னரிடம் குறைகூறியது; மற்றதன் திட்டங்களைக் குலைத்தது; அதனுடைய அதிருப்தியுற்ற பணியாட்களைத் தூண்டியது; அரசவையிலிருந்து தொலைவில் வாழ்ந்திருந்தபோது தீவிர பகை நடவடிக்கைகளில் ஈடுபட்டது. பேரரசின் படைகள் அனைத்தையும் கொண்டு புரட்சி யாளர்களுக் கெதிராகப் பயன்படுத்த முடியவில்லை. பேரரச அவையிலும், பாசறையிலும் புரட்சியாளர்களுக்கு ஆதரவாளர் இருந்தனர். அல்லது எதிரிகள் போல நடித்த நடுநிலையாளர் இருந்தனர்.

ஒன்பதாவதாக, பதினெட்டாம் நூற்றுண்டின் தொடக்கத்தில் முகலாயப் பிரபுக்களும் நடுத்தர வகுப்பாரும் உள்ளிட்ட முஸ்லீம் சமுதாயம் முழுவதிலும் அறிவுச் சூன்யமும் மனத்தளர்ச்சியும் பரவி அவர்களைச் செயலிழக்கச் செய்தன. நைஸாம் உல்முல்க் நீங்கலாக, தேசீய மீட்பாக்கத்திற்கான நல்லதொரு திட்டத்தை அளிக்கக்கூடிய திறமையும், முன்னறிவும் கொண்ட முகலாயத் தலைவர் ஒருவருமில்லை. நைஸாம் உல்முல்கும் தன்னலமே உருவானவர். பற்றுறுதியற்ற பிரபு. தக்கணத்தில் தமக்காக அமைத்துக்கொண்ட அரசினைக் காத் துக்கொள்வதற்காக முகலாயப் பேரரசின் பகுதிகளைத் தாக்குமாறு மராத்தியரைத் தூண்டியவர். பொதுமக்களிலிருந்து பல துறை களுக்கு வேண்டிய தகுதியான ஆட்களை அளிக்கின்றவரையில் பொதுமக்களின் அறிவிற்கும் உணர்ச்சிக்கும் முறையான பயிற்சி

யளித்துத் தலைமைப் பண்புகளை வளர்க்கவல்ல கல்வித் திட்டம் முகலாய இந்தியாவில் இல்லாததே அந்நிலைக்குக் காரணமாகும். நல மார்ந்த கல்வித் திட்டம் ஒன்று இல்லாத காரணத்தால் புதிய வாழ்க்கைத் தத்துவத்தை நாட்டு மக்களுக்கு அளிக்கவோ அல்லது பூவுலகில் புதிய சுவர்க்கத்தைக் காணும் ஆர்வத்தைத் தூண்டவோ வல்ல அரசியல் மேதையைப் பதினெட்டாம் நூற்றுண்டில் முகலாயர் தோற்றுவிக்கவில்லை. அவர்கள் அனைவரும் தங்களுடைய முன் னோர்களின் பகுத்தறிவில் மயங்கி மிதந்துகொண்டிருந்தனர். சம காலத்தவரிடம் வளர்ந்துவரும் ஒழுக்கச் சிதைவைக் கண்டு தலை யசைத்தனர்.

1750ஆம் ஆண்டிற்குப் பிறகு முகலாயப் பிரபுக்கள் பாரசீக மொழியினைத் தாய்மொழியாகக் கொண்டிருக்கவில்லை. இருப்பினும், அவர்கள் உருதுவையோ வேறு ஒரு மொழியையோ ஏற்று அதனை இலக்கியம் சார்ந்த பேச்சுமொழியாகக் கொள்ளவில்லை. வீட்டிலும் வெளியிலும் உருதுமொழி பேசியபோதிலும் பாரசீக மொழியையே அரசாங்க மொழியாகவும், நாகரீகப் பண்பாட்டு மொழியாகவும் போற்றிவந்தனர். இதனுல் பொதுவாக முஸல்மான்களிடமும் குறிப்பாக முகலாயச் செல்வந்தர்களிடமும் இலக்கிய வறட்சி ஏற்பட்டது.

பத்தாவதாக, முகலாய அரசாங்கம் சர்வாதிகார ஆட்சியாக இருந்தது. அது அக்பர் காலத்தைத் தவிர மற்ற ஆட்சிக் காலங் களில் உள்நாட்டு ஒழுங்கையும் வெளிநாட்டு அமைதியையும் நிலைநாட்டுதல், வரி தண்டுதல் ஆகிய இரு பொறுப்புகளைமட்டுமே ஏற்றிருந்தது. ஆயின், அது மெலிந்து உள்நாட்டு ஒழுங்கையும் வெளிநாட்டு அமைதியையும் தரமுடியாத நிலையில் இருந்தபோது, வாழத் தகுதியற்றதாகியது. மக்களும் தங்களை அன்னியப் படை யெடுப்பாளர்களிடமிருந்து காக்கவும், மான்ய உரிமை பெற்ற உட் குடிகளின் புரட்சிக் கலகங்களை அடக்கவும் வகையறியாது இருந்த அரசினை மதிக்கவில்லை. இத்தகைய சூழ்நிலையைப் பயன்படுத்திக் கொண்ட மாநில ஆளுநர்கள் உரிமை பெற்றவர்களாகத் திகழ்ந் தனர். முகமது ஷாவின் ஆட்சியின் தொடக்கத்திலேயே தக்கணத்தின் ஆறு சுபாக்களின் உண்மையான அரசராக நைஸாம் உல் முல்க் விளங்கலானுர். அவத்தில் உரிமைபெற்ற அரசகுலம் ஒன்றை சாதத்கான் பரான் உல் முல்க் என்பார் தோற்றுவித்தார். அலிவர்திகானின் தலைமையிலிருந்த வங்காளம், பீகார், ஒரிஸ்ஸா ஆகிய பகுதிகள் டில்லியின் அதிகாரத்தைப் புறக்கணித்தன. இதற்கு வெகுகாலத்திற்கு முன்பே மராத்தியர் உரிமை பெற்றனர், அதை அடுத்து அவர்கள் மாளவம், பந்தேல்கண்டு, குஜராத் முகலாய மாநிலங்களின்மீது தங்கள் மேலாண்மையை நிலை

நாட்டினர். அதன் பிறகு, நாடு முழுவதையும் தங்கள் ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டுவர முயன்றனர்.

பதினோராவதாக, நாதிர் ஷா பேரரசின் மீதமிருந்த சக்தியையும், செல்வத்தையும், பெருமையையும் மீட்கமுடியாத அளவிற்குச் சிதைத்தார். 1739ஆம் ஆண்டு தொடக்கத்தில் நாட்டின்மீது படையெடுத்து வந்த அவர் முகமது ஷாவை முறியடித்தார். டில்லி படுகொலைக்கு ஆணையிட்டார். மாண்புமிக்க மயில் சிம்மாசனம் உள்பட எழுபது கோடி ரூபாய் பெருமானமுள்ள கொள்ளைப் பொருளைச் சுமந்து சென்றார். பேரரசிலிருந்து ஆப்கானிஸ்தானத்தைப் பறித்துக்கொண்டார். முகலாயப் பேரரசரான முகமது ஷாவிற்குப் பேரவமானத்தை அளித்தார். அதைத் தொடர்ந்து, நாதிர் ஷா கொலையுண்ட பிறகு காபூலின் மன்னராக வந்த அவரது துணைவரான அஹ்மத் ஷா அப்தாலி ஏழு முறை இந்தியாவின்மீது படையெடுத்து வந்தார். அக் கொடிய ஆப்கானியர் பலமுறை நம் நாட்டின் இரத்தத்தை உறிஞ்சினர். முகலாயப் பேரரசினையும் வீழச் செய்தார்.

பன்னிரண்டாவதாக, ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனியின் எழுச்சியும், அது வாணிக அமைப்பிலிருந்து, இந்தியாவை வென்று ஆளவேண்டுமென்ற ஆர்வங் கொண்ட ஆட்சிப் பரப்பு சார்ந்த சக்தியாக மாறியதும், முகலாயப் பேரரசிற்குப் பேரிடியாக அமைந்தன. படைத்துறை சார்ந்த சூழ்ச்சித்திற முறைகளையும் ஆயுதங்களையும் பொறுத்தவரையில் முகலாயர், காலத்தை ஓட்டிச்செல்லத் தவறினர். பாபர் காலத்திலிருந்த அவர்களது முன்னோர்கள் அப்போது இந்த நாட்டில் வழக்கிலிருந்த சீர்கேடுற்ற படைத்துறைத் திட்டத்தைச் சாதகமாகப் பயன்படுத்தி இந்தியாவை வென்றனர். பிரிட்டிஷ்காரரும், ஐரோப்பிய முன் மாதிரியைப் பின்பற்றிப் புதிய சக்திவாய்ந்த படைக்கலன்களையும், புதிய போர் முறையையும், படைத்துறை சார்ந்த பயிற்சியையும், கட்டுப்பாட்டையும் கொண்டு 16ஆம் நூற்றாண்டில் பத்தானியரை முகலாயர் வென்றதைப் போல 18ஆம் நூற்றாண்டில் முகலாயரை வென்றனர். கடல்களில் கால்கொண்டிருந்த பிரிட்டிஷ் அதிகாரத்தை மேம்பட்ட நாவாய்ப்படை இல்லாமல் அழித்துவிட முடியாது, ஆயின், முகலாயரிடம் கடற்படை இல்லை. அதனால் கடல்களின்மீது ஆதிக்கம் செலுத்திய பிரிட்டிஷ்காரருடனை போரில் முகலாயர் வெற்றி பெற முடியாது.

இறுதியாக, எப்படியென்றாலும் அடிப்படையில் முகலாயர் அன்னியரே. அவர்களது அரசாங்கமும் இந்நாட்டில் வாழ்ந்த

பெரும்பான்மை மக்களின்மீதான அன்னிய ஆதிக்கமே. அதன் காரணமாக இயல்பாக எழும் பொதுமக்களின் ஆதரவு அதற்கில்லை. இங்ஙனம் அது வலுவற்ற அத்திவாரத்தைக் கொண்டிருந்தது. 'சிவாஜியைப் பின்பற்றி அவருக்காகப் போரிட்ட மராத்திய மக்களை ஊக்குவித்ததைப் போன்ற உணர்ச்சிகளை' முகலாயப் பேரரசினால் எப்போதும் தூண்டமுடியாது. மேலும், 'இந்து குறிக்கோள்களின் மீதும், ஆர்வக் கருத்துகளின்மீதும் எப்போதும் செல்வாக்கு செலுத்திய பண்டைய மரபு வழக்கிலிருந்து வலிமை பெறவும் அதனால் முடியாது.' படை வலிமையுடன் இருக்கும் வரையில்தான் அன்னியப் பேரரசு வாழ முடியும். முகலாயப் பேரரசு மெலிவடைந்ததும், அதன் சீர்குலைவும் சிதைவும் தவிர்க்க முடியாதவையாயின.

## மேலும் கற்பதற்கான நூல்கள்

1. Sir Jadunath Sarkar எழுதிய 'Mughul Administration' (4th ed.).
2. Sir Jadunath Sarkar எழுதிய 'India Through the Ages' (4th ed.).
3. Sir Jadunath Sarkar எழுதிய 'Downfall of the Mughul Empire', Vols. I–IV.
4. A. L. Srivastava எழுதிய 'The First Two Nawabs of Awadh' (2nd ed.).
5. Tara Chand எழுதிய 'Influence of Islam on Indian Culture'.
6. Tara Chand எழுதிய 'Presidential Address of the Mughul Section,' vide the Proceedings of the Indian History Congress, Calcutta, 1939.
7. Sir Jadunath Sarkar எழுதிய 'Society During the Muslim Period', vide Hindustan Standard, Puja Annual, 1951.
8. Sri Ram Sharma எழுதிய 'Mughul Government and Administration'.

# கலைச்சொல் அகராதி

## (ஆங்கிலம் - தமிழ்)

### A

| | | |
|---|---|---|
| Accession | — | அரசு எய்தல். |
| Aggression | — | வலுத்தாக்குதல். |
| Album | — | செருகேடு ; ஆல்பம். |
| Allies | — | நேசநாடுகள். |
| Arch | — | வளைவு. |
| Architecture | — | கட்டடக் கலை. |
| Archives | — | ஆவணக் களரி. |
| Ascendancy | — | மேலாதிக்கம். |
| Assessment | — | தீர்வை விதித்தல். |
| Astrology | — | குறிநூல். |
| Autocracy | — | சர்வாதிகார ஆட்சி. |

### B

| | | |
|---|---|---|
| Ballad | — | நாட்டுக் கதைப்பாடல். |
| Bastion | — | படிகம். |
| Benevolent despotism | — | உணர்வு ஒளிர் வல்லரசு. |
| Bhakthi cult | — | பக்தி மார்க்கம். |
| Blasphemy | — | தெய்வ நிந்தனை. |
| Brush | — | தூரிகை. |
| Buffer State | — | இடைப்படு நாடு. |

### C

| | | |
|---|---|---|
| Calligraphy | — | கையெழுத்துக் கலை. |
| Capital punishment | — | தூக்கு தண்டனை. |
| Career | — | வாழ்க்கை. |
| Carving | — | செதுக்குக் கலை. |
| Census | — | குடிமதிப்பு. |
| Centralised monarchy | — | ஒருமுகப்பட்ட முடியாட்சி. |
| Chaugan | — | 'சாகன்' ; குதிரைமீதமர்ந்து பந்தாடுதல். |
| Chronicle | — | காலவழிச் செய்திக் கோவை. |
| Chronology | — | கால இயல். |
| Civil | — | பொதுத்துறை சார்ந்த. |

Commissariat — படைச்சாதனத் துறை.
Contemporary — சமகாலத்தவர்.
Corbel Brackets — தண்டயக் கட்டின்மீதமர்ந்த அடுக்குப் பேழைகள்.
Coronation — முடிசூட்டு விழா.
Creed — சமயம்.
Critic — திறனாய்வாளர்.

D

Decoration — ஒப்பனைக் கலை.
Deposition — பதவிநீக்கம்.
Din Ilahi — தின் இலாஹி; தெய்விகச் சமயம்.
Diplomacy — வெல்திறம்.
Dome — கவிகை மாடம்.
Dynasty — அரசகுலம்.

E

Emperor — பேரரசர்.
Epoch — சகாப்தம், காலக்கட்டம்.
Era — பொது ஆண்டு.
Espionage — ஒற்று அறிதல்.

F

Facade — முகப்பு.
Firman — பேரரசக் கட்டளை.
Feudalism — நிலமானிய முறை.
Fine art — கவின் கலை.
Fortress — கோட்டையரண்.
Fratricide — உடன்பிறப்புக் கொலை.
Fresco — காரை ஓவியம்.

G

Garrison — காவற்படை.
Geometry — வடிவவியல்.
Governor — ஆளுநர்.

H

Harem — உவளகம்.
Heir apparent — பட்டத்து இளவரசர்.
Heresy — புறச்சமயம்.

Heritage — மரபுரிமை.
Hierarchy — படித்தர வரிசை.
Hostage — பணயம்.

**I**

Impeachment — அரசத் துரோகக் குற்ற விசாரணை.
Infallibility decree — பிழையாமைக் கட்டளை.
Insignia — அரசசின்னம்.

**J**

Jagir — ஜாகீர்.
Jazya — ஜெஸியா.

**K**

Kutba — குத்பா.

**L**

Lingua franca — இடையீட்டுப் பொதுமொழி.

**M**

Mansabdar — மன்சப்தார்.
Market toll — சந்தைச் சுங்கம்.
Mausoleum — கல்லறை மாடம்.
Memoirs — நினைவுக் குறிப்புகள்.
Mercenary army — கூலிப்படை.
Minarets — அடுக்குமாடிகள்.
Monarchy — கோனாட்சி ; முடியாட்சி.
Monotheism — ஒரே கடவுட் கோட்பாடு.
Mosaic art — பல்வண்ணப் பட்டைக் கலை.
Mosque — மசூதி.

**N**

Nation — நாட்டினம்.

**O**

Orthodox — பழமைப் பண்பு ; வைதீகப் பண்பு.
Overlordship — ஆதிபத்தியம்.

## P

| | | |
|---|---|---|
| Padsha | — | பாதுஷா. |
| Pantheism | — | பல கடவுட் கொள்கை. |
| Paramountcy | — | தலைமை அதிகாரம். |
| Pargana | — | பர்காணு. |
| Paymaster-General | — | சம்பளப் பட்டுவாடா தலைமை அதிகாரி. |
| Persecution | — | சமய ஒறுப்பு. |
| Personality | — | ஆளுமை. |
| Pietra-dura | — | (விலையுயர்ந்த கற்களை) உட்பதித்து ஒப்பனை செய்யும் கலை. |
| Physiognomy | — | உறுப்பமைதி இயல். |
| Poll tax | — | தலைவரி. |
| Potter | — | மட்கோவர். |
| Precedent | — | முன்னிகழ்வு. |
| Precedence | — | முன்னுரிமை. |
| Primogeniture | — | மூத்த மகன் பட்டத்துரிமை. |

## R

| | | |
|---|---|---|
| Rebellion | — | புரட்சிக் கலகம். |
| Regent | — | அரசகாப்பாளர். |
| Reign | — | ஆட்சி. |
| Reinforcements | — | உதவிப் படைகள். |

## S

| | | |
|---|---|---|
| Sati | — | 'சதி'; உடன்கட்டை ஏறுதல். |
| Sculpture | — | சிற்பக் கலை. |
| Sovereignty | — | இறைமை. |
| Stockade | — | கழியரண். |

## T

| | | |
|---|---|---|
| Technically | — | மரபுப்படி. |
| Toleration | — | சமயப் பொறை. |
| Tomb | — | கல்லறை. |
| Treason | — | அரசத்துரோகம். |
| Trench | — | குழியரண். |
| Tribute | — | திறை. |
| Truce | — | தற்காலிகப் போர்நிறுத்தம். |

## U

Ulema — உலேமா.

## V

Vault — கவிகை மாடம்.

Vazir — வஸீர்.

Viceroy — வைஸ்ராய்; அரசப் பகர ஆள்.

## W

Wards — குடும்புகள்.

# கலைச்சொல் அகராதி

## ( தமிழ் – ஆங்கிலம் )

### அ

| | | |
|---|---|---|
| அடுக்கு மாடிகள் | — | Minarets. |
| அரசகாப்பாளர் | — | Regent. |
| அரசகுலம் | — | Dynasty. |
| அரசசின்னம் | — | Insignia. |
| அரசத்துரோகம் | — | Treason. |
| அரசப் பகர ஆள் | — | Viceroy. |
| அரசு எய்தல் | — | Accession. |

### ஆ

| | | |
|---|---|---|
| ஆட்சி | — | Reign. |
| ஆதிபத்தியம் | — | Overlordship. |
| ஆல்பம் | — | Album. |
| ஆவணக் களரி | — | Archives. |
| ஆளுநர் | — | Governor. |
| ஆளுமை | — | Personality. |

### இ

| | | |
|---|---|---|
| இடைப்படு நாடு | — | Buffer State. |
| இடையீட்டுப் பொதுமொழி | — | Lingua franca. |
| இறைமை | — | Sovereignty. |

### உ

| | | |
|---|---|---|
| (விலையுயர்ந்த கற்களை) உட்பதித்து ஒப்பனை செய்தல் | — | Pietra-dura. |
| உடன்கட்டை ஏறுதல் | — | Sati. |
| உடன்பிறப்புக் கொலை | — | Fratricide. |
| உணர்வு ஒளிர் வல்லரசு | — | Benevolent despotism. |
| உலேமா | — | Ulema. |
| உவளகம் | — | Harem. |
| உறுப்பமைதி இயல் | — | Physiognomy. |

ஒ

| | | |
|---|---|---|
| ஒப்பனைக் கலை | — | Decoration. |
| ஒருமுகப்பட்ட முடியரசு | — | Centralised monarchy. |
| ஒரே கடவுட் கோட்பாடு | — | Monotheism. |
| ஒற்று அறிதல் | — | Espionage. |

க

| | | |
|---|---|---|
| கட்டடக் கலை | — | Architecture. |
| கல்லறை | — | Tomb. |
| கல்லறை மாடம் | — | Mausoleum. |
| கவிகை மாடம் | — | Dome. |
| கவின் கலை | — | Fine art. |
| கழியரண் | — | Stockade. |
| காரை ஓவியம் | — | Fresco. |
| கால இயல் | — | Chronology. |
| காலகட்டம் | — | Epoch. |
| காலவழிச் செய்திக் கோவை | — | Chronicle. |
| காவற்படை | — | Garrison. |
| குடிமதிப்பு | — | Census. |
| குடும்புகள் | — | Wards. |
| குத்பா | — | Kutba. |
| குதிரைமீதமர்ந்து பந்து விளையாட்டு | — | Chaugan. |
| குழியரண் | — | Trench. |
| குறிநூல் | — | Astrology. |
| கூலிப்படை | — | Mercenary army. |
| கையெழுத்துக் கலை | — | Calligraphy. |
| கோட்டையரண் | — | Fortress. |
| கோனாட்சி | — | Monarchy. |

ச

| | | |
|---|---|---|
| சந்தைச் சுங்கம் | — | Market toll. |
| சகாப்தம் | — | Epoch. |
| சம்பளப் பட்டுவாடா தலைமை அதிகாரி | — | Paymaster-General. |
| சமகாலத்தவர் | — | Contemporary. |
| சமயம் | — | Creed. |
| சமயப் பொறை | — | Toleration. |

### ச

சர்வாதிகார ஆட்சி — Autocracy.
சிற்பக் கலை — Sculpture.
செருகேடு — Album.

### த

தண்டயக்கட்டின்மீதமர்ந்த சுவர் நிலை அடுக்குப் பேழைகள் — Corbel brackets.
தலைமை அதிகாரம் — Paramountcy,
தலைவரி — Poll-tax.
திறனாய்வாளர் — Critic.
திறை — Tribute.
தின் இலாஹி — Din Ilahi.
தீர்வை விதித்தல் — Assessment.
தூக்கு தண்டனை — Capital punishment.
தூரிகை — Brush.
தெய்வ நிந்தனை — Blasphemy.
தெய்விகச் சமயம் — Din Ilahi.

### ந

நாட்டுக் கதைப்பாடல் — Ballad.
நேசநாடுகள் — Allies.

### ப

பக்தி மார்க்கம் — Bhakti cult.
பட்டத்து இளவரசர் — Heir apparent.
படிகம் — Bastion.
படித்தர வரிசை — Hierarchy.
படைச்சாதனத் துறை — Commissariat.
பண்பாடு — Culture.
பணயம் — Hostage.
பதவிநீக்கம் — Deposition.
பர்கானா — Pargana.
பல்வண்ணப் பட்டைக் கலை — Mosaic art.
பல கடவுட் கொள்கை — Pantheism.
பழைமைப் பண்பு — Orthodox.
பாதுஷா — Padsha.
பிழையாமைக் கட்டளை — Infallibility decree.

ப

| | | |
|---|---|---|
| புரட்சிக் கலகம் | — | Rebellion. |
| பேரரசர் | — | Emperor. |
| பெரரசக் கட்டளை | — | Firman. |
| பொது ஆண்டு | — | Era. |
| பொதுத்துறை சார்ந்த | — | Civil. |

ம

| | | |
|---|---|---|
| மட்கோவர் | — | Potter. |
| மசூதிகள் | — | Mosques. |
| மரபுப்படி | — | Technically. |
| மரபுரிமை | — | Heritage. |
| மன்சப்தார் | — | Mansabdar. |
| முகப்பு | — | Facade. |
| முடிசூட்டு விழா | — | Coronation. |
| முடியாட்சி | — | Monarchy. |
| முன்னிகழ்வு | — | Precedent. |
| முன்னுரிமை | — | Precedence. |
| மூத்த மகன் பட்டத்துரிமை | — | Primogeniture. |
| மேலாதிக்கம | — | Ascendancy. |

வ

| | | |
|---|---|---|
| வஸீர் | — | Vazir. |
| வாழ்க்கை | — | Career. |
| வெல்திறம் | — | Diplomacy. |
| வைஸ்ராய் | — | Viceroy. |

ஜ

| | | |
|---|---|---|
| ஜாகீர் | — | Jagir. |
| ஜெஸியா | — | Jezya. |

# பொருள்குறிப்பு அகரவரிசை

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி எண் | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 127 | 30 | மைசூரம் | மைசூரிலும் |
| 166 | 36 | சிலாஜி | சிவாஜி |
| 278 | 31 | மூதாதையாரின் | மூதாதையரின் |
| 296 | 12 | ஆஊனயாளர் | ஆணையாளர் |

# தமிழ் வெளியீட்டுக் கழகம்

சென்னை-9

## 1966 வரை வெளியிட்டுள்ள நூல்கள்

பொருளாதாரம்

| | | | |
|---|---|---|---|
| *1. | பொருளாதாரம்-II | சி.வேலாயுதம் | 9—00 |
| 2. | புதுமைப் பொருளாதாரக் கூறுகள் | திருமதி ஆர். தாமரஜாட்கி | 12—00 |
| 3. | பொருளாதாரம் ஓர் அறிமுகம்-I | தி.சி. மோகன் | 12—00 |
| 4. | ,, II | எம் ஏ. அபூர்வசாமி, பி.வி. ஸ்ரீனிவாசன் | 10—75 |
| 5. | பொருளாதாரக் கோட்பாடு வளர்ந்த வரலாறு | க முத்தையன் | 7—00 |
| *6. | பணவியலும் பாங்கியலும்-II | சி. வேலாயுதம் | 11—50 |
| 7. | நவீன பாங்கு இயல் | க. வெற்றிவேல் | 7—50 |
| *8. | இந்தியச் செலாவணியும் பாங்கு முறையும் | பி. வி. ஸ்ரீனிவாசன் | 5—50 |
| *9. | அரசாங்க நிதி இயல் | அர. சேஷாசலம் | 4—75 |
| 10. | இந்தியப் பொருளியல்-I | எம். பாலசுப்பிரமணியன் | 10—00 |
| 11. | ,, –II | எம்: லூர்துநாதன் | 4—25 |
| 12. | நமது பொருளாதார பிரச்சினை–I | சி. சுந்தரராஜன் | 10—75 |
| 13. | ,, II | எஸ். குழந்தைநாதன் | 10—50 |
| 14. | இங்கிலாந்தின் பொருளாதார வரலாறு-I | கீ. சீ. இராமசாமி | 6—00 |
| 15. | ,, II | ,, | 6—00 |
| 16. | அமெரிக்காவின் நவீன பொருளாதார வளர்ச்சி | தி. சி. மோகன் | 5—00 |

*மூல நூல் (Original Book)

பொருளாதாரம்—தொடர்ச்சி



வரலாறு

| | | | |
|---|---|---|---|
| 38. | இங்கிலாந்தின் வரலாறு-I | ஃ. த. திருநாவுக்கரசு | 15—00 |
| 39. | ,, II | எம். எக்ஸ். மிராண்டா | 8—00 |
| 40. | ,, III | ,, | 5—00 |
| 41. | இந்தியாவின் சிறப்பு வரலாறு-I | தி வெ குப்புசாமி | 7—50 |
| 42. | ,, II | ஏ. உஸ்மான் ஷெரீப் | 9—00 |
| 43. | ,, III | அ. பாண்டுரங்கன் | 11—00 |
| 44. | கிரேக்க நாட்டு வரலாறு-I | சைமன் ஐ. எஸ். பாக்கியநாதன் | 7—50 |
| 45. | ,, II | ,, | 7—00 |
| 46. | ,, III | பி. ராமானுஜம் தேவதாஸ் | 7—75 |

அரசியல்

| | | | |
|---|---|---|---|
| *47. | இந்திய அரசியலமைப்பு | வீ. கண்ணையா | 4—75 |
| 48. | அரசியலுக்கு ஓர் அறிமுகம் | டி. செல்லப்பா | 8—50 |
| 49. | தற்கால அரசியல் அமைப்புகள் | மோ. வள்ளுவன் கிளாரன்சு | 8—50 |
| 50. | பன்னாட்டு அரசியல்-I | திருமதி நூர்ஜஹான் பாவா | 16—00 |
| 51. | பொதுத்துறை ஆட்சி இயல்-I | வீ. கண்ணையா | 9—00 |
| 52. | ,, II | அ. ஜெகதீசன் | 7—50 |
| 53. | பொதுத்துறை ஆட்சியியலுக்கு ஓர் அறிமுகம்-I | வீ. கண்ணையா | 7—50 |
| 54. | ,, II | டி. செல்லப்பா | 7—50 |

உளவியல்

| | | | |
|---|---|---|---|
| 55. | குழந்தை உளவியல்-I | கி. ர. அப்புள்ளாச்சாரி | 8—00 |
| 56. | ,, II | ,, | 7—00 |

*மூலநூல் (Original Book)

உளவியல்—தொடர்ச்சி



தத்துவம்



அறவியல்



அளவையியல்

மானிடவியல்

| | | | |
|---|---|---|---|
| *72. | மானிடவியல் | ம. சு. கோபாலகிருஷ்ணன் | 4—75 |
| 73. | பண்பாட்டுக் கோலங்கள் | கி. பூ. சுப்பிரமணியன் | 5—50 |
| 74. | இந்தியாவில் குடியானவர் வாழ்க்கை | எஸ். இலட்சுமி | 3—50 |

சமூகவியல்

| | | | |
|---|---|---|---|
| 75. | சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள் | ஜெ. நாராயணன் | 10—00 |

புவியியல்

| | | | |
|---|---|---|---|
| 76. | ஆசியா–I | கோ. சேஷ. நரசிம்மன் | 9—50 |
| 77. | ,, II | ,, | 8—75 |
| 78. | ஐரோப்பாக் கண்டத்தின் புவியியல் | ஏ. எஸ். நாராயணன் | 8—50 |
| *79. | தென்கிழக்கு ஆசியா | ஜி. கிருஷ்ணமூர்த்தி | 8—50 |
| *80. | வட அமெரிக்கா | குமாரி இரா. அலமேலு | 8—25 |
| *81. | தென் அமெரிக்கா | எம். என். பத்மநாபன் | 9—00 |
| *82. | தென் கண்டங்கள்—ஆஸ்திரேலியா | திருமதி எச். நியூமன் | 4—00 |
| *83. | ,, —ஆஃபிரிக்கா | எஸ். முத்துக்கிருஷ்ணக் கரையாளர் | 3—25 |
| *84. | புவிப்புறவியல்–II | நா. அனந்தபத்மநாபன் | 6—00 |
| *85. | செய்முறைப் புவியியல் | சு. ஜெயச்சந்திரன் | 9—00 |
| *86. | மக்கட் பரப்பியல் | வி. எஸ். அனந்தபத்மநாபன் | 6—25 |
| *87. | சமுத்திரவியல் | கோ. இராமசாமி | 6—50 |
| 88. | காலநிலை இயல்–I | கொ. சேஷ. நரசிம்மன் | 10—00 |
| 89. | ,, II | ,, | 5—00 |

மூலநூல் (Original Book)

புவியியல்—தொடர்ச்சி

| | | | |
|---|---|---|---|
| 90. | வளியியலுக்கு ஓர் அறிமுகம் ... | ... கோ. இராமசாமி ... | 11—00 |
| *91. | புவி அமைப்பு இயல் ... | ... சி. விசுவநாதன் ... | 4—75 |

புள்ளியியல்

| | | | |
|---|---|---|---|
| *92. | புள்ளியியல்—அறிமுகம் ... | ... சு. வைத்தியநாதன் ... | 10—00 |
| 93. | புள்ளியியல் முறைகள்–I ... | ... கோ. சண்முகசுந்தரம் ... | 10—00 |
| 94. | ,, II ... | ... கே. ஆர். இராஜகோபாலன் ... | 14—00 |
| 95. | நம்மைச் சுற்றியுள்ள பேரண்டம் ... | ... தி. வி. லட்சுமிநரசிம்மன் ... | 6—00 |

உயர்கணிதம்

| | | | |
|---|---|---|---|
| *96. | ஆயத்தொலை வடிவகணிதம் ... | ... டி. கே. மாணிக்கவாசகம் பிள்ளை ... | 12—50 |
| *97. | வகை நுண்கணிதம் ... | ... ,, ... | 8—00 |
| *98. | தொகை நுண்கணிதம் ... | ... தி. கோவிந்தராசன் ... | 9—00 |

விலங்கியல்

| | | | |
|---|---|---|---|
| *99. | விலங்கியல் ... | ... பெ ம. அண்ணாமலை, இரா. முருகேசன் ... | 12—00 |

பௌதிகவியல்

| | | | |
|---|---|---|---|
| 100. | ஒளி நூல் ... | ... ச. சம்பத்து ... | 10—00 |

| | | | |
|---|---|---|---|
| **விஞ்ஞானம்** | | | |
| *101. | வானவெளி வெற்றி | டாக்டர் எம். ஏ. தங்கராஜ் | 6—00 |
| *102. | ரேடியோ | ,, பி. திருஞானசம்பந்தம் | 4—75 |
| *103. | எக்ஸ்—கதிர்கள் | பெ. நா. அப்புசாமி ஜே. பி. மாணிககம் | 4—50 |
| *104. | பாம்புகள் | பெ. மா. அண்ணாமலை | 3—50 |
| *105. | தாவரம்—வாழ்வும் வரலாறும் | டாக்டர் கு. சீனிவாசன் | 8—00 |
| *106. | கரும்பு | கு. பெரியசாமி | 4—00 |
| **மருத்துவம்** | | | |
| *107. | நீரிழிவு-க்ஷயரோகம் | டாக்டர் ஜி. வேங்கடசாமி, டாக்டர் ஏ. கதிரேசன் | 2—50 |
| *108. | மகப்பேறும் மாதர் நோயும் | டாக்டர் (குமாரி) மணிமேகலை | 8—25 |
| *109. | பாக்டீரியா | சு. சுந்தரம் | 2—50 |
| **பொறியியல்** | | | |
| *110. | நீங்களே வீட்டைக் கட்டலாம் | கே. வி. கிருஷ்ணராஜ், சி. ஆர். சுப்பிரமணியம், ஆர். இராமசாமி, கே. வேணுகோபால் | 8—50 |
| **சட்டம்** | | | |
| *111. | குற்றவியல் சட்டம் | எம். சண்முகசுப்பிரமணியம் | 10—00 |
| **பொது நூல்கள்** | | | |
| 112. | மகாத்மா காந்தி | சரஸ்வதி தங்கையன் | 3—25 |
| 113. | விவசாயப் புரட்சி | வி. கார்த்திகேயன் | 8—00 |
| *114. | சேமக் கை-நூல் | ஆ. சுப்பிரமணியம் | 2—50 |
| *115. | முற்காலச் சோழர் கலையும் சிற்பமும் | எஸ். ஆர். பாலசுப்பிரமணியம் | 9—00 |
| *116. | உணவும் ஊட்டமும் | தி. வேங்கடகிருஷ்ணய்யங்கார் | 4—50 |

*மூல நூல் (Original Book)